உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஆறாந் திருமுறை



உடலின் வினைக ளறுப்பாய் போற்றி
 ஒள்ளெரி வீசும் பிரானே போற்றி
படருஞ் சடைமேல் மதியாய் போற்றி
 பல்கணக் கூத்தப் பிரானே போற்றி
சுடரின் திகழ்கின்ற சோதீ போற்றி
 தோன்றியென் னுள்ளத் திருந்தாய் போற்றி
கடலில் ஒளியாய முத்தே போற்றி
 கயிலை மலையானே போற்றி போற்றி.

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

**திருநாவுக்கரசு சுவாமிகள்**

**அருளிச்செய்த**

**தேவாரத் திருப்பதிகங்கள்**

# ஆறாந் திருமுறை

**(பண்முறை)**

*பதிப்பாசிரியர்*

**டாக்டர் இராச. வசந்தகுமார்**

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்

KARPAGAM UNIVERSITY

பன்னிரு திருமுறை ஆய்வு மையம்

**கற்பகம் பல்கலைக்கழகம்**

**ஈச்சநாரி, கோவை-21.**

## நூற்குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **ஆறாந் திருமுறை (தேவாரம்)** |
| ஆசிரியர் | : | **திருநாவுக்கரசர்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் (பண் முறை) |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**<br>**கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீட்டு எண் | : | **43** |
| முதற்பதிப்பு | : | **2015** அக்டோபர் |
| பக்கங்கள் | : | 576 |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | கிரவுன் 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>செல் : 98431 74238 |




# ஆறாந் திருமுறை - பொருளடக்கம்

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# ஆறாம் திருமுறை

## வழிபாட்டுக் கருத்தரங்கம்



## பதிப்புரை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார். – திருக்குறள்

**பதிப்புரைப் பிழிவு**

உயிரின் நோக்கம் – கொள்கைகள் – நெறிகள் – வினைநீக்கும் வழி – அருளே கண்ணாகக் காணுதல் – அணைந்தோர் தன்மை – நுண்ணாய்வு – உடல் – உடலில் உயிர் – உயிரில் சிவம் – உடலில் நெற்றிப் பொட்டு முதல் மூலாதாரம் வரை உயிர்ப்பயணம் – உயிரின் அளவு / வடிவம் – $10^{-14}$ மீட்டர் – உயிருள் கடவுளின் வடிவு $10^{-17}$ மீட்டர் – 100 கோடி உயிர்கள் 1 பசுவின் முடியில் அடக்கம் – உலக மக்கட்தொகை 725 கோடி – 7 முடியில் அடக்கம் – தினசரி பிறப்பு 1,10,000 – தினசரி இறப்பு 65000 – 4 வகைத் தோற்றம் – எழுவகைப் பிறப்பு – 84 லட்சம் யோனி பேதம் – மொத்த உயிர்கள் 13534 கோடி – படைத்து, காத்து, ஒடுக்க சிவபெருமான் 33,00,000 தேவர்களைப் படைத்துள்ளார் – 10 கோடி பிரம்ம தேவர் படைக்க – 10 கோடி திருமால் தேவர் காக்க – 10 கோடி உருத்திர தேவர் ஒடுக்க – 3 கோடி தேவர்கள் பிற பணிகளுக்காக (காற்று, மழை, ஒளி, ஒலி, பஞ்சபூதப் பணிகள்) – மகாசங்காரகாலம் அனைத்து உயிர்களும் 135 முடியில் அடக்கம் – 7 நரம்புகளாக அமைத்து சிவபெருமான் வீணை – திருவாசகம் வாசிப்பு – அதுவே திருமுறைகளின் பெருமை – அவற்றுள் ஒன்றான ஆறாம் திருமுறை நூல் தொடக்கம்.

**1. உயிரின் நோக்கம் / இலட்சியம்** - வீடுபேறு, முத்தி, மோட்சம். (சொர்க்க நரகங்கள் அல்ல)

**2. எடுத்துக்கொண்ட கொள்கை**

அ) எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை.

ஆ) யாதொரு தெய்வங் கொண்டீர்; அத்தெய்வமாகி மாதொரு பாகர் தாம் வருவார்.

இ) பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், மாதொரு பாகர் மலர்த்தாள் மறப்பிலார்.

ஈ) மற்றொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாதிருத்தல்.

### 3. வகுத்துக்கொண்ட நெறிகள்

1) சிவபூசை – விசேட தீக்கை பெற்றுத் தினமும் சூரிய உதயத்தில் ஆன்மார்த்த படிகலிங்க மூர்த்திக்கு ஆனைந்துத் திருமஞ்சனத்துடன் 1008 போற்றி மலர் வழிபாடு.
2) எழில் ஞானபூசை – திருமுறைகளையும், சாத்திரங்களையும் ஓதுதல், ஓதுவித்தல்
3) சிவாலயத் திருப்பணிகள் – அன்றாட, வாராந்தர, மாதந்தர, வருடாந்தர பெருஞ்சாந்தி பெருவிழாக்கள் நடத்த உதவி செய்தல் – நல்விழாப் பொலிவு காணுதல் – காண்பித்தல்.

**வினை நீக்கம்**

பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்
  பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
  சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே யென்றும்
  உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கே னென்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா வென்றும்
  பொழிலாரூ ராவென்றே போற்றா நில்லே. – 6.31.7

என்னும் திருப்பாடலால், சிவபிரானை வழிபடுதல் ஒன்றே வினை நீக்கத்திற்கு வாயில் என்பதை அறிதல்.

**திருவைந்தெழுத்து**

சிவபிரானைச் சரியை கிரியை யோகங்களான் வழிபட்டு வினை நீங்கப் பெறுதற்கும், பின்னர்ச் சிவஞானம் பெற்றுச் சிவனை அநுபவமாகக் கண்டு, அந்நிலையிலே நிலைத்து நிற்றற்கும் துணையாய் இருப்பது திருவைந்தெழுத்தே என்பது சிவநெறியின் முடிந்த முடிபு.

வைத்த பொருள்நமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்தம் ஒருக்கிச் சிவாய நமஎன் றிருக்கினல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ அறிவிலாப் பேதை நெஞ்சே. (4-94-5)

என்ற பாடலால் தெளிவு பெறுதல்.

**அருட்கண்**

இவ்வாற்றால் வினை நீங்கித் திருவருள் கிடைக்கப் பெற்று, 'அவ்வருளே கண்ணாகக் காண்பவரே இறைவனைக் காணுதல் கூடும்; அல்லாதார்க்குக் கூடாது' என்பதைச் சுவாமிகள் மிக அழுத்தமாக அருளியுள்ளார்.

அயிரா வணமேஎன் அம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே. (6-25-1)

மைப்படிந்த கண்ணாளும் தானுங் கச்சி
  மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்
  ஓரூர னல்லன்ஓர் உவம னில்லி

அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்

<u>அவனருளே கண்ணாகக் காணி னல்லால்</u>

**இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்**

**இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே. (6-97-10)**

**என்ற பாடல்களால் விளங்கல்.**

**அணைந்தோர் தன்மை**

**இங்ஙனம் இறைவன் தாளைத் தலைப்பட்டவர்க்கு இவ்வுலகில் எவ்வகையான துன்பமோ அச்சமோ யாதும் இல்லை. அவர் யார்க்கும் பணிந்து வாழ்தலும் இல்லை என்பதை நாயனார் விதந்தோதியருளியது போலப் பிறர் ஓதியதில்லை என்றுணர்தல்.**

**"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" (ப. 98) என்னும் மறுமாற்றத் திருத்தாண்டகம் அதனையே விரித்துரைத்தலை எடுத்துரைத்தல்.**

**நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்;**

**நரகத்தில் இடர்ப்படோம்; நடலை இல்லோம்;**

**ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோம் அல்லோம்;**

**இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை**

**தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான**

**சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்**

**கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்**

**கொய்ம் மலர்ச் சேவடி இணையே குறுகினோமே. (6-98-1)**

தில்லைச்சிற் றம்பலமுஞ் செம்பொன் பள்ளி தேவன் குடிசிராப் பள்ளி தெங்கூர்
கொல்லிக் குளிரறைப் பள்ளி கோவல் வீரட்டங் கோகரணங் கோடி காவும்
முல்லைப் புறவம் முருகன் பூண்டி முழையூர் பழையாறை சத்தி முற்றங்
கல்லில் திகழ்சீரார் காளத்தியுங் கயிலாய நாதனையே காணலாமே – 6 – 70 – 1

அன்புடையீர் வணக்கம்,

சிற்றம்பலம், தில்லைக் கோயிலில் கூத்தப் பெருமான் நடனம் புரியும் இடம். இது மிகச் சிறப்புடைத்ததாதல் பற்றி இப்பெயர் அக்கோயில் முழுவதையும் குறித்தல் உண்டு. சிறுமை + அம்பலம் = சிற்றம்பலம். சிறுமை என்பது சிறியதிலும் மிக மிகச்சிறியது. அதாவது நுண்மை என்று பொதுவாகப் பொருள்படும்.

சிவ சம்பந்தத்தைக் குறிக்கும்போது நுண்மையிலும் மிகநுண்மையைக் குறிக்கும். அஃதாவது இறைவனது அருளாற்றல். அம்பலம் - வெளி, எனவே சிற்றம்பலம் என்பது "அருள்வெளி" என்பதாம். திருமுறைகளைத் தொடங்கும் பொழுதும், "திருச்சிற்றம்பலம்" எனத் தொடங்கி, முடிக்கும் பொழுதும், "திருச்சிற்றம்பலம்" என முடித்தற்கும் இதுவே காரணம். அஃதாவது அவை அருள் வெளியினின்றும் தோன்றிய அருள் நாத ஒலிகளாய் இருத்தலே காரணமாகும். இறைவனது அருளாற்றல் ஞானமே

வடிவாய் இருத்தல் பற்றி “சிற்றம்பலம்” என்பது வடமொழியில் “சிதம்பரம்” எனப்படும். சித் - அறிவு; அம்பரம் - ஆகாயம்; வெளி. இதனை, “சிற்பரவியோமமாகும் திருச்சிற்றம்பலம்” எனத் தெய்வச் சேக்கிழார் விளக்கியருளினார். நூல்களில் “தகரவித்தை” கூறும் இடங்களில் வரும் “தகராகாசம்” என்பதில் “தகரம்” என்பதற்கும் “நுண்மை” என்பதே பொருளாகும். இறைவனுக்கு உண்மையில் இடமாவது அவனது அருள் வெளியே. அதனால் உயிர்களாகிய நம்பொருட்டு அவன் பற்பல திருவுருவங்களைத் தனது திருமேனியாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்களும் அவனது அருள் திருமேனிகளை நினைக்கும் நெஞ்சகமும் சிற்றம்பலம் எனக் கூறுதற்கு உரியனவாம். புறத்துத் தில்லைச் சிற்றம்பலமும், அகத்து நெஞ்சகமும் இறைவர்க்குச் சிறந்த இடமாம் என்பதனை “இறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான்” என்னும் திருச்சிற்றம்பலக் கோவையாரால் உணரலாம்.

## நுண்மையிலும் நுண்மை பற்றிய நுண்ணாராய்ச்சி

**உயிராகிய நாம் என்றும் உள்ளவர்கள். வினையின் காரணமாக இவ்வுடலைப் பெற்றிருக்கிறோம்.**

**பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்**
**பதியினைப் போல் பசு பாசம் அனாதி**
**பதியினைச் சென்றணுகா பசுபாசம்**
**பதியணுகில் பசு பாசம் நில்லாவே - திருமந்திரம் 159.**

**மேற்காண் பாடலில் நாம் என்றும் உள்ளவர்கள் என்பதைத் திருமூலர் எடுத்தியம்பியுள்ளார். உயிர் நிரந்தரமானது அழியாதது. உடல் அழியும். வினைக்கேற்றவாறு உயிர் மறுபிறவி எடுக்கும். உடலில் உயிர் உள்ளது. உடலைவிட்டு உயிர் போனபின் அது சொர்க்கத்துக்குச் சென்றதா, நரகத்துக்குச் சென்றதா என்று சாதாரணப் பொதுமக்களும், கயிலைக்குச் சென்றிருக்குமா என்று அடியார்களும் வினவிக் கொள்கிறார்கள். உயிர் உடலில் இருக்கும் காலங்களில் உயிர் உடலில் எங்கு இருக்கிறது? என்பதைச் சைவ சித்தாந்திகள் மட்டும் தம் சிற்றறிவுக்கு எட்டிய அளவு ஆய்வு செய்திருக்கிறார்கள். விஞ்ஞானம் உடலைப் பற்றி - பௌதிகத்தை - தடத்த நிலையில் ஆராய்கிறது. மெய்ஞ்ஞானம் உயிரைப் பற்றி - சூக்குமத்தை - சூக்குமநிலையில் ஆராய்கிறது. விஞ்ஞானிகள் ஆராய்ச்சிக்குச் செலவிடுமளவு பொருளையும், நேரத்தையும் மெய்ஞ்ஞான வழியில் நிற்பவர்கள் செலவிடத் திருவருள் கூட்ட வேண்டுமென்று வேண்டி மேலே செல்கிறோம்.**

| மெய்ஞ்ஞானம் | விஞ்ஞானம் |
|---|---|
| 1. உயிரைப் பற்றிய சூக்கும ஆய்வு | 1. பௌதீகத்தைப் பற்றிய தடத்த ஆய்வு. உடல், உலகம் பற்றிப் பருத்த, தூல நிலை ஆய்வு |
| 2. உயிர் உடலில் உள்ளது. அது வினைக்கேற்பப் பிறப்பெடுக்கும். உடலில் ஒரு இடத்தில் நிரந்தரமாக நில்லாமல் நெற்றிப் பொட்டு முதல் மூலாதாரம் வரை | 2. இருதயம், மூளை, தோல், கண் என்று நமது உடலின் அனைத்து உறுப்புகளைப் பற்றியும் ஓரளவு ஆய்வு நடந்துள்ளது. ஆனால் புற்றுநோய், சர்க்கரை, மறதி |

| ஐந்து இடங்களில் நின்று மாறி மாறி உடலை இயக்கும். இது அவத்தை எனப்படும். | போன்ற நோய்களுக்கு இன்னும் மருந்துகள் கண்டுபிடிக்கப்படவில்லை. |
|---|---|
| 3. திருமந்திரப்பாடல்படி உயிரின் வடிவு $10^{-14}$ மீட்டர் என்ற மிக நுண்ணிய அளவாக உள்ளது. அதாவது ஒரு பசுமாட்டின் முடியில் 100 கோடி உயிரை அடக்கலாம். உயிரில் சிவம் இருப்பார். அவர் $10^{-17}$ மீட்டர் நுண்மை வரை செல்வார். | 3. மில்லி மீட்டர், மைக்ரோ மீட்டர் என்று இப்போது நானோ மீட்டர் என்னும் நுண்மை எல்லை வரை சென்றுள்ளனர். மில்லி $10^{-3}$, மைக்ரோ $10^{-6}$, நானோ $10^{-9}$ மீட்டர் ஆகும். அதற்கு மேல் நுண்ணாராய்ச்சி இன்னும் ஆழமாகச் செல்லவில்லை. |
| 4. அணுப்பிளவைப் பற்றி ஏராளமான பழம் பாடல்கள். தமிழ் நூல்களில் உள்ளன. "அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத்தறித்த குறள்" - ஔவையார். | 4. அணுவைப் பிளக்க முடியும் என்று நிரூபித்து அணு உலைகளை நிறுவி அணுவிலிருந்து மின்சாரமும் தயாரிக்கிறார்கள். அணுகுண்டும் தயாரிக்கிறார்கள். நியூட்ரான், புரோட்டான், எலக்ட்ரான் என்று அணுவின் நுண்மை பாகங்களுக்குப் பெயரிட்டுள்ளார்கள். |
| 5. திருவாசகம் - திருவண்டப்பகுதி<br>அண்டப்பகுதியின் உண்டைப் பிறக்கம்<br>அளப்பருந் தன்மை வளப்பருங்காட்சி<br>ஒன்றனுக்கொன்று நின்றெழில் பகரின்<br>நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன.<br><br><u>இப்பாடலின் பொருள்</u><br>இந்தப் பிரபஞ்சத்தில் ஏராளமான உலகங்கள் தொங்கிக்கொண்டு சுழன்று கொண்டுள்ளன. ஞாலம் - ஞாலுதல் - தொங்குதல். சூரிய ஒளிக்கதிர்களில் நிலவும் துகள்கள் போல எண்ணற்ற உலகங்கள் உள்ளது தமக்குத் தெரிவதாக மாணிக்கவாசக சுவாமிகள் சொல்கிறார். | 5. பிரபஞ்சம் ஏறத்தாழ 13000000000 (13 பில்லியன்) வருடங்களுக்கு முன் உருவாகியிருக்கலாம். ஒன்றுமில்லாமலிருந்து திடீரென வெடித்தல் மூலம் வெப்பமான பந்து உருவானது. அதிலிருந்து தோன்றி இன்னும் இந்த பிரபஞ்சம் தொடர்ந்து விரிந்து கொண்டு வருகிறது. இவ்வளவு ஆண்டுகள் கழித்துக் காஸ்மிக் மைக்ரோ வேவ்ஸ் எனப்படும் கதிர்வீச்சுகள் பரவுவதை கண்டுள்ளனர். பூமிக்கோள் பம்பரத்தைப் போல 800 கி.மீட்டர் வேகத்தில் ஜெட் விமானத்தைவிட வேகமாகத் தன்னைத் தானே சுழன்றுகொண்டிருக்கிறது. சூரியனைச் சுற்றி தனது வட்டப்பாதையில் மணிக்கு 1,00,000 கி.மீட்டர் வேகமாக சுற்றிக் கொண்டு 365.242 நாட்களில சூரியனை ஒருமுறை சுற்றி வருகிறது. |

இவ்வளவு பெரிய உலகங்களையும் படைத்து, இயக்கிக் கொண்டிருப்பதுடன், அணுவுக்குள் அணுவாக நுண்மையாக இருப்பதையும் பார்த்து நாம் சிவபரத்துவத்தை உணர்ந்து கொள்ள வேண்டும். இதையுணர்ந்துதான் நம் முன்னோர்கள் "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்று சொன்னார்கள்.

சைவசித்தாந்த நூல்களின்படி உடலினுள் உயிர் இயங்கிக் கொண்டிருக்கிறது. இந்த இயக்கத்தை அவத்தை என்று சொல்லுவார்கள்.

உடலில் ஒன்பது துவாரங்கள் உள்ளன.''மலஞ்சோரும் ஒன்பது வாயில் குடில்'' என்றார் மாணிக்கவாசகப்பெருமான். இருகண்கள், இருகாதுகள், இரு மூக்குத் துவாரங்கள், ஒருவாய், கருவாய், எருவாய் என்ற ஒன்பது துவாரங்கள் இருந்தபோதும், உயிர் உடலைவிட்டு வெளியேற அதனுள்ளிருக்கும் இறைவனின் உத்தரவு வேண்டும். இந்த எண் சாண் உடம்பை இயக்கும் அந்த உயிர் எவ்வளவு பெரியது? அதன் வடிவு என்ன? அது மிகவும் நுண்ணியது. இப்பிறவியில் தீவினைகளை ஈட்டினால் நாம் புல்லாய், பூடாய், புழுவாய்ப்பிறப்பதற்கும் வாய்ப்புகள் உள்ளன.

''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா'' என்று அப்பரடிகள் பாடியுள்ளார். எனவே புழு என்றால் சுள்ளெறும்பை விட பல மடங்கு சிறியது. பாக்டீரியா என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்கள். மிகச் சுத்தமான குடிநீரில் கூட கண்ணுக்கு தெரியாத புழுக்கள் உள்ளன. அவற்றை நுண்ணோக்கிக் கருவிகளின் உதவியால் அவற்றின் நெளிவுகளைக் கண்டறிந்த அறிவியலார் கூறுகிறார்கள். அத்தகைய புழுவின் உடலெடுப்பதற்கும் நமது உயிர் தயாராயிருக்க வேண்டுமென்றால் அது எவ்வளவு நுண்மையானதாக இருக்க வேண்டுமென்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். அந்த நுண்ணுயிரிலும் துவாரமுண்டு. அந்தத் துவாரத்தின் வாயிலாகவும் நமதுயிர் உட்சென்று வெளிவரும் நுண்மையை எப்படித்தான் வர்ணிப்பது. அந்த நுண்ணுலகம் ஒரு தனி உலகமாகும். அது கற்பனையே செய்து பார்க்க முடியாது. அதன் நுண்மையைப்பற்றிச் சற்று ஆராய்வோம்.

## நுண்மை

**அணுவில் அணுவினை ஆதிப் பிரானை**
**அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்டு**
**அணுவில் அணுவை அணுக வல்லார்கட்கு**
**அணுவில் அணுவை அணுகலுமாமே** - **திருமந்திரம் ஏழாம் தந்திரம் - 1977**

**உயிரின் நுண்மைத் தன்மையை – அது எவ்வளவு சிறியது என்பதை**

**கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயின்**
**கொண்டவனும் அப்பரிசே கூறுபடும் - கொண்ட**
**இருபொருளு மன்றியே இன்னதிது என்னா(து)**
**ஒருபொருளே பாய் இருக்கும் உற்று**

**என்று திருக்களிற்றுப்படியார் என்ற சைவ சித்தாந்த சாத்திர நூல் கூறுகிறது.**

**உயிரைப் பருப் பொருளாகக் கருதிக் கொண்டு அதன் "அகல நீள கன அளவுகள் எத்துணையன" என வினவுவார்க்கு விடைகூறின் "பசுவின் மயிர்களில் ஒன்றை எடுத்து அதனைப் பல நூறாயிரங் கூறு செய்தால் அவற்றுள் இன்னும் கூறு செய்ய முடியாது என்ற அளவுக்குப் பெறப்படும் ஒரு கூற்றின் அகல நீள கன அளவுகளே உயிரின் அகல, நீள, கன அளவுகள் என்று கூறலாம் என்று திருமூலர் கீழ்க்காண் பாட்டில் பாடியருளியுள்ளார்.**

**மேவிய சீவன் வடிவது சொல்லிடில்**
**கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு**

மேவியது கூறது ஆயிர மாயினால்
ஆவியின் கூறது நூறாயிரத்தொன்றே – திருமந்திரம் - ஏழாந்தந்திரம் - 1980

இப்பாட்டின் உரை அணுவைப் பிளப்பது போல உள்ளது. ஒரு பசுமாட்டின் முடியை நூறு கூறாக்கச் சொல்கிறார். பின்னர் அதிலிருந்து ஒரு கூறான முடியெடுத்து ஆயிரம் கூறாக்கச் சொல்கிறார். அவ்வாறு ஆயிரம் கூறுபோட்டதில் ஒரு கூற்று முடியை எடுத்து அதை நூறாயிரம் கூறு போடச் சொல்கிறார். அதுதான் உயிர் - ஆவி – ஆன்மாவின் வடிவம் என்று சொல்கிறார். உருவம் என்று சொல்லவில்லை. வடிவு என்பது நீள, அகல, கனங்களை உடையது. அது கண்ணில்லாதவராலும் தடவி அறிந்து கொள்ளப்படும். உருவம் என்பது நிறம், அது கண்ணாலன்றி அறிய இயலாது.

இந்த உயிரின் வடிவை எண் கணிதத்தில் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

$1/1x100x1000x100000= 10^{-10}$ ஒரு கோடி என்பது $10^{8}$. கோடியில் ஒரு பாகம் என்பதை $10^{-8}$ என்று குறியிட வேண்டும். மாட்டின் முடியை நூறு கோடி இழைகளாகப் பகுத்தால் அதுதான் உயிர் என்கிறார். 1/1000000000 – பின்னக் கணக்குப் போடும் கணக்கியல் வல்லார்க்கு இதுதான் உயிரின் அளவு என்று சொல்கிறார். அதாவது உயிரின் வண்ணம் 0.00000000001 (மாட்டின் முடியளவு). மாட்டின் முடி 100 மைக்ரான் அல்லது .1 மி.மீட்டர். எனவே உயிரின் வண்ணம் $10^{-11}$ மி.மீட். அல்லது $10^{-14}$ மீட்டர் என்பதாகும். இவ்வளவு நுண்மையாக இருந்தாலும் அதற்குள் ஒரு பல லக்க அடையாளம் இருக்கும். 125 கோடி மக்கள் கொண்ட இந்திய நாட்டிலேயே அடையாள அட்டைகளில் 16 இலக்க எண் உள்ளது. அது எவ்வளவு இலக்கம் இருக்கும்? அதை நகர்த்த பாஸ்வேர்டு எனப்படும் கடவுச் சொல்லும் இருக்கும். உயிரின் உள்ளே இருக்கும் இறையணுவின் வடிவத்தைக் காண உயிரின் வடிவில் ஆயிரங் கூறிட்டு அணுகச் சொல்லித் திருமூலர் திருமந்திரம் 1977-ஆவது பாடலில் கூறியிருப்பதால் $10^{-14}x10^{-3}= 10^{-17}$ என்பது இறையணுவின் வடிவமாகும். ''ஏதுக்களாலும் எடுத்த மொழிகளாலும் மிக்கு சோதிக்க வேண்டாம்'' என்று திருஞானசம்பந்தர் உபதேசப்படி நாம் இந்த மாதிரி ஆய்வுக் கெல்லாம் செல்லாமல் சரியை, கிரியை யோக எழில்ஞான பூசைகள் வாயிலாகத் தான் செல்ல வேண்டும். இருப்பினும் சிவபரத்துவத்தை உணராதவர்களுக்கு மெய்ப்பிக்க நமக்கு தவ வலிமை போதவில்லை. ஆதலால் அவர்களுடைய விஞ்ஞான வழிச்சென்று மைக்ரோஸ்கோப்புகள் எனப்படும் நுண்ணோக்கிகள் வழியாக உடலைக் கீறி அறுவை சிகிச்சை செய்யும் போது பார்க்க முடியுமா என்று வினவியபோது $10^{-9}$ வடிவு எனப்படும் நானோ டெக்னாலஜி அளவுவரை தான் நுண்ணோக்கியால் காண முடியும். அதற்குச் சிறிய வடிவை அறியும் நுண்ணோக்கிகள் இன்னும் சந்தைக்கு வரவில்லை என்று சொன்னார்கள். மானுட கருவிகரணங்களால் காணவும் முடியாது என்பதுதான் மெய்ஞ்ஞானியர்களின் துணிவு. எனினும் அவர்களும் அவர்கள் வழி முயன்று சிவபரத்துவத்தை உணரட்டும். அது அவர்களின் பிராரத்தவினை. மானுடனின் முடியைக் கொள்ளாமல் மாட்டின் முடியை ஏன் அளவாகக் கொண்டார்? திருமூலர் மாடுமேய்ப்பவராக பரகாயப்பிரவேசம் செய்த சித்தராதலின் அவரையும் அந்த மலவாசனை பெருங்காய வாசனை போல ஒட்டிக் கொண்டதென்பதை நகைச் சுவையாகக் கொள்ளலாம்.

**இந்தக் கணக்கின் பொருள் என்னவென்றால் நூறு கோடி உயிர்களைச் சிவபெருமான் ஒருமயிரில் அடக்கி – அடுக்கியுள்ளார் என்பதாகும். நூறு கோடி உயிர்கள் என்பது சாதாரணக் கணக்கா? இந்தியாவின் மொத்த மக்கட் தொகையின் அனைத்து உயிர்களையும் கூட்டினால் சற்றேறத்தாழ 1 மயிரில் அடக்கிவிடுவார். பூலோக மக்கட்தொகையை 7 மயிரில் அடக்கிவிடுவார். உயிர் உடலில் ஓரிடத்தில் எப்போதும் நிலைத்து நிற்பது இல்லை.**

## உயிர்

**உடலில் நகர்ந்து கொண்டிருக்கும் இடங்கள்**

| விழிப்பு | புருவ நடு |
|---|---|
| களைப்பு | கண்டம் |
| உறக்கம் | இதயம் |
| பேருறக்கம் | தொப்பூள் |
| ஒடுக்கம்<br>(கோமா நிலை) | மூலாதாரம் |

**உடலுக்குள் உயிர், உயிருக்குள் சிவம்**

| உயிரின் வடிவம் | $10^{-14}$ மீட்டர் |
|---|---|
| அதாவது ஒரு பசுவின் மயிரில் | 100 கோடி உயிர்கள் அடக்கம் |
| உயிருக்கு | 32 இலக்க அடையாளமுண்டு |
| இறைவர் உயிரை | இயக்க கடவுச்சொல் (Password) (பாஸ்வேர்டு) உண்டு |
| உயிர் | உடலை இயக்கும். சிவம் உயிரை இயக்கும். |
| உயிரின் அடையாளமும்<br>கடவுச் சொல்லும் | சிவபெருமான் உருவாக்கி ஐந்தொழில் புரிவதற்காக பிரம்மன், விட்டுணு, உருத்திரன் ஆகியவர்களுக்கு மட்டும் தெரிவித்துள்ளார். |

### உயிர்களின் எண்ணிக்கை

மொத்த உயிர்களின் எண்ணிக்கையைக் கணக்கிட வேண்டும் என்பது பலநாள் அவா. இதைக் கற்பனையாகவும் கருதலாம். மானுட உடலெடுத்து ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா போன்ற 7 கண்டங்களிலும், 257 நாடுகளிலும் வாழும் பூவுலக மக்களின் மக்கள் தொகை 725 கோடி (725, 00, 00, 000) என்று ஒருபுள்ளி விபரம் சொல்கிறது. ஒரு நாளைக்கு சுமார் 65000 மனிதர்கள் இவ்வுலக வாழ்விலிருந்து விடுதலை பெறுகிறார்கள் சுமார் 110000 மனிதர்கள் உடல் பெற்று தினமும் வருகிறார்கள்.

அதாவது 725 கோடி உயிர்கள் மானுட உடலைப் பெற்றுள்ளன. கண்களுக்குத் தெரிகின்ற உடல்களின் எண்ணிக்கையை வைத்து உயிர் எண்ணிக்கையைச் சொல்கிறோம். இதுவன்றி மானுட உடலைப் பெறுவதற்கான வினைப்பயனைப் பெற்று அதை நோக்கிப் பிரயாணம் செய்து கொண்டிருக்கின்ற கணக்கில்லாத உயிர்களையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். சுமார் 10 மாதங்களில் உயிர் பரிபூரணமான உடலைப் பெறுகிறது. எனவே தாயின் கருவறையில் இருக்கும்

உயிர்கள் 300x110000=33000000 தந்தையின் சுக்கிலத்தில் இருக்கும் உயிர்கள் சுமாராக 3,30,00 000 இதே அளவாகக் கொள்ளலாம். விந்து வீணழிப்பு, கருக்கலைப்பு என்ற சுழற்சியில் சிக்கும் உயிர்களும் பல கோடி.

உயிரின் பயணத்தை பஞ்சாக்கினி வித்தை என்று சைவசித்தாந்தத்தில் சொல்லப்பட்டுள்ளது மானுட உடல் வினை நுகர்வுக்குப் பின் உயிர் பிரிகிறது. அது சொர்க்க, நரக நுகர்வு வினைகளுக்குப் பின் மேக மண்டலத்தோடு சேர்ந்து பூமிக்குவந்து ஒரு தாவர வகையில் கிடக்கும். அதை ஒரு ஆண் பிறவி உண்ண, அவனுடலில் சேர, பின் பெண் கருவிற்கு அது போய்ச் சேருகிறது. உடம்பெடுக்கிறது சொர்க்க நரகங்கள், மேக மண்டலம், தாவரம், ஆண், பெண் என்ற ஐந்து இடங்களிலும் உயிர் ஆகுதி ஆவது போலக் கருதி பஞ்சாக்கினி என்று சொல்லுவார்கள். வினை முடிந்த அடியார் இந்தச் சுழற்சியில் சிக்காமல் கயிலாயம் சென்று விடுவார். இந்த முறையில் பல்வேறு இடங்களில் மானுட உடற்பிறவி எடுப்பதற்காகக் காத்துக் கொண்டிருக்கும் உயிர்களைக் கணக்கெடுத்தால் அவையும் 725 கோடி இருக்கலாம். ஆக மானுடர்கள் மட்டும் 725 + 725 = 1450 கோடி அதாவது உடல் எடுத்து அனுபவித்துக் கொண்டு இருப்பவர்கள் 725 கோடி. உடல் எடுக்கும் முயற்சியில் (வினைப்பயன் சரியாக இருக்கும் பட்சத்தில்) உழன்று கொண்டிருக்கும் உயிர்கள் 725 கோடி. ஆக, இந்த 1450 கோடியையும் சிவபெருமான் 14 ஆவின் முடியளவு வண்ணத்தில் அடக்கி வைத்துள்ளார்.

ஊர்வன என்று தொடங்கும் பழம்பாடல் ஒன்று உயிர் வகைகள் (யோனி பேதங்கள்) 84 லட்சம் என்றியம்பியுள்ளது. அதன்படி

**இனவகையில்**

| | |
|---|---|
| **மனித இனம்** | **9 லட்சம் வகை** |
| **நாற்கால் விலங்கு இனம்** | **10 லட்சம் வகை** |
| **பறவை இனம்** | **10 லட்சம் வகை** |
| **நீர்வாழ் இனம்** | **10 லட்சம் வகை** |
| **ஊர்ந்து செல்லும் இனம்** | **11 லட்சம் வகை** |
| **தேவர் இனம்** | **14 லட்சம் வகை** |
| **தாவர இனம்** | **20 லட்சம் வகை** |
| **மொத்த உயிரின வகை** | **84 லட்சம் வகை** |

**உரைசேரு <u>மெண்பத்து நான்குநூறு ஆயிரமாம் யோனிபேதம்</u>**
**நிரை சேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான் கோயில்**
**வரை சேரும் முகில் முழவ மயில்கள் பல நடமாட வண்டுபாட**
**விரை சேர் பொன் னிதழிதர மென்காந்தள் கையேற்கும் மிழலையாமே**

**என்ற திருஞானசம்பந்தரின் பாடலும் 84 லட்சம் யோனி பேதங்களைக் கோடிட்டுக் காட்டுவதை உணரலாம்.**

**மானுட உடல் எடுக்கப்போகும், எடுத்த உயிர்களின் வகை 9 இலட்சம் என்றும் எண்ணிக்கை 1450 கோடி என்றும் கண்டோம். இதே போல ஒவ்வொரு இனத்தையும் கணக்கெண்ணிக் கூட்டவேண்டும். இதைச் செய்யக் கலியுகத்தில் யாராலும் இயலாது. இந்தியா என்கின்ற ஒரு நாட்டில்**

எத்தனை புலிகள்? எத்தனை யானைகள் என்ற கணக்கே தெரியாது. பின் எப்படி உலகம் முழுதும் இருக்கும் எல்லா விலங்குகளின் எண்ணிக்கையை எடுப்பது? அது போலவே தான் பறப்பன, ஊா்வன கணக்கெடுப்பதும் முடியாது. ஈசல் போன்று அன்றே பிறந்து அன்றே மடியும் உயிரினங்களின் கணக்கை எப்படி எடுப்பது?

“எழுதும் கீழ்க்கணக்கு” என்று இன்னம்பா் ஈசன் சொல்லிக் கொடுத்த கணக்கை மாதிரியாக வைத்துக் கொண்டு 9 இலட்சம் வகை உயிரினத்துக்கு 1450 கோடி உயிா்கள் எனக் கொண்டு 1450/ 9x84 என்று கணக்கிட்டால் மொத்த உயிா்கள் 13534 கோடி என்றதொரு இலக்கம் கிடைக்கிறது. இவ்வளவு உயிா்களுக்கும் தனு, கரண, புவன போகங்களை படைத்தல், காத்தல், ஒடுக்குதல், மறைத்தல், அருளுதல் என்ற ஐந்தொழில் வாரியாகக் கொடுத்து அவா் எப்படி நிா்வகிக்கிறாா் என்று யோசித்தால் மலைத்துப் போய்விடுவோம். 10/20 உயிா்களை வைத்துக்கொண்டு ஒரு சிறிய நிறுவனத்தை நிா்வகிக்க நாம் படும் இன்னல்களை நாம் நன்கு அறிவோம். ஆட்களுக்கு வேலை கொடுப்பதில் இந்தியாவிலேயே மிகப் பெரிய நிறுவனமான இரயில்வேத் துறையில் சில இலட்சம் மக்கள் தான் வேலை செய்கிறாா்கள். 13534 கோடி உயிா் நிா்வாகம் என்பதை எப்படி கற்பனை செய்து பாா்க்க முடியும்? நாம் பூவுலகில் வாழும் உயிா்களைப் பற்றி நமது சிற்றறிவைக் கொண்டு ஒரு கணக்கைப் போட்டுள்ளோம். இந்தப் பிரபஞ்சத்தில் எத்தனை கோள்கள் உள்ளன? அவற்றில் எவ்வளவு உயிா்கள்? எதையும் நினைத்த அளவிலேயே (சங்கற்ப மாத்திரையிலே) செய்து முடிக்கும் ஆற்றல் அவா் பெற்றிருந்தாலும் நம் சிற்றறிவால் செரிமானம் செய்ய முடியவில்லை.

ஒவ்வொரு நரம்பு அல்லது முடியில் நூறு கோடி உயிா்களை அடக்கும் வல்லமை பெற்றவா். சற்று பெரிய நரம்புகளாக ஏழு நரம்புகளில் வீணையில் இந்த ஏழு வகை உயிா்களையும் அடக்கி ஒடுக்க காலத்தில் எம் இறை வீணை வாசிக்கும் என்று அப்பா் சுவாமிகள் பாடியுள்ளாா். “13534 கோடி உயிா்களும் 135 பசுமயிா் வடிவில் அடுக்கப்பட்டுப் பின் அவை 7 வீணை நரம்புகளில் மிக ஒழுக்கமாக அடுக்கப்பட்டு எம் இறை வீணை வாசிக்குமாமே!” என்பதைப் படிக்கும்போது வியப்புமேல் வியப்பு. சங்கார கால வீணை வாசிப்புக்கு நமது திருமுறையில் ஒன்றான திருவாசகத்தை வைத்துள்ளாா். அது அவா் தில்லையில் மணிவாசகா் பாட எழுதிக்கொண்ட வரலாற்றை நாம் அறிவோம்.

> பெருங்கடல் மூடிப்பிரளயங் கொண்டு பிரமனும் போய்
> இருங்கடல் மூடியிறக்கும் இறந்தான் களேபரமும்
> கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய்
> வருங்கடல் மீளநின் றெம்மிறை நல் வீணை வாசிக்குமே. 4-112-7

என்றும் அழியாப்புகழ் பெற்றவை நமது திருமுறைகள் என்பதற்கு இதற்கு மேல் ஆதாரம் என்ன வேண்டும்? அத்திருமுறைப் பாராயணங்களில் பங்குகொள்ள வாய்ப்பளித்த பாட்டுடைத் தலைவனுக்குப் பல காலமாக நன்றி சொல்லி, இந்த மாதம் ஆறாம் திருமுறையை நெட்டுருச் செய்யவிருக்கும் வேளையில், ஓரிரு மணித்துளிகள் சுவாமி எப்படிப் படைத்துக் காக்கிறாா் என்று கருத்துரைப் பரிமாற்றம் செய்துகொண்டு மேற்செல்ல ஆணையிட அவ்வழி செல்கிறோம்.

## பருமை (விசுவரூபம்)

**உயிா்களாகிய நாமெல்லாம் உய்திபெற வேண்டுமென்பதற்காக தனு, கரண, புவன, போகங்களை சுவாமி படைத்து வழி வகுத்துள்ளாா். மிகப்பெரிய உலகங்களை படைத்து**

விளையாடுங்கள் என்று சொன்னதாக நாயன்மார்கள் கூறியுள்ளார்கள். கடந்த வாரம் செய்தித்தாளிலே மானுடர்களாகிய நம்மவர் அனுப்பிய செயற்கைக் கோள் புளூட்டோ எனப்படும் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள கோளை 9 ஆண்டுகள் தொடர்ந்து பயணம் செய்து அடைந்ததாக ஒரு செய்தி வெளியாகி உள்ளது. இது பெரும் முயற்சி. ஒரு மணிக்கு சற்றேறக்குறைய 1000 கி.மீட்டர் வேகத்தில் செல்லவேண்டும். எங்கும் நிறுத்த முடியாது. வழியில் எரிபொருள் நிரப்ப பெட்ரோல், டீசல் நிலையங்கள் கிடையாது. சூரிய சக்தியிலிருந்து பேட்டரியை அமைத்து 9 ஆண்டுகள் எந்த பராமரிப்புமின்றி இயங்கிய விண்கலத்தை வடிவமைத்த விஞ்ஞானிகளைப் பார்த்தபின்புதான், நாம் மெய்ஞ்ஞானத்தை அந்த அளவு ஆராயவில்லை என்று தோன்றுகிறது. அதற்குத் திருவருள் வேண்டுமென்பது உண்மைதான். ஆனால் முயற்சி திருவினையாக்கும் என்பதையும் நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

புளூட்டோ கிரகம் / கோள் என்பது சிவபெருமானின் கால்தூசிக்குக்கூடச் சமமாகாது என்பதை மாணிக்கவாசக சுவாமிகள் அண்டப்பகுதியின் உண்டைப் பிறக்கப் பதிகத்தில விளக்கியுள்ளார்கள். பல பில்லியன் கிலோமீட்டர் தூரத்துக்கும் அப்பாலுள்ளது புளூட்டோ. 1 பில்லியன் என்பது நூறு கோடியாகும். (100,00,00,000.) சூரியன் அதற்கும் மிகுந்த தொலைவில் உள்ளான். இதைப்போன்று பல கோள்கள், 224 புவனங்கள் என்றும் சித்தாந்த நூல்கள் சொல்கின்றன. கடலுக்குக் கீழேயும் நிறைய தூரம் உள்ளது. சிவபெருமான் இவ்வளவு பெரிய உலகத்தை நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற வகையில் படைத்து நம்மையெல்லாம் விளையாடச் சொல்லியுள்ளார். இவ்வளவு கோடி கிலோமீட்டர் விண்ணும் மண்ணும் விசும்பாக இருந்தும், ஒரு இரண்டு பெட்ரூம் அபார்ட்மெண்ட் எனப்படும் 1000 சதுரடி பல அடுக்கு மாடிக் குடியிருப்பில் ஒரு வீடு பெற, எவ்வளவு இன்னலுக்கு ஆளாகிறோம்? அவ்வளவு தான் நமது பலம், சக்தி, அறிவு.

50 ஆயிரம் ஆண்டுகள் தொடர்ந்து மழையைப் பெய்யச் செய்து சுவாமி இந்தக் கடல்களை உருவாக்கினார் என்று ஒரு வரலாறு கூறுகிறது. இவ்வாறு படைக்கப்பட்ட இந்த பிரம்மாண்டமான உலகில் (உலகு என்பது பூவுலகம் மட்டுமல்ல. தேவருலகம் உட்பட 224 புவனங்கள் + அனைத்துக் கோள்களையும் உள்ளடக்கியது). உயிர்கள் பலமுறை பிறவிச் சுழற்சியில் சிக்கி இறுதியில் தம் திருவடியை அடைய சில அமைப்புகளை உருவாக்கியுள்ளார். அவற்றை ஐந்தொழில் அமைப்பு என்று கூறி படைத்தல், காத்தல், ஒடுக்குதல், மறைத்தல், அருள்தல் என்று பெயரிட்டார். இந்த அமைப்பில் உயிர்கள் சூழலுவதற்கு நான்கு வகைத் தோற்றங்களையும் எழுவகைப் பிறப்புகளையும் உருவாக்கினார். நுண்மையிலும் நுண்மை, பருமையிலும் பருமை. எல்லாம் அவனே.

## நால்வகைத் தோற்றங்கள்

1. **அண்டசம் (முட்டையில் தோன்றுவன) பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன**
2. **சுவேதசம் (வியர்வையில் தோன்றுவன) கிருமி, பேன், விட்டில்**
3. **உற்பிச்சம் (வித்து வேர் கிழங்குகளில் தோன்றுவன) தாவரங்கள்**
4. **சராயுசம் (கருப்பையில் தோன்றுவன) தேவர்கள், மனிதர்கள், விலங்குகள்**

## எழுவகைப் பிறப்புகள் (யோனி பேதங்கள்) (84 லட்சம் என்று முன்பே பார்த்தோம்)

**இந்த 13534 கோடி உயிர்களுக்கும், தனுகரண புவன யோகங்களைக் கொடுத்து**

மேற்கண்டவாறு தோற்றங்களையும், பிறப்புகளையும் படைத்து, காத்து ஒடுக்க எவ்வளவு பெரிய அமைப்பு வேண்டுமென்று கற்பனை செய்து பாருங்கள். இவ்வுலகில் ஒரு நாளைக்கு 65000 பேர் மரணமடைகிறார்கள். எமதூதர் வந்து அழைத்துச் செல்வதாக நாம் படித்துள்ளோம். இந்த உயிரை உடலிலிருந்து பிரித்து கொண்டு போய் அதன் நல்வினை, தீவினைக்கேற்ப சொர்க்கம், நரகம் வரை கொண்டுபோய் விட வேண்டும். உயிர் தானாகப் போகாது. ஆஸ்திரேலியாவிலிருந்து இந்தியாவரை எமன் பொதுவானவன். எந்த மூலைமுடுக்குக்கும் ஒளியைவிட வேகமாகச் செல்வான். 10 உயிர்களை 1 தூதுவன் கவர்வதாக வைத்துக் கொண்டால்கூட உடல் எடுத்த உயிர்களுக்கு 6,500 தூதர்கள் வேண்டும். உடல் எடுக்காத உயிர்களுக்கும் 6,500 தூதர்கள் வேண்டும். இது மானுட உயிர்களுக்கு மட்டுமே. மற்ற, உயிர் ஒடுக்கத்தைக் கூட்டினால் எமதூதர் மட்டும் எத்தனை பேர் வேண்டும்?

இவர்கள் உட்பட இலட்சக்கணக்கான தேவதூதர்கள் வானில் 24 x 7 உலவிக் கொண்டேயிருக்கிறார்கள். கடல் மட்டத்திலிருந்து சுமார் 45000 அடி உயரத்துக்கு மேல் விமானங்கள் பறப்பதில்லை. சிறிய எண்ணிக்கையில் போர்விமானங்களும், செயற்கைக் கோள்களும் இதற்கு விதிவிலக்கு. ஆனாலும்,இந்த இலட்சக்கணக்கான தேவர்களோ, ஆயிரக்கணக்கான விமானங்களோ, நேருக்கு நேர் தலைக்குத் தலை (Head on Collision) சந்தித்தாக வரலாறு இல்லை. இரண்டும், இரண்டு வித்தியாசமான மாயா தத்துவத்தால் படைக்கப்பட்டுள்ளதால் அந்தச் சந்திப்பு நடைபெறுவதில்லை. அசுத்த மாயாதத்துவங்களிலிருந்து நாம் விலகிச் சென்றால் தான், அவ்வுலக இன்பங்களைக் காணலாம். துய்க்கலாம். அதற்கு தவ வலிமை தேவை. கிரியை, சரியை, யோக ஞானமார்க்கங்களில் நம்மை ஈடுபடுத்திக் கொண்டால் தவ வலிமை பெருகும். அதற்கு உதவுவன திருமுறைகளே என்பதில் ஐயமில்லை எனவேதான் நாம் அவற்றைச் சிக்கெனப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

சிவபெருமான் - படைக்க பிரமனையும், காக்க திருமாலையும், ஒடுக்க உருத்திரனையும் பணி அமர்த்தியுள்ளார். நல்வினை புரியும் நம்மில் சிலரும் அடுத்த பிறவிகளில் பிரமர்களாகவும், திருமாலாகவும், படைக்கப்படலாம். இருவினையும் ஒப்ப நினைந்து செயல்படும்போதுதான் கயிலைக்குச் செல்ல முடியும். பிரமன், திருமால் இருவரும் திருவடி காணாதவர்கள். அந்த திருவடி நம் மனத்தில் இருக்கிறது என்று அவர்கள் இருவரும் சாதாரணமானவர்கள் என்று நினைக்க வேண்டாம். ஒவ்வொருவரும் 10 கோடி பேரை பணிக்கு அமர்த்தியுள்ளார்கள். பிரமனுக்குக் கீழே துணை பிரம்மாக்கள், பல இணை பிரம்மாக்கள், பொது மேலாளர்கள், துணை மேலாளர்கள், மேற்பார்வையாளர்கள் என்று பலர் உள்ளனர். அவரிடம் மிகப்பெரிய கணினி மையம் உள்ளது. அதில் பல இலட்சம் பேர் வேலை செய்கிறார்கள். 13534 கோடி உயிர்களின் விபரங்களும் சிடி, பென்டிரைவ் என்ற சேகரிப்புக் கருவிகளில் சேமித்து வைத்துள்ளனர். அதன் நகல்கள் மூவரிடமும் உள்ளன.

தேவர்களை படைக்க ஒரு துணை பிரம்மா
மானுடர்களை படைக்க ஒரு துணை பிரம்மா
விலங்குகளை படைக்க ஒரு துணை பிரம்மா
பறவைகளை படைக்க ஒரு துணை பிரம்மா
ஊர்வனவற்றை படைக்க ஒரு துணை பிரம்மா
நீர்வாழ்வனவற்றை படைக்க ஒரு துணை பிரம்மா
தாவரங்களை படைக்க ஒரு துணை பிரம்மா.

தாவரங்களில் 19 இலட்சம் வகைகள் உள்ளன. அவற்றிற்கு பெரிய தலைப்புகளில் இணைப் பிரம்மாக்கள் அமர்த்தப்படுவர்.

மரங்களுக்கு ஒரு இணை பிரம்மா
செடிகளுக்கு ஒரு இணை பிரம்மா
கொடிகளுக்கு ஒரு இணை பிரம்மா

இவர்கள் ஒவ்வொருவருக்கும் கீழே பொது மேலாளர்கள், துணை மேலாளர்கள்.

ஒரு உயிருக்கு உடலைக் கொடுக்க வேண்டிய காலம் வந்தவுடன் அதன் குறுந்தகடு பிரமலோகத்துக்குச் செல்லும். பிரம்மலோகக் கணினி மையத்தில் அவருக்கு என்ன பிறவி என்று முடிவு செய்யப்பட்டு, மானுடனோ, விலங்கோ, பறவையோ என்று அந்த துணை பிரம்மாவிடம் செல்லும். உதாரணமாக தாவரமாக பிறக்க வேண்டுமென்று வினையிருந்தால் தாவர துணை பிரம்மாவிடம் செல்லும். தாவர துணைபிரம்மா இவருக்குப் பிறவி மரமா, செடியா, கொடியா என்று முடிவு செய்து இணை பிரம்மாவுக்கு அனுப்புவார். அவர் அதனை ஓராண்டு மரமா, பல ஆண்டு மரமா, பயன்தரும் மரமா, பயன்தராத மரமா? காட்டில் பயிரிடலாமா? நாட்டில் பயிரிடலாமா? என்று முடிவு செய்து, அந்த பொது மேலாளருக்கு அனுப்பிவிடுவார். இப்படியாகப் படைப்புத் தொழில் மானுடன், விலங்கு, பறவை, ஊர்வன என்று ஒவ்வொரு வகைப் பிறப்புக்கும், தோற்றத்துக்கும் நடைபெறுகிறது.

மொத்த உயிர்கள் சுமாராக 13534 கோடி என்று கணக்கிட்டுள்ளோம். 1000 உயிர்களுக்கு 1 பிரமலோகத்து தேவர் பொறுப்பில் இருப்பார் என்று வைத்துக்கொண்டால் கூட 13½ கோடி பிரம தேவர்கள் தேவைப்படுவர். படைப்பு நிர்ணயிக்கப்பட்டு பின் அந்த உயிரின் குறுந்தகடு காக்கும் கடவுளுக்கு மாற்றப்படும்.

இதைப்போலவே காக்கும் கடவுளான திருமாலுக்கும், 10 கோடிக்கு மேல் துணைத் திருமால், இணைத் திருமால், பொதுமேலாளர், மேலாளர் என்றெல்லாம் இருப்பார்கள். நல்வினை, தீவினைகளை ஊட்டி காக்க வேண்டிய பணி திருமால் பட்சமிருப்பதால் பெரும்பாலும் அப்பணிகளைச் செய்யும் கோள்களெல்லாம் அவருக்குக் கீழியங்கும். 9 கோள்கள், 27 நட்சத்திரங்கள் பல கோடி உதவியாளர்களுடன் கணினி மையம் வைத்துக் கொண்டு உயிர்களை இயக்கிக் கொண்டிருக்கும்.

காக்கும் காலம் முடிந்தவுடன் ஒடுக்குங்காலத்து அந்தக் குறுந்தகடு உருத்திரர், காலன் அமைப்புக்கு வந்துவிடும். உருத்திர தேவருக்குக் கீழ் காலன் செயல்படுவான். காலனும், காலதூதர் என்ற அந்த அமைப்பும் 10 கோடி பேருடன் இயங்கும். எனவேதான் படைப்பு, காப்பு, ஒடுக்கம் என்பதற்கு 30 கோடி, பொதுப்பணிகளான மழை கொடுத்தல், தட்ப வெப்பம், ஒளி, இருள், பஞ்சபூதப் பணிகளுக்காக 3 கோடி தேவர்கள் என்று இந்த 13534 கோடி உயிர்களைப் பேணிகாக்க முப்பத்து முக்கோடி தேவர்களை அமர்த்திக் கொண்டுள்ளார். சங்கார காலத்தில் அவர்களும் சிவபெருமானுள் ஒடுங்கி விடுவர்.

முப்பத்து முக்கோடி என்பது வெறுமனே 33 என்று சிலர் சொல்வர். அது சரியன்று. பல்லாயிரங் கோடி உயிர்களைப் பரிபாலனம் செய்ய 33,00,00,000 தேவர் கண்டிப்பாகத் தேவை.

ஒடுக்கமாம் மகாசங்கார காலத்தில் வீணை வாசிப்பது மட்டுமின்றி, இன்னும் ஒரே ஒரு செயலை மட்டும் செய்வார். அதுதான் நமது திருமுறைகளில் ஒன்றான திருவாசகம் படிப்பது என்பதை முன்னர் பார்த்தோம். அப்படியென்றால் நமது திருமுறைகளின் பெருமைகளை என்னென்று இயம்புவது? அத்தகைய திருமுறைகளில் ஒன்றான ஆறாம் திருமுறையைப் பற்றிச் சிந்திப்போம்.

தமிழ்ச் செய்யுள் வகையாகிய தாண்டகம் என்னும் யாப்பிற்கு, மூல இலக்கியமாக விளங்குவன திருநாவுக்கரசர் அருளிய ஆறாம் திருமுறை திருத்தாண்டகப் பதிகங்கள் என்பதை நாமறிவோம்.

தன்னொப்பாரில்லாத் தலைவனாகிய இறைவனுடைய அருட்குணங்கள் எல்லாவற்றையும், அப்பெருமான் திருமுன்னிலைப்பரவுதலாக எடுத்துரைத்துப் போற்றுதற்கும், உலக மக்களுக்கும், தமது நெஞ்சத்திற்கும் தெளிவாக விரித்துரைத்தற்கும் ஏற்றவாறு விரிந்த சொல்நடையும், எல்லார்க்கும் எளிதிற் பொருள் விளங்கும் தெளிவும் பெற்றுத் திகழ்வன திருத்தாண்டகத் திருப்பதிகங்களாகும். இறைவனது இயல்பினைக் கூறுமிடத்து, 'அரியானை அந்தணர்தம் சிந்தையானை' என இவ்வாறு இரண்டாம் வேற்றுமை உருபு அடுக்கிவரும் நிலையில் அமைந்த பதிகங்களும், இறைவன் இன்ன இன்ன இடங்களில் இன்ன இன்ன தன்மையில் எழுந்தருளியுள்ளான் எனக் கூறும் பதிகங்களும், வினை முற்றுக்களை அடுக்கிக்கூறும் பதிகங்களும் இறைவனுடைய அடையாளங்களைத் தொடர்புபட எடுத்துக்கூறும் பதிகங்களும், 'வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி' என்றவாறு அர்ச்சித்து அப்பெருமானை முன்னிலைப்படுத்திப் போற்றும் பதிகங்களும், மானை முன்னிலைப்படுத்திப் போற்றும் பதிகங்களும், அரவணையான் சிந்தித்து அரற்றும் அடி, என்றாங்கு அவ்விறைவனது திருவடிப் பெருமைகளை விளக்கும் பதிகங்களும், 'தில்லைச்சிற்றம்பலமுஞ் செம்பொன் பள்ளி' என்றவாறு இறைவன் திருக்கோயில் கொண்டருளியுள்ள திருத்தலங்களைத் தொகுத்துக் கூறும் பதிகங்களும், இறைவன் இயல்பினை உலக மக்களுக்குத் தெளியக்காட்டி அறிவுறுத்தும் நிலையில், 'விற்றூண் ஒன்றில்லாத நல்கூர்ந்தான் காண்' என்றாங்கு, 'காண்' என்றும், தூண்டு சுடரனைய சோதி கண்டாய் என்றாங்கு கண்டாய் என்றும் அறிவுறுத்தும் பதிகங்களும், இறைவன் இன்னின்ன செயல்களைச் செய்தாரென விளக்கும் முறையில் ''நோதங்க மில்லாதார் நாகம் பூண்டார் நூல் பூண்டார்'', ''நினைந்துருகும் அடியாரை நையவைத்தார்'' என்றாங்கு அமைந்த பதிகங்களும், இறைவன் எல்லாப் பொருள்களுமாகி விளங்குகின்றான் என நினைவுகூறும் முறையில், 'குருகாம் வயிரமாம் கூறும் நாளாம்'' என ஆமீற்றில் வைத்துக் கூறும் பதிகங்களும், இறைவனது ஒப்புயர்வற்ற தன்மைகளை எடுத்துரைத்துப் போற்றும் முறையில் 'சூலப்படையர் தாமே போலும் சுடர்திங்கட் கண்ணிடையார் போலும்'' என ஒப்பில் போலியாற் செப்பும் திருப்பதிகங்களும், தாம்கண்ட கடவுள் காட்சியை ஏனையோரும் உணர்ந்து உய்தி பெறும் முறையில் தமது அனுபவத்தை விளக்கி ''வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும் வளர்சடைமேல் இளமதியம் தோன்றும் தோன்றும்'' என்றும், ''வாய்மூர் அடிகளையான் கண்டவாறே'' என்றும், ''புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே'', ''கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே'' என்றும் கூறும் பதிகங்களும், தாம் கண்ட அத்தெய்வக்காட்சியை ஏனையோரும் காணவேண்டும் என்னும் பெருவேட்கையால், ''நாகைக்காரோணத்து எஞ்ஞான்றும் காணலாமே'' என்றும், ''காதன்மையால் தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே'' என்றும், எல்லாம் வல்ல இறைவனை புறத்தும், அகத்தும் காணும் நெறியினை அறிவுறுத்தும் பதிகங்களும், ஆறாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளன. இறைவனை இடைவிடாது நினைந்து போற்றுதலால், கருத்திற்குச் சேயனாக விளங்கும் அப்பெருமான் 'என்னுடைய எளிய நெஞ்சத்திலும், நீங்காது எழுந்தருளியுள்ளான்'' என அகமகிழ்ந்து போற்றும் வகையில் 'ஏகம்பன்தான், அவனென் எண்ணத்தானே' என்றும், 'திருப்புத்தூரில் திருத்தளியான்காண், அவனென் சிந்தையானே' என்றும், திருமுண்டீச்சரத்து மேய சிவலோகன் காண் அவன் என் சிந்தையானே' என்றும் அறிவுறுத்தும் பதிகங்களும், தாம் கண்ட கடவுட் காட்சி தம் கண்ணெதிரே நீங்காது நின்ற திறத்தை விளக்கும் முறையில் 'காளத்தி காணப்பட்ட கணநாதன்காண், அவன் என் கண்ணுளானே', எனக்கூறும் திருப்பதிகமும், இறைவன் உலகெலாம் ஆகி நின்ற பெருநிலையைப் புலப்படுத்தும் முறையில்,

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
　　இயமான னாயெறியுங்காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
　　ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும்
　　பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
　　நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே. (6-94-1)

எனவரும் நின்ற திருத்தாண்டகம் முதலிய பதிகங்களும், உலகெலாமாகிய இறைவன், உலகப் பொருள்கள் ஒவ்வொன்றிலும், தோய்வின்றி விளங்கும் தனி நிலையைப் புலப்படுத்தும் முறையில்

மண்ணல்லை விண்ணல்லை வலய மல்லை
　　மலையல்லை கடலல்லை வாயு வல்லை
எண்ணல்லை யெழுத்தல்லை யெரியு மல்லை
　　யிரவல்லை பகலல்லை யாவு மல்லை
பெண்ணல்லை யாணல்லை பேடு மல்லை
　　பிறிதல்லை யானாயும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை
　　உணர்வரிய ஒற்றியூ ருடைய கோவே. (6-45-9)

என்றாங்கு வரும் திருப்பாடல்களும், இறைவனை நோக்கி, ''நீ எல்லாமாய்ப் பிரிவறக் கலந்து விளங்குகின்றாய், எனப் போற்றி பரவும் நிலையில், ''அப்பன் நீ அம்மை நீ'' என்றும், ''நின்னாவார் பிறரன்றி நீயேயானாய்'' என்று முன்னிலைப்படுத்திக் கூறும் திருப்பாடல்களும் ''இறைவனைச் சேராதார், நன்னெறிக்கண் சேராதார், தீநெறிக்கே சேர்கின்றார்'' என அறிவுறுத்தும் நிலையில் ''திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக் கட் சேராதாரே'' எனவும், திருவீழி மிழலையானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின்றானே'' எனவும் வரும் திருப்பதிகங்களும், இறைவனைப் பற்றி நின்றார். எக்காலத்தும் இறவாப் பெருநிலையே அடைந்து இன்புறுவர் என்பதுபட ''கீழ்வேளூர் ஆளும் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடிலாரே'' என அறிவுறுத்தும் திருப்பாடல்களும், ''என்னிலும் இனியானாகிய இறைவனை இத்துணைக் காலம் வரையிலும் அறியப்பெறாது திகைத்திருந்தேன். அவனது திருவருளோடு பழகாது உலக வாழ்வில் பாழே உழன்றேன்'' என்பது பாட, ''சேராது திகைத்து நாள் செலுத்தினேனே'' என்றும், அப்பெருமானைச் 'சாரதே சாலநாள் போக்கினேனே' என்று ஏசற்று உரைக்கும் திருப்பதிகங்களும், ''அவனருளே கண்ணாக அவனைக் கண்டு அடையப் பெற்றேன்'' என அகமகிழ்ந்து கூறும் நிலையில், ''திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச் சென்றடைந்தேன் நானே'' என்றும், ''பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்தவாறே'' என்றும், ''கஞ்சனூர் ஆண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்தேனே'' என்றும், ''எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே'' என்றும், வரும் பதிகங்களும், தம் நெஞ்சத்தை நோக்கி இடைவிடாது நினைக்கத் தூண்டும் வகையில், ''திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே'' என்று இவ்வாறு அறிவுறுத்தும் பதிகங்களும், தாம் இறைவனை நினைந்து வினைத்தொடர்பறுத்த செய்தியை ஏனையோர்க்கும் அறிவுறுத்தும் வகையில் ''அரநெறியில் அப்பன்தன்னை அடைந்தடியேன் அருவினை நோய் அறுத்தவாறே'' என்றும், ''ஆவடு தண்டுறையுள் மேய அரனடியே அடிநாயேன், அடைந்துய்ந்தேனே'' என்று வரும் பதிகங்களும், தம்மையாட் கொண்ட இறைவனைச் ''செல்வன்'' என்றும், ''மணாளன்'' என்றும் மகிழ்ந்து போற்றும் பதிகங்களும், தீவினை

முதலிய இடையூறுகளை நோக்கி, "அடியார்களாய் எம்மை விட்டு விலகுமின்" என அமைந்த திருப்பாடல்களும், அப்பரருளிய திருத்தாண்டகத் தொகுதியாகிய ஆறாந்திருமுறையில் அமைந்திருத்தல் காணலாம்.

இறைவனது திருவருட் பெருமைகளையும், உயிர்களின் சிறுமையினையும் உலக மக்களுக்கு விளங்க எடுத்துரைக்குமுகமாக மக்களுடைய மனமாசுகளைப் போக்கி இறைவனது திருவருள் இன்பத்தில் அன்பர்களைத் திளைக்க வைக்கும் பேராற்றல் மிக்க செழும் பாடல்களாக நாவரசரருளிய திருப்பதிகங்கள் திகழ்தல் காணலாம்.

சிவபெருமானை சிக்கெனப் பிடித்துக் கொண்டு திருநாவுக்கரசர் நமக்கருளிய திருமுறைகளை நாளும் ஓதி மற்றவர்களையும் ஓதுவித்தலே நாமெல்லாம் உய்யும் நெறி எனக் கொண்டு ஆறாம் திருமுறை வழிபாட்டுக் கருத்தரங்கம் 2015-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 24, 25-ம் தேதிகளில் சனி, ஞாயிறு ஆகிய இரு நாட்களில் பின்கண்ட நிகழ்வுப்படி நடைபெறும்.

| | | | | |
|---|---|---|---|---|
| முதல் திருமுறை | 136 | 1469 | திருஞானசம்பந்தர் | டிசம்பர் 27, 28, 2014 |
| இரண்டாவது திருமுறை | 122 | 1331 | திருஞானசம்பந்தர் | பிப்ரவரி 21, 22, 2015 |
| மூன்றாவது திருமுறை | 127 | 1369 | திருஞானசம்பந்தர் | ஏப்ரல் 18, 19, 2015 |
| நான்காம் திருமுறை | 113 | 1070 | திருநாவுக்கரசர் | ஜுன் 27, 28, 2015 |
| ஐந்தாம் திருமுறை | 100 | 1015 | திருநாவுக்கரசர் | ஆகஸ்டு 29, 30, 2015 |
| ஆறாம் திருமுறை | 99 | 981 | திருநாவுக்கரசர் | அக்டோபர் 24, 25, 2015 |

இரண்டு மாத இடைவெளியில் சுமார் 1500 பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்துக் கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும், திருமதி. ப. தமிழரசியைத் தலைவியாகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின், திரு.இரா.மதன்குமார், திருமதி. ச. கவிதா, திரு.பு. பிரபுராம், திரு. செ. ஆறுச்சாமி ஆகியோருக்கும், நூலாக்க ஒருங்கிணைப்புப் பணியில் செயலாற்றுகின்ற திரு. ப. மணிசேகர், திரு அ. இராமசாமி ஆகியோருக்கும், கணினி நிபுணர்களான திரு.மு.மகேஷ், திரு.து. சசி அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும், மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை, மறுமை, இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் http://www.panniruthirumurai.orgஎன்ற இணைய முகவரியில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படியெடுத்தும், தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற, அன்புடன் அழைக்கும்...

அன்பன்,

**இராச. வசந்தகுமார்**
நிறுவனர் - வேந்தர்
கற்பகம் பல்கலைக்கழகம்
கோவை - 21

## ஆறாந் திருமுறைக் கருத்தரங்கம்

## 24, 25 அக்டோபர் 2015 (சனி, ஞாயிறு)

### நிகழ்ச்சி நிரல்

| வ.எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வு பொருள் |
|---|---|---|---|
| 1. | 24.10.2015 சனி<br>காலை 09.00 - 11.00 | மகாவித்துவான் மயிலம்<br>**வே. சுப்பிரமணியம்**<br>அவர்கள் | 1 - 14 திருப்பதிகங்கள் |
| 2. | 24.10.2015 சனி<br>நண்பகல் 11.00-01.00 | பேராசிரியர்<br>**ம.வே. பசுபதி** அவர்கள் | 15 - 28 திருப்பதிகங்கள் |
| 3. | 24.10.2015 சனி<br>பிற்பகல் 02.00-4.00 | பேராசிரியர்<br>**புரிசை. நடராசன்**<br>அவர்கள் | 29 - 42 திருப்பதிகங்கள் |
| 4. | 24.10.2015 சனி<br>மாலை 04.00-07.00 | தேவார இன்னிசை,<br>பக்க வாத்தியங்களுடன்<br>முனைவர்<br>**கோ.ப. நல்லசிவம்**<br>அவர்கள், தஞ்சாவூர் | |
| 5. | 25.10.2015 ஞாயிறு<br>காலை 09.00-11.00 | சைவத்திரு<br>**சு. குஞ்சிதபாதம்**<br>அவர்கள் | 43 - 57 திருப்பதிகங்கள் |
| 6. | 25.10.2015 ஞாயிறு<br>நண்பகல் 11.00-01.00 | சைவத்திரு **சிவ. காந்தி**<br>அவர்கள் | 58 - 72 திருப்பதிகங்கள் |
| 7. | 25.10.2015 ஞாயிறு<br>பிற்பகல் 02.00-04.00 | சைவத்திரு.<br>**சொ.சொ.மீ. சுந்தரம்**<br>அவர்கள் | 73 - 87 திருப்பதிகங்கள் |
| 8. | 25.10.2015 ஞாயிறு<br>மாலை 04.00- 06.00 | முதுமுனைவர்<br>**ந. இரா. சென்னியப்பனார்**<br>அவர்கள் | 88 - 99 திருப்பதிகங்கள் |

# ஆறாம் திருமுறைக்கு இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்

| வ. எண் | ஆண்டு | நூலின் பெயர் | வெளியீட்டாளர் / பதிப்பகத்தார் / அச்சகம் | ஆசிரியர் | கொடையாளர் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | 1864 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | அப்பாவுப்பிள்ளை நமச்சிவாய முதலியார் | திருவாவடுதுறை ஆதீனப் பிரதிகள், தேசிகர்கள் எழுதிய ஓலைச்சுவடிகள் ஆதாரம் |
| 2. | 1866 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | ஏழு திருமுறைகளாகப் பண்முறையில் வெளியிடப்பட்டது |
| 3. | 1876 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | மறுபதிப்பு |
| 4. | 1881 | தலமுறைத் தேவாரம் | மதுரை இராமசாமிப் பிள்ளை, சென்னை புஷ்பரத செட்டியார் அச்சுக்கூடம் | துறைசை ஆதீன அப்பு ஓதுவார் | பனசை சீர்வளர்சீர் காசிவாசி இராமலிங்க சாமிகள் | மதுரை, துறைசை ஆதீனப் பிரதிகள் ஒப்பு |
| 5. | 1894 | தலமுறைத் தேவாரம் | திருமயிலை செந்தில்வேல் முதலியார் சென்னை விக்டோரியா ஜூபிலி அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் சீர்வளர்சீர் காசிவாசி சாமிநாத சாமிகள் | |
| 6. | 1898 | பண்முறைத் தேவார அடங்கல் | சண்முக முதலியார் சென்னை ஆறுமுகவிலாச அச்சுக்கூடம் | வேங்கட நாயுடு | - | மூன்றாம் திருமுறை மறுபதிப்பு |
| 7. | 1905 | தலமுறைத் தேவாரம் | சென்னை கலாரத் நாகர அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் காசிவாசி திருப்பெருந்திரு சாமிநாதசாமிகள் | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 8. | 1906 | பண்முறைத் தேவார அடங்கல் | எஸ்.பி இராஜாராம், ஸன் ஆப் இந்தியா அச்சகம், சென்னை | திருமயிலை வித்வான் சண்முகம் | | மறுபதிப்பு |
| 9. | 1907 | தேவாரம் | பங்காளம் அப்புபிள்ளை சென்னை நேஷனல் அச்சுக்கூடம் | | | |
| 10. | 1911 | தலமுறை மூவர் தேவாரம் | யாழ்ப்பாண வண்ணநகர்ச் சுவாமிநாத பண்டிதர், சென்னை வித்தியா நுட்பாலன அச்சுக்கூடம் | | | |
| 11. | 1917 | பண்முறை தேவார அடங்கல் | நமச்சிவாய முதலியார் நிரஞ்சன விலாஸ் அச்சகம், சென்னை | | | மறுபதிப்பு |
| 12. | 1917 | தேவார வேதசாரம் | சைவ சித்தாந்த மகாசமாஜம், இலங்கை | செந்தில்நாதய்யர், இலங்கை | மங்கையர்க்கரசி ஏகாம்பர முதலியார் | |
| | 1996 மறுபதிப்பு | | கலா சம்ரக்ஷண சங்கம், தஞ்சாவூர் | | மாதுஸ்ரீ பாலம் அம்மையார் | |
| 13. | 1927 | திருநாவுக்கரசர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| 14. | 1929-31 | திருநாவுக்கரசர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| 15. | 1930 -I<br>1935 -II<br>1941 -III | திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் 4,5,6 திருமுறைகள் | சைவ சித்தாந்த மகாசமாஜம், இலங்கை | | மூலநூல் | மூன்றாண்டுகளில் மூன்று பதிப்புகள் |
| 16. | 1953 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் பதிப்பு | - | - | - |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 17. | 1963 | திருநாவுக்கரசர் தேவாரம் | ஞானசம்பந்தம் பதிப்பகம் தருமபுரம் | | தருமையாதீனம் 25வது குருமகா சந்நிதானம் | சி. அருணை வடிவேல் முதலியார் |
| 18. | 1961 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 19. | 1968 | மூவர்தேவாரம் (தலமுறை) | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 20. | 1971 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | இரண்டாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 21. | 1972 | பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு தொகுதிகள்) | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் (காசித் திருமட நிதிய வெளியீடு) | வித்துவான் க. வெள்ளைவாரணர் | | 2412 பக்கங்கள் கொண்ட பெரிய வரலாற்று நூல் |
| 22. | 1979, 82, 92, 96 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | 4,5,6 ஆம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | ஒவ்வொரு பதிப்பிலும் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 23. | 1997 | இரண்டாம் பதிப்பு திருநாவுக்கரசர் தேவாரம் ஆறாம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் - தருமபுரம் காந்தளகம், சென்னை | பொழிப்புரை தி.வே. கோபாலய்யர் | தருமையாதீனம் 25வது குருமகா சந்நிதானம் | குறிப்புரை - அருணை வடிவேல் முதலியார் |
| 24. | 1998 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் மறுபதிப்பு | | | |
| 25. | 1998 -I 2002 -II 2005 -III | (அடங்கன் முறை தேவாரத் திருப்பதிகங்கள்) | கங்கை பதிப்பக நிலையம், சென்னை | அ.ச. ஞானசம்பந்தன் | | 7 திருமுறைகள் 8250 பாடல்கள் எண்ணிடப் பட்டுள்ளன. |
| 26. | 2001 | திருநாவுக்கரசர் தேவாரம் வரலாற்று முறை | சிவகாசி சிவனடியார் அறக்கட்டளை | பதிப்பாசிரியர் கு. சுந்தரமூர்த்தி | | |
| 27. | - | தேவாரம் மூன்று தொகுதிகள் | பிரெஞ்சு நிறுவனம் | கல்விக்கடல் கோபாலய்யர் | | |
| 28. | 2001 | திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் | காசித்திருமடம் திருப்பனந்தாள் | ஏழாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி | 3000 படிகள் - மூலம் மட்டும் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 29. | 2003 | திருநாவுக்கரசர் தேவாரம் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | வ.த. இராம சுப்பிரமணியம் | அருட்செல்வர் மகாலிங்கம் | ஆறாம் பதிப்பு மூலமும், தெளிவுரையும் 12 திருமுறைகள் |
| 30. | 2004, 2006 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | 8, 9 ஆம் பதிப்புகள் | பன்னிரு திருமுறை பதிப்புநிதி | ஒவ்வொரு பதிப்பிலும் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 31. | 2007 | திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் | கைலாஷ் அச்சகம் | | | மூலம் மட்டும்-2500 படிகள் 4,5,6 ஆம் திருமுறைகள் தலமுறை |
| 32. | 2007, 2012 மறுபதிப்பு | பன்னிரு திருமுறை | மெய்யப்பனார் மணிவாசகர் அச்சகம் / பதிப்பகம் வெளியீடு | பதிப்பு ஆசிரியர் முனைவர் ச.வே. சுப்பிரமணியம் தமிழூர் | | மூலம் மட்டும் |
| 33. | 2008 | திருநாவுக்கரசர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | பத்தாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 34. | 2008 | பன்னிரு திருமுறை | தமிழகச் சைவநெறிக் கழகம் | பதிப்பாசிரியர் சரவண பவானந்த தேசிகர் | | |
| 35. | 2009 | பன்னிரு திருமுறை | சதுரா பதிப்பகம் | தொகுப்பாசிரியர் சதுரா. ஜீ.ச. முரளி | | மூலமும், உரையும் ஒன்று முதல் ஆறு திருமுறை வரை |
| 36. | 2008 | மூவர் தேவாரம் | சதுரா பதிப்பகம் | பதிப்பாசிரியர் சதுரா. ஜீ.ச. முரளி | | 7 திருமுறைகள் மூலம் மட்டும் |
| 37. | 2010 | பன்னிரு திருமுறைகள் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | உரைஆசிரியர் வ.த. இராம சுப்பிரமணியம் | அருட் செல்வர் மகாலிங்கம் | மூலமும், உரையும் |
| 38. | 2011 | மூன்றாம் பதிப்பு திருநாவுக்கரசர் தேவாரம் ஆறாம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் கனரா பிரிண்டர்ஸ் சென்னை | பொழிப்புரை தி.வே. கோபாலய்யர் | தருமையாதீனம் 26வது குருமகா சந்நிதானம் | குறிப்புரை - அருணை வடிவேல் முதலியார் |
| 39. | 2011 | பன்னிரு திருமுறை வரலாறு | இராமையா பதிப்பகம் | | க. வெள்ளை வாரணார் | 1972 ஆம் ஆண்டு வெளிவந்த நூல், நாட்டுடைமையானது |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 40. | 2011 | மூவர் தேவாரச் சொல்லகராதி | இராமனந்த அடிகளார் அறக்கட்டளை | தொகுப்பு - பகுப்பு - டாக்டர் புலவர் மணியன் | அருட்செல்வர் மகாலிங்கம், கற்பகம் பல்கலைக்கழகம் | 8250 பாடல்களின் சொற்களுக்கும் அகராதி 2-தொகுதிகள். மிகவும் பயனுள்ள நூல். |
| 41. | 2011 | தேவாரத் திருப்பதிகங்கள் | இராமனந்த அடிகளார் அறக்கட்டளை | | அருட்செல்வர் | மூவர் தேவாரம் (பண்முறை) |
| 42. | 2015 | ஆறாம் திருமுறை திருநாவுக்கரசர் தேவாரம் | கற்பகம் பல்கலைக்கழகம் | பன்னிரு திருமுறை ஆய்வு மையம் | கற்பகம் அறக்கட்டளை | மூலமும், உரையும் |

* திருப்பனந்தாள் காசித் திருமடம் பத்துப் பதிப்புகளாக 30,000 படிகளை மூலமாக அடக்க விலையில் வெளியிட்டுப் பெரும்பணி செய்துள்ளார்கள்.
* வர்த்தமானன் பதிப்பகத்தார் சுருக்கமான உரையுடன் மூலத்தை ஏழு பதிப்புகளாகப் பல தொகுதிகளாக 12 திருமுறைகளையும் அருட்செல்வர் மகாலிங்கம் அருட்கொடையுடன் வெளியிட்டுத் திருமுறைகளுக்குச் சிறப்புச் செய்துள்ளார்கள்.
* இதுவரை வெளிவந்துள்ள உரைகளிலேயே மிக விரிவானது, விளக்கமானது 1963, 1997, 2011 ஆண்டுகளில் வெளிவந்த தருமையாதீன உரைதான். குருமகா சந்நிதானம் அவர்கள் சி. அருணை வடிவேல் முதலியார், தி.வே. கோபாலய்யர், குருசாமி தேசிகர் போன்ற உரையாசிரியர்களைக் கொண்டு வெளியிட்டருளினார்கள். அவற்றின் மறுபதிப்புகளை காந்தளகம் அச்சகம், கனரா பிரிண்டர்ஸ் மூலம் வெளியிட்டுள்ளார்கள்.
* நமது ஆறாம் திருமுறை நூலை வெளியிட மேற்காண் நூல்களின் தொகுப்புகள் மிக உதவியாக இருந்தன. அனைத்து குரு மகா சந்நிதானங்களுக்கும், நூல் வெளியீட்டாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் அப்பதிப்புகளின் கொடையாளர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள்.

# ஆறாம் திருமுறை

## தேவாரம் "பாடியவாறு" அட்டவணை

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஆறாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| | 574-ஆம் ஆண்டு திருநாவுக்கரசர் அவதாரம் | 18 | | |
| | 599-ஆம் ஆண்டு திருநாவுக்கரசர் சமணம் சார்ந்தது | 37 | | |
| | 619-ஆம் ஆண்டு திருநாவுக்கரசர் சமணத்திலிருந்து சைவரானது | 67 | | |
| 1. | அதிகைவீரட்டம் அரசன் அழைப்பதாகச் சொன்ன அமைச்சரை நோக்கி (மறுமாற்றத் திருத்தாண்டகம்) | 93 | நாமார்க்குங் குடியல்லோம் | 98 |
| 2. | அதிகை வீரட்டம் (ஏழைத் திருத்தாண்டகம்) | 143 | வெறிவிரவு கூவிள | 3 |
| 3. | அதிகை வீரட்டம் (ஊரில் தங்கிப் பணி செய்யும் போது) (அடையாளத் திருத்தாண்டகம்) | 144 | சந்திரனை மா | 4 |
| 4. | அதிகை வீரட்டம் (ஊரில் தங்கிப் பணி செய்யும் போது) (போற்றித் திருத்தாண்டகம்) | 144 | எல்லாஞ் சிவனென்ன | 5 |
| 5. | அதிகை வீரட்டம் (ஊரில் தங்கிப் பணி செய்யும் போது) (திருவடித்திருத்தாண்டகம்) | 144 | அரவணையான் | 6 |
| 6. | அதிகை வீரட்டம் (ஊரில் தங்கிப் பணி செய்யும் போது) (காப்புத் திருத்தாண்டகம்) | 144 | செல்வப் புனற்கெடில | 7 |
| 7. | பல்லவமன்னன் திருவதிகையில் குணபதீச்சரம் எடுத்தபின் முண்டீச்சரம் | 147 | ஆர்த்தான் காண் | 85 |
| 8. | ஆமாத்தூர் | 148 | வண்ணங்கள் தாம்பாடி | 9 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஆறாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 9. | திருமுதுகுன்றம் | 154/5 | கருமணியை | 68 |
| 10. | திருக்கழிப்பாலை | 173 | ஊனுடுத்தி | 12 |
| 11. | புலியூர் (தில்லை அம்பலம் நோக்கி வரும்போது) | 175 | அரியானை (பெரியதிருத்தாண்டகம்) | 1 |
| 12. | ஊரில் தங்கி உழவாரப் பணி செய்யும் நாளில் | 176 | மங்குல்மதி | 2 |
| 13. | நாரையூர் | 179 | சொல்லானை | 74 |
| 14. | ஓமாம்புலியூர் | 179 | ஆராரும் | 88 |
| 15. | திருப்புன்கூரும் நீடுரும் | 189 | பிறவாதே தோன்றிய | 11 |
| 16. | புள்ளிருக்கு வேளூர் | 189 | ஆண்டானை | 54 |
| 17. | திருவெண்காடு | 189 | தூண்டுசுடர் | 35 |
| 18. | திருச்சாய்க்காடு | 189 | வானத்திள | 82 |
| 19. | வலம்புரம் | 189 | மண்ணளந்த | 58 |
| 20. | திருக்கோடிக்கா | 190 | கண்டலஞ்சேர் | 81 |
| 21. | திருஆவடுதுறை (அடைந்துய்ந்தேன்) | 191 | நம்பனை நால்வேதம் | 46 |
| 22. | திருஆவடுதுறை | 191 | திருவே என் செல்வமே | 47 |
| 23. | திருவிடைமருதூர் | 192 | சூலப்படை | 16 |
| 24. | திருவிடைமருதூர் | 192 | ஆறுசடை | 17 |
| 25. | திருநாகேச்சரம் | 192 | தாயவனை | 66 |
| 26. | நல்லூர் (திருவடி சூட்டப்பெற்றபோது) | 196 | நினைந்துருகும் | 14 |
| 27. | திருக்கருகாவூர் | 198 | குருகாம் வயிரமாம் | 15 |
| 28. | வெண்ணி | 198 | தொண்டிலங்கு | 59 |
| 29. | திருச்சோற்றுத்துறை | 212 | மூத்தவனாய் | 44 |
| 30. | திருப்பழனம் | 212 | அலையார்கடல் | 36 |
| 31. | திருவலஞ்சுழி | 215 | அலையார் | 72 |
| 32. | திருக்குடந்தைக் கீழ்க் கோட்டம் | 215 | சொன்மலிந்த | 75 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஆறாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 33. | திருவாரூர் | 222 | கற்றவர்கள் உண்ணும் | 32 |
| 34. | திருவாரூர் | 226 | கைம்மான | 24 |
| 35. | திருவாரூர் | 226 | உயிராவண | 25 |
| 36. | திருவாரூர் | 226 | பாதித்தன் | 26 |
| 37. | திருவாரூர் | 226 | நீற்றினையும் | 28 |
| 38. | திருவாரூர் | 226 | திருமணியை | 29 |
| 39. | திருவாரூர் | 226 | எம்பந்தவல் | 30 |
| 40. | திருவாரூர் | 226 | இடர்கெடு | 31 |
| 41. | திருவாரூர் | 226 | ஒருவனாய் | 34 |
| 42. | ஆரூர் அரநெறி | 227 | பொருங்கைமத | 33 |
| 43. | வலிவலம் | 228 | நல்லான் காண் | 48 |
| 44. | கீழ்வேளூர் | 228 | ஆளான அடி | 67 |
| 45. | கன்றாப்பூர் நடுதறி | 228 | மாதினையோர் | 61 |
| 46. | திருப்பள்ளியின் முக்கூடல் | 230 | ஆராதஇன்ன | 69 |
| 47. | திருச்செங்காட்டங்குடி | 240 | பெருந்தகையை | 84 |
| 48. | திருநள்ளாறு | 240 | ஆதிக்கண்நான் | 20 |
| 49. | ஆக்கூர் | 249 | முடித்தாமரை | 21 |
| 50. | திருவீழிமிழலை | 253 | போரானை | 50 |
| 51. | திருவீழிமிழலை | 262 | கயிலாயமலை | 51 |
| 52. | திருவீழிமிழலை | 262 | கண்ணவன் காண் | 52 |
| 53. | திருவீழிமிழலை | 262 | மானேறுகர | 53 |
| 54. | தலையாலங்காடு | 263 | தொண்டர்க்கு | 79 |
| 55. | திருமறைக்காடு | 270 | தூண்டுசுடர் | 23 |
| 56. | திருவாய்மூர் (இறைக்காட்சிகண்டு) | 281 | பாடஅடியார் | 77 |
| 57. | திருநாகைக் காரோணம் | 291 | பாரார் பரவும் | 22 |
| 58. | கொட்டையூர் கோடீச்சரமும் வலஞ்சுழியும் | 301 | கருமணிபோற் | 73 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஆறாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 59. | இன்னம்பர் | 301 | அல்லிமலர் | 89 |
| 60. | திருப்புறம்பயம் | 301 | கொடிமாட | 13 |
| 61. | பந்தணைநல்லூர் | 301 | நோதங்க | 10 |
| 62. | கஞ்சனூர் | 301 | மூவிலைநற் | 90 |
| 63. | சிவபுரம் | 301 | வானவன் காண் | 87 |
| 64. | திரு ஆனைக்கா | 302 | எத்தாயர் | 62 |
| 65. | திரு ஆனைக்கா | 302 | முன்னானை | 63 |
| 66. | திருவெறும்பியூர் | 302 | பன்னியசெந்தமிழ் | 91 |
| 67. | திருக்கற்குடி | 302 | மூத்தவனை | 60 |
| 68. | திருமாற்பேறு | 327 | பாரானை | 80 |
| 69. | கச்சியேகம்பம் | 328 | கூற்றுவன் காண் | 64 |
| 70. | கச்சியேகம்பம் | 328 | உரித்தவன் காண் | 65 |
| 71. | திருக்கழுக்குன்றம் | 330 | மூவிலைவேல் | 92 |
| 72. | திருவொற்றியூர் | 335/6 | வண்டோங்கு | 45 |
| 73. | பாசூர் | 350 | விண்ணாகி | 83 |
| 74. | திருவாலங்காடு | 342 | ஒன்றா உலக | 78 |
| 75. | திருக்காளத்தி | 345 | விற்றூணொன் | 08 |
| 76. | திருக்கோகர்ணம் | 346 | சந்திரனும் | 49 |
| 77. | திருக்கயிலாயம் (போற்றித் திருத்தாண்டகம்) | 381 | வேற்றாகி | 55 |
| 78. | திருக்கயிலாயம் (போற்றித் திருத்தாண்டகம்) | 381 | பொறையுடைய | 56 |
| 79. | திருக்கயிலாயம் (போற்றித் திருத்தாண்டகம்) | 381 | பாட்டான | 57 |
| 80. | திருவையாறு | 385 | ஆரார்திரி | 37 |
| 81. | திருவையாறு | 385 | ஓசை ஒலி எலாம் | 38 |
| 82. | திருநெய்த்தானம் | 386 | வகையெலாம் | 41 |
| 83. | திருநெய்த்தானம் | 386 | மெய்த்தானத் | 42 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | ஆறாம் திருமுறைப் பதிக எண் |
|---|---|---|---|---|
| 84. | திரு ஆலம்பொழில் | 386 | கருவாகிக் கண் | 86 |
| 85. | திருமழபாடி | 386 | நீறேறுதிரு | 39 |
| 86. | திருமழபாடி | 386 | அலையடுத்த | 40 |
| 87. | திருப்பூந்துருத்தி | 388 | நில்லாதநீர் | 43 |
| 88. | திருப்பூந்துருத்தியில் தங்கியிருந்த போது பல்வகைத் திருத்தாண்டகம் | 390 | நேர்ந்தொருத்தி | 93 |
| 89. | திருப்பூந்துருத்தியில் தங்கியிருந்த போது பரவுதனித் திருத்தாண்டகம் | 390 | அப்பன் நீ அம்மை நீ | 95 |
| 90. | திருப்பூந்துருத்தியில் தங்கியிருந்த போது பரவுதனித் திருத்தாண்டகம் | 390 | ஆமயந்தீர்த்தடியேனை | 96 |
| 91. | திருப்பூந்துருத்தியில் தங்கியிருந்த போது அடைவுத் திருத்தாண்டகம் | 390 | பொருப்பள்ளி | 71 |
| 92. | திருப்புத்தூர் | 402 | புரிந்தமரர் | 76 |
| 93. | ஆலவாய் (மதுரை) | 404 | முளைத்தானை | 19 |
| 94. | திருப்பூவணம் | 407 | வடியேறு | 18 |
| 95. | திருப்புகலூர் நின்ற திருத்தாண்டகம் | 414 | இருநிலனாய் | 94 |
| 96. | திருப்புகலூர் சேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் | 414 | தில்லைச் சிற்றம்பலம் | 70 |
| 97. | ஆரூர் | 423 | பொய்ம்மாய | 27 |
| 98. | பொது | | அண்டங்கடந்தசுவடு | 97 |
| 99. | திருப்புகலூர் (திருவடி அடையும் போது) | 426 | எண்ணுகேனென் | 99 |

# தாண்டகம்

**சை**வம் தமிழுக்கு அளித்த இயல், இசை, இலக்கண இலக்கியக் கொடைகளை அளவிடல் அரிது. பழந்தமிழ் இலக்கியங்களில் முத்தமிழ் என்று தமிழைக் குறிப்பிட்டவர் நம் அப்பர் அடிகளேயாவார். "மூலநோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்; முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்" **(6–23–9)** என்பது அவர்தம் அருள் வாக்கு. தமிழரைத் தமிழன் என்று பழம் பெரும் இலக்கியங்களில் சொல்லிய சிறப்பும் அப்பர் அடிகளையே சேரும். "ஆரியன் கண்டாய்; தமிழன் கண்டாய்; அண்ணாமலை உறையெம் அண்ணல் கண்டாய்" **(6–23–5)** என்னும் திருமறைக்காட்டுத் திருத்தாண்டகம் இதனையுணர்த்தும். ஆறாந்திருமுறைப்பாடல்கள் **(99** பதிகங்கள்**)** அனைத்தும் "தாண்டக யாப்பு" முறையில் அமைந்தவை. தமிழிலக்கிய வரலாற்றில், முதன்முதலாக 'தாண்டக யாப்பில்' பாடல்களை அருளியவர் திருநாவுக்கரசு சுவாமிகள் ஒருவரே. ஆதலால், அவரைத் "தாண்டகச் சதுரர்" என்று தெய்வச் சேக்கிழாரும் "தாண்டக வேந்தர்" என்று கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாசரும் போற்றி மகிழ்ந்தனர். "தாண்டகம்" என்பது தொல்காப்பியச் செய்யுளியல்படி, எண் சீரால் வந்த தேமாவாக நிற்ப, மூன்றாஞ்சீரும், ஏழாஞ்சீரும் பெரும்பான்மை தேமாவாகவும், ஒரோவழிப் புளிமாவாகவும் அமைய இவை ஒழிந்த ஒன்று, இரண்டு, ஐந்து ஆறாஞ் சீர்கள் பெரும்பாலும் காய்ச்சீர்களாகவும், சிறுபான்மை மாச்சீர், விளச்சீர்களாகவும் வருதல் 'தாண்டகம்' என்னும் பாவின் இயல்பாகும். எண் சீராக வந்த இந்தத் தாண்டகப்பாவில், அடிதோறும் மூன்று, நான்கு, ஏழு, எட்டாம் சீர்களை விலக்கிவிட்டு ஏனைய நான்கு சீர்களையும் இணைத்து நோக்கினால் அப்பாடல் கொச்சகக்கலிப்பா என்னும் யாப்புருவில் அமைதலைக் காணலாம். 'தாண்டக' யாப்பு குறித்த இலக்கணம், பன்னிரு பாட்டியல், யாப்பருங்கலவிருத்தி என்னும் நூல்களில் விளங்கக் காணலாம்.

எண் சீராக வருகின்ற தாண்டகப்பாவில், அடிதோறும் மூன்று, நான்கு, ஏழு, எட்டாம் சீர்களை விலக்கிவிட்டு ஏனைய நான்கு சீர்களையும் இணைத்து நோக்கினால் அப்பாடல் கொச்சகக்கலிப்பா என்னும் யாப்புருவில் அமைதலைக் காணலாம்.

"வண்ணங்கள் தாம்பாடி வந்து நின்று
வலிசெய்து வளைகவர்ந்தார் வகையால் நம்மைக்
கண்ணம்பால் நின்றெய்து கனலப் பேசிக்
கடியதோர் விடையேறிக் காபா லியார்
சுண்ணங்கள் தாங்கொண்டு துதையப் பூசித்
தோலுடுத்து நூல்பூண்டு தோன்றத் தோன்ற
அண்ணலார் போகின்றார் வந்து காணீர்
அழகியாரே ஆமாத்தூர் ஐய னாரே" **6–9–1**

மேற்காண் பாடலில் அடிதோறும் மூன்று, நான்கு, ஏழு, எட்டாம் சீர்களை விலக்கி ஏனைய நான்கு சீர்களையும் இணைத்து நோக்கினால்;

"வண்ணங்கள் தாம்பாடி வலிசெய்து வளைகவர்ந்தார்
கண்ணம்பால் நின்றெய்து கடியதோர் விடையேறிச்
சுண்ணங்கள் தாங்கொண்டு தோலுடுத்து நூல்பூண்டு
அண்ணலார் போகின்றார் அழகியரே ஆமாத்தூர்"

என்ற கொச்சகக்கலிப்பா பாடல் கிடைக்கும்.

யாப்பருங்கல விருத்தி இரண்டாம் சூத்திர விளக்கவுரையிலிருந்து தாண்டகம் அளவியல், அளவழி என்னும் இரண்டு வகைப்படும் என்பது தெரிகிறது. அளவியல் தாண்டகம் – இருபத்தேழெழுத்து முதலாக உயர்ந்த எழுத்தடியினவாய் எழுத்தும், குரு, லகுவும் ஒத்து வருவன. அளவழித்தாண்டகம் – எழுத்தொவ்வாதும், எழுத்தலகு ஒவ்வாதும் வருவன.

<u>பன்னிரு பாட்டியல்</u> குறு, நெடு என்ற இரண்டு வகைத் தாண்டகங்களைத் தொகுத்துச் சொல்கின்றது.

குறுந்தாண்டகம் – அறுசீரடிப் பாக்களால் ஆனது

நெடுந்தாண்டகம் – எண் சீரடிப் பாக்களால் ஆனது

"மூவிரண்டேனும் இரு நான்கேனும்,
சீர்வகை நாட்டிச் செய்யுளின் ஆடவர்,
கடவுளர்ப்புகல்வன தாண்டகம் அவற்றுள்
அறுசீர் குறிது நெடியதெண் சீராம்"

"அறுசீர் எண்சீர் அடிநான் கொத்தங்
கிறுவது தாண்டகம் இருமுடிச்சீரடி
குறியது நெடிய திருநாற் சீரே"

<u>மாபூதனார் நூற்பா,</u>

"மங்கல மரபின் மானிடர் கடவுளர்
தம்புகழ் உரைப்பது தாண்டக வகையே"

"தாண்டகம் மானிடர் கடவுளர்க் குறித்தே"

<u>சீத்தலையார்</u>

"அடிவரை நான்கும் எழுத்தெண்ணி
நேரடிவருவது தாண்டகம் ஆகும்"

இவ்வளவு சிறப்பு வாய்ந்த தாண்டக யாப்பில் ஆறாம் திருமுறையில் **99** பதிகங்களில் **981** பாடல்களின் வாயிலாக அப்பர் சுவாமிகள் சிவபெருமானின் பேரருளை நினைந்து ஒரு

தலத்திலிருந்து மற்றொரு தலத்திற்குச் செல்லும்போதும், அக்கோயில்களில் உழவாரத்தொண்டு முதலிய திருப்பணிகளைச் செய்யும்போதும் இறைவனை முன்னிலைப்படுத்திப் போற்றும் நிலையிலும், அவ்விறைவனது பொருள்சேர் புகழை உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் நிலையிலும் கீழ்க்கண்ட கருத்துக்களை நமக்கு எடுத்தியம்புகிறார்.

1. சிவபெருமானுடைய திரு அடையாளங்கள்
2. சிவபெருமான் எழுந்தருளி அருள்பாலிக்கும் பலதலங்கள்
3. சிவபெருமானைச் சேர்பவர் நன்னெறி சார்தலும் சேராதார் தீநெறி சார்வதும்
4. உபதேசங்கள் – இறைவனைக் கண்ட வண்ணம்
5. வாய்மூர் இறைவன் திருக்காட்சி
6. போற்றிப்பரவுதல்
7. ஆரூர்க் கோயிலின் பழமை – அதன்மூலம் சைவம் / தமிழின் தொன்மை
8. கயிலாயக் காட்சிகள்
9. அகப்பொருள் பதிவுகள்
10. நெஞ்சறிவுறுத்தல் – பலியேற்றலின் சிறப்பு
11. அருளியல் விண்ணப்பங்கள்

அப்படிப்பட்ட திருத்தாண்டகத்தைப் பாடியும், பரவியும் உய்வோமாக.

# அப்பர் அருளிய திருப்பனுவல்களின் வகைகளும் செய்யுளிலக்கண நுட்பங்களும்

- பேராசிரியர் ம.வே. பசுபதி

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய
திருப்பனுவல்களின் வகைகள்

தேவாரம் என்று போற்றப்பெறும் நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளில் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள், ஓரடி மேல்வைப்பு ஆசிரிய விருத்தங்கள், தரவு கொச்சகங்கள், ஏழுசீர்க் கழிநெடிலடிச் சந்தக் கட்டளை விருத்தங்கள், கலித்தாழிசைகள் சந்தக் கலிவிருத்தங்கள் ஆசிரியத் துறைகள் கலித்துறைகள், திருநேரிசைகள், திருவிருத்தங்கள், திருக்குறுந்தொகைகள், திருத்தாண்டகங்கள் இடம் பெறுகின்றன.

தாழிசை துறை, விருத்தப் பாக்களைப் "பா இனம்" என்பது யாப்பியல் மரபு. தொல்பழங்கால இலக்கண நூலாகிய தொல்காப்பியம் இவற்றைப் "பண்ணத்தி" என்னும் ஒரே தலைப்பில் அடக்கும். "பண்ணத்தி எனினும் பாவினம் எனினும் ஒக்கும்" என்பார் இளம்பூரணர். அவையாவன சிற்றிசையும் பேரிசையும் முதலாக இசைத்தமிழில் ஓதப்படுவன எனப் பண்ணத்திக்கு முதன் முதலாக விளக்கம் அளித்தவரும் அவரே ஆவார். சிற்றிசையைச் "சுத்தாங்கம்" எனவும் பேரிசையைப் "பண்ணாங்கம்" எனவும் கொள்க.

யாப்பருங்கல மேற்கோட் சூத்திரம் "இசைநுவன் மரபின் இயன்ற செய்யுள்" எனக் குறிப்பது இப்பண்ணத்தியையே ஆகும்.

மேலெழுதிய செய்திகளால் நால்வகைப் பாக்களின் இனங்களாகிய தாழிசை, துறை, விருத்தங்கள் என்பவை பண்ணிசைக்கேற்ற பா வடிவங்கள் என அறியலாம். தேவாரப் பனுவல்கள், பண்ணத்திப் பனுவல்கள் ஆம்.

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள்

அப்பரடிகள் அருளிய நான்காம் திருமுறையில் 4, 5, 6, 15-ஆம் திருப்பதிகங்கள் இவ்வகையின. திருநேரிசைகளும் ஓரடிக்கு ஆறு சீர்கள் உடையனவாயினும், அவை, கட்டளை வகையான் முதன்மை பெறுவன. அதன் விளக்கம் பின்னர்க் காண்போம்.

கழிநெடிலடிகள் - ஒரடிக்கு ஆறு சீர்கள் முதலாகப் பல சீர்களைக் கொண்ட அடிகள்.

விருத்தப் பாக்கள் - பொதுவாக – முதலடிக்கு அமைத்துக் கொள்ளும் கட்டளையைப் பின்பற்றி, மேலும் மூன்றடிகளை இணைத்துச் செய்யப் பெறுவன ஆகும். நான்கு அடிகளிலும் முதற்சீரின் இரண்டாம் எழுத்து ஒன்றி, ஒரே எதுகை வரும்.

தொல்காப்பியர் - கழிநெடிலடி, ஒற்று (மெய்) எழுத்துகளை நீக்கிப் 17, 18, 19, 20 எழுத்துகளைக் கொண்டதாக அமைவது என்கிறார். ஆறு சீர்களைக் கொண்ட விருத்தங்களுக்கு இந்நியதி பெரும்பாலும் பொருந்தி வரும். பிற 7, 8, 10 என ஏறு வரிசையில் அமையும் சீர்களைக் கொண்ட விருத்தப் பாக்களுக்கு இவ்வெண்ணிக்கை பொருந்தி வருவதன்று.

“கட்டளை” என்பது தேமா, புளிமா முதலிய சீர்களுக்கான சீர்வாய்ப்பாடுகளை முன்நிறுத்திக் கொள்வது. பாவின் நான்கு அடிகளிலும் ஓசை அளவு குறையாமலும், மிகாமலும் - அளவொத்து - இருக்கக் கட்டளைகள் உதவும். தேவார ஆசிரியர்களே இவ்வுண்மையை நன்குணர்ந்து, சீர்க் கட்டளைகளையும் எழுத்தெண்ணும் கட்டளைகளையும் ஏற்றபெற்றி (தக்கவாறு) பயன்படுத்தினர். எழுத்தெண்ணிக்கையில் கூட்டியும் குறைத்தும் இசை நயத்தைப் புலப்படுத்தினர். மெய்ப்பாடுகளை – உணர்ச்சிகளை – ஆழப் பதித்தனர்.

அறுசீர் விருத்தக் கட்டளையில் அப்பரடிகள் கையாண்ட நுட்பங்கள்

| **அடி**<br>எண் | **கட்டளை எண்கள்** | **சீர் எண்கள்** |
|---|---|---|
| 1. | 1 2 3<br>விளம் காய் தேமா<br>4 5 6<br>காய் காய் தேமா | சீர் எண் கள்<br>1 2 3<br>பாடிளம் பூதத்தி னானும்<br>கூவிளம் தேமாங்காய் தேமா<br>4 5 6<br>பவளச்செவ் வாய்வண்ணத் தானும்<br>புளிமாங்காய் தேமாங்காய் தேமா |
| 2. | | 1 2 3<br>கூடிள மென்முளை யாளைக்<br>கூவிளம் கூவிளம் தேமா<br>4 5 6<br>கூடிய கோலத்தி னானும்<br>கூவிளம் தேமாங்காய் தேமா |
| 3. | | 1 2 3<br>ஓடிள வெண்பிறை யானும்<br>கூவிளம் கூவிளம் தேமா<br>4 5 6<br>ஒளிதிகழ் சூலத்தி னானும்<br>கருவிளம் தேமாங்காய் தேமா |
| 4. | | 1 2 3<br>ஆடிளம் பாம்பசைத் தானும்<br>கூவிளம் கூவிளம் தேமா<br>4 5 6<br>ஆரூ ரமர்ந்தவம் மானே<br>தேமா கருவிளம் தேமா (4:4:1) |

பாடலின் முதலடியில் வந்தமைந்த கட்டளைப்படி 2, 4, 5-ஆம் சீர்கள் காய்ச்சீர்கள், பின்னடிகளில் - கட்டளைப்படி – காய்ச் சீர்கள் வரவேண்டிய இடங்களில் விளச்சீர்கள் வந்துள்ளன. (அந்த இடங்கள் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளன) அடிதோறும் நான்காம் சீர்கள் நன்னான்கு மாத்திரைகளால் ஓசைச் சமன் பெறுகின்றன. இதனால் காய்ச்சீருக்கு நிகராக விளச்சீர் வரலாம் என ஓசைச் சமன் ஏற்படுதல் கருதி – அப்பரடிகள் இலக்கண நுட்பம் வகுத்தவராகிறார். நெளிகோடிட்ட இடங்களில் ஒற்று நீக்கி எண்ணினால் மூன்றெழுத்துகளே உள்ளமை காண்க. முதலடியின் இரண்டாம் சீராகிய "பூதத்தி" என்பதில் ஒற்று நீக்கி எழுத்தெண்ணினால் உள்ள எழுத்துகள் மூன்று எழுத்தெண்ணிக்கையால் ஓசைச் சமனாதல், மாத்திரை அளவால் ஓசைச் சமனாதல் என்பவை குறித்துப் பின்னும் ஓரிடத்தில் விளக்குவாம்.

இவ்விலக்கண நுட்பங்களைப் பிற்கால யாப்பு நூலார் குறிக்கவில்லை. தேவாரம் பயிலாமையாலோ, இந்நுட்பங்கள் அவர் மனத்தில் படியாமையாலோ, வேறு எக்காரணத்தினாலோ விருத்தங்களில் ஓசைச்சமன் செய்து பண்ணிசைக்குதவும் வழிமுறைகளாகிய இவற்றைப் பிற்கால இலக்கண நூலார் குறிக்கவில்லை.

நான்காம் திருமுறை – நான்காம் திருப்பதிகத்தில், விளம் - விளம் - மா- விளம் - விளம் - மா; காய் - விளம் - மா – காய் - விளம் - மா' என்னும் கட்டளையில் அமைந்த பனுவல்களும் உள்ளன. அச்சுப் பதிப்புகளில் சொற்சீர்களாகவே இருக்கும். முதலடியிலமைந்த கட்டளைக்கேற்ப வகையுளிகள் செய்து கொள்ள வேண்டும்.

"விளம் - விளம் - மா
விளம் - விளம் - மா"

என்னும் கட்டளையில் அமைந்த பனுவல் ஒன்றைக் காண்போம்.

| அடி எண் | பனுவல் (4 : 4 : 8) | ஒற்று நீக்கி எழுத்தெண்ணிக்கை |
|---|---|---|
| 1 | ஆயிரம் தாமரை போலும்<br>ஆயிரம் சேவடி யானும் | 16 |
| 2 | ஆயிரம் பொன்வரை போலும்<br>ஆயிரம் தோளுடை யானும் | 16 |
| 3 | ஆயிரம் ஞாயிறு போலும்<br>ஆயிரம் நீண்முடி யானும் | 16 |
| 4 | ஆயிரம் பேருகந் தானும்<br>ஆரூ ரமர்ந்தவம் மானே | 16 |

**இப்பனுவலில் கட்டளையும் எழுத்தெண்ணிக்கைச் சமனும் கை கோர்த்துச் செல்வதைக் காணமுடிகிறது. இவ்வாறான பனுவல்கள் மேலும் பல உள.**

நான்காம் திருமுறை – ஐந்தாம் திருப்பதிகம்

கட்டளை 1 - “விளம் - காய் - காய்
விளம் - மா – மா” - என்றும்

கட்டளை 2 - “காய் - காய் - காய்
காய் - மா – மா” - என்றும்

அமைந்துள்ளது. முதற்கட்டளையில் (கட்டளை -1) அமைந்த முதற் பனுவலைப் பார்ப்போம்.

| அடி எண் | பனுவல் (4 : 5 : 1) | ஒற்று நீக்கி எழுத்தெண்ணிக்கை |
|---|---|---|
| 1 | மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த<br>மேனியான் தாள்தொ ழாதே | 16 |
| 2 | உய்யலாம் என்றெண்ணி உறிதூக்கி<br>உழிதந்தென் உள்ளம் விட்டுக் | 18 |
| 3 | கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ<br>மயிலாலும் ஆரூ ரரைக் | 19 |
| 4 | கையினால் தொழாதொழிந்து கனியிருக்கக்<br>காய்கவர்ந்த கள்வ னேனே | 21 |

இப்பனுவலிலும் முதலடியின் நான்காம் சீராகிய விளச்சீருக்கு (மேனியான்) என்பதற்கு எஞ்சிய அடிகளில் நான்காம் சீர்களெல்லாம் காய்ச்சீர்களாக வந்து இணையாகின்றன. இங்கு எழுத்தெண்ணிக்கைச் சமனோ, மாத்திரைச் சமனோ இன்றி, விளச்சீருக்குச் சமனானதற்குக் காரணம் யாதெனின், ஓரடிக்கு ஓரடி எழுத்தெண்ணிக்கையைக் கூட்டி, உணர்ச்சியை மேலும் மேலுமாக உயர்த்தியமையேயாகும். இதனைக் காந்தாரப் பண்ணில் பாடுவோர் பாடும்போது நன்குணரலாம்.

இப்பனுவலில் மூன்றாம் அடி; அதில் ஆறாம் சீர் “ரரைக்” என, ஓரசையாகிய நிரையசையில் வந்துள்ளது. அங்கே வரவேண்டிய கட்டளை “தேமா” என்பது. அங்கே நிரையசையே ஈரசை கொண்ட தேமாவுக்குச் சமமாகி விடுகிறது.

வெண்பாவின் ஈற்றுச் சீர் ஓரசையாக வருதல் கருதித் தொல்காப்பியர்,

“இசைநிலை நிறைய நிற்குவ தாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறவே”

என நூற்பா யாத்தார். பாடலுக்கு இடையிலும் ஓரசை, சீராக வரும் என்பதற்குப் பிற்கால இலக்கண நூலாகிய ‘யாப்பருங்கலக் காரிகை’

‘அசைச்சீர் இயற்சீர் ஒக்கும் ஒண்தளைக்கே’

என இலக்கணம் வகுக்கிறது. தளைக்கு மட்டுமன்று, “கட்டளைகளிலும் ஓரசையே சீராக அமையும் என்பது அப்பரடிகள் யாப்பியலுக்களித்த இலக்கணக் கொடையாகும்.

நான்காம் திருமுறை – ஆறாம் திருப்பதிகம்; - இ∴து, ஐந்தாம் பதிகக் கட்டளைகள் அமைந்த பதிகமாகவே விளங்குகின்றது. பதிப்புகளில் உள்ளவாறே பாராமல், யாப்பியல் நோக்கில் தேவையான வகையுளிகள் செய்து கொண்டு, அதன் மூலம் கட்டளைகள் பொருந்தி வருதலை, அறிதல் வேண்டும் என்பது ஒன்று, ''காய்ச்சீரும் விளச்சீரும் சமமே'' என்கிற அப்பரடிகள் வகுத்த யாப்பு நுட்பத்தையும் மறவாமற் கருத்துட் கொள்ள வேண்டும் என்பது மற்றொன்று.

நான்காம் திருமுறை – பதினைந்தாம் திருப்பதிகம் இதுவும் மேலெழுதிய நியதிகளின்படி அமைந்த பதிகமே. இ∴து, அறுசீர்க் கழிநெடிலடிக் கட்டளைகளாலான ஆசிரிய விருத்தமே ஆகும். இப்பதிகத்திற்குரிய கட்டளை

''மா – மா – காய்
மா – மா – காய்''

என்பதாகும். குழந்தைகளுக்கான பாடல்கள் புனைவோர் இக்கட்டளையைப் பெரிதும் பயன்படுத்துவர். இக்கட்டளையில் அமைந்த பனுவலுக்குச் சான்று;

பற்றற் றார்சேர் பழம்பதியைப்
பாசூர் நிலாய பவளத்தைச்
சிற்றம் பலத்தெம் திகழ்கனியைத்
தீண்டற் கரிய திருவுருவை
வெற்றி யூரில் விரிசுடரை
விமலர் கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றி யூர்எம் உத்தமனை
உள்ளத் துள்ளே வைத்தேனே (4: 15: 1)

எழுசீர்க் கழிநெடிலடி-
சந்தக் கட்டளை – விருத்தங்கள்...

நான்காம் திருமுறை – 8-ஆம் திருப்பதிகமும், 14-ஆம் திருப்பதிகமும் இவ்வகையின. இவை பொதுப்பதிகங்கள். சந்தக் குழிப்புகளுக்கும் கட்டளைகளுக்கும் ஒத்துவரப் பாடுதல் அதீதக் கவித்துவம் உடையார்க்கே ஒல்லும். இவ்விரு பதிகங்களுக்குமான சந்தக் குழிப்புகளைக் கற்பக வேந்தரின் உரைவிளக்கம் நான்காம் திருமுறைச் செம்பதிப்பின் 68, 69-ஆம் பக்கங்களில் காண்க.

8-ஆம் திருப்பதிகக் கட்டளை
1 2 3 4
விளம் - காய் - காய் - மா –
5 6 7
காய் - மா – மா

பனுவல்:

''விரிகதிர் ஞாயிறல்லர்; மதியல்லர்; வேத
விதியல்லர்; விண்ணும் நிலனும்
திரிதரு வாயுவல்லர்; செறுதீயும் அல்லர்;
தெளிநீரு மல்லர்; தெரியில்

அரிதரு கண்ணியாளை ஒருபாக மாக
அருள்கா ரணத்தில் வருவார்;
எரியர வாரமார்பர் இமையாரு மல்லர்;
இமைப்பாரு மல்லர் இவரே - (4: 8: 2)

இப்பனுவலிலும், இதனைத் தொடர்ந்து வரும் பனுவல்களிலும் மேலெழுதிய கட்டளைப்படியே தொடர்கள் அமைந்துள்ளன. இப்பதிகத்தின் முதற்பனுவல் - முதலடி,

"சிவனெனும் ஓசையல்ல தறையோவு லகில்[1]
திருநின்ற செம்மை உளதே"

என அமைந்துள்ளது. இதனுள் 1 எனக் குறியிட்ட நான்காம் சீர் ஓரசைச் சீர் - நிரையசை, இது தேமாவுக்குச் சமம் என்பது முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது.

இப்பனுவலின் அடி தோறும் 23 எழுத்துகள் இடம்பெறுகின்றமையால், முதலடி நான்காம்சீர் ஓரசையே சீராக வரினும், ஓசைச்சமன் பெறுகின்றது.

14-ஆம் திருப்பதிகமும், 8-ஆம் திருப்பதிகக் கட்டளை அமைப்பிலேயே அமைந்துள்ளது.

## ஆசிரியத் துறை

**நான்காம் திருமுறை – 20-ஆம் திருப்பதிகம். இது, "காண்டலே கருத்தாய்" என்று தொடங்குகின்றது. இஃது ஆசிரியத் துறையில் அமைந்ததாகும்.**

**"கடையதன் அயலடி கடைதபு நடையவும்
நடுவடி மடக்காய் நான்கடி யாகி
இடையிடை குறைநவும் அகவல் துறையே"**

**என்பது யாப்பருங்கல நூற்பா. முதலடிச் சீரெண்ணிக்கைக்கு இரண்டாமடிச் சீரெண்ணிக்கை குறைந்தும், மூன்றாமடிச் சீரெண்ணிக்கைக்கு நான்காமடிச் சீரெண்ணிக்கை குறைந்தும் வருவது "ஆசிரிய இணைக்குறள் துறை" என்பதாகும்.**

**"குறள்" என்பது முதலடிக்கு இரண்டாமடி, மூன்றாமடிக்கு நான்காமடி குறைந்து வருவதைக் குறிக்கும் சொல். குறட்பா வகையை இது குறிக்காது. "இணைக் குறள்" என்பது அவ்வாறான தொடர்கள் இரண்டிணைந்த பாடல் எனப் பொருள் தரும்.**

**அதற்கான சான்று 20-ஆம் திருப்பதிகம்**

| அடி எண் | பனுவல் (4:20:1) | சீர்கள் |
|---|---|---|
| 1 | "காண்டலே கருத்தாய் நினைந்திருந் தேன்மனம் புகுந்தாய்; கழலடி | 6 |
| 2 | பூண்டுகொண் டொழிந்தேன் <u>புறம்போயினா லறையோ</u> | 4 |
| 3 | ஈண்டுமா டங்கள் நீண்டமா ளிகைமேல் <u>எழுகொடிவா</u> னிளம்மதி | 6 |
| 4 | தீண்டிவந் துலவுந் <u>திருவாரூ ரம்மானே</u>" | 4 |

கோடிடப் பெற்ற சீர்கள் ஐந்தும் காய்ச்சீர்கள். எஞ்சியவை ஆசிரியத்துக்குரிய இயற்சீர்கள் - ஆசிரிய உரிச்சீர்கள் ஆசிரியப்பாவிலும், இனங்களிலும் காய்ச்சீர் விரவுதல் யாப்பிலக்கண முறைமையே ஆகும்.

## தரவு கொச்சகங்கள்

**கொச்சகக் கலிப்பா உறுப்புகளில் "தரவு" என்பது முதலுறுப்பாகும். தரவு கொச்சகம் இருவகைப்படும். 1. தரவு மட்டும் பெற்று வருவது. 2 தரவுடன், தனிச்சொல், சுரிதகம் எனும் இரண்டு உறுப்புகளும் இணைந்து வருவது.**

**நான்காம் திருமுறை 7, 12, 13, 19-ஆம் திருப்பதிகங்கள் - இந்நான்கும் தரவு கொச்சகக் கலிப்பாக்களால் ஆனவை. இவை "தரவு" என்னும் கலியுறுப்பு மட்டும் பெற்று வரும் முதல் வகையின.**

**"தரவு" என்பது – செய்திகளை முதலில் அறிமுகம் செய்வது, கட்டுரைகளின் முன்னுரை போன்ற உறுப்பு இது.**

**"கொச்சகம்" என்பது –"கொய்சகம்" என்னும் சொல்வழியே பிறந்தது. சேலையை மடித்து மடித்து உடுத்தும் பகுதியைக் "கொசுவம்" என்பர். அது போன்றதே கொய்சகம் - கொச்சகம். ஒரே செய்தியை எடுத்து மொழிந்து மடித்துச் சொல்வது தரவு "கொச்சகம்" இது பொருளமைப்பு முறையால் பெற்ற பெயர்.**

**கலித்தளை – காய் முன் நிரை – களாலேயே வருவது**
**வெண்டளை – காய் முன் நேர் (சில இயற்சீர் வெண்டளைகள்) - களாலேயே வருவது**

**கலித்தளை வெண்டளைகள் இரண்டும் கலந்து வருவது**

**இவ்வாறு அமைவதே தரவு கொச்சகம்.**

**கலித்தளையும் வெண்சீர் வெண்டளையும் விரவி வந்தமைக்கு அப்பர் தேவாரத்திலிருந்து ஒரு சான்று.**

**கரவா<u>டும் வன்நெஞ்</u>சர்க் கரியானை; கரந்தவர்பால்**
**விரவாடும் பெருமானை; விடை<u>யேறும் வித்த</u>கனை**
**அரவாடச் சடை<u>தாழ அங்கை</u>யினில் அனலேந்தி**
**இரவாடும் பெரு<u>மானை என்ம</u>னத்<u>தே</u> வைத்தேனே (4:7:1)**

**கோடிட்ட ஐந்திடங்களும் வெண்டளைகள் விரவி வந்த இடங்கள். எஞ்சிய பத்திடங்களும் கலித்தளைகள் வந்த இடங்கள் அனைத்தும் மூவசைச் சீர்களே. இயற்சீர் கலவாமையால் இப்பனுவல் ஏந்திசைத் துள்ளலோசையில் அமைந்துள்ளது. இப்பதிகத்தின் நான்கு, ஆறாம் பனுவல்களில் இயற்சீர்கள் விரவி வந்தமையால் அகவல் துள்ளலோசை எழுப்புகின்றன; பிரிந்திசைத் துள்ளல் எனலுமாம்.**

**நான்காம் திருமுறை – 12, 13-ஆம் திருப்பதிகங்களில் இடம் பெறும் பனுவல்கள் யாவும் கலித்தளையும் வெண்சீர் வெண்டளையும் விரவி வந்து ஏந்திசைத் துள்ளலோசை கொண்டன.**

**நான்காம் திருமுறை – 19-ஆம் திருப்பதிகம் வெண்பாவிற்குரிய தளைகளையே கொண்ட தனிச் சிறப்புடையது. கலிப்பா வகைப் பனுவலில் வெண்டளைகளை மட்டுமே வைத்துக் கவியோசை**

எழுப்பிய யாப்பியல் புதுமை, அப்பரடிகளின் கதவந் திறந்தமை முதலிய அற்புதங்களோடும் நினைவுகூர்ந்து வியக்கத் தக்கதாகும்.

ஒரு பனுவற் சான்று பார்ப்போம்

சூலப் படையானைச் சூழாக வீழருவிக்
கோலத்தோள் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலொத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்தின் கீழானை நான்கண்ட தாரூரே

இப்பனுவலில் கோடிட்ட மூன்றிடங்களும் இயற்சீர்வெண்டளைகள் விரவி வந்தன. எஞ்சிய இடங்களில் வெண்சீர் வெண்டளைகள் வந்தன; யாவும் வெண்டளைகளே.

## கலிவிருத்தம்

**நான்கு சீர்களைக் கொண்ட நான்கடிகளாலாவது கலிவிருத்தம், "அளவடி நான்கின கலிவிருத் தம்மே" என்பது யாப்பருங்கலம். திருமூலர் திருமந்திரம் கலிவிருத்தப் பாக்களாகவே உருக்கொண்டுள்ளன.**

**கலிவிருத்தப் பாக்களெல்லாம் வெண்டளை மிக்கும், கலித்தளை விரவியும் வரும். அதனால் துள்ளலோசை உடையனவாக இருக்கும். கட்டளைகள் வகுத்துக்கொண்டு கலிவிருத்தத்தைப் பாடுவதே கவிஞர்களின் அனுபவ இலக்கணமாகும். இதனால் கலிவிருத்தத்தில் ஆசிரியத் தளைகள் அருகி விரவுவதும் உண்டு.**

**நான்காம் திருமுறை – 10, 11, 16, 17, 19-ஆம் திருப்பதிகங்கள் கலிவிருத்தப் பனுவல்களாலானவை.**

**அவற்றுள் 10, 11-ஆம் திருப்பதிகங்கள்**

**"விளம் - விளம் - மா – விளம்"**

**என்னும் கட்டளையில் அமைந்துள்ளன. சான்றொன்று காண்போம்.**

**"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருத்தடி பொருந்தக் கைதொழ
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே" (4:11:1)**

**இப்பனுவல், மேற்காண் கட்டளைப்படி அமைந்ததுடன் வெண்டளை மிக்கும், கலித்தளை, ஆசிரியத் தளைகள் விரவியும் வந்ததாகும். இத் திருப்பதிகத்தின் ஐந்தாம் திருப்பனுவலின் இரண்டாமடி,**

**"அந்தணர்க் கருங்கலம் அருமறை ஆறங்கம்"**

**என்பதில், விளம் - விளம் - மா – விளம்" என்றமையாது**

**"விளம் - விளம் - விளம் - காய்" என்னும் கட்டளையில் அமைந்துள்ளது.**

| அடிகள் | பனுவல் (4-11-5) | எழுத்துகள் |
|---|---|---|
| | 1 2 3 4 | |
| 1 | “வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம் | 13 |
| 2 | அந்தணர்க் கருங்கலம் அருமறை ஆறங்கம் | 14 |
| 3 | திங்களுக் கருங்கலம் திகழும் நீள்முடி | 13 |
| 4 | நங்களுக் கருங்கலம் நமச்சி வாயவே” 4-11-5 | 13 |

இப்பனுவலில், இரண்டாமடியின் நான்காம் சீராகிய “ஆறங்கம்” என்ற காய்ச்சீர், ஏனைய அடிகளின் நான்காம் சீர்கள் போலவே மூன்றெழுத்துகளே கொண்டுள்ளது. எனவே, ஏனைய விளச்சீர்களுக்கு இக்காய்ச்சீர் சமனாயிற்று.

இரண்டாமடியின் மூன்றாம் சீராகிய “அருமறை” என்ற விளச்சீர், ஏனைய அடிகளின் மூன்றாம் சீர்கள் போல மூன்றெழுத்துகளால் ஆகாமல், நான்கெழுத்துச் சீராயிற்று;”அருமறை” என்பதனை முடுகியலாகப் பாடவேண்டும் என்பதே – ஓரிடத்தில் கட்டளையை மாற்றி, ஓரெழுத்துக் கூட்டியதன் குறிப்பாகும்.

16-ஆம் பதிகம் கட்டளைகள் பலவாகவும், 17-ஆம் பதிகம் “மா- மா – விளம் - விளம்” என்னும் கட்டளையிலும், 18-ஆம் பதிகம் இருவகைக் கட்டளைகளிலும் அமைந்துள்ளன.

16, 17, 18-ஆம் பதிகங்கள் வெண்டளைகள் மட்டும் கொண்டு அமைந்தவைகளாகும். தாழிசை, துறை, விருத்தங்கட்குத் தளைகள் பார்ப்பது நியதி அன்றெனினும், கூடுதல் சிறப்பைக் காணும் நோக்கில் தளைகள் அறியப்பெறுதல் உண்டு, 16, 17, 18-ஆம் பதிகங்கள் “கூடுதல் சிறப்புடைய பதிகங்கள்” என்பது வெண்டளைகளாலேயே அமைந்தமையால் பெறப்படுகிறது.

யாப்பியல் நுணுக்கமுணர்ந்தோர் போற்றிக் கொண்டாட வேண்டிய இம் மூன்று (16, 17, 18) பதிகங்களில் ஒரு பனுவலின் மேன்மைகளைத் துய்ப்போமாக.

ஒன்றுகொ லாமவர் சிந்தையு யர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவர் ஊர்வது தானே 4-18-1

## இதன் சிறப்புகள்

1) அனைத்திடங்களிலும் இயற்சீர் வெண்டளை மட்டுமே அமைந்தமை.

2) ஈற்றுச் சீர் தவிர எஞ்சிய 15 சீர்களும் கூவிளச் சீர்களாகவே வந்தமை.

3) ஓரெதுகையே அமைந்தமை.

4) <u>சீர்கள் ஆசிரியத்துக்கு மட்டுமே உரியன.</u>

<u>தளைகள் வெண்பாவுக்குரியன.</u>

<u>தோன்றும் ஓசையோ கலிப்பாவுக்கேயுரிய துள்ளலோசை.</u>

5) பாடல் வகை – கலிப்பாவின் இனம்.

தேவாரப் பனுவல்களில் - ஒரு சில தவிரப் பிற, அனைத்தும் ''ஏ'' என முடிக்கும் முறைமைபற்றி ஈற்றுச் சீர் ''தானே'' எனத் ''தேமா'' வாக முடிந்தது.

## கலித்துறை

**கலிப்பாவின் இனமாகிய கலித்துறை – ஓரடிக்கு ஐந்து சீர்கள் அமைய, நான்கடிகளால் செய்யப்பெறுவது. அடிதோறும் பொருள் முடியாமல், நான்காம் அடியின் முடிவில் பொருள் முடிவது ''கலிநிலைத்துறை'' என்பர். பாடுபொருளின் நிலைமைக்கேற்ப ஓசை அமைத்துக் கொள்வது பாடுவோரின் உரிமையாகும்.**

**''முத்து விதானம்'' எனத் தொடங்கும் ''திருவாதிரைத் திருப்பதிகம்'' கலித்துறைப் பாக்களாலானது. தொடக்கப் பனுவல் வருமாறு.**

1 2 3 4 5

1) **முத்துவி தான மணிப்பொன் கவரி முறையாலே**
2) **பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே**
3) **வித்தகக் கோல வெண்தலை மாலை விரதிகள்**
4) **அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்**

**அடிதோறும் ஐந்தைந்து சீர்களாக அடுக்கிய முறையால் எழும் இன்னோசை, இருமருங்குமாக அசைந்து அசைந்து உலாப் போகும் இறைத் திருக்காட்சியையும் காட்டுகிறது.**

## கலித்தாழிசை

**நான்காம் திருமுறை – 9-ஆம் திருப்பதிகம் - திருவங்கமாலை. அது கலித்தாழிசைகளாலான பதிகம்.**

1 2 3 4

**''தலையே நீவணங்காய் தலைமாலை தலைக்கணிந்து**
**தலையாலே பலிதேரும் தலைவனைத் தலையேநீ வணங்காய்''**

1 2 3 4 5

**என்பதே இதன் வடிவம், முதலடியில் 4 சீர்கள், இரண்டாமடியில் 5 சீர்கள்.**

**1 – 2 - இயற்சீர் வெண்டளை**

**2 – 3 - கலித்தளை**

**3 – 4 - கலித்தளை**

**4 - இரண்டாமடி 1 – கலித்தளை**

1 – 2 - கலித்தளை

2 – 3 - கலித்தளை

3 – 4 - நிரையொன்றாசிரியத் தளை

4 – 5 - கலித்தளை

''தலையே நீவணங்காய் - தலை
மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
தலையே நீவணங்காய்''

தற்போது அச்சுப் பதிப்புகளில் காணப்பெறும் வடிவம் இது. ஓலைச் சுவடிகளில் பாட்டு வடிவம் இரா. நீளமாக எழுதப்பட்டிருக்கும். சிறிய எழுத்தாயின் ஒரு வரிக்குள்ளேயே அடங்கிவிடும். ஓலையிலிருந்து காகிதத்தில் பெயர்த்தெழுதுவோர், பாவகை அறிந்து அதன் இலக்கணப்படி வடிவம் கொடுப்பர்.

திரு அங்கமாலைப் பனுபவல்களை, இப்பொழுது நாம் அச்சில் காணும் வடிவம், முதன் முதலாகக் காகிதத்தில் எழுதியவர் கொடுத்த வடிவம். முதற் பதிப்பாசிரியர் தாமே படியெடுப்பதும், கையேட்டுப் பிள்ளைகளைக் கொண்டு படியெடுக்கச் செய்வதும் உண்டு. அவ்வாறு காகிதத்தில் படியெடுத்தவர், பாடல் வகையினை நிர்ணயித்து உளங்கொள்ளாமல், இப்பதிகத்தைச் சாதாரிப் பண்ணில் பாடும் முறைமையைக் கேட்டு, அந்தப்படிக்கே வடிவமைத்தமையால் வடிவ மாறுபாடு ஏற்பட்டுவிட்டது. அதனால், இப்பதிகத் தொடர்பான யாப்பமைவு குறித்துப் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன.

பல்லவி – அனுபல்லவி - சரணம் போல அமைந்த பாவகை எனவும், கண்ணி வகையைச் சார்ந்தது எனவும், புதிய யாப்பு வகை எனவும், இன்னபிற கருத்துகளைக் கூறலாயினர்.

இனிக் கலித்தாழிசைக்கு இலக்கணம் காண்போம்.

''அடிஎனைத் தாகியும் ஒத்து<u>வந்து</u> அளவினில்
<u>கடையடி மிகுவது</u> கலித்தா ழிசையே'' (யாப்பருங்….. செய் 34)

என்னும் இந்நூற்பாவுக்குக் குணசாகரர்,

''வந்து – என்று மிகுத்துச் சொல்லியதாவது, இரண்டடியினவாய் ஈற்றடி மிக்கு வருவனவும், ஈற்றடி மிக்கு ஏனை அடி தம்முள் ஒவ்வாது அருகி வருவனவும் உள ஒருசார்த் தாழிசை'' என விருத்தியுரை எழுதினார். இவ்விளக்கம் அப்பர் சுவாமிகளின் திருவங்கமாலையை உளங்கொண்டெழுதிய தெனலாம்.

தாழிசைகள் தனித்து வருதலும், ஒருபொருண்மேல் மூன்றடுக்கி வருதலும் உண்டு. மனித உறுப்புகள் பலவாதலின் ''அங்கங்களின் தொழில்களுக்கு ஆணையிடல்'' எனும் ஒருபொருண்மேல் பல அடுக்கிவந்த கலித்தாழிசைகளே திரு அங்கமாலை.

## திருநேரிசை

நான்காம் திருமுறை – 22-ஆம் திருப்பதிகம் முதலாக, 79-ஆம் திருப்பதிகம் ஈறாக, 58 திருப்பதிகங்கள் - திருநேரிசைப் பதிகங்களாக அமைந்துள்ளன. அவையனைத்தும் “விளம் - மா – தேமா – விளம் - மா – தேமா” என்னும் முதன்மைக் கட்டளையில் அமைந்ததேயாகும். விளச்சீர், காய்ச்சீருக்குச் சமம்” என்னும் அப்பரிலக்கணம் முன்னமே காட்டப்பெற்றது.

நேரிதான இசை – நேரிசை. நேரிது – ஓர் ஒழுங்குக்குட்பட்டுச் சிறந்தது. ஒருவகையான பாடல்வகையில் தலைமையும் முதன்மையுமுடைய ஒரு வகையை “நேரிது” என்னும் பொருளுடன் “நேரிசை” என அடைபுணர்த்துச் சொல்லுவது யாப்பியல் மரபு.

| உ.ம் | பா | நேரிதான இசை உடையவை |
|---|---|---|
| 1 | ஆசிரியப்பா | நேரிசை ஆசிரியப்பா |
| 2 | வெண்பா | நேரிசை வெண்பா |
| 3 | கலிப்பா | நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா |

தலைமைப் பாக்களுக்குள்ள அடையாகிய “நேரிசை” என்பதனைத் துணைமைப் பாக்களுக்கும் சொல்வதுண்டோ எனில், வெண்பாவின் வகை ஒன்றனை “நேரிசைச் சிந்தியல்” என்பதனால் உண்டு என்க.

ஆசிரியப்பாவின் இனங்களில் நேரிதான இசையை எழுப்புவதால், “விளம் - மா – தேமா – விளம் - மா – தேமா” எனும் கட்டளையான் வரும் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தை “நேரிசை” எனல் வேண்டும் என்பது அப்பரடிகளாகிய நம் ஆசாரியரின் கட்டளை.

“நேரிசை” என வாளா கூறாமல் “திரு” எனச் சேர்த்துரைத்தமை, “யாவுக்கும் மேலான பரம்பொருளே இவ்வகைப் பாவின் பாடுபொருள்” என்பதற்காகும்.

நான்காம் திருமுறை – 2, 3, 4, 5, 6, 15-ஆம் திருப்பதிகங்கள் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களே எனினும், அவை, வேறுவேறு கட்டளைகளில் அமைந்த திருப்பனுவல்களைக் கொண்ட திருப்பதிகங்களாம். அவையும் சிறப்பானவைகளே.

திருநேரிசை பதிகங்களை நன்னான்கு சீர்கள் உடையன போலப் பதிப்பித்தலாகாது. மூன்று சீர்களை முன் நிறுத்தியும், மூன்று சீர்கள் உள்ளடங்கியும் இருக்குமாறு ஒவ்வோரடியையும் “கற்பக வேந்தர் உரைவிளக்கச் செம்பதிப்பில்” பதிப்பித்துள்ள முறையே சரியானதாகும்.

திருநேரிசைப் பதிகங்களின் முதற்பதிக முதல் திருநேரிசையைக் காண்போம்.

கட்டளை –”விளம் - மா – தேமா –
விளம் - மா – தேமா”

| அடி எண் | பனுவல் |
|---|---|
| 1 | செஞ்சடைக் கற்றை முற்றத்<br>திளநிலா எறிக்கும் சென்னி |
| 2 | நஞ்சடை கண்ட னாரைக்<br>காணலாம் நறவம் நாறும் |
| 3 | மஞ்சடை சோலைத் தில்லை<br>மல்குசிற் றம்ப லத்தே |
| 4 | துஞ்சடை இருள் கிழியத்<br>துளங்கெரி ஆடு மாறே (4:22:1) |

நான்காமடியின் மூன்றாம் சீர் - முன்னெழுதியது போல ஓரசைச் சீர், தேமாச்சீருக்கு இணையாக வந்துள்ளது. அடிதோறும் மூன்றாம் சீரும் ஆறாம் சீரும், தேமாச் சீராகவே வரவேண்டும். "இருள்" என இரண்டாம் சீரை நிறுத்தி, ஓரசைச் சீராகக் கொள்ளின் "கிழியத்" என்பது புளிமாச்சீராகும். அங்குப் புளிமாச்சீர் வருதலாகாது. எனவே, "இருள்கி ழியத்" என வகையுளி செய்ய வேண்டியதாயிற்று.

பொருளமைதி காரணமாக, "வைத்த திருநேரிசை""தனித்திருநேரிசை""குறைந்த திருநேரிசை" எனச் சிறப்புப் பெயர் பெற்றவை யாப்பமைதியில் மாறுபட்டனவல்ல.

| எண் | சிறப்புப் பெயர் | பொருளமைதிக் குறிப்பு |
|---|---|---|
| 1 | வைத்த திருநேரிசை | பதிகம் முழுவதும் 51 இடங்களில் "வைத்த" எனும் சொல் வந்துள்ளமையால் இப்பெயர் பெற்றது. |
| 2 | தனித் திருநேரிசை | இறைமை தொடர்பான தனித்தனிச் செய்திகள் கொண்ட பனுவல்களால் ஆனமையால் இப்பெயர் பெற்றது. |
| 3 | குறைந்த திருநேரிசை | மானுடப் பிறப்பாலுண்டாகும் குறைபாடுகளை அறிவித்தருளியமையால் இப்பெயர் பெற்றது. அத்தகைய குறைபாடுகளைத் தன்மேலேறிட்டுக் கொண்டு அருளுவது, குறைவுபட்ட மானுடப் பிறப்பின்பால் அவர்கொண்ட கழிவிரக்கத்தைக் காட்டுகிறது. |

## திருவிருத்தம்

நான்காம் திருமுறையின் 80 முதல் 113 வரையிலான 34 திருப்பதிகங்கள் திருவிருத்தப் பதிகங்களாகும். இவற்றில் மொத்தம் 301 திருவிருத்தத் திருப்பனுவல்கள் உள்ளன. இவ்வகைப் பனுவல்களைப் பிற்கால யாப்பு நூல்கள் "கட்டளைக் கலித்துறை" எனப் பெயரிட்டுரைத்தன. இரண்டு யாப்பு நூல்கள் செய்த அமிர்த சாகரர் காலம்வரை, இவ்வகைப் பாக்களுக்குக் "கட்டளைக் கலித்துறை" என்று பெயரில்லை. "கலித்துறை" என்ற பெயரே அமைந்திருந்தது. ஐஞ்சீர் கொண்ட நான்கடிப் பாடல்கள் கலித்துறை எனப்பெறும்.

நேரசைச் சீரில் தொடங்கினால் ஒற்று நீக்கி 16 எழுத்துகளும், நிரையசையில் தொடங்கினால் ஒற்று நீக்கி 17 எழுத்துகளும் அடிதோறும் அமையப் பாடப் பெறுவது கட்டளைக் கலித்துறை. எழுத்தெண்ணுநிலை என்பதும் அடிதோறும் - ஒவ்வோரடிக்குள்ளும் - வெண்டளைகளே வரவேண்டும் என்பதும் இதன் கட்டளைகள். பாவினங்களுக்குத் தளைகள் நியதியின்மையின் வெண்டளை அமைய வேண்டுமென்பதையும் ஒரு கட்டளை என நியமிக்க வேண்டியதாயிற்று.

தாழிசை, துறை, விருத்தம் என்பன பாவினங்கள். கலித்துறையில் ஒருவகை, கட்டளைக் கலித்துறை. துறை வகையைச் சார்ந்த பனுவல்களுக்கு ''விருத்தம்'' என்ற பெயரமைந்தது ஏன் எனக் கண்டறிய வேண்டும்.

''விருத்தம்'' என்பது இங்கே பொருள் வகையால் பெற்ற பெயராகும். விருத்தம் என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் உள.

அப்பரடிகள், ''நரிவிருத்தம தாகுவர் நாடரே'' (5:100:7) என்கிறார். விருத்தம் என்ற சொல்லை வரலாறு என்ற பொருளில் கையாள்கின்றார். ''திரு'' என்பது இறைவரின் அளப்பரும் பேரருளைக் குறிக்குமாகலின் ''திரு விருத்தம்'' என்பது ''பேரருள் வரலாறு'' எனப் பொருள்படும்; படவே, ''திருவிருத்தம்'' என்பது – பாடுபொருளாற் பெற்ற பெயரென்பதும், பாடல் வகையாற் பெற்ற பெயரன்று என்பதும் புலப்படும்.

நேரசையில் தொடங்கி, ஒற்று நீக்கி 16 எழுத்துகள் பெற்ற பனுவலுக்குச் சான்று.

| அடி | பனுவல் (4:80:1) | ஒற்று நீக்கி எழுத்தெண்ணிக்கை |
|---|---|---|
| 1. | பாளை யுடைக்கமு கோங்கிப்பன்<br>மாடம் நெருங்கியெங்கும்<br>(கருவிளங்காய்) | 16 |
| 2. | வாளை யுடைப்புனல் வந்தெறி<br>வாழ்வயல் தில்லை தன்னுள்<br>(கூவிளங்காய்) | 16 |
| 3. | ஆள வுடைக்கழற் சிற்றம்<br>பலத்தர னாடல் கண்டால்<br>(தேமாந்தண்பூ) | 16 |
| 4 | பீளை யுடைக்கண்க ளாற்பின்னைப்<br>பேய்த் தொண்டர் காண்பதென்னே<br>(கூவிளங்காய்) | 16 |

**இப்பனுவலுள் மூன்றாம் அடி – ஐந்தாம் சீர் விளாங்காய்ச் சீராக இன்றித்தண்பூச் சீராக உள்ளது. ''கண்ணிய பூவினம் காய்ச்சீ ரனைய'' என்ற பிற்கால யாப்பு நூலிலக்கணத்துக்கு இது மூல உதாரணம்.**

கடையொரு சீரும் விளங்காயாக அமைய வேண்டும் என்பதும், ஐந்தாம் சீரில் மோனை அமையவேண்டும் என்பதுமான பிற்காலத்தவர் சிலர் அமைத்த விதிகள், ஆன்றோர் செய்யுட்களை முற்ற நோக்காதமைத்த விதிகளே எனத் தோற்றுகிறது.

நிரையசையில் தொடங்கி, ஒற்று நீக்கி 17 எழுத்துகள் பெற்ற பனுவலுக்குச் சான்று.

| அடி | பனுவல் (4:113:8) | ஒற்று நீக்கி எழுத்தெண்ணிக்கை |
|---|---|---|
| 1. | துறக்கப் படாத உடலைத் துறந்துவெந் தூதுவரோ (கூவிளங்காய்) | 17 |
| 2 | டிறப்ப னிறந்தா விருவிசும் பேறுவ னேறிவந்து (கூவிளங்காய்) | 17 |
| 3 | பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர் (கூவிளங்காய்) | 17 |
| 4 | மறப்பன்கொ லோவென்றன் உள்ளங் கிடந்து மறுகிடுமே (கருவிளங்காய்) | 17 |

## திருக்குறுந்தொகை

ஐந்தாம் திருமுறையாக உள்ள நூறுதிருப்பதிகங்களுக்குமான ஓராயிரத்துப் பதினைந்து திருப்பனுவல்களும் கலிவிருத்தப் பனுவல்களே ஆயினும், பிறிதொரு தனிச்சிறப்புக் கருதி அவை “திருக்குறுந்தொகைப் பனுவல்கள்” எனப் போற்றப்பெறுகின்றன.

நான்காம் திருமுறையுள் 10, 11, 16, 17, 18-ஆம் எண்ணுள்ள திருப்பதிகங்கள் ஐந்தும் கலிவிருத்தத் திருப்பதிகங்களே. அவை வேறு கட்டளைகளில் அமைந்தவை. அவற்றின் கட்டளைகளையும், கலிவிருத்த இலக்கணத்தையும் கலிவிருத்தம் என்னும் சிறு தலைப்புள் காண்க.

ஐந்தாம் திருமுறைத் திருப்பதிகங்கள் அனைத்தும் மா - விளம் - விளம் - விளம் என்னும் ஒரே கட்டளையில் அமைந்தவை. மேலும் வெண்டளைகளே மிகுதியும் அமையத் தொகுத்தவை என்ற கூடுதல் சிறப்பும் உடையவை.

1015 அளவடிப் பனுவல்களுக்கு 15,225 தளைகள் அமையும். இவற்றில் மூன்றில் ஒரு பங்குக்கும் குறைவான இடங்களில் ஆசிரியத்தளைகள் விரவி வருகின்றன.

1. மாமுன்நேர் - நேரொன்றாசிரியத்தளை
2. விளம் முன்நிரை – நிரை யொன்றாசிரியத்தளை

பிற இடங்களிலெல்லாம் வெண்சீர் வெண்டளைகளே அமைந்துள்ளன.

1. மாமுன்நிரை - இயற்சீர் வெண்டளை
2. விளம் முன்நேர் - இயற்சீர் வெண்டளை

ஓரோவழி (3) காய்முன்நேர் - வெண்சீர் வெண்டளையும் உள்ளன.

சீர்நிலை: நேர்நேர் - நேர் நிரை – நேர் நிரை – நேர் நிரை

கட்டளை: தே மா – கூ விளம் - கூ விளம் - கூ விளம்

<u>பனுவல்</u>

கற்றுக் கொள் வன வா யுள நா வுள
இட்டுக் கொள் வன பூ வுள நீ ருள
கற்றைக் செஞ் சடை யா னுளன் நா முளோம்
எற்றுக் கோ நம னால் முனி வுண் பதே (5-91-6)

இத்திருப் பனுவலைச் சான்றுப் பனுவலாக எடுத்துக் கொள்வோம். இதில் பதினைந்து இடங்களில் தளைகளைக் கண்டறிய வேண்டும். ஒவ்வோரடியின் ஈற்றுச் சீருக்கும் அடுத்த அடியின் முதற்சீருக்குமான தளையைக் காணுதலும் இன்றியமையாததாகும்.

கற் றுக் கொள் / தே மா நேர் } - மாமுன் நேர் - நேரொன்றாசிரியத்தளை

கொள் வன பூ / கூ விளம் தேர் } - விளம் முன்நேர் - இயற்சீர்வெண்டளை

இவ்வாறு இப்பனுவல் முழுவதையும் அலகுகாரியம் செய்து தளைகளைக் கண்டறிந்தால், பதினைந்து இடங்களுக்கு நான்கே இடங்களில் நேரொன்றாசிரியத்தளையும், எஞ்சிய பதினோரிடங்களில் இயற்சீர் வெண்டளையும் வருதலை அறியலாம்.

முதற்சீருக்கும் இரண்டாம் சீருக்கும் இடையில் மட்டுமே ஆசிரியத்தளை அமையும் என்றில்லை.

“நீ,ணுல கெ,லாம் ஆ,ளக்,கொ டுத்தவன்” (5-2-4)

என்னுமித் தொடரில் முதற்சீருக்கும் இரண்டாம் சீருக்குமிடையில் மாமுன் நிரை - இயற்சீர் வெண்டளையும், இரண்டாம் சீருக்கும் மூன்றாம் சீருக்கும் இடையில் மாமுன் நேர் - நேரொன்றாசிரியத்தளையும் வருதல் காண்க. மேலும் மூன்றாம் சீர் விளச்சீருக்குச் சமனாகத் தேமாங்காய்ச்சீர் வந்துள்ளமையும் நோக்கத்தக்கது. மூன்றாஞ்சீரின் காய்முன், நான்காம் சீரின் தொடக்கம் நேரசையாக அமைந்து அருகிவரும் தளையாகிய வெண்சீர் வெண்டளை வருதலும் கருதத்தக்கதாகும்.

ஐந்தாம் திருமுறையுள் உள்ளனவாகிய திருக்குறுந்தொகைப் பனுவல்களில் “தேமா” என்னும் சீரில் தொடங்குவன அடிதோறும் ஒற்றுநீக்கப் பதினோர் எழுத்துகள் உடையன. “புளிமா”

என்னும் சீரில் தொடங்குவன அடிதோறும் ஒற்று நீக்கப் பன்னிரெண்டெழுத்துகள் உடையன. கட்டளைகளை விரித்தெண்ணினாலும் அவ்வெண்ணிக்கைகள் வரும்.

(1) தே மா கூ விளம் - கூ விளம் - கூ விளம்
1, 2, 3, 4, 5 - 6, 7, 8 - 9, 10, 11

(2) புளி மா – கூ விளம் - கூ விளம் - கூ விளம்
1, 2, 3 - 4, 5, 6 - 7, 8, 9 - 10, 11, 12

எவ்வெவ் வகைமையில் எத்தனைப் பனுவல்கள் உள்ளன எனப் பார்ப்போம்.

| | | |
|---|---|---|
| 1. | நேரசையில் (தேமாவில்) தொடங்கும் பதினோரெழுத்தடிப் பனுவல்கள் | 697 |
| 2. | நிரையசையில் (புளிமாவில்) தொடங்கும் பன்னிரண்டெழுத்தடிப் பனுவல்கள் | 318 |
| | **ஆகத்திருக்குறுந்தொகைப் பனுவல்கள்** | **1015** |

**இனி, கலிவிருத்தச் செய்யுட்களாலான ஐந்தாம் திருமுறைத் திருப்பனுவல்களைத் "திருக்குறுந்தொகை" எனச் சிறப்புப் பெயரிட்டுரைப்பதேன்? என்னும் வினாவுக்கு விடைகாண்போம்.**

**"குறுமை" என்பதற்கு விளக்கம் கண்டால் இதனுண்மை தெரியவரும்.**

1) **ஒரே கட்டளை அமைந்தமையைக் "குறுமை" எனக்கூறவியலாது.**

2) **சற்றொப்பமுக்காற்பங்களவுக்கும் மேலாக வெண்டளைகளும், காற்பங்களவுக்குக் கீழாக ஆசிரியத் தளைகளும் வருதல் கொண்டு "ஆசிரியத் தளைகுறுமை" எனக் கூறுதல் ஒல்லுமேயன்றிப் பொதுவாகக் "குறுமை" எனக் குறிப்பிடுதல் பொருந்தாது.**

3) **அடிதோறும் நாற்சீர்களாக அமைதல் குறுமையாகாது. இருசீரடிகளையே "குறள் (குறுமை) அடிகள்" என்பது யாப்பியல்மரபு.**

**அளவடி (நேரடி) எனப்பெறும் நாற்சீரடிக்குத் தொல்காப்பியம் வரையறுத்த எழுத்தெண்ணிக்கையில், குறுமை எழுத்தெண்ணிக்கை கொண்டவை எனல் பொருந்தும். அதன் விளக்கம் வருமாறு.**

**தொல்காப்பியச் செய்யுளியல்**

**"பத்தெழுத் தென்ப நேரடிக் களவே**
**ஒத்த நாலெழுத் தேற்றலங் கடையே"**

**என்கிறது. கலிவிருத்தம் நாற்சீரடிகள் நான்குடையது. அவ் அளவடியில் ஒற்று நீக்கி எண்ணினால், பத்துமுதல் பதினான்கெழுத்துகள் வரை வரலாம் என்பது மேற்காண் நூற்பாவின் கருத்தாகும். தொல்காப்பிய எழுத்தெண்ணிக்கை வரையறைகள் வருமாறு.**

**குறளடிக்கு - இருசீரடிக்கு – 4 முதல் 6 எழுத்துகள்**

**சிற்றடிக்கு – முச்சீரடிக்கு – 7 முதல் 9 எழுத்துகள்**

**அளவடிக்கு – நாற்சீரடிக்கு – 10 முதல் 14 எழுத்துகள்**

**நெடிலடிக்கு – ஐஞ்சீரடிக்கு – 15 முதல் 17 எழுத்துகள்**

**கழிநெடிலடிக்கு – ஐஞ்சீரின் மிக்க சீர்களான் வரும் அடிக்கு – 18 முதல் 20 எழுத்துகள்**

இவ்வரையறையால் அளவடியாகிய நேரடிக்குரிய எழுத்தெண்ணிக்கை 10, 11, 12, 13, 14 என்றாகிறது. 10 என்னும் எழுத்தெண்ணிக்கை சிற்றெல்லையாகவும், 14 என்னும் எழுத்தெண்ணிக்கை பேரெல்லையாகவும் அமைகிறது. நான்கு சீர்களுக்கும் சேர்த்து 11, 12 எழுத்துகளில் கவிசெய்தல் குறுகிய எல்லையில் கவிபுனைதலாகிறது. இவ்வாற்றான் எழுத்தெண்ணிக்கைக் குறைவளவைக் குறுமை எனல் வேண்டும்.

தொகை – தொகுக்கப்பெற்றவை. சான்று – சங்கத்தொகை நூல்கள்.எட்டுத்தொகை. எட்டுத்தொகையுள்ளும் குறுந்தொகை, நெடுந்தொகை என இரு தொகைகள் உள. ‘‘குறுமையும் நெடுமையும் அளவிற்கோடலின்’’ என்ற விதி இவற்றிற்கும் ஏற்புடையதே. குறுந்தொகை நெடுந்தொகை என்பன அடிஅளவிற் பெயர் பெற்றவை.

குறுந்தொகை என்பது அடியளவால் குறுமையாகிய 4 முதல் 8 அடிகளையுடைய பாடல்களின் தொகுப்பு.

திருக்குறுந்தொகை அளவடியின் எழுத்தெண்ணிக்கைகளில் குறுமை எண்ணிக்கையாகிய 11, 12 என்னும் எழுத்தெண்ணிக்கைப் பனுவல்களாலாகியது.

சங்கக் குறுந்தொகை பலரால் பாடப்பெற்ற, அகப்பொருள் என்னும் ஒரு பொருள் மேலனவாகிய செய்யுட்களின் தொகுப்பு.

திருக்குறுந்தொகை ஒருவரால் அருளப்பெற்ற, சிவபரம் பொருள் என்னும் ஒரு பரம் பொருளின் மேலானவாகிய பனுவல்களின் தொகுப்பு.

திரு என்னும் அடைமொழி பரம்பொருளாகிய இறைமையைக் குறிக்கிறது.

மேலெழுதிய கருத்துகளைத் திரட்டிப் பார்த்தால், திருக்குறுந்தொகை என்பதில்,

திரு– மேலான பரம்பொருள் பற்றிய செய்திகளை விளக்கியருளும்,

குறும் - அளவடிக்குரிய எழுத்தெண்ணிக்கையில் குறுமை எழுத்தளவில்,

தொகை– பல்வேறு திருத்தலங்களில் ஒருவர் பாடியருளிய திருப்பதிகங்களின் பனுவல்களின் தொகுப்பு என்னும் பொருள் விரிவு புலப்படும்.

சங்க காலக் குறுந்தொகைத் தொகுப்பின் அடி எண்ணிக்கையில் எட்டு அடிகள் என்பது மேலெல்லை. அதனினும் கூடுதலாகிய ஒன்பது அடிகளைக் கொண்ட மூன்று செய்யுட்கள் அத்தொகுப்பில் உள்ளன. அவை விதிவிலக்கே.

எழுத்தெண்ணிக்கை அளவால் குறுமையுடைய திருக்குறுந்தொகையுள் 13 எழுத்துகள் கொண்ட அடிகள் சில உள. இது விதிவிலக்கன்று, வரையறைக் குட்பட்டதேயாகும். பதின் மூன்றெழுத்தடிக்குச் சான்று.

‘‘இறைவ னெங்கள்பி ரா னிடை ம ரு தி னி ல்

1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12, 13 (5-15-1)

இதில் இரண்டாம் சீர், விளச்சீருக்குச் சமனாக வந்த காய்ச்சீர்.

புளிமா கூவிளம் கூவிளம் கருவிளம்

எனவரின் 13 எழுத்துகள் அமையும் மா – விளம் - விளம் - விளம் என்பதே கட்டளை. இதில் விளம் என்னும் கட்டளையில் கருவிளமும் வரலாம், கூவிளமும் வரலாம்.

எனக்குத் தாயைஎம் மானிடை ம ரு த னை

1, 2, 3. 4, 5, 6 7, 8, 9, 10, 11, 12, 13 (5-15-2)

என்னும் அடியில் ஈற்றுச்சீர் கருவிளம் ஆனமையால் 13 எழுத்துகள் பெற்றன.

5-15-6 எண்ணுள்ள திருப்பனுவல், "நேர்" அசைத் தொடக்கமான பனுவல். அதன் மூன்றாமடியில், பதினோர் எழுத்துகளுக்கு மேலாகப் பன்னிரெண்டெழுத்துகள் வந்துள்ளன.

நங்கை மீரிடை ம ரு த ரிந் நங் கைக்கே

1, 2, 3, 4, 5 6, 7, 8, 9 10, 11, 12

என்னும் அவ்வடியின் மூன்றாம் சீர் கருவிளச்சீரானதால் பன்னிரெண்டெழுத்துகள் பெற்றன. எனினும் பன்னிரண்டெழுத்தென்பது குறுமை எழுத்தெண்ணிக்கை.

அளவடியின் சிற்றெல்லை எண்ணிக்கையாகிய பத்தெழுத்துகளில் ஓரடியை அமைத்தலும் கூடுவதே என யாப்பியல்வல்ல புலவோர்க்கு அறிவுறுத்தற் பொருட்டு, 48-ஆம் திருப்பதிகமாகிய திருவேகம்பத்திருப்பதிக முதலடியை,

பூ மே லானும் பூ மகள் கேள்வனும்

1, 2 3, 4 5, 6, 7 8, 9, 10

எனப் பத்தெழுத்துகளால் அமைத்துக் காட்டியருளினார். இத்தொடரின் இரண்டாம் சீரும் தேமாவாக அமைந்தமையால் பத்தெழுத்துகளிலேயே அடி நிறைவு பெற்றது. ஒற்று நீக்கிப் பார்த்தாலும் பதினைந்து மாத்திரை அளவுள்ள அடியானமைக்குக் காரணம், இந்த ஓரடியிலேயே இரண்டிரண்டு மாத்திரை அளவினவாகிய ஐந்து நெட்டெழுத்துகள் உள்ளமையே ஆகும்.

பதினோர் எழுத்துப் பனுவல்களுள் ஒன்று

| அடி | திருக்குறுந்தொகைப் பனுவல் | ஒற்று நீக்கி எழுத்தெண்ணிக்கை |
|---|---|---|
| 1. | **பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ** | 11 |
| 2. | **மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ** | 11 |
| 3. | **கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்** | 11 |
| 4. | **திண்ண மாகத்தி றந்தருள் செய்ம்மினே** | 11 |

**இதில் மூன்றாமடியின் மூன்று நான்காம் சீர்கள் தேமா, கருவிளம் என அமைந்தாலும், ஏனைய அடிகளில் உள்ளன போல ஆறெழுத்துகள் பெற்றுள்ளமை காண்க. செய்ம்மறை, செய்ம்மினே என்பவற்றின் இடையில் நின்ற மகர ஒற்றுகள் இசைநயம் மிகுவித்தற்காக வந்தவை.**

ஈரொற்றுடனிலையாகா, நான்காம் அடியின் இரண்டாம் சீர் காய்ச்சீர், முன் மூன்றடிகளின் இரண்டாம் சீர்களாகிய விளச்சீர்களுக்கு எழுத்தெண்ணிக்கையால் சமனாகிறது.

பன்னிரெண்டெழுத்துப் பனுவல்களில் ஒன்று.

| அடி | திருக்குறுந்தொகைப் பனுவல் | ஒற்று நீக்கி எழுத்தெண்ணிக்கை |
|---|---|---|
| 1. | தொழுது தூமலா் தூவித்து* தித்துநின் | 12 |
| 2. | றழுது காமுற்ற* ரற்றுகின் றாரையும் | 12 |
| 3. | பொழுது போக்கிப்பு* றக்கணிப் பாரையும் | 12 |
| 4. | எழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப* ரீசனே | 12 |

இப்பனுவலில் உடுக்குறி (*) இட்ட நான்கு சீர்களும் காய்ச்சீர்கள். நான்கிடங்களிலும் காய் முன்நேர்வந்து, நான்கு வெண்சீர் வெண்டளைகள் பெற்ற தனிச்சிறப்பும் இப்பனுவலுக்குண்டு. காய் விளத்திற்குச் சமம் என முன்னரும் குறிக்கப்பெற்றது.

“பொங்குடேற் கன்மிதப்பில் போந்தேறிய” ஆசாரியராகிய திருநாவுக்கரசு சுவாமிகள், தமிழ்யாப்பியல் கடலின் கரைகாண நமக்கு அரிய பல இலக்கண அமைதிகளையும் வகுத்தருளியவராவார். இவ்வுண்மை, ஐந்தாம் திருமுறையை யாப்பியல் நோக்கில் அணுகும்போது தெற்றெனப் புலப்படுகிறது.

## திருத்தாண்டகம்

வடமொழியில் சந்தஸ், தாண்டகம் என்ற பாவகைகள் உள்ளன. சந்தஸ் 4 – 26 எழுத்தடிகள் கொண்டவை; இருபத்தேழெழுத்தடி முதல் எனைத்து எழுத்தடிகளானும் வருவது தாண்டகம். தனிக்குறில், லகு, தனிநெடில், ஒற்றடுத்த குறில், ஒற்றடுத்த நெடில்; இவை குருலகுவும் குருவும் 26 எழுத்துகள் வரை அளவொத்து வருவது அளவியல் சந்தஸ். ஒவ்வாதன அளவழிசந்தஸ் அங்ஙனமே 27 எழுத்துகள் முதல் ஒத்து வருவன அளவியல் தாண்டகம், ஒவ்வாதன அளவழி தாண்டகம். இவை வடமொழி இலக்கணம். இவ்வடமொழி இலக்கணம் தமிழ் யாப்பமைதிக்கு ஒவ்வாதது.

1) லகு, குரு என்பன நேர், நிரை என்ற அசைகளுக்கு ஒப்பாக அமையவில்லை. சொல் முதல் குறில், அலகுகாரியம் பெறாது என்பது யாப்பு நூல்களின் முடிவு. லகு என்பது இம்முடிவுடன் மாறுபட்டதாகத் தோற்றுகிறது.

2) ஒருவகைப் பாடலுக்கு ஒரு வடிவம் என்பதே தமிழின் யாப்பு. நான்கெழுத்திலிருந்து தொடங்கும் சந்தஸ்க்கும் தமிழில் ஒரு வடிவம் இன்றி 27 எழுத்து முதலாகிய தாண்டகத்துக்கும் தனிவடிவம் இன்றி, தமிழில் உள்ள வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம், கலி விருத்தம், கலித்துறை, தரவுகொச்சகம், கட்டளைக் கலித்துறை, எழுசீர் எண்சீர் விருத்தங்கள் என எல்லா வகையையும் உதாரணம் காட்டுவது பொருந்தாது. தாண்டகத்துக்கும் அவ்வாறே பலவகைப் பாடல்களையும் எழுத்தெண்ணிச் சான்று தருவது பொருந்தவே பொருந்தாது.

காக்கை பாடினியம், வாய்ப்பிகம் முதலிய பழந்தமிழ் யாப்பு நூல்களில் தாண்டகம் பற்றி இலக்கணம்உள்ளதாகக் குணசாகரா் உரையால் அறிகிறோம். வடமொழித் தாண்டக இலக்கணத்தை

கூறியிருத்தல் வேண்டும். வீரசோழியத்தில் இவை வடமொழி இலக்கணமே எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

அப்பரடிகளின் திருவுள்ளம் தாண்டகம் என்னும் பனுவற்பெயரைப் பெரிதும் விரும்பியது, காரணம் அஃது ஆடல் வல்லானின் செயலைக் குறிப்பதன்றோ? அதனால் தமிழுக்கெனத் தாண்டக இலக்கணம் படைத்துக் கொண்டு பனுவல்கள் பாடியருளினார்.

1) ஆறுசீர், எண்சீர் என இருவகையடிகளே தாண்டகச் செய்யுள்கட்குரியன. 6 சீர்கள் கொண்டவை குறுந்தாண்டகம், 8 சீர்கள் கொண்டவை நெடுந்தாண்டகம்.

2) கழிநெடிலடிக்குத் தொல்காப்பியம் வகுத்த 20 எழுத்து என்ற எண்ணிக்கையைச் சிற்றெல்லையாகக் கொண்டார். 30 எழுத்து வரை பேரெல்லையாகக் கொண்டருளினார்.

3) கட்டளைகள் நான்கடியிலும் ஒத்துவருதல் இல்லாவிடினும் அவை ஓசைச் சமன் பெறுதலை இலக்கணமாக்கிக் கொண்டார்.

4) பண்ணத்தி என்னும் இசைப்பாடல் வகையாதலின் சுத்தாங்கமாக பாடும்போது ஏற்றஇறக்கங்கட்குத் தக்க அமைதிகள் உருவாக்கிக்கொண்டார்.

5) முதலடிக்கும் மூன்றாமடிக்கும் எழுத்தெண்ணிக்கை ஒத்து வருதல், இடை இரண்டடிகட்கு எழுத்தெண்ணிக்கை ஒத்து வருதல், முதலடிக்கும் ஈற்றடிக்கும் எழுத்தெண்ணிக்கை ஒத்து வருதல், ஏறுவரிசையில் எழுத்தெண்ணிக்கை ஒத்துவருதல், இறங்குவரிசையில் எழுத்தெண்ணிக்கை ஒத்து வருதல் என இவை பண்ணிசைக்கேற்ற அளவியல் தாண்டகங்கள் என்பதும், இவ்வகைமைகளில் அமையாதவற்றை அளவொவ்வாத் தாண்டகங்கள் என்பதும் தாண்டகவேந்தர் அமைத்துக் கொண்ட இலக்கணம் என ஊகிக்கலாம்.

நாலடிகளும் ஒரே எண்ணிக்கையில் எழுத்துகள் அமைந்தால் பாடும்போது பொருளுணர் திறனுக்கு இடையூறாகக் கமகங்கள் கொடுத்துப் பாட நேருமாகையால் அவற்றை அளவொவ்வாத் தாண்டகமாகவே கொள்ள வேண்டும். அளவு - பண்ணிசையளவு.

முதல் மூன்றடிகளும் ஒரே எண்ணிக்கை அடிகளாக அமைத்து ஈற்றடி மட்டும் ஒன்றோ சிலவோ எழுத்தெண்ணிக்கையைக் குறைத்தால், கண்ணீர்வார நெளித்துப்பாடப் பொருந்துவதாகும். இது இறங்கு வரிசை எழுத்தெண்ணிக்கை ஒத்து வருதலில் அடங்கும்.

ஆறாம் திருமுறையுள் மிகப்பல, எண்சீர் விருத்தங்களே என்பாரும் உளரெனில் அவர்கள், "தாண்டக வேந்தர்" என்றும் "தாண்டகச்சதுரர்" என்றும் அப்பரடிகளைத் துதித்த தெய்வச் சேக்கிழாரையே மறுத்தோராவர். தெய்வச் சேக்கிழார் அப்பரடிகள் வழங்கியருளிய தாண்டகவகையின் இலக்கண நுணுக்கங்கள் யாவையும் அறிந்திருந்த நிலையிலேயே அத்துதியுரைகளை அப்பரடிகளின் மேன்மைக்கு அணிகலனாக்கினார். அன்றியும், திருநாவுக்கரசு சுவாமிகளின் முதல் திருப்பதிகத்தினை "தாண்டகம்" என்றே கொள்ளவேண்டியுள்ளது. ஆறுசீர்ப்பனுவல்களைக் கொண்ட "கூற்றாயினவாறு" எனத்தொடங்கும் அத்திருப்பதிகத்தில் 23, 23, 23, 20 என்ற எழுத்தெண்ணிக்கையில் 1, 2, 4, 5, 10 ஆகிய ஐந்து திருப்பனுவல்களும், 24, 24, 24, 21 என்ற எழுத்தெண்ணிக்கையில் 3, 7 ஆகிய திருப்பனுவல்களும் இறங்குவரிசையில் வருகின்றன. முன்பத்தியில் குறித்தவாறு ஈற்றடி மட்டும் எண்ணிக்கையில் குறைந்துள்ளமையால் <u>கண்ணீர்வார்த்துப்</u> பாட உரியனவாகின்றன. பத்துப் பனுவல்களும் 20, 21 என்ற எழுத்தெண்ணிக்கையிலேயே ஈற்றடிகள் முடிகின்றன. எட்டாம் திருப்பனுவலின் இடை இரண்டடிகளில் 24, 24 எழுத்துகளால் அளவொத்து

வருகின்றன. ஆறாம் திருப்பனுவல் முதலடி மூன்றாமடிகளில் 24 எழுத்துகள் பெற்று அளவொத்து வருகின்றன. எட்டாம் திருப்பனுவலில் முதலடியில் "மகிழ்ந்தடியேன்" என வருகிறது. சீரும் தளையும் சிதையாவிடின் குற்றியலிகர, குற்றியலுகரங்களுக்கு அலகுகாரியம் கொடுப்பதுபோல, அப்பரடிகள் ஈரொற்றுடனிலையை தக்கவாறு பயன்படுத்துவார் என்ற கருத்து முன்னர்க் கூறப்பட்டது. அவ்வகையில் "ழ், ந்" என்ற எழுத்துகளை ½+½ - ஒரு மாத்திரையாகக் கொண்டு ஒரே எழுத்தாக எண்ணினால் எட்டாம் திருப்பனுவலும் 24, 24, 24, 20 என்ற எழுத்தெண்ணிக்கை உடையதாகிறது. இக்கருத்துகளை உளங்கொண்டு சைவத் தமிழறிஞர்கள் "கூற்றாயினவாறு" எனத்தொடங்கும் திருப்பதிகத்தைத் திருத்தாண்டகம் எனக் கண்டறிந்து முடிவு செய்தால், தெய்வச் சேக்கிழார் "தாண்டக வேந்தர்" என்றதற்கு மேலும் பொருளழுத்தம் ஏற்படும்.

"வேற்றாகி" எனத் தொடங்கும் போற்றித் திருத்தாண்டகச் செய்யுள் 20, 20, 20, 21 என்ற எழுத்தெண்ணிக்கை கொண்ட சிற்றெல்லைக்குச் சான்றாகும்.

மறுமாற்றத் திருத்தாண்டகம் - நான்காம் பனுவலின் முதலடி,

"உறவாவார் உருத்திரபல் கணத்தி னோர்கள்
உடுப்பனகோ வணத்தினொடுகீ ளுளவா மன்றே"

என்றமைந்து 30 எழுத்துகளைக் கொண்டு பேரெல்லைக்குச் சான்றாகிறது.

ஏனைய வகைமைகட்குப் பலப்பல திருத்தாண்டகங்கள் உள்ளமையின் எழுத்தெண்ணிக் கண்டு கொள்க.

யாவுக்கும் மேலாகத் தாண்டகச் செய்யுளின் பாடுபொருள் யாவுக்கும் மேலான பரம் பொருள் - தாண்டகமாடும் தலைவராகவே அமைய வேண்டுமென்பது திருநாவுக்கரசு சுவாமிகளின் திருவுளக்கிடக்கை. பன்னிருபடலம் இறைவரையும் ஆடவரையும் பாடுபொருளென்றது வடநூலார் பின்பற்றிய முறைமை போலும்!

இறைவரையும், இறைவர் அதிட்டித்த ஆசாரியர்களையும் பாடுபொருளாகக் கொண்டு தாண்டகம் பாடலாம் என விதி செய்திருப்பின் போற்றத்தக்கதாயிருக்கும். அவ்வாறு இனியொரு விதி செய்வோமாக!

## தாண்டக வேந்தருக்கு ஒரு தாண்டகம்

| | **ஒற்று நீக்கி எழுத்தெண்ணிக்கை** |
|---|---|
| **மருணீக்கி உலகிதனின் மயக்கம் நீக்கி<br>மாண்திலக வதியக்கை மனஞ்சீ ராக்கி** | **27** |
| **அருணிறையுஞ் சிவநெறிக்கிங் கூக்கந் தேக்கி<br>ஆன்றதமிழ்க் கொருபுதிய வாக்க மாக்கிப்** | **27** |
| **பொருவரிய நடையறாப் புனித கீர்த்தி<br>புவியிலொரு தனிமுதல் போத மூர்த்தி** | **27** |
| **திருநாவுக் கரசரென வமைந்தார் சீர்த்தி<br>தேசமெலாம் சிவம்பெருக்கும் தீப மாமே** | **27** |

# ஆறாம் திருமுறை
## திருத்தாண்டகப் பெயர்கள்

| | ப.தொ. எண் |
|---|---|
| அடையாளத் திருத்தாண்டகம் | 217 |
| அடைவுத் திருத்தாண்டகம் | 284 |
| உபதேசத் திருத்தாண்டகம் | 306 |
| ஏழைத் திருத்தாண்டகம் | 216 |
| காப்புத் திருத்தாண்டகம் | 220 |
| தனித் திருத்தாண்டகம் | 308, 309 |
| திருவடித் திருத்தாண்டகம் | 219 |
| நின்ற திருத்தாண்டகம் | 307 |
| பலவகைத் திருத்தாண்டகம் | 306 |
| புக்க திருத்தாண்டகம் | 215 |
| பெரிய திருத்தாண்டகம் | 214 |
| போற்றித் திருத்தாண்டகம் | 218, 245, 268, 269, 270 |
| மறுமாற்றத் திருத்தாண்டகம் | 311 |
| வினாவிடைத் திருத்தாண்டகம் | 310 |
| க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் (திருப்பதிக் கோவை) | 283 |



# ஆறாம் திருமுறை
# திருத்தாண்டகங்களின் மகுடங்கள்

| தொடர் எண் | ஈற்றுத் தொடர்கள் (அகர வரிசைப்படி) | பதிக எண் |
|---|---|---|
| 1. | அடி என முடியும் திருவடித்திருத்தாண்டகம் | 6 |
| 2. | அடிகள் நின்றவாறே | 94 |
| 3. | அடியேனை ஆளுடைய அடிகள் தாமே | 53 |
| 4. | அணிஆரூர்த்திருமூலட்டானனாரே | 28 |
| 5. | அரநெறியில் அப்பன் தன்னை அடைந்தடியேன் அருவினை நோயறுத்தவாறே | 33 |
| 6. | அவனாகில் அதிகை வீரட்டனாமே | 4 |
| 7. | அல்ல கண்டங் கொண்டடியேன் என்செய்கேனே | 62 |
| 8. | அழகியரே ஆமாத்தூர் ஐயனாரே | 9 |
| 9. | அழல் வண்ண வண்ணர்தாம் நின்ற வாறே | 94 |
| 10. | ஆக்கூரில் தான் தோன்றியப்பனாரே | 21 |
| 11. | ஆரூரா என்றென்றே அலறாநில்லே; கதறாநில்லே; ஏத்தாநில்லே; போற்றாநில்லே; | 31 |
| 12. | ஆரூரில் அம்மான் தன்னை அறியாது அடிநாயேன் அயர்த்தவாறே | 29 |
| 13. | ஆரூரிற் கண்டடியேன் அயர்த்தவாறே | 26 |
| 14. | ஆவடுதண்துறையுள்மேய அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்தேனே | 46 |
| 15. | ஆவடுதண்துறைஉறையும் அமரர் ஏறே | 47 |
| 16. | இடைமருதுமேவி இடங்கொண்டாரே | 17 |
| 17. | இடைமருதுமேவிய ஈசனாரே | 16 |
| 18. | இன்னம்பர்த்தான் தோன்றியீசனாரே | 89 |
| 19. | உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே | 99 |
| 20. | எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன்காண் அவன் என் எண்ணத்தானே | 64, 65 |
| 21. | எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே | 91 |

| | | |
|---|---|---|
| 22. | ஏழையேன் நான் பண்டிகழ்ந்தவாறே | 3 |
| 23. | ஐயாறன்னே என்றென்றேநான் அரற்றி நைகின்றேனே | 37 |
| 24. | ஓமாம்புலியூர்... வடதளியெம்செல்வன் தன்னைச் சேராதே திகைத்து நாள் செலுத்தினேனே | 88 |
| 25. | கஞ்சனூர் ஆண்டகோவைக்கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே | 90 |
| 26. | கண்ணாம் கருகாவூர் எந்தைதானே | 15 |
| 27. | கயிலாய நாதனையே காணலாமே | 70 |
| 28. | கயிலைமலையானே போற்றி போற்றி | 55, 56, 57 |
| 29. | கற்குடியில் விழுமியானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே | 60 |
| 30. | கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே | 92 |
| 31. | 'காப்புக்களே' என முடியும் திருத்தாண்டகம் | 7 |
| 32. | காளத்தியான் அவன் என் கண்ணுளானே | 8 |
| 33. | கீழ்வேளூர் ஆளுங்கோவைக் கேடிலியை நாடுமவர் கேடிலாரே | 67 |
| 34. | குடந்தைக் கீழ்க்கோட்டத்து எம் கூத்தனாரே | 75 |
| 35. | கொட்டையூரில் கோடீச்சரத்துறையும் கோமான் தானே | 73 |
| 36. | கோடிகா அமர்ந்துறையும் கோமான்தானே | 81 |
| 37. | சிவனவன் காண் சிவபுரத்துளம் செல்வன் தானே | 87 |
| 38. | செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே | 84 |
| 39. | சொல்லீர் எம்பிரானாரைக் கண்டவாறே | 97 |
| 40. | தலையாலங்காடன் தன்னைச் சாராதே சாலநாள் போக்கினேனே | 79 |
| 41. | திருச்சாய்க்காட் டினிதுறையும் செல்வர்தாமே | 82 |
| 42. | திருச்சோற்றுத்துறையுளானே திகழொளியே சிவனே உன் அபயம் நானே | 44 |
| 43. | திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே | 66 |
| 44. | திருப்புத்தூரில் திருத்தளியான்காண் அவன் என் சிந்தையானே | 76 |
| 45. | திருமாற்பேற்று எம் செம்பவளக் குன்றினைச் சென்றடைந்தேன் நானே | 80 |
| 46. | திருமுண்டீச்சரத்துமேய சிவலோகன் காண் அவன் என் சிந்தையானே | 85 |
| 47. | திருமுது குன்றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்தவாறே | 68 |

| 75. | பொன்னி சூழ்ந்த வலஞ்சுழியே புக்கிடமா மன்னினாரே | 72 |
|---|---|---|
| 76. | போற்றி என முடியும் திருத்தாண்டகம் | 5 |
| 77. | மழபாடி மண்ணும் மணாளன்தானே | 39 |
| 78. | மழபாடி வயிரத்தூணே என்றென்றே நானரற்றி நைகின்றேனே | 40 |
| 79. | மறைக்காட்டுறையும் மணாளன் தானே | 23 |
| 80. | மாகடல் சூழ்கோகரணம் மன்னினானே | 49 |
| 81. | முன்னோ பின்னோ திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே | 34 |
| 82. | வலம்புரமே புக்கங்கே மன்னினாரே | 58 |
| 83. | வழிவைத்தார்க்கு அவ்வழியே போதும் நாமே | 12 |
| 84. | வானவர்கள் வணங்கிஏத்தும் வலிவலத்தான் காண் அவனென் மனத்துளானே | 48 |
| 85. | வாய்மூர் அடிகளை நான் கண்டவாறே | 77 |
| 86. | விண்ணிழி தண்வீழிமிழலையானே | 52 |
| 87. | வீழிமிழலையே மேவினாரே | 51 |
| 88. | வெண்காடுமேவிய விகிர்தனாரே | 35 |
| 89. | வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்தனாரே | 59 |



## சிறப்புக் குறிப்புடைய திருப்பதிகங்கள்

| | ப.தொ. எண் |
|---|---|
| அகப்பொருட் பதிகங்கள் | 222, 226, 248, 258, 271 |
| இறைவனைக் கண்ட வண்ணம் | 310 |
| உபதேசம் | 274 |
| உலக மாயைகளை வெறுத்துரைப்பது | 240 |
| கயிலாயம் பாடல்தோறும் சொல்லப்பெறுவது | 254 |
| சிவபிரானுடைய திருவடையாளம் | 217, 231 |
| சிவனைச் சேரார் தீநெறி சேர்வர் | 263 |
| சிவனைச் சேரார் நன்னெறி சேராதார் | 279 |
| தலங்கள் பல சொல்லப் பெறுவன | 230, 235, 283, 284 |
| திருவடி சூட்டிய சிறப்புரைப்பது | 227 |
| திருவாரூர்க் கோயிலின் பழமை கூறுவது | 247 |
| நெஞ்சறிவுறுத்தல் | 244, 255 |
| பலியேற்றலின் சிறப்பு | 222, 226 |
| போற்றி கூறல் | 218, 245, 268, 269, 270 |
| மன்னன் ஆணைக்கு மறுமொழி | 311 |
| உருத்ரத்தின் கருத்தமைந்த பதிகம் | 307 |
| வாய்மூர் இறைவன் திருக்காட்சி | 290 |
| க்ஷேத்திரக் கோவை (திருப்பதிக் கோவை) | 283 |

# 1. கோயில் (பெரிய திருத்தாண்டகம்)

## அரியானை

**ஆ**றாம் திருமுறையில் முதல் திருப்பதிகத்தின் முதல் திருப்பாட்டிலேயே அரியானை, சிந்தையானை, அகத்தானை, கரியானை, பெரியானை, புலியூரானை என்று ஆறுமுறை ஆனை, ஆனை என்று வந்திருப்பது பெரும் வியப்பைத் தருவதோடு அது ஆனைமுகக் கடவுளின் வழிபாட்டை நினைவுபடுத்துவதாக அமைந்துள்ளது, அவர் அருளாலாகும். எந்தச் செயல் தொடக்கத்துக்கும் நேரடியாகாவோ அல்லது மறைமுகமாகவோ ஆனைமுகக்கடவுள் வழிபாடு இருக்க வேண்டும் என்ற கருத்தைப் பெறுகிறோம். நமக்கு தவ வலிமை இருந்தால் நம்மை அறியாமலே விநாயகரே வந்துவிடுவார் போல உள்ளது.

"உலகெலாம்" என்று தெய்வச் சேக்கிழாருக்கு சுவாமிகள் திருத்தொண்டர் புராணம் பாட அடியெடுத்துக் கொடுத்தார். உலகெலாம் என்பதையே முதலாக வைத்துச் சேக்கிழாரும் தொடங்கினார். ஆனால் அதனை எவ்வாறு முடிப்பது ? உலகெலா முதலாக்கொண்ட மூர்த்தியான், உத்தமன், உலகெலாம் போற்றும் மூர்த்தியான் என்று இவ்வாறு எத்தனையோ முறைகளில் முடித்திருக்கலாம். சேக்கிழார் அவ்வாறு பாடவில்லை. தில்லையில் அப்பர் பாடிய முதலாவது திருத்தாண்டக முதல் பாடலின் முதலடியின் முதலாவது சொல் அதாவது அரியானை என்னும் சொல் அவர் உள்ளத்திலே ஆழமாகப் பதிந்திருக்க வேண்டும். 'அரியானை' என்பதன் அரும்பொருளை அவர் பலகாலம் ஆராய்ந்திருப்பார் போலும். இறைவன் திருவருளும் கைகொடுக்க அதன் விளக்கவுரையாக "உலகெலாமுணர்ந்து ஓதற்கு அரியவன்" என்று பாடிவிட்டார். திருத்தொண்டர் புராணம் கடவுள் வாழ்த்தின் முதலடி அப்பர் பாடலின் அரியானை என்பதற்கு ஒரு விளக்க விரிவுரையாக அமைந்துவிட்டது. உலகத்து உயிர்களெல்லாம் மனத்தால் உணரவும், வாயால் ஓதவும் அரியவன். அடியார்களுக்கு எளியன் ஆவதையும் பின்வரும் தாண்டகப் பாடல்களில் பாடியுள்ளார்.

23.08.2015 அன்று, அதிகாலை பதிப்பாசிரியர் 'அரியானை' பாடலுக்கு மேற்காண் அடிக்குறிப்பை எழுதி முடித்துவிட்டு, அன்றைய செய்தித்தாள் வாசிக்க ஆரம்பித்தார். அவருடைய வாழ்வின் வெற்றியின் இரகசியங்களில் ஒன்று 45 நிமிடமாவது தினமும் செய்தித்தாள் வாசிப்பதாகும். காலம் பொன்னானது. செய்தி மணியானது. இன்றைய செய்தி நாளைய வரலாறு மட்டுமல்ல, பொருளும் கூட. வாழ்வே வளர்ச்சி, வளர்ச்சியே வாழ்வு என்ற கோட்பாடுகளுடன் அன்றாடம் படித்துவிடுவார். அன்று ஞாயிற்றுக்கிழமை. எனவே தினமணியின் தமிழ் மணி கண்ணுக்கும், மனதுக்கும் விருந்தாகும். அன்று அவர் படித்த அன்பர் பு.சீ. கிருஷ்ணமூர்த்தி எழுதியிருந்த 'இலக்கிய யானைகள் எட்டு' என்ற குறுஞ்செய்தியைப் பிரசுரிப்பதில் மகிழ்வு கொள்கிறோம்.

## இலக்கிய யானைகள் எட்டு



நெல்லையைச் சார்ந்த வடிவேற் கவிராயர் என்பவர் இலங்கையில் இருந்தபோது, யாழ்ப்பாணம் நமச்சிவாய முதலியார் என்பவர், யாழ்ப்பாணம் திருவானைக்கோட்டையில் கோயில் கொண்டுள்ள சுப்பிரமணியர் மீது ஒரு கோவை பாட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அதற்கிணங்க வடிவேற் கவிராயர் கோவையைப் பாடி முடித்துக் கொடுத்ததற்காக, யாழ்ப்பாணத்தில் உள்ள தமிழ்ச் சங்கத்தில் ஒரு பாராட்டு விழா நடத்தப்பட்டது. அப்பாராட்டு விழாவில், இவரைச் சோதிக்க விரும்பிய ஒரு புலவர், 'ஒவ்வொரு பாட்டிலும் எட்டு யானைகள் வருமாறு சிவபெருமான் மீது பாடல் பாடவேண்டும்' என்றார். அதற்கு இணங்க உடனே கவிராயர்,

"விடையானை யிடத்திலா விடையானை
மலர்க்கரத்தில் விளங்குஞ்சூலப்
படையானைச் செனிப்புமரிப் படையானை
யடியவரைப் பாது காக்க
மிடையானை யுரியுடுத்தும் இடையானை
மதிநதியு மின்னுஞ் செய்ய
சடையானைக் கருணைதரச் சடையானைத்
தொழுதுகவி சாற்றாய் நெஞ்சே".

என்று பாடினார். "தனது வாகனமாக எருது உடையானை, இடுப்பில் அரவமாகிய பாம்பை வைத்திருப்பவனை, தனது மலர்க்கரத்தில் சூலத்தை ஆயுதமாகக் கொண்டவனை, பிறப்பும் இறப்பும் அடையாதவனை, தனது அடியவர்களைப் பாதுகாக்கும் மேலானவனை, தோலை உடுத்தும் இடுப்பை உடையவனை, சந்திரனையும் கங்கையையும் கொண்டுள்ள சடைத் தலையுடையவனை, கருணையை வழங்க சலிப்பு அடையாதவனைத் தொழுது புகழ்க் கவிதையைச் சொல்வாய், மனமே!" என்பது பாடலின் பொருள்.

இப்பாடலைப் பாடியதும், வேறொரு புலவர், 'முரண் தொடையிலும் எட்டு யானைகள் வருமாறு பாடவேண்டும்' என்றார். வடிவேற் கவிராயரும்,

படியானைச் சுருதிதனைப் படித்தானைத்
தனைத்துணையென் பகர்வார்க் கெல்லாம்

குடியானை நஞ்சமுதாய்க் குடித்தானை
இதழித்தார் குலவும் வேணி
முடியானை முப்புரத்தை முடித்தானைச்
சராசரங்கள் மூழ்கி னாலும்
மடியானை வினைப்பயனை மடித்தானைக்
கவிபாடி வணங்காய் நெஞ்சே.

என்று பாடினார். "யாருக்கும் படிந்து இராதவனை, சுருதிதனைப் படித்தவனை, தன்னைத் துணை என்று கூறுபவர்களுக்கெல்லாம் – குடிபுகுந்து துணை இருப்பவனை, விஷத்தை அமுதமாகக் கொண்டு குடித்தவனை, இழிந்தார்க்கு உலவும் (தலை மயிர்) முடித்து உள்ளவனை, முப்புரத்தையும் முடிவுக்குக் கொண்டு வந்தவனை, சராசரமாகிய உலகமே மூழ்கினாலும் – தான் அழியாதவனை, பிறர் செய்த வினையின் பயனை மடியச் செய்தவனை புகழ்ப் பாடல் பாடி வணங்க வேண்டும், நெஞ்சமே!" என்னும் பொருள்படப் பாடினார். அவையில் உள்ளோர் வடிவேற் கவிராயரின் திறமையைப் பாராட்டி மகிழ்ந்தனராம்.

**யானை யானை என்று ஒரே யானை மயமாகிவிட்டது.**

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறை மொழி தானே மந்திரம்

என்று தொல்காப்பியர் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பதிவு செய்தார். மேற்காண் யானை, யானை என்று வரும் தேவாரப் பாடல் அப்பர் சுவாமிகளால் ஏழாம் நூற்றாண்டில் பாடப்பட்டது. இதையொப்ப இரண்டு பாடல்கள் இருபதாம் நூற்றாண்டில் நம் இலங்கையில் பாடப்பட்டு இருபத்தொன்றாம் நூற்றாண்டில் நாம் அவற்றை அனுபவிப்பதோடு பல தமிழ்ப் புலவர்கள் இதைப் போன்றே தமிழ்ப் பாடல்களை இயற்றியும், பாடியும் தமிழ்த் தொண்டாற்றி வருகிறார்கள். இது தமிழ்மொழியின் தொன்மை, வளமை, அழகு, செறிவுத்திறன், அழிவின்மை இவற்றைக் காட்டுகிறது. நமது மொழி 'அப்படியாகிவிடும் இப்படியாகிவிடும்' என்றெல்லாம் அவ்வப்போது சிலர் எழுதுகிறார்கள். இது தவறு. அந்தச் சொற்களே அமங்கலமானவை என்பதால்தான் 'அப்படி இப்படி' என்று சொல்கிறோம். உலக மக்கள் தொகை 725 கோடி என்கிறார்கள். அதில் ஒரு சதவீதம் அதாவது 7¼ கோடி தமிழர்கள் உலகெங்கும் வாழ்கிறார்கள். இதில் 1 விழுக்காடு 7¼ லட்சம் தமிழ்மக்கள் உலக முழுவதும் கண்டிப்பாகத் தமிழ்த் தொண்டாற்றி வருகிறார்கள் என்றால் அது மிகையாகாது. இந்த 7¼ லட்சத்தில் அடியேனும், இந்த நூல் வாசிப்போர் எல்லோரும் அடங்குவர். தமிழை யாராலும் எப்போதும் தவறாக எதுவும் செய்ய முடியாது. தமிழ், சிவபெருமான் உருவாக்கியது மட்டுமின்றி அவர் சங்கமேறி வளர்த்த மொழியாகும். "அப்படியாகும் இப்படியாகும்" என்ற அமங்கல வாக்குகளை உபயோகிக்கவே கூடாது என்ற கொள்கையுடன் 4200க்கும் மேற்பட்ட பாடல்களைக் கொண்ட பெரிய புராணமாம் திருத்தொண்டத் தொகையை 12ஆம் நூற்றாண்டில் இயற்றிய தெய்வச் சேக்கிழார் வாக்குப்படி ஆழித்தேர் வித்தகன் அடியார்கள் வாழும் தமிழகத்தில் தமிழ் என்றும் வாழும். வளரும். இது வளர் தமிழ். தமிழை அனுபவியுங்கள். தமிழைக் கருவியாகக் கொண்டு சொன்மாலைகள் புனைந்து வீடுபேறடைய முயலுங்கள். திசையெட்டும் தோன்றுவதற்கு முன்னோ பின்னோ தோன்றிய நமது தமிழ் சூரியனும், சந்திரனும் உள்ளவரை இருக்கும். இது சத்தியம்.

2086. அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை
யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கள்தங் கோனை
மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
**பெரியானைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 1

அதிக எண்ணிக்கையில் எழுத்துக்களையும், மிகப் பெரிய சீர்களையும் உடையதால் மட்டும் பெரிய திருத்தாண்டகம் எனப்படவில்லை. பத்துப்பாடல்களிலும் நிறைவடியில் பெரியான், பெற்றான், பெருமான், பெருந்தகை, பெருந்துணை, பெரும்பொருள், பெரும்பயன், பேரான், பெற்றான், பேரொளி என்று தாம் எடுத்துக்கொண்ட பெரும்பொருளைப் பெரும்பற்றப் புலியூரானைச் சிறியன சிந்தியாத் திருநாவுக்கரசு சுவாமிகள் தாம் பெற்ற பெருவாழ்வை நினைத்து விளிப்பதால் பெரிய திருத்தாண்டகம் எனப் போற்றப்படுகிறது.

எவ்வளவு தகுதி உடையவரும் தம் முயற்சியால் அணுகுதற்கு அரியவன், அந்தணர்களின் உள்ளத்தில் உள்ளவன். மாற்றுதற்கு அரிய வேதத்தின் உட்பொருளாகியவன். நுண்ணியன், யாரும் தம் முயற்சியால் உணரப்படாத மெய்ப்பொருள் ஆகியவன். தேனும் பாலும் போன்று இனியவன். நிலைபெற்ற ஒளிவடிவினன், தேவர்களுக்குத் தலைவன், திருமாலையும் பிரமனையும் தீயையும், காற்றையும் ஒலிக்கின்ற கடலையும் மேம்பட்ட மலைகளையும் உடனாய் இருந்து செயற்படுப்பவன் ஆகிய மேம்பட்டவன். புலிக்கால் முனிவனுக்கு உறைவிடமாகிய தில்லையை உகந்து எழுந்தருளும் அப்பெருமானுடைய மெய்ப் புகழைப் பற்றி உரையாடாத நாள்கள் எல்லாம் பயன் அற்ற நாள்களாம். கரி – சாட்சி. கரியான் – உயிர்களின் செயல்களையெல்லாம் உள்ளிருந்து சாட்சியாக உணர்கின்றான். திருமால் என்ற பொருளும் உண்டு.

2087. கற்றானைக் கங்கைவார் சடையான் றன்னைக்
காவிரிசூழ் வலஞ்சுழியுங் கருதி னானை
அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள்செய் வானை
ஆரூரும் புகுவானை அறிந்தோ மன்றே
மற்றாருந் தன்னொப்பா ரில்லா தானை
வானவர்க ளெப்பொழுதும் வணங்கி ஏத்தப்
**பெற்றானைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 2

பிறவா நாள் – பயனற்ற நாள்; இறந்துபட்ட நாள். இக்கருத்தையே சுந்தரமூர்த்தி சுவாமிகள், உணர்வழியும், உயிர்போகும் நாள், உயர் பாடை மேற் காவு நாள் இவை ஓவு நாள் என்று பாடியுள்ளார். அற்றார் – வேறு துணையற்றவர். சுவாமியைச் சார்ந்து உலகத் தொடர்பை அறுத்தவர். அலந்தார் – துன்பப்பட்டவர்.

எல்லாம் வல்லவன், கங்கையைத் தாங்கிய நீண்ட சடையன். ஒரு பக்கத்தில் காவிரியால் சூழப்பட்ட திருவலஞ்சுழி என்ற திருத்தலத்தை உகந்தருளியிருப்பவன். பொருள் அற்றவருக்கும், தாங்குவார் இல்லாது வருந்துபவருக்கும், அருளுபவன். தன்னைத் தவிர வேறு எவரும் தனக்கு ஒப்பில்லாதவன். தேவர்களால் எப்பொழுதும் வணங்கிப் போற்றப்படுபவன். திருவாரூரிலும் உகந்து தங்கியிருப்பவன் ஆகிய எம்பெருமானை நாம் எல்லாருக்கும் மேலானவன் என்று அறிந்தோம். ஆதலின் அந்தப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

2088. கருமானின் உரியதளே உடையா வீக்கிக்
கனைகழல்கள் கலந்தொலிப்ப அனல்கை ஏந்தி
வருமானத் திரள்தோள்கள் மட்டித் தாட
வளர்மதியஞ் சடைக்கணிந்து மானேர் நோக்கி
அருமான வாண்முகத்தா ளமர்ந்து காண
அமரர்கணம் முடிவணங்க ஆடு கின்ற
**பெருமானைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 3

யானைத் தோலை மேலாடையாக இறுக்கி உடுத்து, தன் கழல்களின் ஒலி ஏனைய இயங்களின் ஒலியோடு கலந்து ஒலிக்க, கையில் தீயை ஏந்தி, பெருமை வளர்கின்ற பருத்த தோள்களை மடித்து அவைகள் அசையுமாறு, பிறைமதியைச் சடையில் அணிந்து மானின் பார்வை போன்ற பார்வையளாகிய மேம்பட்ட சிறந்த ஒளியை உடைய முகத்தவளாகிய உமாதேவி விரும்பிக்காணுமாறும் தேவர் கூட்டம் தலை தாழ்ந்து வணங்குமாறும் திருக்கூத்தாடுகின்ற மேம்பட்டவனாகிய பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

அடியவர்கள் எப்போதும் மனத்துள் வைத்துப் போற்றும் தன்மை உடையதாகலின் பெரிய திருத்தாண்டகம் எனப்படும் பதிகமாகும். இவ்வாறே ஒவ்வொரு காரணத்துக்காக ஒவ்வொரு தாண்டகமும், அடையாளத் திருத்தாண்டகம், போற்றித் திருத்தாண்டகம், திருவடித் திருத்தாண்டகம் என்ற பெயர்களைப் பெற்றுள்ளன.

---

2089. அருந்தவர்கள் தொழுதேத்தும் அப்பன் தன்னை
அமரர்கள்தம் பெருமானை அரனைமூவா
மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன் தன்னை
மறிகடலுங் குலவரையும் மண்ணும் விண்ணும்
திருந்தொளிய தாரகையுந் திசைக ளெட்டுந்
திரிசுடர்கள் ஓரிரண்டும் பிறவு மாய
**பெருந்தகையைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 4

பெருந்தவத்தோர் தொழுது போற்றும் தலைவன், தேவர்கள் தலைவன், தீமைகளை அழிப்பவன். மூப்பு எய்தாமற் செய்யும் அமுதத்தைத் தேவர்களுக்கு உதவிய வலிமையுடையவன். அலைகள் மடங்கி வீழும் கடல், மேம்பட்ட மலை, நிலம், வானம், திருத்தமான ஒளியை உடைய விண்மீன்கள், எண்திசைகள், வானத்தில் உலவுகின்ற காய்கதிர், மதியம், பிறவும் ஆகிய பொருள்களில் உடனாய் இருந்து அவற்றைச் செயற்படுத்தும் மேன்மையை உடையவன் ஆகிய பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

சிவபரத்துவத்தை உணர வேண்டும். மறிகடல் – அலைவீசும் கடல். குலவரை – சிறந்த மலை. தாரகை – விண்மீன்.

2090. அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகன்ஞாலத் தகத்துள் தோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
**பொதுநீக்கித்** தனைநினைய வல்லோர்க் கென்றும்
**பெருந்துணையைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 5

பொதுநீக்கி – பிற தெய்வங்களோடு இவரும் ஒருவர் என்று பொது நோக்கால் எண்ணாது, இவரையே / சிவபெருமானையே / கூத்தப்பிரானையே முழுமுதற் கடவுளாக எண்ணும் எண்ணம் நமக்கெல்லாம் வரவேண்டும்.

ஒப்பற்ற துணைவன், அடியவர்களின் துயரைப் போக்கும் அமுதம் போன்றவன். பரந்த இவ்வுலகில் பிறப்பெடுத்த பின்னர் உடன் தோன்றும் துணைவர், ஏனைய சுற்றத்தார், செல்வம் இவற்றிலுள்ள பாசத்தை நீத்து, பெரிய புலன்களின்மேல் செல்லும் மனத்தை அடக்கி, மகளிரோடும் படுக்கையில் நுகரும் சிற்றின்பப் பயனை அடியோடு நீக்கி, ஏனைய தெய்வங்களோடு பொதுவாக நினைப்பதனை விடுத்துத் தன்னையே விருப்புற்று நினைத்தலில் வல்ல அடியவர்களுக்கு எக்காலத்தும் உடனாய் நின்று உதவும் துணைவன் ஆகிய பெரும்பற்றப்புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

2091. கரும்பமரும் மொழிமடவாள் பங்கன் தன்னைக்
கனவயிரக் குன்றனைய காட்சி யானை
அரும்பமரும் பூங்கொன்றைத் தாரான் தன்னை
அருமறையோ டாறங்க மாயி னானைச்
சுரும்பமருங் கடிபொழில்கள் சூழ்தென் னாரூர்ச்
சுடர்க்கொழுந்தைத் துளக்கில்லா விளக்கை மிக்க
**பெரும்பொருளைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 6

உணரவும், ஓதவும் அரியவன் ஆயினும் இன்னின்ன வகையால் அன்பால் நினையும் அடியவர்கட்கு எளியவன் என்று அவன் அரியனாந் தன்மையும், எளியனாந் தன்மையும் இப்பதிகம் கூறுகிறது.

கரும்பு போன்ற இனிய சொற்களை உடைய பார்வதியைத் தன் திருமேனியின் இடப்பகுதியாகக் கொண்டவன். மேம்பட்ட வயிரமலை போன்ற வடிவினன். அலரும் பருவத்து அரும்பாய்க் கட்டிய கொன்றைப் பூமாலையான். நால்வேதமும் ஆறங்கமும் ஆயினான். வண்டுகள் விரும்பும் நறுமணச் சோலைகள் சூழ்ந்த அழகிய ஆரூரில் மேல் நோக்கும் சுடரொளி போன்றவன். ஒளிப்பிழம்பு அணைதல் இல்லாத விளக்குப் போன்றவன். வீடுபேற்று இன்பமாக இருப்பவன் ஆகிய பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

2092. வரும்பயனை எழுநரம்பி னோசை யானை
வரைசிலையா வானவர்கள் முயன்ற வாளி
அரும்பயஞ்செ யவுணர்புர மெரியக் கோத்த
அம்மானை அலைகடல்நஞ் சயின்றான் தன்னைச்
சுரும்பமருங் குழல்மடவார் கடைக்கண் நோக்கில்
துளங்காத சிந்தையராய்த் துறந்தோ ருள்ளப்
**பெரும்பயனைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 7

ஏழிசையாய் இசைப் பயனாய் உள்ளவன். மேருவை வில்லாகக் கொண்டு, தேவர்களையே அம்பாகக் கொண்டு கொடிய அச்சத்தை விளைத்த அசுரர்களின் மூன்று கோட்டைகளும் எரியுமாறு அம்பினைச் செலுத்திய தலைவன். அலைகடலில் தோன்றிய விடத்தை உண்டவன். வண்டுகள் தங்கும் பூக்களை அணிந்த கூந்தலை உடைய இளைய மகளிரின் கடைக்கண் பார்வையால் அசையாத உள்ளத்தை உடையவராய்ச் சிற்றின்பத்தை அறநீத்த உள்ளத்தார் அடையும் முடிந்த பயனாக இருப்பவன் ஆகிய பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

மானுடராகிய நம் வாழ்நாளின் பயன் சிவபரம்பொருளைத் துதித்து வாழ்வதே எனக் குறித்தலால் இத்திருப்பதிகம் யாவரும் மனத்துள் வைத்துப் பயிலத் தகுந்தது என்பதனை "அவர்தஞ்சிந்தை பிரியாத" என்று சேக்கிழார் உணர்த்தி அருளினார்.

2093. காரானை யீருரிவைப் போர்வை யானைக்
காமருபூங் கச்சியே கம்பன் தன்னை
ஆரேனும் அடியவர்கட் கணியான் தன்னை
அமரர்களுக் கறிவரிய அளவி லானைப்
பாரோரும் விண்ணோரும் பணிய நட்டம்
பயில்கின்ற பரஞ்சுடரைப் பரனை எண்ணில்
**பேரானைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 8

கரிய யானையின் உதிரப் பசுமை கெடாத தோலைப் போர்த்தியவன். விருப்பம் மருவிய பொலிவினை உடைய காஞ்சி நகரத்தின் ஏகம்பம் என்ற திருக்கோயிலை உகந்து எழுந்தருள்பவன். அடியவர்களை அண்மித்திருப்பவன். தம் முயற்சியால் அறிய முயலும் தேவர்களுக்கு அளவிட முடியாதவன். நிலவுலகத்தவரும் வானுலகத்தவரும் தன்னை வணங்குமாறு கூத்தினைப் பயில்கின்ற ஒளி உருவன் ஆகி எண்ணற்ற திருநாமங்களை உடையவன். அத்தகைய பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

"ஆரேனும் அன்பு செய்யின் அங்கே தலைப்படுங்காண் ஆரேனுங்காணா அரன்"

– திருக்களிற்றுப் படியார் – 15

**2094.** முற்றாத பால்மதியஞ் சூடி னானை
மூவுலகுந் தானாய முதல்வன் தன்னைச்
செற்றார்கள் புரமூன்றுஞ் செற்றான் தன்னைத்
திகழொளியை மரகதத்தைத் தேனைப் பாலைக்
குற்றாலத் தமர்ந்துறையு குழகன் தன்னைக்
**கூத்தாட வல்லானைக்** கோனை ஞானம்
**பெற்றானைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. **9**

வெள்ளிய பிறைமதியைச் சூடியவன். மூவுலகும் தானேயாய் இருக்கும் தலைவன். பகைவருடைய மும்மதிலையும் அழித்தவன். விளங்கும் ஒளிவடிவினன். இடப்பாகத்தது நிறத்தால் மரகதமணி போன்றவன். இன்பம் பயத்தலால் தேனும் பாலும் போன்றவன். குற்றாலம் என்ற திருத்தலத்தை உகந்தருளியிருக்கும் இளையவன். கூத்தாடுதலில் வல்லவன். யாவருக்கும் தலைவன். சிவஞானியர் ஞானத்தால் அறியப் பெற்றவன் ஆகிய பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

மரகதம், தேன், பால் முதலியவை அருமையானவை யென்று மக்கள் கொள்ளும் பொருள்கள். அவற்றினும் அருமையானவன் சிவபெருமான்.

## கூத்தாட வல்லான்

**எ**ல்லா வகையான ஆடல்களிலும் வல்லவர் கூத்தாட வல்லான் ஆகிறார். உயிர்களாகிய நாமெல்லாம் இயங்க வேண்டுமென்பதற்காக அவர் எப்போதும் ஆடிக்கொண்டே இருக்கிறார். அவர் ஆட்டம் நின்றால் நமது எல்லோருடைய ஆட்டமும் நின்றுவிடும் என்று தெளிந்த சிந்தனையுடன் கூத்தனையும், கூத்தினையும் தரிசிக்கச் செல்வோம். கூத்து கால வரையறைக்கு அப்பாற்பட்டது.

### திருக்கூத்தின் பயன்

திருக்கூத்தின் பயன் முத்தியின்பத்தைவிட மேலானது. பரமஞானிகள் முதல் சாதாரண பொதுமக்கள் வரை யார் யாரெல்லாம் கண்டார்களோ அவர்களுக்கு வீடுபேறு நிச்சயம். வீடுபேறு பெற்றவர்களெல்லாம் கூத்து தரிசனம் பெற்றார்களா? என்பது தெரியவில்லை. ஆனால் கூத்து தரிசனம் பெற்றவர்களுக்கு நிச்சயம் வீடுபேறு உண்டு. பிறப்பில்லை. எனவேதான், எல்லாத் தலங்களிலும் பிறப்பை வேண்டாத அப்பர் சுவாமிகள் தில்லையில் நடனம் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தால் பிறப்பு வேண்டுமென்று பாடினார்.

கூத்தாடி என்று சொல்லாமல் கூத்தாடவல்லான் என்று சொல்லக் காரணமென்ன? சிவபரத்துவத்தைக் குறிக்கும் பல சொற்களில் ஒன்று கூத்து. ஒரு காலத்து வரையறையின்றி இறையருளால் உயிருணர்வால் எழுந்த கூத்து, பாவ, இராக, தாளங்களோடு கூடியபோது பரதமாகி, கதை, மேடை, நல்லாடை, அலங்காரங்கள் இவற்றோடு நாட்டியமாகவும், நடனமாகவும், நாடகமாகவும் எழுச்சி பெற்றது.

எவ்வளவோ காலமாக ஓரிரு இலக்கமிட்டவர் காண, பல கோடி இலக்கமிட்டவர் கேட்க, சிவபரம்பொருள் ஆடி ஆவணமாகச் செய்து வைக்கப்பட்டுள்ள வகைவகையான கூத்துக்களை ஈரேழு பதினான்கு உலகங்களிலும் அனைத்துப் பிரபஞ்சங்களிலும் உள்ள யாராலும் எல்லா நிலைகளிலும், எல்லாக் காலங்களிலும் ஆட முடியாது என்பதால்தான் சுவாமிகள் "கூத்தாடவல்லான்" என்று பாடினார். அவராடியதாகக் கீழ்க்காணும் கூத்துக்களை நமது முன்னோர்கள் வகைப்படுத்தியுள்ளார்கள்.

1. நித்திய நடனம்
2. திருமூலர் வகைப்படுத்தியுள்ள சிவானந்தக்கூத்து உட்பட ஐவகைக் கூத்துக்கள்
3. பிரதோச நடனம், ஞான நடனம், ஊன நடனம்
4. எட்டுத்தலங்களில் நடத்திய அட்ட வீரட்ட நடனங்கள்
5. கொடுகொட்டி, பண்டரங்கம் போன்ற நடனங்கள்
6. ஏழுவிடங்கத்தல நடனங்கள்
7. 108 தாண்டவக் கரணங்கள் அல்லது ஆடலியக்கங்கள்

ஆடல் புரிந்த நிலையும் அரையி லசைத்த அரவும்
பாடல் பயின்றபல் பூதம் **பல்லா யிரங்கொள் கருவி**
**நாடற் கரியதொர் கூத்தும்** நன்குயர் வீரட்டஞ் சூழ்ந்து
ஓடுங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. – திருநாவுக்கரசர்

"பல்லாயிரங்கொள் கருவி நாடற்கரிய கூத்து". இசைக்காகவும், நடனமாடலாம். நடனத்துக்காகவும் இசைக்கலாம். ஆனால் சுவாமி நடனமாடும்போது பல்லாயிரக்கணக்கான இசைக் கலைஞர்கள் அமர்ந்தாலும் அந்தக்கூத்துக்கு இணையாக வாசிக்க முடியாது என்பதால்தான் அவர் "கூத்தாடவல்லான்" ஆகிறார். கை, கால், உடல்நிலை இம்மூன்றின் செயல்பாடுகளும் இணைந்த ஆடலமைப்பே கரணம் அல்லது தாண்டவம் எனப்படும்.

நூற்றியெட்டுக் கரணங்களுள், 81 கரணங்களே தஞ்சைப் பெரிய கோயிலிலே வரிசையாகச் செதுக்கப்பட்டுள்ளன. இதற்குக் காரணமென்ன என்பதற்கு ஒரு செவிவழிச் செய்தியும் சொல்கிறார்கள். பழங்காலத்து மன்னன் ஒருவன் 108 தாண்டவங்கள் அல்லது கரணங்களையும் சிலையாக வடித்து வைக்கவேண்டுமென்று விரும்பி, நாடுமுழுவதும் பறை சாற்றுகின்றான். 'இது கடினமான பணி' என்று எந்த சிற்பக் கலைஞனும் முன்வரவில்லை. பலமுறை பறை சாற்றியபின் ஒரே ஒரு சிற்பி முன் வந்தான். தான் வடிக்கத் தயாரென்றும், 108 தாண்டவங்களையும் அபிநயம் பிடித்துக் காட்டுவதற்கு திறமையுள்ளவர் வேண்டுமென்றும் கேட்கின்றான். யாரினால் 108 தாண்டவத்துக்கும் அபிநயம் பிடிக்க முடியுமென்று மன்னன் பலமுறை சாற்றியும் தகுந்த நபர் கிடைக்கவில்லை. சிலகாலம் சென்று, ஒரு நங்கை தான் அபிநயம் பிடித்துக் காட்டுவதாகவும், ஆனால் அது யாருக்கும் தெரியக்கூடாதென்றும் சிற்பியிடம் கூறுகிறாள். சிற்பியும், மன்னனும் ஒத்துக்கொள்ள நங்கை அபிநயம் பிடிக்க, சிற்பி வடிக்க ஆரம்பித்து 81 படிமங்களை வடித்தபின் அடுத்த படிமத்தை வடிவமைக்கும் போது நங்கையின் அழகிலே மனதைப் பறிகொடுத்தான். இதுவரை அபிநயத்தை மட்டுமே பார்த்த அவன் சிந்தனை தடுமாற, தச்சு உளி படிமத்தில் வைப்பதற்கு பதில் கையில் வைக்க கட்டைவிரல் வெட்டுண்டது. அந்த வினாடியே "இனி உளி எடுக்க மாட்டேன்" என்று சபதமிட்டதால் அந்த 81 படிமங்களுடனேயே தாண்டவம் படிம வேலை தஞ்சை பெரிய கோயில் கருவறை வளாகத்தில் இன்றும் நின்றுபோன நிலையில் உள்ளது. அது எந்த யுகத்தில் முடிவுறுமோ! தெரியவில்லை. அபிநயம் பிடித்தவள் பட்டத்தரசி என்றபோது வியப்பு மேலோங்கியது.

இவ்வாடல்கலை நுட்பம் உணர்த்திய கல்வியாளரும், ஆடலாசான்களும், திறனறிவாளரும், கலைஞர்களும் ஆகிய அனைவரும் தமிழர்களே. படைத்துக் காத்த மன்னவனும் தமிழனே. நடந்ததும் தமிழகத்தில். அனைத்தும் தமிழில் தான் படைக்கப்பட்டன. ஆனால் அனைத்தும் மறைக்கப்பட்டு இன்று இக்கரணச் சிற்பங்களுக்குத் தமிழில் பெயரில்லை. தற்போது தான் தமிழாக்க முயற்சிகள் நடந்து வருகின்றன. இதைப் பரிபூரணத் தமிழாக்கம் புரிய வேண்டுவது நமது அனைவர் கடமை. திருவருளைத் துணைபுரிய வேண்டுவோமாக!

108 கரணங்களும் சிதம்பரம் கோயில் கோபுரங்களில் செதுக்கப்பட்டுள்ளன. கும்பகோணம் சாரங்கபாணி கோயில் கோபுரத்திலும் 108 கரணங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தஞ்சையில் ஆண் சிற்பங்களாகவும், தில்லையில் பெண் சிற்பங்களாகவும் வடிவமைக்கப்பட்டுள்ளன.

# 108 தாண்டவக் கரணங்கள் / ஆடலியக்கங்கள்

| வ. எண் | தமிழ்ப்பெயர் | வடமொழிப் பெயர் | ஆடும் விதம் | படம் |
|---|---|---|---|---|
| 1. | மலரிடுகை | தாலபுஷ்பபுடம் | இடது பக்கத்து மார்பிற்கு நேராக, இரட்டைக் கை முத்திரை பிடித்து கால் நுனிகளால் சஞ்சரிப்பவராக சிறிது வணங்கிய பக்கத்தையுடையவராக நடிப்பது. இரட்டைக்கை முத்திரையோடு இடது பக்கமாக இருப்பது. |  |
| 2. | நுடங்குகை | வர்த்திதம் | இரு மணிக்கட்டுகளை வளைத்து தொடையின் பக்கத்தில் கைகளைத் தொங்கவிடுவது |  |
| 3. | நொசி குறங்கு | வலிதோருகம் | கிளி மூக்கினைப்போல் கையை மடக்கி அவற்றை உட்புறமாக இருபக்கமும் வளைத்து, தொடைகளையும் வளைத்து நிற்கும் நிலை |  |
| 4. | கிளிகை நுடக்கம் | அபவித்தகம் | சதுரகரமாக நின்று, கைகளைத் திருப்பிக் கொண்டு சமகாலத்தில் எடுத்து வைக்கப் பெற்ற சாரியைச் செய்து, கையையும் ஒற்றைக் கை முத்திரையாகச் செய்து தொடையின் மேல் வைப்பதும், இடது கையைக் கடகாமுகமாகச் செய்து மார்பின் மேல் வைப்பது. |  |
| 5. | இணைப் பறடு | சமநகம் | கால்களை நகங்கள் நேராகத் தெரியும்படி வைத்து கொடிபோலத் துவண்டு தொங்குகிற கைகளுடன், உடல் வளையா–மலும் நிமிராமலும் இயல்பாக இருப்பது |  |
| 6. | உரங்கை யொடுக்கம் | லீனம் | கழுத்தையும் தலையையும் முன்பக்கம் நீட்டி வளைக் கப்பட்ட தோள்பட்டையோடு பதாகாஞ்சலிகரத்தை மார்பின் நேரே பிடிப்பது | |
| 7. | குறுக்கிடு கையோச்சு | சுவஸ்திக ரேசிதம் | இரட்டைக்கை முத்திரைக்கரத்தை வீசியும், இடுப்பில் வைத்தும் நடிப்பது. | |

| | | | |
|---|---|---|---|
| 8. | உட்கொடு குறுக் கிடுகை | மண்டல சுவஸ்திகம் | மேல்நோக்கிய சமமான உள்ளங்கைகளைச் சுற்றி இரட்டைக்கை முத்திரையாகக் காட்டி மண்டல தானத்தில் ஆடுவது. சுவஸ்திகம் – இரட்டைக்கை முத்திரை. மண்டலம் – உடலின் நிலை. |
| 9. | தட்டுத்தாள் | நிகுட்டகம் | தோளுக்கும் தலைக்கும் இடையில் கைகளைத் தூக்கியும் தாழ்த்தியும், கால்களையும் அவ்வாறே செய்தலும், கைகளால் செய்யப்பெறும் நிகுட்டகம். |
| 10. | சாய் தட்டுத்தாள் | அர்த்த நிகுட்டகம் | கைகளைச் சிரத்தின் மேல் வைத்து, கைகளை விரலுக்கு விரல் நேராகக் குவித்து, பாதி வளைய இருப்பது. |
| 11. | சுழலரை | கடிச்சின்னம் | வண்டு போன்ற சாரியால், இருபக்கமும் சுழன்று, மண்டல தானத்தில் நின்று, தோள்பட்டையின் உச்சியில் பல்லவ முத்திரையாகக் கையை வைத்தலாம். |
| 12. | கையோச்சு | அர்த்த ரேசிதம் | வலது கையை சூசி முகமுத்திரையைக் கொண்டு ரேசிதமாக நீட்ட இடதுகை இடது காதின் அருகே இருக்க வலதுகால் குத்திட வேண்டும்.<br>சூசிமுகம் – எழிற்கை |
| 13. | மார்புக் குறுக்கீடு கை | வக்ஷஸ் வஸ்திகம் | கால்களை ஸ்வஸ்திகமாக வைத்து, கைகளையும் மார்பிற்கு மேல் ஸ்வஸ்திகமாக வைப்பது. ஸ்வஸ்திகா பாதம் – பாதங்களை மாறிச் சிறுவிரலோடு சிறுவிரல் பொருந்த வைத்தல். |
| 14. | பித்தர் நடம் | உன்மத்தம் | கால்களைத் தொட்டிபோல் வளைத்துக் கைகளையும் நன்றாக நீட்டி, மணிக்கட்டிலிருந்து முன்கையைத் தொங்கவிட்டு நடிப்பது. |
| 15. | குறுக்கிடு கைகால் | ஸ்வஸ்திகம் | கை, கால்களைச் சுவத்திகம்போல அமைத்து நடிப்பது. |
| 16. | புறக் குறுக்கீடு | பிருஷ்ட ஸ்வஸ்திகம் | முன்போலக் கைகளையும் கால்களையும், ஸ்வஸ்திக மாக அமைத்துத் திருப்பி முகத்தை மட்டும் சபைக்குக் குறுக்காக வைத்து நிற்பது. |
| 17. | சுழற் குறுக்கீடு | திக் ஸ்வஸ்திகம் | சுவத்திமாக கைகால்கள் எங்கு இருபக்கத்திலும் முன்பும் ஒன்றோடொன்று இணைந்த கையோடு செய்யப்படுமோ அது சுழற் குறுக்கீடு எனப்படும். |
| 18. | நொடிப் பெடுப்பு | அலாதகம் | அலாதபாதமாக நின்று, வலது கையை, அதன் மேல் வைத்து முழந்தாளைத் தூக்கி நின்று ஆடுவது. |

| 19. | அரை நேர்பு | கடீஸமம் | ஸ்வஸ்திக நிலையிலிருந்து பிரிந்த பாகத்துடன் கைகளை உந்திக்கு நேராக இடுப்பில் வைத்து, பக்க நோக்காகச் சாய்ந்து நின்று ஆடுவது. |
|---|---|---|---|
| 20. | அதிர வீசும் கை | ஆஷிப்த ரேசிதம் | இடது கையை மடக்கி மார்புக்கு நேராக வைத்து, வலது கையை ரேசித ஹஸ்தமாகத் தொங்கவிட்டு முழங்கால்களை மடக்கி நின்று ஆடுவது. |
| 21. | நிறைவீச்சு | விக்ஷிப் தாக்ஷிப்தகம் | வலது காலை வீசி நின்று, வலது கையை வீசி, இடது கை கால்களை முன் போல வைத்து ஆடுவது |
| 22. | குறுக்கிடு கால் | அர்த்த சுவஸ்திகம் | கால்களை சுவதிஸ்திகமாக வைத்து, வலது கையைக் கரி ஹஸ்தமாக இடுப்பில் வைத்து, இடது கையைப் பாதி ஸ்வதிஸ்மாக மார்பின் மேல் வைத்து ஆடுவது |
| 23. | மருட்கை | அஞ்சிதம் | கால்களை மாறிவைத்து, வலது உள்ளங்கால் வெளியில் தெரியும் வண்ணம் வைத்து, இடது கையைச் சூசியாக மூக்கு நுனியை நோக்கி நீட்டி வலது கையைக் குறுக்காக இடது பக்கம் நீட்டி நின்று ஆடுவது. |
| 24. | அரவச்சம் அரவக் கரணங்கள் மொத்தம் மூன்றாகும் | புஜங்கத் ராசிதம் புஜங்கம்–பாம்பு குஞ்சிதம்– பாதத்தின் விரல் நுனிகள் ஒரு சேர வளைந்திருப்பது | காலை வளைத்து உயரத்தூக்கி முக்கோண வளைவாகத் தொடையை வளைத்து, இடுப்பு முழந்தாளையும் வளைத்து நின்று ஆடுவது. அதாவது பாம்பை கண்டு அஞ்சி ஓடுவது போன்ற நிலை. வலது கையைத் தோலமுத்திரையாகவும் இடது கையைக் கடகாமுகமாகவும் வைத்துக் கொள்வது |
| 25. | முன்னக முழங்கால் (சந்தியா தாண்டவம்) | ஊத்வஜானு | வலது முழந்தாளை மார்பினளவாக உயர்த்தி அதற்கேற்ப வலது கையையும் வீசி நின்று, இடது கையை இடது தோளுக்கு நேராகக் கடகாமுகமாகப் பிடித்து நின்று ஆடுவது. |
| 26. | வளைகால் | நிகுஞ்சிதம் | தேளின் கொடுக்குப் போலக் காலை வைத்து, கையைப் பக்கத்தில் தொங்க விட்டு, இடது கையை மூக்கின் நேராகப் பிடித்து ஆடுவது. |
| 27. | மத்தளிகை | மத்தள்ளி | வலது கால் நுனியை ஊன்றி, இடது காலைக் குறுக்காக அமைத்து வலது கையைத் தொடைக்கு மேல் வைத்து, இடது கையைக் கடக முகமாக மார்பிற் சேர்த்து மத்தளக்காரன் போல நின்று ஆடுவது. |

| 28. | வீச்சு மத்தளிகை | அர்த்த மத்தள்ளி | இடது காலைக் குறுக்காக அமைத்து வலது கையைத் தொடைக்கு மேல் வைத்து, இடது கையை மட்டும் வீசி நின்று ஆடுவது. |
|---|---|---|---|
| 29. | விட்டுத் தட்டல் | ரேசித நிகுட்டிதம் | வலது கையை வீசி, வலது காலை மடக்கி, இடது கை தோல முத்திரையாகக் கொண்டு நின்று ஆடுவது. |
| 30. | பிறழ் குறங்கு | பாதாப வித்தகம் | குதிகாலைத் தூக்கிக் கால் நுனியை ஊன்றி நின்று, நாபிக்கு நேரே கைகளை அமைத்து, இரண்டாவதாகிய பாதத்தை அபவித்தகரணமாக வைத்து அதாவது தொடைகளால் சுழற்றி நடித்தல். |
| 31. | சுழலாக்கம் | வலிதம் | இடது கையைத் தொடையில் பாம்புத் தலை போல வளைத்து வைத்துச் சூசிபாதமாக செய்து, முதுகெலும்பை வளைத்துச் சுழன்று ஆடுவது. |
| 32. | சுழலகம் | கூர்ணிதம் | வலது கையைப் பக்கவாட்டாக உயர்த்தித் திருப்பி, இடது கையைத் தோலமுத்திரையாகத் தொங்கவிட்டு, ஸ்வஸ்திக நிலையில் பிரிந்தது போல், பாதத்தை வைத்து ஆடுவது. |
| 33. | மென்நடம் | லலிதம் குட்டிதம் – பாதத்தின் பின் பாகத்தை மட்டும் உயர்த்தித் தட்டுதல் | இடது துதிக்கை போலவும் வலது கை திருப்பப் பட்டதாகவும் பாதத்தால் பலமுறை தட்டி ஆடுவது. லலிதம் (அ) மென்நடம் எனப்படும். |
| 34. | கோல்நடம் | தண்டபக்ஷம் | வலது முழந்தாளை மார்புக்கு நேராக உயர்த்தி, இடது முழந்தாளைத் தாழ்த்தி, கொடி போலக் கைகளை இருமருங்கும் துவளவிட்டு நடிப்பது. (புள்ளமங்கை, திருமழபாடி) |
| 35. | அரவச்ச வீச்சு | புஜங்கத்ரஸ்த ரேசிதம் | வளைந்த காலைத் தூக்கி, கைகளை இடப்பக்கத்தில் பாம்பு போலத் தொங்க விட்டு நடிப்பது. (திருச்சின்னம்பூண்டி) |
| 36. | தண்டை யாட்டு | நூபுரம் | லதாரேசிதமாகக் கைகளை இருமருங்கும் நீட்டி, ஒரு காலை மற்றொரு காற்சிலம்பின் மேல் வைத்து நடிப்பது |

| 37. | பரிகா லசைவு | வைசாக ரேசிதம் | கைகால்களை வளைத்து, இடுப்பு, கழுத்து இவை களையும் வளைத்து சுழன்று ஆடுவது. வைசாகம் – மூன்றரையடி இடைவெளி இருக்கும்படியாகக் கால்களை வைத்துக் கடகாமுகமுத்திரைக் கையுடன் ஆடுவது. இந்த இரண்டும் சேர்ந்தமையால் இப்பெயர் பெற்றது. |
|---|---|---|---|
| 38. | வண்டாட்டு | ப்ரமரகம் | திரிக பாதத்தால் வளைந்து நின்று, இடது கையை அஞ்சிதமாக அமைத்து வலதுகையைச் சதுரமாக வைத்து நின்று ஆடுவது பிரமரகம். திரிகம் – வளைந்த காலைத் தூக்கி ஊன்றிய காலைச் சிறிது மடக்கி முழந்தாள்கள் ஸ்வஸ்திகம் போல அமையும்படி வைத்து நிற்பதாகும். |
| 39. | சதுரம் | சதுரம் | வலது காலைக் குட்டிதமாக அமைத்துச் இடது கை அஞ்சிதமாயும், வலது கை சதுரம் அமையக் கைகளை இருமருங்கும் நீட்டி நின்று ஆடுவது.<br>(திருப்பரங்குன்றம், கொடுமுடி) |
| 40. | அரவோச்சு | புஜங்காஞ்சிதகம் | கால்களைப் பாம்பு ஓடுவது போல அமைத்து, வலது கையைத் தொங்கவிட்டும் இடது கை கொடிக்கையாகவும் அமைத்துத் தாண்டவம் ஆடுவது. |
| 41. | கோலோச்சு | தண்டகரேசிதம் | கைகால்களை நான்கு புறமும் தூக்கி வீசும் நிலையில் வைத்துத் தண்டபாதசாரியால் ஆடுதல். |
| 42. | கொட்டு தேன் | விருச்சிக குட்டிதம் | தேள் கொடுக்கைப் போன்றுக் காலை அமைத்து கைகளைத் தோளின் முன் பரிசினிபோல வைத்து நின்றாடுவது. |
| 43. | இடை நோசிப்புச் சுழல் | கடிப்ராந்தம் | வளைந்த பாதத்தைத் தூக்கி முழந்தாளை மேல் நோக்கியதாகச் சிறிது உயர்த்தி நிற்பதாகிய சூசி பாதத்துடன் ஒரே காலத்தில் இடுப்பை வளைத்து ஆடுவது. |
| 44. | தேள் இயக்கம் | லதா விருச்சிகம் | இடது காலைச் சிறிது மடக்கி ஊன்றி, வலது காலைத் தேள் கொடுக்குப் போலப் பின்புறம் வளைத்து நீட்டி, இடது கையைக் கொடிபோல நீட்டித் துவளவிட்டு நின்று ஆடுவது. |
| 45. | இயங்கிடை அலபத்ம கை ஒற்றைக் கை முத்திரை | சின்னம் இடைஅசைவு முறை | வைசாக ஸ்தானத்தில், கைகளை அலபத்ம முத்திரையாகப் பிடித்து இடுப்பில் வைத்துக் கொண்டு நின்றாடுவது. வைசாகஸ்தானம் – உடலின் நிலை |

| | | | |
|---|---|---|---|
| 46. | தேள் எழுச்சு | விருச்சிக ரேசிதம் | காலைத் தேள் போல வைத்து இரு கைகளையும் ஸ்வஸ்திமாக அமைத்து, இருமருங்கும் நீட்டி நின்று ஆடுவது |
| 47. | தேளீ | விருச்சிகம் | தோள் சிரம் இவற்றிடைக் குறிக்கும் கரிஹஸ்தக் கைகளுடன் கால் பின்பக்கம் வளைந்திருக்க, தூரத்தில் வளைந்த பின்பக்கத்துடன் நின்று ஆடுவது |
| 48. | அகல்நடம் | வியம்ஸிதம் | வளைந்த வலது காலை ஐந்தடி அகற்றி வைத்து நிற்கும் ஆலீடஸ்தானத்தில் நின்று, கைகளை மார்பிற்கு நேரே மடக்கிப் பிடித்து, மேலும் கீழுமாகச் சுழன்று ஆடுவது |
| 49. | சிறகு மெட்டு | பார்ஸ்வ நிகுட்டிதம் | கைகளை ஸ்வஸ்திகமாகப் பக்கங்களில் அமைத்து நிகுட்டிதபாதமாக நின்று ஆடுவது |
| 50. | பொட்– டிடுகை | லலாட திலகம் | வலது காலை விருச்சிகபாதம் போல நெற்றிக்கு நேரே தூக்கி இடது கையால் பிடித்துக் கொண்டு நெற்றியில் பொட்டு வைப்பது. லலாடம் – நெற்றி.<br>இராசசிம்ம பல்லவனின் கற்றளிகளான இறவாதான் ஈசுவரம், பிறவாதான் ஈசுவரம், கயிலாசநாதர கோயில் ஆகிய இடங்களில் பொட்டிடும் சிற்பங்களைக் காணலாம். |
| 51. | ஒருக்களிப்பு | கிராந்தகம் | பின்பக்கம் சாய்ந்து நின்று, வளைந்த காலைத் தூக்கி முன்பக்கம் விசிறி நின்று காற்படத்தைத் தரையில் தட்டுதலாகிய அதிக்ராந்தசாரியில் நின்று, கைகளை மார்புக்கு நேராக அமைத்து நின்று ஆடுவது. |
| 52. | நொசிப்பு | குஞ்சிதம் | முதலில் வலதுகாலை வளைத்து, வலது கையையும் வளைத்து இடது காலைத் தூக்கி நிறுத்தி ஆடுவது. கைலாசநாதர் கோயில். |
| 53. | வளைப்பு | சக்ரமண்டலம் | முன்பாவது பின்பாவது கைகால் நுனிகளைப் பூமியில் ஊன்றி உடலை வளைத்து, சக்கரத்தின் வட்டம் போல இருந்து நடிப்பது |
| 54. | உரம்– பெறுகை | உரோ மண்டலம் | ஸ்வஸ்திகமாக வீசப்பட்ட பாதத்துடன், அபவித்த நிலையில் கைகளை வட்டமாக மார்பில் அமைத்து நின்று ஆடுவது |
| 55. | வீசுகால்கை | ஆக்ஷிப்தம் | ஆக்ஷிப்தசாரியாகப் பக்கவாட்டில் சிறிது சாய்ந்த கைகளால் சதுரமான கடகாமுகக் கையுடன் நின்று ஆடுவது |

| 56. | அங்கால் விளக்கம் | தலவிலாசிதம் | உயரத் தூக்கிய வலது காலுடன் பதாகக் கையையும் இருபக்கங்களிலும் தோளுக்கு மேலாக உயர்த்தி நின்று ஆடுவது |
|---|---|---|---|
| 57. | பாதத்தாள் | அர்களம் | பாதம் பின்பக்கமாக இரண்டரை தாள அளவு வித்தியாசத்தில் நீட்டப்பட வேண்டும். அதற்கேற்றவாறு கைகள் முன்னே நீட்டப்பட்டு ஆடுதல். |
| 58. | ஒருமுக நடம் | விக்ஷிப்தம் | கை கால் இரண்டையும் ஒரே பக்கமாகப் பின்னாக வாவது பக்கங்களிலாவது நீட்டி ஆடுவதாம் |
| 59. | சுழலும் நடம் | ஆவர்த்தம் | மடக்கிய காலை நீட்டி விரைவாக மீட்டும் திருப்பி, பிரயோகத்திற்கு ஏற்றாற் போலக் கைகளைத் திருப்பி ஆடுவதாம். |
| 60. | அளவாடு கால் | டோலாபாதம் | வளைந்த காலைத் தூக்கி, ஒரு பக்கத்திலிருந்து மற்றப் பக்கத்திற்குத் தொங்கவிட்டு அசைந்து நின்று ஆடுவதாம். |
| 61. | திருப்பகம் | விவ்ருத்தம் | இடது காலையும், உடலையும் சிறிது வளைத்துத் தூக்கி, கைகளை இருமருங்கும் விசிறி, பிரமரி முத்திரையாக வைத்து நிருத்தம் செய்வது. |
| 62. | இருப்புத் திருப்பு | விநிவ்ருத்தம் | சூசி ஹஸ்தமாக, வலது காலைத் தொடைப் பக்கத்தில் வளைத்து ஸ்வஸ்திகம் போல் வைத்து, மற்றொரு காலைத் திருப்பும் போது தொடை திருப்பும்படி பக்கத்தில் ஹம்ஸபட்சம் அமையச் சுற்றி ஆடுவது |
| 63. | பக்க வீச்சு | பார்ஸ்வக் ராந்தம் | காலை முன் வீசி, அதற்குத்தக கைகளையும் வீசி நின்று நடிப்பது |
| 64. | நிலைப் பின்மை | நிஸ்தம்பிதம் | வலது காலை வளைத்து, குதத்தின் சமீபமாக வைத்து உயர்த்தி, கடகா முக ஹஸ்தமாக ஒரு கையை அமைத்து, வலது கையை லலாட திலகமாகச் செய்து நடிப்பது |
| 65. | மின்னேர்பு | வித்யுத் ப்ராந்தம் | வலது காலைக் குதத்திலிருந்து நன்றாக வளைத்துப் பின்புறமாக உயர்த்தி, இடது கையை இடது காலின் இடுப்பு ஓரமாக முன்புறம் தொங்கவிட்டு, வலது கையை விசிறி நடிப்பது. |
| 66. | விரி வியக்கம் | அதிக்ராந்தம் | தன் உடலுக்கு முன்னாக அதிக்ராந்த சாரியாக நடந்து பிரயோகத்திற்குத் தக்கவாறு கைகளை அமைத்து நின்று ஆடுவது |
| 67. | முடுகாட்சி | விவர்திதகம் | கை கால்களை ஆஷிப்தமாக அமைத்து இருந்து பிரமரீதியாகத் திரும்பித் திரும்பி நடிப்பது |

| 68. | களிறாடல் | கஜக்ரீடிதகம் | வளைந்து கட்டிய இடக்கையைக் காதுக்கு நேராகப் பிடித்து வலது கையை, லதா ஹஸ்தமாக அமைத்து, டோலாபாதசாரியால் நின்று ஆடுவது. |
|---|---|---|---|
| 69. | கொட்டாடல் | தலஸம்ஸ் போடிதம் | விரைவாகக் காலைத் தூக்கி முன்னாக வைத்து, கைகளைத் தல சம்ஸ்போடிதகரமாக வைத்து நடிப்பது |
| 70. | கலுழ வியக்கம் | கருடப்லுதகம் | விருச்சிகபதமாக நின்று, லதாரேசிதகரமாக நின்று ஆடுவது |
| 71. | கன்னளி | கண்டஸூசி | சூசிபாதமாக, பக்கத்தில் வளைய நின்று ஒரு கையை மார்பில் வைத்து, மற்றொருகை கண்டத்தில் சுட்டும்படி வைத்துக் கொண்டு நின்று ஆடுவது |
| 72. | பரிப்பாடல் | பரிவ்ருத்தம் | சூசிபாதமாக மற்றொரு காலைத் திருப்பி, பதாகையாகக் கைகளை இருபக்கமும் சிரத்தில் சுட்டவைத்து ஆடுவது |
| 73. | பக்க முழங்கால் | பார்ஸ்வ ஜானு | ஒரு காலைச் சமமாக வைத்து, ஒரு காலைத் தொடையின் பின்னாக அமைத்து, முஷ்டி ஹஸ்தமாகக் கையை மார்பில் வைத்து, மற்றொரு கையைப் பக்கமாக வீசி நின்று ஆடுவது |
| 74. | கழுகியக்கம் | க்ருத்ரா வலீனகம் | இடது காலைப் பின்புறமாக வளைத்து வலது காலைத் தூக்கி முன் வைத்து, கை வீசி நின்று ஆடுவது |
| 75. | துள்ளல் கொட்டு | சன்னதம் | சூசி ஹஸ்தமாக கைகளைக் கட்டிக் கொண்டு, கால்களை வளைத்து விரல் நுனியைப் பூமியில் ஊன்றச் செய்து ஆடுவது |
| 76. | நுனை | ஸூசி | கால் நுனிகளால் நின்று, சூசி ஹஸ்தமாகக் கைகளைப் பிரயோகத்திற்குத்தக மார்பிற்கு நேராக அமைத்து ஆடுவது |
| 77. | நுனைக் குறிப்பு | அர்த்தஸூசி | வலது கையை அலபத்மமாகத் தலைக்கு நேரே பிடித்து, சூசிக்குச் சொன்னதுபோல நின்று ஆடுவது |
| 78. | நுனைப்பு | ஸூசிவித்தம் | சூசிபாதமாக நின்று, வலது கையை இடுப்பிலும், இடது கையை மார்பிலும் அமைத்து நின்று ஆடுவது |
| 79. | திரிகுறங்கு | அபக்ராந்தம் | தொடைகளை வளைத்து வளைந்த காலைத் தூக்கிப் பக்கங்களில் வளைய வைத்து, பிரயோகத்திற்குத்தக, கைகளை அமைத்து ஆடுவது |

| 80. | மயில் நடம் | மயூரலலிதம் | விருச்சிகபதம் அமைத்து, கைகளை ரேசிதமாக வைத்து பிரமரியாகவும், சுழன்றும் மயில்போல் ஆடுவது |
|---|---|---|---|
| 81. | அரவியல் | சர்பிதம் | வளைத்து வீசப்பட்ட கால்களுடன் தலையையும் சாய்த்து நின்று, அதற்குத்தக ரேசிதமாக வைத்து மாறி மாறி அவ்வாறே இருமருங்கும் ஆடுவது |
| 82. | ஓங்கு கால் | தண்டபாதம் | வலது காலைப் பின்பக்கமாகத் தூக்கி, இடது காலைத் தரையில் நுனிக்காலால் தட்டி நின்று, சிலம்பு ஒலிக்க, இடது கையை உயரத்தூக்கி, வலது கையைத் தொங்க விட்டு நின்று ஆடுவது |
| 83. | துள்ளுமான் | ஹரிணப்லுதம் | முழந்தாளை வளைத்துத் தூக்கி, கைகளைப் படத்தில் காட்டியபடி இடப்புறமாகத் தோளுக்கு நேராகத் தொங்கவிட்டு ஆடுவது |
| 84. | துள்ள லியக்கு | பிரேங்கோ லிதம் | பாதங்களை வளைய வைத்துக் கொண்டு கைகளைத் தோலாகரமாகப் பக்கத்திற்குப் பக்கம் திருப்பி, பிரமரிசாரியாகத் துள்ளிக் குதித்து ஆடுவது |
| 85. | நுசுப்பு | நிதம்பம் | மேல் நோக்கிய விரல்களையுடைய பதாக முத்திரை யோடு கூடிய கைகளால் தலை வரை கொண்டு சென்று, பின்பு திரும்பிய கைகளால் மேலிடத்து சென்று திரும்பியதாகக் கைகளை அமைத்து, சுற்றிலும் பார்க்கக்கூடியதாகப் பதாகக்கையை அமைத்து, பின்பு உடம்பை நோக்கியதாகக் கையைத் தொங்கவிட்டு நிதம்ப நிருத்தஹஸ்தத்துடன் ஆடுதல் |
| 86. | நழுவகற்சி | ஸ்கலிதம் | இடது காலைச் சமபதமாகவும், வலது காலை வளைத்தும், வலது கையை ஹம்சபட்சமாகவும், இடது கையைத் தொங்கவிட்டும் இவ்வண்ணம் மாறி மாறி நடிப்பது |
| 87. | துதிக்கை | கரிஹஸ்தம் | வலதுகால் குதியைச் சாய்த்து ஊன்றி இடதுகாலைச் சிறிது மடங்க வைத்து, லதாஹஸ்தமாக அமைத்து ஒரு கையைத் தூக்கி, ஒரு பக்கத்திலிருந்து ஒரு பக்கம் அசைத்து, பின்பு திரிபதாக முத்திரையைக் காதோரத்தில் ஒரு கையை அமைத்து நின்று ஆடுவது |
| 88. | ஊர்பு | பிரி ஸர்ப்பிதம் | ஹம்ச பட்சமாகவும், லதா ஹஸ்தமாகிய நிருத்த ஹஸ்தமாகவும், கைகளை அமைத்து, வளைந்த கைக்கு எதிராகவுள்ள காலால் மெதுமெதுவாக பூமியைத் தட்டிக் கொண்டு நடந்து வருவது |

| 89. | அரியாடல் | சிம்ஹ விக்ரீடிதம் | அலாத சாரியை முன்னர் விரைவிற்செய்து, அதனை ஒட்டி கைகளையும் வட்டமாகச் சுழற்றி ஆடுதல். இது சிங்கத்தின் கையை அடித்தல் போலிருப்பதால் இப்பெயர் பெற்றது |
|---|---|---|---|
| 90. | கோளரி | சிம்ஹாகர்சிதம் | விருச்சிகபாதமாக நின்று, வலது கையை வளைத்து ஸ்வஸ்திகமாக அமைத்து, இடது கையைப் பதாகையாகத் தொடைக்கு நேரே தொங்க விட்டு ஆடி, மீட்டும் இடது காலையும் அதற்கு ஏற்பக் கைகளையும் அமைத்து நின்று ஆடுவது |
| 91. | திருகுநடம் | உத்விருத்தம் | பாதங்களை ஊன்றி முழங்கால் இடுப்பு இவை திரும்பும்படியாக அமைத்து, கைகளையும் முறுக்கி நின்று ஆடுவது |
| 92. | சார்பியல் | உபஸ்ருதம் | வளைந்த காலைத் தூக்கி ஆட்சிப்தசாரியை அமைத்து இடது பக்கமாகத் திரும்பி, கைகளைத் திருப்புவதால் உடலை வணங்கச் செய்து கைகளையும் லதாஹஸ்தமாகத் தொங்கவிட்டு நின்று ஆடுவது |
| 93. | தட்டொட்டு | தலஸங் கட்டிதம் | கால்களைத் தோலாபாதமாக இருமருங்கும் வளைத்து வைத்து கைகளைப் பதாகை முத்திரையாகப் பிடித்து, கீழ் நோக்கி இரண்டையும் சேர்த்துப் பிடித்து நின்று, இடது கையை இடுப்பிலும் வலது கையை ஹம்ச பட்சமாகவும் பிடித்துச் சுழன்று ஆடுவது |
| 94. | தோற்றம் | ஜநிதம் | காலை இருமருங்கும் வளைய வைத்து, வலது கையை முஷ்டி ஹஸ்தமாக மார்புக்கு நேரே பிடித்து இடது கையை லதாஹஸ்தமாகத் தொங்க விடுவது |
| 95. | நெகிழாக்கம் | அவாஹித்தகம் | ஜநிதத்தைப்போல நின்று, கைகளை மார்புக்கு நேரே மடக்கி, நெற்றி மார்பு இவற்றிற்கு நேராக முறையே பிடித்து, தளிர் ஒன்றுக்கொன்று நேராக இருப்பது போலக் கைகளை அமைத்து மெதுவாக ஆடுவது |
| 96. | உருக்காட்சி | நிவேசம் | கைகளை மார்புக்கு நேராகப் பிடித்து, மார்பைத் தாழ்த்தி, மண்டல ஸ்தானமாக நின்று ஆடுவது |
| 97. | மறியாடல் | ஏலகாக்ரீடிதம் | வளைந்த, வணங்கிய உடலமைப்போடு தல சஞ்சார பாதங்களால் தூக்கி அசைத்து, துள்ளி விழுவது |
| 98. | குறங்காட்சி | ஊருத்வ்ருத்தம் | வலது கையைச் சிறிது திருப்பித் தொடையில் வைத்துக் கொண்டு முழங்காலை வளைத்துச் சிறிது தூக்கி ஆடுவது |

| 99. | மயக்கு | மதஸ்கலிதம் | கைகளைத் தோலகஹஸ்தமாகவும் சிரத்தைச் சிறிது வளைத்தும் கால்கள் இரண்டையும் வளைய வைத்தும் ஆடுவது |
|---|---|---|---|
| 100. | மாலடி | விஷ்ணு க்ராந்தம் | கால்களை முன்னர் வீசியும் ஆகாயத்தை நோக்கி வளைத்தும் கைகளை ரேசிதமாகவும் அமைத்து நின்று ஆடுவது |
| 101. | கலப்பகம் | ஸம்ப்ராந்தம் | கைகளை மடக்கி இடுப்புக்கு நேராக வைத்துக் கொண்டு தொடைகளையும் அவ்வாறே வளைய வைத்து நின்று ஆடுவது |
| 102. | நிலைப்பு | விஷ்கம்பம் | அபவித்த கரமும் நிகுட்டிதபாதமும் அமைய இடது கையை மார்பில் வைத்துக் கொண்டு நின்று ஆடுவது |
| 103. | அடியொட் டாடல் | உத்கட்டிதம் | பாதங்களைச் சதுரம் பட வளைத்து, முன் காலால் நின்றும் கைகளைத் தலசங்ககட்டிதமாக வைத்தும் பக்கத்தைச் சிறிது வணக்கி நின்றும் ஆடுவது |
| 104. | காளை யாட்டு | வ்ருஷ்பக்ரீடிதம் | கைகளை அலாதகஹஸ்தமாகச் செய்து கால்களை வளைத்து நின்று ஆடுவது |
| 105. | எழிற்சுழல் | லோலிதம் | கைகளை மார்புக்கு நேராக மலர்ந்த தாமரை போல் அமைத்து கால்களை ஸ்வஸ்திகமாக வைத்து, சிறிது சாய்ந்த முகத்தோடு ஆடுவது |
| 106. | அரவெழுச்சி | நாகா பஸர்ப்பிதம் | கைகளில் வலது கையை மார்புக்கு நேராக வைத்து, இடது கையைச் செவிக்கு நேராக வைத்து, வலது காலை முழங்கால் வரையில் மடக்கி, இடது காலைப் பின்புறமாகக் கழுத்து வரையில் தூக்கி, பாம்பு அசைவது போல அசைந்து ஆடுவது |
| 107. | உருளி | ஸகடாஸ்யம் | கால், கை, உடல் ஆகியவற்றை வண்டிச் சக்கரம் போல அமைத்து முகத்தைத் திரிபதாகை போல் அமைத்து நடிப்பது |
| 108. | பூவரு கங்கை | கங்கா வதரணம் | ஆகாயத்திலிருந்து கங்கை கீழே இறங்குவது போல இரு கைகளையும் பூமியில் ஊன்றி, உடலைப் பின்புறமாக வளைத்து, கால்களை இடுப்பு வரை நேரே தூக்கி ஆடுதல் |

## திருக்கூத்து நடந்த இடங்கள்

| எண் | ஊர் | சபை | தாண்டவம் | செயல் | காட்சி கண்டவர்கள் |
|---|---|---|---|---|---|
| 1. | திருநெல்வேலி | தாமிரசபை | காளிகா தாண்டவம், முனி தாண்டவம் | படைத்தல் | உமாதேவி |
| 2. | திருப்பத்தூர் | சித்சபை | கெளரி தாண்டவம் | காத்தல் | |
| 3. | மதுரை | இரஜத சபை (வெள்ளியம் பலம்) | சந்தியா தாண்டவம் | ஒடுக்குதல் | இராஜசேகர பாண்டியன் |
| 4. | எல்லா உலகங்களிலும் | நள்ளிருள் | சங்கார தாண்டவம் | முழு ஒடுக்கம் | |
| 5. | திருக்குற்றாலம் | சித்திர சபை | திரிபுரா தாண்டவம் | மறைத்தல் | வாசுகி (எ) நாகராஜன் |
| 6. | திருவாலங்காடு | இரத்தின சபை | ஊர்த்துவ தாண்டவம் | அருளல் | காளி, கார்க் கோடகன் |
| 7. | தில்லை | கனகசபை | ஆனந்தத் தாண்டவம் | ஐந்தொழில் | வியாக்கிரபாதர், பதஞ்சலி |
| 8. | பேரூர் | | | | காலவமுனி, கோ, பட்டிமுனி, காமதேனு |
| 9. | தாருகாவனம் | | | | முனிவர்கள் |

மத்தியந்தன முனிவரின் மகனும், உபமன்னியு முனிவரின் தந்தையாருமான வியாக்கிரபாதர், திருமாலின் பஞ்சணையாக இருந்த பதஞ்சலி எனப்படும் ஆதிசேடன் ஆகிய இருவரின் தவ வலிமையால் பூலோகத்தில் தில்லையில் முதன்முதலாக நம்மைப் போன்ற உயிர்களின் உய்திக்காக நடனக்காட்சியை சுவாமி அருளுகிறார்.

சிவபெருமான் ஒருவரே ஐந்தொழில்களையும் செய்கிறார் என்பதைக் காட்சியளவில் எல்லோரும் காணும்படியாக, உணரும்படியாக விளங்குவது நடராசப்பெருமான் திருமேனியாகும்.

தோற்றம் துடியதனில் தோயுந்திதி யமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தே உற்ற திரோத முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு – உண்மை விளக்கம்

**ஐந்தொழில் நடனம்**

| | |
|---|---|
| படைத்தல் | – துடி என்ற உடுக்கை ஏந்திய கரம் |
| காத்தல் | – அபயகரம் |
| ஒடுக்குதல் | – நெருப்பேந்திய கரம் |
| மறைத்தல் | – முயலகனை மிதித்த திருவடி |
| அருளல் | – தூக்கிய திருவடி |

கயிலை வீட்டின்பம் நுகருமிடம். எனவே ஐந்தொழில்களில் ஒன்றான அருளல் மட்டும் சிறப்பாக நடைபெறும். ஆனால் தில்லையில் ஐந்தொழில்களுக்குமுரிய ஐந்தொழில் நடனம் நடைபெறுகிறது.

**ஐந்தெழுத்து நடனம்**

**தூல பஞ்சாக்கர நடனம் (உலகியலில் ஆன்மாக்களைச் செலுத்துவது) (ஊன நடனம்)**

ஆடும்படி கேள்நல் அம்பலத்தா னையனே
நாடும் திருவடியி லேநகரம் கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகரு முகம் வாமுடியப்பார்

(நமசிவாய) திருவடியிலே நகரமாகவும், உந்தியிலே மகரமாகவும், தோளிலே சிகரம், முகத்தில் வகாரமாகவும், திருமுடியிலே யகரமாகவும் கொண்டருளித் திருநடனம் செய்தல். பாதாதிகேச தியானம்.

**சூக்கும பஞ்சாக்கர நடனம் (ஆன்மாக்களை அருளியியலில் செலுத்துவது) (ஞான நடனம்)**

சேர்க்குந் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் பார்க்கிலிறைக்கு
அங்கி நகரம் அடிக்கீழ் முயல கனார்
தங்கும் மகரமது தான்

| | |
|---|---|
| டமருகம் | – சிகரம் |
| வீசிய திருக்கரம் | – வகரம் |
| அமைந்த அபயகரம் | – யகரம் |
| அக்கினி ஏந்திய கரம் | – நகரம் |
| முயலகனை மிதித்த பாதம் | – மகரம் |

சிவயநம ஆகக்கொண்டு செய்யும் நடனம் சூக்கும பஞ்சாக்கர நடனம் எனப்படும்.

இவ்வாறு உயிர்கள் நலன் கருதி இந்த அமைப்பில் திருக்கூத்தாடும் தெய்வம் வேறு கிடையாது. அதனால் சிவபெருமான் ஒருவரே முழுமுதற்கடவுள் என்பதை நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும்.

சிவபூசையால் எதையும் சாதிக்கலாம் என்று நிரூபித்தவர் புலிக்கால் முனிவர் எனப்படும் வியாக்கிரபாதர். தினசரி மலர் அர்ச்சனைக்காக வண்டுகள், தேனீக்கள் ஊறாத மிகச் சுத்தமான மலர்கள் பறிக்க வேண்டுமென்பதற்காக புலிக்காலும், கையும், நகங்கள் தோறும் கண்களும் வேண்டிப் பெற்றவர். அவ்வாறு புலியின் அவயங்களைப் பெற்றதால் புலிக்கால் முனிவர் எனப்பட்டார். அவர் வழிபட்டதால் புலியூர் என்ற பெயர் உண்டாயிற்று. புலி – வடமொழியில் – வியாக்கிரம். புலிக்கால் முனிவர் வடமொழியில் வியாக்கிர பாதரானார்.

திருமால் தாருகவனத்தில் தாம் ஆனந்த நடனம் கண்டு பிறந்த பயன் அடைந்த செய்தியை படுக்கையாக இருந்த ஆதிசேடனாம் பாம்புக்குத் தெரிவிக்க, அதுவும் அந்த நடனத்தைப் பார்க்க பதஞ்சலி என்ற பெயரில் கடுந்தவம் செய்தது. நடனக் காட்சி கிடைக்காததால் தன்னுடைய சிரத்தை அறுத்து வேள்வியிலிட்ட செயலைக் கண்டு சுவாமி எழுந்தருளுகிறார்.

தில்லைக்கு வரும்படியும், இருவருக்கும் தை மாதம் முழு மதியன்று, பூச நட்சத்திரத்தில், வியாழக்கிழமை மதியம் காட்சி என்றும் காணும் நேரம் (அப்பாயிண்ட்மெண்ட்) கொடுத்து ஆசி வழங்குகிறார். நம்மைவிட ஒரு சிலபடிகள் உயர்ந்த மனிதர்களிடமே நம்மால் "காணும் நேரம்" காணக்கிடைக்காத நிலையில் ஆயிரம் படிகள் உயர்ந்த சர்வலோக நாயகனிடமே காணும் நேரம் பெற்ற அவர்கள் தவவலிமையை எப்படிப் போற்றுவது ? நாமெல்லாம் எப்போது அந்த நிலைக்கு உயர்வது ?

> "விரிகனல் வேள்விதன்னில் வியன்றவை அரிந்துவீட்டி
> பொருவருந் தவத்தையாற்றும் பதஞ்சலி புலிக்காலண்ணல்
> இருவரு முணரவாற் கான எல்லையில் அருளால் ஈசன்
> திருநட வியற்கை காட்டும் தில்லை மூதூரைக் கண்டான்" என்று.

முருகப்பெருமான் தில்லையைக் கண்ட காட்சியை கச்சியப்ப சிவாசாரியார் கந்தபுராணம் வழிநடைப் பயணத்தில் பதிவு செய்கிறார்.

''பதஞ்சலிக்கு அருளிய பரமநாடக'' என்று மாணிக்கவாசக சுவாமிகள் பாடி மகிழ்கிறார்.

> பாம்பும் புலியுமெய்ப்பாடுபட்டுத் தேடிப் பார்த்துப் பயிரிட்டது
> பாரளந்த திரு மாயனும் வேதனும் பார்த்துக் களித்த துண்டு
> பார்ப்பதி யென்றொரு சீமாட்டியதில் பாதியைத் தின்றதுண்டு இன்னும்
> பாதியிருக்கும் நந்தா நீபோய் பாரென்று உத்தாரம் தாருமையே

என்று நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் கோபாலகிருஷ்ண பாரதியார் பாடுகிறார்.

### "பதஞ்சலி" பெயர்க்காரணம்

அனைத்துலக உயிர்களுக்காக சந்திரனை அளித்த அத்திரி முனிவரும், அனுசுயையும் ஆதிசேடனை மகனாகப் பெறத் தவம் புரிந்தார்கள். திருமால் உத்தரவுப்படி ஆதிசேடன் யோனிவாய்ப் பிறக்க அஞ்சி அனுசுயை நீராடி அஞ்சலி செய்யும்போது அவள் கையினின்றும் ஐந்தலை அரவனாகத் தோன்றினார். அனுசுயை அஞ்சிக் கைவிட பதஞ்சலி என்ற திருநாமம் பெற்றார். இரண்டு கைகளையும் சேர்த்துக் கூப்பின் அஞ்சலி எனப்படும். அஞ்சலியினின்றும் விழுந்தவர் பதஞ்சலி. அவர் பெயரில் – பதஞ்சலி பூசா சூத்திரப்படி, வைதிக பூசைகளும், வியாக்கிரபாதர் மலர் அர்ச்சனை விதிப்படி தில்லைக் கூத்தனுக்குத் தினசரி பூசைகளும் நடைபெறுகின்றன.

### நடனக்காட்சி – இடத்தகுதி – ஆட்தகுதி

தாருகாவனத்தில் சுவாமி அதிக நேரம் ஆடவில்லை. அந்தவனம் தாங்காது அசைந்தது கண்டு உடனே நிறுத்திவிட்டார். திருக்கூத்தினைத் தாங்கவல்லது தில்லைவனமே. உடம்புள் இடைநாடி இடது நாசியிலும், பிங்கலைநாடி வலது நாசியிலும், சுழுமுனை நாடி நடுவிலும் இயங்குவது போலப் பூவுலகிலும் இடைநாடி இலங்கைக்கு நேராகவும், பிங்கலைநாடி இமயத்திற்கு நேராகவும், சுழுமுனைநாடி அவ்விரண்டிற்கும் நடுவே தில்லைவனத்திலும் ஓடுகின்ற திருமூல லிங்கத்திற்குத் தென்புறத்தில் மறைகளும் காணாத மன்று ஒன்று உண்டு. அங்கே காட்சி காண பதஞ்சலியை வரச்சொல்கிறார். ஞானக் கண்ணும், தவவலிமையால் பெற்ற கருவி கரணங்களையும் பெற்றவர்களே காண்பார்கள். கண்டவர் பிறக்கமாட்டார். காணாதவர் பிறப்பர். சாதாரண சூரியனையே பார்க்கமுடியாத போது இந்த ஊனக்கண் கொண்டு கூத்தை எப்படிப் பார்ப்பது? பூசையில் தவவலிமையால் நம்முடைய ஊனக் கண்களை ஞானக் கண்களாக மாற்றுவோமாக!

தில்லையில் வியாக்கிரபாதர் பூசித்த சிவலிங்கம் புலீச்சரத்திலும், பதஞ்சலி பூசித்த இலிங்கம் அனந்தீச்சரத்திலும் தற்போதுள்ளன.

ஆங்கிட மாக நாளும் அமர்ந் தனந்தீச் சுரத்துந்
தீங்கிலவண் புலீச் சுரத்தும் திகழ்சீர் மூலத்தானத்து
மோங்கிய நாதன் பாதமுறவுற வணங்கி யாட
லீங்களித் தருளு கென்றங் கிருவரு மிருந்தா ரன்றே.

– நடராசச் சருக்கம் – கோயிற்புராணம்

### ஞானக்கண் பெற்று நடனங் காணுதல்

பதஞ்சலியாகிய அனந்தரும் அங்குள்ள திருமூல நாதரையும் புலீச்சரத்தையும் வணங்கி, அதன் மேல்பால் சென்று, அவ்விடமுள்ள குளத்தில் மூழ்கி, வடபால் ஒரு லிங்கம் தாபித்துப் பூசித்து, பர்ணசாலை அமைத்துக் கொண்டு இரு முனிவர்களும் அளவிலா நாள் ஆனந்த தாண்டவத்தைக்

காண ஆசையோடு இருந்தார்கள். வியாக்கிரபாதர் பூசித்த தலம் வியாக்கிரபுரம், புலீச்சரமென்று விளங்குகிறது. ஆதிசேடராகிய அனந்தர் பூசித்த தலம் அனந்தீச்சரமென்று விளங்குகிறது.

பரமேசுவரன் அருளிச் செய்தபடியே தைமாதத்தில் வியாழக்கிழமை பூசநட்சத்திரம் உச்சிவேளையில் மூவாயிரம் அந்தணர்கள் தோத்திரம் செய்ய ''பிரணவப் பொருள் வந்தான்''; ''தேவ தேவன் வந்தான்''; ''பிரம விஷ்ணுக்களுடைய தலைவன் வந்தான்'' என்ற ஒலி கேட்டது. அவ்வேளையில் ஆயிரம் வாய்களிலும் ஆயிரம் சங்குகளை வைத்துப் பானுகம்பன் ஓமென்று ஊதினான்; ஆயிரந்தோள்களையுடைய வாணாசுரன் குடமுழா என்ற வாத்தியத்தைத் தொம்மென்று முழக்கினான். பஞ்சதுந்துபி என்ற வாத்தியம் முழங்கின; வேதங்கள் முழங்கின. கந்தருவர் கானவிசை இசைத்தார்கள். சிலம்பொலி ஒலித்தது. தேவர்கள் பூ மழை பொழிந்தார்கள். இவ்வகையான மிகழ்ச்சியான நிகழ்ச்சியைக் கண்டார்கள். செவியால் கேட்டார்கள். புண்ணிய முனிவர்களான பதஞ்சலி, வியாக்கிரபாதர் இருவரும் மிகுந்த தாகமுடையவர் தண்ணீர் ஓசையைக் கேட்டது போல, அளவில்லாத ஆர்வம் கொண்டார்கள்; மோகமுற்றார், தாகமுற்றார், வேகமுற்றார், தொழுதார், அழுதார், போற்றி போற்றியென்று வாயாரத் தோத்திரம் பண்ணினார்கள். அளவில்லாத காதலுடைய ஞானக்கண்ணைத் தந்தருள, அஞ்ஞானம் நீங்க, மெய்ஞ்ஞானம் ஓங்க, இன்ன வண்ணமென்று அறியாத ஆனந்தமெய்த ஒளிமயமான ஞானமன்றில் சிவகாமவல்லியுடன் நின்று ஆடுகின்ற ஆனந்தத்தாண்டவத்தை, இரண்டு முனிவர்களும், இந்து வாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில், தனிப் பெருங்கூத்தின் வந்த பேரின்ப வெள்ளத்தில் மூழ்கி மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தனர்.

## அற்புதக் கூத்து

**முயலகன் முதுகில் ஊன்றிய திருவடியும், குஞ்சிதபாதமாகிய தூக்கிய திருவடியும், சிலம்பும், கழலும், பேரொளியும், அழகிய தொடையும், அரையில் புலித்தோலும், கச்சும், உதரபந்தனமும், திருமார்பில் பூணூலும், வீசிய திருக்கரமும், அபய கரமும், உடுக்கையேந்திய வலது திருக்கரமும், அக்னியேந்திய இடது திருக்கரமும், திரண்ட தோள்களும், இடது திருச்செவியில் தோடும், வலது திருச் செவியில் குழையும், குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும், திருமுக மலரும், சிவகாம வல்லியை நோக்கிய திருக்கண்களும், திருநெற்றியும், பின்தாழ்சடையும், அதில் பாம்பும், திருமுடியில் சந்திரனும், கங்கையும், பாம்பும் விளங்க, மார்பில் கொன்றை மாலை மணம் வீசவும், பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும் விளங்க நின்று ஆனந்தத் தாண்டவம் செய்தருளினார்.**

**வாமபாகத்தில் மலர் நிறைந்த கரிய நிறமுடைய அளகபாரமும், அழகிய நுதலும், திலகமும், வில்போன்ற இரு புருவமும், வேல் போன்ற விழிகளும், அழகிய திருச்செவியும், குமிழ மலர்போல நாசியும், சிவந்த இதழும், முத்த நகையும், பசிய நிறமும், பூங்கமுகு போன்ற கழுத்தில் அழகு பொருந்திய திருமாங்கல்யமும், பசிய மூங்கிலையொத்த தோளும், தாமரை யொத்த வலதுத்திருக்கரத்தில் செங்கழுநீர் மலரும், தொங்க விட்ட இடது திருக்கரமும், கோங்கின்**

அரும்பைப் பழித்த தனபாரங்களும், மார்பில் மணம் நிறைந்த மாலையும், ரத்னாபரணங்களும், உடுக்கை போன்ற இடையும், செம்பட்டுடையும், சிறிது சாய்ந்த நிலையும், சிவந்த தாமரை போன்ற திருவடியில் ஆடகப்பாடகமும், சிலம்பும் பொருந்திய அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லியாகிய சிவகாமசுந்தரி கண்டு ஆனந்திக்க திருநடனம் புரிந்தருளினார்.

இப்படி ஒப்பில்லாத ஆனந்தத்தாண்டவக்காட்சியை, உலகமக்கள் காணும்படியாகப் பேருபகாரம் செய்தவர்கள் பதஞ்சலி, வியாக்கிரபாதராகிய இரண்டு அருள் முனிவர்கள். இவ்வரலாற்றைப் பாலுந்தேனும் கலந்தாற்போல, சொல்லும் பொருளும் சுவை மிகப் பாடிக் கோயிற் புராணமென்ற நூலாக நமக்கு உபகாரம் செய்தவர் சந்தானக் குரவருள் நான்காவது மூர்த்தியாய் விளங்கும் உமாபதி சிவாசாரிய சுவாமிகள்.

பரமேசுவரன் ஆடியபோது பூதங்கள் ஆடின. புவனங்கள் ஆடின. வேதாகமங்கள் ஆடின. கீதங்கள் ஆடின. ஏழண்டங்கள் ஆடின. பிரம விட்டுணுக்கள், கின்னரர், கிம்புருடர் அரம்பையர் ஆடினார்.

வேதங்க ளாட மிகுமா கமமாட
கீதங்க ளாட கிளரண்ட மேழாட
பூதங்க ளாட புவன முழுதாட
நாதங்கொண் டாடினான் ஞானானந்தக் கூத்தே.

– திருமந்திரம்

### திருமூலர் வகைப்படுத்தும் கூத்துக்கள்

திருமந்திரத்தில் ஒன்பதாம் தந்திரத்தில் 2722ஆம் பாடல் முதலாக 2803ம் பாடல் வரை 82 பாடல்களில் ஆனந்தத் தாண்டவத்தைத் திருக்கூத்து தரிசனம் என்று பாடுகிறார்.

கூத்து ஐந்து வகையாக உள்ளது.

1. சிவானந்தக் கூத்து – எல்லாமே ஆனந்தமயம்
2. சுந்தரக்கூத்து – ஒடுக்கநிலை நோக்கி நடைபெறும் கூத்து
3. பொற்பதிக் கூத்து – போகக்கூத்து
4. பொற்றில்லைக் கூத்து – ஊனநடனம், கீழ்நோக்கிய கூத்து
5. அற்புதக் கூத்து – ஞான நடனம், மேல்நோக்கிய கூத்து

இலயம் அல்லது ஒடுக்கக்கூத்து மேலும் பலவகைப்படும்.

கொடுகொட்டி பாண்டரங் கோடுசங் கார
நடமெட்டோ டை ந்தாறு நாடியுள் நாடுந்
திடமுற் றெழுந்த தேவ தாருவனத் தில்லை
வடமுற்ற மாவன மன்னவன் தானே. – திருமூலர்

| | | |
|---|---|---|
| கொடுகொட்டி | – | எல்லாவற்றையும் ஒடுக்கியபின் ஆடும் கூத்து |
| பாண்டரங்கம் | – | முப்புரதகன காரியத்துக்குப்பின் ஆடிய கூத்து |
| கோடு | – | பிரமன் தலையைக் கொய்து அந்தக் கபாலத்தைக் கையில் கொண்டு ஆடியது. தற்போத ஒடுக்கம் |
| சங்காரம் | – | நாள்தோறும் ஓய்வு பொருட்டாக ஆன்மாக்கள் இளைப்பாற தூக்கமாகிய ஒடுக்கத்தில் ஒடுக்குவது |
| நடம் எட்டு | – | அட்ட மூர்த்திகளில் ஆடும் கூத்து |
| ஐந்து | – | ஐந்தொழில் கூத்து |
| நாடியுள் நாடு ஆறு | – | ஆறு ஆதாரங்களில் ஆடும் கூத்து |

பரம ஞானிகளுக்கு எங்கும் சிதம்பரமாக இருக்கும். "பரஞானத்தார் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்" – சிவஞான சித்தியார்.

### திருக்கூத்தின் சிறப்பு

பிரம்ம விட்டுணுக்கள் தேடிக்காண முடியாத கற்பனை கடந்த சோதியாயுள்ள சிவபெருமானை நிலவுலகில் உருவமாக எல்லோரும் வழிபடப் பேருபகாரம் செய்தவர்கள் புலியும் பாம்புமாவர். "நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை" என்ற ஔவையார் வாக்கு நிரூபணமானது.

திருவாரூரில் பிறக்க முத்தி. காசியில் இறக்க முத்தி. இந்த இரண்டும் நம் கையில் இல்லை. ஆனால் சிதம்பர தரிசனம் கண்டவுடன் பேரானந்தம் பின்பு முத்தி.

பிறந்தில மாரூர் தன்னிற் பேசிய காசிமேவி
யிறந்தில மிரண்டு முத்தியின்பமு பின்பதாநா
முறைந்திடு தில்லைஞான யோகமார் தானமா மாற்
செறிந்தடி காணச்சீவன் முத்தராய்த் திரியலாமே. – கோயிற்புராணம்

அடியார் பெருமக்கள் எப்படியெல்லாம் திருக்கூத்தை அனுபவித்தார்கள்?

சாட எடுத்தது தக்கன்றன் வேள்வியில் சந்திரனை
வீட எடுத்தது காலனை நாரணன் நான்முகனும்
தேட எடுத்தது தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம்
ஆட எடுத்திட்ட பாதமன்றோ நம்மைஆட் கொண்டதே. – அப்பர்

எடுத்த திருப்பாதம் சந்திரனைச் சாட எடுத்தது. எமனை உதைக்க எடுத்தது.

நாரணன், நான்முகன் இருவரும் தேட எடுத்தது. அடியோங்களாகிய நம்மை ஆண்டு கொள்ள எடுத்தது.

பெருமானது ஆனந்தத் தாண்டவக் காட்சியை, சுந்தரர் தரிசித்த நிலை பற்றி சேக்கிழார், பின்வரும் பாடலில் குறித்தருளியுள்ளார்.

ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும் திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடுமா னந்த வெல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்

– ( பெரியபுராணம் – தடுத்தாட் கொண்ட புராணம் – 106)

நம்பியாரூரர் தில்லைக்கூத்தனைத் தரிசித்தபோது மெய், வாய், மூக்கு, செவி என்ற நான்கு பொறிகளும் செயல்படவில்லை. கண் மட்டும் செயல்பட்டது. அந்தக் கரணங்கள் எனப்படும் உட்கருவிகள் 4. மனம் பொருட்களைப் பற்றும். புத்தி ஆராயும். சித்தம் சிந்தித்து உணரும். அகங்காரம் எழுச்சியுறும். சுந்தரரின் தில்லைக் கூத்தன் தரிசனத்தில் மனம், புத்தி, அகங்காரம் மூன்றும் செயல்படவில்லை. இராட்சசம் (வன்மை), தாமசம் (சோம்பல்), சாத்துவிகம் (அறிவுத்தெளிவு) என்ற முக்குணங்களில் சாத்துவிகம் மட்டும் செயல்பட்டது. தில்லைக்கூத்தனை வழிபடும்போது நாமும் இந்நிலைக்குச் செல்ல முயல்வோமாக!

வாயொன்று சொல்ல மனமொன்று சிந்திக்கச் செய்யும் வழிபாடு பயன்தராது.

**திருக்கூத்துக்கண்ட மெய்ஞ்ஞானிகள் நிலை**

புளியைக் கண்டவர்களுக்கு நாவில் நீர் உண்டாகும்.

திருக்கூத்தைக் கண்டவர்களுக்கு கண்ணில் நீர் உண்டாகும். உள்ளத்தில் அமுதம் ஊறும். விண்ணோடும், மண்ணோடும் சிவகதி பெறுவரென்று திருமூலர் பதிவு செய்கிறார்.

புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற்
களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
துளிக்கும் அருட்கண்ணீர் சோர் நெஞ்சுருக்கும்
ஒளிக்குளா னந்தத் தமுதூறும் உள்ளத்தே.

– திருமந்திரம் அற்புதக்கூத்து – 17

காரைக்காலம்மையார் ஆடுகின்ற திருவடிக் கீழிருந்து பாடும்பேறு பெற்றதை நாமெல்லாம் அறிவோம்.

### சிலம்பொலி கேட்கத் தகுதி

சிவஞானம் பெற்ற, பெறத் தகுதியுள்ள சிவயோகிகளுக்குச் சிலம்பொலி கேட்கும். பகைவர்களை வென்று அரண்மனைக்குச் செல்லும் அரச குமாரனை மங்கல வாத்தியங்களுடன் வரவேற்பது போல **கருவி கரணங்களாகிய பொறிபுலன்களை வென்று சிவ இராசதானிக்குச் செல்கின்ற சிவகுமாரர்களுக்கு பரநாத ஒலியாகிய சிலம்பொலி கேட்பித்து அழைத்து அருள்வார்.** சேரமான் பெருமாள் நாயனாரும், மணிவாசகப் பெருந்தகையும் சிலம்பொலி கேட்டதற்கு ஆதாரங்கள் திருமுறைகளில் உள்ளன.

### பால் நினைந்தூட்டும் தாய்

தாய்ப்பாலையே உணவாகக் கொண்டு வளரும் கைக்குழந்தைக்கு நோய் வந்தால் அந்நோய் தீர்க்கும் மருந்தினை பிள்ளைக்குக் கொடுப்பதில்லை. மருந்தின் வேகத்தை குழந்தையின் மென்மையான குடல் தாங்காதென்று கருதிக் குழந்தையின் நோய் தீர்க்கும் மருந்தினைத் தானேயுட்கொண்டு அதன் பயனைத் தாய்ப்பால் வழியாகக் குழந்தைகள் பெற்று நோய் நீங்க உதவுவது பால் நினைந்தூட்டும் தாயின் செயலாகும். **அதுபோலவே உலக அன்னையாகிய சிவகாமியும் நம்மனோரின் பிறவி நோய் நம்மைவிட்டு நீங்குமாறு இறைவன் திருக்கூத்தினை தாம் இடைவிடாது கண்டு அதன் பயனை நமக்கு அளித்தருள்கின்றார் என்பது அருளாளர்கள் கண்டுணர்ந்த அனுபவ உண்மையாகும்.** கூத்தைக் காண்பதற்கும் ஒரு தகுதி வேண்டும். அதுவரும் வரை நமக்குக் காட்டமாட்டார். காட்டினாலும் பார்க்க முடியாது. சூரியனையே பார்க்க முடியாத இந்த ஊனக்கண்ணால், எப்படி ஞானமே வடிவானவனை உடனே பார்க்க முடியும்? எனவே அம்மை கண்டு நமக்குக் காட்டுகிறார். இறைவனது திருக்கூத்தின் பயனை உயிர்கள் பெற உதவும் சிவகாமசுந்தரிக்கு தில்லைப் பெருங்கோயில் சிவகங்கைத் தீர்த்தத்தின் மேல்கரையில் தனிக்கோயில் அமைத்து அனைத்து வழிபாடுகளும் நடைபெறுகின்றன. நாமும் வழிபட்டு உய்வோமாக!

### தாண்டவ வகை

தாண்டவங்கள் பல வகைகளில் வகுக்கப்பட்டுள்ளன. 108–64–7 என்று பலதரமாக நூல்களில் கூறப்படுகின்றன. சிறப்பாகக் கூறப்படுவன ஏழுதாண்டவங்கள்.

1. **காளிகா தாண்டவம் –** படைத்தல் தொழிலைக் குறிப்பது. இதற்கு முனி தாண்டவம் என்ற பெயருமுண்டு. காளிகா தாண்டவம் வேறு, காளி தாண்டவம் வேறு. காளிதாண்டவம் அருள்தல் தொழிலைச் செய்யும். திருநல்லூர், களக்காட்டுக் கோயில்களில் இத்தாண்டவக் கருத்தை விளக்கும் சிற்பங்கள் உள்ளன.

2. **சந்தியா தாண்டவம் –** காத்தல். இதற்கு இலக்குமி தாண்டவம், ரட்சா தாண்டவம், புஜங்கலளிதம் என்ற பெயர்களும் உண்டு. மாலைச் சந்தியில் ஆடிய பிரதோச நடனம்.

காப்பதால் ரட்சா தாண்டவம். வாசுகி, கார்க்கோடன் என்னும் பாம்பரசர்கள் தவக்கிடந்து வேண்டிக்கொள்ள அவர்களுக்கு இரங்கி சுவாமி பாம்புகளைத் தம் உடலிலும், கையிலும் ஏந்திக்கொண்டு அவை மகிழ்ச்சியுற ஆடினார். எனவே இத்தாண்டகத்தில் பாம்பு முக்கிய இடம் பெறுகிறது. உயிர்கள் செய்த நல்வினைக்கேற்ப இன்பத்தைக் கொடுத்துக் காத்தல், இன்பக் காத்தல்.

3. **கௌரி தாண்டவம் –** துன்பக் காத்தல் – உயிர்கள் செய்த தீவினைக்கேற்பத் துன்பத்தைக் கொடுத்துக் காத்தல் கௌரி தாண்டவம் எனப்படும். இது புஜங்கத் திராசம் என்றும் சொல்லப்படும். பாம்பை ஏந்தி அதை அச்சுறுத்தி ஆடும் தாண்டவம்.

4. **சங்கார தாண்டவம் –** வினை நுகர்வுக்குப்பின் ஒடுக்குதல் தொழிலைக் குறிப்பது.

5. **திரிபுர தாண்டவம் –** மறைத்தல் தொழிலைக் குறிப்பது. முப்புரமெரித்தது மும்மல காரியம்.

6. **ஊர்த்துவ தாண்டவம் –** அருள்தல் தொழிலைக் குறிப்பது. இதற்கு காளி தாண்டவம் என்ற பெயருமுண்டு.

   காளியுடன் ஆடியபடியால் காளி தாண்டவமென்றும்
   மிக வேகமாகச் சுழன்று ஆடுவதாகையால் சண்டதாண்டவமென்றும்
   ஒருகாலைத் தலை வரையில் தூக்கி ஆடுவதாகையால் ஊர்த்துவ தாண்டவமென்றும்
   வீடுபேறாகிய அனுக்கிரகம் செய்வதால் அருள்நட்டம் அல்லது அனுக்கிரக தாண்டவமென்றும் பெயர்கள்.

   "ஆடினார் பெருங்கூத்து காளி காண" என்று நாவரசர் கூறியபடியால் இதற்கு பெருங்கூத்து என்றும் பெயருமுண்டு. செயற்கரிய திருநடம் என்று நாவரசரே கூறுகிறார். தொண்டை நாட்டுத் திருவாலங்காட்டிலே இது அரங்கேறியது.

7. ஐந்தொழிலையும் ஒருங்கே காட்டுகின்ற ஆனந்த தாண்டவம்.

   தில்லைப் பெருங்கோயில் – ஆடல்வல்லான் மூர்த்தி நடனம்.

   வாழி திருமன்றம் கண்ட மலர்க்கண்கள்
   வாழி பெருமான் புகழ் கேட்டவார் செவிகள்
   வாழி அவனை வணங்கும் முடிச்சென்னி
   வாழி அவன் சீர்பாடும் வாய் – குமரகுருபரர்

2095. காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங்
கடிக்கமலத் திருந்தவனுங் காணா வண்ணம்
சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத்
திகழொளியைச் சிந்தைதனை மயக்கந்
தீர்க்கும்
ஏரொளியை இருநிலனும் விசும்பும் விண்ணும்
ஏழுலகுங் கடந்தண்டத் தப்பால் நின்ற
**பேரொளியைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 10

கரிய உடல் ஒளியை உடையவனும் சிவந்த கண்களை உடையவனும் ஆகிய திருமாலும், நறுமணம் கமழும் செந்தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும் தன் அடியையும் முடியையும் காணமுடியாதபடி சீரிய ஒளியை உடைய தீப்பிழம்பாய் நின்ற பழைய மேம்பட்ட ஒளியை உடையவன். உள்ளத்தில் உள்ள மயக்கத்தைப் போக்கும் ஞான ஒளியானவன். பெரிய இந்நில உலகையும், வானத்தையும், தேவர் உலகையும் உள்ளிட்ட ஏழு உலகங்களையும் கடந்து அவற்றிற்கு அப்பாலும் பரவும் எல்லையற்ற பேரொளிப் பிழம்பாய் இருப்பவன் ஆகிய பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

பதிக மகுடம் – பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

## இருபத்தொன்றாம் நூற்றாண்டின் புலிக்கால் முனிவர்



தில்லையைப் பாட வரும் நாயன்மார்கள், பாடலில் கூத்தையும், கூத்தரசனின் பெருமைகளையும் பாடிவிட்டு, புலிக்கால் முனிவரைப் பற்றித் தவறாமல் பாடுகிறார்கள். இதற்குப் பொருள் என்னவென்றால், "கூத்தை நீங்கள் பார்க்க வேண்டுமென்றால், அவர் வழியைப் பின்பற்றுங்கள்'' என்பதாகும். அதாவது "புலிக்கால் முனிவர் செய்த மலர் வழிபாட்டை, நீங்கள் செய்யுங்கள். நீங்களும் கூத்தைத் தரிசிக்கலாம்". எதற்காகக் கூத்தைத் தரிசிக்க வேண்டும்? வீடுபேற்றைவிட உயர்ந்தது, திருக்கூத்து தரிசனம். கூத்தைப் பார்த்துவிட்டால், பிறவி கிடையாது. ஆனால், வீடு பேறடைந்தவர்களெல்லாம் கூத்தைப் பார்த்தார்கள் என்று சொல்ல முடியாது. எனக்கு கூத்து தரிசனம் வேண்டும் என்ற உணர்வே வரவில்லை. அந்த உணர்வு வருவதற்கும் வினைக்கழிவு ஏற்படவேண்டும். அதற்கு நாம் முயற்சித்தால் திருவருள் கிட்டும்.

பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே இறைவனைப் பூசை செய்து வணங்க வேண்டுமென்ற அவா எழுந்ததால்தான் வியாக்கிரபாதர் புலிக்கால் முனிவராகிறார். தாமே மலர் பறித்துப் பூசை செய்வதற்கு இணை வேறொன்றுமில்லை என்று நிரூபித்து அதன் பயனாம், திருக்கூத்துத் தரிசனம்

கண்டவர். நம்மாலும் வியாக்கிரபாதராக வாழமுடியும். எனவேதான், ஆறாம் திருமுறையில் முதல் பதிகத்தில் – பதிகம் முழுவதும் 'ஆடல்வல்லான், ஆடல்வல்லான்' என்று சொல்லாமல், பெரும்பற்றப் புலியூரான், பெரும்பற்றப் புலியூரான் என்று பாடுகிறார். பெருமை – வீடுபேறு. பெருமையாகிய வீடுபேற்றைப் பற்றுதற்குரிய ஊர் – பெரும்பற்றப்புலியூர்.

மதுரையில் மீனாட்சி திருமணத்திற்கு விசேட அழைப்பாளிகளாகச் சென்ற புலியும், பாம்பும் திருமணம் முடிந்து உணவு உண்ணவில்லை. "தாண்டவ தரிசனம் இல்லையேல் உணவில்லை" என்று அங்கேயும் நடனம் காணப் பெற்றார்கள்.

நாம் பெரும்பற்றப் புலியூரானுக்கு ஆளாவது எப்படி ? **"பொது நீக்கித் தன்னை நினைய வல்லான்"** என்று இப்பதிகத்தில் ஐந்தாம் பாட்டில் குறிப்பிடுகிறார். சிவபரம்பொருளை மட்டுமே மனதில் நினைத்து, ஐந்தெழுத்தோதி, திருநீறு, உருத்திராக்கத்தோடு எப்போதும் இவ்வுலகப் பற்றுகளிலிருந்து சிறிது சிறிதாக விலகி ஓய்வூதியம் பெறும்போதாவது, கீழ்க்கண்டவாறு சிவபூசையுடன் வாழப் பழகிக் கொண்டால் இப்பிறவியில் இல்லாவிட்டாலும் விரைவில் புலிக்கால் முனிவராகலாம்.

| அதிகாலை 04.00 | உறக்கத்திலிருந்து விழிப்பு |
|---|---|
| 04.00 – 04.30 | காலைக்கடன், குளியல் |
| 04.30 – 06.00 | நம்முடைய நந்தவனத்தில் மலர் சேகரிப்பு |
| 06.00 – 08.30 | சிவபூசை (எரியோம்பலுடன்) |
| 08.30 – 09.00 | காலை உணவு |
| 09.00 – 12.00<br><br>12.00 | திருமுறைப் பாராயணம் / பரப்பும் பணி / சொற்பொழிவு / வகுப்பு / சிவாலய வழிபாடு<br>சந்தி வழிபாடு |
| 12.30 – 01.00 | மதிய உணவு |
| 01.00 – 04.00 | ஓய்வு, உறக்கம், பிற பணிகள் |
| 04.00 – 05.00 | திருமுறைப் பாராயணம் |
| 05.00 – 06.30 | நந்தவனப் பராமரிப்பு |
| 06.30 – 07.00 | மாலைச் சந்தி வழிபாடு |
| 07.00 – 08.00 | திருமுறைப் பாராயணம் |
| 08.00 – 08.30 | இரவு உணவு |
| 08.30 – 09.30 | திருமுறைப் பாராயணம் |
| 09.30 | உறக்கத்துக்குச் செல்லுதல் |

பெரியபுராணத்தில் பெருவாழ்வு என்ற சொல்லை தெய்வச் சேக்கிழார் 13 இடங்களில் கையாள்கிறார். வாழ்வு சிவத்தோடு ஒன்றும்போது, பெருவாழ்வாகிறது. "திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் பெருவாழ்வு வந்ததென" என்பதை நினைவு கூரவேண்டும். ஓய்வூதியப் பொருளிலாவது 1/4 ஏக்கர் நந்தவனம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். சற்றுப் பொருளாதார வசதியும், ஆள் வசதியுமிருந்து கோசாலையைப் பராமரிக்க முடிந்தால் கறந்த பாலோடு, ஆனைந்து அபிடேகத்துடன், 1008 மலர் வழிபாட்டையும் சேர்த்துக் கொண்டால், பூலோகக் கயிலாயமல்ல; மேலோகக் கயிலாயமும் எளிதே. வாளால் மகவரிந்து ஊட்டுதல் – மாது சொன்ன சூளால் இளமை துறத்தல் – நாளாறில் கண்ணிடந்து அப்புதல் ஆகிய வன்தொண்டுகளை, இருபத்தொன்றாம் நூற்றாண்டு அடியார்களால் செய்யமுடியாது. எனவே, மென்தொண்டாக, 'மலர்த்தொண்டு செய்து திருவடியை அடையட்டும்' என்று புலிக்கால் முனிவர் என்ற கதாபாத்திரத்தை சுவாமி ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பூலோகத்துக்கு அனுப்பிவிட்டார். புலிக்கால் முனிவரின் வழியைப் பின்பற்றி இருபத்தொன்றாம் நூற்றாண்டில் மலர் வழிபாடு செய்து அவர் திருவடியை அடைவோமாக.

## 2. கோயில் (புக்க திருத்தாண்டகம்)

ப.தொ.எண் : 215 பதிக எண் : 2

**2096.** மங்குல் மதிதவழும் மாட வீதி
மயிலாப்பி லுள்ளார் மருக லுள்ளார்
கொங்கிற் கொடுமுடியார் குற்றா லத்தார்
குடமூக்கி லுள்ளார்போய்க் கொள்ளம்
பூதூர்த்
**தங்குமிட மறியார்** சால நாளார்
தருமபுரத் துள்ளார் தக்க ளூரார்
பொங்குவெண் ணீறணிந்து பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 1

மங்குல் – மேகம். மாடவீதி – பெருந்தெரு

பொலிவு தரும் வெண்ணீறு அணிந்து, பூதங்கள் தம்மைச் சூழ்ந்து வர, நம் பெருமானார் வானத்தில் உள்ள சந்திரன் தவழ்ந்து செல்லும் உயர்ச்சியை உடைய பெருந்தெருக்களை உடைய மயிலாப்பூர், மருகல், கொங்குநாட்டுக் கொடுமுடி, குற்றாலம், குடமூக்கு, கொள்ளம்பூதூர், தருமபுரம், தக்களூர் என்ற திருத்தலங்களில் பல நாள் தங்கி, தாம் உறுதியாகத் தங்கும் இடமாகப் பிறவற்றை அறியாராய், தில்லைச் சிற்றம்பலத்திலே புகுந்து தங்கி விட்டார்.

**2097.** நாக மரைக்கசைத்த நம்ப ரிந்நாள்
நனிபள்ளி யுள்ளார்போய் நல்லூர்த் தங்கிப்
பாகப் பொழுதெலாம் பாசூர்த் தங்கிப்
பரிதி நியமத்தார் பன்னி ருநாள்
வேதமும் வேள்விப் புகையும் ஓவா
விரிநீர் மிழலை எழுநாள் தங்கிப்
போகமும் பொய்யாப் பொருளு மானார்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 2

ஐம்புல இன்பப் பொருள்களும் மெய்ப்பொருளும் ஆகிய, பாம்பினை இடையிலே கட்டிய, நம்மால் விரும்பப்படும் இறைவர் நனிபள்ளி, நல்லூர் இவற்றில் தங்கி ஓர் இராப்பொழுது முழுதும் பாசூரில் தங்கிப் பன்னிருநாள் பரிதிநியமத்திலும் ஏழு நாள் வேதமும் வேள்விப் புகையும் நீங்காத நீர்வளம் மிக்க திருவீழிமிழலையிலும் உகந்திருந்து, இந்நாளில் தில்லைச் சிற்றம்பலத்திலே புகுந்து தங்கிவிட்டார்.

2098. துறங்காட்டி யெல்லாம் விரித்தார் போலும்
தூமதியும் பாம்பு முடையார் போலும்
மறங்காட்டி மும்மதிலும் எய்தார் போலும்
மந்திரமுந் தந்திரமுந் தாமே போலும்
அறங்காட்டி அந்தணர்க்கன் றால நீழல்
அறமருளிச் செய்த அரனா ரிந்நாள்
புறங்காட் டெரியாடிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 3

உலகவருக்கு ஒழுக்கத்தை அறிவித்து, ஒரு காலத்தில் சனகர் முதலிய அந்தணர் நால்வருக்கு வேதத்தின் விழுமிய பொருளை அருளிச் செய்த சிவபெருமான் நிலையில்லாப் பொருள்களில் பற்றறுத்தலாகிய ஞானத்தை அறிவித்து, மெய்ந்நூற் பொருள்கள் அனைத்தையும் அருளினார். களங்கமற்ற பிறைமதியையும் பாம்பினையும் அணிகலனாக உடையார், தம் வீரத்தை வெளிப்படுத்தி மூன்று மதில்களையும் அம்பு எய்து அழித்தார். மந்திரங்களும் அவற்றை முறையாகப் பயன்படுத்தும் செயல்களும் தாமேயாக உள்ளார். அப்பெருமான் இந்நாள் தாமே உகந்து தில்லைச் சிற்றம்பலமே புகுந்தார்.

இறைவர் ஏனைத் தலங்களிலும் எழுந்தருளி அருள் செய்தாராயினும், தில்லைச் சிற்றம்பலமே அவர் உறைவிடமாகும். எனவேதான் தில்லை "கோயில்" எனப்படுகிறது. அங்கு புக்கமையைக் கூறும் பதிகம் என்பதால் புக்க திருத்தாண்டகம் எனப்படுகிறது. தந்திரம் – கடவுள் வழிபாட்டு முறையைக் கூறும் நூல்.

2099. வாரேறு வனமுலையாள் பாக மாக
மழுவாள்கை யேந்தி மயானத் தாடிச்
சீரேறு தண்வயல்சூழ் ஓத வேலித்
திருவாஞ்சி யத்தார் திருநள் ளாற்றார்
காரேறு கண்டத்தார் காமற் காய்ந்த
கண்விளங்கு நெற்றியார் கடல்நஞ் சுண்டார்
போரேறு தாமேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 4

கச்சணிந்த அழகிய திருத்தனங்களை உடைய பார்வதி தம் உடம்பில் ஒரு பகுதியாக அமைய, மழுப்படையைக் கையில் தாங்கிச் சுடுகாட்டில் கூத்து நிகழ்த்தி, விடக்கறை தங்கிய கழுத்தினராய், மன்மதனை வெகுண்ட கண் விளங்கும் நெற்றியினராய் கடலில் தோன்றிய விடத்தைத் தாம் உண்டு, உலகைப் பாதுகாத்த பெருமானார், சிறப்புமிக்க குளிர்ந்த வயல்களால் சூழப்பட்டதும், நீர் வெள்ளத்தை எல்லையாக உடையதுமாகிய திருவாஞ்சியம், திருநள்ளாறு இவற்றை உகந்தருளின திருத்தலங்களாக உடையவராய், பகைவரோடு போரிடும் காளையை வாகனமாகக் கொண்டு பூதங்கள் தம்மைச் சூழ்ந்துவரத் தில்லைச் சிற்றம்பலமே புகுந்தார்.

2100. காரார் கமழ்கொன்றைக் கண்ணி சூடிக்
கபாலங்கை யேந்திக் கணங்கள் பாட
ஊரா ரிடுபிச்சை கொண்டு ழல்லும்
உத்தமராய் நின்ற ஒருவ னார்தாம்
சீரார் கழல்வணங்குந் தேவ தேவர்
திருவாரூர்த் திருமூலட் டான மேயார்
போரார் விடையேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 5

தம் சிறப்பு நிறைந்த திருவடிகளை வணங்கும் தேவர்களுக்கும் தலைவராகிய சிவபெருமானார் கார்காலத்தில் மணம் வீசும் கொன்றைப் பூவாலாகிய முடிமாலையைச் சூடி, மண்டையோட்டைக் கையில் ஏந்தி, பூதகணங்கள் தம் பெருமையைப் பாட, ஊரிலுள்ளோர் வழங்கும் பிச்சையை உணவாகக் கொண்டு திரிகின்ற மேம்பட்டவராய்க் காட்சி வழங்கும் ஒப்பற்றவராய், திருவாரூர்த் திருமூலத்தானத்தில் விரும்பித் தங்கிப் பின் போர் செய்யும் காளை மீது இவர்ந்து பூதங்கள் தம்மைச் சுற்றிவரத் தில்லைச் சிற்றம்பலத்தில் புகுந்தார்.

2101. காதார் குழையினர் கட்டங் கத்தர்
கயிலாய மாமலையார் காரோ ணத்தார்
மூதாயர் மூதாதை யில்லார் போலும்
முதலும் இறுதியுந் தாமே போலும்
மாதாய மாதர் மகிழ அன்று
வன்மதவேள் தன்னுடலங் காய்ந்தா ரிந்நாள்
போதார் சடைதாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 6

ஆண்டில் மூத்த ஆட்டுவாள், ஊட்டுவாள், ஒல் உறுத்துவாள், நொடி பயிற்றுவாள், கைத்தாய் என்ற ஐவகையராய செவிலித்தாயரும், நற்றாயும் தந்தையும் இல்லாதவராய், உலகிற்கு முதலாயும் முடிவாயும் உள்ளவர் தாமேயாய்க் காதில் குழை அணிந்து கட்டங்கம் என்ற படைக்கலத்தை ஏந்திக் கயிலாய மலையிலும், காரோணப் பதிகளிலும், உகந்தருளியிருக்கும் சிவபெருமான் அழகிய பெண் இனத்தார் மகிழுமாறு பார்வதியின் திருமணத்துக்கு முற்பட்ட காலத்திலே மன்மதனுடைய உடம்பினை அழித்தவராய், இந்நாளில் பூக்கள் நிறைந்த தம் சடைகள் தொங்கவும், பூதங்கள் சூழவும், தில்லைச் சிற்றம்பலத்தில் புகுந்தார்.

மூதாயர் மூதாதை – மூத்த தாயாரும் மூத்த தந்தையும்

காரோணம் – காயாரோகணம். திருமாலும், பிரமனும் ஒருசேரத் துஞ்சும் நிலையில் அவரது காயங்களை மேலே எடுத்து நின்று ஆடல் புரியுமிடம்.

2102. இறந்தார்க்கும் என்றும் இறவா தார்க்கும்
இமையவர்க்கும் ஏகமாய் நின்று சென்று
பிறந்தார்க்கும் என்றும் பிறவா தார்க்கும்
பெரியார்தம் பெருமையே பேச நின்று
மறந்தார் மனத்தென்றும் மருவார் போலும்
மறைக்காட் டுறையும் மழுவாட் செல்வர்
புறந்தாழ் சடைதாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 7

புறம்தாழ்சடை – பின்புறமாக நீண்டு தொங்கும் சடை. இது பிறரை வணங்காது நிற்றலைக் குறிக்கும் என்பது செவி வழிச் செய்தி.

தம்மை மறந்தவர் மனத்தில் என்றும் விரும்பித் தங்காதவராய்த் திருமறைக்காட்டில் உகந்தருளியிருக்கும் மழுப்படையை உடைய பெருமான் உலகியலில் நின்று வாழ்நாள் இறுதி வந்துழி இறந்தவர். யோகம் முதலியவற்றால் நீண்ட நாள் இறவாது இருந்தவர். தேவர்கள் ஆகிய எல்லோருக்கும் தாமே துணையாய், உலகில் பிறப்பெடுப்பவருக்கும் என்றும் பிறப்பெடுக்கும் நிலையைக் கடந்து வீடு பெற்றவருக்கும் தலைவராய்த் தம் பெருமையையே அவர்கள் என்றும் பேசுமாறு அவர் மனத்துள் என்றும் நிலைபெற்று, பின்புறமாக நீண்டு தொங்கும் சடையை உடையவராய்ப் பூதம் சூழத் தில்லைச் சிற்றம்பலமே புகுந்தார்.

2103. குலாவெண் தலைமாலை யென்பு பூண்டு
குளிர்கொன்றைத் தாரணிந்து கொல்லே றேறிக்
கலாவெங் களிற்றுரிவைப் போர்வை மூடிக்
கையோ டனலேந்திக் காடு றைவார்
நிலாவெண் மதியுரிஞ்ச நீண்ட மாடம்
நிறைவயல்சூழ் நெய்த்தானம் மேய செல்வர்
புலால்வெண் தலையேந்திப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 8

குலாவுதல் – வளைதல்
கலாவுதல் – கலத்தல்
நிலா – சந்திரனது ஒளி
உரிஞ்ச – உராய / தவழ

ஒளி விளங்கும் வெண் மதியம் தீண்டுமாறு உயர்ந்த மாடங்களை உடையதாய் மற்ற இடம் எங்கும் நிறைந்த வயல்களால் சூழப்பட்ட திரு நெய்த்தானத்தை உகந்தருளிய பெருமான் வளைந்த வெண்தலைமாலை, எலும்புகள் இவற்றை அணிந்து குளிர்ந்த கொன்றைப் பூ மாலையை மாா்பில் சூடி, கொல்லுதலில் வல்ல காளையை இவர்ந்து, உடம்பை ஒட்டிக் கொடிய யானைத் தோலைப் போர்வையாக அணிந்து உடம்பை மறைத்துக் கொண்டு, கைகளில் மண்டை ஓட்டினையும் தீயையும் ஏந்திச் சுடுகாட்டில் தங்கும் இயல்பினர். அவர், புலால் நாற்றம் கமழும் வெள்ளிய மண்டை ஓட்டினைக் கையில் ஏந்திப் பூதங்கள் சூழத் தில்லைச் சிற்றம்பலத்திலே புகுந்தார்.

2104. சந்தித்த கோவணத்தர் வெண்ணூல் மார்பர்
சங்கரரைக் கண்டீரோ கண்டோ மிந்நாள்
பந்தித்த வெள்விடையைப் பாய வேறிப்
படுதலையி லென்கொலோ ஏந்திக் கொண்டு
வந்திங்கென் வெள்வளையுந் தாமு மெல்லா
மணியாரூர் நின்றந்தி கொள்ளக் கொள்ளப்
பொன்றீ மணிவிளக்குப் பூதம் பற்றப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 9

பதிக மகுடம் – புலியூர்ச் சிற்றம்பலமே புக்கார் தாமே.

கோவணம் அணிந்து வெள்ளிய பூணூல் தரித்தவராய் எல்லோருக்கும் இன்பம் செய்யும் பெருமானைக் கண்டீரோ என்று முக்கணான் முயக்கம் வேட்ட தலைவி தன்பால் அன்புடைய அயலாரை வினவினாள். கட்டியிருந்த வெண்ணிறக் காளையைக் கட்டவிழ்த்து அது விரைந்து செல்லுமாறு அதன் மீது தாவி ஏறி, மண்டை ஓட்டில் எதனையோ ஏந்திக் கொண்டு அழகிய ஆரூரிலே அந்தி நேரத்தில் எங்கள் வெள்வளைகளைத் தாம் முழுமையாய்க் கைக்கொள்வதற்காக நின்று, இந்நாளில் அழகிய தீப்போன்ற ஒளி விளக்குக்களைப் பூதங்கள் ஏந்தி வரத் தில்லைச் சிற்றம்பலத்தில் தாம் விரும்பியவாறு புகுந்தார்.

2105. பாதங்கள் நல்லார் பரவி யேத்தப்
பத்திமையாற் பணிசெய்யுந் தொண்டர் தங்கள்
ஏதங்கள் தீர இருந்தார் போலும்
எழுபிறப்பும் ஆளுடைய ஈசனார் தாம்
வேதங்க ளோதிஓர் வீணை யேந்தி
விடையொன்று தாமேறி வேத கீதர்
பூதங்கள் சூழப் புலித்தோல் வீக்கிப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 10

வீக்கி – கட்டி

வினைப்பயன் தொடர்தற்குரிய ஏழு பிறப்புக்களிலும் நம்மை அடியவராகக் கொள்ளும் சிவபெருமான் தம் திருவடிகளைச் சான்றோர்கள் முன்னின்று வழிபட்டுத் துதிக்கப் பக்தியால் அவருடைய உகப்பிற்காகவே தொண்டு செய்யும் அடியார்களுடைய துன்பங்கள் நீங்குமாறு திருத்தலங்களில் உகந்தருளியுள்ளார். வீணையைக் கையில் ஏந்தி வேதங்களை ஓதிக்கொண்டு காளை மீது இவர்ந்து புலித்தோலை இடையில் கட்டிய அவ்வேத கீதர் பூதங்கள் தம்மைச் சூழ்ந்து வரத் தில்லைச் சிற்றம்பலத்தைத் தாமே விரும்பிச் சேர்ந்தார்.

**2106.** பட்டுடுத்துத் தோல்போர்த்துப் பாம்பொன்
றார்த்துப்
பகவனார் பாரிடங்கள் சூழ நட்டஞ்
சிட்டராய்த் தீயேந்திச் செய்வார் தம்மைத்
தில்லைச்சிற் றம்பலத்தே கண்டோ மிந்நாள்
விட்டிலங்கு சூலமே வெண்ணூ லுண்டே
ஓதுவதும் வேதமே வீணை யுண்டே
கட்டங்கங் கையதே சென்று காணீர்
கறைசேர் மிடற்றெங் கபாலி யார்க்கே. **11**

இறைக்காட்சியைத் தாம் கண்டு, நாமும் அதனைக் காணுமாறு அருளிச் செய்த பாடல் இதுவாகும்.

இடையில் பட்டை உடுத்தி அதனைப் பாம்பு ஒன்றினால் இறுக்கிக் கொண்டு மேலே யானைத் தோலைப் போர்த்துப் பெருமான் பூதங்கள் தம்மைச் சூழத் தீயைக் கையில் ஏந்தி ஆடற்கலையில் வல்லவராய் உள்ளார். அவர் இந்நாள் தில்லைச்சிற்றம்பலத்திலேயே ஒளிவீசும் சூலப்படை ஏந்தி, பூணூல் அணிந்து, வீணையுடன் வேதம் ஓதி, ஒருகையில் கட்டங்கம் என்ற படையை ஏந்தி விடக்கறை பொருந்திய கழுத்தினராய் மண்டை ஓட்டினை ஏந்தியவராய் உள்ள காட்சியை எல்லீரும் சென்று காண்மின்கள்.



திருவதிகை வீரட்டானம் கருவறை விமானம்

## 3. திருஅதிகை வீரட்டானம்

## ஏழைத் திருத்தாண்டகம்

ஏழைமை – அறிவின்மை. அறிவால் ஏழை

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர் – குறள். 430

நுண்ணுணர் வின்மை வறுமை அஃதுடைமை
பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம் – நாலடியார் 251

என்ற நீதிநூற் பாடற்களால் அறிவுடையாரின் சிறப்பை அறியலாம். திருநாவுக்கரசு சுவாமிகள் சமண சமயத்திலிருந்து சைவம் சார்ந்த பின்னர், சமணர்கள் கல்லோடு பிணித்துக் கடலில் பாய்ச்சியபொழுது, "சொற்றுணை வேதியன்" என்று தொடங்கும் நமச்சிவாயப் பதிகம்பாடி, கல்லையே தெப்பமாகக் கொண்டு கரை சேர்ந்து, பாதிரிப்புலியூர் ஈசனை வணங்கித் திருவதிகைப் பதிவாணர்கள் எதிர்கொள்ள திருவீரட்டானஞ் சேர்ந்தார். அங்கு பெருமானை வணங்கி, எம்பெருமான்தனை, 'ஏழையேன் நான் பண்டிகழ்ந்து' என்று பரிவால் பாடியருளிய திருப்பதிகம் இது. ஒவ்வொரு பாட்டின் முடிவிலும் "ஏழையேன் நான் பண்டிகழ்ந்து" என்று பாடியிருத்தலால் ஏழைத் திருத்தாண்டகம் என்ற பெயர் பெற்றது.

இத்திருப்பதிகம் இறைவர் அருள்செய்த எல்லையில்லா இன்ப வெள்ளத்தில் திளைத்து நின்ற காலத்து முன்பெல்லாம் இளைய காலத்தே அதனைப் பெறாது பரசமய நெறிக்குழியில் விழுந்து அறியாத பல செயல்கள் செய்து நாட்களைக் கழித்துவிட்டதை நினைத்துப் பாடியருளுகிறார்.

இப்பதிகம் திருவதிகை வீரட்டானத்துக்கு இரண்டாம் முறை வந்தபோது பாடியது. முதன்முறை வந்து தமக்கையாரைச் சந்தித்து, ஆசிபெற்று, 'கூற்றாயினவாறு' பாடி, சூலை நோய் தீர்ந்த வரலாறு நான்காம் திருமுறையில் பாடப்பட்டது. அதன்பின் சமணர்கள் சவாலைத் திருவருள் துணையால் எதிர்கொண்டு வீரட்டானத்து இறைவனுக்குச் சமர்ப்பிக்கும் வண்ணம் பாடிய பதிகம் இதுவாகும்.

சமணரோடு உடனிருந்து அவர் சொற்கேட்டுப் பண்டு இகழ்ந்தமையும், அவ்வாறு இகழ்ந்தாலும் கைவிட்டுவிடாமல், இறைவன் விரைந்து இடர்தீர்த்து அருள் செய்தமையும், சமணர் நிலைகளில் இழிபும் 5, 7, 8, 10, 11 திருப்பாட்டுகளில் கூறுகிறார். ஏனைய திருப்பாட்டுகளில் இறைவனுடைய பெருமைகளைப் பேசி, இத்தகைய பெருந்தகையை, 'நான் அறியாது இகழ்ந்தேனே' என்று இரங்கிப் பாடுகின்றார்.

ப.தொ.எண் : 216 பதிக எண் : 3

2107. வெறிவிரவு கூவிளநல் தொங்க லானை
வீரட்டத் தானைவெள் ளேற்றி னானைப்
பொறியரவி னானைப்புள் ளூர்தி யானைப்
பொன்னிறத்தி னானைப் புகழ்தக் கானை
அறிதற் கரியசீ ரம்மான் தன்னை
அதியரைய மங்கை யமர்ந்தான் தன்னை
எறிகெடிலத் தானை இறைவன் தன்னை
ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 1

அலைகள் வீசும் கெடில நதிக்கரையிலுள்ள எம் பெருமான் நறுமணம் கமழும் வில்வ மாலை அணிந்தவன். அதிகை வீரட்டத்தில் உகந்தருளியிருப்பவன். இடபவாகனன். ஆதிசேடனாகவும், கருட வாகனத் திருமாலாகவும் பொன்நிறமுடைய பிரமனாகவும் அவருள் உடனாய் இருந்து அவரைச் செயற்படுப்பவன். பொருள்சேர் புகழுக்குத் தக்கவன். உணர்ந்தார்க்கும் உணர்வரிய சிறப்பினை உடைய தலைவன். அதியரைய மங்கை என்ற திருத்தலத்தை உகந்தருளி யிருப்பவன். அத்தகைய பெருமானை அறிவிலியாகிய யான் என் வாழ்க்கையின் முற்பகுதியில் வழிபடாது பழித்துக் கூறிய செயல் இரங்கத்தக்கது.

ஏழையேன் பண்டிகழ்ந்தவாறே – பதிக மகுடம். வெறி – வாசனை. கூவிளம் – வில்வம். தொங்கல் – மாலை. செய்தல் – தூய உலகங்களில் அவரே செய்வார். செய்வித்தல் – தூயவல்லாத உலகங்களில் செய்விப்பார். இறை – இறுத்தல். எல்லாப் பொருளினும் தங்குதல்.

2108. வெள்ளிக் குன்றன்ன விடையான் தன்னை
வில்வலான் வில்வட்டங் காய்ந்தான் தன்னைப்
புள்ளி வரிநாகம் பூண்டான் தன்னைப்
பொன்பிதிர்ந் தன்ன சடையான் தன்னை
வள்ளி வளைத்தோள் முதல்வன் தன்னை
வாரா வுலகருள வல்லான் தன்னை
எள்கவிடு பிச்சை யேற்பான் தன்னை
ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 2

மீண்டும் பிறப்பெடுக்க வேண்டிய நிலையில்லாத வீட்டுலகை அருளவல்ல எம்பெருமான் வெள்ளி மலை போன்ற காளையை வாகனமாக உடையவன். வில்லைப் பயன்கோடலில் வல்ல மன்மதனுடைய வில்லைத் தவறாகக் கையாண்ட செயலைத் தண்டித்தவன். படப் புள்ளிகளையும் கோடுகளையும் உடைய நாகத்தை அணிகலனாக அணிபவன். பொன் துகள் போல ஒளிவீசும் செஞ்சடையினன். சந்திரனைப் போல ஒளிவீசும் தோள்வளை அணிந்த முதல்வன். பிறர் தன்னை இகழுமாறு பல வீட்டிலுள்ளவர்களும் வழங்கும் பிச்சையை ஏற்பவன். அத்தகைய பெருமானை ஏழையேன் பண்டு இகழ்ந்த திறம் இரங்கத்தக்கது.

வில்வலான் – காமவேள். பிதிர்தல் – பொடியாதல்.
வள்ளி – கொடி.

2109. முந்தி யுலகம் படைத்தான்தன்னை
மூவா முதலாய மூர்த்தி தன்னைச்
சந்தவெண் திங்க ளணிந்தான் தன்னைத்
தவநெறிகள் சாதிக்க வல்லான் தன்னைச்
சிந்தையில் தீர்வினையைத் தேனைப் பாலைச்
செழுங்கெடில வீரட்டம் மேவி னானை
எந்தை பெருமானை யீசன் தன்னை
ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 3

செழிப்புடைய கெடிலநதி பாயும் அதிகை வீரட்டானத்தை உகந்தருளியிருக்கும் எந்தையாய்ப் பெருமானாய், எல்லோரையும் ஆள்பவனாய் உள்ள எம்பெருமான்தான், என்றைக்கும் கெடுதலில்லாத முதற்பொருள். அவனே முற்பட்ட காலத்தில் உலகங்களைப் படைத்தவன். அழகிய வெள்ளியபிறை சூடி அடியார்களின் தவமாகிய நெறியை முற்றுவிப்பவன். சித்தம் முதலிய கருவிகளால் செய்யப்படும் செயல்களின் பயனாய்த் தேனும் பாலும் போன்று இனியவன். அத்தகைய பெருமானை ஏழையேன் பண்டு இகழ்ந்தது இரங்கத்தக்கது.

மூர்த்தி – வடிவமுடையவன்;
அருள்திரு மேனியை உடையவன்.
மூவா – கெடாத – முதிராத

**2110.** மந்திரமும் மறைப்பொருளு மானான் தன்னை
மதியமும் ஞாயிறுங் காற்றுந் தீயும்
அந்தரமு மலைகடலு மானான் தன்னை
யதியரைய மங்கை யமர்ந்தான் தன்னைக்
கந்தருவஞ் செய்திருவர் கழல்கை கூப்பிக்
கடிமலர்கள் பலதூவிக் காலை மாலை
இந்திரனும் வானவரும் தொழச்செல் வானை
ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 4

அதியரைய மங்கை, அதிகை வேறு தலமாகவும் கூறுவர்.
அந்தரம் – ஆகாயம். கந்தருவம் – இசை.
''செல்வான்'' என்றது, அவனது எளிமையை வியந்தருளியதாகும்.

ஆகா, ஊகூ என்ற கந்தருவர் இருவரும் பாடித் திருவடிகளில் நறுமலர்களைத் தூவிக் கைகளைக் குவித்துக் காலையும் மாலையும் இந்திரனும் மற்ற தேவர்களும் வழிபடுமாறு எளிமையில் காட்சி வழங்கும் சிவபெருமான் வேதமந்திரமும் அவற்றின் பொருளும் ஆயவன். மதியம், வெங்கதிர், காற்று, தீ, வான், அலைகளை உடைய கடல் ஆகியவற்றின் உடனாய் நின்று அவற்றைச் செயற்படுப்பவன். அதியரையமங்கை என்ற திருத்தலத்தில் உகந்தருளியிருப்பவன். அத்தகைய பெருமானை ஏழையேன் பண்டு இகழ்ந்தது இரங்கத்தக்கது.

**2111.** ஒருபிறப்பி லானடியை உணர்ந்துங் காணார்
உயர்கதிக்கு வழிதேடிப் போக மாட்டார்
வருபிறப்பொன் றுணராது மாசு பூசி
வழிகாணா தவர்போல்வார் மனத்த னாகி
அருபிறப்பை யறுப்பிக்கும் அதிகை யூரன்
அம்மான்றன் அடியிணையே அணைந்து வாழா
திருபிறப்பும் வெறுவியரா யிருந்தார் சொற்கேட்
டேழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 5

சமணம் சார்ந்து வீணாகிப் போய்விட்ட நாட்களை நினைந்து வருந்துகிறார். நீராடாமையேயன்றி மாசு பூசிக் கொள்ளுதலும் சமண முனிவரது ஒழுக்கம் ஆகும்.

வழி காணாதவர் – குருடர்.

பொறி புலன்களைத் திருவருளை நோக்கிச் செலுத்தாமையால் இம்மைப் பயன் இழந்தமையும் அறத்தின் மெய்ம்மையாகிய திருவருளை உணராமல் மறுமைப் பயனையும் இழந்தமையும் கூற "இரு பிறப்பும் வெறுவியர்" என்று பாடினார்.

பிறவாயாக்கைப் பெரியோன் திருவடிகளை நினைத்துப் பார்ப்பது கூடச் செய்யாராய் உயர்கதியை அடைவதற்குரிய வழியைத்தேடி அவ்வழியே வாழ்க்கையை நடத்தாதவராய், இடையறாது வருகின்ற பிறப்பின் காரணத்தை உணராராய், உடம்பில் அழுக்கினைத் தாமே பூசிக்கொண்டு அகக்கண் குருடராய சமண முனிவருடைய மனம்போல் நடப்பேனாகி, இம்மைக்கும் மறுமைக்கும் பயன்படாத செயல்களைச் செய்யும் அவர்களுடைய சொற்களை உபதேசமாகக் கொண்டு, கொடிய பிறவியை அடியோடு போக்குவிக்கும் அதிகை வீரட்டானத்து எம்பெருமான் திருவடிகளைச் சரண் புக்கு வாழாமல் ஏழையேன் பண்டு அப்பெருமானை இகழ்ந்த செயல் இரங்கத்தக்கது.

2112. ஆறேற்க வல்ல சடையான் தன்னை
அஞ்சனம் போலும் மிடற்றான் தன்னைக்
கூறேற்கக் கூறமர வல்லான் தன்னைக்
கோள்வளைக்கை மாதராள் பாகன்தன்னை
நீறேற்கப் பூசும் அகலத் தானை
**நின்மலன் தன்னை நிமலன் தன்னை**
ஏறேற்க வேறுமா வல்லான் தன்னை
ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 6

நின்மலன் – மலம் இல்லாதவன்

நிமலன் – மலத்தை நீக்குபவன்

கூறேற்கக் கூறமரவல்லான் – அருட்சக்தியை தமது ஒரு கூறாக அமர்த்தி அக்கூற்றிற்குப் பற்றுக்கோடாய் இருப்பவன்.

கங்கையைத் தன்னுள் அடங்குமாறு ஏற்றுக் கொள்ள வல்ல சடையான், மைபோலக் கரிய முன் கழுத்தினன். எல்லாப் பொருள்களின் நுண்ணிலையையும் ஏற்று அவற்றுக்குப் பற்றுக்கோடாக நிற்கவும் பருநிலையில் அவற்றுக்கு உள்ளும் புறம்பும் அறிவாய் நிறைந்து நிற்கவும் வல்லவன். திரண்ட வளையல்களைக் கையில் அணிந்த பார்வதி பாகன். நீறு, தன்னையே சார்பாக ஏற்க அதனைப் பூசிய மார்பினன். தானும் களங்கம் இல்லாதவனாய்ப் பிறர் களங்கத்தையும் போக்குவிப்பவன். காளை வாகனத்தில் தக்கபடி ஏறி அதனைச் செலுத்துவதில் வல்லவன். அத்தகைய பெருமானை ஏழையேன் நான் பண்டு இகழ்ந்த செயல் இரங்கத்தக்கது.

2113. குண்டாக்க னாயுழன்று கையி லுண்டு
குவிமுலையார் தம்முன்னே நாண மின்றி
உண்டி யுகந்தமணே நின்றார் சொற்கேட்
டுடனாகி யுழிதந்தேன் உணர்வொன் றின்றி
வண்டுலவு கொன்றையங் கண்ணி யானை
வானவர்க ளேத்தப் படுவான் தன்னை
எண்டிசைக்கும் மூர்த்தியாய் நின்றான் தன்னை
ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 7

குண்டர் – மூர்க்கர்

அமண் – உடையின்றியிருத்தல்.

மூர்க்கர்களாய் தடுமாறி இளைய பெண்கள் முன்னிலையில் நாணமின்றி உடையில்லாமல் நின்று உணவைக் கையில் பெற்று நின்றவாறே உண்ணும் சமணத்துறவியரின் சொற்களை மனங்கொண்டு அவர்கள் இனத்தவனாகி நல்லுணர்வில்லாமல் திரிந்த நான், வண்டுகள் சூழ்ந்து திரியும் கொன்றைப் பூ மாலையை அணிந்து வானவர்களால் புகழப்பட்டு, எண் திசையிலுள்ளார்க்கும் தலைவனாய் நிலைபெற்ற எம்பெருமானை ஏழையேனாகிய யான் பண்டு இகழ்ந்தவாறு இரங்கத்தக்கது.

2114. உறிமுடித்த குண்டிகைதங் கையிற் றூக்கி
யூத்தைவாய்ச் சமணர்க்கோர் குண்டாக்
கனாய்க்
கறிவிரவு நெய்சோறு கையி லுண்டு
கண்டார்க்குப் பொல்லாத காட்சி யானேன்
மறிதிரைநீர்ப் பவ்வநஞ் சுண்டான் தன்னை
மறித்தொருகால் வல்வினையேன் நினைக்க
மாட்டேன்
எறிகெடில நாடர் பெருமான் தன்னை
ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 8

உறியில் சுருக்கிட்டு வைத்த கஞ்சிக் கரகத்தைக் கையில் தொங்கவிட்டுக் கொண்டு ஊத்தை வாயினை உடைய சமணர்களிடையே யானும் ஒரு மூர்க்கனாகி, கறியோடு நெய் ஊட்டப்பட்ட சோற்றினைக் கையில் வாங்கி உண்டு காண்பவருக்கு வெறுக்கத்தக்க காட்சிப் பொருளாக இருந்த யான், அலைமோதும் கெடில நதி பாயும் நாட்டிற்குத் தலைவனாய்க் கடலில் தோன்றிய நஞ்சினை உண்ட பெருமானைத் தீவினை உடையேனாய், பரம்பரையாக வழிபட்டுவரும் குடும்பப் பழக்கம் பற்றியும் நினைக்க இயலாதேனாய் ஏழையேனாய்ப் பண்டு இகழ்ந்த செயல் இரங்கத்தக்கது.

ஊத்தைவாய் – பல் விளக்காமையாலாயிற்று

2115. **நிறைவார்ந்த நீர்மையாய்** நின்றான் தன்னை
நெற்றிமேற் கண்ணொன் றுடையான்தன்னை
மறையானை மாசொன்றி லாதான் தன்னை
வானவர்மேல் மலரடியை வைத்தான்
தன்னைக்
கறையானைக் காதார் குழையான் தன்னைக்
கட்டங்கம் ஏந்திய கையி னானை
இறையானை எந்தை பெருமான் தன்னை
ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 9

எல்லார் உள்ளத்திலும் தங்கியிருப்பவனாகிய எந்தை பெருமான் குறைவிலா நிறைவினனாய் நிலைபெற்றவன். நெற்றிக்கண்ணன். வேத வடிவினன். களங்கம் ஏதும் இல்லாதான். தேவர்கள் தலையில் தன் திருவடிகளை வைத்து அருளியவன். கழுத்தில் விடக்கறை உடையவன். குழைக்காதன். கையில் கட்டங்கம் என்ற படைக்கலன் ஏந்தியவன். அத்தகைய பெருமானை ஏழையேன் பண்டு இகழ்ந்த செயல் இரங்கத்தக்கது.

நிறைவார்ந்த நீர்மை – குறைவிலா நிறைவு பொருந்திய குணம். அக்குணமே அவருக்கு வடிவம்.

2116. தொல்லைவான் சூழ்வினைகள் சூழப் போந்து
தூற்றியே னாற்றியேன் சுடராய் நின்று
வல்லையே இடர்தீர்த்திங் கடிமை கொண்ட
வானவர்க்குந் தானவர்க்கும்
பெருமான்தன்னைக்
கொல்லைவாய்க் குருந்தொசித்துக் குழலும்
ஊதுங்
கோவலனும் நான்முகனுங் கூடி எங்கும்
எல்லைகாண் பரியானை எம்மான் தன்னை
ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே. 10

தானவர் – அசுரர். கோவலன் – திருமால்

முல்லை நிலத்திலிருந்த குருந்த மரத்தை, அதன் கண் பிணைத்திருந்த இடைக்குலச் சிறுமியர் ஆடைகளை அவர்கள் மீண்டும் எடுத்துக் கொள்வதற்காக வளைத்துக் கொடுத்து, வேய்ங்குழல் ஊதி அவர்களை வசப்படுத்திய இடையனாய் அவதரித்த திருமாலும், பிரமனும் ஆகிய இருவரும் முயன்றும் அடிமுடிகளின் எல்லையைக் காண இயலாதவாறு அனற்பிழம்பாய் நின்றவனாய்த் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் தலைவனாய், எனக்கும் தலைவனாய், பண்டைத் தீவினைகள் என்னைச் சூழ்ந்தமையாலே அவற்றின் வழியே சென்று அவனைப் பலவாறு இழித்துப் பேசியும் பின் ஒருவாறு தெளிந்தும் நின்ற அடியேனுடைய அறிவுக்கு அறிவாய் நின்று விரைவில் என் சூலை நோயைத் தீர்த்து என்னை ஆட்கொண்ட பெருமானை ஏழையேன் பண்டு இகழ்ந்தவாறு இரங்கத்தக்கது.

2117. முலைமறைக்கப் பட்டுநீ ராடாப் பெண்கள்
முறைமுறையால் நந்தெய்வ மென்று தீண்டித்
தலைபறிக்குந் தன்மையர்க ளாகி நின்று
**தவமேயென் றவஞ்செய்து தக்க
தோரார்**
மலைமறிக்கச் சென்ற இலங்கைக் கோனை
மதனழியச் செற்றசே வடியி னானை
இலைமறித்த கொன்றையந் தாரான் தன்னை
ஏழையேன் நான்பாண்டி கழ்ந்த வாறே. 11

தவமேயென்று அவம்செய்து தக்கது ஓரார்

"காண்பவன் சிவனேயானால் அவனடிக்கன்பு செய்கை மாண்பறம்; அரன்றன் பாதம் மறந்து செய் அறங்களெல்லாம் வீண் செயல்; இறைவன் சொன்ன விதி அறம்".

– சிவஞான சித்தியார்.

"தவமும் அவமும் வகுத்தான் வகை".

– குறள் 377.

மாசுதீரப்புனல் ஆடும் வழக்கத்தை விடுத்து அற்றம் மறைத்தலுக்கு உடை மாத்திரம் அணிந்த சமணசமயப் பெண் துறவியர் தங்கள் தெய்வம் என்று பெரிதும் மதித்துத் தம் கைகளால் தலைமயிரைப் பறிக்கும் பண்புடையவர்களாகித் தங்கள் கொள்கை களிலேயே நிலைநின்று தக்க செயல் இன்னது என்று ஆராய்ந்தறிய இயலாதவர்களாகித் தவம் என்ற பெயரால் பொருத்தமற்ற செயல்களைச் செய்பவர் சமணத் துறவியர். அவர் வழி நின்றேனாகிய யான், புட்பக விமானம் சென்ற வழியைக் கயிலை மலை தடுத்ததனால் அதனைப் பெயர்க்கச் சென்ற இராவணனுடைய வலிமை கெடத்துன்புறுத்திய சிவந்த திருவடிகளை உடையவனாய் இலைகளுக்கு இடையே தோன்றிய கொன்றைப் பூவாலாகிய மாலையை அணிந்த எம்பெருமானைப் பண்டு அறியாமை உடையேனாய் இகழ்ந்த திறம் இரங்கத்தக்கது.

## 4. திருஅதிகை வீரட்டானம் (அடையாளத் திருத்தாண்டகம்)

**(காண வேண்டினார்க்குச் சிவபெருமானின் அடையாளங்களை அருளுவார் போல அருளிச் செய்தது)**

**ப.தொ.எண் : 217** **பதிக எண் : 4**

**2118.** சந்திரனை மாகங்கை திரையால் மோதச்
சடாமகுடத் திருத்துமே சாம வேத
கந்தருவம் விரும்புமே கபால மேந்து
கையனே மெய்யனே கனக மேனிப்
பந்தணவு மெல்விரலாள் பாக னாமே
பசுவேறு மேபரம யோகி யாமே
ஐந்தலைய மாசுணங்கொண் டரையார்க் கும்மே
அவனாகில் அதிகைவீரட்ட னாமே. 1

சந்திரனைப் பெரிய கங்கை தன் அலைகளால் மோதுமாறு சடைமுடியில் வைத்துள்ளான். சாமவேதமாகிய இசையை விரும்புபவன். மண்டையோட்டை ஏந்திய கையினன். பொன்னார் மேனியில், மெல்லிய விரலில் பந்தினை ஏந்திய பார்வதி பாகன். காளையை வாகனமாக உடையவன். மேம்பட்டயோகி. ஐந்தலைப் பாம்பினை இடையில் இறுக்கிக் கட்டியவன் ஆகிய இத்தகைய செயல்களையும் பண்புகளையும் உடைய பெருமான் திருவதிகை வீரட்டானத்தை உகந்தருளியிருப்பவனே.

மாசுணம் – பாம்பு; அணவும் – பொருந்திய
பசு – ஒரு சொல். பல பொருளைக் குறிக்கும். உயிர் வர்க்கத்தையே குறிக்கும். ஆனினத்து இருபாலுக்கும் பொதுவாகவும் குறிப்பர். பால்கொடுக்கும் பசுவாகிய பெண்ணினத்தையும், உழும் எருதாகிய ஆணினைத்தையும் பசுவென்றே குறிப்பிடுவர். இடத்துக்கேற்ப பொருள் கொள்ள வேண்டும்.

---

**2119.** ஏறேறி யேழுலகும் உழிதர் வானே
இமையவர்கள் தொழுதேத்த இருக்கின் றானே
பாறேறு படுதலையிற் பலிகொள் வானே
படஅரவந் தடமார்பிற் பயில்வித் தானே
நீறேறு செழும்பவளக் குன்றொப் பானே
நெற்றிமேல் ஒற்றைக்கண் நிறைவித் தானே
ஆறேறு சடைமுடிமேற் பிறைவைத் தானே
அவனாகில் அதிகைவீரட்ட னாமே. 2

காளை மீது ஏறி ஏழுலகமும் சுற்றி வருபவன். தேவர்கள் தொழுது துதிக்குமாறு இருக்கின்றவன். பருந்துகள் படியும், மண்டையோட்டில் பிச்சை எடுப்பவன். தன் பெரிய மார்பில் படமெடுக்கும் பாம்பு ஊரப் பெற்றவன். நீறு படிந்த செழுமையான பவள மலையை ஒத்த வடிவினன். நெற்றியில் அமைந்த கண் ஒன்று உடையவன். கங்கை தங்கிய சடைமுடிமேல் பிறையைச் சூடியவன். இத்தகைய பெருமான் அதிகை வீரட்டனாவான்.

பாறு – பருந்து. "அவனாகில் அதிகை வீரட்டானமே" பதிக மகுடம்.

2120. முண்டத்திற் பொலிந்திலங்கு மேனி யானே
முதலாகி நடுவாகி முடிவா னானே
கண்டத்தில் வெண்மருப்பின் காறை யானே
கதநாகங் கொண்டாடுங் காட்சி யானே
பிண்டத்தின் இயற்கைக்கோர் பெற்றி யானே
பெருநிலநீர் தீவளிஆ காச மாகி
அண்டத்துக் கப்பாலாய் இப்பா லானே
அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 3

இறந்த பிரமர்களின் தலைமாலையால் பொலிவு பெற்று விளங்கும் திருமேனியினன். உலகில் தோற்றம் நிலை இறுதிகளைச் செய்பவன். கழுத்தில் மகா வராகத்தின் கொம்பினை அணிகலனாக அணிந்தவன். கோபத்தை உடைய பாம்பினைக் கையில் கொண்டு கூத்தாடிக் காட்சி வழங்குபவன். இவ்வுடம்பின் காரணங்களாய் உள்ள தத்துவங்களுக்குச் சார்பாய் உள்ளவன். ஐம்பெரும் பூதங்களாய் அண்டங்களின் புறமும் உள்ளும் இருப்பவன். அத்தகைய பெருமான் அதிகை வீரட்டனாவான்.

காறை – கம்பியாக அமைத்து அணியும் அணிகலம்.
கதம் – கோபம். முண்டம் என்றது இறந்த பிரமர்களது தலைகளை.

2121. செய்யனே கரியனே கண்டம் பைங்கண்
வெள்ளெயிற்றா டரவனே வினைகள் போக
வெய்யனே தண்கொன்றை மிலைத்த சென்னிச்
சடையனே விளங்குமழுச் சூல மேந்துங்
கையனே காலங்கள் மூன்றா னானே
கருப்புவில் தனிக்கொடும்பூண் காமற் காய்ந்த
ஐயனே பருத்துயர்ந்த ஆனேற் றானே
அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 4

நிறத்தால் செய்யவன், கண்டம் கறுத்தவன், பசிய கண்களையும் வெளிய பற்களையும் உடையவாய்ப் படமெடுத்தாடும் பாம்புகளை அணிந்தவன். அடியார்களுடைய வினைகள் நீங்குமாறு அவற்றிற்குப் பகைவனாய் உள்ளவன். குளிர்ந்த கொன்றை சூடிய சடையினன். சூலத்தைத் தாங்கும் கையினன். முக்காலங்களாகவும் உள்ளவன். கரும்பு வில்லினை ஒப்பற்ற வளைந்த அணிகலன் போலக் கைக்கொண்ட மன்மதனைக் கோபித்த தலைவன். உயரமும் பருமையும் உடைய காளை வாகனன். இத்தகைய சிறப்பினை உடையவன் அதிகை வீரட்டானத்துப் பெருமானே.

"உரிய அன்பினில் காண்பவர்க்கு உண்மையாம் பெரிய நல்லடையாளங்கள் பேசினார்" – சேக்கிழார்.

இறைவனுக்குரிய சிறப்படையாளங்களை சுவாமி இப்பதிகம் முழுவதும் குறிப்பிடுகிறார். ஓர்ந்துணர்வாருக்கு இறையுணர்வு பெருகும்.

**2122.** பாடுமே யொழியாமே நால்வே தம்மும்
படர்சடைமேல் ஒளிதிகழப் பனிவெண்
டிங்கள்
சூடுமே அரைதிகழத் தோலும் பாம்புஞ்
சுற்றுமே தொண்டைவாய் உமையோர் பாகங்
கூடுமே குடமுழவம் வீணை தாளங்
குறுநடைய சிறுபூதம் முழக்க **மாக்கூத்
தாடுமே** அந்தடக்கை அனலேந் தும்மே
அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 5

இடைவிடாமல் நால்வேதமும் பாடும் இயல்பினன். பரவிய உடையின் மீது ஒளி சிறக்குமாறு குளிர்ந்த வெள்ளிய பிறையைச் சூடியவன். தன் இடையில் விளங்குமாறு புலித்தோலையும் பாம்பினையும் சுற்றி யிருப்பவன். கொவ்வைக் கனி போன்ற சிவந்த வாயினை உடைய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவன். குறுக அடியிடும் நடையினை உடைய பூதங்கள் குடமுழா, வீணை, தாளம் இவற்றை ஒலிக்குமாறு, ஐந்தொழில்களையும் செய்யும் மேம்பட்ட கூத்தினை ஆடுபவன். அழகிய நீண்ட கையொன்றில் தீயை ஏந்துபவன். அத்தகைய பெருமான் திருவதிகை வீரட்டனே.

---

**2123.** ஒழித்திடுமே உள்குவார் உள்ளத் துள்ள
உறுபிணியுஞ் செறுபகையும் ஒற்றைக்
கண்ணால்
விழித்திடுமே காமனையும் பொடியாய் வீழ
வெள்ளப் புனற்கங்கை செஞ்ச டைமேல்
இழித்திடுமே ஏழுலகுந் தானா கும்மே
இயங்குந் திரிபுரங்க ளோரம் பினால்
அழித்திடுமே **ஆதிமா தவத்து ளானே**
அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 6

தன்னையே தியானிப்பவருடைய உள்ளத்தில் மிக்க நோயையும் அவர்களைத் தாக்கும் உட்பகைகளாகிய காமம் முதலிய ஆறனையும் அடியோடு நீக்குபவன். தனித்திருக்கும் நெற்றிக் கண்ணால் மன்மதன் சாம்பலாகி விழுமாறு நோக்கியவன். நீர் வெண்மையாகிய கங்கையைத் தன் செந்நிறச் சடையில் இறங்கித் தங்குமாறு செய்தவன். ஏழுலக இயக்கத்திற்கும் தானே காரணமாகியவன். வானில் உலாவிய முப்புரங்களையும் ஓர் அம்பினால் அழித்தவன். பண்டு தொட்டு மேம்பட்ட தவத்தைச் செய்பவனாய்த் தன் அடியவர்களுக்குத் தவம் செய்ய வழிகாட்டி ஆகியவன் அத்தகைய பெருமான் அதிகை வீரட்டத்தானே.

பகைகள் ஆறாகும். அவை காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்.

ஆதி மாதவம் – தவம் செய்வார் பலருக்கும் முதலாய் நின்று காட்டிய தவமாதலின் ஆதி மாதவம்.

2124. குழலோடு கொக்கரைகைத் தாளம் மொந்தை
குறட்பூதம் முன்பாடத் தான்ஆ டும்மே
கழலாடு திருவிரலாற் கரணஞ் செய்து
**கனவின்கண் திருவுருவந் தான்காட் டும்மே**
எழிலாருந் தோள்வீசி நடமா டும்மே
ஈமப்பு றங்காட்டில் ஏமந் தோறும்
அழலாடு மேஅட்ட மூர்த்தி யாமே
அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 7

குழல், சங்கு, ஒருதலைப்பறை முதலிய இயங்களை இயக்கிக் கைத்தாளமிட்டுக் குட்டையான பூதங்கள் பாட அப்பாடலுக்கு ஏற்பத் தான் ஆடுபவன். திருவடிகளிலே அசைகின்ற திருவிரல்களால் உயிர்களின் நுண்ணுடம்புகளை அசைத்துச் செயற்படுத்தி, அடியார்களுடைய கனவிலே தன் திருவுருவை அவர்களுக்குக் காட்டுபவன். அழகு நிரம்பிய தோள்களை விரைவாக அசைத்துக் கூத்தாடுபவன். ஊருக்குப் புறத்தே உள்ள சுடுகாட்டில் இரவு தோறும் நெருப்பின்கண் நின்று ஆடுபவன். எட்டு உரு உடையவன். அத்தகைய பெருமான் அதிகை வீரட்டனே.

இத்திருப்பதிகத்தின் அனைத்துத் தாண்டகங்களிலும் முதல் மூன்று அடிகளில் வினவுவதாகவும், ஈற்றடி தெளிவுறுத்துவதாகவும் பாடியிருப்பதை உணர்ந்து மகிழ்வோமாக!

2125. மாலாகி மதமிக்க களிறு தன்னை
வதைசெய்து மற்றதனின் உரிவை கொண்டு
மேலாலுங் கீழாலுந் தோன்றா வண்ணம்
வெம்புலால் கைகலக்க மெய்போர்த் தானே
கோலாலம் படவரைநட் டரவு சுற்றிக்
குரைகடலைத் திரையலறக் கடைந்து கொண்ட
ஆலால முண்டிருண்ட கண்டத் தானே
அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 8

மதம் மிகுதலானே மயக்கம் கொண்ட ஆண் யானையைக் கொன்று அதன் தோலினைத் தனியே உரித்துத் தன் திருமேனியை முழுதுமாக அது மறைக்குமாறு உதிரப் பசுமை கெடாது உடம்பில் போர்த்தவன். ஆரவாரம் ஏற்பட மந்தரமலையை மத்தாக நட்டு, வாசுகியைக் கடைகயிறாகச் சுற்றி, ஒலிக்கின்ற கடலை அதன் அலைகள் ஒலிக்குமாறு கடைந்ததனால் ஏற்பட்ட பெரிய விடத்தை உட்கொண்டு இருண்ட கழுத்தினன். அத்தகைய பெருமான் அதிகை வீரட்டனே.

கோலாகலம் – கோலாலம் – ஆரவாரம்

**2126.** செம்பொனாற் செய்தழகு பெய்தாற் போலுஞ்
செஞ்சடையெம் பெருமானே தெய்வ நாறும்
வம்பினாண் மலர்க்கூந்தல் உமையாள் காதல்
மணவாள னேவலங்கை மழுவா ளனே
நம்பனே நான்மறைகள் தொழுநின் றானே
நடுங்காதார் புரமூன்றும் நடுங்கச் செற்ற
அம்பனே அண்டகோ சரத்து ளானே
அவனாகில் அதிகைவீரட்ட னாமே. 9

செம்பொன்னாற் செய்து அதன் கண் அழகினை ஊட்டினாற்போல இயற்கையாக அமைத்த செஞ்சடைப் பெருமான், இயற்கையான தெய்வ மணம் கமழும் தன்மையோடு மலர்களையும் அணியும் கூந்தலை உடைய உமாதேவி யினுடைய காதலுக்கு இருப்பிடமான கணவன். வலக்கையில் மழுப்படையை உடையவன். நம்மால் விரும்பப்படுபவன். நான்கு வேதங்களும் வழிபடுமாறு இருப்பவன். அச்சமில்லாத அசுரர்களின் மும்மதில்களும் நடுங்குமாறு அவற்றை அழித்த அம்பினன். எல்லா உலகங்களிலும் நீக்கமற நிறைந்து நிற்பவன். அத்தகைய பெருமான் அதிகை வீரட்டனே.

---

**2127.** எழுந்ததிரை நதித்திவலை நனைந்த திங்கள்
இளநிலாத் திகழ்கின்ற வளர்சடையனே
கொழும்பவளச் செங்கனிவாய்க் **காமக் கோட்டி**
கொங்கையிணை அமர்பொருது கோலங் கொண்ட
தழும்புளவே வரைமார்பில் வெண்ணூ லுண்டே
சாந்தமொடு சந்தனத்தின் அளறு தங்கி
அழுந்தியசெந் திருவுருவில் வெண்ணீற் றானே
அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 10

காமக்கோட்டம் – காஞ்சிபுரத்தில் உள்ளது. ஏலவார் குழலாள் உமைநங்கை என்றும் ஏத்தி வழிபட்ட காலகாலன். உயிர்களாகிய நாமெல்லாம் உய்ய வேண்டுமென்பதற்காக அம்மை மூலம் நமக்கு வழிபடும் முறைகளை எடுத்தோதினார். நாமும் அவ்வாறு வழிபட்டு உய்ய வேண்டுமென்று அப்பர் சுவாமிகளும் முடிந்த இடத்திலெல்லாம் ஏகம்பத்தைப் பாடுவார்.

கங்கையிலிருந்து வெளிப்பட்ட அலைகளின் துளிகளால் நனைக்கப்பட்ட பிறைச் சந்திரன் மெல்லிய ஒளியோடு விளங்குகின்ற நீண்ட சடையினன். கச்சியில் காமக்கோட்டத்திலுள்ள பவளம் போலச் சிவந்த, கனிபோன்று மென்மையை உடைய வாயினள் ஆகிய உமாதேவியின் இரு தனங்களும் எம்பெருமான் மார்பில் போரிட்டதனால் ஏற்பட்ட அழகிய தழும்புகள் தங்கிய மலைபோன்ற அவன் மார்பில் பூணூல் உள்ளது. சந்தனமும், நறுமணக் கூட்டுக்களும் சேறுபோலப் பொருந்திய தன் செம்மேனியில் வெண்ணீறு அணிந்துள்ளான். அத்தகைய பெருமான் அதிகை வீரட்டனே.

2128. நெடியானும் நான்முகனும் நேடிக் காணா
நீண்டானே நேரொருவ ரில்லா தானே
கொடியேறு கோலமா மணிகண் டன்னே
கொல்வேங்கை யதளனே கோவ ணவனே
பொடியேறு மேனியனே ஐயம் வேண்டிப்
புவலோகந் திரியுமே புரிநூ லானே
அடியாரை அமருலகம் ஆள்விக் கும்மே
அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே. 11

தனக்கு ஒப்பார் பிறர் இல்லாத சிவபெருமான் திருமாலும் பிரமனும் தம்முயற்சியால் தேடியும் காண இயலாதவாறு நீண்ட வடிவு கொண்டவன். தன் சிறப்புத் தோன்றக் கொடியை உயர்த்துமாறு அமைந்த நீலகண்டன். கொலைத் தொழிலை உடைய வேங்கையின் தோலைக் கோவணத்தின் மீது ஆடையாக உடுத்தவன். திருநீறு பூசிய திருமேனியினன். பூணூலை அணிந்த அப்பெருமான் பிச்சை ஏற்றலைக் கருதி மேலுலகங்களிலும் திரிபவன். தன் அடியவர்களைத் தேவர் உலகத்தை ஆளுமாறு செய்பவன். அத்தகைய பெருமான் அதிகை வீரட்டனே.

## 5. திருஅதிகை வீரட்டானம் (போற்றித் திருத்தாண்டகம்)

**ப.தொ.எண் : 218** **போற்றி – வணக்கம்** **பதிக எண் : 5**

2129. எல்லாம் சிவனென்ன நின்றாய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி
கொல்லார் மழுவாட் படையாய் போற்றி
கொல்லுங்கூற் றொன்றை யுதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி
கற்றா ரிடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியனரணம் எய்தாய் போற்றி
வீரட்டங் காதல் விமலா போற்றி. 1

ஆரியத்துள் 'நம' என்பது போலத் திருமுறைகளுள் 'போற்றி' பயின்று வரும். இகர வியங்கோள் விகுதி பெற்றுக் ''காப்பாற்றுக'' என்ற பொருளில் வந்ததென்பார் நச்சினார்க்கினியர். வணக்கம் என்றலுமாம். போற்றி போற்றி என்ற துதிகள் பலவும் சொல்லுதலால் போற்றித் திருத்தாண்டகம் எனப்படுகிறது.

எல்லாப் பொருள்களும் சிவனுடைய தொடர்புடையன என்று கூறுமாறு எல்லாப் பொருள்களிலும் கலந்திருப்பவனே! தீ கதிர் மதியம் ஆகி நிற்பவனே! கொலைத் தொழிலைச் செய்யும் மழு என்ற படைக்கலம் ஏந்தியவனே! உயிர்களை உடல்களிலிருந்து பிரிக்கும் கூற்றுவனை உதைத்தவனே! அனுபவப் பொருளை ஞானதேசிகர்பால் கேட்டு அறியாதவருடைய மானதக்காட்சிக்கு அரியவனே! முறையாகக் குருவிடம் உபதேசம் பெற்றவர்களுடைய துயரை நீக்குபவனே! வில்லினைக் கொண்டு பெரிய மதில்களை அழித்தவனே! அதிகை வீரட்டத்தினை உகந்தருளியிருக்கும் களங்கமற்றவனே! உன்னை வணங்குகிறேன்.

2130. பாட்டுக்கும் ஆட்டுக்கும் பண்பா போற்றி
பல்லூழி யாய படைத்தாய் போற்றி
ஓட்டகத்தே ஊணா உகந்தாய் போற்றி
உள்குவா ருள்ளத் துறைவாய் போற்றி
காட்டகத்தே ஆடல் மகிழ்ந்தாய் போற்றி
கார்மேக மன்ன மிடற்றாய் போற்றி
ஆட்டுவதோர் நாக மசைத்தாய் போற்றி
அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 2

பதிக மகுடம் – அலைகெடில வீரட்டத்தாள்வாய் போற்றி

பாடுதலையும், கூத்து நிகழ்த்துதலையும் பண்புகளாக உடையவனே! பல ஊழிக்காலங் களையும் படைத்தவனே! மண்டையோட்டில் இரந்து பெறுவனவற்றையே உணவாக விரும்பி ஏற்றவனே! உன்னைத் தியானிப்பார் உள்ளத்தைத் தங்குமிடமாக உடையவனே! சுடுகாட்டில் கூத்தாடுதலை உகப்பவனே! கார்மேகம் போன்ற கறுத்த கழுத்தை உடையவனே! ஒதுங்கியிருந்து படமெடுத்து ஆடச்செய்ய வேண்டிய பாம்பினை இடையில் இறுக்கிக் கட்டிக் கொள்பவனே! அலைகள் வீசும் கெடில நதியை அடுத்த அதிகை வீரட்டானத்திலிருந்து உயிர்களை ஆள்பவனே – உன்னை வணங்குகிறேன்.

2131. முல்லையங் கண்ணி முடியாய் போற்றி
முழுநீறு பூசிய மூர்த்தீ போற்றி
எல்லை நிறைந்த குணத்தாய் போற்றி
ஏழ்நரம்பி னோசை படைத்தாய் போற்றி
சில்லைச் சிரைத்தலையில் ஊணா போற்றி
சென்றடைந்தார் தீவினைகள் தீர்ப்பாய் போற்றி
தில்லைச்சிற் றம்பலம் மேயாய் போற்றி
திருவீரட் டானத்தெஞ் செல்வா போற்றி. 3

சில்லை – வட்டம், சிரை–மழிப்பு.
கண்ணி – முடியில் அணியும் மாலை.
தார் – மார்பில் அணியும் மாலை.

முடியில் முல்லை மாலை சூடியவனே! உடல் முழுவதும் திருநீறு பூசியவனே! எல்லையற்ற நற்பண்புகளை உடையவனே! யாழின் ஏழு நரம்புகளிலும் ஏழுவகை ஓசையைப் படைத்தவனே! உருண்டை வடிவினதாகிய மயிர் நீங்கிய, மண்டை ஓட்டில் உணவு பெறுபவனே! உன்னை வந்து வழிபடுபவர்களின் தீவினைகளை நீக்குபவனே! தில்லைச் சிற்றம்பலத்தை உகந்தருளி யிருக்கிறவனே! அதிகை வீரட்டானத்தில் உகந்தருளியிருக்கும் எம்செல்வனே! உன்னை வணங்குகிறேன்.

2132. சாம்ப ரகலத் தணிந்தாய் போற்றி
தவநெறிகள் சாதித்து நின்றாய் போற்றி
கூம்பித் தொழுவார்தங் குற்றே வலைக்
குறிக்கொண் டிருக்குங் குழகா போற்றி
பாம்பும் மதியும் புனலுந் தம்மிற்
பகைதீர்த் துடன்வைத்த பண்பா போற்றி
ஆம்பல் மலர்கொண் டணிந்தாய் போற்றி
அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 4

கூம்புதல் – மனம் ஒருங்கி நிற்றல்

மார்பில் திருநீறு பூசியவனே! அடியார்கள் மேற்கொள்ளும் தவநெறிகள் அவற்றிற்கு உரிய பயன்களைத் தரும்படி செய்து நிற்பவனே! ஐம் பொறிகளையும் மனத்தால் அடக்கி உன்னை வழிபடுபவர்கள் செய்யும் சிறிய தொண்டுகளை உள்ளத்துக்கொண்டு அவர்களுக்கு அருள் செய்ய இருக்கும் இளையோனே! பாம்பும், பிறையும், கங்கையும் தம்மிடையே பகை இன்றி ஒருசேர இருக்குமாறு அவற்றைச் சடையில் அணிந்த பண்பனே! ஆம்பற் பூக்களையும் அணிந்தவனே! அலைகளை உடைய கெடில நதிக் கரையிலமைந்த அதிகை வீரட்டானத்திருந்து எல்லோரையும் ஆள்பவனே! உன்னை வணங்குகிறேன்.

**2133.** நீறேறு நீல மிடற்றாய் போற்றி
நிழல்திகழும் வெண்மழுவாள் வைத்தாய் போற்றி
கூறே றுமையொருபாற் கொண்டாய் போற்றி
கோளரவம் ஆட்டுங் குழகா போற்றி
ஆறேறு சென்னி யுடையாய் போற்றி
அடியார்கட் காரமுத மானாய் போற்றி
ஏறேற என்றும் உகப்பாய் போற்றி
யிருங்கெடில வீரட்டத் தெந்தாய் போற்றி. 5

திருநீறு பூசிய நீலகண்டனே! ஒளி விளங்கும் வெள்ளிய மழுப்படையை ஏந்தியவனே! தன் உடலில் ஒரு கூறாகப் பொருந்துமாறு உமாதேவியை இடப்பாகமாகக் கொண்டவனே! கொடிய பாம்புகளை ஆடச்செய்யும் இளையவனே! கங்கை தங்கிய தலையினனே! அடியவர்களுக்குக் கிட்டுதற்கு அரிய அமுதம் ஆயினவனே! காளையை வாகனமாக ஏறிச் செல்லுதலை என்றும் விரும்புபவனே! கெடில நதிக் கரையிலுள்ள பெரிய அதிகை வீரட்டானத்தை உகந்தருளியிருக்கும் எந்தையே! உன்னை வணங்குகிறேன்.

**2134.** பாடுவார் பாட லுகப்பாய் போற்றி
**பழையாற்றுப் பட்டீச் சுரத்தாய் போற்றி**
வீடுவார் வீடருள வல்லாய் போற்றி
வேழத் துரிவெருவப் போர்த்தாய் போற்றி
நாடுவார் நாடற் கரியாய் போற்றி
நாக மரைக்கசைத்த நம்பா போற்றி
ஆடும்**ஆன் ஐந்தும்** உகப்பாய் போற்றி
அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 6

உன்னையே விரும்பிப் பாடும் அடியார்களுடைய பாடல்களை விரும்பிச் செவிமடுக்கின்றவனே! பழையாற்றைச் சார்ந்த பட்டீச்சரத்தை உகந்தருளியிருப்பவனே! உலகப் பற்றறுத்த அடியார்களுக்கு வீடுபேற்றினை அருள வல்லவனே! உமாதேவி அஞ்சுமாறு யானைத் தோலைப் போர்த்திக் கொண்டவனே! தம் முயற்சியாலே உன்னை அடைய விரும்புபவர்கள் ஆராய்ந்து அறிதற்கு அரியவனே! இடையிலே பாம்பினை இறுகக் கட்டியிருப்பவனே! பஞ்சகவ்விய அபிடேகத்தை விரும்புபவனே! அலைகெடில வீரட்டானத்தை உகந்து உலகை ஆள்பவனே! உன்னை வணங்குகின்றேன்

இன்று பசுவின் மலமன்றே இவ்வுலகில் – நின்ற மலம் அனைத்தும் நீக்குவது – களிறு 7.

ஆன்ஐந்து – பசுவிலிருந்து பெறப்படும் பால், தயிர், நெய், சாணம், சிறுநீர்.

பழையாறு – பட்டீச்சுரமென்பன அருகருகே உள்ள தலங்கள். திருஆன்பட்டிஎன்னும் திருப்பேரூர் பட்டீச்சுரத்தினின்றும் வேறு பிரித்துணர இவ்வாறு பாடுகிறார்.

2135. மண்துளங்க ஆடல் மகிழ்ந்தாய் போற்றி
மால்கடலும் மால்விசும்பு மானாய் போற்றி
விண்துளங்க மும்மதிலு மெய்தாய் போற்றி
வேழத் துரிமூடும் விகிர்தா போற்றி
பண்துளங்கப் பாடல் பயின்றாய் போற்றி
பார்முழுதும் ஆய பரமா போற்றி
கண்துளங்கக் காமனைமுன் காய்ந்தாய் போற்றி
கார்க்கெடிலங் கொண்ட கபாலி போற்றி.
7

விகிர்தன் – (உலகியலின்) வேறுபட்டவன்

நில உலகம் அசையுமாறு கூத்தாடுதலை மகிழ்ந்தவனே! பெரிய கடலும் வானமும் ஆனவனே! வானுலகம் நடுங்கும்படி மூன்று கோட்டைகளையும் அம்பு எய்து அழித்தவனே! யானைத் தோலினால் உடம்பை மூடிக் கொள்ளும், உலகியலுக்கு வேறுபட்டவனே! பண்கள் பொருந்தப் பாடுதலில் பழகியவனே! உலகம் முழுவதுமாய் பரவியிருக்கும் மேம்பட்டவனே! கண் அசைத்துத் திறந்த அளவில் முற்காலத்தில் மன்மதனை அழித்தவனே! நீரின் ஆழத்தால் கருநிறம் கொண்ட கெடிலக்கரை வீரட்டானத்தை உகந்து கொண்ட, மண்டைஓட்டை ஏந்தியவனே! உன்னை வணங்குகின்றேன்.

2136. வெஞ்சினவெள் ஏறூர்தி யுடையாய் போற்றி
விரிசடைமேல் வெள்ளம் படைத்தாய் போற்றி
துஞ்சாப் பலிதேருந் தோன்றால் போற்றி
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
நஞ்சொடுங்குங் கண்டத்து நாதா போற்றி
நான்மறையோ டாறங்க மானாய் போற்றி
**அஞ்சொலாள்** பாகம் அமர்ந்தாய் போற்றி
அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி.
8

அம்சொல் – அழகிய சொல். சொற்கு அழகாவது, கேள்வியிலும், பயனிலும் இன்பந்தருவது.

மிக்க சினத்தையுடைய வெண்ணிறக் காளையை வாகனமாக உடையவனே! விரிந்த சடையின் மேல் கங்கை வெள்ளத்தைத் தங்கச் செய்தவனே! உறங்காது பிச்சை எடுக்கும் மேம்பட்டவனே! உன்னை வழிபடும் ஒழுக்கத்தை உடைய அடியார்களின் துயரைத் துடைப்பவனே! விடம் தங்கிய கழுத்தை உடைய தலைவனே! நான்கு வேதங்களும் ஆறு அங்கங்களும் ஆகியவனே! இனிய சொல்லை உடைய பார்வதி பாகனே! அலைகெடில வீரட்டத்து ஆள்வாய்! உன்னை வணங்குகின்றேன்.

நமது தாய்மொழியாம் தமிழில் மலர் அருச்சனை புரிவதற்கு இப்பதிகம் ஏற்ற பதிகமாகும். இருபத்தொன்றாம் நூற்றாண்டில் சிவப்பேறுடன் வாழ்ந்து கொண்டிருக்கும் பதிப்பாசிரியர் உட்பட ஆயிரக்கணக்கான சிவனடியார்களுக்கு இப்பதிகம் மனனப் பதிகமாகும். அன்றாட சிவபூசையில் 108/1008 மலர்கள் தூவி அர்ச்சனை புரியும்போது மற்ற போற்றிப் பதிகங்களுடன் இப்போற்றிகளையும் போற்றி செய்து போற்றியை நிறைவு செய்வர்.

2137. சிந்தையாய் நின்ற சிவனே போற்றி
சீபர்ப் பதஞ்சிந்தை செய்தாய் போற்றி
புந்தியாய்ப் புண்டரிகத் துள்ளாய் போற்றி
புண்ணியனே போற்றி புனிதா போற்றி
சந்தியாய் நின்ற சதுரா போற்றி
தத்துவனே போற்றியென் தாதாய் போற்றி
அந்தியாய் நின்ற அரனே போற்றி
அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 9

புந்தி – புத்தி; புண்டரிகம் – தாமரை. இங்கு இதயத்தாமரை. ஆசனம், மூர்த்தி, தலம் என்னும் முறையில் செய்யப்படும் வழிபாட்டில் முறையே ஆசனத்திற்கும், மூர்த்திக்கும் மறைமொழிகளாயின. அடியார் உள்ளத்தின் அக வழிபாடாகும். அரன் – அழிப்பவன்.

அடியார் உள்ளத்தை இருப்பிடமாய்க் கொண்டு நிலைபெற்ற சிவபெருமானே! திருப்பருப்பதத்தில் (ஸ்ரீ சைலம், ஆந்திரா) குடிகொண்டு அருள்பவனே! இதயத் தாமரையில் ஞானவடிவாகத் தங்கி யிருப்பவனே! புண்ணியமே வடிவானவனே! தூயனே! காலை, நண்பகல், மாலை என்ற மூன்று சந்திகளாகவும் இருக்கும் மேம்பட்டவனே! உண்மைப்பொருளே! என் தந்தையே! நேரங்களில் சிறந்த அந்திப் பொழுதாக இருக்கும் அரனே! வீரட்டத்திலிருந்து உலகை ஆள்பவனே! உன்னை வணங்குகின்றேன்.

2138. முக்கணா போற்றி முதல்வா போற்றி
முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி
தக்கணா போற்றி தருமா போற்றி
தத்துவனே போற்றியென் தாதாய் போற்றி
தொக்கணா வென்றிருவர் தோள்கை கூப்பத்
துளங்கா தெரிசுடராய் நின்றாய் போற்றி
எக்கண்ணுங் கண்ணிலேன் எந்தாய் போற்றி
எறிகெடில வீரட்டத் தீசா போற்றி. 10

தோள் கைகூப்ப – கைகளைத் தலைக்கு மேலாக எடுத்துக் குவித்து வழிபடுதல்.

துளங்காது – அசையாது. முதல்வன், தலைவன், பதி என்பன ஒரு பொருட் சொற்கள்.

முக்கண்ணனே! முதல்வனே! முருகனுடைய தந்தையே! தென்திசைக் கடவுளே! அறவடிவினனே! மெய்ப்பொருளே! என் தந்தையே! திருமாலும், பிரமனும் ஒன்று சேர்ந்து அண்ணலே என்று அழைத்துக் கை கூப்புமாறு அசையாது ஒளிப்பிழம்பாய் நின்றவனே! வீரட்டானத்து இறைவனே! வேறு எங்கும் பற்றுக் கோடில்லாத அடியேன் தந்தையாகிய உன்னை வணங்குகிறேன். இப்பதிகத்தில் 82 போற்றித் துதிகள் உள்ளன.

## 6. திருஅதிகை வீரட்டானம் (திருவடித் திருத்தாண்டகம்)

### பதிக வரலாறு

திருவதிகை வீரட்டானத்திறைவரை வணங்கி சுவாமிகள் திருத்தொண்டு இயற்றியிருக்கும் நாள்களில், உள்ளத்து மீதூர்ந்த பேரன்பினால் அருளிச் செய்த செந்தமிழ்த் திருப்பதிகங்களுள் ஒன்றாகும் இது.

<u>குறிப்பு</u> : இத்திருத்தாண்டகப் பாடல்கள் எல்லாவற்றிலும் இறைவன் திருவடியையே சிறப்பித்துக் கூறியிருத்தலால் இது, 'திருவடித் திருத்தாண்டகம்' ஆயிற்று. அகத்தியர் தேவாரத் திரட்டில், திருவடிப் பெருமைக்கு, இத்திருப்பதிகமே சிறந்தெடுத்து வைக்கப்பட்டது. அடி என்பது திருவருள் நிறைவு; உபசாரம்.

கடவுட் பொருள், பொருளால் ஒன்றாயினும், தீயும் வெம்மையும்போல் 'சிவமும் சத்தியும்' எனக் குனிகுணத்தன்மையால் இருதிறப்பட்டு, இயைந்து நிற்கும். தீ சுடுதல், அதனது கூறாகிய வெம்மையானேயாதல் போல், சிவம் உலகத்தைத் தொழிற்படுத்தல் அதனது கூறாகிய சத்தியானேயாம். இனி, உலகத்தைத் தொழிற்படுத்துதற்கு அச்சத்தி முழுவதும் வேண்டப்படாது, ஒரு சிறு கூறுதானே அமையுமாகலின், அது இறைவனது திருவடியேயாய் நிற்கும். சத்தி, 'ஞானம், கிரியை (அறிவு, செயல்)' என இரு திறனாய் நிகழுமாதலின், அவை இரண்டுமே இறைவனது இரண்டு திருவடிகளாகும். இதனானே இறைவனுக்குரிய பெருமைகள் பலவும் அவனது திருவடிக்கே உரியனவாகக் கூறப்படும். "வாலறிவன் நற்றாள் தொழஅர் எனின்", "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்", "வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்", "தனக்குவமையில்லா தான்றாள் சேர்ந்தார்", "அறவாழி யந்தணன்றாள் சேர்ந்தார்", "எண்குணத்தான் தாளை வணங்காத் தலை", "இறைவனடி சேராதார்" என, "நினைதல், வணங்கல் முதலிய அனைத்தும் திருவடிக்கேயாக யாண்டும் கூறப்படுதல் காண்க. (குறள். 2, 3, 4, 7, 8, 9, 10). திருவடியே வீடுபேறாய் நிற்கும் என்பதும் இது பற்றியே என்க.

இங்ஙனமாகலின், திருவடியின் பெருமைகளை இத்திருப்பதிகத்தால் வகுத்தருளிச் செய்கின்றார். மேல் நான்காந் திருமுறையுள்ளும் திருவையாற்றுத் திருவிருத்தம், திருவின்னம்பர்த் திருவிருத்தம் இவற்றுள் திருவடியின் பெருமை அருளிச் செய்தமை காணலாம். "போற்றி யருளுக" (தி.8. திருவாசகம் 174) என்னும் திருவெம்பாவைப் பாடல் சிறப்பாக அறியத் தக்கது.

இத்திருப்பதிகத்தின் திருத்தாண்டகங்கள் அனைத்தும், மூன்று, ஆறாம் சீர்கள், மாங்கனிச் சீர்களாய் வந்த அறுசீரடியானே அருளப்பட்டுள்ளன. அதனால், அச்சீர்களின் இடையசையீற்றில் ஒற்றாய் நின்றன பலவும், 'விரித்தல்' என்னும் விகார வகையால் வந்தனவே யாதல் காணலாம். இவ்வாறாகவே, சில இடங்களில் அங்கு வகர யகர ஒற்றுக்கள் இன்றி ஓதுதல் பாடமாகாமை அறியலாம்.

ப.தொ.எண் : 219 பதிக எண் : 6

2139. அரவணையான் சிந்தித் தரற்றும்மடி
அருமறையான் சென்னிக் கணியாமடி
சரவணத்தான் கைதொழுது சாரும்மடி
சார்ந்தார்கட் கெல்லாஞ் சரணாமடி
பரவுவார் பாவம் பறைக்கும்மடி
**பதினெண் கணங்களும்** பாடும்மடி
திரைவிரவு தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 1

அரவணையான் – திருமால்.
அருமறையான் – பிரமன்.
சரவணத்தான் – முருகப்பெருமான்.
அரற்றுதல் – கூப்பிடுதல்.

அலைகள் ஒன்றோடொன்று மோதுகின்ற கெடில நதி பாயும் நாடனாய்த் திருவதிகை வீரட்டானத்தை உகந்தருளியுள்ள எம் செல்வனுடைய திருவடிகள் திருமாலால் தியானித்துப் போற்றப்படும். பிரமனுடைய தலைகளுக்கு அணிகளாகும். முருகனால் தொழப்பட்டு அணுகப்பெறும். பற்றுக் கோடாகக் கொண்ட அடியவர்களுக்கெல்லாம் அடைக்கலம் நல்கும். தம்மை வழிபடுபவர் களுடைய பாவத்தைப் போக்கும். பதினெண் தேவ கணத்தவராலும் பாடப்பெறும்.

## பதினெண் கணங்கள்

| வ.எண் | பெயர் | பணிகள் |
|---|---|---|
| 1. | தேவர் | படைத்தல், காத்தல், ஒடுக்குதல் தொழில்களை நெறிப்படுத்த சிவபெருமானால் படைக்கப்பட்டவர்கள். |
| 2. | அசுரர், தானவர் | அரக்கர்களில் சிலர். சிவபூசை செய்து தவ வலிமை பெற்றுத் தேவர்களுடன் போர் புரிபவர்கள். |
| 3. | முனிவர் | அருந்தவத்தோர். பலவகையினர் உண்டு. |
| 4. | கருடர் | கூரிய பார்வையுடன் பறக்கும் ஆற்றல் பெற்ற தேவ இனம். |
| 5. | கின்னரர் | குதிரை முகமும், மானிட உடலும் உடையவர்கள். கின்னர வாத்தியம், யாழ் இசைப்போர். |
| 6. | கிம்புருடர் | மானுட முகமும், குதிரை உடலும் உடையவர்கள். இசைவாணர்கள். |
| 7. | யட்சர் | வேத வேள்விகளைச் செய்பவர்கள். |
| 8. | வித்தியாதரர் | பல்வகை வித்தைகளைப் புரிபவர். |
| 9. | அரக்கர், இராக்கதர் | மிகுந்த வலிமையுடையவர். தீயசக்திகளாகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர். |
| 10. | கந்தருவர் | இசைவாணர்கள். |
| 11. | சித்தர் | அணிமா, இலகிமா என்ற அட்டமாசித்திகள் கைவரப் பெற்றவர்கள். |
| 12. | சாரணர் | தேவலோக அரசுப் பணிகளில் உள்ளவர்கள். |

| 13. | பூதர் | ஐம்பூதங்கள், பிறபணி பூதங்கள். |
|---|---|---|
| 14. | பைசாசர் | வேதாளங்கள். முறையான உடல்பெறாத தேவலோக உயிர்கள். |
| 15. | தாரகையர் | விண்மீன்கள். நட்சத்திரங்கள். |
| 16. | நாகர் | தேவர்களில் பழங்குடி இனத்தவர். நாகத்தை வழிபட்டவர். |
| 17. | ஆகாச வாசிகள் | தேவலோகப் பொதுமக்கள். |
| 18. | போக பூமியர் | முற்பிறவி நல்வினைகளால் போகம் அனுபவிப்பவர். |

பதினெண் கணம் – பதினெட்டுக் கூட்டம்; இக்கூட்டத்தினர் அனைவரும் தேவ இனத்தவர்; அவர் இன்னர் என்பதனை, ''பதினெண்கணங்களாவார். 1. தேவரும் 2. அசுரரும் 3. முனிவரும் 4. கின்னரரும் 5. கிம்புருடரும் 6. கருடரும் 7. இயக்கரும் 8. இராக்கதரும் 9. கந்தருவரும் 10. சித்தரும் 11. சாரணரும் 12. வித்தியாதரரும் 13. நாகரும் 14. பூதரும் 15. வேதாளமும் 16. தாராகணமும் 17. ஆகாசவாசிகளும் 18. போகபூமியோரும் என இவர்" என்னும் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்தின் உரையாலும்,

"விரவுசா ரணரே சித்தர் விஞ்சையர் பசாசர் பூதர்
கருடர்கின் னரர்இயக்கர் காந்தர்வர் சுரர்த யித்தியர்
உரகர்ஆ காச வாசர்உத்தர குருவோர் யோகர்
நிருதர்கிம் புருடர் விண்மீன் நிறைகணம் மூவா றாமே"

எனும் சூடாமணி நிகண்டுப் பாவாலும், பிறவற்றாலும் அறியலாம்.

2140. கொடுவினையா ரென்றுங் குறுகாவடி
குறைந்தடைந்தார் ஆழாமைக் காக்கும்மடி
படுமுழவம் பாணி பயிற்றும்மடி
பதைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தவடி
கடுமுரணே றூர்ந்தான் கழற்சேவடி
கடல்வையங் காப்பான் கருதும்மடி
நெடுமதியங் கண்ணி யணிந்தானடி
நிறைகெடில வீரட்டம் நீங்காவாடி. 2

கடல் வையங் காப்பான் – கடல் சூழ்ந்த பூலோகத்தைக் காக்கும் திருமால்.

விரைந்து செல்வதாய் ஏனைய காளைகளினின்றும் மாறுபட்ட காளையை ஊர்பவனும், நீண்ட பிறையை முடிமாலையாக அணிந்தவனும், கெடில நதிக்கரையிலுள்ள அதிகை வீரட்டானத்தை நீங்காது உகந்தருளியிருப்பவனும் ஆகிய எம்பெருமானுடைய திருவடிகள் தீவினை உடையவரால் ஒரு காலும் அணுகப்பெறாதன. நலிவுற்றுச் சரணாக அடைந்தவரை அழியாமல் காப்பன. முழவு ஒலித்தலையும் தாளம் இடுதலையும் பயிற்றுவிப்பன. வெகுண்டெழுந்த கொடிய கூற்றுவன் மீது பாய்ந்தன. கடலால் சூழப்பட்ட இவ்வுலகைக் காக்கும் திருமாலால் விரும்பிப் போற்றப்படுவன.

2141. வைதெழுவார் காமம்பொய் போகாவடி
வஞ்ச வலைப்பாடொன் றில்லாவடி
கைதொழுது நாமேத்திக் காணும்மடி
கணக்கு வழக்கைக் கடந்தவடி
நெய்தொழுது நாமேத்தி ஆட்டும்மடி
நீள்விசும்பை ஊடறுத்து நின்றவடி
தெய்வப் புனற்கெடில நாடன்னடி
திருவீரட்டானத் தெஞ் செல்வன்னடி. 3

வைதல் – கேடு கூறுதல்; கணக்கு – எண்.
வழக்கு – சொற்றொடர்.
நெய் – ஆனெய், தேனெய், எண்ணெய்.

கெடில நாடனாய் அதிகை வீரட்டத்தை உகந்தருளிய செல்வனாகிய எம் பெருமானுடைய திருவடிகள் எம் பெருமானைத் தூற்றிக் கொண்டே துயிலெழுபவருடைய தீய விருப்பங்களே நிறைவேறச் செய்வன; வஞ்சனையாகிய வலையிலே அகப்படாதன. கையால் தொழுது நாவினால் துதித்து நாம் அகக் கண்ணால் காண வாய்ப்பு அளிப்பன. உலகத்தார் கணக்கிடும் எல்லையைக் கடந்து நிற்பன. அடியவராகிய நாம் உடலால் தொழுது நாவால் துதித்துக் கையால் நெய் அபிடேகம் செய்யப் பொருந்துவன. நீண்ட வானுலகையும் கடந்து எங்கும் நீக்கமற நிறைந்து நிற்பன.

2142. அரும்பித்த செஞ்ஞாயி றேய்க்கும்மடி
அழகெழுத லாகா அருட்சேவடி
சுரும்பித்த வண்டினங்கள் சூழ்ந்தவடி
சோமனையுங் காலனையுங் காய்ந்தவடி
பெரும்பித்தர் கூடிப் பிதற்றும்மடி
பிழைத்தார் பிழைப்பறிய வல்லவடி
திருந்துநீர்த் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 4

தெளிவான நீரை உடைய கெடில நதி பாயும் நாட்டினனாய், திருவீரட்டானத்தில் உகந்தருளியிருக்கும் எம் செல்வனாகிய எம்பெருமானுடைய திருவடிகள் தாமரையை அரும்பச் செய்யும் காலையில் தோன்றும் செந்நிறக் கதிரவனை நிறத்தாலும் ஒளியாலும் ஒப்பன. தம் அழகை ஓவியத்து எழுதலாகாத வனப்பினவாய் அடியார்களுக்கு அருளை வழங்குவன. சுரும்புகளும் வண்டுகளும் சுற்றித் திரியும் வாய்ப்பினை அளிப்பன. சந்திரனையும் கூற்றுவனையும் வெகுண்டன. பெருவிருப்புடைய அடியவரால் குழாமாகப் போற்றப்படுவன. தவறு செய்தவர்களுடைய தவறுகளை அறியும் ஆற்றல் உடையன.

2143. ஒருகாலத் தொன்றாகி நின்றவடி
ஊழிதோ றூழி உயர்ந்தவடி
பொருகழலும் பல்சிலம்பும் மார்க்கும்மடி
புகழ்வார் புகழ்தகைய வல்லவடி
இருநிலத்தார் இன்புற்றங் கேத்தும்மடி
இன்புற்றார் இட்டபூ ஏறும்மடி
திருவதிகைத் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 5

கழல் – வலக்கால் (ஆடவர்க்கு).
சிலம்பு – இடக்கால் (பெண்டிர்க்கு).
அம்மையப்பனாய் செம்பாதியாய் இயைந்து நிற்றல் அருளிச் செய்யப்பட்டது.

கெடில நாட்டுத் திருவதிகை வீரட்டானத்து எம் செல்வனுடைய திருவடிகள் படைப்புக் காலத்து ஒன்றாகி நின்று முற்றழிப்புக் காலத்தில் மாயையைத் தொழிற்படுத்தாது தம் நிலையிலேயே நிற்பன. ஒன்றில் கழலும் மற்றொன்றில் சிலம்பும் ஒலிக்குமாறு அமைந்தன. புகழ்வாருடைய புகழ் உரைகளுக்கு முடிவு காண இயலாதபடி தடுக்கும் ஆற்றலை உடையன. இப்பெரிய நில உலகிலுள்ளார் மகிழ்ந்து துதிக்கும் வாய்ப்பினை அளிப்பன. அவ்வாறு இன்புற்று அடியவர்கள் அருச்சித்த பூக்களைத் தம்பால் தாங்கி நிற்பன.

2144. திருமகட்குச் செந்தா மரையாமடி
சிறந்தவர்க்குத் தேனாய் விளைக்கும்மடி
பொருளவர்க்குப் பொன்னுரையாய் நின்றவடி
புகழ்வார் புகழ்தகைய வல்லவடி
உருவிரண்டு மொன்றோடொன் றொவ்வாவடி
உருவென் றுணரப் படாதவடி
திருவதிகைத் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. 6

அழகிய கெடிலநாடனாய திருவதிகை வீரட்டானத்து எம்செல்வன் சேவடிகள் திருமகளுக்குச் செந்தாமரை போல்வன. சிறந்த அடியார்களுக்குத் தேன் போல இனிப்பன. செல்வர்களுக்கு அவர்கள் செல்வத்தைச் செலவிடும் திறத்தை ஓர்ந்து அறிய உரைகல்லாய் இருப்பன. புகழ்பவர் புகழ் எல்லையைத் தடுக்க வல்லன. வலம் இடம் இருபுறத்து அடிகளும் ஆண் அடியும் பெண் அடியுமாய் ஒன்றோடொன்று ஒவ்வாது அமைந்திருப்பன. தமக்கு உருவம் உடைமையே இயல்பு என்று உணரப்படமுடியாமல் உலகம் அருவம் என்ற நிலைகளைக் கடந்திருப்பன.

செல்வம் படைத்தாரது செல்வத்தின் நன்மை, தீமைகளை நுண்ணிதாக அளந்து அவற்றிற்கேற்பப் பயன் கொடுத்தல் அருளப்பட்டது.

உலகோர்க்குச் செல்வம் வாயிலாக இன்பத்தை அருளி, வீடு பெற்றார்க்குத் தானே நேராய் இன்பம் அருளும்.

2145. உரைமாலை யெல்லா முடையவடி
உரையா லுணரப் படாதவடி
வரைமாதை வாடாமை வைக்கும்மடி
வானவர்கள் தாம்வணங்கி வாழ்த்தும்மடி
அரைமாத் திரையி லடங்கும்மடி
அகலம் அளக்கிற்பா ரில்லாவடி
கரைமாங் கலிக்கெடில நாடன்னடி
கமழ்வீரட்டானக் கபாலியடி. 7

கரைகளிலே மக்களின் ஆரவாரத்தை மிகுதியாக உடைய கெடில நதி பாயும் நாட்டில் நறுமணம் கமழும் வீரட்டானத்தை உகந்தருளியிருக்கும், மண்டையோட்டை ஏந்திய சிவபெருமானுடைய திருவடிகள் பாட்டும் உரையுமாகிய சொற்கோவைகளை உடையன. சொற்களால் முழுமையாக உணரப்படாதன. உமாதேவியை மனம் வாடாமல் மகிழ்வாக வைப்பன. வானவர்களால் வணங்கி வாழ்த்தப்படுவன. பிரணவத்தின் இறுதி மகரவொற்றாகிய அரை மாத்திரை ஒலியினுள் ஒடுங்குவன. தம் பரப்பினை யாரும் அளக்கவியலாதபடி எங்கும் பரவி இருப்பன.

உரைமாலை – சொற்கோவை;
பாட்டும் உரையுமாய் அமையும்.

# உரையால் உணரப்படாத அடி

நாம் எழுதிப் படிக்கும் உரைகளால் உணரமுடியாத அடி. அவர் சொல்லும் பொருளுமாகிய உரையை உடையவர். ஆனால் நமது உரைகளெல்லாம் சொல்லை மையமாகவே கொண்டு செல்கின்றன. அட்டமூர்த்தியைப் பொருளெனக் கொண்டு உரையை எழுத வேண்டும். படிப்போரும் பொருளெனக் கொண்டு படிக்கவேண்டும். மொழிபெயர்ப்பு, சொல், பொருளகராதி என்ற அளவில் உரைநூல்களைப் படித்தால் சொல்லளவில் பொருள் விளங்கும். சொற்பொருள் துணையோடு மூலப்பொருளை எந்நேரமும் மனதில் கொண்டு மூலத்தின் துணையுடன் மூலத்தைத் தேட வேண்டும். உரைபொருளாய் இருக்கின்ற அவரே இந்த உரையை எழுதவும், திரும்பத் திரும்ப வாசிக்கவும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்கிறார். உரையார் பொருளுக்கு உலப்பிலான் என்ற இத்திருமுறையின் **2198** ஆம் பாடலை நினைவு கூர்வோம்.

"இட்ட ஏட்டினில் எழுதிய செந்தமிழ்ப் பதிகம்
மட்டு லாங்குழல் வனமுலை மலைமகள் பாகத்து
<u>அட்டமூர்த்தியைப் பொருளென</u> உடைமையால் அமர்ந்து
பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கிய தன்றே". – பெரியபுராணம் **2689**

திருஞானசம்பந்தரின் மதுரை அனல்வாத நிகழ்வுகளை நினைவுகூரும் இப்பாடலில் பட்ட தீயில் போடப்பட்ட ஏடு பசுமையாக விளங்க, அதன் சொற்பொருளாய் சிவபெருமானே இருந்ததாகும் என்று கூறுகிறார்.

எனவே பொருளை உணர்ந்து உரையை வளர்ப்போமாக.

**2146.** நறுமலராய் நாறும் மலர்ச்சேவடி
நடுவா யுலகநா டாயவடி
செறிகதிருந் திங்களுமாய் நின்றவடி
தீத்திரளா யுள்ளே திகழ்ந்தவடி
மறுமதியை மாசு கழுவும்மடி
மந்திரமுந் தந்திரமும் ஆயவடி
செறிகெடில நாடர் பெருமானடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. **8**

கெடிலநாடர் பெருமானாம் திருவீரட்டானத்து எம் செல்வனுடைய திருவடிகள் இயற்கையிலேயே மலர் மணம் உடையனவாய் மலர்களாலும் அருச்சிக்கப்படுவன. அறமும் நீதியும் தம் வடிவமாக உலகியலையும் நாட்டியலையும் நிகழச்செய்வன. உலகிலே கதிரவனும் மதியுமுமாய்ப் புறத்து ஒளிகளைத் தருவன. யோகியர் உள்ளத்தே ஒளிப்பிழம்பாய் உள்ளொளி பெருக்குவன. சந்திரனுக்கு ஏற்பட்ட மாசினைக் கழுவியன. மந்திரங்களும் அவற்றைச் செயற்படுத்தும் செயல்களுமாய் உள்ளன.

மந்திரம் – வழிபாட்டுச் சொல்.
தந்திரம் – வழிபாட்டு நூல்.
நடு என்றது அறத்தையும், நீதியையும்.
நாடு என்பது ஆகுபெயராய் அவற்றது நடையினை உணர்த்தின.

2147. அணியனவுஞ் சேயனவு மல்லாவடி
யடியார்கட் காரமுத மாயவடி
பணிபவர்க்குப் பாங்காக வல்லவடி
பற்றற்றார் பற்றும் பவளவடி
மணியடி பொன்னடி மாண்பாமடி
மருந்தாய்ப் பிணிதீர்க்க வல்லவடி
தணிபாடு தண்கெடில நாடன்னடி
தகைசார்வீ ரட்டத் தலைவன்னடி. 9

தணி – இனிய இசை.
தகைசார் – பெருமை பொருந்திய.
எதிர்மறை முகத்தால் அருளிச் செய்வது வலியுறுத்தற் பொருட்டாகும்.

இனிய இசை பாடப்படும் குளிர்ந்த கெடிலநதி பாயும் நாட்டில் பெருமைபொருந்திய அதிகைவீரட்டானத் தலைவனுடைய திருவடிகள் அடியார்களுக்குப் பக்கத்தில் உள்ளனவாயும், அடியார் அல்லார்க்கு தூரத்தில் உள்ளவாயும் அமைந்திருப்பன. அடியவர்களுக்குக் கிட்டுதற்கு அரிய அமுதம் போன்று உள்ளன. வழிபடுபவர்களுக்குத் துணையாகும் ஆற்றல் உடையன. உலகப் பற்றற்ற சான்றோர்கள் பற்றும் தகையவாய்ப் பவள நிறத்தை உடையன. மணிகள் போலவும் பொன் போலவும் மதிப்பிடற்கரிய பெருமை உடையன. மருந்தாய்ப் பிறவிப் பிணியை அடியோடு நீக்கும் ஆற்றல் உடையன.

2148. அந்தா மரைப்போ தலர்ந்தவடி
அரக்கனையும் ஆற்ற லழித்தவடி
**முந்தாகி முன்னே முளைத்தவடி**
முழங்கழலாய் நீண்டஎம் மூர்த்தியடி
பந்தாடு மெல்விரலாள் பாகன்னடி
பவளத் தடவரையே போல்வானடி
வெந்தார் சுடலைநீ றாடும்மடி
வீரட்டங் காதல் விமலன்னடி. 10

ஒலிக்கும் தழற்பிழம்பாய் வளர்ந்த வடிவினனும் பந்தினை விளையாடும் மெல்லிய விரல்களை உடைய பார்வதி பாகனும், பெரிய பவள மலை போல்வானும், அதிகை வீரட்டத்தை உகந்தருளியிருக்கும் தூயோனும் ஆகிய எம் பெருமானுடைய திருவடிகள் தாமரைப் பூக்கள் போல மலர்ந்துள்ளன. இராவணனுடைய ஆற்றலையும் போக்கியன. ஏனைய பொருள்களின் தோற்றங்களுக்கு முன்னே தோன்றியன. சுடுகாட்டில் எரிக்கப்பட்ட வருடைய சாம்பலில் தோய்வனவாம்.

## முந்தாகி

முந்தாகி முதற்காலமாய் நின்று, முன்னே முளைத்தல் – ஏனைப் பொருள்களின் தோற்றங்கட்கெல்லாம் முன்னே தோன்றுதல். இதுவே சிவதத்துவ நிலையாகச் சொல்லப்படுவது. நான்காவது தொடர் அரியும் அயனும் அடியும் முடியும் தேட நின்ற நிலை. இதுவே, சதாசிவ தத்துவ நிலையாகச் சொல்லப்படுவது. ஐந்தாவது தொடர் உருவத் திருமேனி கொண்டு உலகத்தைத் தொழிற்படுத்தி நிற்கும் நிலை. இதுவே ஈசுவரத் தத்துவ நிலையாகச் சொல்லப்படுவது. சுத்தவித்தை ஈசுவரத் தத்துவத்துள்ளும், சத்தி தத்துவம் சிவதத்துவத்துள்ளும் அடங்க, சுத்த தத்துவம் மூன்றாகக் கூறப்பட்டவாறு உணர்க. ஆறாவது தொடரால் உயிருணர்வைப் பிணித்தற்றன்மை அருளியவாறு. வெந்தார், எரிக்கப்பட்டார், வெந்தாரது நீறு என்க. இதனால் எஞ்ஞான்றும் அழிவின்றி நிற்றலையும், யாவும் அழிந்தபின் மீளத் தோற்றுதற்கு முதலாதலையும், அருளியபடி, "முந்தாகி" முதலிய ஐந்தனாலும் உலகிற்குக் காரணமாய்த் தனக்கு ஒரு காரணமின்றி நிற்றல் அருளிச் செய்யப்பட்டது.

## 7. திருஅதிகை வீரட்டானம் (காப்புத் திருத்தாண்டகம்)

காப்பென்னும் தொழிற் பெயர், காக்கப்படுவதாகிய இடத்தினைக் குறித்தது. எனவே, இறைவர் நீங்காதுறையும் இடங்களை உணர்த்திய திருத்தாண்டகத்தை 'காப்புத் திருத்தாண்டகம்' என்றதாயிற்று.

இத்திருப்பதிகத்துள் எல்லாத் திருத்தாண்டகங்களிலும் முதற்கண் வீரட்டானத்தை அருளிச்செய்தது, ஆங்கு இறைவரை வணங்கி இன்புறுங்காலத்து, அது வாயிலாகப் பிற திருப்பதிகளையும் திருவுள்ளத்து நினைந்தருளினமையான் என்க. இதன் திருப்பாடல்களிலும், மேலைத் திருப்பதிகப் பாடல்களிற் போலவே, இரண்டு மாச்சீர்கட்கு ஈடாக கனிச்சீர் பயிலுதல் அறிக.

சுவாமிகளுக்குத் திருவதிகை வீரட்டானத்தேசுவரர் மீதிருந்த காதலுக்கு அளவேயில்லை. இப்பதிகத்தின் எல்லாப் பாடல்களின் பிற அடிகளில் பலதிருத்தலங்களைப் பற்றிப் பாடினாலும் முதலடி மட்டும் திருவதிகைக்கே அளித்துப் பெருமைபடுத்துகின்றார். முதலடியிலும் வேறுதலத்தைப் பாடியிருந்தால் இதைச் சேத்திரக் கோவையாகச் சேர்த்திருப்பார்கள். அந்த ஐயப்பாடு தேவை இல்லாத அளவு, முதலடியில் கெடில வீரட்டத்தையே சிறப்பித்துள்ளார். செல்வ, தீர்த்த, சிறையார், திரையார், செழுநீர், தெய்வ, தெண்ணீர், தெள்ளும், சீரார், சிந்தும், தேனார், திருநீர் புனற்கெடில வீரட்டமென்று எவ்வாறெல்லாம் அதன் பெருமைகளை விளக்க முடியுமோ அவ்வாறெல்லாம் ஒவ்வொரு பாடலிலும் விளக்குவது வியப்பாகவுள்ளது.

**ப.தொ.எண் : 220** **பதிக எண் : 7**

**2149.** செல்வப் புனற்கெடில வீரட்டமும்
சிற்றேமமும் பெருந்தண் குற்றாலமும்
தில்லைச்சிற் றம்பலமுந் தென்கூடலும்
தென்னானைக் காவும் சிராப்பள்ளியும்
நல்லூரும் தேவன் குடிமருகலும்
நல்லவர்கள் தொழுதேத்து நாரை யூரும்
கல்லலகு நெடும்புருவக் கபால மேந்திக்
கட்டங்கத் தோடுறைவார் காப்புக் களே. 1

நீர் மிக்க கெடில நதியால் செல்வவளம் பெற்ற அதிகை வீரட்டம், சிற்றேமம், மிக்க பரப்பினை உடைய குளிர்ந்த குற்றாலம், தில்லைச் சிற்றம்பலம், தெற்கில் உள்ள மதுரை, அழகிய ஆனைக்கா, சிராப்பள்ளி, நல்லூர், தேவன்குடி, மருகல், சான்றோர்கள் வழிபட்டுத் துதிக்கும் நாரையூர் ஆகியன – கல்லலகு என்ற வாச்சியத்தையும், நீண்ட புருவச் சுவடுடைய மண்டையோட்டினையும் கட்டங்கம் என்ற படைக்கலத்தையும் ஏந்திய சிவபெருமான் உகந்தருளியுள்ள திருத்தலங்களாம்.

காப்புக்கள் – காக்கப்படுவதாகிய இடங்கள்.
இறைவன் நீங்காதுறையும் இடங்கள்.

2150. தீர்த்தப் புனற்கெடில வீரட்டமும்
திருக்கோவல் வீரட்டம் வெண்ணெய் நல்லூர்
ஆர்த்தருவி வீழ்சுனைநீ ரண்ணா மலை
அறையணிநல் லூரும் அரநெ றியும்
ஏத்துமின்கள் நீரேத்த நின்ற ஈசன்
இடைமரு தின்னம்பர் ஏகம்பமும்
கார்த்தயங்கு சோலைக் கயிலாயமும்
கண்ணுதலான் தன்னுடைய காப்புக் களே. 2

அதிகை வீரட்டம், கோவலூர் வீரட்டம், வெண்ணெய்நல்லூர், அருவிகள் ஆரவாரித்து விழும் சுனைநீரை உடைய அண்ணாமலை, அறையணி நல்லூர், அரநெறி, இடைமருது, இன்னம்பர், ஏகம்பம், மேகத்தொடு விளங்கும் சோலைகளை உடைய கயிலாயம் என்பன – நாம் துதிக்குமாறு நெற்றிக்கண்ணனாகிய எம் பெருமான் உகந்தருளியிருக்கும் திருத்தலங்களாம். அத்தலங்களில் எம்பெருமானைப் போற்றுங்கள்.

தீர்த்தம் – தூய்மை, தெய்வத்தன்மை.

அரநெறி – சிவநெறி. அதுவே ஒரு தலத்திற்குப் பெயராயிற்று. ஆரூர் அரநெறி.

2151. சிறையார் புனற்கெடில வீரட்டமும்
திருப்பா திரிப்புலியூர் திருவா மாத்தூர்
துறையார் வனமுனிக ளேத்த நின்ற
சோற்றுத் துறைதுருத்தி நெய்த் தானமும்
அறையார் புனலொழுகு காவி ரிசூழ்
ஐயாற் றமுதர் பழனம் நல்ல
கறையார் பொழில்புடைசூழ் கானப் பேரும்
கழுக்குன்றும் தம்முடைய காப்புக் களே. 3

பாறைகளில் மோதிப் பெருகிவருகின்ற நீரை உடைய காவிரியால் தென்புறம் சூழப்பட்ட திருவையாற்றில் அமுதமாக உகந்தருளி யிருக்கும் பெருமான் தடுக்கப்படுகின்ற நீரை உடைய கெடில நதிக் கரையிலுள்ள அதிகை வீரட்டம், பாதிரிப்புலியூர், ஆமாத்தூர், நீர்த்துறைகளை அடுத்த சோலைகளில் வாழும் முனிவர்கள் துதிக்க இருக்கும் சோற்றுத்துறை, துருத்தி, நெய்த்தானம், இருண்ட சோலைகளால் சூழப்பட்ட கானப்பேரூர், கழுக்குன்றம் ஆகிய திருத்தலங்களில் கோயில் கொண்டுள்ளான்.

சிறை – அணை.
துறை – ஆசிரியர் நிற்பித்த நெறி.

2152. திரையார் புனற்கெடில வீரட்டமும்
திருவாரூர் தேவூர் திருநெல் லிக்கா
உரையார் தொழநின்ற ஒற்றி யூரும்
ஒத்தூரும் மாற்பேறும் மாந்து றையும்
வரையா ரருவிசூழ் மாந தியும்
மாகாளம் கேதாரம் மாமேருவும்
கரையார் புனலொழுகு காவி ரிசூழ்
கடம்பந் துறையுறைவார் காப்புக் களே. 4

அலைகள் நிறைந்த கெடிலக் கரை வீரட்டம், திருவாரூர், தேவூர், நெல்லிக்கா, புகழை உடைய சான்றோர் வழிபடும் ஒற்றியூர், ஒத்தூர், மாற்பேறு, மாந்துறை, மலை அருவிகள் சூழ்ந்த மாநதி, மாகாளம், கேதாரம், மாமேரு என்பன காவிரி சூழ்கடப்பந்துறையில் உகந்தருளி யிருக்கும் பெருமானுடைய திருத்தலங்களாம்.

2153. செழுநீர்ப் புனற்கெடில வீரட்டமும்
திரிபுராந் தகம்தென்னார் தேவீச்சரம்
கொழுநீர் புடைசுழிக்குங் கோட்டுக் காவும்
குடமூக்கும் கோகரணம் கோலக் காவும்
பழிநீர்மை யில்லாப் பனங்காட் டூரும்
பனையூர் பயற்றூர் பராய்த்து றையும்
கழுநீர் மதுவிரியுங் காளிங்க மும்
கணபதீச் சரத்தார்தங் காப்புக் களே. 5

வளம் மிகுந்த கெடிலக்கரை அதிகை வீரட்டம், திரிபுராந்தகம், அழகிய தேவீச்சரம், வெள்ளம் சூழும் கோட்டுக்கா, குடமூக்கு, கோகரணம், கோலக்கா, இழித்துரைக்கும் தன்மை இல்லாத பனங்காட்டூர், பனையூர், பயற்றூர், பராய்த்துறை, கழுநீர்ப் பூக்களிலிருந்து தேன் வெளிப்படும் காளிங்கம் என்பன கணபதீச்சரத்தை உகந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய திருத்தலங்களாம்.

2154. தெய்வப் புனற்கெடில வீரட்டமும்
செழுந்தண் பிடவூரும் சென்று நின்று
பவ்வந் திரியும் பருப்ப தமும்
பறியலூர் வீரட்டம் பாவ நாசம்
மவ்வந் திரையு மணிமுத்த மும்
மறைக்காடும் வாய்மூர் வலஞ்சு ழியும்
கவ்வை வரிவண்டு பண்ணே பாடுங்
கழிப்பாலை தம்முடைய காப்புக் களே. 6

கெடிலக்கரையிலுள்ள அதிகை வீரட்டம், செழிப்பை உடைய குளிர்ந்த பிடவூர், கடல் வெள்ளம் அணுகும் சீசைலம், பறியலூர் வீரட்டம், பாவநாசம், இன்னிசை முழங்கும் மணிமுத்தம், மறைக்காடு, வாய்மூர், வலஞ்சுழி, ஆரவாரத்தை உடைய வண்டுகள் பண்பாடும் கழிப்பாலை என்பன சிவபெருமான் உகந்தருளியிருக்கும் திருத்தலங்களாம்.

பிடவூர் – சேரமான் பெருமான் நாயனார் திருக்கயிலையில் அருளிச்செய்த திருக்கயிலாய ஞான உலா என்ற நூலைக் கயிலையிற் கேட்டு மாசாத்தனார் நிலவுலகிற்குக் கொண்டுவந்து வெளிப்படுத்திய இடம். திருச்சி – பெரம்பலூர் சாலையில் உள்ள திருப்பட்டூர்தான் பிடவூர்.

பல்லாண்டுகளுக்குப் பிறகு நடந்த திருப்பணிகளில் நமது அறக்கட்டளை தன் பங்காற்றியது.

திருப்பட்டூரில் பெரிய திருக்கோயிலில் பிரமபுரீசுவரர் அருள்பாலித்து வருகிறார்.

2155. தெண்ணீர்ப் புனற்கெடில வீரட்டமுஞ்
சீர்காழி வல்லந் திருவேட்டியும்
உண்ணீரார் ஏடகமும் ஊறல் அம்பர்
உறையூர் நறையூர் அரண நல்லூர்
விண்ணார் விடையார் விளமர் வெண்ணி
மீயச்சூர் வீழி மிழலை மிக்க
கண்ணார் நுதலார் கரபு ரமுங்
காபாலி யாரவர்தங் காப்புக் களே. 7

பதிக மகுடம் – காப்புக்களே

தெளிந்த நீரோடும் கெடிலக்கரை அதிகை வீரட்டம், சீர்காழி, வல்லம், திருவேட்டி, நீர்வளம் மிக்க ஏடகம், ஊறல், அம்பர், உறையூர், நறையூர், அரணநல்லூர், வானத்திலும் உலவும் காளை வாகனம் உடைய சிவபெருமான் உகக்கும் விளமர், வெண்ணி, மீயச்சூர், வீழிமிழலை, நெற்றிக்கண்ணனாம் சிவபெருமான் விரும்பும் கரபுரம் ஆகியவை மண்டை ஓட்டினை ஏந்தும் அப்பெருமான் உகந்தருளியுள்ள திருத்தலங்களாம்.

2156. தெள்ளும் புனற்கெடில வீரட்டமுந்
திண்டீச் சரமுந் திருப்பு கலூர்
எள்ளும் படையான் இடைத்தா னமும்
ஏயீச் சுரமுநல் லேமங் கூடல்
கொள்ளு மிலயத்தார் கோடி காவும்
குரங்கணின் முட்டமுங் குறும்ப லாவும்
கள்ளருந்தத் தெள்ளியா ருள்கி யேத்துங்
காரோணந் தம்முடைய காப்புக் களே. 8

பூதப்படையை உடையவரும், கூத்தினை நிகழ்த்துபவரும் ஆகிய பெருமானார் உகந்தருளியிருக்கும் திருத்தலங்கள், வளங்கொழிக்கும் கெடிலக்கரை, அதிகை வீரட்டம், திண்டீச்சரம், புகலூர், இடைத்தானம், ஏயீச்சுரம், ஏமம், கூடல், கோடிகா, குரங்கணில் முட்டம், குறும்பலா, திருவடி ஞானம் பெறச் சத்திநிபாதம் பெற்றவர் தியானித்துத் துதிக்கும் நாகை குடந்தைக் காரோணங்கள் என்பனவாகும்.

எள்ளும் படை – பூதப்படை. இலயம் – கூத்து. கள் – களிப்பைத் தருதலின் திருவடி ஞானமும் 'கள்' எனப்படும். "காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே மாயக்கள்ளுண்டாரென்றுந்தீ பற – வறட்டுப் பசுக்களென்றுந் தீ பற" உந்தி 43 தெள்ளியார் – சத்திநிபாதம் பெற்றவர். இருவினை ஒப்பு – மலபரிபாகம் – சத்திநிபாதம் என்பவை படிநிலைகள்.

2157. சீரார் புனற்கெடில வீரட்டமும்
திருக்காட்டுப் பள்ளி திருவெண் காடும்
பாரார் பரவுஞ்சீர்ப் பைஞ்ஞீலியும்
பந்தணை நல்லூரும் பாசூர் நல்லம்
நீரார் நிறைவயல்சூழ் நின்றி யூரும்
நெடுங்களமும் நெல்வெண்ணெய்
நெல்வாயிலும்
காரார் கமழ் கொன்றைத் தாரார்க் கென்றும்
கடவூரில் வீரட்டங் காப்புக் களே. 9

சீரும் சிறப்புமான கெடிலக்கரை அதிகை வீரட்டம், காட்டுப்பள்ளி, வெண்காடு, உலகு புகழும் சிறப்பினை உடைய பைஞ்ஞீலி, பந்தணைநல்லூர், பாசூர், நல்லம், வயல்சூழ்ந்த நின்றியூர், நெடுங்களம், நெல் வெண்ணெய், நெல்வாயில், கடவூர் வீரட்டம் என்பன கார் காலத்தில் மலரும் கொன்றை மலர் மாலையை அணிந்த சிவபெருமானுடைய திருத் தலங்களாம்.

2158. சிந்தும் புனற்கெடில வீரட்டமும்
திருவாஞ் சியமும் திருநள் ளாறும்
அந்தண் பொழில்புடைசூழ் அயோகந்தியும்
ஆக்கூரும் ஆவூரும் ஆன்பட்டியும்
எந்தம் பெருமாற் கிடமாவதாம்
இடைச்சுரமும் எந்தை தலைச்சங் காடும்
கந்தங் கமழுங் கரவீரமும்
கடம்பூர்க் கரக்கோயில் காப்புக் களே. 10

நீர்நிறைந்த கெடிலக்கரை அதிகை வீரட்டம், வாஞ்சியம், நள்ளாறு, தண்பொழில் சூழ் அயோகந்தி, ஆக்கூர், ஆவூர், ஆன்பட்டி, இடைச்சுரம், தலைச்சங்காடு, நறுமணம் கமழும் கரவீரம், சக்கரக் கோயிலை உடைய கடம்பூர் ஆகியன எங்கள் பெருமானுக்குத் திருத்தலங்களாம்.

ஆன் பட்டி – திருப்பேரூர் (கொங்கு நாடு). இப்பெயர் பழங்காலக் கல்வெட்டுகளில் உள்ளது.

**2159.** தேனார் புனற்கெடில வீரட்டமும்
திருச்செம்பொன் பள்ளி திருப்பூவணம்
வானோர் வணங்கும் மணஞ்சேரியும்
மதிலுஞ்சை மாகாளம் வார ணாசி
ஏனோர்க ளேத்தும் வெகுளீச்சரம்
இலங்கார் பருப்பதத்தோ டேணார் சோலைக்
கானார் மயிலார் கருமாரியும்
கறைமிடற்றார் தம்முடைய காப்புக் களே. 11

ஏண் – பெருமை

அதிகை வீரட்டம், செம்பொன்பள்ளி, பூவணம், தேவரும் வணங்கும் மணஞ்சேரி, மதில்களை உடைய உஞ்சை மாகாளம், வாரணாசி மற்றவர்களும் வழிபடும் வெகுளீச்சரம், விளங்கும் சீசைலம், பெருமையையுடைய சோலைகளிலே காட்டில் தங்கக்கூடிய மயில்கள் பொருந்தியிருக்கும் கருமாரி என்பன நீலகண்டப் பெருமானுடைய திருத்தலங்களாம்.

**2160.** திருநீர்ப் புனற்கெடில வீரட்டமும்
திருவளப்பூர் தெற்கேறு சித்தவடம்
வருநீர் வளம்பெருகு மாநிருபமும்
மயிலாப்பில் மன்னினார் மன்னியேத்தும்
பெருநீர் வளர்சடையான் பேணிநின்ற
பிரம புரம்சுழியல் பெண்ணாகடம்
கருநீல வண்டரற்றுங் காளத்தியும்
கயிலாயந் தம்முடைய காப்புக் களே. 12

அதிகை வீரட்டம், அளப்பூர், அதிகைக்குத் தெற்கில் உள்ள சித்தவடம், நீர்வளம் மிக்க மாநிருபம், மயிலாப்பூர், பிரமபுரம், சுழியல், பெண்ணாகடம், நல்ல நீலநிறமான வண்டுகள் ஒலிக்கும் காளத்தி, கயிலாயம் என்பன அடியவர்களால் நிலையாகப் போற்றப்படும் கங்கை தங்கும் சடையை உடைய சிவபெருமான் உகந்தருளியிருக்கும் திருத்தலங்களாம்.

## 8. திருக்காளத்தி

ப.தொ.எண் : 221 பதிக எண் : 8

**2161.** விற்றூணொன் றில்லாத நல்கூர்ந் தான்காண்
வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சை யல்லால்
மற்றூணொன் றில்லாத மாசது ரன்காண்
மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப்
பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப் பான்காண்
பொய்யாது பொழிலேழுந் தாங்கி நின்ற
கற்றூண்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காண் அவனென் கண்ணு ளானே. 1

பொழில் – உலகம்

விற்று அப்பணத்தால் உணவு வாங்குவதற்குரிய பொருள் ஒன்றும் தன்பால் கொள்ளாத வறியவனைப் போலக் காட்சி வழங்கி, கச்சி ஏகம்பத்தில் உகந்தருளியிருந்து, பிச்சை எடுத்தலைத் தவிர உணவுக்கு வேறு வழியில்லாத பெருந்திறமையனாய், மயானத்துக் காணப்படுபவனாய், ஏழு உலகங்களையும் இடையறாது தாங்கி நிற்கும் கற்றூண் போல்வானாய்க் காளத்தியில் காட்சி வழங்கும் சிவகணங்களின் தலைவனாகிய எம்பெருமான் எப்பொழுதும் என் மனக்கண்களுக்குக் காட்சி வழங்கியவாறே உள்ளான்.

**2162.** இடிப்பான்காண் என்வினையை ஏகம் பன்காண்
எலும்பா பரணன்காண் எல்லாம் முன்னே
முடிப்பான்காண் மூவுலகு மாயி னான்காண்
முறைமையால் ஐம்புரியும் வழுவா வண்ணம்
படித்தான் தலையறுத்த பாசு பதன்காண்
பராய்த்துறையான் பழனம்பைஞ் ஞீலி யான்காண்
கடித்தார் கமழ்கொன்றைக் கண்ணி யான்காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 2

இடித்தல் – அழித்தல். முடித்தல் – வகுத்தமைத்தல். ஐம்புரி – பஞ்சாதி என்னும் வேத உறுப்பு.

இஃது ஐம்பது சொல்லாற் புரிக்கப்பட்டதாயினும் இப்பெயரால் கூறப்படுவது வழக்கு. நிறைவு அடியை "கடிக்கொன்றைக் கமழ்தார் கண்ணியான்" என மாற்றிப் பொருள் கொள்ளலாம்.

என் வினைகளை அழிப்பவனாய், ஏகம்பத்தில் உறைபவனாய், அணிகலன்களாக எலும்புகளையே அணிபவனாய், எல்லா உலக நிகழ்ச்சிகளையும் வகுத்து அமைப்பவனாய், மூவுலகங்களிலும் வியாபித்திருப்பவனாய், பஞ்சாதியாக முறையாக வழு ஏதுமின்றி வேதங்களை ஓதும் பிரமனின் ஐந்தாம் தலையை நீக்கிய பசுபதி என்ற அடையாளங்களை உடையவனாய், பராய்த்துறை, பழனம், பைஞ்ஞீலி இவற்றில் உகந்தருளியிருப்பவனாய்க் கொன்றைப் பூவினாலாய மார்பு – மாலை, முடிமாலை இவற்றை அணிபவனாகிய காளத்திப் பெருமான் என்கண் உள்ளான்.

**2163.** நாரணன்காண் நான்முகன்காண் நால்வே தன்காண்
ஞானப் பெருங்கடற்கோர் நாவாய் அன்ன
பூரணன்காண் புண்ணியன்காண் புராணன் தான்காண்
புரிசடைமேற் புனலேற்ற புனிதன் தான்காண்
சாரணன்காண் சந்திரன்காண் கதிரோன் தான்காண்
தன்மைக்கண் தானேகாண் தக்கோர்க் கெல்லாம்
காரணன்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன்காண் அவனென் கண்ணு ளானே. 3

நாவாய் – மரக்கலம்.
புண்ணியன் – அறவடிவினன்.
புராணன் – பழையோன்; யாவர்க்கும் முன்னோன்.
சாரணன் – எங்கும் இயங்குபவன்.
எல்லாவற்றையும் அறிபவன்.

நாராயணனாய், பிரமனாய், நான்கு வேதங்களையும் ஓதுபவனாய், ஞானப் பெருங்கடலின் அக்கரையை அடையச் செய்யும் படகு போன்ற நிறைவானவனாய்ப் புண்ணியனாய்ப் பழையோனாய், முறுக்குண்ட சடை மீது கங்கையை ஏற்ற தூயோனாய், எங்கும் இயங்குபவனாய்ச் சந்திர சூரியர்களை உடனாய் இருந்து செயற்படுப்போனாய், நற்பண்புகளில் தனக்கு உவமை இல்லாதானாய், மெய்யுணர்வுடையோருக்குத் தானே முதற்பொருளாகத் தோன்றுபவனாய்க் காளத்தியில் காட்சி வழங்கும் சிவகணத் தலைவனாகிய எம்பெருமான் என்கண் உள்ளான்.

2164. செற்றான்காண் என்வினையைத் தீயாடி காண்
திருவொற்றி யூரான்காண் சிந்தை
செய்வார்க்
குற்றான்காண் ஏகம்பம் மேவி னான்காண்
உமையாள்நற் கொழுநன்காண்
இமையோரேத்தும்
சொற்றான்காண் சோற்றுத் துறையு ளான்காண்
சுறாவேந்தன் ஏவலத்தை நீறா நோக்கக்
கற்றான்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன்காண் அவனென்
கண்ணு ளானே. 4

என் தீவினைகளை அழித்துத் தீயின்கண் கூத்து நிகழ்த்தித் தன்னைத் தியானிப்பவர் களுக்கு நெருக்கமானவனாய், உமாதேவியின் கணவனாய், தேவர்கள் துதிக்கும் வேத வடிவினனாய், மன்மதனுடைய அம்பு செலுத்தும் ஆற்றலைச் சாம்பலாக்கக் கற்றவனாய், ஒற்றியூர், ஏகம்பம், சோற்றுத்துறை என்ற திருத்தலங்களில் உறைபவனாய்க் காளத்தியில் காணப்படும் கணநாதன் என்கண் உள்ளான்.

சுறா வேந்தன் – மீனக் கொடியுடைய தலைவன், மன்மதன்.

ஏவலம் – அம்பின் வலிமை.

2165. மனத்தகத்தான் தலைமேலான் வாக்கி னுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின்
மேலான்
ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதி
னுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றி
னுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 5

மனத்திலும் தலைமேலும் சொற்களிலும் உள்ளானாய், மனம் மெய்மொழிகளைச் செயற்படுத்தித் தன் திருவடிகளை வாயாரப் பாடும் தொண்டர் இனத்தானாய், தேவர்கள் தலைமேலானாய், ஏழுலகங்களையும் கடந்தவனாய், இவ்வுலகில் செவ்விதாகிய பொன் போன்ற நல்ல விளைவை நல்கும் குறிஞ்சி முதலிய நிலத்தில் உள்ளானாய், நறிய கொன்றைப் பூவில் உறைபவனாய், மலை நெருப்பு காற்று மேக மண்டலம் இவற்றில் உடனாய் இருந்து இவற்றைச் செயற்படுப்பவனாய்க் கயிலாயத்து உச்சி உள்ளானாகிய காளத்திப் பெருமான் என்கண் உள்ளான்.

"மனத்த கத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்" என்றது மனம், மொழி, மெய் என்னும் முப்பொறி களினும் நின்று அவற்றைத் தொழிற்படுத்துதலைக் குறிக்கின்றது.

**2166.** எல்லாம்முன் தோன்றாமே தோன்றி னான்காண்
ஏகம்பம் மேயான்காண் இமையோ ரேத்தப்
பொல்லாப் புலனைந்தும் போக்கி னான்காண்
புரிசடைமேற் பாய்கங்கை பூரித் தான்காண்
நல்லவிடை மேல்கொண்டு நாகம் பூண்டு
நளிர்சிரமொன் றேந்தியோர் நாணா யற்ற
கல்லாடை மேற்கொண்ட காபா லிகாண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 6

ஏனைய பொருள் தோன்றுதற்கு முன்னும் இருப்பவனாய், ஏகம்பத்து விரும்பி உறைபவனாய், தேவர்கள் துதிக்கப் பொறிவாயில் ஐந்து அவித்தவனாய், முறுக்கேறிய சடையின் மேல் பாய்ந்த கங்கையை அதன்கண் நிரப்பியவனாய், பெரிய காளைமீது ஏறிப் பாம்புகளைப் பூண்டு குளிர்ந்த மண்டை யோட்டை ஏந்தி, நாணத்தைக் காப்பதொரு பொருளாகத் துறந்தார் அணியும் காவியாடை உடுத்துக் காபாலம் என்னும் கூத்தாடும் காளத்திநாதன் என் கண் உள்ளான்.

---

**2167.** கரியுருவு கண்டத்தெங் கண்ணு ளான்காண்
கண்டன்காண் வண்டுண்ட கொன்றை யான்காண்
எரிபவள வண்ணன்காண் ஏகம் பன்காண்
எண்டிசையுந் தானாய குணத்தி னான்காண்
திரிபுரங்கள் தீயிட்ட தீயா டிகாண்
தீவினைகள் தீர்த்திடுமென் சிந்தை யான்காண்
கரியுரிவை போர்த்துகந்த காபா லிகாண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 7

காபாலி – காபாலம் என்னும் கூத்தை உடையவன்.

நீலகண்டனாய், எமக்குக் காட்சி வழங்குபவனாய், அருளால் ஏற்ற பெற்றியின் பல்வேறு வடிவு உடையவனாய், வண்டுகள் நுகரும் கொன்றைப் பூவினை அணிந்தவனாய், ஒளிவீசும் பவள வண்ணனாய், ஏகம்பனாய், எட்டுத் திசைகளும் தானேயாய பண்பினனாய், முப்புரங்களையும் தீக்கொளுவியவனாய், நெருப்பிடையே கூத்து நிகழ்த்துபவனாய், என் உள்ளத்திலிருந்து தீவினைகளை அழிப்பவனாய், யானைத் தோலைப் போர்த்து மகிழ்ந்து கபாலக் கூத்து ஆடுபவனாய்க் காளத்திப் பெருமான் என் கண் உள்ளான்.

---

**2168.** இல்லாடிச் சில்பலிசென் றேற்கின் றான்காண்
இமையவர்கள் தொழுதிறைஞ்ச இருக்கின் றான்காண்
வில்லாடி வேடனா யோடி னான்காண்
வெண்ணூலுஞ் சேர்ந்த அகலத் தான்காண்
மல்லாடு திரள்தோள்மேல் மழுவா ளன்காண்
மலைமகள்தன் மணாளன்காண் மகிழ்ந்து முன்னாள்
கல்லாலின் கீழிருந்த காபா லிகாண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 8

சில்பலி – அட்டனவும், அடுதற்கு உரியனவும் ஆகிய பொருள்கள்.
மல்லாடு – வலிமை பொருந்திய.

இல்லங்கள் தோறும் சென்று அவர்கள் வழங்கும் சிறு அளவினவாகிய உணவுகளை ஏற்கின்றவனாய், தேவர்கள் தொழுது வழிபடப்படுகின்றவனாய், வில்லை ஏந்தி வேடன் உருக்கொண்டு பன்றிப்பின் ஓடியவனாய், பூணூலும் பூண்ட மார்பினனாய், வலிய திரண்ட தோளில் மழுப்படை ஏந்தியவனாய், பார்வதி கணவனாய், மகிழ்வோடு ஒரு காலத்தில் கல்லால மரத்தின் கீழ்த் தென்முகக் கடவுளாய் இருந்தவனாய்க் காபாலக்கூத்து ஆடுபவனாய்க் காளத்தியில் உகந்தருளி யிருக்கும் சிவபெருமான் என்கண் உள்ளான்.

2169. தேனப்பூ வண்டுண்ட கொன்றை யான்காண்
திருவேகம் பத்தான்காண் தேனார்ந் துக்க
ஞானப்பூங் கோதையாள் பாகத் தான்காண்
நம்பன்காண் ஞானத் தொளியா னான்காண்
வானப்பே ரூரு மறிய வோடி
மட்டித்து நின்றான்காண் வண்டார் சோலைக்
கானப்பே ரூரான்காண் கறைக்கண் டன்காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே.9

வண்டுகள் நுகரும் தேனை உடைய கொன்றை சூடியாய்த் திரு ஏகம்பத்தனாய், தேன் ஒழுகும் பூக்களை அணிந்த ஞானப்பூங்கோதை அம்மையை இடப்பாகமாகக் கொண்டவனாய், நமக்கு இனியவனாய், ஞானப் பிரகாசனாய், ஊழியிறுதியில் வானமும் உலகமும் அழியுமாறு விரைந்து ஒடுக்க வல்லவனாய், வண்டுகள் பொருந்திய சோலைகளை உடைய திருக்கானப் பேரூரில் உறைபவனாய் நீலகண்டனாய்க் காளத்திப் பெருமான் என்கண் உள்ளான்.

2170. இறையவன்காண் ஏழுலகு மாயி னான்காண்
ஏழ்கடலுஞ் சூழ்மலையு மாயி னான்காண்
குறையுடையார் குற்றேவல் கொள்வான் தான்காண்
குடமூக்கிற் கீழ்க்கோட்டம் மேவி னான்காண்
மறையுடைய வானோர் பெருமான் தான்காண்
மறைக்காட் டுறையு மணிகண் டன்காண்
கறையுடைய கண்டத்தெங் காபா லிகாண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 10

பதிக மகுடம் – அவனென் கண்ணுளானே.

யாவருக்கும் முதல்வனாய், ஏழுலகும், ஏழ் கடலும் இவற்றைச் சுற்றிய மலைகளும் ஆகிப் பலகுறைபாடுகளையும் உடைய உயிர்கள் தனக்குச் செய்யும் குற்றேவல்களை ஏற்றுக் குடமூக்குத் தலத்திலுள்ள கீழ்க்கோட்டத்தை விரும்பி, வேதம் ஓதும் வானோருக்கும் தலைவனாய்த் திருமறைக் காட்டுத் தலத்தில் தங்கும் நீலகண்டனாய்க் கறைக் கண்டனாய்க் காபாலக்கூத்து ஆடும் காளத்திப் பெருமான் என்கண் உள்ளான்.

2171. உண்ணா வருநஞ்ச முண்டான் தான்காண்
ஊழித்தீ யன்னான்காண் உகப்பார் காணப்
பண்ணாரப் பல்லியம் பாடி னான்காண்
பயின்றநால் வேதத்தின் பண்பி னான்காண்
அண்ணா மலையான்காண் அடியா ரீட்டம்
அடியிணைகள் தொழுதேத்த அருளு வான்காண்
கண்ணாரக் காண்பார்க்கோர் காட்சி யான்காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 11

பிறர் உண்ண இயலாத கொடிய நஞ்சினை உண்டவனாய், ஊழித் தீயை ஒப்ப அழிப்பதனைச் செய்பவனாய்ப் பண்களுக்குப் பொருந்தப் பல வாத்தியங்களை இயக்கிப் பாடியவனாய், தான் ஓதிய நான்கு வேதங்களில் கூறப்பட்ட இறைமைப் பண்புகளை உடையவனாய், அண்ணாமலையானாய், அடியார் கூட்டம் தன் திருவடிகளைத் தொழுது போற்றுமாறு அருளுபவனாய், தன்னை மனக்கண்களால் காண்பவர்களுக்கு அரிய காட்சிப் பொருளாய் இருப்பவனாய் உள்ள காளத்திப் பெருமான் என்கண் உள்ளான்.

# 9. திருஆமாத்தூர்

**பதிக வரலாறு**

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவதிகை வீரட்டத்திலிருந்து பல்லவ மன்னனைச் சைவனாக்கிய பின்னர்ப் பல தலங்களையும் வணங்க நினைந்து திருவெண்ணெய் நல்லூர் மேவியிறைஞ்சி திருவாமாத்தூர் சென்று, பணிந்து பாடியருளியது இத்திருப்பதிகம் (தி. 12 திருநாவு. புரா. 148).

**குறிப்பு : இத்திருப்பதிகம் கடவுள் வாழ்த்துப் பாடாண் பகுதியுள் கடவுள்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கத்துப் பெருந்திணை வகையாக அருளிச் செய்யப்பட்டது. துறை தேறுதலொழிந்த காமத்து மிகுதிறம்.**

**அஃதாவது ஆமாத்தூர் இறைவர் பிச்சைக்கு வர, பிச்சை இடச் சென்று அவரை எதிர்ப்பட்டு வேட்கை தோன்றி அவரது நோக்கினைத் தெளிந்து, தனது நோக்கினால் உடம்பட்டு அவர்க்கு உரியவள் ஆயினாள் ஒருத்தி. பின்பு அவர் தன்னை வரையாது நீங்குதல் கண்டு தெளிவொழிந்து, பலரொடும் முறையிட்டு அவரைக் கூட்டுவிக்குமாறு வேண்டியது.**

**பேதைமை காரணமாகப் பொருளல்லவற்றையே (உலகத்தையும் தம்மையுமே) பொருளென்றுணரும் மருள்நிலை, தவங்காரணமாக நீங்கி அருள்நிலை எய்திய ஞான்று, இறைவன் வெளிநின்று அருள் வழங்கப் பெற்று, அவ்வருளே கண்ணாக அவனையறிந்து அன்பு செய்து, உடல், பொருள், ஆவியனைத்தும் அவனுடையனவாக்கித் தம்மை இழந்து நின்ற அடியவர், பண்டைப் பயிற்சி வயத்தால் அந்நிலையின் நிற்கப் பெறாது முன்னை மருள் நிலை தோன்றியவழி அதனைப் பொறாது வருந்தி, அது நீங்குமாறு இறைவனை அருளுவிக்க அடியவரை வேண்டுதல் இதன் உண்மைப் பொருள்.**

**அவர், அன்பரை வேண்டுமாற்றினை, "எந்தை யிருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்" என்றருளிச் செய்தாற் போலும் (தி. 7. ப. 73) திருமொழிகளிற் காண்க. இரட்டைப்புலவர்கள் பாடி ஆற்றின் திசை அல்லது போக்கையே மாற்றிய இடம்.**

**ப.தொ.எண் : 222** **பதிக எண் : 9**

2172. வண்ணங்கள் தாம்பாடி வந்து நின்று
வலிசெய்து வளைகவர்ந்தார் வகையால் நம்மைக்
கண்ணம்பால் நின்றெய்து கனலப் பேசிக்
கடியதோர் விடையேறிக் காபா லியார்
சுண்ணங்கள் தாங்கொண்டு துதையப் பூசித்
தோலுடுத்து நூல்பூண்டு தோன்றத் தோன்ற
அண்ணலார் போகின்றார் வந்து காணீர்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 1

வண்ணங்கள் – தாளத்தொடு பொருந்தப்பாடும் இசைகள். இசைநூலார் 'திறம்' என்பர்.

அண்ணலார் – தலைவர், தந்நிகரில்லாதவர்.

காபாலக் கூத்தாடும் தலைமையை உடைய பெருமான் தாளத்தொடு பொருந்தப்பாடும் இசைகள் பாடிக்கொண்டு வந்து நின்று வற்புறுத்தி நம்வளைகளைக் கவர்ந்தவராய், நாம் மனம் நெகிழும் வகையாலே நம்மைத் தம் கண்களாகிய அம்புகளாலே துன்புறுத்திக் காமத்தீ மூண்டெழுமாறு பேசி, விரைந்து செல்லும் விடையை இவர்ந்து, பலவகை நறுமணப் பொடிகளையும் செறிவாகப் பூசிக் கொண்டு, விலங்குகளின் தோலை உடுத்து, பூணூல் அணிந்து தம் பேரழகு தோன்றச் செல்கின்றார். ஆமாத்தூர்த் தலைவராகிய அவர் அழகினை வந்து காணுங்கள்.

2173. வெந்தார்வெண் பொடிப்பூசி வெள்ளைமாலை
விரிசடைமேற் றாஞ்சூடி வீணை யேந்திக்
கந்தாரந் தாம்முரலாப் போகா நிற்கக்
கறைசேர் மணிமிடற்றீ ரூரே தென்றேன்
நொந்தார்போல் வந்தென தில்லே புக்கு
நுடங்கே ரிடைமடவாய் நம்மூர் கேட்கில்
அந்தா மரைமலர்மேல் அளிவண்டி யாழ்செய்
ஆமாத்தூர் என்றடிகள் போயி னாரே. 2

அளி வண்டி யாழ் செய் – அருள் பண்ணத் தக்கார்க்கு அருள் பண்ணுவேம் யாம் என்ற இறைச்சிப் பொருள் தோன்றுகிறது.

அளிவண்டு – அளிக்கத்தக்க (இரங்கத்தக்க) வண்டு

தீயிலிடப்பட்டு வெந்து போனவர் தம் வெள்ளிய சாம்பலைப் பூசி, வெண்ணிற மாலையைப் பரந்த சடையில் சூடி, வீணை ஏந்திக் காந்தாரப் பண்ணைப் பாடிக்கொண்டு எம்பெருமான் சென்று கொண்டிருக்க, அவரை நோக்கி ‘விடகறை வெளிப்பட்ட நீலகண்டரே! நும் ஊர் யாது ?’ என்று வினவினேன். பசியினால் வருந்தியவரைப் போல வந்து என் வீட்டினுள் புகுந்து ‘அசைகின்ற அழகிய இடையினை உடைய இளையவளே! அழகிய தாமரை மலர்மேல் வண்டுகள் யாழ் போல் ஒலிக்கும் ஆமாத்தூரே நம்மூர்’ என்று சொல்லிப் பெருமான் போய்விட்டார்.

2174. கட்டங்கந் தாமொன்று கையி லேந்திக்
கடிய விடையேறிக் காபா லியார்
இட்டங்கள் தாம்பேசி யில்லே புக்கு
இடும்பலியும் இடக்கொள்ளார் போவா ரல்லர்
பட்டிமையும் படிறுமே பேசா நின்றார்
பார்ப்பாரைப் பரிசழிப்பார் போல்கின் றார்தாம்
அட்டிய சில்பலியுங் கொள்ளார் விள்ளார்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 3

இட்டங்கள் – வேட்கையோடு பொருந்திய சொற்கள்.

பட்டிமை – நெறிப்படாமை

படிறு – வஞ்சனை

பார்ப்பாரைப் பரிசு அழித்தல் – தம்மை அகத்து வைப்பாரது பசுத்தன்மை கெடுத்தல்.

கையில் கட்டங்கம் என்ற மழுப்படையை ஏந்தி, விரைந்து செல்லும் விடையை இவர்ந்து, காபாலக்கூத்தாடும் பெருமான் வேட்கையொடு பொருந்திய சொற்களைப் பேசியவாறே வீட்டிற்குள் புகுந்து வழங்கிய உணவையும் ஏற்றுக்கொள்ளாது, வீட்டை விடுத்துப் போதலையும் செய்யாது நெறிப்படாதனவும் வஞ்சனையை உடையனவுமாகிய செய்திகளையே பேசிக்கொண்டு தம்மை நோக்கும் மகளிரின் நிறை என்ற பண்பினை அழிப்பவர் போலக் காணப்படுகின்றார். வழங்கிய சிலவாகிய உணவுகளையும் ஏலாதவராய்த் தம் மனக்கருத்து இன்னது என்று வெளிப்படையாகக் கூறாதவராய் விளங்கும் ஆமாத்தூர்த் தலைவர் அழகியர்.

**2175.** பசைந்தபல பூதத்தர் பாட லாடல்
படநாகக் கச்சையர் பிச்சைக் கென்றங்
கிசைந்ததோ ரியல்பினர் எரியின் மேனி
இமையாமுக் கண்ணினர் நால்வே தத்தர்
பிசைந்ததிரு நீற்றினர் பெண்ணோர் பாகம்
பிரிவறியாப் பிஞ்ஞகனார் தெண்ணீர்க் கங்கை
அசைந்த திருமுடியர் அங்கைத் தீயர்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 4

பசைந்த – விரும்பிய

பாடுதலையும் கூத்தாடுதலையும் விரும்பிய பல பூதங்களை உடைய ஆமாத்தூர்த் தலைவர் படம் எடுக்கும் பாம்பைக் கச்சையாக உடுத்தித் தீப் போன்ற சிவந்த மேனியராய், இமைக்காத முக்கண்களை உடையவராய் நான்கு வேதங்களையும், ஓதுபவராய் திருநீற்றை நீரில் குழைத்து அணிந்தவராய்த் தம் உடம்பின் ஒரு பாகத்தை உமாதேவி நீங்காத தலைக்கோலத்தை உடையவராய், தெளிந்த நீரை உடைய கங்கை தங்கும் திருமுடியின ராய்த் தீ ஏந்திய கையினராய், அழகியராய்க் காட்சி வழங்குகின்றார்.

**2176.** உருளுடைய தேர்புரவி யோடும் யானை
யொன்றாலுங் குறைவில்லை யூர்தி வெள்ளே
றிருளுடைய கண்டத்தர் செந்தீ வண்ணர்
இமையவர்கள் தொழுதேத்தும் இறைவ னார்தாம்
பொருளுடைய ரல்லர் இலரு மல்லர்
புலித்தோ லுடையாகப் பூதஞ் சூழ
அருளுடைய அங்கோதை மாலை மார்பர்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 5

கோதை – மாலையின் வகை.
பிச்சைக்கோலம் பூண்டமையின் பொருளுடையரல்லர்.
இமையவர்கள் தொழுது ஏத்த நின்றமையின் இலருமல்லர்.

சக்கரங்களை உடைய தேர், குதிரை, யானை என்பவற்றைக் குறைவறப் பெற்றிருப்பினும் வெள்ளிய காளையையே ஊர்தியாகக் கொண்டு, இருண்ட கழுத்தினராய், சிவந்த தீயின் நிறத்தினராய், பொருள் உடையவர் அல்லர் என்றோ பொருள் இல்லாதவர் அல்லர் என்றோ கூற முடியாத நிலையினராய்ப் புலித்தோலை உடையாக அணிந்து, பூதங்கள் தம்மைச் சுற்றி இருக்குமாறு, மாலை சூடிய மார்பினராய், அருளுடையவராய் உள்ள இமையவர்கள் வழிபட்டுத் துதிக்கும் இறைவராகிய ஆமாத்தூர்த் தலைவர் அழகியவர்.

2177. வீறுடைய ஏறேறி நீறு பூசி
வெண்டோடு பெய்திடங்கை வீணை யேந்திக்
கூறுடைய மடவாளோர் பாகங் கொண்டு
குழையாடக் கொடுகொட்டி கொட்டா வந்து
பாறுடைய படுதலையோர் கையி லேந்திப்
பலிகொள்வா ரல்லர் படிறே பேசி
ஆறுடைய சடைமுடியெம் மடிகள் போலும்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 6

கங்கையைச் சடைமுடியில் கொண்ட எம் தலைவராகிய ஆமாத்தூர் ஐயர் நீற்றினைப் பூசிக் காதில் வெள்ளிய தோட்டினை அணிந்து இடக்கையில் வீணையை ஏந்தி இடப்பாகமாக உமாதேவியைக் கொண்டு காதுகளில்அணிந்த குழை அசையக் கொடுகொட்டிப் பறையை ஒலித்துக் கொண்டு பருந்துகள் புலால் நாற்றம் உணர்ந்து அணுகும் மண்டை ஓட்டினை ஒரு கையில் ஏந்தி, ஆற்றல் மிக்க காளையை இவர்ந்து வந்து, பிச்சை பெறாமல் வஞ்சனையாகிய சொற்களையே பேசும் அழகர் போலும்.

படுதலை – பட்ட (இறந்த) தலை.
கொடுகொட்டி என்பது சிவபெருமான் ஆடிய கூத்து. அஃது ஈண்டு ஆகுபெயராய் அதற்கேற்ப அடிக்கப்படும் வாச்சியத்தைக் குறிக்கிறது.

2178. கையோர் கபாலத்தர் மானின் தோலர்
கருத்துடையர் நிருத்தராய்க் காண்பார் முன்னே
செய்ய திருமேனி வெண்ணீ றாடித்
திகழ்புன் சடைமுடிமேல் திங்கள் சூடி
மெய்யொரு பாகத் துமையை வைத்து
மேவார் திரிபுரங்கள் வேவச் செய்து
ஐயனார் போகின்றார் வந்து காணீர்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 7

கையில் மண்டையோட்டை ஏந்தி, மான் தோல் உடுத்து, பகைவருடைய மும்மதில்களையும் தீயில் வேவச் செய்து, காண்பார் முன் கூத்தாடும் கருத்துடையவராய், தலைவராகிய பெருமான் செய்ய திருமேனியிலே வெள்ளிய நீற்றினைப் பூசித் திகழும் சிவந்த சடைமேல் திங்களைச் சூடி, உடம்பின் ஒரு பாகமாக உமாதேவியைக் கொண்டு, அழகிய தோற்றத்தோடு போகின்றார். அந்த ஆமாத்தூர்த் தலைவரை வந்து காணுங்கள்.

2179. ஒன்றாலுங் குறைவில்லை ஊர்தி வெள்ளே
றொற்றியூர் உம்மூரே யுணரக் கூறீர்
நின்றுதான் என்செய்வீர் போவீ ராகில்
நெற்றிமேற் கண்காட்டி நிறையுங் கொண்டீர்
என்றுந்தான் இவ்வகையே இடர்செய் கின்றீர்
இருக்குமூ ரினியறிந்தோம் ஏகம்பமோ
அன்றித்தான் போகின்றீர் அடிக ளெம்மோ
டழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 8

பதிக மகுடம் – அழகியரே ஆமாத்தூர் ஐயனாரே.

உமக்குக் குறை ஒன்றும் இல்லாதாகவும் காளையை வாகனமாகக் கொண்டு ஒற்றியூரை உம் ஊராகக் கொண்ட காரணத்தைக் கூறுகின்றீர் அல்லீர். ஒரு செயலும் செய்யாமல் நின்று கொண்டிருக்கின்றீர். நீர் எம்மை விடுத்துப் போகும் போது நும் நெற்றிக் கண்ணைக் காட்டி எங்கள் அடக்க குணத்தைக் கைப்பற்றிச் செல்கின்றீர். எல்லா நாள்களும் இப்படியே எங்களுக்குத் துன்பம் செய்கின்றீர். நீர் இருக்கும் ஊரை இப்போது அறிந்து விட்டோம். தலைவராகிய தாங்கள் எம்மை அழைத்துச் செல்லாமல் போகின்ற இடம் ஏகம்பமோ? ஆமாத்தூர்த் தலைவராகிய தாங்கள் எல்லா நிலையிலும் அழகியவரே.

---

2180. கல்லலகு தாங்கொண்டு காளத் தியார்
கடிய விடையேறிக் காணக் காண
இல்லமே தாம்புகுதா இடுமின் பிச்சை
யென்றாருக் கெதிரெழுந்தே னெங்குங்
காணேன்
சொல்லாதே போகின்றீர் உம்மூ ரேது
துருத்தி பழனமோ நெய்த்தா னமோ
அல்லலே செய்தடிகள் போகின் றார்தாம்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 9

கடிய – விரைந்து செல்வதாகிய
கல்லலகு – ஒருவகைத் தாளம்

காளத்திப் பெருமான் கல்லலகு என்ற வாத்தியத்தைக் கையில் கொண்டு, விரைந்து செல்லும் காளையை இவர்ந்து, எல்லோரும் காணும் வண்ணம் எம் வீட்டிற்குள் தாமே புகுந்து, 'பிச்சை இடுமின்' என்று கூறினாராகப் பிச்சை கொண்டு வந்து பார்க்கும் போது, அவரை வீட்டினுள் எங்கும் காணேனாக, 'ஒன்றும் சொல்லாதே வீட்டை விடுத்துப் போகின்றவரே! உம் ஊர் துருத்தியோ, பழனமோ, நெய்த்தானமோ யாது? என்று யான் வினவவும் கூறாது, என்னை வருத்தி, அவ்வடிகள் போகின்றார், அத்தகைய ஆமாத்தூர்த் தலைவர் எந்நிலையிலும் அழகியவர்'.

2181. மழுங்கலா நீறாடும் மார்பர் போலும்
மணிமிழலை மேய மணாளர் போலும்
கொழுங்குவளைக் கோதைக் கிறைவர் போலும்
கொடுகொட்டி தாள முடையார் போலும்
செழுங்கயி லாயத்தெஞ் செல்வர் போலும்
தென்னதிகை வீரட்டஞ் சேர்ந்தார் போலும்
அழுங்கினா ரையுறவு தீர்ப்பார் போலும்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 10

குவளைக்கோதை – குவளை மலரால் ஆகிய மாலையணிந்த உமையம்மை.

அழுங்கினார் – வருந்தினவர்.

ஒளி குறையாத திருநீற்றைப் பூசிய மார்பினர், அழகிய திருவீழி மிழலையிலே உகந்தருளியிருக்கும் திருமணக் கோலத்தினர். குவளை மலர் மாலையை அணிந்த உமையம்மைக்குத் தலைவர், கொடு கொட்டி ஆடலுக்கு ஏற்ற தாளம் உடையவர். கயிலாயத்தில் உள்ள எம் செல்வர். தெற்கில் உள்ள அதிகை வீரட்டத்தை உகந்து சேர்ந்தவர். வருந்துபவர்களைக் காப்பாற்ற மாட்டாரோ என்ற ஐயம் தீர்த்து ஆட்கொள்ளும் ஆமாத்தூர்த் தலைவர் எல்லா வகையிலும் அழகியரே.

## 10. திருப்பந்தணைநல்லூர்

ப.தொ.எண் : 223 பதிக எண் : 10

2182. நோதங்க மில்லாதார் நாகம் பூண்டார்
நூல்பூண்டார் நூன்மேலோ ராமை பூண்டார்
பேய்தங்கு நீள்காட்டில் நட்ட மாடிப்
பிறைசூடுஞ் சடைமேலோர் புனலுஞ் சூடி
ஆதங்கு பைங்குழலாள் பாகங் கொண்டார்
அனல்கொண்டார் அந்திவாய் வண்ணங்
கொண்டார்
பாதங்க நீறேற்றார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 1

நோவதங்கம் இடைக்குறைந்து நோதங்கம் ஆகி 'வருந்துவதாகிய மாயை உடம்பு' எனப் பொருள்பட்டது.
பாதங்கம் – பாதம் முதல் தலை வரை.

பைங்கண் ஏற்றார் – பசிய கண்ணையுடைய இடபத்தை உடையவர்.

பலி ஏற்றார் – பிச்சை கொண்டார்.

பந்தணைநல்லூர்ப் பெருமான் வருந்துவதாகிய மாயை உடம்பு உடையர் அல்லாதாராய்ப் பாம்புகளையும், மார்பில் பூணூலையும் அதன்மேல் ஆமை ஓட்டினையும் அணிந்தவர். அவர் வளர்கின்ற கருங்குழலியாகிய உமாதேவியை ஒருபாகமாகக் கொண்டு, பிறையைச் சூடிய சடையில் கங்கையையும் கொண்டு அந்தி வானத்தின் செந்நிறமேனியில் அடி முதல் முடி வரை திருநீறணிந்து, கையில் தீயினைக் கொண்டு, பேய்கள் தங்கும் பரந்த சுடுகாட்டில் கூத்தாடிப் பசிய கண்களை உடைய காளை மீது இவர்ந்து வந்து பிச்சை ஏற்றவர்.

2183. காடலாற் கருதாதார் கடல்நஞ் சுண்டார்
களிற்றுரிவை மெய்போர்த்தார் கலன தாக
ஓடலாற் கருதாதார் ஒற்றி யூரார்
உறுபிணியுஞ் செறுபகையு மொற்றைக் கண்ணால்
பீடுலாந் தனைசெய்வார் பிடவ மொந்தை
குடமுழவங் கொடுகொட்டி குழலு மோங்கப்
பாடலா ராடலார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 2

பீடு உலாம்தனை செய்வார் – வலிமை கெடும் அளவு செய்வார்.

பந்தணைநல்லூர்ப் பெருமான் கடலில் தோன்றிய நஞ்சினை நுகர்ந்து, களிற்றுத் தோலால் மெய்யினைப் போர்த்து, மண்டை யோட்டினையே உண்கலனாகக் கொண்டு, ஒற்றியூரை உகந்து, அடியார்களுடைய உடற் பிணிகளையும் உட்பகைகளையும் தம் ஒரே பார்வையாலே வலிமைகெடச் செய்து, பிடவம், மொந்தை, குடமுழா, கொடுகொட்டி, குழல் என்ற வாத்தியங்கள் ஒலிக்கச் சுடுகாட்டினைத் தவிர வேற்று இடங்களை விரும்பாது, அங்குப் பாடியும் ஆடியும் செயற்பட்டுப் பசிய கண்களை உடைய காளை மீது இவர்ந்து பிச்சை ஏற்றவர்.

---

2184. பூதப் படையுடையார் பொங்கு நூலார்
புலித்தோ லுடையினார் போரேற் றினார்
வேதத் தொழிலார் விரும்ப நின்றார்
விரிசடைமேல் வெண்திங்கட் கண்ணி சூடி
ஓதத் தொலிகடல்வாய் நஞ்ச முண்டார்
உம்பரோ டம்பொன் னுலக மாண்டு
பாதத் தொடுகழலார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 3

திரிபுரம் எரித்த காலத்தில் திருமால் உருத்திரிந்து தாங்கிய இடபம் போர்விடை அல்லது மால் விடை. அறக்கடவுள் உருத்திரிந்து தாங்கும் இடபம் அறவிடை. உயிர்களில் நம்மவரில் சத்திநிபாதம் பெற்றோர் சிலரும் விடையானதாக சாத்திரங்கள் இயம்புகின்றன.

தேவர்களை அடிமையாகக் கொண்டு அவர்களுடைய பொன்னுலகை உடைமை யாகக் கொண்டு சுற்றிக் கட்டப்பட்ட கழலைத் திருவடிகளில் அணிந்த பந்தணை நல்லூர்ப் பெருமான் வெள்ளம் ஒலிக்கும் கடலில் தோன்றிய விடத்தை உண்டவர். விரிந்த சடைமேல் வெள்ளிய பிறையினை முடிமாலையாகச் சூடியவர். வேதங்கள் ஓதி வேள்விகள் செய்யும் அந்தணர்கள் தம்மைப் பரம்பொருளாக விரும்ப இருப்பவர். திருமாலாகிய போரிடும் காளையை உடைய அப்பெருமான் பூதப்படை உடையவர். அவர் பூணூல் அணிந்து புலித்தோலை இடையில் அணிந்து பசிய கண்களை உடைய காளை மீது அமர்ந்து பிச்சை ஏற்றவர் ஆவார்.

2185. நீருலாஞ் சடைமுடிமேல் திங்க ளேற்றார்
நெருப்பேற்றார் அங்கையில் நிறையு மேற்றார்
ஊரெலாம் பலியேற்றார் அரவ மேற்றார்
ஒலிகடல்வாய் நஞ்சம் மிடற்றி லேற்றார்
வாருலா முலைமடவாள் பாக மேற்றார்
மழுவேற்றார் மான்மறியோர் கையி லேற்றார்
பாருலாம் புகழேற்றார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 4

பைங்கணேற்றார் பலியேற்றார் பந்தணை நல்லூராரே என்பது பதிக மகுடம்.

கச்சணிந்த முலைகளையுடைய உமாதேவியாரை இடப்பாகமாக ஏற்ற பந்தணை நல்லூர்ப் பெருமான் கடலில் தோன்றிய நஞ்சினை மிடற்றில் ஏற்றுக் கங்கை உலாவும் சடைமுடி மேல் திங்கள் சூடியவர். மான்குட்டியை ஒருகையில் ஏற்ற அப்பெருமான் அழகிய கை ஒன்றில் நெருப்பை ஏற்று, ஊர்களெல்லாம் பிச்சை ஏற்று, பிச்சையிட வந்த மகளிரின் நிறை என்ற பண்பினைக் கவர்ந்தவர். அவர் மழு ஏந்தி, உலகில் பரவிய புகழுக்கு உரியவராய்ப் பசிய கண்களை உடைய காளையை இவர்ந்து பிச்சை ஏற்றவர்.

2186. தொண்டர் தொழுதேத்துஞ் சோதி யேற்றார்
துளங்கா மணிமுடியார் தூய நீற்றார்
இண்டைச் சடைமுடியார் ஈமஞ் சூழ்ந்த
இடுபிணக்காட் டாடலா ரேமந் தோறும்
அண்டத்துக் கப்புறத்தார் **ஆதி யானார்**
அருக்கனா யாரழலா யடியார் மேலைப்
பண்டை வினையறுப்பார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 5

ஈமஞ்சூழ்ந்த இடு பிணக்காடு –
ஈமம் – பிணத்தைச் சுடுங்காடு / சுடுகாடு
இடுகாடு – பிணத்தை இடும் (புதைக்கும்) காடு
பிணத்தைச் சுடுங்காடு இடுகாட்டைச் சூழ்ந்திருக்கும். சுடுகாட்டு, இடுகாட்டு நடனம் சூக்கும நடனமாகும். மாயைக்கு அப்பாற்பட்டது.

அண்டங்களையும் கடந்து எங்கும் பரவியிருப்பவராய், எல்லோருக்கும் முற்பட்டவராய்ச் சூரியனாகவும் அக்கினியாகவும் இருந்து, அடியவர்களுடைய பழைய வினைகளைச் சுட்டு எரிப்பவராய் உள்ள பந்தணை நல்லூர்ப் பெருமான் அடியார்கள் தம்மைத் தொழுது துதிப்பதற்குக் காரணமான ஞானஒளியை உடையவர். நடுங்காத அழகிய தலையை உடையவர். தூய நீறணிந்தவர். சடையில் முடிமாலை சூடியவர். இடுகாட்டைச் சூழ்ந்திருக்கும் சுடுகாட்டில் இரவு தோறும் கூத்து நிகழ்த்துபவர். அவர் பசிய கண்களை உடைய காளையை இவர்ந்து பிச்சை ஏற்றவர் ஆவார். ஆதியானார் – ஆதி பகவன் – திருக்குறள்.

2187. கடமன்னு களியானை யுரிவை போர்த்தார்
கானப்பேர் காதலார் காதல் செய்து
மடமன்னு மடியார்தம் மனத்தி னுள்ளார்
மானுரிதோல் மிசைத்தோளார் மங்கை காண
நடமன்னி யாடுவார் நாகம் பூண்டார்
நான்மறையோ டாறங்கம் நவின்ற நாவார்
படமன்னு திருமுடியார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 6

கடம் மன்னு – மதம் மிக்க. களி – மயக்கம்.
மடம் – அறியாமை; சுவாமி அருளியவாரன்றித் தாமாக ஒன்றையும் அறியாமை. மன்னி – நிலைபெற்று என்றும் இடையறாது நடக்கும் நடனம்.
ஆதியும், அந்தமும் இல்லா அற்புதக்கூத்து.
அனவரத தாண்டவம்.

கானப்பேர் என்ற திருத்தலத்தை விரும்புபவரும், உமாதேவி காண இடையறாது நடம் ஆடுபவரும் ஆகிய பந்தணைநல்லூர்ப் பெருமான், மத யானைத் தோலைப் போர்த்தவர். எம்பெருமான் அருளியவாறன்றித் தாமாக ஒன்றும் அறியாராகிய அடியவர் உள்ளத்தில் உகந்து நிலையாக இருப்பவர். மான் தோலைத் தோளில் அணிந்து, நாகத்தைத் திருமேனியிற் பூண்டு, முடியிலும் பாம்பினைச் சூடி, நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் ஓதுகின்ற நாவினை உடையவர். அவர் பைங்கண் ஏறு ஊர்ந்து பலி ஏற்றவராவர்.

2188. முற்றா மதிச்சடையார் மூவ ரானார்
மூவுலகு மேத்தும் முதல்வ ரானார்
கற்றார் பரவுங் கழலார் திங்கள்
கங்கையாள் காதலார் காம்பேய் தோளி
பற்றாகும் பாகத்தார் பால்வெண் ணீற்றார்
பான்மையா லூழி யுலக மானார்
பற்றார் மதிலெரித்தார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 7

மூவரானார் – அயன், மால், குணி ருத்திரன் என்னும் காரணக் கடவுளர். படைத்தல், காத்தல், ஒடுக்கல் தொழில் நடத்த மகா ருத்திரன் என சிவபெருமானால் படைக்கப்பட்டவர்கள். மூவருக்கும் நம்மைப் போலப் பிறப்பு இறப்பு உண்டு. நம்மில் சிலரும் சிவத் திருப்பணி செய்தால் இப்பதவி பெறலாம். ஆனால் இப்பதவிகள் ஜனநாயக நாட்டின் அரசியல் மந்திரி பதவிகள் போல நிலையற்றவை. நிலையான வீடுபேறே நமது இலக்காக இருக்கட்டும். காம்பு – மூங்கில்.

பந்தணைநல்லூர்ப் பெருமான், மும்மூர்த்திகளையும் உடனாய் இருந்து செயற்படுத்தலின் மூவர் ஆனவர். அவர் பிறை சூடிய சடையினர். மூவுலகும் துதிக்கும் முதல்வர். சான்றோர் துதிக்கும் திருவடிகளை உடையவர். பிறையையும் கங்கையையும் விரும்பித் தலையில் கொண்டவர். மூங்கில் போன்ற தோள்களை உடைய பார்வதி பாகர். வெள்ளிய நீறு அணிபவர். தம் பண்பினால் உலகங்கள் ஆகவும் அவற்றை அழிக்கும் ஊழிக்காலங்களாகவும் உள்ளவர். பகைவர் மதில்களை எரித்த அப்பெருமானார் பைங்கண் ஏறு ஊர்ந்து பலி ஏற்றார்.

**2189.** கண்ணமரு நெற்றியார் காட்டார் நாட்டார்
கனமழுவாட் கொண்டதோர் கையார் சென்னிப்
பெண்ணமருஞ் சடைமுடியார் பேரொன் றில்லார்
பிறப்பிலார் இறப்பிலார் பிணியொன் றில்லார்
மண்ணவரும் வானவரும் மற்றை யோரும்
மறையவரும் வந்தெதிரே வணங்கி யேத்தப்
பண்ணமரும் பாடலார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 8

காட்டார் – காட்டில் வாழ்பவர்
நாட்டார் – நாட்டில் வாழ்பவர்

தமக்கெனப் பெயர் ஒன்றும் இல்லாதவரும், பிறப்பு இறப்பு பிணி என்பன அற்றவரும், நில உலகத்தவரும், வானுலகத்தவரும், பிரமன் உபபிரமர்களும், மற்ற கணங்களும் எதிரே வந்து வணங்கித் துதித்துப் பண்ணோடு கூடிப் பாடுதலை உடையவரும் ஆகிய பந்தணை நல்லூர்ப் பெருமான், கங்கை தங்கும் சடையினர். கண் பொருந்திய நெற்றியை உடையவர். கையில் மழு ஏந்தியவர். காட்டிலும், நாட்டிலும் உகந்தருளியிருக்கும் அப்பெருமான் பைங்கண் விடை ஊர்ந்து பலி ஏற்றார்.

**2190.** ஏறேறி யேழுலகு மேத்த நின்றார்
இமையவர்கள் எப்பொழுது மிறைஞ்ச நின்றார்
நீறேறு மேனியார் நீல முண்டார்
**நெருப்புண்டார் அங்கை யனலு முண்டார்**
ஆறேறு சென்னியார் ஆனஞ் சாடி
யனலுமிழும் ஐவா யரவு மார்த்தார்
பாறேறு வெண்டலையார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 9

நீலமுண்டார் – விடம் உண்டாக்கும் நீலநிறமுடையவர்.
நெருப்புண்டார் – வேள்வித் தீ அவியை நுகர்பவர்.
அங்கை அனலுமுண்டார் – அங்கையில் அனலை ஏந்தினார்.

பந்தணை நல்லூர்ப் பெருமான், இடபத்தை இவர்ந்து ஏழுலகும் துதிக்குமாறு நிலையாக இருப்பவர். தேவர்களால் எப்பொழுதும் வழிபடப்படுபவர். நீறணிந்த மேனியர். விடத்தை உண்டவர். வேள்வித்தீயில் இடப்படும் அவியை நுகர்பவர். உள்ளங்கையில் தீயைக் கொண்டு அதனால் அடியார் வினைகளை நீக்குபவர். கங்கை தங்கு சடையினர். ஆன்ஐந்தால் அபிடேகம் செய்யப்படுபவர் தீப்போன்ற விடத்தைக் கக்கும் ஐந்தலை நாகத்தை இடையில் இறுகச் சுற்றியவர். புலால் நாற்றம் கண்டு பருந்துகள் சுற்றி வட்டமிடும் மண்டையோட்டை ஏந்திப் பைங்கண் ஏறு இவர்ந்து பலியேற்றவர் ஆவர்.

2191. கல்லூர் கடிமதில்கள் மூன்று மெய்தார்
காரோணங் காதலார் காதல் செய்து
நல்லூரார் ஞானத்தார் ஞான மானார்
நான்மறையோ டாறங்கம் நவின்ற நாவார்
மல்லூர் மணிமலை யின்மே லிருந்து
வாளரக்கர் கோன்தலையை மாளச் செற்றுப்
பல்லூர் பலிதிரிவார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 10

இப்பதிகத்தின் எல்லாப் பாடல்களிலும் ஈற்றடியின் மூன்றாம் சீரில் "பைங்க ணேற்றார்" என்று காளை வாகனம் ஏறியதைக் குறிக்கிறார்.

கல்லூர் – கல் மிகுந்த.

மல்லூர் – வலிமை மிகுந்த.

மணிமலை – அழகிய மலை.

ஞானத்தை அடியார்க்கு வழங்குபவராய்த் தாமே ஞானவடிவாகி, நான்மறையும் ஆறு அங்கமும் எப்பொழுதும் ஓதும் நாவினை உடையவராய், நாகை, குடந்தைக் காரோணங்களையும் நல்லூரையும் உகந்தருளியிருப்பவர் பந்தணைநல்லூர்ப் பெருமான். அவர் கற்கள் நிறைந்த மதில்கள் மூன்றையும் அம்பு எய்து அழித்தவர். வலிமை மிகுந்த அழகிய கயிலாய மலைமேலிருந்து கொடிய அரக்கர் மன்னனாகிய இராவணன் தலைகள் சிதறுமாறு கோபித்த அப்பெருமான் பல ஊர்களிலும் பிச்சைக்காகத் திரிந்தவர். அவர் பைங்கண் ஏறு இவர்ந்து பணி ஏற்றவர்.

## 11. திருப்புன்கூரும் திருநீடூரும்

ப.தொ.எண் : 224 பதிக எண் : 11

அப்பர் சுவாமிகள் இரண்டு தலங்களை ஒன்று சேர்த்து ஆறாம் திருமுறையில் இரண்டு திருத்தாண்டகப் பதிகங்களை அருளிச் செய்துள்ளார். ஒன்று இப்பதிகம். பிறிதொன்று திருவலஞ்சுழியும், திருக்கொட்டையூர்க் கோடீச்சரமும் என்ற 73–வது பதிகமாகும்.

2192. **பிறவாதே தோன்றிய பெம்மான் தன்னைப்**
பேணாதார் அவர்தம்மைப் பேணா தானைத்
துறவாதே கட்டறுத்த சோதி யானைத்
தூநெறிக்குந் தூநெறியாய் நின்றான் தன்னைத்
திறமாய எத்திசையுந் தானே யாகித்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நிறமா மொளியானை நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே. 1

"நீதனேன் என்னேநான் நினையா வாறே" என்பது பதிக மகுடம்.

நீதன் – நீசன்

பிற பொருள்களின் கூட்டத்தால் பிறவாது எம் பெருமான் தானே தன் விருப்பத்தால் வடிவங் கொள்பவன். தன்னை விரும்பாதவர்களைத் தானும் விரும்பி உதவாதவன். இயல்பாகவே பந்தங்களின் தொடர்பு இல்லாத ஞான வடிவினன். தூய நன்னெறியில் ஒழுகுவதற்குப் பற்றுக்கோடாய் இருப்பவன். பகுக்கப்பட்ட எத்திசைக் கண்ணும் தானே பரவியிருப்பவன். திருப்புன்கூரை உகந்தருளியிருக்கும் அச்சிவலோகநாதனே நீடூரிலும் உகந்திருப்பவன். அத்தகைய செந்நிறச் சோதி உருவினைக் கீழ் மகனாகிய அடியேன் விருப்புற்று நினையாமல் இந்நாள் வரையிலும் வாளா இருந்த செயல் இரங்கத்தக்கது.

பிறவாதே தோன்றுதலாவது, பிற பொருள்கள் முதனிலையாய்க் கூடிநிற்க, அக்கூட்டத்தின்வழித் தோன்றாது தானே தனது இச்சையால், ''அருவம், அருவுருவம், உருவம்'' என்னும் மூவகைப்பட்ட வடிவங்களைக் கொண்டு நிற்றல். பிறவாயாக்கைப் பெரியோன் (சிலப்பதிகாரம் 5 – 169) எனப் பிறருங் கூறினார். இதனானே பிறந்து தோன்றுவார் யாவரது பிறப்பிற்கும் தானே காரணன் என்பதுந் தானே போதரும். ''அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் என்றறிக'' என்பதும் காண்க (திருக்களிற்றுப்படியார் - 1). ''காரணம் காரணாநாம் தாதா'' என்றது ''அதர்வசிகை'' என்னும் உபநிடதம். பேணுதல் - விரும்புதல். கட்டு – பந்தம். அதன்கண் என்றும் அகப்பட்டதின்மையால், துறத்தல் வேண்டாவாயிற்று. சோதி – ஒளி, என்றது உணர்வை. எனவே, ''இயல்பாகவே மலம் அற்ற தூய உணர்வுடையான்'' என்பது பெறப்படும். ''வாலறிவன் (குறள் -2) என்றருளினார் திருவள்ளுவ நாயனாரும், அவ்வுணர்வுதானே அவர்க்கு வடிவமாதலின் ''துறவாதே கட்டறுத்த சோதியானை'' என்றருளிச்செய்தார்.

தூநெறி – குற்றமும் அவற்றுக்கு வாயிலாகிய நெறிமேல் ஏற்றிக் கூறப்படும் என்க. தூநெறிக்குந் தூநெறியாய் நிற்றலாவது, நன்னெறிக்குச் சிறந்த பற்றுக்கோடாய் இருத்தல். அஃதாவது, அறம் தன்னொடு (இறைவனோடு) பொருந்தியவழிச் சிறந்த பயனாகிய வீடுபேற்றைத் தருதலும், பொருந்தாதவழி அதனைத் தராதொழிதலும், முரணியவழித் தீங்கு பயத்தலும் உடைத்தாமாறு நிற்றல். உம்மை, சிறப்பும்மை. இறைவனொடு முரணிச்செய்யும் அறம் தீங்கு பயத்தல், தக்கன் செயலாலும், இறைவனொடு பொருந்திச் செய்யும் மறமும் வீடுபேற்றைத் தருதல் சண்டேசுரரது செயலாலும் நன்குணரப்படும்.

''அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடையத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே''

என்றது சிவஞானசித்தி (சூ 2 – 29). அன்பிலார் என்றது முரணி நிற்பாரை என்பது எடுத்துக்காட்டால் விளங்கும் திறம் - பகுப்பு. திருப்புன்கூர்ப் பெருமானை, ''சிவலோகன்'' என்றே நாவரசர் அருளிச் செய்கின்றார். அப்பெருமானது திருப்பெயர் ''சிவலோகநாதன்'' என்பதேயாய் இருத்தல் கருதத்தக்கது. நீதன் (நீசன்) – கீழ்மகன் ''நீதனேனாய் '' என எச்சமாக்கியுரைக்க, முன்னர் நினையாதிருந்த நெறியாகிய அறியாமை என்னே! என்க. இது இவ்விரு தலங்களிலும் இறைவரை வணங்கியபோது உண்டாகிய பேரின்பத்தில் இளமைக்காலமெல்லாம் இதனைப் பெறாதே வாளா (சமணரோடு) கழிந்தமையை நினைந்து கழிவிரக்கங்கொண்டு அருளிச்செய்தது. அஞ்ஞான்றை நிலைபற்றியே தம்மை, ''நீதனேன்'' என்றார். இவ்வாறே ''ஏழையேன்'' முதலாக வருவன காண்க. இத்திருப்பதிகத்துள்ளும், ''சிவலோகனை'' என்னும் கனிச்சீர் நின்ற அறுசீரடிகள் வந்தன.

2193. பின்றானும் முன்றானு மானான் தன்னைப்
பித்தர்க்குப் பித்தனாய் நின்றான் தன்னை
நன்றாங் கறிந்தவர்க்குந் தானே யாகி
நல்வினையுந் தீவினையு மானான் தன்னைச்
சென்றோங்கி விண்ணளவுந் தீயா னானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நின்றாய நீடூர் நிலாவி னானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே.

2

எதிர்காலமும் இறந்தகாலமும் ஆகியவன். **தன்னிடம் பெருவிருப்புடைய அடியார்பக்கல், தானும் பெருவிருப்புடையவன்.** நல்வினையும் தீவினையும் செய்தவர்களுக்கு, அவரவர் வினைகளுக்கு ஏற்பப் பயன்களை வழங்குபவன். வானளாவிய தீப்பிழம்பு வடிவானவன். திருப்புன்கூரை உகந்தருளிய அப்பெருமான் நீடூரிலும் நிலையாக உறைந்திருக்கின்றான். அப்பெருமானை நீசனேன் நினையாவாறு என்னே!

பித்தர் – பிறிதொன்றையும் விரும்பாது தன்னையே விரும்பும் பேரன்பர். அந்த அன்பே பித்து.

2194. இல்லானை எவ்விடத்தும் உள்ளான் தன்னை
இனிய நினையாதார்க் கின்னா தானை
வல்லானை வல்லடைந்தார்க் கருளும் வண்ணம்
மாட்டாதார்க் கெத்திறத்தும் மாட்டா தானைச்
செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நெல்லால் விளைகழனி நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே.

3

எவ்விடத்தும் பரந்திருப்பினும் ஊனக் கண்களுக்குப் புலனாகாதவன். நல்லனவே நினையாதவர்களுக்குத் தான் இனியன் அல்லன். தன்னை விரைந்து சரண் புக்கவர்களுக்குத் தான் அருளுவதில் வல்லவன். ஓரிடம் விட்டு மற்றோரிடம் பெயர்தல் வேண்டாத, வீடுபேறு அடையும் வழியில் செலுத்துபவன் ஆகிய அப்பெருமான், தன்னைச் சரணடையாதவர்களுக்குத் தானும் அருள் செய்யாதவன். திருப்புன்கூர் மேவிய அச்சிவலோகன் நெல்விளையும் வயல்களை உடைய நீடூரையும் உகந்தருளியிருப்பவன். அவனை நீசனாகிய அடியேன் விருப்புற்று நினையாதவாறு என்னே!

வல்லடைதல் – விரைந்து அடைதல்

மாட்டாதார் – நினைய – சொல்ல – அடைய மாட்டாதவர்.

மாட்டான் – வெளிப்பட்டு அருள மாட்டாதவன்.

**2195. கலைஞானங் கல்லாமே கற்பித் தானைக்**
கடுநரகஞ் சாராமே காப்பான் தன்னைப்
பலவாய வேடங்கள் தானே யாகிப்
பணிவார்கட் கங்கங்கே பற்றா னானைச்
சிலையாற் புரமெரித்த தீயாடியைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நிலையார் மணிமாட நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே.
4

''சிலையால் புரமெரித்த'' என்றது தானும் பிற ரோடொப்பக் கரணங்களாற் செய்வான் போலச் சென்றான்" என்றவாறு. நினைத்த அளவிலே (சங்கற்ப மாத்திரையில்) மகா சங்காரமே நிகழ்த்திடுவார் நமது சுவாமி.

கலைஞானத்தை முயன்று கற்றல் வேண்டாதபடி உள்நின்றே உணர்த்துபவன். கொடிய நரகத்தை அடையாதபடி காப்பவன். பல்வேறு இடங்களிலிருந்து தன்னை வழிபடுபவர் விரும்பும் பல வேடங்களிலும் தானே காட்சி வழங்கி ஆங்காங்கே உறைபவன். வில்லால் திரிபுரங்களை எரித்தவன். தீயின்கண் கூத்து நிகழ்த்துபவன். திருப்புன்கூர் மேவிய அச்சிவலோகன் பலகாலம் நிலைத்திருக்கும் அழகிய மாடி வீடுகளை உடைய நீடூரையும் உகந்தருளியவன். அவனை நீசனேன் நினையாதவாறு என்னே!

**2196.** நோக்காதே எவ்வளவும் நோக்கி னானை
**நுணுகாதே யாதொன்றும் நுணுகி னானை**
ஆக்காதே யாதொன்று மாக்கி னானை
அணுகாதா ரவர்தம்மை அணுகா தானைத்
தேக்காதே தெண்கடல்நஞ் சுண்டான் தன்னைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நீக்காத பேரொளிசேர் நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே.
5

நுணுகினான் – எத்துணை நுண்ணிய பொருளாய் இருப்பினும் அதனினும் நுண்ணியன். நுண்ணோக்கிகள் எனப்படும் மைக்ராஸ்கோப் போன்ற கருவிகளால் காண முடியாத அளவு நுண்ணிய பாக்டீரியாவை விடச் சிறிய கிருமிகள் இருப்பதாக விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். அவற்றைப் பார்க்கக் கூட முடியாத அளவு நுண்ணியவை. ஆனால் அவையும் நகர்கின்றன. அவற்றுக்குள்ளும் உயிரை வைத்துள்ளார். எனவே அவற்றுள் எல்லாம் நுண்ணியர்.

கருவிகளால் அன்றி தன் நினைவினாலேயே எல்லாப் பொருள்களையும் படைத்துக் காத்து அழிப்பவன். நுண்ணிய பொருள்களிலும் நுண்ணியனாக இயல்பாகவே கலந்திருப்பவன். கருவிகள் கொண்டு படைக்காமல் எல்லாப் பொருள்களையும் தன் நினைவினாலேயே தோற்றுவிப்பவன். தன்னை நெருங்காதவர் களுக்கு அருள் செய்தற்கண் ஈடுபடாதவன். தடுக்காமல் கடல் விடத்தை உண்டவன். அத்தகைய திருப்புன்கூர் மேவிய சிவலோகன் நீக்குதற்கரிய மிக்க பொலிவை உடைய நீடூரானும் ஆவான். அவனை நீசனேன் நினையாதவாறு என்னே!

2197. பூணலாப் பூணானைப் பூசாச் சாந்த
முடையானை முடைநாறும் புன்க லத்தில்
ஊணலா வூணானை யொருவர் காணா
உத்தமனை ஒளிதிகழும் மேனி யானைச்
சேணுலாஞ் செழும்பவளக் குன்றொப் பானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நீணுலா மலர்க்கழனி நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே.
6

மற்றவர் அணியக் கருதாத பாம்புகளை அணிகளாகப் பூணுபவன். மற்றவர்கள் பூசிக் கொள்ள விரும்பாத சாம்பலைச் சந்தனம் போலப் பூசிக் கொள்பவன். புலால் நாறும் மண்டையோடாகிய இழிந்த உண்கலத்தில் உண்ணலாகாத பிச்சை எடுத்த ஊணினை உண்பவன். இவையாவும் தன் பொருட்டன்றிப் பிறர் பொருட்டேயாக, இவற்றின் காரணத்தை மற்றவர் காணமாட்டாத வகையில் செயற்படும் மேம்பட்டவன். இச்செயல்களால் ஒளிமிக்குத் தோன்றும் திருமேனியை உடையவன். மிக உயர்ந்த மேம்பட்ட பவள மாலையை ஒப்பவன். திருப்புன்கூர் மேவிய அச்சிவலோகன் மிகுதியாகக் காணப்படுகின்ற மலர்களை உடைய வயல்கள் பொருந்திய நீடூரானும் ஆவான். அவனை நீசனேன் நினையாதவாறு என்னே!

பூணலாப் பூண் – அணியலாகாத அணி – பாம்பு
பூசாச்சாந்து – பூசலாகாத சாந்து – சுடுகாட்டுச் சாம்பல்
ஊணலா ஊண் – உண்ணலாகாத உணவு – பிச்சை
மூன்றும் அவர் பொருட்டுச் செய்யப்படவில்லை. பிறர் பொருட்டுச் செய்யப்பட்டது.

2198. உரையார் பொருளுக் குலப்பி லானை
யொழியாமே எவ்வுருவு மானான் தன்னைப்
புரையாய்க் கனமாயாழ்ந் தாழா தானைப்
புதியனவு மாய்மிகவும் பழையான் தன்னைத்
திரையார் புனல்சேர் மகுடத் தானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நிரையார் மணிமாட நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே.
7

சொற்பொருளுக்கு அப்பாற்பட்டவன். எல்லா உருவங்களிலும் நீங்காது உடன் உறைபவன். மிகவும் பழைமையாகிய தான் புதியவனாகவும் இருப்பவன். அலைகள் நிறைந்த கங்கையைத் தலையில் சூடியவன். திருப்புன்கூர் மேவிய அச்சிவலோகன், வரிசையான அழகிய மாடிவீடுகளை உடைய நீடூரானும் ஆவான். நீசனேன் அவனை நினையாதவாறு என்னே!

உலப்பிலாமை – முடிவு பெறாமை. சொல்லி முடிக்கலாகாத தன்மைகளை உடையவன்.

உரு – பொருள். புரை – உயர்ச்சி. இலகு.

கனம் – பருமை, வலிது.

இலகுவான பொருளாயிருந்தாலும் (புரையாயினும்) ஆழ்ந்து, கனமாயினும் ஆழாது வரம்பிலாற்றலுடையவனாய் உள்ளான். புரையாய் ஆழாது கனமாய் ஆழ்ந்து என்று எதிர் நிரல்நிரையாய்க் கொண்டும் உரைக்கலாம்.

புரைத்துப் புரையாதானை, கனத்துக் கனவாதானை என்று தமிழை இரசிக்கலாம்.

2199. கூரரவத் தணையானுங் குளிர்தண் பொய்கை
மலரவனுங் கூடிச்சென் றறிய மாட்டார்
ஆரொருவ ரவர்தன்மை யறிவார் தேவர்
அறிவோமென் பார்க்கெல்லா மறிய லாகாச்
சீரரவக் கழலானை நிழலார் சோலைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நீரரவத் தண்கழனி நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே.
8

கூர் அரவம் – பாம்புகள் எல்லாவற்றுள்ளும் மிக்க பாம்பு.

மேம்பட்ட ஆதிசேடனைப் படுக்கையாக உடைய திருமாலும், குளிர்ந்த பொய்கையில் தோன்றும் தாமரையை இருப்பிடமாக உடைய பிரமனும் ஆகிய இருவரும் காண முயன்றும் அறிய மாட்டாத அப்பெருமான் இயல்பினை யாவர் உள்ளவாறு அறிய இயலும்? அவனை அறிவோம் என்று நினைக்கும் தேவர்களுக்கும் உண்மையில் அறிய முடியாதவனாய் ஒலிக்கும் அழகிய வீரக்கழலை அணிந்த அப்பெருமான் நிழல் தரும் சோலைகள் உடைய திருப்புன்கூரை மேவியவன். அவனே நீர் பாயும் ஓசையை உடைய குளிர்ந்த வயல்களை உடைய நீடூரானும் ஆவான். அவனை நீசனேன் பண்டு நினையாதவாறு என்னே!

2200. கையெலாம் நெய்பாயக் கழுத்தே கிட்டக்
கால்நிமிர்த்து நின்றுண்ணுங் கையர் சொன்ன
பொய்யெலாம் மெய்யென்று கருதிப் புக்குப்
**புள்ளுவரா லகப்படா துய்யப் போந்தேன்**
செய்யெலாஞ் செழுங்கமலப் பழன வேலித்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நெய்தல்வாய்ப் புனற்படப்பை நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே.
9

புள்ளுவர் – கள்வர்

கைகளிலிருந்து நெய் கீழே சொட்டுதலால் அதைத் தவிர்க்கக் கைகளை உயர்த்தாதே கழுத்தைக் கீழே வளைத்துக் கைகளருகே கொணர்வித்து, நிலைகுலையாமலிருப்பதற்குக் கால்களை விரித்துக்கொண்டு நின்றவாறே உண்ணும் கீழ்மக்கள் கூறிய பொய்யுரைகளை மெய் உரைகளாகக் கருதி அவர்கள் குழுவினிடைக் கலந்து, பின் அவ்வேடர்கள் விரித்த வலையில் அகப்படாது, அத்தீங்கில் நின்றும் தப்பிப் புறமே வந்து சேர்ந்த அடியேன், வயல்களில் செழிப்பான தாமரைகள் களைகளாகத் தோன்றும் நன்செய் நிலங்களை எல்லையாக உடைய திருப்புன்கூர் சிவலோகநாதன் என்ற பெயரில் உகந்தருளியிருப்பவனாய், கடற்கரைப் பகுதியில் நீர்வளம் உடைய மனைக்கொல்லை – களை உடைய நீடூரிலும் உகந்து தங்கியிருக்கும் அப்பெருமானை, நினையாத கீழ்மகனாய் அடியேன் இருந்தவாறு இரங்கத்தக்கது.

'கழுத்தே' என்னும் ஏகாரம், பிரிநிலை. 'கழுத்தினைக் கைசென்று அடையச் செய்து உண்ணாது, கையினைக் கழுத்துச் சென்று அடையுமாறு செய்து உண்ணுங் கையர்' என்க. அவ்வாறுண்ணுதல், நெய் மிகுதியாக வழிந்தோடாமைப் பொருட்டும், உணவு வீழாமைப் பொருட்டுமாம். கலம் இன்றிக் கையில் உண்ணுதலால், மார்பிற்கு நேராக நீட்டி விரித்த கைகள் அதற்கு மேல் உயர்த்தலாகாவாயின. கால் நிமிர்த்தல், நிற்றலால் உண்டாகும் நோயை நீக்கிக்கொள்ளுதற் பொருட்டு நேராக்குதல். கையில் உண்ணுதல், பொருட்பற்று உண்டாகாமைப் பொருட்டும், நின்றுண்ணுதல் இடப்பற்று உண்டாகாமைப் பொருட்டுமாம். இவ்வாறொழுகுவோர் ஒரு சிலரே என்க. 'இவர் இவ்வாறு பற்றுக்களையெல்லாம் விடினும், பற்றக்கடவ பொருளைப் பற்றாமையின், பெறநின்றது என்னை' என்பார். இவ்வாறு இகழ்ச்சி தோன்ற எடுத்தோதி யருளினார். நின்று உண்ணும் கையர் – நின்று உண்ணுதலாகிய ஒழுக்கத்தையுடையவர் இனி "கையர்" என்பதற்கு 'வஞ்சகர்' என்றுரைத்து, 'இங்ஙனம் புறத்தாரைமருட்டி நின்றவர்' எனலுமாம். சமணருட் பலர் வஞ்சகராய் இருந்தமையை, அவர் வைதிக சமயத்தார்க்கு அரசன் வாயிலாக இழைத்துவந்த கொடுமைகள் பற்றியறியலாம். பொய் – பிழை. மெய் – ஒத்தது. 'கருதிப்புக்கு' என்றதனால், சுவாமிகள் சமண சமயத்துப் புகுந்த காரணம் நன்கு அறியப்படுகின்றது. 'அப்புள்ளுவர்' எனச் சுட்டு வருவித்துரைக்க, புள்ளுவர் – வேடர். இஃது உவமையாகு பெயராயிற்று. 'வேடர்கள் பறவைகளையும், விலங்குகளையும் வலையில் வீழச் செய்தல்போல், மக்களைச் சொல்லில் வசப்படுத்துபவர்' என்றதாம். 'அகப்படுத்தப்படாது' என்பது, 'அகப்படாது' என விகாரமாயிற்று. 'வேடரது வலையிற் சிக்கிய ஒரு பறவையேனும் விலங்கேனும் அவராற் கொல்லப்பட்டு அவர்க்கு இரையாகாது தப்பியோடினாற்போல், இறுதிவரையில் சமண சமயத்திலிருந்து கெட்டொழியாது, மீண்டு வந்தேன்' என்றருளிச் செய்தார். 'இத்துணைத் தாழ்ந்து வந்தேன், முன்பே நினையாதொழிந்த வினைதான் என்னே' என்றிரங்கியவாறு காண்க. படப்பை – தோட்டம்.

**2201. இகழுமா றெங்ஙனே யேழை நெஞ்சே**
யிகழாது பரந்தொன்றாய் நின்றான் தன்னை
நகழமால் வரைக்கீழிட் டரக்கர் கோனை
நலனழித்து நன்கருளிச் செய்தான் தன்னைத்
திகழுமா மதகரியி னுரிபோர்த் தானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நிகழுமா வல்லானை நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே. 10

இப்பாடல் தம் நெஞ்சினை வேறாக்கி அருளிச் செய்தது. இகழாது – யாதொரு பொருளையும் இகழ்ந்தொழியாது; (எல்லாவற்றிலும் நிறைந்து அவற்றைத் தனது வியாபகத்துக்குள் அடக்கி நிற்பவன்). நகழ – வருந்த; நகழ்வு – துன்பம், வருத்தம்.

யாதொரு பொருளையும் புறக்கணிக்காது அவற்றிலெல்லாம் உடனாய் இருப்பவன் எம்பெருமான். அவன் இராவணனைக் கயிலை மலையின் அடியில் இட்டு வருந்தச் செய்து அவன் வலிமையைக் குலைத்துப் பின் அவனுக்கு நல்லவனாகிய வாளும் நாளும் வழங்கியவன். மதத்தால் விளங்கிய யானையின் தோலைப் போர்த்தியவன். அவனே திருப்புன்கூர் மேவிய சிவலோகநாதன். தன் விருப்பப்படியே செயற்படவல்ல அப்பெருமான் நீடூரிலும் உகந்தருளியுள்ளான். 'அறிவில்லாத மனமே! அப்பெருமானைக் கீழ்மகனாகிய யான் நினையாத செயலே இரங்கத்தக்கது. அவ்வாறாக நீயும் இகழும் செயல் எவ்வாறு ஏற்பட்டது?'

## 12. திருக்கழிப்பாலை

ப.தொ.எண் : 225 பதிக எண் : 12

2202. ஊனுடுத்தி யொன்பது வாசல் வைத்து
வொள்ளெலும்பு தூணா வுரோமம் மேய்ந்து
தாமெடுத்த கூரை தவிரப் போவார்
தயக்கம் பலபடைத்தார் தாமரையினார்
கானெடுத்து மாமயில்க ளாலுஞ் சோலைக்
கழிப்பாலை மேய கபாலப்பனார்
வானிடத்தை ஊடறுத்து வல்லைச் செல்லும்
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
1

தா மரையினார் – தாவுகின்ற மானைக் கையிலே உடையவர். கான் – காடு. இத்திருப்பதிகம் "உயிர்கள் பிறவி நீங்கி வீடடைதற் பொருட்டு எண்ணிறந்த தலங்களை இடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக் குறிப்பினை உணர்ந்து அக்குறிப்பின் வழியே அத்தலங்களை அடைந்து, வணங்கி உய்தி பெறுதல் வேண்டும்" என அறிவுறுத்தி அருளிச் செய்தது.

சதைப்பகுதியை வளைத்துச் சுவராகச் செய்து ஒன்பது வாயில்களை அமைத்து, வெள்ளிய ஒளியை உடைய எலும்புகளைத் தூணாக அமைத்து, மயிரினை மேற்பரப்பித் தாமே படைப்பித்த குடில் நீங்கும்படி தக்காரிடத்து வலியச் சென்று, தாவும் மானைக் கையில் ஏந்திய பெருமான் பல வடிவங்களை உடையவராய் அருள் செய்கின்றார். தோகைகளைப் பரப்பி மயில்கள் ஆடும் சோலைகளை உடைய திருக்கழிப்பாலைத் தலத்தை உகந்தருளியுள்ள மண்டையோட்டினை ஏந்திய தலைவராகிய அப்பெருமான், வான் உலகங்களை எல்லாம் கடந்து விரைவாகச் செல்லும் வீடுபேற்றுலகிற்குச் செல்லும் வழியை அமைத்துக் கொடுத்துள்ளார். இவ்வுடம்பு பெற்றதனாலாய பயன்கொண்டு அவர் வகுத்த வழியிலே செல்வது ஒன்றே நாம் செயற்பாலது. அவர்க்குக் கைம்மாறாக நாம் செயற்பாலது ஒன்றும் இல்லை.

---

2203. முறையார்ந்த மும்மதிலும் பொடியாச் செற்று
முன்னுமாய்ப் பின்னுமாய் முக்க ணெந்தை
பிறையார்ந்த சடைமுடிமேற் பாம்பு கங்கை
பிணக்கந்தீர்த் துடன்வைத்தார் பெரிய நஞ்சுக்
கறையார்ந்த மிடற்றடங்கக் கண்ட எந்தை
கழிப்பாலை மேய கபாலப் பனார்
மறையார்ந்த வாய்மொழியான் மாய யாக்கை
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
2

பதிக மகுடம் – கழிப்பாலை மேய கபாலப்பனார். வழி வைத்தார்க்கவ்வழியே போதும் நாமே.

மதில்களுக்குரிய இலக்கணங்கள் நிரம்பிய மூன்று மதில்களையும் சாம்பலாகுமாறு அழித்த பெருமான் ஏனைய பொருள்கள் தோன்றுவதன் முன்னும் அவை அழிந்தபின்னும் உள்ள முக்கண் தலைவர். கங்கை தங்கிய சடைமுடியிலே பிறைச்சந்திரனும் பாம்பும் பகைமை நீங்கச் சேர்த்து வைத்தவர். கொடிய விடக் கறையைக் கழுத்தளவில் தங்கச் செய்தவர் எம்பெருமானார். கழிப்பாலை மேவிய அக்கபாலப்பனார், வேதங்களாகவும் ஆகமங்களாகவும் அமைந்த தம் சொற்களால், இவ்வுடல் அழிய உயிர் செல்லுதற்குரிய வழியை வகுத்தருளியுள்ளார். அவ்வழியிலே நாம் செல்லுவோம்.

**2204.** நெளிவுண்டா கருதாதே நிமலன் தன்னை
நினைமின்கள் நித்தலும்நே ரிழையா ளாய
ஒளிவண்டார் கருங்குழலி யுமையாள் தன்னை
யொருபாகத் தமர்ந்தடியா ருள்கி யேத்தக்
களிவண்டார் கரும்பொழில் சூழ் கண்டல் வேலிக்
கழிப்பாலை மேய கபாலப் பனார்
வளியுண்டார் மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
3

கரும்பொழில் – இருண்ட சோலை
கண்டல் – தாழை. வளி – பிராண வாயு
ஆர் – பொருந்துகின்ற

தூயனாகிய அப்பெருமானாரை நெகிழ்ச்சியால் இடையறவு படாமல் நாடோறும் தொடர்ந்து விருப்போடு நினையுங்கள். சிறந்த அணிகலன்களை உடைய, வண்டுகள் ஒளிந்து தங்கும் கருங்கூந்தலை உடைய உமாதேவியைத் தம் உடம்பில் ஒருபாகமாக விரும்பிக் கொண்டு, அடியார்கள் நினைந்து துதிக்குமாறு, களிப்பை உடைய வண்டுகள் நிறைந்த இருண்ட சோலைகளுக்குத் தாழை வேலியாகச் சூழ்ந்த கழிப்பாலை மேவிய கபாலப்பனார் காற்றை நுகர்தலாலே நிலைத்து நிற்கும், மாயையின் காரியமாகிய இவ்வுடம்பை இனிக்கொள்ளாது நிலையாக விடுத்தற்குரிய நெறியைக் குறிப்பிட்டுள்ளார். அந்நெறியிலே நாம் செல்வோம்.

**2205.** பொடிநாறு மேனியர் **பூதிப் பையர்**
புலித்தோலர் பொங்கரவர் பூண நூலர்
அடிநூறு கமலத்தர் ஆரூ ராதி
ஆனஞ்சு மாடும் ஆதிரையி னார்தாம்
கடிநாறு பூஞ்சோலை கமழ்ந்து நாறுங்
கழிப்பாலை மேய கபாலப் பனார்
மடிநாறு மேனியிம் மாயம் நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
4

கடிநாறும் – மிகுதியாக நறுமணம் பெற்று வீசும்
மடிநாறும் – இறப்புத் தோன்றும்
மாயம் – பொய்ம்மை, நிலையாமை

திருநீறு விளங்கும் திருமேனியை உடைய பெருமானார் **திருநீற்றுப்பையையும் வைத்துள்ளார்.** அவர் பூணூல் அணிந்து புலித்தோலை உடுத்துப் பாம்புகளை அணிகலனாகப் பூண்டவர். ஆதிரை நட்சத்திரத்தை உகந்து கொண்டு திருவாரூரில் உள்ள அவ்வாதி மூர்த்தி பஞ்சகவ்விய அபிடேகத்தை ஏற்றுத் தம் திருவடிகளில் அடியவர்கள் இட்ட பல தாமரைப் பூக்களை உடையவர். சோலைகள் நறுமணம் வீசும் கழிப்பாலை மேவிய அக்கபாலப்பனார், இறந்து போகும் இப்பொய்யாய உடல் நீங்க உயிர் நிலையாகத் தங்குதற்குரிய இடத்தை அடைவதற்கு உரிய வழியை வகுத்துக் கொடுத்துள்ளார். அவ்வழியே நாம் செல்வோம்.

2206. விண்ணானாய் விண்ணவர்கள் விரும்பி வந்து
வேதத்தாய் கீதத்தாய் விரவி யெங்கும்
எண்ணானாய் எழுத்தானாய் கடலே ழானாய்
இறையானாய் எம்மிறையே யென்று நிற்கும்
கண்ணானாய் காரானாய் பாரு மானாய்
கழிப்பாலை யுள்ளுறையுங் கபாலப் பனார்
மண்ணாய மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
5

தேவர்கள் விரும்பி வந்து 'தேவருலகம் ஆகியவனே! எல்லா இடங்களிலும் பரவி வேதம் ஓதி, கீதம்பாடி, எண் ஆனவனே! எழுத்தானவனே! ஏழ்கடலும் ஆனவனே! எல்லாப் பொருள்களுக்கும் தலைவனே! எங்கள் தலைவனே! எங்கள் பற்றுக்கோடே! மேகங்களும் உலகப் பொருள்களும் ஆயவனே!' என்று போற்றி நிற்கும் கழிப்பாலை மேவிய கபாலப்பனார், இவ்வுலகில் தோன்றிய நிலையாமையை உடைய உடல் நீங்க வழி வைத்தார். அவ்வழி நாம் செல்வோம்.

ஊனையும், உயிரையும் உருக்கும் பாடல்களில் ஒன்று. தமிழை அனுபவியுங்கள்.

2207. விண்ணப்ப விச்சா தரர்க ளேத்த
விரிகதிரான் எரிசுடரான் விண்ணு மாகிப்
பண்ணப்பன் பத்தர் மனத்து ளேயும்
பசுபதி பாசுபதன் தேச மூர்த்தி
**கண்ணப்பன் கண்ணப்பக் கண்டு கந்தார்**
கழிப்பாலை மேய கபாலப் பனார்
வண்ணப் பிணிமாய யாக்கை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
6

கழிப்பாலை மேவிய கபாலப்பனார், வேண்டுகோளை உடைய வித்தியாதரர்கள் துதிக்க, சூரியன், அக்கினி, விண்ணுலகத்தார் ஆகிய எல்லாப் பொருள்களையும் ஆக்கும் தந்தையார். அடியார்கள் மனத்துள் பொருந்தும் உயிர்களின் தலைவர். பாசுபத வேடத்தையுடைய ஒளி வடிவினர். கண்ணப்ப நாயனார் தம் வலக்கண்ணை இடந்து அப்பிய செயலைக் கண்டு உகந்தவர். அவர் பல வகையான பிணிகளுக்கு இருப்பிடமாகிய இந்நிலையற்ற உடம்பு நீங்க வழி வகுத்துள்ளார். அவ்வழியே நாம் செல்வோம்.

விண்ணப்பம் – வேண்டுகோள்
விச்சாதரர் – வித்தியாதரர் – இசை பாடுபவர்
விரிகதிரான் – சூரியன்
எரிசுடரான் – அக்கினி
பண்அப்பன் – எல்லாப் பொருள்களையும் ஆக்குகின்ற தந்தை.

2208. பிணம்புல்கு பீறற் குரம்பை மெய்யாப்
பேதப் படுகின்ற பேதை மீர்காள்
நிணம்புல்கு சூலத்தர் நீல கண்டர்
எண்டோளர் எண்ணிறைந்த குணத்தி னாலே
கணம்புல்லன் கருத்துகந்தார் காஞ்சி யுள்ளார்
கழிப்பாலை மேய கபாலப் பனார்
மணம்புல்கு மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
7

பிணமாதலைப் பொருந்தும் ஓட்டைக் குடிசையை நிலைபேறுடையதாகத் தவறாக எண்ணும் அறிவிலிகளே! கழிப்பாலை மேவிய கபாலப்பனார், கொழுப்புத் தங்கும் சூலத்தவராய், நீலகண்டராய், எண் தோளினராய், எண்ணற்ற குணத்தினாலே கணம்புல்ல நாயனாரின் கருத்தை விரும்பி ஏற்றவராய்க் காஞ்சிமாநகரில் உகந்தருளி இருப்பவர். நறுமணப் பொருளால் நாற்றம் மறைக்கப்பட்ட நிலையில்லாத இவ்வுடல் தொடர்பு நீங்குதற்கு வழிவகுத்துள்ளார். அவ்வழியே நாம் செல்வோம்.

நமது உடலை சுவாமிகள் வர்ணிக்கும் விதம்

| | |
|---|---|
| பீறற்குரம்பை | – 6–12–7 |
| ஒழுகுமாடம் | – 5–31–7 |
| பொத்தல் மண் சுவர் | – 5–76–5 |
| ஓட்டை மாடம் | – 5–82–9 |

2209. இயல்பாய ஈசனை **எந்தை தந்தை**
**என்சிந்தை மேவி யுறைகின் றானை**
முயல்வானை மூர்த்தியைத் தீர்த்த மான
தியம்பகன் திரிசூலத் தன்ன கையன்
கயல்பாயுங் கண்டல்சூழ் வுண்ட வேலிக்
கழிப்பாலை மேய கபாலப் பனார்
மயலாய மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
8

கயல்மீன்கள் தம் மீது பாயப் பெற்ற தாழை மரங்களை எல்லையாகக் கொண்டு அவற்றால் சூழப்பட்ட கழிப்பாலை மேவிய கபாலப்பன் செயற்கையான் அன்றி இயற்கையாகவே எல்லோருக்கும் தலைவன். எம் குலத்தலைவன். என் சிந்தையில் விரும்பித் தங்கி யிருக்கின்றவன். இடையறாது தொழில் செய்பவன். அவ்வத் தொழில்களுக்கு ஏற்ற திருமேனிகளை உடையவன். தூயவன், முக்கண்ணன், முத்தலைச் சூலத்தினன், தீயை வெளிப்படுத்தும் சிரிப்பினன், அப்பெருமான் மயக்கத்தைத் தரும் நிலையில்லாத இவ்வுடல் நீங்க வழிவைக்க, அவ்வழியே நாம் செல்வோம்.

ஈசன் – ஆள்பவன், தலைவன். ஒருவரது ஆணையால் தலைவனாகாது, தானே தலைவனாய் நிற்பவன். அம்பகம் – கண். திரியம்பகம் – முக்கண்ணன். திரியம்பகன் தியம்பகன் என வந்தது. மயல் – மயக்கம். எந்தை தந்தை என் சிந்தை மேவி – வழிவழி சிவனடிமைத் திறத்துள் நின்ற குடிமை.

2210. செற்றதோர் மனமொழிந்து சிந்தை செய்து
சிவமூர்த்தி யென்றெழுவார் சிந்தை யுள்ளால்
உற்றதோர் நோய்களைந்திவ் வுலக மெல்லாங்
காட்டுவான் உத்தமன்றா னோதா தெல்லாம்
கற்றதோர் நூலினன் களிறு செற்றான்
கழிப்பாலை மேய கபாலப் பனார்
மற்றிதோர் மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
9

செற்றது – பகைத்தது

கழிப்பாலை மேவிய கபாலப்பன், மனத்தில் பகை எண்ணத்தை நீக்கிச் சிவபெருமான் என்று தன்னை அன்போடு தியானிப்பவர்களின் உள்ளத்தில் உள்ள நோய்களைப் போக்கி அவர்களை இவ்வுலகத்தார் போற்றச் செய்யும் உத்தமனாய், எல்லாவற்றையும் ஓதாதே உணர்ந்தவனாய், இயல்பாகவே எல்லாப் பாசங்களையும் நீங்கியவன். அப்பெருமான் இந்த நிலையற்ற உடல் நீங்க வைத்த வழியிலே நாம் போவோம்.

---

2211. பொருதலங்கல் நீண்முடியான் போர ரக்கன்
புட்பகந்தான் பொருப்பின்மீ தோடா தாக
இருநிலங்கள் நடுக்கெய்த எடுத்தி டுதலும்
ஏந்திழையாள் தான்வெருவ இறைவன் நோக்கிக்
கரதலங்கள் கதிர்முடியா றஞ்சி னோடு
கால்விரலா லூன்று கழிப்பா லையார்
வருதலங்க மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.
10

அலங்கல் – வெற்றிமாலை

வருதல் அங்கம் – வருதலை (பிறத்தலை) உடைய உடம்பு

போரில் வல்ல அரக்கனாகிய இராவணனுடைய புட்பக விமானம் வெற்றிமாலை சூடிய சிவபெருமானுடைய மலையின் மீது செல்லாதாகக் கீழ்நிலம் அசையுமாறு அவன் மலையைப் பெயர்த்த அளவில் உமாதேவி அஞ்ச அப்பெருமான் மனத்தால் நோக்கி, அவன் இருபது கரங்களையும் பத்துத் தலைகளையும் தன் கால் விரலை ஊன்றி நசுக்கியவன். அப்பெருமான் திருக்கழிப்பாலையை உகந்தருளும் திருத்தலமாகக் கொண்டு பிறத்தலை உடைய நிலையாமையை உடைய இவ்வுடம்பின் தொடர்பு உயிருக்கு என்றும் நீங்குமாறு செய்யும் வழியை அறிவித்துள்ளான். அவ்வழியிலேயே நாம் செல்வோம்.

## 13. திருப்புறம்பயம்

ப.தொ.எண் : 226 பதிக எண் : 13

### பதிக வரலாறு

சுவாமிகள் பழையாறையில் சமணரால் மறைக்கப்பட்டிருந்த வடதளியை அரசனைக் கொண்டு வெளிப்படுத்திப் புதுக்கச்செய்து வணங்கிய பின்னர், காவிரியின் இருகரையிலும் உள்ள தலங்களை இறைஞ்சிச் சாத்திய தமிழ் மாலைகளுள் ஒன்றாகக் கொள்ளப்படுகின்றது இத் திருப்பதிகம் (தி. 12 திருநாவு. புரா. 30.)

### குறிப்பு :

இது, பிச்சைக்கு வந்த பெருமானது காட்சியாலும், நோக்கு உரைகளாலும் நிறையழிந்தாளொருத்தி, நாள்தோறும் வரும் அவரது வருகையால் ஆற்றியிருந்து, பின்னர் அவர் வாரா தொழிய ஆற்றாளாய் அவர்பால் தூதுவிடக் கருதித் தோழிக்குக் கூறியவாறாக அருளிச் செய்யப்பட்டது. நாள்தோறும் கண்டு உரையாடுங்கால் அவர் தம் ஊரை வேறு வேறாகக் கூற, அவர் உலக முழுதுடையராத லுணர்ந்த அவள், 'அஃது ஒக்கும்' என்றிருப்ப, இறுதியில் அவர் தம் ஊர் புறம்பயமாகக் கூறிச் சென்றமையை ஈண்டுக் கூறுகின்றாள் என்க. இறைவன் வெளிநின்றருளப்பெற்றார். அதன் பின்னர் அவனை அடைய விரையும் நிலை, இதன் உண்மைப் பொருள்.

2212. கொடிமாட நீள்தெருவு கூடல் கோட்டூர்
கொடுங்கோளூர் தண்வளவி கண்டியூரும்
நடமாடு நன்மருகல் வைகி நாளும்
நலமாகு மொற்றியூ ரொற்றி யாகப்
படுமாலை வண்டறையும் பழனம் பாசூர்
பழையாறும் பாற்குளமுங் கைவிட் டிந்நாள்
பொடியேறு மேனியராய்ப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 1

கொடிகள் கட்டப்பட்ட மாட வீடுகளைக் கொண்ட நீண்ட தெருக்களை உடைய கூடல், கோட்டூர், கொடுங்கோளூர், வளவி, கண்டியூர், கூத்து நிகழ்த்தும் சிறந்த மருகல் இவற்றில் நாளும் தங்கி அழகிய ஒற்றியூர் ஒற்றி வைக்கப்பட்டது என்னும் பொருளைத் தருதலில் அதனை நீங்கிச் சூரியன் மறையும் மாலையிலே வண்டுகள் ஒலிக்கும் பழனம், பாசூர், பழையாறு, பாற்குளம் என்னும் இவற்றை நீங்கி இன்று திருநீறு அணிந்த மேனியராய்ப் பூதங்கள் தம்மைச் சூழ்ந்துவர எங்களுடைய ஊர் புறம்பயம் என்று கூறி எம்பெருமானார் சென்று விட்டார்.

கூடல் – மதுரை. "புறம்பயம் நம்மூரென்று போயினாரே" என்பது பதிக மகுடம்.

2213. முற்றொருவர் போல முழுநீ றாடி
முளைத்திங்கள் சூடிமுந் நூலும் பூண்டு
ஒற்றொருவர் போல உறங்கு வேன்கை
ஒளிவளையை ஒன்றொன்றா எண்ணு
கின்றார்
மற்றொருவ ரில்லைத் துணையெ னக்கு
மால்கொண்டாற் போல மயங்கு வேற்குப்
புற்றரவக் கச்சார்த்துப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 2

தவம் முற்றிய ஒருவரைப்போல உடல் முழுதும் திருநீறு பூசி, பிறைசூடி, முந்நூல் அணிந்து ஒற்றுவதற்கு வந்த ஒருவர் போலப் பொய் உறக்கம் கொண்ட என்கையிலிருக்கும் ஒளி பொருந்திய வளையல்களை ஒன்றொன்றாக எண்ணுகின்றார். எனக்கு இவரன்றித் துணைவர் வேறு யாரும் இல்லை. இவருடைய செயலைக் கண்டு பித்துப் பிடித்தவரைப் போல மயங்குகின்ற என்னிடத்தில் 'எங்களுடைய ஊர் திருப்புறம்பயம்' என்று கூறிப் பாம்பினைக் கச்சாக அணிந்த எம்பெருமான் பூதங்கள் தம்மைச்சூழ என்னை விடுத்துப் போய் விட்டார்.

---

2214. ஆகாத நஞ்சுண்ட அந்தி வண்ணர்
ஐந்தலைய மாசுணங்கொண் டம்பொற்
றோள்மேல்
ஏகாச மாவிட்டோ டொன் றேந்திவந்
திடுதிருவே பலியென்றார்க் கில்லே புக்கேன்
பாகேதுங் கொள்ளார் பலியுங் கொள்ளார்
பாவியேன் கண்ணுள்ளே பற்றி நோக்கிப்
போகாத வேடத்தர் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 3

ஏகாசம் – மேலாடை. பாகு – குழம்பு. பலி – சோறு

தீங்கு தருகின்ற விடத்தை நுகர்ந்த, மாலையின் செந்நிறத்தை உடைய பெருமான், ஐந்தலைப் பாம்பு ஒன்றனை அழகிய தோளின் மீது மேலாடையாக அணிந்து, ஓடு ஒன்றனைக் கையில் ஏந்தி, எம் இல்லத்து வந்து 'திருவே! உணவு இடு' என்று கூற, உணவு கொண்டுவர உள்ளே சென்றேன். உணவுகளோடு யான் மீண்டு வரக்குழம்போ சோறோ ஏதும் என்னிடத்துப் பிச்சையாகப் பெறாமல் என்னைக் கூர்ந்து நோக்கி என் கண்ணுள்ளே அவர் உருவம் நீங்காது இருக்குமாறு செய்து, பூதங்கள் சூழப் 'புறம்பயம் நம் ஊர்' என்று போயினார்.

**2215.** பன்மலிந்த வெண்தலை கையி லேந்திப்
பன்முகில்போல் மேனிப்ப வந்த நாதர்
நென்மலிந்த நெய்த்தானஞ் சோற்றுத் துறை
நியமந் துருத்தியும் நீடூர் பாச்சில்
கன்மலிந் தோங்கு கழுநீர்க் குன்றங்
கடனாகைக் காரோணங் கைவிட் டிந்நாள்
பொன்மலிந்த கோதையருந் தாமு மெல்லாம்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 4

பல்மிக்க வெள்ளிய மண்டையோட்டைக் கையில் ஏந்திப் பனிபொழியும் மேகம் போன்று திருநீற்றால் வெள்ளிய மேனியை உடைய வஞ்சகராகிய எம் தலைவர், நெல் மிக விளையும் நெய்த்தானம், சோற்றுத்துறை, நியமம், துருத்தி, நீடூர், பாச்சிலாச் சிராமம், கற்கள் மிக்க உயர்ந்த கழுக்குன்றம், கடற்கரையிலமைந்த நாகைக்காரோணம் என்ற தாம் உகந்தருளியிருந்த திருத்தலங்களை விடுத்து, இன்று பொலிவுமிக்க தம் தேவிமாரோடு கூடியதாம் ‘புறம்பயம் நம் ஊர்’ என்று போயினார்.

பன்முகில் – பனியைப் பெய்யும் மேகம்.

---

**2216.** செத்தவர்தந் தலைமாலை கையி லேந்திச்
சிரமாலை சூடிச் சிவந்த மேனி
மத்தகத்த யானை யுரிவை மூடி
மடவா ளவளோடு மானொன் றேந்தி
அத்தவத்த தேவர் அறுப தின்மர்
ஆறுநூ றாயிரவர்க் காடல் காட்டிப்
புத்தகங் கைக்கொண்டு புலித்தோல் வீக்கிப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 5

இறந்தார் தலைமாலையைக் கையிலெடுத்துத் தலையில் சூடிச் சிவந்த மேனியில் பெரிய தலையை உடைய யானைத் தோலைப் போர்த்துப் பார்வதி பாகராய், மானைக் கையில் ஏந்தி, ஆறுநூறாயிரத்து அறுபது தேவர்கள் தம் கூத்தினைக் காணுமாறு அருள் செய்து, புலித்தோலை இடையில் கட்டிக் கையில் புத்தகம் ஒன்றனை ஏற்றுப் புறம்பயம் நம் ஊர் என்று எம்பெருமான் போயினார். புத்தகம் கைக் கொள்ளல் ஆசிரியக் கோலம்.

சிவபெருமான் கையிலும் தலைமாலை ஏந்துதல்.
புறம்பயமதனில் அறம்பல அருளியும் – திருவாசகம்
அறம் பயனுரைத்தனை புறம்பயம் அமர்ந்தோய்
– திருஞானசம்பந்தர்

2217. நஞ்சடைந்த கண்டத்தர் வெண்ணீ றாடி
நல்லபுலி யதள்மேல் நாகங் கட்டிப்
பஞ்சடைந்த மெல்விரலாள் பாக மாகப்
பராய்த்துறையே னென்றோர் பவள வண்ணர்
**துஞ்சிடையே வந்து துடியுங் கொட்டத்**
**துண்ணென் றெழுந்திருந்தேன்**
**சொல்ல மாட்டேன்**
புன்சடையின் மேலோர் புனலுஞ் சூடிப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 6

விடம் அடைந்த கழுத்தினராய், நீறு பூசி, பெரிய புலித்தோல் மேல் பாம்பினை இறுகக் கட்டிக் கொண்டு, செம்பஞ்சு போன்ற மெல்லிய விரல்களை உடைய பார்வதி பாகராய்ப் பவளம் போன்ற சிவந்த மேனியை உடைய எம்பெருமான் யான் உறங்கும் இடத்து வந்து துடியை ஒலித்து என்னை விழிக்கச் செய்து 'யான் பராய்த் துறை ஊரினேன்' என்றார். 'யான் திடுக்கிட்டு எழுந்திருந்தேன். பின் அவர் என் குறிப்பறிந்து மெய் தீண்டிச் செய்தனவற்றைச் சொற்களால் எடுத்துக் கூறும் ஆற்றல் இல்லேன். தம் சிவந்த சடையில் கங்கையைச் சூடி அப்பெருமான் 'புறம்பயம் நம் ஊர்' என்று போயினார்.

2218. மறியிலங்கு கையர் மழுவொன் றேந்தி
மறைக்காட்டே னென்றோர் மழலை பேசிச்
செறியிலங்கு திண்தோள்மேல் நீறு கொண்டு
திருமுண்ட மாஇட்ட திலக நெற்றி
நெறியிலங்கு கூந்தலார் பின்பின் சென்று
நெடுங்கண் பனிசோர நின்று நோக்கிப்
பொறியிலங்கு பாம்பார்த்துப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 7

மறி – மான்கன்று.
செறி – செறிதல், நெருங்குதல்.

ஒருகையில் மான் குட்டியை ஏந்தி, மற்றொரு கையில் மழுப்படையை ஏந்தி, 'யான் மறைக்காட்டில் உள்ளேன்' என்று இனிய சொற்களைப் பேசி, விளங்கிய திண்ணிய தோள்கள் மீது திருநீற்றைப் பூசி, நெற்றியில் திரிபுண்டரமாகத் திருநீறணிந்து, சுருண்ட கூந்தலை உடைய மகளிர்பின் சென்று, தம் கண்கள் கரிந்து நீர் சொரியுமாறு அவர்களை நெடுநேரம் அசையாமல் நோக்கி, புள்ளிகள் பொருந்திய பாம்புகளை இறுகக் கட்டிக் கொண்டு பூதங்கள் சூழ எம்பெருமானார் 'புறம்பயம் நம் ஊர்' என்று போயினார்.

**2219.** நில்லாதே பல்லூரும் பலிகள் வேண்டி
நிரைவளையார் பலிபெய்ய நிறையுங் கொண்டு
கொல்லேறுங் கொக்கரையுங் கொடுகொட்டியுங்
குடமூக்கி லங்கொழியக் குளிர்தண் பொய்கை
நல்லாளை **நல்லூரே தவிரே னென்று**
நறையூரில் தாமும் தவிர்வார் போலப்
பொல்லாத வேடத்தர் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. **8**

ஓரிடத்தில் தங்காமல் பல ஊர்களும் பிச்சை ஏற்றலைக் கருதிச் சென்று, வளையலை வரிசையாக அணிந்த மகளிர் பிச்சை வழங்க, அதனோடு அவர்களுடைய அடக்கம் என்ற பண்பினையும் கைக்கொண்டு, தம் வாகனமாகக் காளையையும், வாச்சியங்களான கொக்கரையையும் கொடுகொட்டியையும் குடமூக்கு என்னும் தலத்தில் விடுத்து, நல்லாளை, நல்லூர், நறையூர் இவற்றில் தங்குபவரைப் போலக் கூறிக்கொண்டு, மகளிரை நிறையழிக்கும் கோலமுடைய நம் பெருமானார் பூதம் சூழப் 'புறம்பயம் நம் ஊர்' என்று போயினார்.

கொக்கரை – சங்கு

**2220.** விடையேறு நீறணிந்தோ ராமை பூண்டு
வெண்தோடு பெய்திடங்கை வீணை யேந்தித்
திரையேறு சென்னிமேல் திங்கள் தன்னைத்
திசைவிளங்க வைத்துகந்த செந்தீ வண்ணர்
அரையேறு மேகலையாள் பாக மாக
ஆரிடத்தி லாட லமர்ந்த ஐயன்
புரையேறு தாமேறிப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. **9**

நறுமணம் கமழும் திருநீற்றைப் பூசி ஓர் ஆமையோட்டினை அணிகலனாகப் பூண்டு, காதில் சங்கத் தோட்டினை அணிந்து, இடக்கையிலே வீணையை ஏந்திக் கங்கை தங்கும் சடை மீது பிறையை நாற்றிசையும் அதன் ஒளிபரவுமாறு வைத்து, மகிழ்ந்த, செந்தீ நிறத்துப் பெருமானார், மேகலையை இடையில் அணிந்த உமைபாகராய், பிறர் அணுகுதற்கரிய சுடுகாட்டில் கூத்தாடுதலை விரும்பிய தலைவராய், மேம்பட்ட காளையை இவர்ந்து, பூதம் சூழப் 'புறம்பயம் நம் ஊர்' என்று போயினார்.

ஆரிடம் – அணுகுதற்கரிய இடம்
புரை – உயர்வு, தூய்மை

2221. கோவாய இந்திரனுள் ளிட்டா ராகக்
குமரனும் விக்கினவி நாய கன்னும்
பூவாய பீடத்து மேல யன்னும்
பூமி யளந்தானும் போற்றி சைப்பப்
பாவாய இன்னிசைகள் பாடி யாடிப்
பாரிடமுந் தாமும் பரந்து பற்றிப்
பூவார்ந்த கொன்றை பொறிவண் டார்க்கப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 10

தேவர் தலைவனான இந்திரன் உள்ளிட்டவரும், முருகனும், இடர்களையும் விநாயகனும், தாமரையின் மேல் உள்ள பிரமனும், உலகங்களை அளந்த திருமாலும் வணங்கி வாழ்த்துச் சொல்லுமாறு இனிய பாடல்களைப் பாடி, அவற்றிற்கு ஏற்ப ஆடி, வண்டு ஒலிக்கும் கொன்றைப் பூவினை அணிந்த தாமும் தம் பூதங்களுமாய்ப் 'புறம்பயம் நம் ஊர்' என்று பெருமான் போயினார்.

## 14. திருநல்லூர்

ப.தொ.எண் : 227 | பதிக எண் : 14

**(சுவாமிகளின் சென்னிமிசைச் சிவபெருமான் பாத மலர் சூட்ட மகிழ்ந்து பாடிய திருப்பதிகம்)**

2222. நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 1

நல்லூரிலுள்ள எம் பெருமானார் நினைந்து உள்ளம் உருகும் அடியவர்களை மேலும் மனம் உருகுமாறு அவர்களுடைய தீவினைகளை எல்லாம் போக்கியவர். சினந்து எதிர்த்த யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டவர். பிறை சூடியவர். தேவர் கூட்டத்தினர் சிறப்பாகத் தேடி, அரிதின் கிட்டி, அவர்கள், தம்மை மணி மகுடத்தோடு வணங்குதலால் அம்முடிகளில் செறிந்த மலர்களிலிருந்து பாயும் தேனினால் நனைந்தன போலக் காணப்படும் திருவடிகளை என் தலைமேல் வைத்தார். இஃது அவர் பேரருளின் தன்மையாம்.

நைய – மனம் மேலும் இளக. (தற்போதம் கெடும்படி)
திருகு – வலுப்படுகின்ற
துருவி – தேடி
துற்ற – நெருங்கிய

**2223.** பொன்நலத்த நறுங்கொன்றை சடைமேல் வைத்தார்
புலியுரியின் னதள்வைத்தார் புனலும் வைத்தார்
மன்நலத்த திரள்தோள் மேல் மழுவாள் வைத்தார்
வார்காதிற் குழைவைத்தார் மதியும் வைத்தார்
மின்நலத்த நுண்ணிடையாள் பாகம் வைத்தார்
வேழத்தி னுரிவைத்தார் வெண்ணூல் வைத்தார்
நன்னலத்த திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 2

நல்லூர் எம்பெருமானார் சடையின் மீது பொன்னிற நறுங்கொன்றை, கங்கை, பிறை என்பன சூடி, காதில் குழை அணிந்து, மார்பில் பூணூல் தரித்து, இடையில் புலித்தோலை உடுத்து, யானைத் தோலைப் போர்த்து, மின்னல் போன்ற நுண்ணிய இடையை உடைய உமாதேவியாரைப் பாகமாகக் கொண்டு, அழகிய திரண்ட தோள்மேல் மழுப்படையைத் தாங்கி, மேம்பட்ட சிறப்புடைய திருவடிகளை, என் தலைமேல் வைத்த, பேரருளின் தன்மை உடையவர்.

உரி – புலியை உரித்த. இன்அதள் – இனிய தோல்.
மன் நலத்த – நிலைபெற்ற அழகு
மின் நலத்த – மின்னலினது அழகு

**2224.** தோடேறு **மலர்க்கொன்றை** சடைமேல் வைத்தார்
துன்னெருக்கின் வடம்வைத்தார் துவலை சிந்தப்
பாடேறு படுதிரைக ளெறிய வைத்தார்
பனிமத்த மலர்வைத்தார் பாம்பும் வைத்தார்
சேடேறு திருநுதல்மேல் நாட்டம் வைத்தார்
சிலைவைத்தார் மலைபெற்ற மகளை வைத்தார்
நாடேறு திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 3

இதழ்கள் மிக்க கொன்றை மலரைத் தலையில் சூடி, எருக்கம் பூ மாலை பூண்டு, தலையில் கங்கை அலைகள் மோதுமாறு ஊமத்தம் பூவையும் பாம்பையும் அணிந்து, மலைமகளைப் பாகமாகக் கொண்டு, அழகு மிகுந்த நெற்றியில் கண் ஒன்று படைத்துக் கொண்டு, கையில் வில் ஏந்தி, யாவரும் விரும்பும் திருவடிகளை என் தலைமேல் வைத்த நல்லூர் எம்பெருமானார் பேரருளின் தன்மை உடையவர்.

தோடேறு – இதழ்நிறைந்த. துவலை – துளி
பாடேறு – பக்கங்களில் ஏறுகின்ற
படுதிரைகள் – ஒலிக்கின்ற அலைகள்
சேடேறு – அழகு மிகுந்த
சிலை – வில்

## சரக்கொன்றை

"ஆடினாய் நறுநெய்யோடு பால்தயிர்
அந்தணர் பிரியாத சிற்றம்பலம்
நாடினாய் இடமா நறுங்கொன்றை நயந்தவனே" (தி.மு. 3 – 1 – 1 )

"பொங்காடரவம் புனலும் சடைமேற் பொலிவெய்தக்
கொங்கார் கொன்றை சூடியென் உள்ளம் குளிர்வித்தார்" (தி.மு. 2 – 60 – 4)

என்று ஞானசம்பந்தரும்,

"கந்தமலர்க் கொன்றையணி சடையான்தன்னை (தி.மு. 6 – 84 – 4)
பொன்றிகழ் கொன்றைமாலை புதுப்புனல்வன்னி மத்தம்
மின்றிகழ் சடையில் வைத்து" (தி.மு. 4 – 35 – 9)

என்று நாவுக்கரசரும்,

"மருவார் கொன்றை மதிசூடி" (தி.மு. 7 – 53 – 1)

என்று சுந்தரரும், தமது தேவாரப் பாடல்களில் சிவபெருமான் கொன்றை மலர் சூடி விளங்குவதைப் பலவாறு பாடியுள்ளனர். மூவருமாகச் சேர்ந்து ஏழுதிருமுறைகளில் 504 இடங்களில் கொன்றையைச் சுவாமியோடு இணைத்துப் பாடியுள்ளது பெரு வியப்பை அளிக்கிறது. செந்தமிழ்ப் பனுவல்களெல்லாம் சிவபெருமான் கொன்றை மாலை சூடும் அழகைப் பாடுவதால்தான், சிவனைக் கொன்றை வேய்ந்தான் என்பர். சிவனுக்குரிய மலர்களில் கொன்றையே முதலிடம் பெற்றது என்பதில் ஐயமில்லை.

"ஈங்கை இலவம் தூங்கிணர்க் கொன்றை" (குறிஞ். 86)

'தூங்கிணர்க் கொன்றை' என்பதற்குத் தொங்கும் மலர்க் கொத்துக்களை உடைய கொன்றை எனப்பொருள் கொள்ளப்பட்டுள்ளது. கார்காலத்தில் பூக்கின்ற கொன்றை மரம் பொன்னிறவண்ண மலர்க் கொத்துக்கள் மண்ணை நோக்கி தொங்கும் நிலையில் இருப்பதையே இவ்வாறு 'தூங்கிணர்க் கொன்றை' என்றனர். கொன்றை மரம் முல்லை நிலத்துக்குரியது.

தலைவியைப் பிரியும் தலைவன் கொன்றை பூப்பதற்குமுன் வருவதாகக் கூறிச் செல்லுதலும், வருகின்ற காலம் வரை தலைவி ஆற்றியிருத்தலும், அவன் வாராமல் தலைவி ஆற்றாமையுறுதலும், தோழி அவளை ஆற்றுப்படுத்தலும் ஆகியவை பற்றிய கொன்றை மலருடனான தொடர்பு சங்க இலக்கியங்களில் பேசப்படுகின்றது. குறுந்தொகையில் ஒரு காட்சி;

"கவலை கெண்டிய கல்வாய்ச் சிறுகுழி
கொன்றை ஒள் வீதாஅய் செல்வர்
பொன்பெய் பேழை மூய் திறந்தன்ன" (குறுந்தொகை – 233)

தலைவன் தன்னுடன் வரும் பாகனுக்கு, தலைவியினது ஊரின் அழகைக் காட்டுவதாக அமைந்த பாடல். கவலைக் கிழங்கைத் தோண்டி எடுத்ததனால் உண்டான அகன்ற வாயையுடைய சிறிய குழிகளில் கொன்றையினது ஒள்ளிய மலர்கள் பரவப் பெற்று, பொன்னை இட்டு வைக்கும் பெட்டியினது வாயைத் திறந்து வைத்தாற்போன்ற தோற்றத்தை உடைய கார்காலத்தை ஏற்றுக் கொண்ட முல்லை நிலத்தின் கண்ணது, என்று தலைவியின் ஊரைக் குறிப்பிடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இவ்வாறு கொன்றை மலருடன் தொடர்புடைய பல பாடல்களைச் சங்க இலக்கியங்களில் காணலாம்.

## தாவரவியல்

**சரக்கொன்றை நமது இந்தியாவைத் தாயகமாகக் கொண்டது. இலையுதிர்க் காடுகளிலும், கிராமப்புறங்களிலும், 600 மீட்டர் உயரம் வரை உள்ள இடங்களிலும் காணப்படும் இலையுதிர் மரமாகும். செம்மண் மற்றும் வண்டல் நிலங்களில் நன்றாக வளர்கிறது. வறண்ட பூமிகளிலும் காணலாம். 'ஐரோப்பிய லெபர்னம்' மரத்தைப் போன்ற தோற்றம் கொண்டுள்ளதால் இதனை 'இந்தியன் லெபர்னம்' என்கின்றனர். பொன் வண்ண நிறத்தில் சரம்சரமாய்ப் பூத்துத் தொங்குவதால் ஆங்கிலத்தில் 'கோல்டன் ஷவர்' (Golden Shower) என்கின்றனர். இதன் தாவரவியல் பெயர் *'Cassia fistula Linn'* என்பதாகும். *'Caesalpiniaceae'* என்ற தாவரக் குடும்பத்தைச் சேர்ந்தது. சுமார் 7.5 மீட்டர் உயரம் கொண்ட பழுப்பு நிறப் பட்டையுடன் கூடிய பந்து போன்ற தழையமைப்பைக் கொண்ட மரம். இலைகள் 5 முதல் 8 சிற்றிலைகள் கொண்ட கூட்டிலை. பங்குனி – சித்திரை மாதங்களில் 30 – 45 செ.மீ. நீளமுள்ள பூங்கொத்துக்கள் உருவாகும். நீண்டு சரம் சரமாய்ப் பூத்து கீழ்நோக்கி வளைந்து காற்றில் அசைந்தாடுவது கண்ணுக்கு விருந்தாகும். வைகாசி மாதம் பூக்கத் தொடங்கி பின்னர் காய்கள் 30 செ.மீ. முதல் 50 செ.மீ. நீளமுடன் தோன்றும், விதைகளுக்கிடையே தடுப்புகள் கொண்டு விதைகள் குறுக்கே அமைந்திருக்கும். கெட்டியான கறுப்பு பிசின் போன்ற அமைப்புடன் விதைகள் பொதிந்திருக்கும். விதைகள் வட்டவடிவானவை.**

## பயிர்முறை

**நன்கு உலர்ந்த நெற்றுக்களிலிருந்து விதை சேகரிக்க வேண்டும். ஒரு வருடகாலம் சேமித்து வைக்க, விதைகளின் முளைப்புத் திறன் கூடுதலாகும். முளைப்பை ஊக்குவிக்க விதையைக் கொதிநீரில் 5 நிமிடம் இட்டு, பின் குளிர் நீரில் 24 மணிநேரம் ஊறவைத்துப் பின்னர் மண் தொட்டிகளில் ஊன்ற வேண்டும். சுமார் 45 செ.மீ. உயரம் வளர்ந்த நாற்றுகளை நடலாம்.**

**சரக்கொன்றை தவிர மஞ்சள் கொன்றை (Cassia Saiamea Lamk); ஜாவாக் கொன்றை (Cassi Javanica Linn); கருங்கொன்றை (Cassia Roxburgii); தாமிர துளிர்க்கொன்றை (Cassia Grandis); வெளிர்சிவப்புக் கொன்றை [Cassia Renigera (wall)] ஆகிய ஐந்து வகைகள் உள்ளன.**

## தலவிருட்சம்

**சரக்கொன்றை திருக்கண்ணார் கோயில் (குறு மாணக்குடி), திருப்பந்தணை நல்லூர் (பந்தநல்லூர்), திருப்பத்தூர், அச்சிறுபாக்கம், திருவதிகை, திருஅஞ்சைக்களம், திருச்சாத்தமங்கை, திருக்கோலக்கா, திருமாணிகுழி, திருத்தினை நகர், திருத்துறையூர்,**

திருச்சோபுரம் ஆகிய தலங்களின் விருட்சமாகப் போற்றப்படுகிறது. ஒரு காலத்தில் இறைவனால் பசுவாகுமாறு சாபம் பெற்ற அம்பிகை சாபவிமோசனம் வேண்ட, பூமியில் தாம் கொன்றை மரத்தின் கீழ் இருப்பதாகவும் அங்கு வந்து வழிபடுமாறும் பணித்தார். அந்த மரம் இருக்கும் இடமே பந்தணை நல்லூர் என்னும் தலமாயிற்று. பாண்டி நாட்டுத் தலமான திருப்புத்தூரின் தலமரம் சரக்கொன்றையாகும். கொன்றை மலர் ஓங்கார வடிவமாய் (ஓம் வடிவாய்) இருப்பதால் பிரணவஹார புஷ்பம் (ஓம்காரமலர்) என்று அழைக்கப்படுகிறது.

இந்த சரக்கொன்றை மரத்தடியில்தான் வான்மீகி முனிவர் தவமியற்றினார். அவரைச் சுற்றி புற்று வளர்ந்தும் அதனையறியாமல் தவம் செய்ததனால் வான்மீகியானார். வான்மீகம் என்றால் புற்று எனப்படும்.

அச்சிறுபாக்கம் என்னும் ஊர் வழியே சென்ற பாண்டிய மன்னன் ஒருவன், காட்டு முல்லை சூழ்ந்த காட்டில் பொன் நிறமான உடும்பு ஒன்று ஓடுவதைக் கண்டான். அரசன் அதைத் துரத்திச் செல்லவும், அது ஒரு சரக்கொன்றை மரத்தின் பொந்தில் புகுந்து கொண்டது. அரசன் ஆணைப்படி ஏவலர்கள் அம்மரத்தை வெட்ட, குருதியுடன் சிவலிங்கம் வெளிப்பட்டது. அரசன் திரிநேத்திரதாரி என்ற முனிவரிடம் செல்வத்தைத் தந்து கோயில் கட்டச் செய்தான். அவரும் தன்னையும், அரசனையும் ஆட்கொண்ட இறைவனுக்கு முறையே ஆட்சீசுவரர் மற்றும் உமையாட்சீசுவரர் ஆகிய இரு கருவறை கொண்ட கோயில் கட்டினார் என அச்சிறுபாக்கம் தல வரலாற்றால் அறிகிறோம். இவ்வாறு சரக்கொன்றை சில தலங்களில் புராணக் கதைகளின் பின்னணியில் தலமரமாக அமைந்துள்ளது.

**மருத்துவப் பயன்கள்**

**பழத்தின் சதை, வேர்ப்பட்டை, விதைகள், இலைகள் ஆகியவை மலமிளக்கி வெளியேற்றும் தன்மை கொண்டவை. வேருக்கு சுரத்தைக் குணப்படுத்தும் திறனும், ஊக்க பானமாக செயலாற்றும் குணமும் உள்ளது. கனிச்சதை கருவுற்ற பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் பாதுகாப்பான மலமிளக்கியாகச் செயல்படும். ஆனால் அளவுடன் உபயோகிக்க வேண்டும். நிலவாகை (சென்னா) பொடியுடன் கனிச்சதையைச் சேர்த்து கலவையாக ஒரு அவுன்சுக்கு மிகாமல் உட்கொள்ள வேண்டும்.**

**இலையை அரைத்துப் படர்தாமரைக்குப் பூசலாம். முகத்தில் ஏற்படும் வாதம் மற்றும் வலிப்புக்கும் பூசலாம். பூவிதழ்களுடன் கற்கண்டு சேர்த்து அரைத்து குல்கந்து தயாரித்து 2 கிராம் அளவில் காலை, மாலை பாலுடன் அருந்திவர உள்ளுறுப்புகள் பலப்படும். மெலிந்தோர் உடல் நலம் தேறுவர்.**

**பழத்தின் புளி அல்லது பிசினுடன் உப்பு, புளி, மிளகாய், இஞ்சி சேர்த்து துவையல் செய்து உண்ண வயிற்று உப்புசம் சரியாகும். குடல் இயக்கம் சீராகும்.**

**பிறபயன்கள்**

**பட்டையில் 9 – 14 சதம் டானின் உள்ளது. தோல் பதனிட உகந்தது. வலுவான மரமாதலால் கம்பங்கள், தூண்கள் செய்யவும் ஏற்றது.**

**நல்ல நிழலும், அலங்காரமான தோற்றமும் கொடுக்க வல்லதால் பூங்காக்கள், சாலைகள் இவைகளில் நட ஏற்றது. நச்சு வாயுக்களை ஏற்கும் திறன் வாகைக்கு அடுத்து சரக் கொன்றைக்கு உள்ளது.**

2225. வில்லருளி வருபுருவத் தொருத்தி பாகம்
பொருத்தாகி விரிசடைமே லருவி வைத்தார்
கல்லருளி வரிசிலையா வைத்தார் ஊராக்
கயிலாய மலைவைத்தார் கடவூர் வைத்தார்
சொல்லருளி அறம்நால்வர்க் கறிய வைத்தார்
சுடுசுடலைப் பொடிவைத்தார் துறவி
வைத்தார்
நல்லருளால் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 4

கல்லருளி – மேரு மலைக்கு அருளி.
இங்கு அறம் நால்வர்க்குச் சொல்லியருள்கிறார். சனகாதி முனிவர் நால்வர்க்கு மோன நிலையில் காட்டி அருள்கிறார் அனுபவப் பொருளை. இரண்டும் ஒன்றா ? அல்லவா ? என்பது ஐயப்பாடாக உள்ளது.

நல்லூர் எம்பெருமானார், வில் போன்ற புருவத்தை உடைய பார்வதியை ஒரு பாகமாகக் கொண்டு, விரிந்த சடையில் கங்கையைச் சூடி, மலையை வில்லாகக் கொண்டு, கயிலாயத்தைத் தமக்குரிய சிறப்பான மலையாகக் கொண்டு, கடவூரைத்தாம் உகந்தருளும் திருத்தலமாகக் கொண்டு, வேதங்களை அருளி, முனிவர் நால்வருக்கு அறப்பொருளை அறியவைத்து, தாம் சுடுகாட்டுச் சாம்பலைப் பூசி, தகுதி எய்திய உயிர்களுக்குத் துறவற நெறியை அறிவித்து, மிக்க அருளினாலே, தம் திருவடிகளை எம் தலைமேல் வைத்த பேரருளின் தன்மை உடையவர்.

2226. விண்ணிரியுந் திரிபுரங்க ளெரிய வைத்தார்
வினைதொழுவார்க் கறவைத்தார்
துறவிவைத்தார்
கண்ணெரியாற் காமனையும் பொடியா வைத்தார்
கடிக்கமல மலர்வைத்தார் கயிலை வைத்தார்
திண்ணெரியுந் தண்புனலு முடனே வைத்தார்
திசைதொழுது மிசையமரர் திகழ்ந்து வாழ்த்தி
நண்ணரிய திருவடியெம் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 5

விண்இரியும் – தேவர்கள் அஞ்சி நீங்குவதற்குக் காரணமாய் நின்ற.

நல்லூர் எம்பெருமானார் வானத்தில் உலவிய முப்புரங்களையும் எரித்துத் தம்மை வழிபட்டவர் வினைகளைப் போக்கி, அவர்களுக்குப் பற்றற்ற உள்ளத்தை வழங்கி, நெற்றிக் கண்ணிலிருந்து எழுந்த தீயினால் காமனைப் பொடிப்படுத்து, தீயினையும் நீரினையும் தம்முடல் ஒன்றிலேயே கொண்டு, அடியவர் உள்ளத் தாமரையையும் கயிலை மலையையும் தம் இருப்பிடமாக அமைத்து, மேலுலகில் உள்ள தேவர்கள் எண் திசைகளிலிருந்தும் தொழுது வணங்கி வாழ்த்தியும்கூடக் கிட்டஇயலாத தம் திருவடிகளை என் தலைமேல் வைத்த பேரருளின் தன்மை உடையவர்.

2227. உற்றுலவு பிணியுலகத் தெழுமை வைத்தார்
உயிர்வைத்தார் உயிர்செல்லுங் கதிகள் வைத்தார்
மற்றமரர் கணம்வைத்தார் அமரர் காணா
மறைவைத்தார் குறைமதியம் வளர வைத்தார்
செற்றமலி யார்வமொடு காம லோபஞ்
சிறவாத நெறிவைத்தார் துறவி வைத்தார்
நற்றவர்சேர் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 6

நல்லூர் எம்பெருமானார் பிணிகள் உலவும் இவ்வுலகிலே எழுவகைப்பட்ட பிறவிகளையும் அவற்றை ஏற்கும் உயிர்களையும் அவ்வுயிர்கள் செல்லும் சுவர்க்கம் நரகம் ஆகிய கதிகளையும் வைத்தவர். குறைந்த சந்திரனை வளர வைத்தவர். பகை, ஆர்வம், காமம், உலோபம் முதலியவை தலை தூக்காத சிறந்த வழியையும் காமம் நீத்த பாலாகிய துறவு வழியையும் அமைத்த அப்பெருமான் நல்ல தவத்தை உடைய அடியவர்கள் சரண்புகும் திருவடிகளை என் தலைமேல் வைத்த பேரருளின் தன்மை உடையவர்.

பதிக மகுடம் – திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே.

2228. மாறுமலைந் தாரரண மெரிய வைத்தார்
மணிமுடிமேல் அரவைத்தார் அணிகொள் மேனி
நீறுமலிந் தெரியாடல் நிலவ வைத்தார்
நெற்றிமேற் கண்வைத்தார் நிலையம் வைத்தார்
ஆறுமலைந் தறுதிரைக ளெறிய வைத்தார்
ஆர்வத்தா லடியமரர் பரவ வைத்தார்
நாறுமலர்த் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 7

பகைவராகப் போரிட்ட அசுரர்களின் அரிய மதில்களை எரியச் செய்தவர். அழகிய சடைமுடி மீது பாம்பினையும் அலைகள் மோதும் கங்கையையும் சூடியவர். அழகிய திருமேனியில் திருநீறு பூசித் தீயினில் தம் கூத்து நிகழவைத்தவர். நெற்றிக்கண்ணர் பல திருக்கோயில்களை உடையவர். தேவர்கள் விருப்போடு தம் திருவடிகளை முன் நின்று துதிக்கச் செய்தவர். மலர்களைச் சூடிய திருவடிகளை என் தலைமேல் வைத்த அந்த நல்லூர்ப் பெருமானார் பேரருளின் தன்மை உடையவர்.

மாறு – பகை.
மலைந்தார் – போர் செய்தார்.
அரணம் – மதில்.
நிலையம் – திருக்கோயில்கள்.
அறுதிரைகள் – கரையை மோதி உடைகின்ற அலைகள்.

**2229.** குலங்கள்மிகு மலைகடல்கள் ஞாலம் வைத்தார்
குருமணிசே ரவைத்தார் கோலம் வைத்தார்
உலங்கிளரும் அரவத்தின் உச்சி வைத்தார்
உண்டருளிவிடம் வைத்தார் எண்டோள் வைத்தார்
நிலங்கிளரும் புனல்கனலுள் அனிலம் வைத்தார்
நிமிர்விசும்பின் மிசைவைத்தார் நினைந்தா ரிந்நாள்
நலங்கிளருந் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. **8**

இவ்வுலகில் நல்லூர் எம்பெருமானார் பல மலைகளையும் கடல்களையும் அமைத்தவர். இரத்தினங்கள் பொருந்திய பாம்பை அணிந்து பலபல வேடம் பூண்டவர். திரண்ட கல்போல் உயர்கின்ற பாம்பின் படத்திலிருந்து வெளிப்பட்டுப் பரந்த விடத்தை உண்டு, அதனைக் கண்டத்துத் தங்கவைத்தவர். எட்டுத் தோள்களைக் கொண்டுள்ளவர். நிலம் முதலிய ஐம்பூதங்களையும் அமைத்தவர். அவர் அடியேனை விருப்புற்று நினைத்து இப்பொழுது யான் விரும்பியவாறு நன்மை பெருகும் திருவடிகளை என் தலைமேல் வைத்த பேரருளின் தன்மை உடையவர்.

குலங்கள் – கூட்டங்கள்
அனிலம் – காற்று

---

**2230. சென்றுருளுங்** கதிரிரண்டும் விசும்பில் வைத்தார்
திசைபத்தும் இருநிலத்தில் திருந்த வைத்தார்
நின்றருளி யடியமரர் வணங்க வைத்தார்
நிறைதவமும் மறைபொருளும் நிலவ வைத்தார்
கொன்றருளிக் கொடுங்கூற்றம் நடுங்கி யோடக்
குரைகழற்சே வடிவைத்தார் விடையும் வைத்தார்
நன்றருளுந் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. **9**

நல்லூர் எம்பெருமானார் வானத்தில் உருண்டு உலவும் சூரிய சந்திரர்களை அமைத்தவர். இவ்வுலகில் எண்திசைகள், கீழ்ப்புறம், மேல்புறம் என்ற பத்துப்பாகுபாட்டையும் வகுத்தவர். தேவர்கள் தம் திருவடிகளை வணங்குமாறு அவர்கள் உள்ளத்தில் நிலைபெற்று அருள் செய்தவர். நிறைந்த தவமும் ஆசிரியர்பால் கேட்டறிய வேண்டிய இரகசிய உபதேசங்களும் நிகழுமாறு செய்தவர். கொடிய கூற்றுவன் நடுங்கி ஓடுமாறு அவன் புகழைக் கெடுத்து அவனைக் கழலணிந்த தம் திருவடியால் உதைத்தவர். காளையை வாகனமாகக் கொண்டவர். வீடுபேற்றை நல்கும் திருவடிகளை என் தலைமேல் வைத்த பேரருளின் தன்மை உடையவர். ‘அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்’ என்ற திருவாசகத்தின் திருவண்டப் பகுதி வாசகங்கள் நிரூபணமாகி வருகின்றன.

சென்றுருளுங்கதிர் இரண்டு – சென்று கொண்டே உருளும் சூரியனையும், சந்திரனையும் படைத்தார். என்ன பேராற்றல்! கற்பனை செய்ய முடியுமா!

## விசும்பில் வைக்கப்பட்டுள்ளவை

**ஞாலம் - ஞாலல் - ஞாலுதல் - தொங்குதல்**



### 23.07.2015 நாளிட்ட செய்திகள்

## பூமி போன்றதொரு புதிய கோள் கண்டுபிடிப்பு!

**கலிபோர்னியா :** பூமியைப் போன்றதொரு புதிய கோளை, கெப்லர் விண் தொலைநோக்கி மூலம் கண்டறிந்துள்ளதாக, நாசா விஞ்ஞானிகள் அறிவித்துள்ளனர். இப்புதிய கோளுக்கு கெப்லர் 452பி எனப் பெயரிட்டுள்ளனர்.

**விண் தொலைநோக்கி :** விண்வெளியில் புதிய கோள்களைக் கண்டறிவதற்காக, கடந்த 2009 மார்ச் 7இல் கெப்லர் விண்தொலைநோக்கியை நாசா விஞ்ஞானிகள் விண்ணில் ஏவினர். இதுவரை 1028 புதிய கிரகங்களைக் கண்டறிந்துள்ள கெப்ளர், தற்போது பூமியிலிருந்து 150 மில்லியன் கி.மீ. தொலைவில் விண்ணில் சுற்றி வருகிறது. ஒரு மில்லியன் என்பது பத்து இலட்சம் எண்ணிக்கையாகும்.

**கெப்லர் 452பி :** இந்நிலையில கெப்லர், பூமியைப் போன்றதொரு புதிய கிரகத்தைக் கண்டுபிடித்துள்ளது. இதற்கு 'கெப்லர் 452பி' என நாசா விஞ்ஞானிகள் பெயரிட்டுள்ளனர். 'கெப்லர் 452பி' கிரகத்தைப் பற்றிய மேலும் பல தகவல்களையும் விஞ்ஞானிகள் வெளியிட்டுள்ளனர்.

பூமியிலிருந்து 1,400 ஒளி ஆண்டுகள் தொலைவில், சிக்னஸ் நட்சத்திரக் கூட்டத்தில் அமைந்துள்ளது.

பூமியின் சுற்றளவை விட 60 சதவீதம் பெரியது.

600 கோடி ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியுள்ளது. இது சூரியனை விட 1.5 ஆண்டுகள் பழமையானது.

பூமியின் வெப்பநிலையே இக்கிரகத்திலும் நிலவுகிறது. மேலும் பூமியை விட 20% அதிக வெளிச்சம் வாய்ந்த கிரகம்.

இதன் சுற்றுப்பாதை பூமியின் சுற்றுப்பாதையை விட 5% அதிகம்.

## கெப்லர் – 452 பி

**https://ta.wikipedia.org/s/4l9j**

கட்டற்ற கலைக்களஞ்சியமான விக்கிப்பீடியாவில் இருந்து.

**கெப்லர் – 452 பி**
**Kepler - 452b**

புறக்கோள் புறக்கோள்களின் பட்டியல்



கெப்லர் – 452 இன் ஓவியம்

### தாய் விண்மீன்

| | | |
|---|---|---|
| விண்மீன் | | கெப்லர் – 452 |
| விண்மீன் | | கெப்லர் – 452 |
| விண்மீன் தொகுதி | | சிக்னசு |
| வலது ஏறுகை | ($\alpha$) | $19^h\ 44^m\ 00.89^s$[1] |
| சாய்வு | ($\delta$) | +44° 16' 39.2"[1] |
| தோற்ற ஒளிப்பொலிவு | (mV) | 13.426 (?) |
| தொலைவு | | 1400 ஒஆ (430 புடைநொடி) |
| அலைமாலை வகை | | G2[1] |

### இருப்புசார்ந்த இயல்புகள்

| | | |
|---|---|---|
| திணிவு | (m) | $5 \pm 2$ M⊕ |
| ஆரை | (r) | $1.63_{-0.24}^{+0.17}$[2] R⊕ |

**கண்டுபிடிப்பு**

| | | |
|---|---|---|
| கண்டறிந்த நாள் | | 23 சூலை 2015 (அறிவிப்பு) |
| கண்டுபிடிப்பாளர்(கள்) | | கெப்லர் அறிவியல் குழு |
| கண்டுபிடித்த முறை | | கடப்பு முறை |
| கண்டுபிடித்த இடம் | | கெப்லர் |
| கண்டுபிடிப்புநிலை | | வெளியீடு |

**சுற்றுவட்ட இயல்புகள்**

| | | |
|---|---|---|
| அரைப்பேரச்சு | (a) | 1.05 AU |
| சுற்றுக்காலம் | (P) | 385 நா |

**Database references**

| | |
|---|---|
| புறக்கோள்களின் கலைக்களஞ்சியம் | தரவு |
| SIMBAD | தரவு |

கெப்லர் – 452 பி (Kepler - 452b) என்பது கெப்லர் 452 என்ற ஜி. வகுப்பு விண்மீனைச் சுற்றி வரும் ஒரு புறக்கோள் ஆகும். இப்புறக்கோளை கெப்லர் விண்வெளித் தொலைநோக்கி கண்டுபிடித்தது. இக்கண்டுபிடிப்பை அமெரிக்காவின் நாசா நிறுவனம் 2015 சூலை 23 அன்று அதிகாரபூர்வமாக அறிவித்தது. நமது சூரியனை ஒத்த வாழ்தகமை வலயத்தைக் கொண்ட ஒரு விண்மீனைச் சுற்றிவரும். பூமியின் அளவினை ஒத்த புறக்கோள் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருப்பது இதுவே நான்காவது தடவையாகும். கெப்லர்–438பி, கெப்லர் 442பி, கெப்லர் 62இ ஆகியவை இதற்கு முன்னர் கண்டுபிடிக்கப்பட்ட பூமியை ஒத்த புறக்கோள்களாகும். ஆனாலும், கெப்லர் 452பி பாறைகளைக் கொண்டதா அல்லது ஒரு சிறிய வளிமக் கோளா என்பது இன்னும் அறியப்படவில்லை. அதன் அடர்த்தியைக் கொண்டு இது ஒரு பாறைக் கோளாக இருக்கலாம் என நம்பப்படுகிறது.

கெப்லர்–452பி கோள் நமது சூரியக் குடும்பத்தில் இருந்து 1,400 ஒளியாண்டுகள் தொலைவில் உள்ளது. நியூ ஹரைசன்ஸ் விண்கலத்தின் வேகத்தில் இக்கோளை அடைய 25.8 மில்லியன் ஆண்டுகள் எடுக்கும்.

## பண்புகள்

இப்புறக்கோள் இதனுடைய சூரியனைச் சுற்றி வர 385 நாட்கள் ஆகின்றது. இது பூமியை விட வயதில் மூத்த, ஆனால் வாழ்தகமை வலயத்தைக் கொண்ட, ஒரு விண்மீனைச் சுற்றிவரும் புறக்கோள் ஆகும். இது பூமியை விட ஐந்து மடங்கு அதிக நிறையையும், இரண்டு மடங்கு ஈர்ப்பு விசையையும் கொண்டுள்ளது. இது ஒரு புவியொத்த கோளாக இருப்பினும், இதன் அதிக நிறை மற்றும் அடர்த்தி காரணமாக, இது அதிக செயல்பாட்டிலுள்ள எரிமலைகளைக் கொண்ட ஒரு வல்ல – பூமியாக

இருக்கும் எனக் கணிக்கப்பட்டுள்ளது. அண்டவெளியிலிருந்து நோக்கும்பொழுது, இக்கிரகம் மேகங்களாலும், மூடுபனியாலும் சூழப்பட்டுள்ளது. கெப்லர்–452 என்பது சூரியனைப் போன்ற தோற்றம் கொண்டுள்ளது. கெப்லர்–452பி ஒரு பாறையுடைய கிரகமா அல்லது வளிமக் கிரகமா என்பது இன்னும் உறுதிசெய்யப்படவில்லை. இருப்பினும், இது பாறைக்கிரகமாக இருப்பதற்கு அதிக வாய்ப்பு உள்ளது. கெப்லர்–452பி–இல் வாழ்வதற்கு உகந்த சூழ்நிலை உள்ளதா என்பது தெளிவாகவில்லை. இக்கிரகம், ஜி2வி–வகை விண்மீனைச் சுற்றி வருகிறது. இவ்விண்மீனின் வெப்பம் மற்றும் நிறை சூரியனைப் போன்றே உள்ளது. ஆனால் சூரியனை விட 20 விழுக்காடு அதிக ஒளியை உமிழ்கிறது. இவ்விண்மீன், 60 கோடி ஆண்டுகள் பழமையானது. இது சூரியனை விட 1.5 கோடி ஆண்டுகள் பழமையானது. கெப்லர்–452பி கிரகம் இவ்விண்மீனிடமிருந்து பெறும் ஆற்றல், பூமி, சூரியனிடமிருந்து பெறும் ஆற்றலைவிட 10 விழுக்காடு அதிகமாகும். கெப்லர்–452பி ஒரு பாறைக் கிரகமாக இருந்தால், இதில் வெள்ளி கிரகத்தினைப் போல் பைங்குடில் விளைவுகளை அமைக்க முடியும்.

## மற்ற புவியொத்த கோள்களுடன் கெப்லர்–பி–இன் ஒப்பீடு

| பெயர் | ESI | SPH | HZD | HZC | HZA | pClass | hClass | தூரம் (ஒஆ) | நிலை | கண்டுபிடித்த ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பூமி | 1.00 | 0.72 | −0.50 | −0.31 | −0.52 | மிதவெப்பம் வாழ்தகமைக்கு உட்பட்டது | மிதவெப்ப கிரகம் | 0 | - | - |
| கெப்லர்–438பி | 0.88 | 0.88 | −0.93 | −0.14 | −0.73 | மிதவெப்பம் வாழ்தகமைக்கு உட்பட்டது | மிதவெப்ப கிரகம் | 470 | உறுதி | 2015 |
| கெப்லர்–452பி | 0.83[8][9] | | −0.49 | | | மிதவெப்பம் வாழ்தகமைக்கு உட்பட்டது | மிதவெப்ப கிரகம் | 1,400 | உறுதி | 2015 |
| செவ் வாய் | 0.70 | 0.00 | +0.33 | −0.13 | −1.12}} | மிதவெப்பம் வாழ்தகமைக்கு உட்பட்டது | அதிகுளிர்ந்த கிரகம் | 0 | சூரியனைச் சுற்றும் கிரகம் | வரலாற்றுக்கு முந்தைய |
| புதன் | 0.60 | 0.00 | −1.46 | −0.52 | −1.37 | அதிக வெப்பம் | வாழ உகந்ததல்ல | 0 | சூரியனைச் சுற்றும் கிரகம் | வரலாற்றுக்கு முந்தைய |
| வெள்ளி | 0.44 | 0.00 | −0.93 | −0.28 | −0.70 | மிதவெப்பம் வாழ்தகமைக்கு உட்பட்டது | அதிவெப்ப கிரகம் | 0 | சூரியனைச் சுற்றும் கிரகம் | வரலாற்றுக்கு முந்தைய |

## படக்காட்சியகம்




கெப்லர் 452 தொகுதியினுள் கெப்லர் 452பி–யின் சுற்றுவட்டம் (உட் சூரியக் குடும்பம் மற்றும் கெப்லர் 186 தொகுதிகளுடன் ஒப்பீடு)



புவி (இடது) கெப்லர் 452பி ஒப்பீடு




வாழ்தகமைப் பகுதிகளில் கெப்லர் விண்கலம் கண்டுபிடித்த சிறிய கோள்களுடன் ஒப்பீடு




கெப்லர் **452**பி மற்றும் தொடர்பான புறக்கோள்களுடன் புவி ஒப்பிடப்பட்டுள்ளது.

## மேற்கோள்கள்

1. '! Jump up to:1.0 1.1 1.2 "NASA Exoplanet Archive - Confirmed Planet Overview - Kepler-452b". NASA Exoplanet Archive (2015). பார்த்த நாள் 23 சூலை 2015.

2. Jump up'! "Kepler-452b". Extrasolar Planets Encyclopedia. பார்த்த நாள் 24 சூலை 2015.

3. Jump up'! (23 சூலை 2015). "NASA's Kepler Mission Discovers Bigger, Older Cousin to Earth". செய்திக் குறிப்பு.

4. Jump up'! Rincon, Paul (23 சூலை 2015). "Earth 2.0' found in Nasa Kepler telescope haul". பிபிசி. பார்த்த நாள் 2015-07-24.

5. Jump up'! "NASA telescope discovers Earth-like planet in star's 'habitable zone". BNO News (23 July 2015). பார்த்த நாள் 23 சூலை 2015.



விண்வெளியில் ஒரு மகத்தான தேடல்
சூரிய மண்டலத்திலும் அதற்கு அப்பாலும் கடந்த 50 வருடங்களாக ஆய்வுகள் நிகழ்ந்து வருகிறது. கடந்த மாதம், 'நியூ ஹொரைசன்ஸ்' நிகழ்த்திய தேடலே அதன் அடுத்த கட்டம்.
வடிவமைப்பு: ரெ.கார்த்திகேயன்
தகவல் தொகுப்பு: ஜெயஸ்ரீ அருணாச்சலம்
சந்திரன்
1959: சோவியத் யூனியனின் லூனா1 முதலில் சென்றது. லூனா 2வும் இறங்கியது.
1962: நாசாவின் ரேஞ்சர் 2 சென்றது. 4000 படங்கள் அனுப்பியது.
1969: அப்போலோ 11 மனிதர்களை அனுப்பியது.
சீனா 2007 முதல் 2014 வரை 4 கலன்களை அனுப்பியது. 2008ல் இந்தியாவின் சந்திரயான் 1 நிலவில் நீர் இருப்பதை உறுதி செய்ய உதவியது.
கடந்தகால ஆய்வுகள்
ஸ்புட்னிக் 1 என்ற பூமியை சுற்றும் முதல் செயற்கைக்கோளை சோவியத் யூனியன் 1957ல் ஏவியது.
புதன்
1974
நாசாவின் மரீனர் 10 வெள்ளியை ஆராய்ந்த பின் புதனுக்கு விஜயம் செய்தது.
2011
வெள்ளியை 2008ல் கடந்து, பின் புதனை வலம் வந்த முதல் கலன் மெசஞ்சர் தான்! அது படங்களையும் தகவல்களையும் அனுப்பியது.
வெள்ளி
1961
ஸ்புட்னிக் 7ல் இருந்து விண்கலனை அனுப்பி வெள்ளியை எட்ட முயன்று தோற்றது சோவியத். வெனிரா 1 கலன் வெள்ளிக்கு 1 லட்சம் கி.மீ., வரை அருகே சென்றது.
1965 - 83
சோவியத் யூனியன் வெனிரா தொடரில் மேலும் 15 கலன்களை அனுப்பியது. வேறு கிரகத்திலிருந்து பூமிக்கு அனுப்பப்பட்ட முதல் சமிக்ஞை 1970ல் வெனிரா 7ல் இருந்து வந்தது.
1962 - 85
மரீனர் மற்றும் வேகா ஆகிய பெயரில் 5 ஆய்வுகளை அமெரிக்கா செய்தது. 1985ல் இரண்டு வேகா கலன்கள் வெள்ளியில் தரை இறங்கின.
38 பயணங்கள்
46 பயணங்கள்
08 பயணங்கள்
பூமியிலிருந்து சராசரி தொலைவு
5.9 பி.கி.மீ.
2.7 பி.கி.மீ.
778 மி.கி.மீ.
4.4 பி.கி.மீ.
1.4 பி.கி.மீ.
225 மி.கி.மீ.
எரிகற்கள் விண்கற்கள்
குபேர் வளையம்
புதன்
வெள்ளி
பூமி
செவ்வாய்
வியாழன்
சனி
யுரேனஸ்
நெப்டியூன்
புளூட்டோ
செவ்வாய்
1965 - 2013
அமெரிக்கா, சோவியத் யூனியன், ஐரோப்பா மற்றும் இந்தியாவின் விண்வெளி அமைப்புகள், 46 செவ்வாய் ஆய்வுக்கலன்களை அனுப்பின.
2014
செப்டம்பரில் இஸ்ரோ மங்கள்யானை அனுப்ப, அது செவ்வாயை இன்றும் வலம் வருகிறது.
வியாழன்
1973
நாசாவின் பயோனீர் 10 முதல் வியாழன் ஆய்வை மேற்கொண்டபின் ஜோவியன் அமைப்பினுள் நுழைந்துள்ளது.
1974 - 2014
நாசா, ஏழு கலன்களை அனுப்பியது. 1995ல் கலீலியோதான் முதலில் வியாழனை வலம் வந்த கலன். ஷூமேக்கர் லெவி 9 வால் நட்சத்திர மோதலை படம்பிடித்தது. வளிமண்டல ஆய்வுக்கலனை அனுப்பியது.
சனி
1979
நாசாவின் பயோனீர் 11 சனியின் துகள் படலத்திற்கு 20,000 கி.மீ., தொலைவு வரை முதன் முறையாக விஜயம் செய்தது.
1980 - 81
வாயேஜர் 1 மற்றும் 2 ஆகியவை சனியின் வளையத்தில் மாற்றங்கள் ஏற்பட்டதற்கான ஆதாரத்தையும், அதன் மேற்பரப்பு, சந்திரன்களையும் படம் பிடித்து அனுப்பின.
1997
காசினி – ஹ்யூஜென்ஸ் விண்கலன் ஏவப்பட்டு, தற்போது சனியை வலம் வருகிறது. சனியின் சந்திரனில் திரவ நீர், ஹைட்ரோகார்பன் இருப்பதற்கான ஆதாரங்களை அனுப்பியது. 2008 வாக்கில் 74 முறை சுற்றி முடித்தது.
யுரேனஸ்
1986
வாயேஜர் 2, யுரேனசின் மேகப்பரப்புக்கு 81,500 கி.மீ., அருகே சென்றது. அதுவரை அறியப்படாத 10 புதிய சந்திரன்களை கண்டது.
நெப்டியூன்
1989
வாயேஜர் 2 மட்டுமே நெப்டியூனை ஆராய்ந்துள்ளது. 'பெருங் கரும்புள்ளியை' கண்டறிந்தது.
புளூட்டோ
2015
நியூ ஹொரைசன்ஸ் 2006ல் ஏவப்பட்டு, கடந்த ஜூலை 14 அன்று புளூட்டோவிற்கு மேலே 12,500 கி.மீ உயரம் வரை முதல் முறையாக சென்று படம்பிடித்தது.
ஐரோப்பிய விண்வெளி அமைப்பின் ரோசெட்டா கலன் முதன் முதலில் ஒரு விண்கல் மீது 2014ல் தரையிறங்கி, பயணித்து சாதனை படைத்தது.
நன்றி: பவுன்டெய்ன் இங்க் (Fountainink)
மி.கி.மீ., – மில்லியன் கி.மீ., பி.கி.மீ., – பில்லியன் கி.மீ.,

2231. பாம்புரிஞ்சி மதிகிடந்து திரைக ளேங்கப்
பனிக்கொன்றை சடைவைத்தார் பணிசெய்வானோர்
ஆம்பரிசு தமக்கெல்லாம் அருளும் வைத்தார்
அடுசுடலைப் பொடிவைத்தார் அழகும் வைத்தார்
ஓம்பரிய வல்வினைநோய் தீர வைத்தார்
உமையையொரு பால்வைத்தார் உகந்து வானோர்
நாம்பரவும் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 10

உரிஞ்சி – உராய்ந்து.
ஆம்பரிசு – ஏற்ற வகையில்
ஓம்பரிய – நீக்குதற்கரிய

நல்லூர் எம்பெருமானார், பகைமை நீங்கிப் பாம்பு பிறையை உராய்ந்து கிடக்க, கங்கை அலை வீச, அமைந்த சடையில் கொன்றைப்பூச் சூடியவர். தமக்குத் தொண்டு செய்யும் தேவர்கள் சிறக்குமாறு அவர்களுக்கு ஏற்ற வகையில் அருள்கள் செய்தவர். சுடுகாட்டுச் சாம்பலைப் பூசி ஒப்பனை செய்து கொண்டவர். நீக்குதற்கு அரிய வலிய முன் வினையினால் ஏற்படும் நலிவுகளை நீங்கச் செய்பவர். உமாதேவியைத் தம் உடம்பின் ஒருபாகமாகக் கொண்டவர். விரும்பி வானோர்களும் நில உலகத்தவரும் முன்நின்று துதிக்கும் திருவடிகளை என் தலைமேல் வைத்த பேரருளின் திறமுடையவராவர்.

2232. குலங்கிளரும் வருதிரைக ளேழும் வைத்தார்
குருமணிசேர் மலைவைத்தார் மலையைக் கையால்
உலங்கிளர எடுத்தவன்தோள் முடியும் நோவ
ஒருவிரலா லுறவைத்தார் இறைவா என்று
புலம்புதலும் அருளொடுபோர் வாளும் வைத்தார்
புகழ்வைத்தார் புரிந்தாளாக் கொள்ள வைத்தார்
நலங்கிளருந் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 11

குலம் – கூட்டம்
குரு – நிறம்
உலம் – திரண்ட

நல்லூர் எம்பெருமானார், கூட்டமாக அலைகள் மோதும் ஏழு கடல்களையும் சிறந்த மணிகளை உடைய மலைகளையும் அமைத்தவர். கயிலை மலையைக் கைகளால் பெயர்த்த இராவணனுடைய கல்போன்ற தோள்களும் முடிகளும் வருந்துமாறு ஒற்றை விரலால் அழுத்தியவர். இராவணன் ‘தலைவனே’ என்று புலம்பிய அளவில் அவன்பால் அருள்செய்து வாளும் ஈந்தவர். தம் புகழ்ச் செயல்களை விரும்பி **மக்கள் தமக்கு ஆளாகுமாறு** செய்து, நன்மைகள் மேம்படும் திருவடிகளை என் தலைமேல் வைத்த பேரருளின் திறமுடையவர்.

## 15. திருக்கருகாவூர்

ப.தொ.எண் : 228 பதிக எண் : 15

2233. குருகாம் வயிரமாங் கூறுநாளாம்
கொள்ளுங் கிழமையாம் கோளே தானாம்
**பருகா அமுதமாம்** பாலின் நெய்யாம்
பழத்தின் இரதமாம் பாட்டிற் பண்ணாம்
ஒருகால் உமையாளோர் பாக னுமாம்
உள்நின்ற நாவிற் குரையாடியாம்
கருவா யுலகுக்கு முன்னே தோன்றுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 1

இத்திருப்பதிகம் முழுவதும் இறைவனை அடியவர்க்குக் கண் என்று அருளிச் செய்கிறார். அமுதம் பருகினால்தான் மரணத்தைப் போக்கும். பருகாமலே மலத்தைப் போக்கும் அமுதமாய் உள்ளவர் சுவாமி. குருகு – விலங்குகளின் இளமைப் பெயர். வயிரம் – அவற்றின் முதுமை பற்றிய பெயர். கூறுநாள் – பகலவனால் நாள் என்று கூறுபடுத்தப்பட்ட கால அளவு. கொள்ளும் கிழமை – எதைக் கொள்கிறது ? ஞாயிறு முதலிய கோள்களின் பெயர்களையும், உரிய பண்புகளையும் கொள்ளும் கிழமைகள். கருவாய் உலகுக்கு முன்னே தோன்றும் – உலக முதற்காரணமாகிய மாயை இயக்கும்.

கருகாவூரில் உகந்தருளியிருக்கும் எம்பெருமான் குருத்துப்போன்ற மெல்லிய பொருள்களாகவும், வயிரம் போன்ற வலிய பொருள்களாகவும், விண்மீன்கள், ஞாயிறு முதலிய கிழமைகளுக்குரிய கிரகங்கள் என்பனவாகவும் உள்ளான். பருகாமலேயே, மலத்தைப் போக்கும் அமுதமாவான். பாலில் நெய் போலவும் பழத்தில் சுவை போலவும் எங்கும் நீங்காது பரவியுள்ளான். பாட்டில் பண்ணாக உள்ளான். ஒருநிலையில் பார்வதி பாகனாக உள்ளான். நாவின் உள்ளே பொருந்தி மொழியைப் பேசுவிப்பவனாவான். முதற் பொருளாய் உலகத்தோற்றத்து முன்னேயும் இருப்பவன். முன்னே தோன்றி நின்று எல்லோரையும் நடத்தும் கண் போன்றவன்.

2234. வித்தாம் முளையாகும் வேரே தானாம்
வேண்டும் உருவமாம் விரும்பி நின்ற
**பத்தாம் அடியார்க்கோர்** பாங்க னுமாம்
பால்நிறமு மாம்பரஞ் சோதி தானாம்
தொத்தாம் அமரர்கணஞ் சூழ்ந்து போற்றத்
தோன்றாதென் உள்ளத்தி னுள்ளே நின்ற
கத்தாம் அடியேற்கும் காணா காட்டுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 2

அடியார் இலக்கணம் விம்மல், மயிர் சிலிர்த்தல், வியர்த்தல், நடுங்கல், நாத்தழுதழுத்தல், சொல்லின்மை, வசமிழத்தல், நகைமுகம், கண்ணீர், வாய் விட்டழைத்தல் என்ற பத்தாம்.

வித்து, முளை, வேர் எனக் கருகாவூர் எந்தை வேண்டி நின்ற உருவத்தன், தன்னை விரும்பும் பக்தியை உடைய அடியார்க்குத் தோழன். செந்நிறமேயன்றிப் பால் நிறமும் உடையவன். தான் மேம்பட்ட ஒளி உருவனாயிருந்தும் தன்னைத் தேவர் குழாம் சுற்றி நின்று துதிக்கவும் அதற்குக் காட்சி வழங்காது அடியேனுடைய உள்ளத்திலே மறைந்திருந்து அடியேன் முன் அறியாதனவற்றை எல்லாம் தெரிவிக்கும் கண்ணாக உள்ளவன். கத்தன் – தலைவன்.

2235. **பூ**த்தானாம் பூவின் **நிறத்தா** னுமாம்
பூக்குளால் வாசமாய் மன்னி நின்ற
**கோ**த்தானங் கோல்வளையாள் கூற னாகுங்
கொண்ட சமயத்தார் தேவ னாகி
ஏத்தாதார்க் கென்று மிடரே துன்பம்
ஈவானா மென்னெஞ்சத் துள்ளே நின்று
காத்தானாங் காலன் அடையா வண்ணங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 3

பதிக மகுடம் – கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே
பூ – நிறம் – மணம் – கோ – ஒன்றினொன்று
கிளம்பித் தோன்றும் முறை.

பூவும், பூவின் நிறமும் அதன் மணமுமாய் நிலைபெற்றிருக்கும் தலைவனாகிய கருகாவூர் எந்தை திரண்ட வளைகளை அணிந்த பார்வதி பாகன். ஒவ்வொரு சமயத்தாரும் வழிபடும் தேவராக உள்ளவன். தன்னை வழிபடாதவர் களுக்கு ஏற்படும் இடையூறுகளையும் மனக்கவலைகளையும் போக்காதவனாய் அடியேன் நெஞ்சில் இருந்து காலனால் அச்சம் நிகழாவண்ணம் காத்து வழிகாட்டும் கண்ணாக உள்ளான்.

2236. இரவனாம் எல்லி நடமாடியாம்
எண்திசைக்குந் தேவனாம் என்னு ளானாம்
அரவனாம் அல்ல லறுப்பானுமாம்
ஆகாச மூர்த்தியாம் ஆனே றேறும்
குரவனாங் கூற்றை யுதைத்தான் தானாங்
கூறாத வஞ்சக் குயலர்க் கென்றும்
கரவனாங் காட்சிக் கெளியா னுமாங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 4

இரவன் – இராப்பொழுதாய் இருப்பவன்
குரவன் – குரு
குயவர் – வஞ்சகர்

கருகாவூர் எந்தை, இராப்பொழுதாகவும், இரவில் கூத்தாடுபவனாகவும் எண் திசைக்கும் உரிய தேவனாகவும், என் உள்ளத்தில் உறைபவனாகவும், பாம்பினை அணிபவ னாகவும், அடியார்களுடைய துன்பங்களைத் துடைப்பவனாகவும், ஆகாயத்தையே வடிவாக உடையவனாகவும், இடபத்தை இவரும் தலைவனாகவும், கூற்றினை உதைத்தவனாகவும் தன் புகழ் கூறாத வஞ்சகத்தில் தேர்ந்தவர்களுக்கு என்றும் மறை பொருளாகவும், அடியார்களின் மனக்கண்களுக்கு, எளியவனாகவும் அவர்களுக்குக் கண்ணாகவும் உள்ளான்.

2237. படைத்தானாம் பாரை யிடந்தா னாகும்
பரிசொன் றறியாமை நின்றான் தானாம்
உடைத்தானாம் ஒன்னார் புரங்கள் மூன்றும்
ஒள்ளழலால் மூட்டி யொருக்கி நின்று
அடைத்தானாஞ் சூலம் மழுவோர் நாக
மசைத்தானாம் ஆனேறொன் றூர்ந்தா
னாகும்
கடைத்தானாங் கள்ள மறிவார் நெஞ்சிற்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 5

கடைத்தல் – அழித்தல்

உலகைப் படைத்த பிரமனும், அதனை ஊழி வெள்ளத்திலிருந்து பெயர்த்தெடுத்த திருமாலும் தன் தன்மையை அறிய இயலாதவாறு தீப் பிழம்பாய் நின்ற கருகாவூர் எந்தை, பகைவருடைய மும்மதில்களையும் ஒருசேரத் தீயினால் அழித்தவன். சூலத்தையும் மழுவையும் ஏந்திப் பாம்பினை இடையில் இறுகக் கட்டிக் காளை மீது இவர்ந்தவன். வஞ்சனை உடையவர் நெஞ்சத்தைக் கலக்கித் தன்னை அறியும் அடியார் நெஞ்சில் வழிகாட்டுவோனாய் இருப்பவன்.

---

2238. மூலனாம் மூர்த்தியாம் முன்னே தானாம்
மூவாத மேனிமுக் கண்ணி னானாம்
சீலனாஞ் சேர்ந்தா ரிடர்கள் தீர்க்குஞ்
செல்வனாஞ் செஞ்சுடர்க்கோர் சோதி
தானாம்
மாலனாம் மங்கையோர் பங்க னாகும்
மன்றாடி யாம்வானோர் தங்கட் கெல்லாம்
காலனாங் காலனைக் காய்ந்தா னாகுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 6

மூர்த்தி – வடிவமாய் நிற்றல்

முதற்பொருளாய் வடிவு கொள்வோனாய், எல்லாப் பொருள்களுக்கும் முற்பட்டவனாய், என்றும் மூப்படையாத மேனியனாய், முக்கண்ணினனாய், நற்பண்புகளுக்கு இருப்பிடமாய்த் தன்னை அடைந்தவர்களின் துயர் தீர்க்கும் செல்வனாய், கருகாவூர் எந்தை, சூரியனுக்கும் ஒளி வழங்குபவனாய், தன் திருமேனியில் ஒருபாகத்தைத் திருமாலுக்கும் மற்றொரு பாகத்தை உமாதேவிக்கும் வழங்குபவனாய், மன்றங்களில் கூத்தாடுபவனாய், தேவர்களுக்கு எல்லாம் இறுதிக்காலத்தை வரையறுக்கும் கூற்றுவனையும் கோபித்தவனாய், அடியார்களுக்கு வழிகாட்டும் கண்ணாக இருப்பவன்.

2239. அரைசே ரரவனாம் ஆலத் தானாம்
ஆதிரை நாளானாம் அண்ட வானோர்
திரைசேர் திருமுடித் திங்க ளானாந்
தீவினை நாசனென் சிந்தை யானாம்
உரைசே ருலகத்தா ருள்ளா னுமாம்
உமையாளோர் பாகனாம் ஓத வேலிக்
கரைசேர் கடல்நஞ்சை யுண்டா னாகுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 7

அண்டம் – விண்ணுலகம்

கருகாவூர் எந்தை பாம்பை இடையில் அணிந்து விடத்தை உண்டு (ஆல நிழலில் தங்கி) ஆதிரை நட்சத்திரத்திற்கு உரிமை பூண்டு, ஆகாய கங்கை அலைவீசும் தன் அழகிய சடையில் பிறைசூடி, தீவினையைப் போக்கி என் உள்ளத்திலுள்ளான். அவனே புகழ்சேரும் இவ்வுலகத்து மக்கள் உள்ளத்தில் இருப்பவனாய், பார்வதிபாகனாய், உலகுக்கு எல்லையாய்க் கரையமைந்த கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு, அடியார்களுக்கு வழிகாட்டும் கண்ணாக இருப்பவன்.

2240. துடியாந் துடியின் முழக்கந் தானாஞ்
சொல்லுவார் சொல்லெல்லாஞ் சோதிப் பானாம்
படிதானாம் பாவ மறுப்பா னாகும்
பால்நீற்ற னாம்பரஞ் சோதி தானாம்
கொடியானாங் கூற்றை யுதைத்தா னாகுங்
கூறாத வஞ்சக் குயலர்க் கென்றும்
கடியானாங் காட்சிக் கரியா னாகுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 8

கருகாவூர் எந்தை உடுக்கையாகவும் உடுக்கையின் முழக்கமாகிய ஒலிகளாகவும், அவ்வொலியிலிருந்து தோன்றிய மொழிகளைப் பேசுவாருடைய சொற்களின் வாய்மை பொய்ம்மைகளைச் சோதிப்பவனாகவும், நன்னெறியாகவும், பாவத்தைப் போக்குபவனாகவும், வெள்ளிய நீறணிந்த பரஞ்சோதியாகவும் கொடிய கூற்றுவனை உதைத்தவனாகவும், உண்மை கூறாத வஞ்சகத்தில் தேர்ந்தவர் கிட்டுதற்கு அரியனாய், அவர்களை ஒறுப்பவனாகவும் அடியார்க்கு வழிகாட்டும் கண்ணாகவும் உள்ளான்.

2241. விட்டுருவங் கிளர்கின்ற சோதி யானாம்
விண்ணவர்க்கும் அறியாத சூழ லானாம்
பட்டுருவ மால்யானைத் தோல்கீண் டானாம்
பலபலவும் பாணி பயின்றான் தானாம்
எட்டுருவ மூர்த்தியாம் எண்தோ ளானாம்
என்னுச்சி மேலானாம் எம்பி ரானாம்
கட்டுருவங் கடியானைக் காய்ந்தா னாகுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 9

பாட்டில் தமிழ் எப்படிக் கூத்தாடுகிறது என்று இரசியுங்கள். உருவம் – நிறம். சூழல் – நிலை. பாணி – தாளம்.

கருகாவூர் எந்தை செந்நிற ஒளிவீசும் சோதியனாய், தேவர்களும் அறியாத நிலையினனாய், தன்னால் கொல்லப்பட்ட யானைத் தோலை உரித்துப் போர்த்தவனாய், பலபல தாளத்திற்கு ஏற்பக் கூத்தாடுபவனாய், அட்டமூர்த்தியாய், எண்தோளனாய், என் தலையின் உச்சி மேலானாம் எம் தலைவனாய், இளைய வடிவினை உடைய மன்மதனைக் கோபித்தவனாய், அடியார்க்கு வழிகாட்டியாக உள்ளான்.

2242. பொறுத்திருந்த புள்ளூர்வா னுள்ளா னாகி
உள்ளிருந்தங் குள்நோய் களைவான் தானாய்
செறுத்திருந்த மும்மதில்கள் மூன்றும் வேவச்
சிலைகுனியத் தீமூட்டுந் திண்மை யானாம்
அறுத்திருந்த கையானா மந்தா ரல்லி
யிருந்தானை யொருதலையைத் தெரிய நோக்கிக்
கறுத்திருந்த கண்ட முடையான் போலுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 10

தன்னை இடபமாய்த் தாங்கிய கருட வாகனனாகிய திருமாலுடைய உள்ளத்தே பொருந்தி அவன் உள்ளக் கவலையைப் போக்கிய கருகாவூர் எந்தை, தன்னைப் பகைத்தோருடைய மும்மதில்களும் ஒன்றும் எஞ்சாமல் வில்லை வளைத்துத் தீ மூட்டி அழித்தவன். தாமரையில் இருந்த பிரமனுடைய ஐந்தாந் தலையை அவன் செருக்கினை நோக்கி அறுத்த கையனாவான். நீலகண்டனாகிய அப்பெருமான் அடியார்க்கு வழிகாட்டியாக உள்ளான்.

2243. ஒறுத்தானாம் ஒன்னார் புரங்கள் மூன்றும்
ஒள்ளழலை மாட்டி யுடனே வைத்து
இறுத்தானாம் எண்ணான் முடிகள் பத்தும்
இசைந்தானாம் இன்னிசைகள் கேட்டா னாகும்
அறுத்தானாம் அஞ்சும் அடக்கி யங்கே
ஆகாய மந்திரமு மானா னாகும்
கறுத்தானாங் காலனைக் காலால் வீழக்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 11

கருகாவூர் எந்தை பகைவருடைய மும்மதில்களையும் தீமூட்டி அழித்தவன். தன்னை மதியாத இராவணனுடைய தலைகள் பத்தினையும் நசுக்கி அவன் இசையைக் கேட்டு அவனைக் காப்பாற்ற இசைந்தவன். பொறிவாயில் ஐந்தவித்த அப்பெருமான், பரமாகாயத்திலுள்ள வீட்டுலகை இருப்பிடமாக உடையவன். கூற்றுவனைக் கீழே விழுமாறு தன் காலால் கோபித்து உதைத்தவன். அவன் அடியவர்களுக்கு வழிகாட்டியாக உள்ளான்.

## 16. திருஇடைமருதூர்

ப.தொ.எண் : 229 பதிக எண் : 16

2244. சூலப் படையுடையார் தாமே போலுஞ்
சுடர்த்திங்கட் கண்ணி யுடையார் போலும்
மாலை மகிழ்ந்தொருபால் வைத்தார் போலும்
மந்திரமுந் தந்திரமு மானார் போலும்
வேலைக் கடல்நஞ்ச முண்டார் போலும்
மேல்வினைகள் தீர்க்கும் விகிர்தர் போலும்
ஏலக் கமழ்குழலாள் பாகர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 1

இடைமருதூர் என்ற திருத்தலத்தை உகந்தருளியிருக்கும் இறைவர் சூலப்படை உடையவராய், ஒளி வீசும் பிறையை முடிமாலையாக அணிந்தவராய், விரும்பித் திருமாலை ஒருபாகமாகக் கொண்டவராய், மந்திரமும் அம்மந்திரங்களைப் பயன்கொள்ளும் செயல்களுமாக அமைந்தவராய், கடலில் தோன்றிய விடத்தை உண்டவராய், ஊழ்வினையை நுகரும்போதே உடன் ஈட்டிக் கொள்ளப்படும் மேல் வினைகளை நீக்கும் வேறுபட்ட இயல்பினராய், நறுமணம் கமழும் கூந்தலை உடைய பார்வதி பாகராய் அமைந்துள்ளார்.

'போலும்' என்பன உரை அசைகள். போலும் என்னும் முடிபுடைய தொடர்க் கோவையில் இறைவனைப் பரவியதாம். வடமொழி மந்திரங்கள் நம, சுவாஹா, பட், ஹூம்பட் என்பன போன்று ஏழு முடிபுகளைக் கொண்டு வரும். அதுபோல இத்தமிழ் மந்திரங்கள் போற்றி, கா, அடி, தாமே, கண்டாய் போலும், தோன்றும் முதலிய முடிவுகளாய் வந்துள்ளன.

கண்ணி – முடியிலணியும் மாலை. இ்.து ஆகுபெயராய், அதனை உடையவரைக் குறித்தது. மாலை – திருமாலை, விட்டுணுவை. "தந்திரகலை மந்திரகலை, உபதேசகலை" என இறைநூல் மூன்று பகுதியாய் நிகழும். அவை முறையே "கரும காண்டம், உபாசனா காண்டம், ஞானகாண்டம்" எனப்படும். உபாசனா காண்டத்தைக் கருமகாண்டத்துள் அடக்கி, இருபகுதியாக வழங்குதல் பெரும்பான்மை. உபாசனா காண்டத்தை "பத்தி காண்டம்" என்றும் கூறுவர். முப்பகுதிகளுள் மந்திரக்கலையையும், தந்திரக்கலையையும் அருளவே, இனம் பற்றி உபதேசக்கலையும் கொள்ளப்படும். தந்திரக்கலை அல்லது கருமகாண்டமாவது, நாள்தொறும் செய்யப்படுவனவும், எவையேனும் சிறப்புப்பற்றி அவ்வந்நாள்களில் செய்யப்படுவனவும், எவையேனும் பயன்கருதி அவற்றின் பொருட்டுச் செய்யப் படுவனவுமாகிய கடமைகளை வகுப்பது. இக்கடமைகள் முறையே, நித்திய கன்மம், நைமித்திக கன்மம், காமிய கன்மம் எனப்படும். மந்திரகலை அல்லது உபாசனா காண்டமாவது, கருமகாண்டத்துட் சொல்லப்பட்ட கடமைகளை மேற்கொண்டு செய்யும் செயல்முறைகளைக் கூறுவது. உபதேசகலை அல்லது ஞானகாண்டமாவது, தலைவனாகிய இறைவனது இயல்புகளையும், அவனது அடிமைகளாகிய உயிர்களது இயல்புகளையும், அவனது உடைமைகளாகிய உலகு, உடல், உள்ளம் முதலியவற்றின் இயல்புகளையும் தெரிவித்துணர்த்துவது. வேலைக் கடல், ஒரு பொருட் பன்மொழி. கடல் நஞ்சினால் தேவர்கட்கு இறுதிவந்த ஞான்று அதனை உண்டு, காத்துக் காலத்தால் உதவினார் என்றுரைத்தலுமாம். "தொல்வினை, ஊழ்வினை, மேல்வினை" என வினைகள் மூன்று வகைப்படும். அவை முறையே, சஞ்சித கன்மம், பிராரத்த கன்மம், ஆகாமிய கன்மம் எனப்படும். முன்னைய பிறப்புக்களில் எல்லாம் செய்யப்பட்டு நுகரப்படாது கிடப்பன தொல்வினை அல்லது சஞ்சிதகன்மம். அவ்வாறு கிடப்பனவற்றுள் பக்குவமாகி வந்து நுகர்ச்சியாவன ஊழ்வினை அல்லது பிராரத்தகன்மம். ஊழ்வினையை நுகரும்பொழுதே உடன் ஈட்டிக் கொள்ளப்படுவன மேல்வினை அல்லது ஆகாமிய கன்மம். அவற்றுள், மேல்வினைகளைத் தீர்த்தலை ஈண்டு அருளிச் செய்தார் என்க.

விகிர்தர் - வேறுபட்டவர், உலகியலுக்கு அப்பாற்பட்டவர் என்பதாம். ஏலம் - கூந்தலிற் பூசும் சாந்து, கமழ் குழலாள் - இயற்கையாகவே மணங்கமழ்கின்ற கூந்தலை உடையவள் ஏலக்குழலாள், கமழ் குழலாள் எனத் தனித்தனி முடிக்க.

**2245.** காரார் கமழ்கொன்றைக் கண்ணி போலுங்
காரானை யீருரிவை போர்த்தார் போலும்
பாரார் பரவப் படுவார் போலும்
பத்துப் பல்லூழி பரந்தார் போலும்
சீரால் வணங்கப் படுவார் போலும்
திசையனைத்து மாய்மற்று மானார் போலும்
ஏரார் கமழ்குழலாள் பாகர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 2

இடைமருது மேவிய ஈசனார் கார்காலத்தில் பூக்கும் நறுமணக் கொன்றைப் பூவினை முடிமாலையாக உடையவராய், கரிய யானையின் உதிரப்பசுமை கெடாத தோலினைத் திருமேனியின் மீது போர்த்தியவராய், உலகத்தாரால் முன் நின்று துதிக்கப்படுபவராய்ப் பல ஊழிக்காலங் களையும் அடக்கி நிற்கும் காலமாய் நிற்பவராய், பலரும் தம்முடைய பொருள்சேர் புகழைச் சொல்லி வணங்க நிற்பவராய், பத்துத் திசைகளிலும் உள்ள நிலப் பகுதிகளும் மற்றும் பரவி நிற்பவராய், நறுமணம் கமழும் அழகிய கூந்தலை உடைய பார்வதி பாகராய் அமைந்துள்ளார்.

சீர் – புகழ். ஏர் – எழுச்சி
பதிக மகுடம் – இடைமருது மேவிய ஈசனாரே

**2246.** வேதங்கள் வேள்வி பயந்தார் போலும்
விண்ணுலகும் மண்ணுலகு மானார் போலும்
பூதங்க ளாய புராணர் போலும்
புகழ வளரொளியாய் நின்றார் போலும்
பாதம் பரவப் படுவார் போலும்
பத்தர் களுக்கின்பம் பயந்தார் போலும்
ஏதங்க ளான கடிவார் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 3

இடைமருது மேவிய ஈசனார் வேதங்களோடு வேள்விகளைப் படைத்தவராய், விண்ணுலகும் மண்ணுலகும் ஐம்பூதங்களும் தாமேயாகிய பழையவராய்த் தம்மைப் புகழ்வார் உள்ளத்தில் ஞானஒளியாய் நிற்பவராய்த் தம் திருவடிகள் எல்லோராலும் முன்நின்று துதிக்கப்படுவனவாய், அடியார்களுக்கு இன்பம் பயப்பவராய், அவர்களுடைய துன்பங்களையெல்லாம் துடைப்பவராய் அமைந்துள்ளார். ஏதங்கள் – துன்பங்கள்.

பயந்தார் – படைத்தார்.
புராணர் – பழையவர்.

2247. திண்குணத்தார் தேவர் கணங்க ளேத்தித்
திசைவணங்கச் சேவடியை வைத்தார் போலும்
விண்குணத்தார் வேள்வி சிதைய நூறி
வியன்கொண்டல் மேற்செல் விகிர்தர் போலும்
பண்குணத்தார் பாடலோ டாட லோவாப்
பரங்குன்றம் மேய பரமர் போலும்
எண்குணத்தார் எண்ண யிரவர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 4

திண்குணம் – வலிமைக் குணம்
கொண்டல் – மேகம். கொண்டல் மேற் செல் – திருமால் மேக வாகனமானது. அக்காலம் மேக வாகன கற்பம் எனப் பெயர் பெற்றது.
ஆயிரம் – அளவின்மையைக் குறித்தது.
எண்ணில் அடங்காதவர்.

பிற பிறப்புகளில் உள்ள உயிர்களை அடிமைப்படுத்தி ஆளும் ஆற்றலை உடைய, தேவகணங்கள் தம் திருவடிகளைத் துதித்துத் திசை நோக்கி வணங்குமாறு செய்த இடைமருது மேவிய ஈசர், இந்திரன் செய்த வேள்வியை அழியுமாறு கெடுத்து, மேக வடிவில் வந்த திருமாலை வாகனமாகக் கொண்டு செலுத்திய வேறுபட்ட இயல்பினர். யாழைப் பண்ணும் (சுருதிகூட்டும்) இயல்பினராகிய மகளிரின் ஆடல் பாடல்கள் நீங்காத பரங்குன்றை விரும்பித் தங்கிய பரம்பொருள் ஆவார். எண்ணாயிரவர் என்ற தொகுதியைச் சார்ந்த அந்தணர்கள் வேற்றுத் தெய்வங்களை விடுத்துத் தம்மையே பரம்பொருளாகத் தியானிக்கும் இயல்பினராவர்.

2248. ஊக முகிலுரிஞ்சு சோலை சூழ்ந்த
உயர்பொழில்அண் ணாவி லுறைகின் றாரும்
பாகம் பணிமொழியாள் பாங்க ராகிப்
படுவெண் தலையிற் பலிகொள் வாரும்
மாகமடை மும்மதிலு மெய்தார் தாமு
மணிபொழில்சூழ் ஆரூ ருறைகின் றாரும்
ஏகம்பம் மேயாரு மெல்லா மாவார்
இடைமருது மேவிய ஈச னாரே. 5

ஊகம் – குரங்கு. பாகுஅம் – பாகு போலும் இனிய, அழகிய.
மாகம் அடை – விண்ணில் திரிகின்ற

இடைமருது மேவிய ஈசனார் வானளாவிய சோலைகளிலே குரங்குகள் நடமாடும் அண்ணாமலையிலும், அழகிய பொழில்கள் சூழ்ந்த ஆரூரிலும், கச்சி ஏகம்பத்திலும் உகந்தருளியிருக்கின்றார். பார்வதி பாகராய்ப் பிரமனுடைய மண்டையோட்டில் பிச்சை எடுப்பவர். வானில் உலவிய மும்மதில்களையும் எய்து வீழ்த்தியவர். எல்லாப் பொருள்களாகவும் உள்ளவர்.

**2249.** ஐயிரண்டும் ஆறொன்று மானார் போலும்
அறுமூன்றும் நான்மூன்று மானார் போலும்
செய்வினைகள் நல்வினைக ளானார் போலும்
திசையனைத்து மாய்நிறைந்த செல்வர் போலும்
கொய்மலரங் கொன்றைச் சடையார் போலுங்
கூத்தாட வல்ல குழகர் போலும்
எய்யவந்த காமனையுங் காய்ந்தார் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 6

இடைமருது மேவிய ஈசனார் பத்துத் திசைகளும், ஏழு இசைகளும், பதினெட்டு வித்தைகளும், பன்னிரண்டு சூரியர்களும், தீவினைகளும் நல்வினைகளுமாகிப் பத்துத் திசைகளிலும் உள்ள பொருள்கள் யாவுமாய் நிறைந்த செல்வராவார். அவர் கொன்றை சூடிய சடையர். கூத்து நிகழ்த்துதலில் வல்ல இளைஞர். தம் மீது மலரம்புகளைச் செலுத்தவந்த மன்மதனைக் கோபித்தவர்.

---

**2250.** பிரியாத குணமுயிர்கட் கஞ்சோ டஞ்சாய்ப்
பிரிவுடைய குணம்பேசிற் பத்தோ டொன்றாய்
விரியாத குணமொருகால் நான்கே யென்பர்
விரிவிலாக் குணநாட்டத் தாறே யென்பர்
தெரிவாய குணமஞ்சுஞ் சமிதை யஞ்சும்
பதமஞ்சுங் கதியஞ்சுஞ் செப்பி னாரும்
எரியாய தாமரைமே லியங்கி னாரும்
இடைமருது மேவிய ஈச னாரே. 7

இடைமருது மேவிய ஈசனார் உயிர்களை விட்டு நீங்காத பத்து இயற்கைப் பண்புகளாகவும், உயிர்களுக்கு மலச் சார்பினால் வரும் பதினொரு செயற்கைப் பண்புகளாகவும், பரம் பொருளுக்கு என்று ஒருகால் தொகுத்துச் சொல்லப்படும் நான்கு பண்புகளாகவும், பிறிதொருகால் சொல்லப்படும் ஆறு பண்புகளாகவும் உள்ளனவற்றையும் மெய்ந்நூல்கள் பற்றி ஆராய்ந்து உணரப்படும் பொதுவான ஐம்பண்புகளையும் ஐவகை சமித்துக்களையும், திருவைந்தெழுத்தையும் உயிர்கள் சென்று சேரக்கூடிய வழிகள் ஐந்தையும் குறிப்பிட்டு ஞானப்பிரகாசமாகிய ஒளியை உடைய அடியவர்களின் உள்ளத் தாமரையில் உலவி வருபவராவார்.

> தகரவித்தை – அன்பர்களது நெஞ்சத் தாமரையை உள்ளமாகிய தாமரை மலர் மேல் ஏற்றி இறைவனைச் சுடர் உருவில் தியானிக்கும் முறையை தகர வித்தை என உபநிடதங்கள் கூறும்.
>
> மலர்மிசை ஏகினான் – குறள்.

**2251.** தோலிற் பொலிந்த வுடையார் போலுஞ்
சுடர்வா யரவசைத்த சோதி போலும்
ஆலம் அமுதாக வுண்டார் போலும்
அடியார்கட் காரமுத மானார் போலும்
காலனையுங் காய்ந்த கழலார் போலுங்
கயிலாயந் தம்மிடமாக் கொண்டார் போலும்
ஏலங் கமழ்குழலாள் பாகர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 8

சுடர்வாய் – ஒளி வாய்ந்த.

இடைமருது மேவிய ஈசனார் தோலுடையை உடுத்து அதன்மேல் ஒளிவாய்ந்த பாம்பினை இறுக்கிக் கட்டிய சோதி வடிவானவர். விடத்தையே அமுதம்போல உண்டவர். அடியவர்களுக்கு அமுதம் போல் இனியவர். காலனை வெகுண்டுதைத்த திருவடியை உடையவர். கயிலாயத்தை நிலையான இடமாக உடையவர். நறுமணம் வீசும் கூந்தலை உடைய பார்வதி பாகர்.

**2252.** பைந்தளிர்க் கொன்றையந் தாரார் போலும்
படைக்கணாள் பாக முடையார் போலும்
அந்திவாய் வண்ணத் தழகர் போலும்
அணிநீல கண்ட முடையார் போலும்
வந்த வரவுஞ் செலவு மாகி
மாறாதென் னுள்ளத் திருந்தார் போலும்
எந்தம் இடர்தீர்க்க வல்லார் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 9

வரவு – பிறப்பு. செலவு – இறப்பு.

இடைமருது மேவிய ஈசனார் பசிய தளிர்கள் இடையே தோன்றும் கொன்றைப் பூ மாலையர், வேல்போன்ற கண்களை உடைய பார்வதி பாகர். மாலை வானம் போன்ற செந்நிற அழகர். அழகிய நீலகண்டர். உலகில் பிறப்புக்களையும் இறப்புக்களையும் நிகழ்வித்து என் உள்ளத்தில் நீங்காதிருப்பவர். அடியார்களுடைய இடர்களைத் தீர்த்து அவர்களைக் காக்கும் இயல்பினர்.

**2253.** கொன்றையங் கூவிள மாலை தன்னைக்
குளிர்சடைமேல் வைத்துகந்த கொள்கை யாரும்
நின்ற அனங்கனை நீறா நோக்கி
நெருப்புருவ மாய்நின்ற நிமல னாரும்
அன்றவ் வரக்கன் அலறி வீழ
அருவரையைக் காலா லழுத்தி னாரும்
என்று மிடுபிச்சை யேற்றுண் பாரும்
இடைமருது மேவிய ஈச னாரே. 10

கூவிளம் – வில்வம்

இடைமருதூர் மேவிய ஈசனார் கொன்றை மலரோடு வில்வமாலையைக் குளிர்ந்த சடை மீது வைத்து மகிழ்ந்த இயல்பினர். தம் மீது அம்பு எய்ய இருந்த மன்மதனைச் சாம்பலாக்கி நெருப்பு வடிவாய் நின்ற தூயவர். இராவணன் கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்ட அன்று அவன் அலறி விழுமாறு அம்மலையைக் காலால் அழுத்தியவர். என்றும் மற்றவர் இடும் பிச்சையை வாங்கி உண்பவர்.

## 17. திருஇடைமருதூர்

ப.தொ.எண் : 230 பதிக எண் : 17

2254. ஆறுசடைக் கணிவர் அங்கைத் தீயர்
அழகர் படையுடைய ரம்பொற் றோள்மேல்
நீறு தடவந் திடப மேறி
நித்தம் பலிகொள்வர் மொய்த்த பூதம்
கூறுங் குணமுடையர் கோவ ணத்தர்
கோடல வேடத்தர் கொள்கை சொல்லின்
ஈறும் நடுவும் முதலு மாவார்
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 1

கோள் தால வேடத்தர் – கையிலே உண்கலத்தை உடைய கோலம். மருவி கோடல வேடமாயிற்று.

ஈறு – அழிவு. நடுவு – நிலைமை. முதல் – தோற்றம்

இடைமருதூரினை விரும்பித் திருத்தலமாகக் கொண்ட ஈசனார் சடையில் கங்கையை அணிந்து, உள்ளங்கையில் தீயினை ஏற்றவர். அழகர். மழு, சூலம் போன்ற படைக்கலங்களை ஏந்திய அழகிய பொலிவு உடைய தோள் மீது, நீறு பூசிக் காளையை இவர்ந்து நாளும் பிச்சை ஏற்பவர். தம்மைச் சுற்றியுள்ள பூதங்களால் தம் பண்புகள் பாராட்டப் பெறுபவர். கோவணம் ஒன்றே உடையவர். கையிலே உண்கலத்தை ஏந்திய வேடத்தவர். இவ்வுலகிற்குத் தோற்றம் நிலை அழிவு ஆகியவற்றைச் செய்யும் இயல்பினர்.

---

2255. மங்குல் மதிவைப்பர் வான நாடர்
மடமா னிடமுடையர் மாத ராளைப்
பங்கின் மிகவைப்பர் பால்போல் நீற்றர்
பளிங்கு வடம்புனைவர் பாவ நாசர்
சங்கு திரையுகளுஞ் சாய்க்கா டாள்வர்
சரிதை பலவுடையர் தன்மை சொல்லின்
எங்கும் பலிதிரிவ ரென்னுள் நீங்கார்
இடைமருது மேவி யிடங்கொண்டாரே. 2

மங்குல் – ஆகாயம், மேகம். மடமான் – இளங்கன்று உகளும் – பிறழ்கின்ற. சரிதை – செயல்

இடைமருது மேவிய இடங்கொண்ட பெருமானார் வானத்தில் இயங்கும் பிறையைச் சடையில் வைத்தவர். தேவருலகிற்கும் உரியவர். பார்வதியை இடப்பாகமாக உடையவர். மான்குட்டியை இடக்கரத்தில் வைத்திருப்பவர். பால்போன்ற திருநீற்றை அணிந்து, படிக மணிமாலை பூண்டு, அடியார் பாவங்களைப் போக்குபவர். சங்குகள் அலைகளில் உலவும் சாய்க்காடு என்ற தலத்தை ஆள்பவர். பல அரிய செயல்களை உடையவர். எங்கும் பிச்சைக்காகத் திரியும் இயல்பினர். என் உள்ளத்தை விடுத்து என்றும் நீங்காதிருப்பவர்.

2256. ஆல நிழலிருப்பர் ஆகா யத்தர்
அருவரையி னுச்சியர் ஆணர் பெண்ணர்
காலம் பலகழித்தார் கறைசேர் கண்டர்
கருத்துக்குச் சேயார்தாங் காணா தார்க்குக்
கோலம் பலவுடையர் கொல்லை யேற்றர்
கொடுமழுவர் கோழம்பம் மேய ஈசர்
ஏல மணநாறும் ஈங்கோய் நீங்கார்
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 3

காலம் பலகழித்தார் – காலத்தில் தாக்குண்ணாது அதைக் கண்டு கொண்டிருப்பவர். காலதத்துவமே அவர் படைத்தது. பிறப்பு, இளமை, முதுமை, இறப்பு இவைகளின்றி என்றும் ஒரே தன்மையராய் நின்று பிறர்க்கு உளவாதலைக் கண்டுகொண்டிருப்பர்.

இடைமருது மேவி இடங்கொண்ட பெருமானார் ஆலமர நிழலிலும், ஆகாயத்திலும் மலை உச்சியிலும் இருப்பவர். ஒரே உருவில் ஆணும் பெண்ணுமாக இருப்பவர். காலங்களுக்கு அப்பாற்பட்டவர். நீலகண்டர். தம்மை அறியாதார் உள்ளத்துக்குத் தொலைவில் இருப்பவர். பல வேடங்களை உடையவர். முல்லை நிலத்துக்கு உரிய திருமாலைக் காளைவாகனமாக உடையவர். கொடிய மழுப்படை ஏந்தியவர். கோழம்பம், ஏலக்காய் மணம்கமழும் ஈங்கோய் மலை இவற்றை விரும்பி நீங்காதிருப்பவர்.

2257. தேசர் திறம்நினைவார் சிந்தை சேரும்
செல்வர் திருவாரூ ரென்று முள்ளார்
வாச மலரின்கண் மான்தோல் போர்ப்பர்
மருவுங் கரியுரியர் வஞ்சக் கள்வர்
நேச ரடைந்தார்க் கடையா தார்க்கு
நிட்டுரவர் கட்டங்கர் நினைவார்க் கென்றும்
ஈசர் புனற்பொன்னித் தீர்த்தர் வாய்த்த
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 4

தேசர் – ஒளியுடையவர். ஈசர் – தலைவர். தாங்குபவர். நிட்டுரவர் – நேசமில்லார், கடுஞ்சித்தர்

இடைமருது மேவி இடங்கொண்ட பெருமானார் ஒளியுடையவர். தம் அருள் திறங்களைத் தியானிப்பவர்களுடைய உள்ளத்தில் சென்றடையும் செல்வர். திருவாரூரில் என்றும் இருப்பவர். பூவிலுள்ள மணம்போல உலகங்கள் எங்கும் பரவியிருப்பவர். மான்தோலைப் போர்த்தியவர். யானைத் தோலையும் உடையவர். எவ்விடத்தும் உருக்காட்டாது மறைந்தே இருக்கும் கள்வர். அடியார்களுக்கு அன்பர். தம் அடிகளை அடையாதவர்களுக்குக் கொடியவர். கட்டங்கப் படையுடையவர். தம்மை விருப்புற்று நினைப்பவரை என்றும் தாங்குபவர். காவிரியாகிய தீர்த்தத்தை உடையவர்.

**2258.** கரப்பர் கரியமனக் கள்வர்க் குள்ளங்
கரவாதே தம்நினைய கிற்பார் பாவம்
துரப்பர் தொடுகடலின் நஞ்ச முண்பர்
தூய மறைமொழியர் தீயா லொட்டி
நிரப்பர் புரமூன்றும் நீறு செய்வர்
நீள்சடையர் பாய்விடை கொண் டெங்கும் ஐயம்
இரப்பர் எமையாள்வர் என்னுள் நீங்கார்
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 5

கரப்பர் – வெளிப்படார்

இடைமருது மேவி இடங்கொண்ட பெருமானார் வஞ்சனை மனத்தை உடைய கள்வர்க்குத் தம்மை மறைத்துக் கொள்பவர். உள்ளத்தில் வஞ்சனையின்றித் தம்மை விருப்புற்று நினைப்பவருடைய பாவங்களை விரட்டுபவர். கடல் விடத்தை உண்டவர். தூய வேதங்களை ஓதுபவர். அறிவில்லாத அசுரர்களின் மும்மதில்களையும் தீயிட்டுச் சாம்பலாக்கியவர். நீண்ட சடைமுடியர். விரைந்து செல்லும் காளையை இவர்ந்து எங்கும் பிச்சையெடுப்பவர். எங்களை ஆள்பவர். என் உள்ளத்தை விட்டு நீங்காது இருப்பவர்.

**2259.** கொடியா ரிடபத்தர் கூத்து மாடிக்
குளிர்கொன்றை மேல்வைப்பர் கோல மார்ந்த
பொடியாரு மேனியர் பூதிப் பையர்
புலித்தோலர் பொங்கரவர் பூண நூலர்
அடியார் குடியாவர் அந்த ணாளர்
ஆகுதியின் மந்திரத்தார் அமரர் போற்ற
இடியார் களிற்றுரியர் எவரும் போற்ற
இடைமருது மேவி யிடங் கொண் டாரே. 6

பதிக மகுடம் – இடை மருது மேவியிடங் கொண்டாரே.
ஆகுதி – சிவ வேள்வி.

எல்லோரும் போற்றுமாறு இடைமருது மேவி இடங்கொண்ட பெருமானார் இடபக் கொடியினராய்க் கூத்தாடுபவராய்க் கொன்றை சூடியவராய், அழகிய நீறு பூசிய மேனியராய்த் திருநீற்றுப் பையினை உடையவராய்ப் புலித்தோலை உடுத்தவராய்ச் சீறும் பாம்பினராய்ப் பூணூலை அணிந்தவராய் அடியவர்களுக்கு மிக அணுகிய உறவினராய்க் கருணையுடையவராய், வேள்வித் தீயில் ஆகுதியிடும்போது சொல்லப்படும் மந்திர வடிவினராய்த் தேவர் போற்றுமாறு பிளிறிக் கொண்டு வந்த களிற்றைக் கொன்று அதன் தோலைப் போர்த்தியவராவர்.

**2260.** பச்சை நிறமுடையர் பாலர் சாலப்
பழையர் பிழையெலாம் நீக்கி யாள்வர்
கச்சைக் கதநாகம் பூண்ட தோளர்
கலனொன்று கையேந்தி யில்லந் தோறும்
பிச்சை கொளநுகர்வர் பெரியர் சாலப்
பிறங்கு சடைமுடியர் பேணுந் தொண்டர்
இச்சை மிகஅறிவர் என்று முள்ளார்
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 7

பச்சை நிறம் அம்மையுடையது. கதம் – கோபம்.
கலன் – பாத்திரம்; கபாலம்.

என்றும் உள்ளாராய் இடைமருதுமேவி இடங் கொண்ட எம்பெருமானார் பார்வதிக்குரிய தம் இடப்பாகத்தே பச்சை நிறம் உடையவராய், மிக இளையராகவும் மிகப் பழையராகவும் காட்சி வழங்கி, அடியார்களை அவர்களுடைய பிழைகளைப் போக்கி ஆட்கொள்பவர். கோபம் கொள்ளும் பாம்பினைக் கச்சையாகப் பூண்ட தோள்களை உடையவர். கையில் மண்டையோடாகிய பிச்சைப் பாத்திரத்தை ஏந்தி வீடுகள் தோறும் சென்று பிச்சை எடுத்து உண்பவர். ஆயினும் உண்மை நிலையினில் மிகவும் பெரியவர். விளங்குகின்ற சடைமுடியை உடையவர். தம்மை விரும்பும் அடியார்களுடைய விருப்பத்தை மிகவும் அறிந்தவர்.

**2261.** காவார் சடைமுடியர் காரோ ணத்தர்
கயிலாயம் மன்னினார் பன்னு மின்சொல்
பாவார் பொருளாளர் வாளார் கண்ணி
பயிலுந் திருவுருவம் பாகம் மேயார்
பூவார் புனலணவு புன்கூர் வாழ்வர்
புரமூன்றும் ஒள்ளழலாக் காயத் தொட்ட
ஏவார் சிலைமலைய ரெங்கும் தாமே
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 8

கா ஆர் – சோலை போலப் பொருந்திய.
பொருளாளர் – பாடல்களுக்குப் பொருளாவார்.
அணவு – பொருந்திய.
ஏஆர் – அம்பு பொருந்திய.
சிலை – வில்.
பாவார் – பாக்களில் உள்ளார்.

இடைமருது மேவி இடங்கொண்டு எங்கும் தாமேயாகப் பரவியிருக்கின்ற பெருமானார், சோலை போலப் பரவிய சடையினராய் நாகை குடந்தைக் காரோணங்களிலும், கயிலாயத்திலும், தங்குபவராய்ப் பூக்கள் நிரம்பிய புனலால் சூழப்பட்ட புன்கூரில் வாழ்பவராய், இனிய சொற்களாலாகிய பாடல்களின் பொருளை ஆளுதல் உடையவராய், வாள் போன்ற கண்களை உடைய பார்வதி பாகராய், முப்புரங்களையும் தீக் கொளுவுமாறு கொண்ட அம்பொடு பொருந்திய மலையாகிய வில்லை உடையவராய் விளங்குகின்றார்.

2262. புரிந்தார் நடத்தின்கட் பூத நாதர்
பொழிலாரூர் புக்குறைவர் போந்து தம்மில்
பிரிந்தா ரகல்வாய பேயுந் தாமும்
பிரியா ரொருநாளும் பேணு காட்டில்
எரிந்தா ரனலுகப்பர் ஏழி லோசை
யெவ்விடத்துந் தாமேயென் றேத்து வார்பால்
இருந்தார் இமையவர்கள் போற்ற என்றும்
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 9

இடைமருது மேவி இடங்கொண்ட பெருமானார் கூத்தில் விருப்பம் உடையவர். பூதங்களின் தலைவர். தம் இருப்பிடமாகிய வீட்டுலகை விடுத்துப் போந்து சோலைகள் சூழ்ந்த ஆரூரில் புகுந்து தங்குபவர். அகன்ற வாயை உடைய பேய்களை என்றும் பிரியாதவராய்த் தாம் விரும்பும் சுடுகாட்டில் எரிக்கப்படுபவருடைய தீயினை விரும்புபவர். எழுவகையில் அமைந்த இசையால் தம்மையே பரம்பொருளாகத் துதிப்பவர்கள் உள்ள இடங்களிலெல்லாம் தேவர்களும் போற்றுமாறு என்றும் நிலையாக இருப்பவராவர்.

2263. விட்டிலங்கு மாமழுவர் வேலை நஞ்சர்
விடங்கர் விரிபுனல்சூழ் வெண்காட் டுள்ளார்
மட்டிலங்கு தார்மாலை மார்பில் நீற்றர்
மழபாடி யுள்ளுறைவர் மாகா ளத்தர்
சிட்டிலங்கு வல்லரக்கர் கோனை யன்று
செழுமுடியுந் தோளைஞ்ஞான் கடரக் காலால்
இட்டிரங்கி மற்றவனுக் கீந்தார் வென்றி
இடைமருது மேவி யிடங்கொண் டாரே.
10

இடைமருதுமேவி இடங் கொண்ட பெருமானார் ஒளிவீசும் பெரிய மழுப்படையை உடையவர். கடல் நஞ்சுண்டவர். அழகர். நீர்வளம் மிக்க வெண்காட்டில் உள்ளவர். தேன் பொருந்திய மாலையை அணிந்த மார்பில் திருநீறு பூசியவர். மழபாடியிலும் இரும்பை, அம்பர், உஞ்சைனி என்ற மாகாளங்களிலும் உறைபவர். பெருமை விளங்கும் வலிய அரக்கர்கோனாகிய இரவாணனை அவன் கயிலை மலையைப் பெயர்க்க முயன்ற போது சிறந்த தலைகளும் இருபது தோள்களும் வருந்துமாறு திருவடியால் நசுக்கிப் பின் அவன் பக்கல் இரக்கம் கொண்டு அவனுக்குப்பல வெற்றிகளையும் வழங்கியவர்.

விட்டு இலங்குதல் – மின்னுதல்.
விடங்கர் – அழகர்.
மட்டு – தேன்.
தார் – இன்ப மாலை.

## 18. திருப்பூவணம்

பதிக வரலாறு:

ஆளுடைய அரசா், திருவாலவாயினின்றும் போந்து திருப்பூவணத்தையடைந்து திருக்கோயிலினுட் சென்றபொழுது, நெடியவனுக்கும் அறிவரியவராகிய இறைவர் நேரே தோன்றக் கண்டு இறைஞ்சி, அத்தோற்றத்தையெல்லாம் தோன்ற விரித்துப் பணிந்து பாடியருளியது இத்திருப்பதிகம் (தி. 12 திருநாவு. புரா. 407).

குறிப்பு: இத்திருப்பதிகம் சிவபிரானை உள்ளத்துள் நன்கு உள்கி உய்தற்கு, அவனது திருவுருவத்தின் இயல்பினைப் பலபட வகுத்து அருளிச்செய்யப்பட்டது. "ஆருருவ உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்" என்று இறுதித் திருப்பாடலில் அருளிச்செய்த திருக்குறிப்பு ஓர்ந்துணரத்தக்கது. இறைவன், தன்னை உள்குவார் உள்ளத்துள் விளங்கிநின்று பயன் தருதற்கு ஏற்ப, இதன்கண் உள்ள தொடர்கள் எல்லாம், "தோன்றும்" என்னும் முடிபுடையனவாகவே அருளிச்செய்யப்பட்டன. சிவவழிபாட்டில் இத்திருத்தாண்டகங்கள் கலாநியாசத்திற்கு உரியதாதல் உணர்க. இவ்வருமை நோக்கி இத்திருப்பதிகம், அகத்தியர் தேவாரத் திரட்டுள் "சிவனது திருவுருவம்" என்னும் பொருட்டுச் சிறந்தெடுத்து வைக்கப்பட்டுள்ளது.

ப.தொ.எண் : 231 பதிக எண் : 18

2264. வடியேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியந் தோன்றும்
தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங்
காதில்வெண் குழைதோடு கலந்து
தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித
னார்க்கே. 1

சோலைகள் விளங்கும் திருப்பூவணத்தை உகந்தருளியிருக்கும் புனிதராகிய சிவபெருமான் பக்கல், அடியார்களுடைய மனக்கண்முன் கூர்மை பொருந்திய மூவிலைச் சூலமும், நீண்ட சடைமீது அணிந்த பிறையும், நறுமணம் மிக்க கொன்றைப் பூவினால் ஆகிய முடி மாலையும், காதுகளில் கலந்து தோன்றும் குழையும், தோடும், இடிபோல ஒலித்து வந்த யானையின் தோலாகிய போர்வையும், அழகு விளங்கும் முடியும், திருநீறணிந்த அப்பெருமானுடைய திருமேனியும் காட்சி வழங்குகின்றன.

வடிஏறு – கூர்மை பொருந்திய. வடிவேறு என்றும் ஓதுவர்.

கடிஏறு – புதுமை பொருந்திய. திரிசூலம் – இலை மூன்றாகிய வேல்.

குழைதோடு கலந்து – அம்மையப்பர் – மாதொருபாகன். தானும் தேவியுமாய் நிற்றல்.

இடிஏறு – இடி போலுங்குரல் பொருந்திய.

**2265.** ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும்
அடியவர்கட் காரமுத மாகித் தோன்றும்
ஊணாகி யூர்திரிவா னாகித் தோன்றும்
ஒற்றைவெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேல்
சேணாக வரைவில்லா லெரித்தல் தோன்றுஞ்
செத்தவர்தம் எலும்பினாற் செறியச் செய்த
பூணாணும் அரைஞாணும் பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 2

சேணாகம் – நீண்ட பாம்பு

பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார் பால் ஆணும் பெண்ணுமாகிய வடிவும், அடியவர்களுக்குக் கிட்டுதற்கரிய அமுதம் போன்று இனிமை தரும் செயல்களும், உணவுக்காக ஊர்களில் திரியும் காட்சியும், ஒற்றை வெண்பிறையும், பகைவருடைய மும்மதில்களையும் நீண்ட பாம்பினை மலையாகிய வில்லில் நாணாகப் பூட்டி எரித்த செயலும், இறந்தவருடைய எலும்புகளால் உடம்பில் பொருந்துமாறு பூண்ட மாலையும் அரைஞாணும் அடியவர் மனக்கண்களுக்கு விளக்கமாகக் காட்சி வழங்கும்.

**2266.** கல்லாலின்நீழற் கலந்து தோன்றுங்
கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று
சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றும்
சூழரவும் மான்மறியுந் தோன்றுந் தோன்றும்
அல்லாத காலனைமுன் அடர்த்தல் தோன்றும்
ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும்
பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 3

பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார் பால் அடியார்களுக்கு மனக்கண் முன்னர், அவர் கல்லாலின் நிழலில் அமர்ந்த காட்சியும், மேம்பட்ட மறைகளை ஓதும்சனகர் முதலிய முனிவர் நால்வர்க்கும் வேத நெறிகளைச் சொற்களால் விளக்கியமை போல மோன நிலையிலிருந்து சொல்லிய காட்சியும், அவர் உடலைச் சுற்றுமாறு அணிந்த பாம்புகளும் ஏந்திய மான் குட்டியும், அறத்தின் உண்மையை உணர்ந்தவன் அல்லாத காலனை ஒறுத்த காட்சியும், தம்மை நினையும் அடியவர்பால் ஐவகை நிறத்தோடு விரும்பி வழங்கும் காட்சியும், யாவரும் அருவருக்கும் புலாலின் சுவட்டினை உடைய எலும்பினாலாகிய அணிகலன்களும் காட்சி வழங்கும்.

ஆல் நிழலில் எழுந்தருளியிருந்து நான்கு முனிவர்கட்கு நான்கு வேதங்களை அருளினார் என்பதில் நால்வராவார் பெயர் திருமுறைகளில் எங்கும் சொல்லப்படவில்லை. சனகர் முதலிய நால்வர்கட்குக் கல்லால் நிழலிலிருந்து அருள்புரிந்ததாகக் கந்தபுராணம் கூறும் வரலாற்றில் வேதத்தை ஓதிய பின்னர் உண்டாகிய ஐயத்தை நீக்கியருளியது சொல்லப்படுகிறதேயன்றி, வேதத்தை அருளியது சொல்லப்படவில்லை. ஆகவே, அந்நால்வரை இவ்வரலாற்றிற் கொள்ளுதல் பொருந்துமாறில்லை. அன்றியும் சனகர் முதலிய நால்வர்க்கு இறைவன் மோன நிலையில் இருந்து அருளியதே சிறந்தெடுத்துக் கூறப்படுகின்றது. இங்கு அவ்வாறின்றி, 'சொல்லாகச் சொல்லியவா தோன்றும்'

எனப்பட்டது. 'விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்' (தி.4, ப.7, பா.8). 'ஐம்புலனும் அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு - மொழிந்த வாயான் (தி.1 ப.53, பா.6) என்றாற்போலப் பிற இடங்களிலும் இவ்வாறே ஓதியருளினமை காண்க. நெறிகள் - அறம் முதலிய நான்கையும் அடையும் வழிகள். அல்லாத காலன் - அறத்தின் உண்மையை உணர்ந்தவன் அல்லாத இயமன், அறத்தின் உண்மையாவது, உலகர்க்கு விதிக்கப்பட்ட விதி, இறைவன் அடியார்க்குப் பொருந்தாது என்பது ஐவகை - ஐந்து நிறம். அவை படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலை இயற்றும் ஆற்றல்களைக் குறிக்கும். இவ்வைவகை ஆற்றல்களே ஒருங்கு நிற்குமிடத்து 'ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம்' என்னும் ஐந்து திருமுகங்களாய் நிற்கும். தனித்தனி பிரிந்து நிற்குமிடத்து, 'மனோன்மணி, மகேசுவரி, உமை, இலக்குமி, வாணி' என்னும் தேவியராய் நிற்ப, இறைவனும் அவர்களையுடைய, 'சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், மால், அயன்' என்னும் தேவர்களாய் நிற்பன். அமர்தல் - விரும்புதல், மேற்கூறிய உண்மையையெல்லாம் உணர்பவரே, மெய்யுணர்வுடையோராகலின் அவரிடம் இறைவன் அருளைமிகச் செய்வான் என்றருளியபடி, பொல்லாத எலும்பு யாவருக்கும் அருவருப்பாய் உள்ள எலும்பு.

**2267.** படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்்றும்
பன்னிரண்டு கையுடைய பிள்ளை தோன்றும்
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும்
நான்மறையி னொலிதோன்றும் நயனந் தோன்றும்
உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்றும்
மூரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்
புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 4

நயனம் – கண்; பார்வை.

சுவாமியின் கண் ஏனையோர் கண்களிலிருந்து வேறுபட்டது. நெற்றிக்கண் மேல்நோக்கி இருக்கும்.

கீள் – கோவணத்தோடு இணைத்துத் தைத்து அரை நாணாகக் கட்டுவது.

மூரல் – நகைப்பு; தசை முதலியன நீங்கிக் கிடக்கின்ற தலை பற்களோடு தோன்றுதல்.

புடை – பக்கம்

பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார் பால் அடியார்களுடைய மனக்கண்முன்னர்ப் படைக்கலமாம் நன்மை நிறைந்த மழுவும், அவர் ஏந்திய மானும், அருகில் இருக்கும் பன்னிரண்டு கைகளை உடைய முருகப் பெருமான் வடிவும், விரைந்து செல்லும் காளையும், அக்காளை வடிவம் எழுதிய கொடியும், நான்மறையின் ஒலியும், முக்கண்களும், உடையாக அமைந்த கீளும் கோவணமும், பற்களை உடைய வெள்ளிய மண்டை ஓட்டு மாலையும், அவரைச் சுற்றிக் காணப்படும் பூதங்களின் மகிழ்வும் காட்சி வழங்கும்.

**2268.** மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்்றும்
மாசிலாப் புன்சடைமேல் மதியந் தோன்றும்
இயல்பாக இடுபிச்சை ஏற்றல் தோன்றும்
இருங்கடல்நஞ் சுண்டிருண்ட கண்டந்
தோன்றும்
கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
ஆயிரமா முகத்தினொடு வானில் தோன்றும்
புயல்பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித
னார்க்கே. 5

மயல் – காதல்; பேரன்பு.
கலுழி – பெருக்கம்.

பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்பால் அடியார்களுடைய மனக்கண் முன்னர்த் தம்மிடம் பேரன்பு கொள்ளும் அடியவர்களுக்கு அவர் அருள் செய்யும் செயலும், அழுக்கற்ற சிவந்த சடையின் மேல் அணிந்த பிறையும், பிச்சை ஏற்கும் அவருக்கு அடியவர்கள் வழக்கமாக இடும் பிச்சையை அவர் ஏற்கும் காட்சியும், பெரிய கடலில் நஞ்சினை உண்டதனால் இருண்ட கழுத்தும், கயல்கள் பாயுமாறு விரைவான கலங்கல் வெள்ளமாக ஆயிரமுகத்தோடு வானிலிருந்து இறங்கிய கங்கை தன்னுள் அடங்குமாறு சிவபெருமான் விரித்த சடையின் அழகும் காட்சி வழங்கும்.

**2269.** பாராழி வட்டத்தார் பரவி யிட்ட
பன்மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும்
சீராழித் தாமரையின் மலர்க ளன்ன
திருந்தியமா நிறத்தசே வடிகள் தோன்றும்
ஓராழித் தேருடைய இலங்கை வேந்தன்
உடல்துணித்த இடர்பாவங் கெடுப்பித் தன்று
போராழி முன்ஈந்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித
னார்க்கே. 6

பாராகிய ஆழி வட்டத்தார் – பூமண்டலத்தில் உள்ளவர். ஆழி – கடல்.
ஆழிவட்டம் – கடற்சூழ்ந்த பெருவளையம்.
பரவி – துதித்து. ஆழி – சக்கரமென்ற பொருளுமுண்டு.

பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார் பால் அடியார்களின் மனக்கண்களின் முன்னர் அழகுக் கடலாய் உள்ள தாமரை மலர் போன்ற அழகிய நிறத்தை உடைய திருவடிகளும், அத்திருவடிகளின் மீது பூமண்டலத்தி லுள்ளவர்கள் துதித்து அருச்சித்த பல மலர்களும், காட்டிய புகைகளும், ஒப்பற்ற சக்கரங்களை உடைய தேரை உடைய இராவணனுடைய உடலை அழித்த திருமாலுடைய துன்பம் தரும் தீவினைகளைப் போக்கி அவருக்குச் சக்கரம் வழங்கிய அழகிய செயலும் காட்சி வழங்கும்.

2270. தன்னடியார்க் கருள்புரிந்த தகவு தோன்றுஞ்
சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்றும்
மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தல் தோன்றும்
துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்புந்
தூயமா மதியுடனே வைத்தல் தோன்றும்
பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 7

தகவு – தகுதி. வரலாறுகளும் அவற்றிற்கேற்ற வடிவு நிலைகளும்

பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார் பால் அடியார்களின் மனக்கண்முன்னர் தம் அடியவர்களுக்கு அருள்புரிந்த மேம்பட்ட செயலும், பிரமனுடைய தலை ஒன்றனை நீக்கிய செயலும், மின்னலை ஒத்த நுண்ணிய இடையை உடைய பார்வதியை இடப்பாகமாகக் கொண்ட வடிவும், யானைத் தோலை விரும்பிப் போர்த்திய வனப்பும், செறிந்த சடைமீது கங்கை, பாம்பு, பிறை போன்ற இவற்றை வைத்துப் பொன் போன்ற திருமேனி பொலிந்து தோன்றும் வனப்பும் தோற்றம் வழங்கும்.

2271. செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந்
திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்றும்
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும்
நெற்றிமேல் கண்தோன்றும் பெற்றந் தோன்றும்
மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்றும்
மலைமகளுஞ் சலமகளும் மலிந்து தோன்றும்
பொறியரவும் இளமதியும் பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 8

பதிக மகுடம் – பொழில் திகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே.

பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்பால் அடியவர்களின் மனக்கண் முன்னர் அப்பெருமானுடைய செறிந்த வீரக்கழலும், திருவடிகளும், முப்புரங்களை அழித்த வில்லும், நால்வருக்கு உண்மை நெறியை மோனநிலையில் விரித்துரைத்த நுண்மையும், நெற்றிக்கண்ணும், வாகனமாம் காளையும், அடியார்களுடைய மறுபிறவியை நீக்கி அருள் செய்கின்ற கூறுபாடும், பார்வதியின் வடிவும், கங்கையும், புள்ளிகளை உடைய பாம்பும், பிறைச் சந்திரனும் காட்சி வழங்கும்.

2272. அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்
அணிகிளரு முருமென்ன அடர்க்குங் கேழல்
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்றும்
மணமலிந்த நடந்தோன்றும் மணியார் வைகைத்
திருக்கோட்டில் நின்றதோர் திறமுந் தோன்றுஞ்
செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 9

அரும்பு – அருப்பு. உரும் – இடி.
அடர்க்கும் கேழல் – கொல்லும் பன்றி.
மருப்பு – கொம்பு.
பொருப்பு ஓட்டி – மலையை வென்று.

பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார் பால் அடியார்களின் மனக்கண் முன்னர்க் கோங்கு அரும்பினை ஒத்த முலையை உடைய பார்வதிக்கு வழங்கிய இடப்பாகமும், இடியைப் போல அழிக்கும் ஆற்றலுடைய மகா வராகத்தினுடைய மணி வயிரக் கோவையைத் தோற்கச் செய்யும் ஒளியை உடைய மருப்பும், வையை நதிக்கரையில் நிற்கும் காட்சியும், உமாதேவி மகிழ்தற்குக் காரணமாக அவர் ஆடிய அழகிய கூத்தும், சிவந்த வானத்தினும் ஒளிமிக்கு விளங்கும், மலைகளைத் தம் திண்மையால் தோற்கடிக்கும் வலிய புயங்களும் காட்சி வழங்கும்.

2273. ஆங்கணைந்த சண்டிக்கும் அருளி யன்று
தன்முடிமேல் அலர்மாலை யளித்தல் தோன்றும்
பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று
பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றும்
கோங்கணைந்த கூவிளமும் மதமத் தம்முங்
குழற்கணிந்த கொள்கையொடுகோலந் தோன்றும்
பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 10

மத்தம் – ஊமத்தை. இது மயக்கத்தை உண்டாக்குவதால் மதமத்தம் எனப்படும். குழல் – சடை. ஆடவர் தலைமயிரையும் குழல் என்றுதான் சொல்லுவர். கொள்கை – விருப்பம்.

பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார் பால் அடியார்களின் மனக்கண் முன்னர்த் தம்மைச் சரணமாக அடைந்த சண்டேச நாயனாருக்கு அருள் செய்து தாம் முடிமேல் சூடிய மாலையை அவருக்கு வழங்கிய காட்சியும், தம்பக்கல் அடைந்து தொண்டு செய்யும் அடியவர்களுக்கு அருள் செய்து அவர்களுடைய பல பிறவி களையும் போக்கும் தன்மையும், கோங்கு வில்வம் ஊமத்தம் மலர் என்பவற்றை அணிந்த அழகும், பூக்களை அம்புகளாக உடைய மன்மதனுடைய உருவத்தை அழித்த வனப்பும் காட்சி வழங்கும்.

2274. ஆருருவ உள்குவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்
வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை
மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவந்
தோன்றும்
நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை
நெறுநெறென அடர்த்திட்ட நிலையுந்
தோன்றும்
போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித
னார்க்கே. 11

பொழில் திகழும் பூவணத்து எம்புனிதனார்பால் அடியவர்களின் மனக்கண் முன்னர்த் தம்மை ஒன்றிய உள்ளத்தோடு தியானிப்பவர் உள்ளத்தில் அவர்கள் தியானித்த அதே வடிவில் இருக்கின்ற காட்சியும், கச்சின்மேல் அணிகலன்களை அணிந்த தனங்களை உடைய பார்வதியை ஒருபாகமாக வைத்து மகிழ்ந்த வடிவமும், நீர் நிறைந்த வடிவுடைய கடலால் சூழப்பட்ட இலங்கையின் மன்னனான இராவணன் உடம்பினை நெறு நெறு என்னும் ஓசை ஏற்படுமாறு நசுக்கிய நிலையும், போரிடும் வடிவத்தை உடைய கூற்றுவனை உதைத்த அழகிய செயலும் காட்சி வழங்கும்.

உருவ – ஊடுருவ; ஊன்ற.
உள்குவார் – நினைப்பார்.
அவ்வுரு – அடியார் நினைக்கும் வடிவம்.
அவருக்கென்று வடிவமில்லை. மகிமை தரும் மகேச்சுர வடிவங்கள் 64, 25 என்றெல்லாம் சொல்கிறோமே அதுமட்டுமின்றி நீங்கள் எந்த வடிவம் கேட்டாலும் எடுத்து வருவார். ஆர்கலிசூழ் வண்டோதரி வரலாற்றை நினைவு கூர்வோமாக.



## 19. திருஆலவாய்

ப.தொ.எண் : 232 பதிக எண் : 19

2275. முளைத்தானை யெல்லார்க்கும் முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேல் முகிழ்வெண் திங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணாக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தால் துவள நீறாத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 1

எல்லாப் பொருட்கும் முன்னே தோன்றி முளைத்தான். எல்லாவற்றின் தோற்றத்திற்கும் அவனே நிமித்த காரணன். கூடல் மதுரை நகருக்கும், ஆலவாய் திருக்கோயிலுக்கும் பெயர்கள்.
"தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே
சிந்திக்கப் பெற்றேன்நானே" என்பது பதிக மகுடம்.

எல்லாப் பொருள்களின் தோற்றத்திற்கும் தான் முன்னே நிற்பவனாய், செறிந்த சடைமுடிமேல் பிறையை வளைவாகச் சூடியவனாய், அசுரர்களுடைய மும்மதில்களையும் மேருமலையை வில்லாகவும், வாசுகி என்ற பாம்பினை நாணாகவும் கொண்டு கொடிய அம்பினாலே அழித்து சாம்பலாகும்படி அழித்தவனாய், தூய முத்துப் போன்ற பற்களை உடைய உமாதேவியோடு விளையாடி மகிழ்ந்தவனாய் அழகிய மதுரை மாநகரத்து ஆலவாய் ஆகிய திருக்கோயிலில் உகந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய திருவடிகளையே தியானிக்கும் வாய்ப்பினை யான் பெற்றுள்ளேனே என்று தாம் பெற்ற பேற்றின் அருமையை உணர்ந்து கூறியவாறாம்.

2276. விண்ணுலகின் மேலார்கள் மேலான் தன்னை
மேலாடு புரமூன்றும் பொடிசெய் தானைப்
பண்ணிலவு பைம்பொழில்சூழ் பழனத் தானைப்
பசும்பொன்னின் நிறத்தானைப் பால்நீற்
றானை
உண்ணிலவு சடைக்கற்றைக் கங்கை யாளைக்
கரந்துமையோ டுடனாகி யிருந்தான்
தன்னைத்
தெண்ணிலவு தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.
2

தேவருலகிலுள்ள மேலாருக்கும் மேலாபவனாய், வானத்தில் உலவிய முப்புரங்களையும் அழித்தவனாய், வண்டுகளின் பண்ணோசை நிலைபெற்ற பசிய பொழில்களை உடைய பழன நகரில் உள்ளானாய், பசும் பொன்நிறத்தனாய், வெண்ணீறு அணிந்தவனாய், சடைக் கற்றைக்குள் அடங்கிய கங்கையை உடையவனாய், உமையோடு வெளிப்படையாக உடனாகியும் அவளைத் தன் உருவில் மறைத்தும் இருப்பவனாய்த் தெளிந்த ஞானம் உடையார் பலரும் தங்கியிருக்கும் தென் கூடல் ஆலவாயில் உள்ள சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

தெள்நிலவு – தெளிவு (ஞானம்) நிலைபெற்ற
பண்நிலவு – வண்டுகளின் இசைநிலை பெற்ற
உள்நிலவு – உள் இடம் வாய்ந்த

2277. நீர்த்திரளை நீள்சடைமேல் நிறைவித் தானை
நிலமருவி நீரோடக் கண்டான் தன்னைப்
பாற்றிரளைப் பயின்றாட வல்லான் தன்னைப்
பகைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தான்
தன்னைக்
காற்றிரளாய் மேகத்தி னுள்ளே நின்று
கடுங்குரலா யிடிப்பானைக் கண்ணோர்
நெற்றித்
தீத்திரளைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.
3

கங்கையை நீண்ட சடையில் தங்கச் செய்தவனாய், பின் பகீரதன் பொருட்டாக அதன் ஒரு பகுதியை நிலத்தின்கண் பெருகி ஓடவிட்டவனாய், பால், தயிர், நெய் என்பவற்றின் அபிடேகத்தைப் பலகாலும் உடையவனாய், பகை கொண்டு வந்த கொடிய கூற்றுவனைத் தண்டித்தவனாய், காற்றின் திரட்சியாய் மேகத்தின் உள்ளே இருந்து கொடிய இடியாக ஓசை எழுப்புபவனாய், நெற்றியின் கண் தீத்திரட்சி போன்ற கண்ணை உடையவனாய் உள்ள தென்கூடல் திருவாலவாய்ச் சிவன் அடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

2278. வானமிது வெல்லா முடையான் தன்னை
வரியரவக் கச்சானை வன்பேய் சூழக்
கானமதில் நடமாட வல்லான் தன்னைக்
கடைக்கண்ணால் மங்கையையு நோக்கா வென்மேல்
ஊனமது வெல்லா மொழித்தான் தன்னை
யுணர்வாகி யடியேன துள்ளே நின்ற
தேனமுதைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 4

வான் உலகினையும் நிலவுலகினையும் தன் உடைமையாக உடையவனாய்ப் பாம்பினைக் கச்சாக அணிந்தவனாய், வலிய பேய்கள் சூழச் சுடுகாட்டில் கூத்தாட வல்லவனாய், தன் கடைக்கண்களால் உமாதேவியை நோக்கி அவள் பரிந்துரைத்த குறிப்பினையும் பெற்று என்பால் உள்ள குறைகளை எல்லாம் நீக்கினவனாய், அடியேன் உள்ளத்துள்ளே ஞான வடிவினனாய் நின்று தேன் போலவும் அமுது போலவும் இனியேனாய் உள்ள தென் கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

2279. ஊரானை யுலகேழாய் நின்றான் தன்னை
யொற்றைவெண் பிறையானை யுமையோ டென்றும்
பேரானைப் பிறர்க்கென்று மரியான் தன்னைப்
பிணக்காட்டில் நடமாடல் பேயோ டென்றும்
ஆரானை அமரர்களுக் கமுதீந் தானை
அருமறையால் நான்முகனும் மாலும் போற்றும்
சீரானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 5

பேரான் – நீங்காதவன்.
ஆரான் – நிரம்பான், முடித்திடாதவன்.
சீர் – புகழ்.

கயிலை மலையை இருப்பிடமாக உடையவனாய், ஏழுலகமும் பரந்து இருப்பவனாய், ஒற்றைப் பிறையை அணிந்தவனாய், உமாதேவியை விடுத்து என்றும் நீங்காதவனாய், அடியார் அல்லாதார் நினைத்தற்கு அரியனாய், பேயோடு எந்நாளும் சுடுகாட்டில் கூத்தாடுதலில் தெவிட்டாத வனாய், தான் விடத்தை உண்டு அமரர்களுக்கு அமுதம் ஈந்தவனாய், வேத மந்திரங்களைக் கூறிப் பிரமனும் திருமாலும் துதிக்கும் புகழுடையவனாய் உள்ள தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

2280. மூவனை மூர்த்தியை மூவா மேனி
யுடையானை மூவுலகுந் தானே யெங்கும்
பாவனைப் பாவ மறுப்பான் தன்னைப்
படியெழுத லாகாத மங்கை யோடு
மேவனை விண்ணோர் நடுங்கக் கண்டு
விரிகடலின் நஞ்சுண் டமுத மீந்த
தேவனைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

6

பாவன் – பரத்தலுடையவன்.
மேவன் – விரும்பியிருத்தல் உடையவன்.

யாவரினும் முற்பட்டவனாய், அடியார்கள் விரும்பிய வடிவில் காட்சி வழங்குபவனாய், என்றும் மூத்தலில்லாத திருமேனியை உடையவனாய், தானே மூவுலகம் முழுதும் பரவியிருப்பவனாய், அடியவர்களின் தீவினையைப் போக்குபவனாய், ஓவியத்து எழுதவொண்ணா அழகிய உமையோடு விரும்பியிருப்பவனாய், தேவர்கள் நடுங்குதலைக் கண்டு கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு அமுதத்தை ஈந்த தேவனாய் உள்ள தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

2281. துறந்தார்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னைத்
துன்பந் துடைத்தாள வல்லான் தன்னை
இறந்தார்க ளென்பே யணிந்தான் தன்னை
யெல்லி நடமாட வல்லான் தன்னை
மறந்தார் மதில்மூன்றும் மாய்த்தான் தன்னை
**மற்றொருபற் றில்லா அடியேற் கென்றும்**
**சிறந்தானைத்** தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

7

மறந்தார் – திரிபுர அசுரர்கள் திருமால் செய்த மாயத்தால் சிவபூசையை மறந்தது.

பற்றறுத்த சான்றோருக்குப் பற்றுக்கோடாகும் வழியாய் இருப்பவனாய், அடியார்களுடைய துன்பத்தைப் போக்கி அவர்களை ஆட்கொள்ள வல்லவனாய், இறந்தவர்களுடைய எலும்பையே அணிந்தவனாய், இரவில் கூத்தாட வல்லவனாய்த் தன்னை மறந்த அசுரர்களின் மும்மதில்களையும் அழித்தவனாய், வேறுபற்றில்லாத அடியார்களுக்கு என்றும் மேம்பட்டு அருளுபவனாய் உள்ள தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

2282. வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச்
சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

8

வாயான் – இறைவனைப் பற்றிச் சொல்பவன்.
மனத்தான் – இறைவனை மனதால் நினைப்பவன்.

அடியார்களுடைய வாயுள்ளும் மனத்துள்ளும் மனத்தில் தோன்றும் எண்ணத்துள்ளும் தங்கி, அவர்களுடைய விருப்பங்களை அறிந்து நிறைவேற்றுபவனாய், மாசற்றவனாய், கலப்பற்ற வெள்ளை நிறக் காளையை உடையவனாய், பிறையைச் சடையில் சூடியவனாய், தொடர்ந்து எனக்குத் தாய்போல உதவுபவனாய்த் தவத்தின் பயனாக உள்ளவனாய், மேம்பட்ட தேவர்கள் தலைவராய திருமால் பிரமன் இந்திரன் முதலியவர்களுக்கு என்றும் சேய்மையிலுள்ளவனாய் இருக்கும் தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

2283. பகைச்சுடராய்ப் பாவ மறுப்பான் தன்னைப்
பழியிலியாய் நஞ்சுண் டமுதீந் தானை
வகைச்சுடராய் வல்லசுரர் புரமட் டானை
வளைவிலியா யெல்லார்க்கு மருள்செய் வானை
மிகைச்சுடரை விண்ணவர்கண் மேலப் பாலை
மேலாய தேவாதி தேவர்க் கென்றும்
திகைச்சுடரைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

9

தீவினையாகிய இருளைப் போக்கும் ஞானச் சுடராய், அடியார்களின் பாவங்களைப் போக்குபவனாய்ப் பழி ஏதும் இல்லாதவனாய் நஞ்சினை உண்டு தேவர்க்கு அமுதம் ஈந்தவனாய்க் கிளைத்தெழுந்த தீயாகி அசுரருடைய மும்மதில்களையும் அழித்தவனாய், நடுவுநிலை தவறாதவனாய் எல்லா உயிர்களுக்கும் அருள் செய்பவனாய், மேலான ஒளிவடிவினனாய், விண்ணவர்களுக்கு மேலும் உயர்வுதரும் அப்பக்தியாய் உள்ளவனாய், மேம்பட்ட தேவர்களுக்கும் ஒளி காட்டும் கலங்கரை விளக்காக உள்ள தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

2284. மலையானை மாமேரு மன்னி னானை
வளர்புன் சடையானை வானோர் தங்கள்
தலையானை யென்தலையி னுச்சி யென்றுந்
தாபித் திருந்தானைத் தானே யெங்கும்
துலையாக வொருவரையு மில்லா தானைத்
தோன்றாதார் மதில்மூன்றுந் துவள எய்த
சிலையானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.
10

கயிலை மலையை உடையவனாய், மேரு மலையில் தங்கியிருப்பவனாய், வளர்ந்த செஞ்சடையினனாய், வானோருள் மேம்பட்டவனாய், என் தலையின் உச்சியில் என்றும் நிலைபெற்றிருப்பவனாய், எங்கும் தனக்கு நிகராவார் இல்லாதவனாய்த் தன்னை அணுகாது பகையைப்பூண்ட அசுரர் மதில்கள் மூன்றும் அழியுமாறு பயன்படுத்திய வில்லை உடையவனாய் இருக்கும் தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

2285. தூர்த்தானைத் தோள்முடிபத் திறுத்தான் தன்னைத்
தொன்னரம்பின் இன்னிசைகேட் டருள்செய் தானைப்
பார்த்தனைப் பணிகண்டு பரிந்தான் தன்னைப்
பரிந்தவற்குப் பாசுபதம் ஈந்தான் தன்னை
ஆத்தனை யடியேனுக் கன்பன் தன்னை
யளவிலாப் பல்லூழி கண்டு நின்ற
தீர்த்தனைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.
11

பிறன் மனைவியை விரும்பிய இராவணனுடைய தோள்களையும் பத்துத் தலைகளையும் நசுக்கியவனாய், பின் அவன் எழுப்பிய வீணை இசைகேட்டு அருள் செய்தவனாய் அருச்சுனனுடைய தொண்டினைக் கண்டு அவனுக்கு இரங்கிப் பாசுபதாத்திரம் ஈந்தவனாய், நம்பத் தகுந்தவனாய், அடியேன் மாட்டு அன்பு உடையவனாய், அளவற்ற பல ஊழிக்காலங்களையும் கண்டும் தன் நிலைபேற்றில் மாறுபடாது இருக்கும் பரிசுத்தனாகிய தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

தூர்த்தன் – பிறன் மனை விழைந்தவன்; இராவணன்.
ஆத்தன் – நம்பத்தகுந்தவன்.
தீர்த்தன் – பரிசுத்தன்.

## 20. திருநள்ளாறு

ப.தொ.எண் : 233 பதிக எண் : 20

2286. ஆதிக்கண் நான்முகத்தி லொன்று சென்று
அல்லாத சொல்லுரைக்கத் தன்கை வாளால்
சேதித்த திருவடியைச் செல்ல நல்ல
சிவலோக நெறிவகுத்துக் காட்டு வானை
மாதிமைய மாதொருகூ றாயி னானை
மாமலர்மே லயனோடு மாலுங் காணா
நாதியை நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.
1

ஆதி – பழங்காலம். சேதித்த – அறுத்த.
மாதிமைய – பெருமையுடைய.
நாதி – நாதன். பதிக மகுடம் – நள்ளாற்றானை நானடியேன் நினைக்கப் பெற்றுய்ந்த வாறே.

ஆதி அந்தணன் எனப்படும் பிரமனுடைய முகங்களில் ஒன்று உண்மை அல்லாத சொல்லினைக் கூற அம்முகத்தைத் தன் கையையே வாளாகக் கொண்டு போக்கிய வயிரவனாய், அடியார்கள் அடைவதற்கு மேம்பட்ட சிவலோகம் அடையும் வழியைக் காட்டுவானாய், விரும்பத்தக்க பார்வதி பாகனாய், தாமரை மலர் மேல் உள்ள பிரமனும், திருமாலும் காண முடியாத தலைவனாய்க் குண பூரணனாய்த் திருநள்ளாற்றில் உகந்தருளியிருக்கும் பெருமானை அடியேனாகிய நான் தியானம் செய்து துன்பங்களிலிருந்து நீங்கிய செயல் மேம்பட்டதாகும்.

2287. படையானைப் பாசுபத வேடத் தானைப்
பண்டனங்கற் பார்த்தானைப் பாவ மெல்லாம்
அடையாமைக் காப்பானை யடியார் தங்கள்
அருமருந்தை ஆவாவென் றருள்செய்
வானைச்
சடையானைச் சந்திரனைத் தரித்தான் தன்னைச்
சங்கத்த முத்தனைய வெள்ளை யேற்றின்
நடையானை நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.
2

அனங்கன் – மன்மதன்.
நடை – நடத்தல்; செல்லுதல் உடையவன்.

பல படைக்கலங்களை உடையவனாய்ப் பாசுபத மதத்தில் கூறப்படும் வேடத்தனாய், முற்காலத்தில் மன்மதன் சாம்பலாகுமாறு அவனை நெற்றிக்கண்ணால் நோக்கியவனாய், அடியவர்களுக்கு அமுதமாய் அவர்கள் நிலைக்கு ஐயோ என்று இரங்கி அருள் செய்பவனாய்ச் சடையை உடையவனாய், காளையில் செல்பவனாய்க் குண பூரணனாய் உள்ள நள்ளாற்றானை நான் அடியேன் நினைக்கப் பெற்று உய்ந்தவாறே.

**2288.** படஅரவ மொன்றுகொண் டரையி லார்த்த
பராபரனைப் பைஞ்ஞீலி மேவி னானை
அடலரவம் பற்றிக் கடைந்த நஞ்சை
யமுதாக வுண்டானை ஆதி யானை
மடலரவம் மன்னுபூங் கொன்றை யானை
மாமணியை மாணிக்காய்க் காலன் தன்னை
நடலரவஞ் செய்தானை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.

3

பரம் – மேல். அபரம் – கீழ்.
பராபரன் –மேலும் கீழுமாய் நிற்பவன்
மடல்அரவம் – இதழ்களின் பக்கலில் முரலும் வண்டுகளின் ஒசை.
மாணி – பிரமசாரி. மார்க்கண்டேயர்.
நடலை அரவம் – ஒடுங்குவதற்கு ஏதுவாகிய ஒலி. அது சிலம்பினால் வருவது.

படமெடுக்கும் பாம்பு ஒன்றனை இடையில் இறுகக் கட்டிய, மேலும் கீழுமாய் நிற்பவனை, பைஞ்ஞீலி என்ற தலத்தை உகந்தருளி யவனை, வலிய பாம்பினைக் கொண்டு கடைந்த போது தோன்றிய விடத்தை அமுதம்போல் உண்டவனை, எல்லோருக்கும் முற்பட்டவனை, இதழ்களிலே வண்டுகளின் ஒலி நிறைந்த கொன்றைப் பூவினை அணிந்தவனை, சிறந்த இரத்தினம் போன்று கண்ணுக்கு இனியவனை, மார்க்கண்டேயன் என்ற பிரமசாரியைக் காத்தற் பொருட்டுக் காலனைத் துன்புறுத்தத் தன் கால் சிலம்பு ஒலிக்க அவனை உதைத்தவனை, நள்ளாற்றில் உகந்தருளியிருப்பவனை நான் அடியேன் நினைக்கப்பெற்று உய்ந்தவாறே.

**2289.** கட்டங்க மொன்றுதங் கையி லேந்திக்
கங்கணமுங் காதில்விடு தோடு மிட்டுச்
சுட்டங்கங் கொண்டு துதையப் பூசிச்
சுந்தரனாய்ச் சூலங்கை யேந்தி னானைப்
பட்டங்க மாலை நிறையச் சூடிப்
பல்கணமுந் தாமும் பரந்த காட்டில்
நட்டங்க மாடியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.

4

அங்கம் – எலும்பு.
கம் – ஆகாயம்
வெளி – வெளியாகிய காட்டில்.

கட்டங்கம் என்ற படையைக் கையில் ஏந்திக் கங்கணம் அணிந்து, காதில் தோடு அணிந்து, உடம்பை எரித்த சாம்பலைத் தன் திருமேனியில் நிறையப் பூசி அழகனாய்த்தன் கையில் சூலம் ஏந்தி எலும்பு மாலையை நிறையச் சூடிப் பூதக்கூட்டமும் தானுமாய்ப் பரந்து சுடுகாட்டில் கூத்து நிகழ்த்தும் நள்ளாற்றானை நான் அடியேன் நினைக்கப்பெற்று உய்ந்தவாறே.

**2290.** உலந்தார்தம் அங்கங்கொண் டுலக மெல்லாம்
ஒருநொடியி லுழல்வானை உலப்பில் செல்வம்
சிலந்திதனக் கருள்செய்த தேவ தேவைத்
திருச்சிராப் பள்ளியெஞ் சிவலோகனைக்
கலந்தார்தம் மனத்தென்றுங் காத லானைக்
கச்சியே கம்பனைக் கமழ்பூங் கொன்றை
நலந்தாங்கும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.

5

உலந்தார் – இறந்தார்.
உலப்பு – குறைதல்.

இறந்தவர்களுடைய எலும்பு மாலையை அணிந்து உலகமெல்லாம் ஒரு நொடி நேரத்தில் சுற்றி வருகின்றவனாய், அழிவில்லாத பெருஞ்செல்வத்தைச் சிலந்திப் பூச்சிக்கு அருளிய தேவதேவனாய்ச் சிராப்பள்ளியில் உகந்தருளியிருக்கும் சிவலோகனாய்த் தன்னைக் கூடிய அடியவருடைய உள்ளத்தைத் தான் என்றும் விரும்புபவனாய்க் காஞ்சியில் ஏகம்பத்து உறைவானாய், நறுமணம் கமழும் கொன்றைப் பூவினால் செயற்கை அழகு கொண்ட குணபூரணனாய் உள்ள நள்ளாற்றானை நான் அடியேன் நினைக்கப் பெற்று உய்ந்தவாறே.

**2291.** குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான் தன்னைக்
குலவரையின் மடப்பாவை யிடப்பா லானை
மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட
மறையவனைப் பிறைதவழ்செஞ்சடை யினானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னுந்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.

6

கோள் – துன்பம். குலவரை – உயர்ந்த மலை.
சலம் – பொய்; நடுக்கம்; கோபம்.
தயாமூலதன்மம் – அன்பே, இரக்கமே அடிநிலை அறம்.
குலம் – பசுக்குலம், பதிக்குலம் என இருவகை.
பாசத்தினால் கட்டுண்டபோது பசுக்குலம். கட்டு நீங்கிய போது பதிக்குலம். மாதீர்த்தம் – தூய்மை செய்யும் தண்ணிய அருள்.

அடியவன் குடி என்ற பெருமையைக் கொடுத்துத் துன்பத்தை நீக்க வல்லவனாய், பார்வதியை இடப்பாகனாய், உயிர்களைப் பற்றியுள்ள அழுக்குகளை நீக்கித் தன் திருவருளாகிய புனித நீரில் அவற்றை மூழ்குவிப்பவனாய், வேதத்தை ஓதுபவனாய், பிறை சூடிய சடையினனாய், நடுக்கத்தைப் போக்கி இரக்கத்தையே அடிப்படையாகக் கொண்டு அறம் என்னும் உண்மைப்பொருளின் வழியில் வாழ்ந்து தன்னை வழிபடுபவருக்கெல்லாம் நன்மையே நல்கும் குணபூரணனாய் உள்ள நள்ளாற்றானை நான் அடியேன் நினைக்கப்பெற்று உய்ந்தவாறே.

**2292.** பூவிரியும் மலர்க்கொன்றைச் சடையி னானைப்
புறம்பயத்தெம் பெருமானைப் புகலூ ரானை
மாவிரியக் களிறுரித்த மைந்தன் தன்னை
மறைக்காடும் வலிவலமும் மன்னி னானைத்
தேவிரியத் திகழ்தக்கன் வேள்வி யெல்லாஞ்
சிதைத்தானை யுதைத்தவன்தன்
சிரங்கொண்டானை
நாவிரிய மறைநவின்ற நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.
7

பூவாய் விரியும் கொன்றை மலரைச் சூடிய சடையினனாய்ப் புறம்பயம், புகலூர், மறைக்காடு, வலிவலம் என்ற திருத்தலங்களை உகந்தருளிய பெருமானாய், மற்றைய விலங்குகள் அஞ்சி ஓடுதற்குக் காரணமான வலிமையை உடைய களிற்றின் தோலை உரித்த வலிமையை உடையவனாய், ஏனைய தேவர்களும் அஞ்சி ஓடுமாறு தக்கனுடைய வேள்வி முழுதையும் அழித்தவனாய், அவனை ஒறுத்து அவன் தலையை நீக்கினவனாய், நாவினின்றும் வெளிப்படுமாறு வேதத்தை ஓதுபவனாய் உள்ள நள்ளாற்றானை நான் அடியேன் நினைக்கப்பெற்று உய்ந்தவாறே.

மாஇரி அக்களிறு – மற்றைய விலங்குகள் (யானைகள்) அஞ்சி நீங்குகின்ற அத்தன்மையுடைய யானை; கயாசுரன். தேஇரிய – எல்லாத் தேவரும் அஞ்சி ஒடும்படி. அவன் – தக்கன். நாவிரிய – நாவினின்றும் தோன்றுமாறு.

**2293.** சொல்லானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத்
தொல்லவுணர் புரமூன்று மெரியச் செற்ற
வில்லானை யெல்லார்க்கும் மேலா னானை
மெல்லியலாள் பாகனை வேதம் நான்கும்
கல்லாலின் நீழற்கீழ் அறங்கண் டானைக்
காளத்தி யானைக் கயிலை மேய
நல்லானை நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.
8

வேதங்களை ஓதுபவனாய், ஒளி வீசும் பவளம் போன்ற செந்நிறத்தானாய்ப் பழைய அசுரருடைய மூன்று மதில்களையும் எரியச் செய்த வில்லினை ஏந்தியவனாய், எல்லாருக்கும் மேம்பட்டவனாய்ப் பார்வதி பாகனாய்க் கல்லாலின் கீழே அமர்ந்து நால் வேதங்களின் அறத்தையும் மௌன நிலையில் நால்வருக்கு உபதேசித்தவனாய்க் காளத்தியையும், கயிலை மலையையும் உகந்தருளிய பெரியவனாய்க் குணபூரணனாய் உள்ள நள்ளாற்றானை நான் அடியேன் நினைக்கப் பெற்று உய்ந்தவாறே.

சொல்லான் – சொல்லின்கண் உள்ளவன்.
பவளச் சோதியான் – ஒளியையுடைய.
பவளம் போலும் ஒளியை உடையவன்.

**2294.** குன்றாத மாமுனிவன் சாபம் நீங்கக்
குரைகழலாற் கூற்றுவனைக் குமைத்த கோனை
அன்றாக அவுணர்புரம் மூன்றும் வேவ
ஆர**ழல்வா யோட்டி** யடர்வித் தானைச்
சென்றாது வேண்டிற்றொன் றீவான் றன்னைச்
சிவனேயெம் பெருமானென் றிருப்பார்க் கென்றும்
நன்றாகும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 9

மேம்பட்ட முனிவனான மார்க்கண்டேயனுடைய குறை வாழ்நாள் ஆகிய சாபம் தீருமாறு திருவடியால் கூற்றுவனை வருத்திய பெருமானாய்ப் பகைமை உண்டாயினமையின் அசுரர் உடைய மும்மதில்களையும் தீயிட்டுக் கொளுத்தி அழிவில்லாதவனாய்த் தன்னை அடைந்து வேண்டியவர் வேண்டியதை ஈவானாய்ச் 'சிவ பெருமானே எம் இறைவன்' என்று அவனையே வழிபட்டுக் கொண்டிருக்கும் அடியவர்களுக்கு எல்லா நலன்களாகவும் விளங்கும் குண பூரணனாகிய நள்ளாற்றானை நான் அடியேன் நினைக்கப் பெற்று உய்ந்தவாறே.

பதினாறு ஆண்டுகள் வாழ்நாள் முன்னை வினை பற்றியே இடப்பட்டது.

அழல்வாய் – தீயாகிய வாயையுடைய அம்பு. திரிபுர எரித்த ஞான்று, தீக்கடவுளே அம்பின் முனையாக நின்றனன்.

**2295.** இறவாமே வரம்பெற்றே னென்று மிக்க
இராவணனை யிருபதுதோள் நெரிய வூன்றி
உறவாகி யின்னிசைகேட் டிரங்கி மீண்டே
யுற்றபிணி தவிர்த்தருள வல்லான் தன்னை
மறவாதார் மனத்தென்றும் மன்னி னானை
மாமதியம் மலர்க்கொன்றை வன்னி மத்தம்
நறவார்செஞ் சடையானை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 10

தான் சாகா வரம் பெற்றானாகச் செருக்கிய இராவணனை அவன் தோள்கள் இருபதும் நசுங்குமாறு திருவடி விரலை ஊன்றியவனாய்ப் பின் அவன் உறவாகி இசைத்த இன்னிசை கேட்டு இரங்கி அவன் துயரைத் துடைத்தவனாய்த் தன்னை மறவாத அடியவர் மனத்து என்றும் நிலைபெற்றிருப்பவனாய்க் கொன்றை, வன்னி, ஊமத்தம் பூ இவற்றின் தேன் நிறைந்த செஞ்சடையில் பிறையைச் சூடியவனாய் உள்ள நள்ளாற்றானை நான் அடியேன் நினைக்கப் பெற்று உய்ந்தவாறே.

நறவு – தேன்

## 21. திருஆக்கூர்

### தான் தோன்றி

தான் தோன்றி என்பது சிவபிரானுக்குக் காரணப்பெயர். ஒருவரால் தோற்றுவிக்கப்படாதவன். தானேதன் இச்சை வழி நினைத்த வடிவில் தோன்றுபவன் என்பது பொருள். இப்பெயர்க்கு ஏற்ப, இத்தலத்தில் இறைவன் தானே தோன்றிய இலிங்க வடிவாய் (சுயம்பு மூர்த்தியாய்) எழுந்தருளியிருத்தல் அறியத்தக்கது. தான் தோன்றி அருவுருவ வடிவத்தைச் சார்ந்ததாகும். தமிழ்நாட்டில் உள்ள சிவாலயங்களில் சுயம்புலிங்கங்கள் என்றால் உளிபடாதவை. மானுடர்களாகிய நம்மால் பிரதிட்டை செய்யப்படாதவை. தாமாகத் தோன்றியவை. சிவலிங்கம் தோன்றிய இடமே கருவறை. அதையொட்டி அர்த்த, மகாமண்டபங்கள், சுற்றுப்பிரகாரங்கள், விமானங்கள், கோபுரங்கள், திருமதில்கள் எழுப்பப்பட்டு சிவாலயம் உருவாகிறது. மற்ற சிவாலயங்களில் கருவறை அளவிற்காக இலிங்கம் வடிவமைக்கப்பட்டு தாபனம் செய்யப்படும். தான்தோன்றி சிவாலயத்தில் இலிங்கத்துக்காக கோயில் கட்டப்படும்.

தமிழ்நாட்டிலுள்ள சில தான்தோன்றிகள்

1. ஆக்கூர் தான்தோன்றி மாடம்.
2. திருந்துதேவன் குடி.
3. பந்தணைநல்லூர்.

ப.தொ.எண் : 234 பதிக எண் : 21

2296. முடித்தா மரையணிந்த மூர்த்தி போலும்
மூவுலகுந் தாமாகி நின்றார் போலும்
கடித்தா மரையேய்ந்த கண்ணார் போலும்
கல்லலகு பாணி பயின்றார் போலும்
**கொடித்தா மரைக்காடே நாடுந் தொண்டர்**
**குற்றேவல் தாம்மகிழ்ந்த குழகர் போலும்**
அடித்தா மரைமலர்மேல் வைத்தார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 1

முடியில் தாமரை மலரை அணிந்த மூர்த்தியாய் மூவுலகும் பரந்தவராய், தாமரைக் கண்ணராய், கல்லலகு என்ற வாத்தியத்தை ஒலிக்கப் பழகியவராய், தம்மை அருச்சிப்பதற்குத் தாமரைக் கூட்டத்தை நாடும் அடியவர்கள் செய்யும் குற்றேவலை மகிழ்ந்த இளையராய், தம் திருவடித் தாமரைகளை அடியவர்களின் உள்ளத்தாமரையில் வைத்தவராய், ஆக்கூரிலே (தாமாகவே இலிங்க வடிவில் எழுந்தருளியவர்) தான்தோன்றியப்பர் உள்ளார். அடியாகிய தாமரையை என் முடிமேல் வைத்தார். நாயனார் சரிதக் குறிப்பு.

கடி – நறுமணம். கல் அலகு – கற்கப்படும் மாத்திரை அளவு. பாணி – தாளம். அதைப் பயிலுதலாவது நடனம் புரிதல். காடு – மிகுதி.

## கொடித்தாமரைக் காடே நாடுந்தொண்டர்

அடியிலிருந்து இடைவரை இரண்டாகவும், அதன் மேல் உச்சி வரை அவை பின்னிக்கொண்ட வகையில் ஒன்றாகவும், மின்னற் கொடி போன்ற தத்துவமாகவும், அதனில் மூலாதாரம், இருதயம், கண்டம், நாவினடி, புருவத்தினிடை, பிரமரந்திரம் என்ற ஆறிடங்களில் கீழ் நோக்கிய தாமரை மொட்டுக்கள் இருப்பதாகவும் கண்டு அவற்றை உரிய பாவனை, கிரியை, யோக மந்திரங்களால் மேனோக்கியனவாக மலரச் செய்து, அவற்றில் இறைவனை வழிபடும் சிவாகமபூசை முறையைக் குறித்ததெனக் கொள்ளலாம். இதனை சுழுமுனாத் தியானம் என்றுங் கூறுவர்.

## குற்றேவல் தாம் மகிழ்ந்த

"அத்தொண்டர் செய்யும் குற்றேவலைத் தாம் மகிழ்ந்து ஏற்றுக்கொண்ட" எனவும், "அத்தொண்டர்க்குத் தாம் ஏவலராகக் குற்றேவல் செய்ததனை மகிழ்ந்த" எனவும் உரைக்க நின்றது. பொதிச் சோறு இரந்தளித்தல், தூது செல்லுதல், விறகு விற்றல், மண் சுமத்தல் முதலிய வரலாற்று நுட்பங்களை நினைத்துப் பார்க்கலாம்.

**2297.** ஓதிற் றொருநூலு மில்லை போலும்
உணரப் படாததொன் றில்லை போலும்
காதிற் குழையிலங்கப் பெய்தார் போலுங்
கவலைப் பிறப்பிடும்பை காப்பார் போலும்
வேதத்தோ டாறங்கஞ் சொன்னார் போலும்
விடஞ்சூழ்ந் திருண்ட மிடற்றார் போலும்
ஆதிக் களவாகி நின்றார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 2

பதிக மகுடம் – ஆக்கூரில் தான்றோன்றியப்பனாரே.

ஒரு நூலையும் ஆசிரியர்பால் கல்லாது எல்லா நூல்களையும் அறிந்தவராய் எல்லாச் செய்திகளையும் உணர்ந்தவராய்க் காதில் ஒளி வீசுமாறு குழையை அணிந்தவராய்க் கவலைக்கு இடமாகிய பிறவித்துன்பம் அடியவருக்கு வாராமல் தடுப்பவராய், வேதங்களும் ஆறு அங்கங்களும் ஓதியவராய், விடத்தால் சூழப்பட்டுக் கறுத்த கழுத்தினராய்த் தாமே எல்லாவற்றிற்கும் ஆதியாய்த் தமக்கு ஓர் ஆதியின்றி ஆக்கூரில் தான் தோன்றியப்பர் உகந்தருளியுள்ளார்.

---

**2298.** மையார் மலர்க்கண்ணாள் பாகர் போலும்
மணிநீல கண்ட முடையார் போலும்
நெய்யார் திரிசூலங் கையார் போலும்
நீறேறு தோளெட் டுடையார் போலும்
வையார் மழுவாட் படையார் போலும்
வளர்ஞாயி றன்ன வொளியார் போலும்
ஐவாய் அரவமொன் றார்த்தார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 3

வை – கூர்மை. வாள் – ஒளி.

மைபூசிய மலர்போன்ற கண்களை உடைய பார்வதி பாகராய், நீலகண்டராய், நெய்அணிந்த முத்தலைச் சூலக்கையராய், திருநீறுபூசிய எண் தோளராய், கூரிய மழுப்படையினராய், காலைச் சூரியன் போன்ற செந்நிற ஒளியினராய், ஐந்தலைப் பாம்பினை இடையில் இறுகக் கட்டியவராய்த் தான் தோன்றியப்பர் அடியவர் அகக்கண்களுக்குக் காட்சி வழங்குகின்றார்.

**2299.** வடிவிளங்கு வெண்மழுவாள் வல்லார் போலும்
வஞ்சக் கருங்கடல்நஞ் சுண்டார் போலும்
பொடிவிளங்கு முந்நூல்சேர் மார்பர் போலும்
பூங்கங்கை தோய்ந்த சடையார் போலும்
கடிவிளங்கு கொன்றையந் தாரார் போலும்
கட்டங்கம் ஏந்திய கையார் போலும்
அடிவிளங்கு செம்பொற் கழலார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 4

வடி – வடித்தல்; கூர்மையுமாம். வஞ்ச நஞ்சு. நஞ்சுக்கு உள்ள வஞ்சமாவது குளிர்ச்சியுடையதாய் இருந்து கொல்லுதல். 'சிங்கி குளிர்ந்துங்கொலும்' (நீதி நெறி விளக்கம் 58)

கூர்மை விளங்கும் வெள்ளிய மழுப்படையைக் கையாளுதலில் வல்லவராய்க் கடலில் தோன்றிய வஞ்சனை உடைய கரிய நஞ்சினை உண்டவராய்த் திருநீற்றோடு பூணூலை அணிந்த மார்பினராய், அழகிய கங்கை தோய்ந்த சடையினராய், மணம்நாறும் கொன்றை மாலையினராய்க் கட்டங்கம் என்ற படையை ஏந்திய கையராய்த் திருவடியில் பொற்கழல் அணிந்தவராய்த் தான்தோன்றி யப்பர் ஆக்கூரில் காட்சி வழங்குகிறார்.

**2300.** ஏகாச மாம்புலித்தோல் பாம்பு தாழ
இடுவெண் தலைகலனா ஏந்தி நாளும்
மேகாசங் கட்டழித்த வெள்ளி மாலை
புனலார் சடைமுடிமேற் புனைந்தார் போலும்
மாகாச மாயவெண் ணீருந் தீயும்
மதியும் மதிபிறந்த விண்ணும் மண்ணும்
ஆகாச மென்றிவையு மானார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 5

ஏகாசம் – மேலாடை. கலன் – அணிகலம்.
மேகஆசும் – மேகத்தினது நகைப்பு; மின்னல்.
ஆசம் – நகைப்பு. மின்னலை வென்ற சடை.
மாக ஆசம் – ஆகாயத்தின் நகைப்பு.
மாகம் – ஆகாயம். நீரினை ஆகாயத்தின் நகைப்பு என்றது மேலிருந்து மழையாய் ஒழுகுதலைக் குறித்தது.
மாகாசம் – மிக்க ஒளி.

புலித்தோலை இடையில் உடுத்துப் பாம்பு மேலாடையாக உடல் மேல் தொங்க மண்டை யோட்டினையே பிச்சை வாங்கும் பாத்திரமாக ஏந்தி மின்னலை வென்று ஒளிவீசும் கங்கை தங்கும் சடைமுடிமேல் வெண்பூமாலைகளைச் சூடி மிக்க ஒளியை உடைய வெள்ளிய நீரும் தீயும் சந்திரனும் சந்திரன் உலவும் விண்ணும் மண்ணுலகும் வானுலகும் ஆகிய எங்கும் பரந்திருப்பவராகிய தான் தோன்றியப்பர் ஆக்கூரில் காட்சி வழங்குகிறார்.

**2301.** மாதூரும் வாள்நெடுங்கண் செவ்வாய் மென்தோள்
மலைமகளை மார்பத் தணைத்தார் போலும்
மூதூர் முதுதிரைக ளானார் போலும்
முதலும் இறுதியு மில்லார் போலும்
தீதூர நல்வினையாய் நின்றார் போலுந்
திசையெட்டுந் தாமேயாஞ் செல்வர் போலும்
ஆதிரை நாளா வமர்ந்தார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. **6**

மாதுஊரும் – காதல் மிகுகின்ற
தீதூர – தீவினையை வெல்ல.

காதல் மிகுகின்ற ஒளியை உடைய நெடிய கண்கள், சிவந்த வாய், மெல்லிய தோள்கள் இவற்றை உடைய பார்வதியை மார்பில் அணைத்துப் பின் பாகமாகக் கொண்டு நிலமும் கடலுமாய், ஆதியந்தம் அற்றவராய்த் தீங்குகளை வெல்லும் நல்வினை வடிவினராய், எண்திசைகளும் தமக்கே உடைமையாக உடைய செல்வராய், ஆதிரை நட்சத்திரத்தை விரும்பிக் கொள்பவராய்த் தான் தோன்றியப்பர் ஆக்கூரில் காட்சி வழங்குகின்றார்.

---

**2302.** மால்யானை மத்தகத்தைக் கீண்டார் போலும்
மான்தோ லுடையா மகிழ்ந்தார் போலும்
கோலானைக் கோவழலாற் காய்ந்தார் போலும்
குழவிப் பிறைசடைமேல் வைத்தார் போலும்
காலனைக் காலாற் கடந்தார் போலுங்
கயிலாயந் தம்மிடமாக் கொண்டார் போலும்
ஆலானைந் தாடல் உகப்பார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. **7**

கோலான் – (தும்மீது எய்யக் கொண்ட) அம்பினை உடையவன்; மன்மதன். கோ – கண்.
கடந்தார் – வென்றார். ஆல் – நிறைந்த.

பெரிய யானையின் தலையைப் பிளந்தவராய் மான்தோலை உடையாக விரும்பி ஏற்று, அம்பினை உடைய மன்மதனைத் தம் கண் நெருப்பினால் கோபித்துச் சாம்பலாக்கி இளம்பிறையைச் சடைமேல் சூடிக் காலனைக் காலால் ஒறுத்துக் கயிலாயத்தைத் தம் இருப்பிடமாக ஏற்றுப் பஞ்சகவ்வியத்தால் அபிடேகம் செய்யப் படுவதனை உகந்த தான்தோன்றி அப்பர் ஆக்கூரில் காட்சி வழங்குகிறார்.

---

**2303.** கண்ணார்ந்த நெற்றி யுடையார் போலுங்
காமனையுங் கண்ணழலாற் காய்ந்தார் போலும்
உண்ணா அருநஞ்ச முண்டார் போலும்
ஊழித்தீ யன்ன வொளியார் போலும்
எண்ணா யிரங்கோடி பேரார் போலும்
ஏறேறிச் செல்லும் இறைவர் போலும்
அண்ணாவும் ஆரூரும் மேயார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. **8**

"எண்ணாயிரங் கோடி" என்றது – அளவின்மை கூறியவாறு.

நெற்றிக் கண்ணராய்க் காமனை அக்கண்ணின் தீயினால் எரித்தவராய்ப் பிறர் உண்ணாத கொடிய நஞ்சினை உண்டவராய், ஊழித் தீப்போன்ற ஒளியினை உடையவராய்ப் பல கோடிப் பேர்களுக்கு உரியவராய், காளையை இவர்ந்து செல்லும் தலைவராய், அண்ணாமலையையும், ஆரூரையும் உகந்தருளியிருப்பவராய்த் தான் தோன்றி அப்பர் ஆக்கூரில் காட்சி வழங்குகிறார்.

2304. கடியார் தளிர்கலந்த கொன்றை மாலை
கதிர்போது தாதணிந்த கண்ணி போலும்
நெடியான் சதுர்முகனு நேட நின்ற
நீலநற் கண்டத் திறையார் போலும்
படியேல் அழல்வண்ணஞ் செம்பொன் மேனி
மணிவண்ணந் தம்வண்ண மாவார் போலும்
அடியார் புகலிடம தானார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 9

கடிஆர் – புதுமை நிறைந்த.
கதிர்போது – ஒளி வீசுகின்ற விடுபூ.
தாது அணிந்த – மகரந்தத்தைக் கொண்டுள்ள.
படி – உருவம், மேனி.

புதுமை நிறைந்த தளிர்கள் கலந்த கொன்றைப் பூ மாலை, விடு பூக்கள் மகரந்தம் நிரம்பிய முடிமாலை இவற்றைச் சூடியவராய்த் திருமாலும் பிரமனும் தேடுமாறு ஒளிப்பிழம்பாய் நின்ற நீலகண்ட இறைவராய்த் தீவண்ணமும் பொன் வண்ணமும் தம் கூற்றிலும் நீல மணிவண்ணம் தேவியின் கூற்றிலும் அமைந்த திருமேனியராய் அடியவர்களுக்கு அடைக்கலம் தரும் இடமாக உள்ள தான்தோன்றியப்பர் ஆக்கூரில் காட்சி வழங்குகிறார்.

2305. திரையானுஞ் செந்தா மரைமே லானுந்
தேர்ந்தவர்கள் தாந்தேடிக் காணார் நாணும்
புரையா னெனப்படுவார் தாமே போலும்
போரேறு தாமேறிச் செல்வார் போலும்
கரையா வரைவில்லே நாகம் நாணாக்
காலத் தீயன்ன கனலார் போலும்
வரையார் மதிலெய்த வண்ணர் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 10

திரையான் – நீரிடைக் கிடப்பான்; திருமால்.
புரையான் – உயர்ந்தோன். கரையா – நெகிழாத.
கனல் – சினம் (கனல் போல்வது).
வரையார் – கொள்ளார் – பகைவர்.

பாற்கடற்பரமனும், செந்தாமரைமேல் உறையும் பிரமனும் ஆராய்ந்து தேடியும் காண முடியாது நாணுமாறு செய்த மேம்பட்டவராய், போரிடும் காளையை இவர்ந்து செல்பவராய், நெகிழ்ச்சியில்லாத மலையையே வில்லாகவும் பாம்பையே நாணாகவும் கொண்டு ஊழித்தீயை ஒத்த கோலத்தை உடையவராய்ப் பகைவர்களின் மும்மதில்களையும் அழித்த செயலுடைய தான் தோன்றியப்பர் ஆக்கூரில் காட்சி வழங்குகிறார்.

## 22. திருநாகைக்காரோணம்

ப.தொ.எண் : 235 | பதிக எண் : 22

2306. பாரார் பரவும் பழனத் தானைப்
பருப்பதத் தானைப் பைஞ்ஞீலி யானைச்
சீரார் செழும்பவளக் குன்றொப் பானைத்
திகழுந் திருமுடிமேல் திங்கள் சூடிப்
பேரா யிரமுடைய பெம்மான் தன்னைப்
பிறர்தன்னைக் காட்சிக் கரியான் தன்னைக்
காரார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே.

1

கார் ஆர் – கருமை நிறைந்த. கார் – மேகம்
நாகை – ஊர். காரோணம் – கோயில்.

உலகத்தார் போற்றும் திருப்பழனம், சீசைலம் பைஞ்ஞீலி என்ற திருத்தலங்களை உடைய பெருமான் சிறப்புடைய செழிப்பான பவளக்குன்றம் போல்பவனாய்த் திருமுடிமேல் பிறையைச் சூடியவனாய், எண்ணிறந்த பெயர்களை உடையவனாய்ப் பிறர் தம் முயற்சியால் தன்னைக் காண முடியாதவனாய்க் கரிய கடலால் ஒருபுறம் சூழப்பட்ட அழகிய குளிர்ந்த நாகைக் காரோணத்தில் என்றும் தரிசிக்கும் வகையில் உள்ளான்.

2307. விண்ணோர் பெருமானை வீரட் டனை
வெண்ணீறு மெய்க்கணிந்த மேனி யானைப்
பெண்ணானை ஆணானைப் பேடி யானைப்
பெரும்பற்றத் தண்புலியூர் பேணி னானை
அண்ணா மலையானை ஆனைந் தாடும்
அணியாரூர் வீற்றிருந்த அம்மான் தன்னைக்
கண்ணார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே.

2

மேனி – நிறம். கண் ஆர் – இடம் மிகுந்த; கண்ணுக்கு நிறைந்த.

விண்ணோர் பெருமானாய் வீரட்டனாய், வெண்ணீறு அணிந்த மேனியனாய்ப் பெண் ஆண் அலியாய் உள்ளானாய்ப் பெரும்பற்றப் புலியூர், அண்ணாமலை, அழகிய ஆரூர் என்ற திருத்தலங்களில் வீற்றிருக்கும் பெருமானாய்ப் பஞ்சகவ்விய அபிடேகத்தை விரும்பி அழகிய ஆரூரில் வீற்றிருந்த பெருமானை இடம் அகன்ற கடல் ஒரு பக்கம் சூழ்ந்த அந்தண் நாகைக் காரோணத்தில் என்றும் காணலாம்.

2308. சிறையார் வரிவண்டு தேனே பாடுந்
திருமறைக் காட்டெந்தை சிவலோகனை
மறையான்ற வாய்மூருங் கீழ்வே ளூரும்
வலிவலமும் தேவூரும் மன்னி யங்கே
உறைவானை உத்தமனை ஒற்றி யூரிற்
பற்றியாள் கின்ற பரமன் தன்னைக்
கறையார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே.

3

பதிக மகுடம் – நாகை காரோணத்தெஞ்ஞான்றுங் காணலாமே. தேன் – வண்டின் சாதி

சிறகுகளையும் புள்ளிகளையும் உடைய வண்டுகள் இனிமையாகப் பாடும் திருமறைக்காடு, வேதம் முழங்கும் திருவாய்மூர், கீழ்வேளூர், வலிவலம், தேவூர் இவற்றில் உகந்தருளி இருக்கும் உத்தமனாய், எந்தையாகிய சிவலோகனாய், ஒற்றியூரை உறைவிடமாகக் கொண்டு உலகை ஆள்கின்ற மேம்பட்ட பெருமானைக் கருமை நிறைந்த கடல்புடை சூழ் அந்தண் நாகைக் காரோணத்து என்றும் காணலாம்.

2309. அன்னமாம் பொய்கைசூழ் அம்ப ரானை
ஆச்சிரா மந்நகரும் ஆனைக் காவும்
முன்னமே கோயிலாக் கொண்டான் தன்னை
மூவுலகுந் தானாய மூர்த்தி தன்னைச்
சின்னமாம் பன்மலர்கள் அன்றே சூடிச்
செஞ்சடைமேல் வெண்மதியஞ் சேர்த்தி னானைக்
கன்னியம் புன்னைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 4

சின்னம் – தனக்கென்று உள்ள அடையாளம் கொன்றை, எருக்கு, ஊமத்தை
கன்னி – அழியாமை

அன்னங்கள் மிகுகின்ற பொய்கைகள் சூழ்ந்த அம்பர், பாச்சிலாச்சிராமம், ஆனைக்கா என்பனவற்றை முன்னரே கோயிலாகக் கொண்டவனாய், மூவுலகும் தான் பரந்திருக்கும் வடிவினனாய்ச் செஞ்சடைமேல் தனக்குரிய அடையாளப் பூச்சுக்களையும் பிறையையும் சூடிய பெருமானை இளையனவாதலின் நெடுநாள் நிலைத்திருக்கக்கூடிய புன்னை மரங்கள் சூழ்ந்த அந்தண் நாகைக் காரோணத்து என்றும் காணலாம்.

2310. நடையுடைய நல்லெருதொன் றூர்வான் தன்னை
ஞானப் பெருங்கடலை நல்லூர் மேய
படையுடைய மழுவாளொன் றேந்தி னானைப்
பன்மையே பேசும் படிறன் தன்னை
மடையிடையே வாளை யுகளும் பொய்கை
மருகல்வாய்ச் சோதி மணிகண் டனைக்
கடையுடைய நெடுமாட மோங்கு நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 5

படிறன் – பொய்யன். (பழித்தலைப் போலப் புகழ்தல்)
பன்மையே பேசுவது – தனது நிலையைப் பலவாறாகச் சொல்வது (உருவம், அருவம் என்பது போல)

நல்ல நடையினை உடைய காளையை இவர்ந்து செல்பவனாய், ஞானப் பெருங்கடலாய், நல்லூரை விரும்பியவனாய், மழுப்படையை ஏந்தியவனாய்த் தன் நிலையைப் பலவாகப் பேசும் பொய்யனாய், மடைகளிடையே வாளை மீன்கள் தாவும் பொய்கைகளை உடைய மருகலின் ஒளிவீசும் நீல கண்டனாய் உள்ள பெருமானை நல்ல முகப்புகளை உடைய பெரிய மாடங்கள் ஓங்கும் நாகைக் காரோணத்து என்றும் காணலாம்.

2311. புலங்கள்பூந் தேறல்வாய் புகலிக் கோனைப்
பூம்புகார்க் கற்பகத்தைப் புன்கூர் மேய
அலங்கலங் கழனிசூ ழணிநீர்க் கங்கை
யவிர்சடைமேல் ஆதரித்த அம்மான் தன்னை
இலங்கு தலைமாலை பாம்பு கொண்டே
ஏகாச மிட்டியங்கு மீசன் தன்னைக்
கலங்கற் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 6

புலம் – வயல். தேறல் – தேன். வாய் – வாய்ந்த
அலங்கல் – அசைதல்

வயல்களிலே பூக்களில் தேன் பொருந்தியுள்ள புகலித் தலைவனாய், பூம்புகாரில் உள்ள கற்பகமாய், அசைகின்ற கதிர்களை உடைய வயல்கள் சூழ்ந்த புன்கூரில் அழகிய நீரை உடைய கங்கையைச் சடைமேல் கொண்ட தலைவனாய், தலைமாலையைச் சூடிப் பாம்பினை மேலாடையாகத் தரித்து விளங்குகின்ற ஈசனைக் கடலிலே மரக்கலங்கள் சூழ்ந்து காணப்படும் அந்தண் நாகைக் காரோணத்து என்றும் காணலாம்.

2312. பொன்மணியம் பூங்கொன்றை மாலை யானைப்
புண்ணியனை வெண்ணீறு பூசி னானைச்
சின்மணிய மூவிலைய சூலத் தானைத்
தென்சிராப் பள்ளிச் சிவலோகனை
மன்மணியை வான்சுடலை யூராப் பேணி
வல்லெருதொன் றேறும் மறைவல் லானைக்
கன்மணிகள் வெண்டிரைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே.

7

சில்மணிய – சில மணிகள் கட்டிய
மன்மணி – நிலைபெற்ற இரத்தினம்
கல்மணி – கற்கள் என்னும் பெயரவாகிய மணிகள்

பொன்போன்று அழகிய கொன்றை மாலை சூடும் புண்ணியனாய், வெண்ணீறு பூசியவனாய்ச் சிலமணிகள் கட்டப்பட்ட முத்தலைச் சூலத்தை ஏந்தியவனாய், அழகிய சிராப்பள்ளி மேய சிவலோகனாய்த் தலையாய மணிபோல்பவனாய்ப் பெரிய சுடுகாட்டைத் தங்கும் இடமாக விரும்பிக் கொண்டு வலிய காளையை இவரும், வேதங்களில் வல்ல பெருமானை இரத்தினக் கற்களைக் கரைசேர்க்கும் வெள்ளிய அலைகள் சூழ்ந்த அந்தண் நாகைக் காரோணத்து என்றும் காணலாம்.

2313. வெண்டலையும் வெண்மழுவும் ஏந்தி னானை
விரிகோ வணமசைத்த வெண்ணீற் றானைப்
புண்தலைய மால்யானை யுரிபோர்த் தானைப்
புண்ணியனை வெண்ணீ றணிந்தான் தன்னை
எண்டிசையும் எரியாட வல்லான் தன்னை
யேகம்பம் மேயானை யெம்மான் தன்னைக்
கண்டலங் கழனிசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே.

8

வெண் மழு – கூரிய மழு. அசைத்த – கட்டிய
கண்டல் – தாழை. தாழம்புதர் உள்ள இடங்கள் – கழனி

கோவணம் உடுத்து வெண்ணீறு பூசிப் புண்ணைத் தலையிலுடைய பெரிய யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்து வெண்தலை ஓட்டையும் வெள்ளிய மழுவையும் ஏந்திய புண்ணியனாய், வெண்ணீறணிந்து எட்டுத் திசைகளிலும் தீயில் கூத்தாடுபவனாய், ஏகம்பத்தில் விரும்பித் தங்கும் எம்பெருமானைத் தாழைப்புதர்கள் சூழ்ந்த அந்தண் நாகைக் காரோணத்து என்றும் காணலாம். புண் தலைய – யானைக்குப் புண் தலையில் ஆதல் அங்குசத்தால் குத்தப்படுவதால் ஏற்படுகிறது.

2314. சொல்லார்ந்த சோற்றுத் துறையான் தன்னைத்
**தொல்நரகம் நன்னெறியால் தூர்ப்பான்** தன்னை
வில்லானை மீயச்சூர் மேவி னானை
வேதியர்கள் நால்வர்க்கும் வேதஞ் சொல்லிப்
பொல்லாதார் தம்அரணம் மூன்றும் பொன்றப்
பொறியரவம் மார்பாரப் பூண்டான் தன்னைக்
கல்லாலின் கீழானைக் கழிசூழ் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே.
9

வேதங்கள் முழங்கும் சோற்றுத்துறை, மீயச்சூர் என்ற இவற்றை மேவியவனாய்ப் **பலரையும் நல்ல நெறியில் ஒழுகச் செய்து நரகலோகத்தைப் பாழ்படச் செய்பவனாய்,** ஒளியுடையவனாய், வேதியர் நால்வருக்கும் வேத நெறியை அறிவித்தவனாய்த் தீய அசுரரின் மும்மதில்களையும் அழித்தவனாய்ப் புள்ளியை உடைய பாம்பினை மாா்பில் பொருந்த அணிந்த பெருமானாய்க் கல்லாலின் கீழ் அமர்ந்த பிரானை உப்பங்கழிகள் சூழ்ந்த நாகைக் காரோணத்து என்றும் காணலாம். ஆர – நிரம்ப.

சொல் – புகழ். இறைவனது குறிக்கோள் – பலரையும் நல்ல நெறியில் ஒழுகச்செய்து நரகலோகத்தைப் பாழ்படச் செய்தல். பொன்ற – அழிய.

2315. மனைதுறந்த வல்லமணர் தங்கள் பொய்யும்
மாண்புரைக்கும் மனக்குண்டர் தங்கள் பொய்யும்
சினைபொதிந்த சீவரத்தர் தங்கள் பொய்யும்
மெய்யென்று கருதாதே போத நெஞ்சே
பனையுரியைத் தன்னுடலிற் போர்த்த எந்தை
அவன்பற்றே பற்றாகக் காணின் அல்லால்
கனைகடலின் தெண்கழிசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே.
10

நெஞ்சே! துறவு நிலையில் உள்ள சமணா்களின் பொய்யுரைகளையும் தம் பெருமையை எடுத்துரைக்கும் சமண சமய இல்லறத்திலுள்ள அறிவிலிகள் பேசும் பொய்யுரைகளையும் உடம்பிலே துவராடையை அணிந்த புத்தர்களின் பொய்யுரைகளையும் மனத்துக் கொள்ளாமல், யானைத்தோல் போர்த்த எம்பெருமானைப் பற்றும் பற்றினையே உண்மையான விருப்பச் செயலாகக் கொண்டு காண்பதனை விடுத்துக் கடலின் கழி சூழ் நாகைக் காரோணத்து எம் பெருமானைக் காண இயலுமா? அப்பெருமான் தன்னையே பற்றும் பற்றினை அடியவர்களுக்கு அருள் செய்து அகக்கண்களுக்குக் காட்சி வழங்குவான் என்பது.

சினை – உடம்பு. சீவரத்தர் – துவர் தோய்த்த ஆடையர். புத்தத் துறவிகள். ஐயப்பாடான பாடல். மற்ற பாடல்களில் வெவ்வேறு பல தலங்களைக் கூறுகிறார். இப்பாடலில் அவ்வாறில்லை.

2316. நெடியானும் மலரவனும் நேடி யாங்கே
நேருருவங் காணாமே சென்று நின்ற
படியானைப் பாம்புரமே காத லானைப்
பாம்பரையோ டார்த்த படிறன் தன்னைச்
செடிநாறும் வெண்தலையிற் பிச்சைக் கென்று
சென்றானை நின்றியூர் மேயான் தன்னைக்
கடிநாறு பூஞ்சோலை யந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே.

11

திருமாலும் பிரமனும் தேடியும் காண முடியாதபடி நீண்டு வளர்ந்த உருவமுடையவனாய், பாம்புரத்தை விரும்பியவனாய், பாம்பினை இடையில் கட்டிய வஞ்சகனாய், முடை நாற்றம் வீசிய தலையோட்டில் பிச்சைக்கு என்று திரிந்தவனாய், நின்றியூரை விரும்பித் தங்கிய பெருமானை மணங்கமழும் பூக்களை உடைய சோலைகளால் அழகும் குளிர்ச்சியும் பொருந்திய நாகைக் காரோணத்து என்றும் காணலாம்.

செடி – முடை நாற்றம்
கடிநாறு – மணம் வீசுகின்ற

## 23. திருமறைக்காடு

இப்பதிகம் "கண்டாய்" என்னும் முடிபுடைய தொடர்களால் இறைவனது அருட்டன்மைகளை வகுத்தருளிச் செய்தது.

ப.தொ.எண் : 236 பதிக எண் : 23

2317. தூண்டு சுடரனைய சோதி கண்டாய்
தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய்
காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க் காற்ற எளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லாம்
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.

1

மறைக்காட்டில் உகந்தருளியிருக்கும் மணாளனாகிய சிவபெருமான் தூண்டப்பட்ட விளக்கொளி போன்ற மிக்க ஒளியினனாய்ப் பழைய தேவர்களுக்கு முடிமணியாய்த் தன்னை நினையாதார் காண்பதற்கு அரிய கடவுளாய்த் தன்னைத் தியானிப்பவருக்கு மிக எளியனாய் வேண்டுவார் வேண்டுவதை ஈவானாய்ப் பேறாகிய தன்னை அடைவதற்குத் தானே ஆறாய் (வழியாய்) விரதங்களால் மாட்சிமைப்பட்ட மனமுடைய சான்றோர்களின் மனத்தானாக உள்ளான்.

சூளாமணி – தலையில் அணியும் பெருவிலையையுடைய அரிய மணி. மாண்ட – மாட்சிமைப்பட்ட. மணாளன் – அழகன்.

வினைகளின் பயன்
உயிர்களின் வழியே வந்தால் அது ஆதி யான்மிகம்
தெய்வங்களின் வழியே வந்தால் அது ஆதி தைவிகம்
சடங்களாகிய பௌதிகங்களின் வழியே வந்தால் அது ஆதி பௌதிகம்

**2318.** கைகிளரும் வீணை வலவன் கண்டாய்
காபாலி கண்டாய் திகழுஞ் சோதி
மெய்கிளரும் ஞான விளக்குக் கண்டாய்
மெய்யடியார் உள்ளத்து வித்துக் கண்டாய்
பைகிளரும் நாக மசைத்தான் கண்டாய்
பராபரன் கண்டாய்பா சூரான் கண்டாய்
வைகிளரும் கூர்வாட் படையான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.

2

கைகளால் ஒலிக்கப்படும் வீணையை வாசிப்பதில் வல்லவனாய்க் காபாலக்கூத்து ஆடுபவனாய் ஒளி விளங்கும் ஞான விளக்குப் போன்ற வடிவினனாய் மெய் அடியார் உள்ளத்தில் வெளிப்பட்டுத் தோன்றும் வித்தாய்ப் படம் எடுக்கும் நாகத்தை அணிந்தவனாய் மேலாளரையும் கீழ்ப்படுத்த மேலானாய்ப் பாசூரை உகந்தருளி யிருப்பவனாய்க் கூர்மை மிக்க வாட்படையை உடையவனாய் மறைக்காட்டுள் உறையும் மணாளன் உள்ளான்.

பை – படம். வை – கூர்மை

---

**2319.** சிலந்திக் கருள் முன்னஞ் செய்தான் கண்டாய்
திரிபுரங்கள் தீவாய்ப் படுத்தான் கண்டாய்
நிலந்துக்க நீர்வளிதீ யானான் கண்டாய்
நிரூபியாய் ரூபியுமாய் நின்றான் கண்டாய்
சலந்துக்க சென்னிச் சடையான் கண்டாய்
தாமரையான் செங்கண்மால் தானே
கண்டாய்
மலந்துக்க மால்விடையொன் றூர்ந்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.

3

மறைக்காட்டுள் உறையும் மணாளன் முன்னொரு கால் சிலந்திக்கு அருள் செய்தவனாய், திரிபுரங்களைத் தீ மடுத்தவனாய், நிலம் அதனைச் சூழ்ந்த நீர், தீ, காற்று என்ற பூதங்களில் எங்கும் பரவி இருப்பவனாய், உருவமும் உருவம் அற்ற நிலையும் உடையவனாய்க் கங்கை தங்கிய சடையினனாய்ப் பிரமனும் திருமாலும் தானேயாய்க் களங்கம் நீங்கிய பெரிய விடை ஒன்றினை இவர்பவனாய் அடியார்கள் மனக் கண்ணிற்குக் காட்சி வழங்குகின்றான்.

பதிக மகுடம் – மறைக்காட்டுறையும் மணாளன் தானே

**2320.** கள்ளி முதுகாட்டி லாடி கண்டாய்
காலனையுங் காலாற் கடந்தான் கண்டாய்
புள்ளி யுழைமானின் தோலான் கண்டாய்
புலியுரிசே ராடைப் புனிதன் கண்டாய்
வெள்ளிமிளிர் பிறைமுடிமேற் சூடி கண்டாய்
வெண்ணீற்றான் கண்டாய்**நஞ்**
**செந்தின்மேய**
**வள்ளி மணாளற்குத்** தாதை கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.
4

மறைக்காட்டுள் உறையும் மணாளன் கள்ளிகள் படர்ந்த சுடுகாட்டில் கூத்து நிகழ்த்துபவனாய்க் காலனைக் காலால் ஒறுத்தவனாய்ப் புள்ளியை உடைய மான்தோலை உடுத்தவனாய்ப் புலித்தோலையும் ஆடையாகக் கொண்ட புனிதனாய், வெள்ளி போல ஒளி வீசும் பிறையை முடிமேல் சூடியவனாய், வெண்ணீறு அணிந்தவனாய்த் திருச்செந்தூரை விரும்பும் முருகனுக்குத் தந்தையாய் உள்ளான்.

கள்ளி – கள்ளிச்செடி. முதுகாடு – சுடுகாடு
உழை – ஒருவகை மான்.
நம் முருகன் – சிவபெருமானுக்கு அடியராயினர்க்கெல்லாம் இளம்பெருமான் அடிகளாய் நிற்றல் கருதி நாம் எப்போதும் அவரையும் வணங்க வேண்டும். எனவே தான் அப்பரடிகள் அவர் நம்மவர் என்றார். தேவாரத்தில் முருகப் பெருமான் வழிபாடு வரும் இடங்களில் இதுவும் ஒன்று.

---

**2321.** மூரி முழங்கொலிநீ ரானான் கண்டாய்
முழுத்தழல்போல் மேனி முதல்வன் கண்டாய்
ஏரி நிறைந்தனைய செல்வன் கண்டாய்
இன்னடியார்க் கின்பம் விளைப்பான்
கண்டாய்
ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்
அண்ணா மலையுறையெம் அண்ணல்
கண்டாய்
வாரி மதகளிறே போல்வான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.
5

மறைக்காட்டுள் உறையும் மணாளன் மிகவும் முழங்குகின்ற ஒலியை உடைய நீரின் வடிவினனாய், தழல் போன்ற சிவந்த மேனியை உடைய முதல்வனாய், ஏரி நீர் நிறைந்ததனை ஒத்த செல்வனாய்ச் சிறந்த அடியவர்களுக்கு இன்பம் விளைவிப்பவனாய், ஆரியனாய்த் தமிழனாய், அண்ணாமலையில் உகந்தருளியிருக்கும் தலைவனாய், வெள்ளம் போல மதத்தைப் பெருக்குகின்ற மதயானை போல்வானாய் உள்ளான்.

முழுத்தழல் – நிரம்ப எரிகின்ற நெருப்பு
மதகளிறு – வலிமையைக் குறித்தது

**2322.** ஆடல்மால் யானை யுரித்தான் கண்டாய்
அகத்தியான் பள்ளி யமர்ந்தான் கண்டாய்
கோடியான் கண்டாய் குழகன் கண்டாய்
குளிராரூர் கோயிலாக் கொண்டான் கண்டாய்
நாடிய நன்பொருள்க ளானான் கண்டாய்
நன்மையோ டிம்மைமற் றம்மை யெல்லாம்
வாடிய வாட்டந் தவிர்ப்பான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.

6

ஆடல் – வெற்றி. நாடிய – விரும்பிய
நன்மை – திருவருள். இம்மை – இப்பிறப்பு
அம்மை – வருபிறப்பு

மறைக்காட்டுள் உறைகின்ற மணாளன் வெற்றி பொருந்திய பெரிய யானையைக் கொன்று அதன் தோலை விரித்துப் போர்த்தவனாய், கோடி என்ற தலத்தில் உறையும் இளையவனாய், அகத்தியான்பள்ளியையும், ஆரூரையும் கோயிலாகக் கொண்டவனாய், அடியவர்கள் விரும்பிய சிறந்த பொருள்கள் ஆவானாய், இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் நன்மைகள் ஈந்து வாடிய துயரங்களைத் தவிர்ப்பானாய் உள்ளான். கோடி – தலம்.

குழகன் – சுவாமி பெயர்.

**2323.** வேலைசேர் நஞ்சம் மிடற்றான் கண்டாய்
விண்தடவு பூங்கயிலை வெற்பன் கண்டாய்
ஆலைசேர் வேள்வி யழித்தான் கண்டாய்
அமரர்கள் தாமேத்தும் அண்ணல் கண்டாய்
பால்நெய்சேர் ஆனஞ்சும் ஆடி கண்டாய்
பருப்பதத்தான் கண்டாய் பரவை மேனி
மாலையோர் கூறுடைய மைந்தன் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.

7

ஆல் ஐசேர்வேள்வி – மிக்க அழகு பொருந்திய வேள்வி
பரவைமேனிமேல் – கடல்நிறம் போன்ற நிறத்தினை உடைய திருமால்.

மறைக்காட்டுள் உறையும் மணாளன் கடலில் தோன்றிய நஞ்சினைத் தன் கழுத்தளவில் அடக்கியவன். வானளாவிய பொலிவுடைய கயிலை மலைக்கு உரியவன். மிக்க அழகு பொருந்திய தக்கனுடைய வேள்வியை அழித்தவன். தேவர்கள் போற்றும் தலைவன். பால் நெய் முதலிய பஞ்ச கவ்விய அபிடேகம் உகந்தவன். சீசைலத்தில் உறைபவன். அவனே கடல் நிற வண்ணனாகிய திருமாலை ஒரு கூறாகத் தன் மேனியில் கொண்ட ஆற்றலுடையவன்.

2324. அம்மை பயக்கும் அமிர்து கண்டாய்
அந்தேன் தெளிகண்டாய் ஆக்கஞ் செய்திட்
டிம்மை பயக்கும் இறைவன் கண்டாய்
என்னெஞ்சே யுன்னில் இனியான் கண்டாய்
மெய்ம்மையே ஞான விளக்குக் கண்டாய்
வெண்காடன் கண்டாய் வினைகள் போக
**மம்ம ரறுக்கும் மருந்து** கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.
8

மறைக்காட்டுள் உறைகின்ற மணாளன் அடியார்களுக்கு மறுமையைப் பயக்கும் அமுதமாய்ச் செல்வத்தைக் கொடுத்து இம்மையில் நலன்பயக்கும் தெளிந்த தேனாய், நம் மனத்தைவிட நமக்கு இனியவனாய், உண்மையான ஞானப்பிரகாசம் நல்கும் விளக்காய், திருவெண்காட்டில் உறைபவனாய், நம் தீவினைகள் நீங்குமாறு நம் மயக்கத்தைப் போக்கும் மருந்தாகவும் உள்ளான்.

உன்னில் – நினைத்தால். மம்மர் – மயக்கம். பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்வது

2325. மூலநோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்
முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்
ஆலின்கீழ் நால்வர்க் கறத்தான் கண்டாய்
ஆதியு மந்தமு மானான் கண்டாய்
**பால விருத்தனு மானான்** கண்டாய்
பவளத் தடவரையே போல்வான் கண்டாய்
மாலைசேர் கொன்றை மலிந்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.
9

எல்லா நோய்களுக்கும் அடிப்படைக் காரணமான ஆணவ மலத்தைச் செயலறச் செய்யும் தலைவனாய், முத்தமிழும் நான்மறையும் ஆகியவனாய், கல்லால மர நிழலில் அமர்ந்து சனகர் முதலிய முனிவர் நால்வருக்கு அறத்தை மௌனநிலையில் உபதேசித்தவனாய், ஏனைய எல்லாப் பொருள்களுக்கும் ஆதியும் அந்தமுமாக உள்ளவனாய்ப் பாலனும் விருத்தனுமாக வடிவு எடுத்தவனாய்ப் பெரிய பவள மலைபோன்ற உருவினனாய், கொன்றைப் பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்தவனாய், மறைக்காட்டு உறைகின்ற மணாளன் காட்சி வழங்குகின்றான்.

நோய் மூலம் – மூல நோய். 64 திருவிளையாடல்களில் ஒன்றான விருத்தகுமார பாலரான திருவிளையாடல் நினைக்கத்தக்கது.

2326. அயனவனும் மாலவனும் அறியா வண்ணம்
ஆரழலாய் நீண்டுகந்த அண்ணல் கண்டாய்
துயரிலங்கை வேந்தன் துளங்க அன்று
சோதிவிர லாலுற வைத்தான் கண்டாய்
பெயரவர்க்குப் பேரருள்கள் செய்தான் கண்டாய்
பேரும் பெரும்படையோ டீந்தான் கண்டாய்
மயருறு வல்வினைநோய் தீர்ப்பான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 10

துளங்க – நடுங்க. இராவணன் – அழுதவன். இப்பெயர் அவன் திருக்கயிலையின்கீழ்க் கிடந்து அழுதமையை என்றும் மறவாதிருத்தற் பொருட்டுக் கொடுக்கப்பட்டது. அவன் பழைய பெயர் தசக்கிரீவன். மயர் உறு – மயக்கத்தால் வருகின்ற.

மறைக்காட்டுள் உறைகின்ற மணாளன் பிரமனும் அறியாத வகையில் தீத்தம்பமாய் நீண்டு உயர்ந்த தலைவன். இராவணன் துயரால் நடுங்குமாறு ஒளி வீசும் விரலால் அழுத்தியவன். தசக்கிரீவன் என்ற பழைய பெயரை உடைய அவனுக்கு இராவணன் என்ற பெயரையும் வழங்கிப் பல அருள்களையும் செய்தவன். அவனுக்கு மேம்பட்ட வாட்படையையும் ஈந்தவன். அடியார்களுக்கு மயக்கத்தைத் தரும் ஊழ்வினையால் ஏற்படும் துயரங்களைத் தீர்ப்பவன்.

## 24. திருவாரூர்

இத்திருப்பதிகம் "காண்" என்னும் முடிபுகளையுடைய தொடர்களால் இறைவனது தன்மைகளை உணர்த்துவது. இது முதல் 11 திருப்பதிகங்கள் திருவாரூரைப் பற்றியவை. இவ்வாறு ஒரே தலத்துக்குத் தொடர்ச்சியாக எந்தத் திருமுறையிலும், 11 பதிகங்கள் வைக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இப்பதிகங்களில் திருவாரூர் சிவபெருமானது முதலிடமாக இனிது எடுத்து விளக்கியருளும் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

**ப.தொ.எண் : 237** **பதிக எண் : 24**

2327. கைம்மான மதகளிற்றி னுரிவை யான்காண்
கறைக்கண்டன் காண்கண்ணார் நெற்றி யான்காண்
அம்மான்காண் ஆடரவொன் றாட்டி னான்காண்
அனலாடி காண்அயில்வாய்ச் சூலத் தான்காண்
எம்மான்காண் ஏழுலகு மாயி னான்காண்
எரிசுடரோன் காண்இலங்கு மழுவா ளன்காண்
செம்மானத் தொளியன்ன மேனியான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 1

அம்மான் – அனைவருக்கும் தலைவன்
எம்மான் – எம் தலைவன். அயில் – கூர்மை

துதிக்கையையும், பெருமையையும், மதத்தையும் உடைய யானைத் தோலைப் போர்த்தியவனாய், நீலகண்டனாய், கண் பொருந்திய நெற்றியை உடையவனாய், எல்லாருக்கும் தலைவனாய்ப் படம் எடுத்து ஆடும் பாம்பு ஒன்றினை ஆட்டியவனாய்த் தீயில் கூத்து நிகழ்த்துபவனாய்க் கூரிய சூலத்தை ஏந்தியவனாய், எங்களுக்குத் தலைவனாய், ஏழுலகும் பரந்தவனாய், எரிகின்ற விளக்குப் போல்பவனாய், விளங்கும் மழுப்படையை ஏந்தியவனாய்ச் செந்நிற வானம் போன்ற மேனியனாய்த் திருவாரூரில் உறைபவனாய், என் மனக் கண்ணிற்குச் சிவபெருமான் காட்சி வழங்குகின்றான்.

**2328.** ஊனேறு படுதலையி லுண்டி யான்காண்
ஓங்காரன் காண்ஊழி முதலா னான்காண்
ஆனேறொன் றூர்ந்துழலும் ஐயா றன்காண்
அண்டன்கண் அண்டத்துக் கப்பா லான்காண்
மானேறு கரதலத்தெம் மணிகண் டன்காண்
மாதவன்காண் மாதவத்தின் விளைவா னான்காண்
தேனேறும் மலர்க்கொன்றைக் கண்ணி யான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 2

ஊழி – படைப்புத் தொடங்கி அழிப்புக் காறும் உள்ள கால அளவு

புலால் மணம் தங்கிய மண்டையோட்டில் உணவைப் பெற்று உண்பவனாய், ஓங்கார வடிவினனாய், ஊழிகளுக்குத் தலைவனாய்க் காளையை இவர்பவனாய், திருவையாற்றில் உறைபவனாய், எல்லா உலகங்களும் பரவினவனாய், அண்டங்களுக்கு அப்பாலும் பரவியவனாய், கையில் மானை ஏந்திய நீலகண்டனாய்ப் பெருந்தவத்தினனாய்த் திருவாரூர்ப் பெருமான் என் மனக் கண்ணிற்குக் காட்சி வழங்குகின்றான்.

**2329.** ஏவணத்த சிலையால்முப் புரமெய் தான்காண்
இறையவன்காண் மறையவன்காண் ஈசன்தான்காண்
தூவணத்த சுடர்ச்சூலப் படையி னான்காண்
சுடர்மூன்றுங் கண்மூன்றாக் கொண்டான் தான்காண்
ஆவணத்தால் என்றன்னை ஆட்கொண் டான்காண்
அனலாடிகாண் அடியார்க் கமிர்தா னான்காண்
தீவணத்த திருவுருவிற் கரியுரு வன்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 3

ஏ – அம்பு. மறையவன் – மறை ஓதுபவன். ஈசன் – ஆள்பவன்.

திருவாரூரில் உள்ள பெருமான் அம்பைச் செலுத்தும் வில்லால் முப்புரத்தையும் அழித்தவன். அவன் இறைவனாய், மறை ஓதுபவனாய், நிர்விக்கினனாய்ப் பாவத்தை அழிக்கும் தூய ஒளியுடைய சூலப்படை யினனாய், சூரியன் சந்திரன், அக்கினி என்பவரைத் தன் மூன்று கண்களாக உடையவனாய், ஏற்றமுறையால் என்னை அடிமை கொண்டவனாய்த் தீயில் கூத்து நிகழ்த்துபவனாய், அடியார்க்கு அமுதமாயினவன். தீப் போன்ற தன்னுடைய திருவுருவில் கழுத்தில் விடத்தாலாய கருமையை உடையவனாவான். அவன் என் சிந்தையான்.

**2330.** கொங்குவார் மலர்க்கண்ணிக் குற்றா லன்காண்
கொடுமழுவன் காண்கொல்லை வெள்ளேற் றான்காண்
எங்கள்பால் துயர்கெடுக்கு மெம்பி ரான்காண்
ஏழ்கடலு மேழ்மலையு மாயி னான்காண்
பொங்குமா கருங்கடல்நஞ் சுண்டான் தான்காண்
பொற்றூண்காண் செம்பவளத் திரள்போல் வான்காண்
செங்கண்வா ளராமதியோ டுடன்வைத் தான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 4

கொங்கு – தேன்

திருவாரூரில் உள்ள பெருமான் தேன் ஒழுகும் மலராலான முடி மாலையைச் சூடி குற்றாலத்தும் உறைபவன். கொடிய மழுப்படையும் வெண்ணிறக் காளை வாகனமும் உடையவன். எங்கள் துயரைப் போக்கும் தலைவன். ஏழ் கடல்களும் ஏழ் மலைகளும் ஆகியவன். அலைகள் உயர்ந்த பெரும்பரப்புடைய கடலில் தோன்றிய நஞ்சினை உண்டவன். பொன்னால் ஆகிய தூணையும் பவளத் திரளையும் நிகர்ப்பவன். பிறையோடு சிவந்த கண்களை உடைய ஒளி வீசும் பாம்பினையும் உடன் வைத்தவன். அவன் என் சிந்தையான்.

**2331.** காரேறு நெடுங்குடுமிக் கயிலா யன்காண்
கறைக்கண்டன் காண்கண்ணார் நெற்றி யான்காண்
போரேறு நெடுங்கொடி மேல் உயர்த்தி னான்காண்
புண்ணியன்காண் எண்ணரும்பல் குணத்தி னான்காண்
நீரேறு சுடர்ச்சூலப் படையி னான்காண்
நின்மலன்காண் நிகரேது மில்லா தான்காண்
சீரேறு திருமாலோர் பாகத் தான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 5

பதிக மகுடம் – திருவாரூரான் காண் என் சிந்தையானே

திருவாரூர்ப் பெருமான் மேகங்கள் தவழும் பெரிய உச்சியை உடைய கயிலாய மலையிலும் இருப்பவன். நீல கண்டன். நெற்றிக்கண்ணன். காளை எழுதிய நீண்ட கொடியை மேல் உயர்த்தியவன். புண்ணியன், குணபூரணன். நீர் சுவறுதலுக்குக் காரணமான தீப்போன்ற அழிக்கும் சூலப்படையன். மாசற்றவன். தன் நிகர் இல்லாதவன். சிறப்பு மிக்க திருமாலைத் தன் உடம்பின் ஒரு பாகமாக உடையவன். அவன் என் சிந்தையான்.

**2332.** பிறையரவக் குறுங்கண்ணிச் சடையி னான்காண்
பிறப்பிலிகாண் பெண்ணோடா ணாயி னான்காண்
கறையுருவ மணிமிடற்று வெண்ணீற் றான்காண்
கழல்தொழுவார் பிறப்பறுக்குங் காபாலி காண்
இறையுருவக் கனவளையாள் இடப்பா கன்காண்
இருநிலன்காண் இருநிலத்துக் கியல்பா னான்காண்
சிறையுருவக் களிவண்டார் செம்மை யான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 6

கார் – மேகம். நெடுங்குடுமி – உயர்ந்த சிகரம்.
நீர்ஏறுசுடர் – நீர் வற்றுவதற்கு இடனாகும் தீ.
சீர் – புகழ்

திருவாரூர்ப் பெருமான் பிறையையும் பாம்பாகிய முடிமாலையையும் சடையில் உடையவன். பிறப்பற்றவன். ஆண், பெண் என்ற இரு பகுப்பினை உடைய உருவத்தன். நீலகண்டன். வெண்ணீற்றன். தன் திருவடிகளை வழிபடுபவர்களுடைய பிறவிப் பிணியைப் போக்கும் காபாலக் கூத்தாடுபவன். கைகளில் பெரிய வளையல்களை அணிந்த பார்வதியை இடப்பாகமாகக் கொண்டவன். பெரிய நிலமாகவும் அதனைத் தாங்கிப் பாதுகாப்பவனுமாக உள்ளவன். சிறகுகளை உடைய அழகிய களிப்புடைய வண்டுகள் பொருந்திய செம்மைப் பகுதியை உடையவன். அவன் என் சிந்தையுளான். இறை – கை

**2333.** தலையுருவச் சிரமாலை சூடி னான்காண்
தமருலகந் தலைகலனாப் பலிகொள் வான்காண்
அலையுருவச் சுடராழி யாக்கி னான்காண்
அவ்வாழி நெடுமாலுக் கருளி னான்காண்
கொலையுருவக் கூற்றுதைத்த கொள்கை யான்காண்
கூரெரிநீர் மண்ணொடுகாற் றாயி னான்காண்
சிலையுருவச் சரந்துரந்த திறத்தி னான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 7

சரம் – அம்பு

திருவாரூர்ப் பெருமான் தலையில் பொருந்துமாறு தலைமாலையைச் சூடியவன். மக்களும் தேவரும் உள்ள உலகின் மண்டையோட்டினைப் பிச்சைப் பாத்திரமாகக் கொண்டு பிச்சை வாங்குபவன். பகைவர்களைத் துன்புறுத்தும் அஞ்சத்தக்க ஒளியை உடைய சக்கரத்தைப் படைத்தவன். சலந்தரனை அழித்த பிறகு அச்சக்கரத்தைத் திருமாலுக்கு வழங்கியவன். கொலைத் தொழிலைச் செய்யும் அஞ்சத்தக்க கூற்றுவனை உதைத்தவன். ஐம்பூதங்களும் ஆகியவன். வில்லிலிருந்து புறப்படும் அம்பினைச் செலுத்திய செயலை உடையவன். அவன் என் சிந்தையானே.

**2334.** ஐயன்காண் குமரன்காண் ஆதி யான்காண்
அடல்மழுவாள் தானொன்று பியன்மே லேந்து
கையன்காண் கடற்பூதப் படையி னான்காண்
கண்ணெரியால் ஐங்கணையோன்
உடல்காய்ந் தான்காண்
வெய்யன்காண் தண்புனல்சூழ் செஞ்சடை
யான்காண்
வெண்ணீற்றான் காண்விசயற் கருள்செய்
தான்காண்
செய்யன்காண் கரியன்காண் வெளியோன்
தான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே.
8

பியன் – தோள்

திருவாரூர்ப் பெருமான் தலைவனாய், என்றும் இளையவனாய், எல்லோருக்கும் ஆதியாய், மழுப்படையைத் தோளில் சுமந்த கையனாய்க் கடல் போன்ற பூதப்படையனாய்க் கண்எரியால் மன்மதன் உடல் எரித்தவனாய், வெப்பம் உடையவனாய்க் கங்கை சூழ்ந்த செஞ்சடையனாய், வெண்ணீறு அணிந்தவனாய், அருச்சுனனுக்கு அருள் செய்தவனாய், வெண்மை, செம்மை, கருமை என்ற எல்லா நிறங்களையும் உடையவனாய் என் சிந்தையில் உள்ளான்.

**2335.** மலைவளர்த்த மடமங்கை பாகத் தான்காண்
மயானத்தான் காண்மதியஞ் சூடி
னான்காண்
இலைவளர்த்த மலர்க்கொன்றை மாலை
யான்காண்
இறையவன்காண் எறிதிரைநீர் நஞ்சுண்
டான்காண்
கொலைவளர்த்த மூவிலைய சூலத் தான்காண்
கொடுங்குன்றன் காண்கொல்லை யேற்றி
னான்காண்
சிலைவளர்த்த சரந்துரந்த திறத்தி னான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே.
9

திருவாரூர்ப் பெருமான் பார்வதி பாகனாய்ச் சுடுகாட்டில் இருப்பவனாய்ப் பிறை சூடியவனாய், இலைகளிடையே வளர்ந்த கொன்றை மலர் மாலையைச் சூடியவனாய், எல்லோருக்கும் தலைவனாய்க் கடலில் தோன்றிய நஞ்சினை உண்டவன். முல்லை நிலத் தலைவனான திருமாலை இடபமாக உடைய அப்பெருமான் கொடுங்குன்றத்தும் உறைபவன். கொல்லும் முத்தலைச் சூலத்தை உடைய அப்பெருமான் வில்லில் பூட்டிய அம்பினைச் செலுத்தும் ஆற்றலுடையவன். அவன் என் சிந்தையான்.

**2336.** பொற்றாது மலர்க்கொன்றை சூடி னான்காண்
புரிநூலன் காண்பொடியார் மேனி
யான்காண்
மற்றாருந் தன்னொப்பா ரில்லா தான்காண்
மறையோதி காண்எறிநீர் நஞ்சுண்
டான்காண்
எற்றாலுங் குறைவொன்று மில்லா தான்காண்
இறையவன்காண் மறையவன்காண் ஈசன்
றான்காண்
செற்றார்கள் புரமூன்றுஞ் செற்றான் தான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே.
10

எறிநீர் – கடல். செற்றான் – அழித்தான்

திருவாரூர்ப் பெருமான் தன்னை ஒப்பார் இல்லாதவன். பூணூல் அணிந்து நீறு பூசி வேதம் ஓதி, பொன் போன்ற மகரந்தம் உடைய கொன்றைப் பூச்சூடி, ஒன்றாலும் குறைவில்லாதத் தலைவனாகிய அப்பெருமான் கடல் நஞ்சு உண்டு வேதவடிவினனாய் எல்லாரையும் நிருவகிப்பவனாய்ப் பகைவர் மும்மதில்களையும் அழித்தவன். அவன் என் சிந்தையான். பொன் தாது. கொன்றை மலர் – பொன் போலும் மகரந்தத்தினை உடைய கொன்றை மலர்.

## 25. திருவாரூர்

ப.தொ.எண் : 238 பதிக எண் : 25

2337. உயிரா வணமிருந் துற்று நோக்கி
யுள்ளக் கிழியி னுருவெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணமேறா தானே றேறி
அமரர்நா டாளாதே ஆரூ ராண்ட
அயிரா வணமேயென் னம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லா
தாரே. 1

அயிராவணம் என்ற யானையை இவராது காளைமீது இவர்ந்து தேவர்களுடைய நாட்டை ஆளாமல் திருவாரூரை ஆண்ட ஐயுறாத தன்மையை உடைய நுண்மணல் உருவினனாகிய உண்மைப் பொருளே! உயிர்ப்பு இயங்காது மூச்சை அடக்கித் தியானம் செய்து உள்ளமாகிய துணியில் உன்படத்தை எழுதிச் சமாதி நிலையில் இருந்து உயிரை உன்னிடம் அடிமை ஓலை எழுதி ஒப்படைத்து உன் கையில் வழங்கி உன்னால் சிறப்பு வகையில் உணரப்படும் அடியாரோடு உடனாய் இருத்தி. என் தலைவனே! நீ வழங்கிய அருளாகிய கண் கொண்டு உன்னை உணராதவர்கள் உன் இன்பத்தைப் பெறுதற்கு உரியவர் அல்லர்.

உயிராவணம் – உயிர்ப்பு இயங்காதபடி; மூச்சை அடக்கி. கிழி – படம்.
ஆவணம் செய்து தந்தால் – சிறிதும் பற்றின்றிக் கொடுத்தால். அயிராவணம் – சிவபிரானது யானை. இஃது இரண்டாயிரம் கொம்புகளை உடையது என்பர். ஆவணம் செய்தல் – அடிமைச்சீட்டு எழுதி ஒப்புவித்தல்.

உடைமைப் பொருளுக்கு ஆவணம் எழுத சார்பதிவாளர் அலுவலகம் செல்ல வேண்டும். உயிர்ப்பொருளுக்கு ஆவணம் எழுத சிவாலயம் செல்ல வேண்டும். மூலவர் முன்னே நின்று நமது உயிரை ஆவணம் செய்து கொடுக்க வேண்டும். திருவெண்ணெய்நல்லூர் நிகழ்வுகளை நினைவு கூர்ந்து நம்பி ஆரூரரின் பாட்டனார் தாமும் தம் எதிர்கால வாரிசுகளும் வழிவழி அடிமைகள் என்று அந்நாளில் ஆவணம் செய்ததைப் போல நாமும் செய்வோமாக.
அயிர்த்தல் – ஐயுறுதல் என்ற பொருளும் உண்டு. அல்லாதார் – பயனற்றவர்.

2338. எழுது கொடியிடையார் ஏழை மென்றோள்
இளையார்கள் நம்மை யிகழா முன்னம்
பழுது படநினையேல் பாவி நெஞ்சே
பண்டுதான் என்னோடு பகைதா னுண்டோ
முழுதுலகில் வானவர்கள் முற்றுங் கூடி
முடியால் உறவணங்கி முற்றம் பற்றி
அழுது திருவடிக்கே பூசை செய்ய
இருக்கின்றான் ஊர்போலும் ஆரூர் தானே.
2

தீ வினையை உடைய மனமே! உனக்கும் எனக்கும் முற்பட்ட பகை ஏதேனும் உண்டோ? கொடி போன்ற இடையையும் மெல்லிய தோள்களையும் அழகையும் உடைய இளைய மகளிர் நம் மூப்பினை நோக்கி இகழ்வதன்முன் பயன்பட நினைவாயாக. உலகிலுள்ள தேவர்கள் எல்லோரும் எஞ்சாது கூடித் தலையால் முழுமையாக வணங்கி முன்னிடத்தை அடைந்து அழுது அவன் திருவடிக்கண் பூசனை புரியுமாறு அவன் உகந்தருளியிருக்கின்ற ஆரூரை நினையாது பிறிதொன்றனைப் பழுதுபட நினையாதே!

**2339.** தேரூரார் மாவூரார் திங்க ளூரார்
திகழ்புன் சடைமுடிமேல் திங்கள் சூடிக்
காரூரா நின்ற கழனிச் சாயற்
கண்ணார்ந்த நெடுமாடங் கலந்து தோன்றும்
ஓரூரா வுலகெலா மொப்பக் கூடி
உமையாள் மணவாளா என்று வாழ்த்தி
ஆரூரா ஆரூரா என்கின் றார்கள்
அமரர்கள்தம் பெருமானே யெங்குற் றாயே. 3

தேரூர், மாவூர், திங்களூர் இவற்றில் உறைந்து திகழும் செஞ்சடை மீது பிறை சூடி, நீர் வளம் சான்ற வயல்களையும் கண்ணுக்கு மகிழ்ச்சி தரும் மாடங்களையும் உடைய ஒவ்வோர் ஊராக உலகிலுள்ளார் எல்லாம் உமையாள் கணவனே என்று வாழ்த்தி ஆரூரா ஆரூரா என்று அழைக்கின்றார்கள். அவர்களுக்குக் காட்சி வழங்காமல் நீ எங்கே உள்ளாய்?

தேர் ஊரார் – மா ஊரார் – தேரினையும் மாவாகிய குதிரையையும் ஊர்தியாகக் கொள்ளாதவர் என்றும் பொருள் கொள்ளலாம்.

**2340.** கோவணமோ தோலோ உடை யாவது
கொல்லேறோ வேழமோ ஊர்வது தான்
பூவணமோ புறம்பயமோ அன்றா யிற்றான்
பொருந்தாதார் வாழ்க்கை திருந் தாமையோ
தீவணத்த செஞ்சடைமேல் திங்கள் சூடித்
திசைநான்கும் வைத்துகந்த செந்தீ வண்ணர்
ஆவணமோ ஒற்றியோ அம்மா னார்தாம்
அறியேன்மற் றூராமா றாரூர் தானே. 4

தலைவராகிய பெருமான் உடுப்பது கோவணமோ தோலோ? ஊர்வது காளையோ, யானையோ? அவர் இருக்குமிடம் பூவணமோ புறம்பயமோ? அவர் பொருந்தாதார் வாழ்க்கையாகிய ஐயமேற்றுண்டல் அழகோ அழகன்றோ? தீப்போன்ற செஞ்சடை மேல் பிறை சூடி நான்கு திசைகளையும் தம் இருப்பிடமாகக் கொண்ட செந்நிறத்து எம்பெருமானார் இப்பொழுது இருக்குமிடம் ஒற்றியூரோ ஆரூரோ அறியேன். அவர் திருவுள்ளம் எவ்வெவற்றில் எவ்வாறாகி உள்ளதோ?

ஆவணம் – முழு உரிமைச் சீட்டு
ஒற்றி – அனுபவிக்கும் உரிமை மட்டும்
(அடமானம், போக்கியம்)

2341. ஏந்து மழுவாளர் இன்னம் பராஅர்
எரிபவள வண்ணர் குடமூக் கிலார்
வாய்ந்த வளைக்கையாள் பாக மாக
வார்சடையார் வந்து வலஞ்சு ழியார்
போந்தா ரடிகள் புறம்ப யத்தே
புகலூர்க்கே போயினார் போரே ரேறி
ஆய்ந்தே யிருப்பார்போ யாரூர் புக்கார்
அண்ணலார் செய்கின்ற கண்மா யமே.
5

கண்மாயம் – மறைந்தவாறு அறியாதபடி மறைதல்

மழுப்படையை ஏந்திய பெருமான் இன்னம்பரில் இருந்தார். ஒளி வீசும் பவள நிறத்தை உடைய அவர் குடமூக்கில் இருந்தார். நீண்ட சடையை உடைய அப்பெருமானார் வளையல் அணிந்த கைகளை உடைய பார்வதி பாகராக வலஞ்சுழிக்கு வந்தார். அங்கிருந்து புறம்பயத்துக்கும் அடுத்துப் புகலூருக்கும் போயினார். போரிடும் காளை மீது இவர்ந்து தம் இருப்பிடத்தை முடிவு செய்தவர் போலத் திருவாரூரிலே குடிபுகுந்துவிட்டார். அப்பெருமானார் செய்வன யாவும் கண்கட்டு வித்தை போல உள்ளன.

2342. கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை
கருநரம்பும் வெள்ளெலும்புஞ் சேர்ந்தொன் றாகி
உருவாகிப் புறப்பட்டிங் கொருத்தி தன்னால்
வளர்க்கப்பட் டுயிராருங் கடைபோ காரால்
மருவாகி நின்னடியே மறவே னம்மான்
மறித்தொருகாற் பிறப்புண்டேல் மறவா வண்ணம்
திருவாரூர் மணவாளா திருத்தெங் கூராய்
செம்பொனே கம்பனே திகைத்திட் டேனே.
6

கலித்து – தழைத்து
மருவு ஆகி – பொருந்துதல் ஆகி
மறவாமை முக்கியம். எப்பிறவி எடுத்தாலும் பரவாயில்லை. அது நம் வினைக்கேற்ப இறைவன் கொடுத்தது என்று ஏற்றுக் கொண்டு மறவாமை வரங் கேட்க வேண்டும் என்பதை எப்போதும் மறவாதவர் அப்பர்.

தாயின் கருப்பையில் துளியாய்ப்புகுந்து நெகிழ்ந்த பிண்டமாய் இருந்து தழைத்து மூளையும் கருநரம்பும் வெள்ளெலும்பும் சேர்ந்து ஓர் உருவம் எய்தி இவ்வுலகில் பிறப்பெடுத்துத் தாய் ஒருத்தியால் வளர்க்கப்பட்ட உயிரும் அந்நிலையில் நிலைத்து நில்லாது எந்த நேரத்திலும் உடம்பை விடுத்து நீங்கலாம். ஆதலின் அடியேன் உன் திருவடிகளைப் பொருந்தி அவற்றை மறவாமல் இருக்கின்றேன். மீண்டும் அடியேனுக்கு ஒரு பிறவி உண்டாகுமாயின் உன்னை மறவாதிருத்தல் கூடுங்கொல்லோ என்று ஐயுற்றுத் திருவாரூர் மணவாளா! திருத்தெங்கூராய்! செம்பொன் ஏகம்பனே! என்று உன் திருப்பெயர்களைக் கூறியவாறு கலங்குகின்றேன்.

**2343.** முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள்தன் நாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே. 7

முதலில் சிவபெருமான் என்று அவன் பெயரைக் கேட்டு, அவனுடைய பொன் வண்ணத்தைக் கேட்டு, அவனுடைய திருவாரூரைக் கேட்டு மீண்டும் அவன் திறத்து நீங்காத காதல் உடையவளாயினாள். தாயையும், தந்தையையும் அன்றே மனத்தால் துறந்தாள். உலகவர் கூறும் 'கிழவோற் சேர்தல் கிழத்திக்கு இல்லை' என்ற நெறிமுறையை விடுத்தாள். தலைவனையே நினையும் நினைவிலே தான் செய்யும் செயல்களை அறியாது ஒழிந்தாள். கன்னி எனப்படும் தன் பெயர் நீங்கப் பெற்று அவன் உரிமை என்ற பெயரைக் கொண்டாள். அந்நங்கை அத்தலைவன் திருவடிகளை அணைந்து தனக்கென ஒன்றின்றி அவன் வழியளாய் ஒழிந்தாள்.

இத்திருப்பாடல் திருவாரூர்ப் பெருமானது திருப்பெயரைக் கேட்டவுடனே வசமழிந்த தலையன்புடையளாய் தலைவி ஒருத்தியின் தன்மையை அவள் தோழி விளங்க உரைத்து, செவிலிக்கு அறத்தொடு நின்றதாக வைத்துச் சத்திநிபாதத்து உத்தமர்களது நிலையை விளக்கியருளியது. செய்யுளாகலின் சுட்டுப்பெயர்கள் 'தலைவன்' என்பதற்கு முன்வந்தன. நாமம் 'சிவன்' என்பது, இச்சொற்றானே வசீகரித்தலையுணர்த்துவது என்றபடி, 'நிறைந்த மங்கலத்தினன்' என்பது பொருள். வண்ணம், பொன் வண்ணம்.

ஆரூர் – எல்லாம் நிறைந்த ஊர். "பெயர்த்தும்" என்பதை, 'பெயர்ப்பவும்' எனத் திரித்து, 'கேட்டவற்றை மீள நினையாது மறக்குமாறெல்லாம் செய்து அவள் மனத்தை யாம் மாற்றவும்' என உரைக்க, இவ்வாறின்றி, 'பின்னை வண்ணங் கேட்டாள், பெயர்த்தும் ஆரூர் கேட்டாள்' என முன்னே கூட்டியுரைப்பாரும் உளர். அவர்க்கு, 'பிச்சியானாள்' என்பதற்கு முன்னும் ஒரு சொல் வேண்டப்படுவதாம். 'அவனுக்கு' என்னும் நான்காவது ஏழாவதன் பொருளில் வந்தது. பிச்சி – பித்தி, நீத்தது மனத்தால் என்க.

அகலிடத்தார் ஆசாரமாவது, கன்னியர் இல்வரை இகந்து செல்லாது நிற்றல். அதனை அகன்றமையாவது தானே இல்லிறந்து சென்று ஆரூரை அடையத் துணிந்தமை, தன்னை மறந்தமையாவது, தலைவனையே நினையும் நினைவிலே தான் இது செய்கின்றமை அறியாதொழிந்தமை. தன் நாமமாவது, கன்னி (நிறைய அழியாதிருப்பவள்) எனப்படுவது. "தாள" என்புழி இரண்டாம் வேற்றுமை இறுதிக்கண் தொக்கது. "தாளே" என்னும் ஏகாரம், பிறவற்றினின்று பிரித்தலின் பிரிநிலை. தலைப்பட்டாள் – அணைந்தாள். தாளைத் தலைப்பட்டமையாவது, தனக்கென ஒன்றின்றி அவன் வழியளாயொழிந்தமை.

இனி, சத்திநிபாதத்தவரது நிலையை உரைக்குமிடத்து, நாமங் கேட்டல் முதலிய நான்கினையும் முறையே கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்னும் நான்குமாகவும், பின்னர் உள்ளவற்றை

அணைந்தோர் தன்மையாகவும் கொள்க. நாமம் பொதுவில் உணரப்படுவது. வண்ணம் சிறப்பாக ஆய்ந்துணரப்படுவதும், பித்து அதனில் அழுந்துதலும் ஆதல் உணர்க. அன்னை திரோதான சத்தியும், அத்தன் தடத்த சிவனும் என்க. அகலிடத்தார் ஆசாரம், தன்முனைப்பில் நின்று வினைகளையீட்டியும் நுகர்ந்தும் பிறப்பிறப்புக்களில் உழலுதல், தன்னை மறத்தல், தானொரு பொருள் உண்மையையும், உண்டாகி அறிந்து நிற்றலையும் மறந்து முதல்வன் ஒருவனையே அறிந்து நிற்றல். தாள் – முதல்வனது உண்மை இயல்பு. அஃது இன்ப வடிவினதாதல் அறிக. 'நாமம் கேட்டல்' முதலிய நான்கையும், 'சமயம், விசேடம், நிருவாணம்' என்னும் தீக்கைவழி, 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்னும் நான்கு பாதங்களில் நிற்கும் நிலைகளையுணர்த்தியவாறாக உரைப்பாரும் உளர்.

**2344.** ஆடுவாய் நீநட்டம் அளவிற் குன்றா
அவியடுவார் அருமறையோ ரறிந்தே
னுன்னைப்
பாடுவார் தும்புருவும் நார தாதி
பரவுவார் அமரர்களும் அமரர் கோனும்
தேடுவார் திருமாலும் நான்மு கனுந்
தீண்டுவார் மலைமகளுங் கங்கை யாளும்
கூடுமே **நாயடியேன் செய்குற் றேவல்**
**குறையுண்டே** திருவாரூர் குடிகொண்
டீர்க்கே. **8**

குற்றேவல் – சிறு பணிகள்

திருவாரூர்ப் பெருமானே! நீ கூத்தாடுவாய், வேதம் வல்லார் விதிப்படி செய்ய வேண்டும் அளவிற் குறையாமல் உன் நிவேதனத்திற்குரிய அவியைச் சமைப்பார்கள். தும்புருவும் நாரதன் முதலியோரும் உன் பெருமையைப் பாடுவர். தேவர்களும் தேவேந்திரனும் உன்னை முன் நின்று துதிப்பார்கள். திருமாலும் பிரமனும் உன்னைத் தேடுவார்கள். மலைமகளும் கங்கையும் உன்னைத் தழுவுவார்கள். இவ்வளவு செய்திகளையும் அடியேன் அறிந்துள்ளேன். ஆதலின் நாய்போலும் அடியவனாகிய நான் செய்யும் சிறுபணிகள் உனக்கு ஏற்குமோ? ஏலாவோ? அறியேன்.

## அடியார்கள் எப்படியெல்லாம் பணி செய்தார்கள்?

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்

– திருவாசகம் 8–20–4

2345. நீரூருஞ் செஞ்சடையாய் நெற்றிக் கண்ணாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய் நின்னைத் தேடி
ஓரூரும் ஒழியாமே யொற்றித் தெங்கும்
உலகமெலாந் திரிதந்து நின்னைக் காண்பான்
தேரூரும் நெடுவீதி பற்றி நின்று
திருமாலும் நான்முகனுந் தேர்ந்துங் காணா
தாரூரா ஆரூரா என்கின் றார்கள்
அமரர்கள்தம் பெருமானே ஆரூ ராயே. 9

ஒற்றுவித்தல் – ஒற்றரை விடுத்து உண்மை அறியச் செய்தல்

ஆரூர்ப் பெருமானே! கங்கை தங்கும் செந்நிறச் சடையனே! நெற்றியில் கண்ணுடையவனே! நிலாத்திங்கள் துண்டம் ஆகிய பிறை சூடியே! உன்னைத்தேடி நீ இருக்கும் இடத்தை ஆராய்ந்தவாறே, ஓர் ஊர்கூட எஞ்சாமல் உலகம் முழுதும் எங்கும் திரிந்து, உன்னைக் காண்பதற்குத் தேர்கள் உலவும் பரந்த வீதிகளிலே காத்திருந்து, திருமாலும் பிரமனும் கூட முயன்றும் காண இயலாதவர்களாய், 'தேவர்கள் தலைவனே' ஆரூரா! ஆரூரா! என்று அழைக்கின்றார்கள்.

2346. நல்லூரே நன்றாக நட்ட மிட்டு
நரையேற்றைப் பழையாறே பாய ஏறிப்
பல்லூரும் பலிதிரிந்து சேற்றூர் மீதே
பலர்காணத் தலையாலங் காட்டி னூடே
இல்லார்ந்த பெருவேளூர்த் தளியே பேணி
யிராப்பட்டீச் சரங்கடந்து மணற்கால் புக்கு
எல்லாருந் தளிச்சாத்தங் குடியிற் காண
இறைப்பொழுதில் திருவாரூர் புக்கார் தாமே. 10

நல்லூரில் நன்றாகக் கூத்து நிகழ்த்திப் பழையாறையை நோக்கி வெண்ணிறக் காளையை இவர்ந்து, பல ஊர்களிலும் பிச்சைக்காகத் திரிந்து, சேற்றூரில் பலர் காண நின்று, தலையாலங் காட்டினூடே மறைந்து நின்று, பெருவேளூர்க் கோயிலிலே விரும்பித் தங்கி, பட்டீச்சரத்தில் இராப்பொழுதைக் கழித்து மணற் காலில் நுழைந்து தளிச்சாத்தங் குடி வழியாக எல்லாரும் காணச் சென்று ஒரு நொடிப் பொழுதில் திருவாரூரில் எம் பெருமான் புகுந்தார்.

2347. கருத்துத்திக் கதநாகங் கையி லேந்திக்
கருவரைபோற் களியானை கதறக் கையால்
உரித்தெடுத்துச் சிவந்ததன்தோல் பொருந்த மூடி
உமையவளை யச்சுறுத்தும் ஒளிகொள் மேனித்
திருத்துருத்தி திருப்பழனந் திருநெய்த் தானந்
திருவையா றிடங்கொண்ட செல்வர் இந்நாள்
அரிப்பெருத்த வெள்ளேற்றை அடரவேறி
யப்பனார் இப்பருவ மாரூ ராரே. 11

துத்தி – படத்தில் உள்ள புள்ளிகள். கதம் – சினம்.
அடர – சுமக்க
அரிப்பெருத்தம் – வெள்ளேற்றின் பிடரியை வர்ணித்தல்
பருவம் – காலம்; ஊழி

கரிய படப்புள்ளிகளை உடைய, கோபிக்கும் பாம்பினைக் கையில் கொண்டு, பார்வதியை அச்சுறுத்திய பெரிய மலையைப் போன்ற மத யானை பிளிறும்படியாக அதன் தோலை உரித்துச் சிவந்த தம் மேனி மீது பொருந்தப் போர்த்து ஒளி பொருந்திய திருமேனியை உடைய செல்வராம் சிவபெருமானார் திருத்துருத்தி, திருப்பழனம், திருநெய்த்தானம், திருவையாறு என்ற திருத்தலங்களை உறைவிடமாகக் கொண்டு இந்நாளில் தசை மடிப்பால் கீற்றுக்கள் அமைந்த பிடரியை உடைய வெண்ணிறக் காளையை அது சுமக்குமாறு இவர்ந்து, இப்பொழுது திருவாரூரை உகந்தருளியிருக்கிறார்.

## 26. திருவாரூர்

ப.தொ.எண் : 239 பதிக எண் : 26

2348. பாதித்தன் திருவுருவிற் பெண்கொண் டானைப்
பண்டொருகால் தசமுகனை அழுவித்
தானை
வாதித்துத் தடமலரான் சிரங்கொண் டானை
வன்கருப்புச் சிலைக்காம னுடல் அட்டானைச்
சோதிச்சந் திரன்மேனி மறுச்செய் தானைச்
சுடரங்கி தேவனையோர் கைக்கொண்
டானை
ஆதித்தன் பற்கொண்ட அம்மான் தன்னை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே.
1

அயர்த்தல் – மறத்தல்

பார்வதி பாகனாய்ப் பண்டு இராவணனை வருத்தியவனாய், வருத்திப் பிரமன் தலை ஒன்றை நீக்கியவனாய், வலிய கரும்பு வில்லை உடைய மன்மதன் உடலை எரித்தவனாய், ஒளி பொருந்திய சந்திரனுடைய உடலில் களங்கத்தை உண்டாக்கியவனாய், ஒளி வீசும் அக்கினி தேவனுடைய கை ஒன்றனைப் போக்கிச் சூரியன் ஒருவனுடைய பற்களை நீக்கிய அப்பெருமானைத் திருவாரூரில் அடியேன் தரிசித்து அவனைத் தவிர ஏனையவற்றை எல்லாம் மறந்தேன்.

2349. வெற்புறுத்த திருவடியாற் கூற்றட் டானை
விளக்கினொளி மின்னினொளி முத்தின்
சோதி
ஒப்புறுத்த திருவுருவத் தொருவன் தன்னை
ஓதாதே வேத முணர்ந்தான் தன்னை
அப்புறுத்த கடல்நஞ்ச முண்டான் தன்னை
அமுதுண்டார் உலந்தாலும் உலவா தானை
அப்புறுத்த நீரகத்தே அழலா னானை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே.
2

இராவணன் பொருட்டு மலையை அழுத்திய திருவடியால் கூற்றுவனை உதைத்தவனாய், விளக்கு மின்னல் முத்து இவற்றை ஒத்த திருமேனி ஒளியினனாய், வேதங்களை ஓதாது உணர்ந்தவனாய், நீரை மிகுதியாக நிறைத்த கடலில் தோன்றிய விடத்தை உண்டு அமுதமுண்ட தேவர் இறந்தபோதும் தான் இறவாதவனாய், கடல் நீரினுள் இருக்கும் பெண் குதிரை முக வடிவினதாகிய தீயாகவும் உள்ள பெருமானை அடியேன் ஆரூரில் கண்டு அயர்த்தேன்.

வெற்புறுத்த – இராவணன் பொருட்டு மலையை அழுத்திய. திருவடி இவ்வாறு மறக்கருணையையும் செய்யும். "நீலமணி மிடற்றொருவன் போல. மன்னுக பெரும நீயே" (புறம். 91) ஔவையார். உலந்தாலும் – அழிந்தாலும். நீரகத்தே அழல் – **வடவைத்தீ**. இது கடலின் நடுவில் நின்று, கடல் பொங்கி உலகை அழியாதவாறு காப்பது என்பது புராண வழக்கு. உரிய காலத்தில் அத்தீ ஏழ்கடலையும் சுவறச் செய்யும். எப்போதும் கடலடியில் இருக்கும்.

2350. ஒருகாலத் தொருதேவர் கண்கொண் டானை
யூழிதோ றூழி யுயர்ந்தான் தன்னை
வருகாலஞ் செல்கால மாயி னானை
வன்கருப்புச் சிலைக்காம னுடலட் டானைப்
பெருவேழக் களிற்றுரிவைப் போர்வை யானைப்
புள்ளரைய னுடல்தன்னைப் பொடிசெய்
தானை
அருவேள்வி தகர்த்தெச்சன் தலைகொண் டானை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே.
3

புள்ளரையன் – கருடன். எச்சன் – வேள்வித்தேவன்

தக்கன் வேள்வி செய்த காலத்தில் சூரியன் ஒருவனுடைய கண்களை நீக்கியவனாய், ஊழிகள் தோறும் மேம்பட்டுத் தோன்றுபவனாய், எதிர்காலமும் இறந்த காலமும் ஆயினவனாய், வலிய கரும்பு வில்லை ஏந்திய மன்மதனுடைய உடலை நலிவித்தவனாய், தன்னோடு பொரவந்த யானையை உரித்துப் போர்த்தவனாய், செருக்கோடு வந்த கருடன் உடலைப் பொடி செய்தவனாய், அரிய வேள்வியை அழித்து வேள்வித் தேவனின் தலையை நீக்கிய பெருமானை அடியேன் ஆரூரில் கண்டு அயர்த்தேன்.

2351. மெய்ப்பால்வெண் ணீறணிந்த மேனி யானை
வெண்பளிங்கி னுட்பதித்த சோதி யானை
ஒப்பானை யொப்பிலா வொருவன் தன்னை
உத்தமனை நித்திலத்தை யுலக மெல்லாம்
வைப்பானைக் களைவானை வருவிப் பானை
வல்வினையேன் மனத்தகத்தே மன்னி
னானை
**அப்பாலைக் கப்பாலைக் கப்பா லானை**
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே.
4

திருநீறணிந்த மேனியனாய்ப் பளிங்கினுள் பதித்தாற் போன்ற செஞ்சோதியனாய்த் தன்னொப்பார் பிறர் இல்லாதானாய், உத்தமனாய், முத்துப் போன்று இயற்கை ஒளி உடையவனாய், உலகங்களை எல்லாம் காத்து அழித்துப் படைப்பவனாய்த் தீவினையை உடைய அடியேன் மனத்தில் நிலைபெற்றவனாய், **மாயைக்கு அப்பாற்பட்ட உயிருக்கு அப்பாற்பட்டவனை** அடியேன் ஆரூரில் கண்டு அயர்த்தேன்.

2352. **பிண்டத்திற்** பிறந்ததொரு பொருளை மற்றைப்
பிண்டத்தைப் படைத்ததனைப் பெரிய
வேதத்
துண்டத்திற் றுணிபொருளைச் சுடுதீ யாகிச்
சுழல்காலாய் நீராகிப் பாரா யிற்றைக்
கண்டத்தில் தீதினஞ் சமுது செய்து
கண்மூன்று படைத்ததொரு கரும்பைப்
பாலை
அண்டத்துக் கப்புறத்தார் தமக்கு வித்தை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே.
5

பதிகமகுடம் – ஆரூரிற் கண்டடியேன் அயர்த்தவாறே

**மனித உடலில்** பிறந்த உயிர் கொண்டு உணரும் உணர்விற்குத் தோன்றுபவனாய், அவ்வுடலையும் படைத்தவனாய்ப் பெரிய வேதங்களின் யாப்பினுள் துணியப்படும் பரம்பொருளாகக் கூறப்படுபவனாய்ச் சுடு தீயாகியும் சுழன்றடிக்கும் காற்றாகியும் நீராகியும் மண்ணாகியும் இருப்பவனாய்த் தீமைக்கு இருப்பிடமாகிய நஞ்சினை உண்டு அதனைக் கழுத்தளவில் இருத்தியவனாய், முக்கண்ணனாய்க் கரும்பும் பாலும் போல இனியனாய், முத்தர்களுக்குப் பயன் தரும் பொருளாய் உள்ள பெருமானை அடியேன் ஆரூரில் கண்டு அயர்த்தேன்.

**2353.** நீதியாய் நிலனாகி நெருப்பாய் நீராய்
நிறைகாலாய் இவையிற்றின் நியம மாகிப்
பாதியா யொன்றாகி யிரண்டாய் மூன்றாய்ப்
பரமாணு வாய்ப்பழுத்த பண்க ளாகிச்
சோதியா யிருளாகிச் சுவைக ளாகிச்
சுவைகலந்த அப்பாலாய் வீடாய் வீட்டின்
ஆதியாய் அந்தமாய் நின்றான் தன்னை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 6

கால் – காற்று. நியமம் – ஒழுங்கு, கட்டளை.
சோதி – அறிவு. இருள் – அறியாமை

ஒழுங்குக்கு ஓர் உறைவிடமாய், நிலம் நெருப்பு நீர் எங்கும் நிறைந்த காற்று என்ற இவற்றின் ஒழுங்குகளையும், பண்புகளையும் நிருவகிப்பவனாய், எல்லாப் பொருள்களுக்கும் பற்றுக்கோடாய்ப் பரசிவமாகிய ஒன்றாய்ச் சிவமும் சக்தியும் என இரண்டாய், அயன் மால் அரன் என்ற மும்மூர்த்திகளாய், அணுவுக்கும் அணுவாய் நிறைந்திருப்பவனாய், செவ்வனம் நிரம்பிய ஏழிசை வடிவினனாய்ச் சோதியாகியும் இருளாகியும் பொருள்களின் சுவைகளாகியும் அடியார்களுக்கு எத்திறத்தினும் சுவைக்கும் திறம் கலந்த பகுதியனாய், வீட்டுலகம் அருளுபவனாய், வீட்டிற்கு வாயிலாகிய ஞானமும் அந்த ஞானத்தால் அடையத்தக்க பயனுமாய், அடியார்க்குத் தன்னை அடையத்தானே ஆறும் பேறுமாக (உபாயமும் உபமேயமும்) இருக்கும் பெருமானைத் திருவாரூரில் அடியேன் கண்டு அவனைத் தவிர ஏனைய எல்லாவற்றையும் மறந்தேன்.

* * * * * * * 7, 8, 9, 10

## 27. திருவாரூர்

## பதிக வரலாறு

சுவாமிகள் பாண்டிநாட்டிலுள்ள தலங்களை வணங்கிப் பொன்னி நாடடைபவராய் எதிர்ப்படுந் தலங்களை வரும் வழியே மீண்டும் வணங்கிப் பூம்புகலூர் வந்தணைந்து, புனிதர் தாள் வணங்கி உழவாரத் திருத்தொண்டு செய்திருந்த அந்நிலைமையில் அவர் நன்னிலைமை உலகவர்க்குக் காட்டக் கருதிய பெருமான் உழவாரம் நுழைந்தவிடமெல்லாம் பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்கச் செய்தருளினார். வாகீசரும் திருமுன்றிலிலுள்ள பருக்கைக் கற்களுடன் பொன்னினொடு நவமணிகளையும் பூங்கமல வாவியினிற் புகவெறிந்தார். ஓடும் பொன்னும் கல்லும் மணியும் வேறு காணாதிருந்த நல்லோர் முன் நாயகனார் திருவருளால் தேவவரம்பையர்கள் எதிர்தோன்றி ஆடுவாரும் பாடுவாருமாகி நிற்க, அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலாது அன்புருகும் மெய்த்தன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோராகிய சுவாமிகள், தம் சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்று பிறவியின் தொடக்கத்தில் விழுந்தும் இருவினைகளின் உருவமாய் வந்த அந்த அரமங்கையரைப் பார்த்து, 'உம்மாலிங்கென்ன குறையுடையேன் யான்? திருஆரூர் அம்மானுக்கு ஆளானேன், நீவிர் வீணே அலைத்தல் வேண்டா' என்று அருளியது இத்திருப்பதிகம் திருப்புகலூரில் அருளிச் செய்கின்றவர் திருவாரூரையே எடுத்தோதியருளியது, அத்தலத்தின் முதன்மை கருதி. (தி. 12 திருநாவு. புரா. 423).

இத்திருப்பதிகத்தில் சுவாமிகள் நல்வினை, தீவினை, பூதங்கள், புலன்கள், விருப்பு, வெறுப்பு ஆகிய இவற்றையும் இவற்றின் கர்த்தாக்களையும் தம்மை ஆட்டுவிக்க முயல வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறார். இந்தப் பதிகத்தின் தொனியை வேயுறு தோளி பங்கனோடு ஒப்பிட்டுப் பார்க்கத் திருவருள் கூட்டியுள்ளது.

| பாடல் எண் | திருஞானசம்பந்தர் "வேயுறு தோளிபங்கன்" பதிகத்தில் கோளறுத்த விதம் (2–85) | திருநாவுக்கரசர் "பொய்ம்மாயப்" பதிகத்தில் தப்பித்த விதம் (6–27) |
|---|---|---|
| 1. | அடியார்களுக்கு ஞாயிறு, திங்கள், செவ்வாய் ஆகிய கோள்கள் நல்லவற்றையே செய்யும் தீமை செய்யாது | நல்வினைகள், தீவினைகள் தம்மை அணுக வேண்டாம் |
| 2. | நாள், நட்சத்திரங்கள், திதிகள் அன்பொடு நல்லனவே செய்யும் | ஐம்பெரும்பூதங்கள் தம்மை அணுக வேண்டாம் |
| 3. | திருமகள், துர்க்கை, ஜெயமகள், நிலமகள், திசை தெய்வங்கள் அடியார்க்கு செல்வங்களையே நல்லனவாகத் தரும் | பல்வேறு படிவங்களையேற்று ஐம்பெரும் பூதங்கள் தம்மை அணுக வேண்டாம் |
| 4. | காலன், அக்கினி, எமன், எமதூதர், கொடிய நோய்கள் இவையும் மிக்க குண முடையனவாய் நல்லதைச் செய்யும் | ஐம்பொறிகளில் புலன்களாய் நிற்கின்ற ஐம்புலன்களும் தம்மை அணுக வேண்டாம் |
| 5. | இடி, மின்னல், அவுணர், செருக்குடைய பூதங்கள் ஆகியன நம்மைக் கண்டு அஞ்சி நல்லன செய்யும் | வஞ்சகங்கள், சூழ்ச்சிகள், நுகர்பொருள்கள் தம்மை அணுக வேண்டாம் |
| 6. | புலி, சிங்கம், குரங்கு, யானை, பன்றி, கரடி ஆகியன நமக்கு நல்லனவே செய்யும் | செருக்கு, மானம், காமம், பகை, கோபம், கஞ்சத்தனம், துன்பச் சுமை விலகிச் செல்ல வேண்டும் |
| 7. | பித்தம், வினைகளால் வரும் துன்பங்கள் நம்மை வந்து நலியா | துன்பங்கள், பாவங்கள், வெறுப்பு, வேட்கை, தம்மை வசப்படுத்த முயற்சிக்க வேண்டாம் |
| 8. | இராவணனாலும் பிறராலும் இடர்கள் நலியா | வறுமை, செல்வம், கோபம், மகிழ்ச்சி, வெறுப்பு தம்மை அச்சுறுத்த வேண்டாம் |
| 9. | பிரம்மா, மால், தேவர்கள், கெட்ட காலங்கள், அலைகடல், மேரு ஆகியவற்றால் நன்மையே | ஐம்பொறிகளாகிய காக்கைகளே தம்மை வருத்த வேண்டாம் |
| 10. | புத்தர், சமணர்களால் நமக்குத் தீமை வராது. திருநீற்றுக்காப்பு நம்மைக் காக்கும் | சுருக்கம், பெருக்க, காலநிலை, செல்வம், வறுமை தம்மிடம் வரவேண்டாம் |
| 11. | இப்பதிகம் ஓதும் அடியார் வானுலகில் அரசு புரிவர் | அப்பரின் பதிகம் பத்துப் பாடல்களோடு நிறைவடைகிறது. |

2354. பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர் கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே. 1

நல்வினை – பொன் விலங்கு
தீவினை – இரும்பு விலங்கு. விலங்கு விலங்குதான். விலங்கைப் பார்த்து அஞ்ச வேண்டுமேயன்றி பொன்னைப் பார்த்துப் பின் செல்லாதீர்கள் என்கிறார் சுவாமிகள்.

நிலையின்மையும் அழிதலுடைமையும் உடைய உலகப் பொருள்களாகிய பெரிய கடலிலே தடுமாறுகின்ற நல்வினை தீவினைகளாகிய இருவினைகளே! நீங்கள் எனக்கு நலம் செய்வீர் அல்லீர். இந்த நிலையின்மையை உடைய பெரிய உடலாகிய கடலைச் சிறிது, சிறிதாக அரித்துத் தின்னும் உங்களுக்குத் தின்றற்கு உரிய பொருள் எதுவும் என்னிடத்தில் இல்லை. ஏனெனில் யான் தேவர்கள் தலைவனாய், எனக்கும் தலைவனாய்க் குளிர்ந்த பெரிய ஆரூரில் உள்ள பெரிய கடல் போல்வானாய்த் தன்னைத் தொடர்ந்த அடியார்களைத் தன் திருவடிப் பேரின்பத்தில் அடங்குமாறு செய்கின்ற எம்பெருமானுடைய திருவடிகளைத் தொடர்வதில் இடையீடு இல்லாமல் தொடர்ந்து ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றேன். அழிந்து போகக் கூடியவர்களே! இடையில் நின்று என்னைத் தடுக்காதீர்கள். கெடுவீர்கள் – வைதுரை (சாப மொழி). இடறுதல் – இடை நின்று தடுத்தல்.

2355. ஐம்பெருமா பூதங்காள் ஒருவீர் வேண்டிற்
றொருவீர்வேண் டீரீண்டிவ் வவனி யெல்லாம்
உம்பரமே உம்வசமே யாக்க வல்லீர்க்
கில்லையே நுகர்போகம் யானேல் வானோர்
உம்பருமா யூழியுமா யுலகே ழாகி
ஒள்ளாரூர் நள்ளமிர்தாம் வள்ளல் வானோர்
தம்பெருமா னாய்நின்ற அரனைக் காண்பேன்
தடைப்படுவேனாக்கருதித் தருக்கேன் மின்னே. 2

ஐம்பெருமா பூதங்காள் – "நிலந்தீ நீர்வளி விசும்போடைந்துங் கலந்த மயக்கம் உலகம்" (தொல். பொருள். 635)

ஐம்பெரும் பூதங்களே! உங்களிலே ஒருவர் விரும்பியதை மற்றவர் விரும்பாது இவ்வுலகம் முழுதையும் உம்மால் தாங்கப்படுவதாக்கி உம் வசப்படுத்துவதில் நீங்கள் ஆற்றலுடையீர். உங்களுக்கு என்பால் நுகரத்தக்க இன்பம் தரும் பொருள் ஒன்றுமில்லை. ஏனெனில் யான் தேவர்களும் தேவருலகமும் ஊழிகளும் ஏழு உலகங்களுமாகி, வள்ளலாய்த் தேவர் தலைவனாய், ஒளி பொருந்திய ஆரூரில் குளிர்ந்த அமுதமாக இருக்கும் அரனை இடையீடு இன்றித் தொடர்ந்து எப்பொழுதும் காண்பேன் ஆவேன். உங்களுடைய இடையூறுகளில் என்னை அகப்படுவேனாய்க் கருதிச் செருக்குக் கொள்ளாதீர்கள்.

**2356.** சில்லுருவிற் குறியிருத்தி நித்தல் பற்றிச்
செழுங்கண்ணால் நோக்குமிது வூக்க மன்று
பல்லுருவில் தொழில்பூண்ட பஞ்ச பூதப்
பளகீரும் வசமன்றே பாரே லெல்லாம்
சொல்லுருவிற் சுடர்மூன்றாய் உருவம் மூன்றாய்த்
தூநயனம் மூன்றாகி ஆண்ட ஆரூர்
நல்லுருவிற் சிவனடியே யடைவேன் நும்மால்
நமைப்புண்ணேன் கமைத்துநீர் நடமின்
களே. 3

சில்லுரு – அழிகின்ற சிறு உருவங்கள்.
குறி – குறிக்கோள்
பளகீர் – பொய்ம்மையுடையீர்
பார் – உலகம். கமைத்து – நுமக்கு இணங்காமையைப் பொறுத்து
நமைப்புண்ணுதல் – தேய்க்கப்படுதல்; கெடுக்கப் படுதல்

பல வடிவங்களில் திரிந்து வேறுபடுகின்ற ஐம்பூதங்களாகிய பொய்ம்மையுடையீர்! அழிகின்ற சில உருவங்களைக் குறிக்கோளாகக் கொண்டு நாடோறும் அவற்றை விரும்பிப் புறத்தில் அழகாக உள்ள கண்களால் பார்க்கும் இச்செயல் நல்லொழுக்கம் ஆகாது. இவ்வுலகம் முழுதும் உன் வசப்பட்டிருப்பது போதாதா? யானோ ஐம்புலங்களில் ஒன்றாகச் சொல்லப்படுகின்ற உருவத்தினை உடைய ஞாயிறு திங்கள் தீ என்ற முச்சுடர்களாய், அயன் அரி அரன் என்ற உருவம் மூன்றாய், அச்சுடர்களாகிய கண்கள் மூன்றாய்க் கொண்டு, இவ்வுலகத்தை ஆளும் ஆரூரில் உள்ள நல்ல செந்நிறத்தவனாகிய சிவனடிகளையே அடைவேனாக உள்ளேன். உம்மால் தேய்க்கப்படுவேன் அல்லேன். உமக்கு நான் இணங்காததைப் பொறுத்துக் கொண்டு நுமக்கு வயப்படும் வேற்றுப் பொருள்களை நோக்கிச் செல்லுங்கள்.

**2357.** உன்னுருவிற் சுவையொளியூ றோசை நாற்றத்
துறுப்பினது குறிப்பாகு மைவீர் நுங்கள்
மன்னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க் கையோ
வையகமே போதாதே யானேல் வானோர்
பொன்னுருவைத் தென்னாரூர் மன்னு குன்றைப்
புவிக்கெழிலாஞ் சிவக்கொழுந்தைப்
புகுந்தென் சிந்தை
தன்னுருவைத் தந்தவனை யெந்தை தன்னைத்
தலைப்படுவேன் துலைப்படுப்பான்
தருக்கேன் மின்னே. 4

பொறியை உறுப்பு என்றும்
புலனைக் குறிப்பு என்றும் பாடுகிறார்.
மன்உருவம் – மயக்கம் நிலைபெற்ற உருவம்

விரும்பி நினைக்கப்படும் உடலிலே, வாய் கண் உடல் செவி மூக்கு என்ற ஐம்பொறிகளில் புலன்களாக நின்ற சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐவீர்களே! உங்களுடைய மயக்கம் பொருந்திய உருவங்களின் இயற்கைகளால் சுவைக்கின்ற உங்களுக்கு இந்தப் பரந்த உலகம் போதாதா? யானோ தேவர்களுக்கு அழகிய உருவினைத் தந்தவனாய், அழகிய ஆரூரில் நிலைபெற்ற மலைபோல்வானாய், இவ்வுலகுக்கு எல்லாம் அழகாகும் சிவக்கொழுந்தாய், என் சிந்தையுள்ளே புகுந்து அதன்கண் தன்னுருவைத் தந்த என் தலைவனை எப்பொழுதும் அணைந்திருப்பேன். ஆதலால் என்னை உம் அளவில் படுத்தற்குச் செருக்கிக் கொண்டு என்பக்கல் வாராதீர்கள்.

2358. துப்பினைமுன் பற்றறா விறலே மிக்க
சோர்வுபடு சூட்சியமே சுகமே நீங்கள்
ஒப்பனையைப் பாவித்திவ் வுலக மெல்லாம்
உழறுமிது குறைமுடிப்பீர்க் கரிதே யென்றன்
வைப்பினைப்பொன் மதிலாரூர் மணியை வைகல்
மணாளனையெம் பெருமானை வானோர் தங்கள்
அப்பனைச்செப் பிடவடைவேன் நும்மால் நானும்
ஆட்டுணே னோட்டந்தீங் கலையேன் மின்னே. 5

துப்பு – துப்புரவு; நுகர்ச்சிப் பொருள்.
சோர்வுபடு சூட்சியம் – வஞ்சகம்.
சூழ்ச்சி என்பதன் மரூஉ சூட்சி.
ஒப்பனை – செயற்கை அழகு
அலைத்தல் – வருத்துதல்

நுகர்பொருள்களிடத்துப் பண்டுதொட்டுப் பற்றுக்கொள்ளுதல் நீங்காமைக்கு ஏதுவாகிய வெற்றி மிக்க பிறர் மயங்குதற்குக் காரணமான வஞ்சனைகளே! நீங்கள் செயற்கை அழகைப் பரப்பி நீங்கள் கருதிய செயலைச் சுகமாக முடிப்பதற்கு இவ்வுலகம் முழுதும் உழலும் செயல் உங்களுக்கு அரிதன்று. ஆனால் அடியேன் என் சேமநிதியாய் அழகிய மதில்களை உடைய ஆரூரில் மாணிக்கமாய், வைகல் என்ற தலத்தில் மணவாளனாய், எனக்கும் தேவர்களுக்கும் பெருமானாய் உள்ளவனை முறைப்படி அடைபவன். ஆதலின் உங்களால் நான் மற்றவர்போல ஆட்டுவிக்கப்பட மாட்டேன். ஓடிவந்து என்னை வருத்த முயலாதீர்கள்.

---

2359. பொங்குமத மானமே ஆர்வச் செற்றக்
குரோதமே யுலோபமே பொறையே நீங்கள்
உங்கள்பெரு மாநிலத்தி னெல்லை யெல்லாம்
உழறுமிது குறைமுடிப்பீர்க் கரிதே யானேல்
அங்கமலத் தயனொடுமா லாகி மற்று
மதற்கப்பா லொன்றாகி யறிய வொண்ணாச்
செங்கனகத் தனிக்குன்றைச் சிவனை யாரூர்ச்
செல்வனைச்சேர் வேன்நும்மாற் செலுத்து ணேனே. 6

மானம் – மாண்பிறந்த மானம் அது உயர்ந்தோரை வணங்க மறுத்தல். ஆர்வம் – காமம்.
செற்றம் – பகை. பொறை – சுமை, துன்பம்

பெருமிதம் கொண்ட செருக்கே! மாண்பு இழந்த மானமே! காமமே! பகையே! கோபமே! கஞ்சத்தனமே! துன்பச்சுமைகளே! நீங்கள் உங்கள் ஆளுகைக்கு உட்பட்ட இப்பேருலகத்தின் எல்லைகாறும் நீங்கள் கருதிய செயலை நிறைவேற்றுதற்குச் சுற்றித் திரிவது உங்களுக்கு அரிது அன்று. ஆனால் யானோ செந்தாமரையில் தங்கிய பிரமனும் திருமாலும் ஆகி அவர்களையும் கடந்த ஒன்றே ஆகிய பரம்பொருளாகி, எவராலும் தம் முயற்சியால் அறிய முடியாத ஒப்பற்ற செம்பொற் குன்று போன்ற சிவபெருமானாகிய ஆரூர்ச் செல்வனைச் சேர்கின்றவன். உம்மால் செலுத்தப்படுவேன் அல்லேன்.

**2360.** இடர்பாவ மெனமிக்க துக்க வேட்கை
வெறுப்பேயென் றனைவீரும் உலகை யோடிக்
குடைகின்றீர்க் குலகங்கள் குலுங்கி நுங்கள்
குறிநின்ற தமையாதே யானேல் வானோர்
அடையார்தம் புரமூன்று மெரிசெய் தானை
அமரர்தம் பெருமானை யரனை ஆரூர்
உடையானைக் கடுகச்சென் றடைவேன் நும்மா
லாட்டுணே னோட்டந்தீங் கலையேன்
மின்னே. 7

அடையார் – பகைவர்

துன்பங்களே! பாவங்களே! மிக்க துயரம் தரும் வேட்கையே! வெறுப்பே! எல்லீரும் உலகுகளைச் சுற்றிச் சுழன்று அவற்றை வசப்படுத்த அவை தடுமாறி உங்கள் இட்ட வழக்காக இருத்தல் போதாதா? யானோ தேவர்களின் பகைவரான அசுரர்களின் முப்புரங்களையும் எரித்துத் தேவர்கள் பெருமானாய்த் தீங்குகளைப் போக்குபவனாயுள்ள ஆரூர்ப் பெருமானை விரையச் சென்று அடையப் போகிறேன். உம்மால் செயற்படுத்தப்படுவேன் அல்லேன். என்பக்கல் ஓடி வந்து என்னைத் துன்புறுத்தி நும் வசப்படுத்த முயலாதீர்கள்.

---

**2361.** விரைந்தாளும் நல்குரவே செல்வே பொல்லா
வெகுட்சியே மகிழ்ச்சியே வெறுப்பே நீங்கள்
நிரைந்தோடி மாநிலத்தை யரித்துத் தின்பீர்க்
கில்லையே நுகர்போகம் யானேல் வானோர்
கரைந்தோட வருநஞ்சை யமுது செய்த
கற்பகத்தைத் தற்பரத்தைத் திருவா ரூரில்
பரஞ்சோதி தனைக்காண்பேன் படேன்நும் பண்பிற்
பரிந்தோடி யோட்டந்து பகட்டன் மின்னே.
8

ஆளும் – ஏவல் கொள்ளும். செல்வத்தால் பயன் கொள்ளுதலினும், வறுமையால் துயருழத்தல் விரைவுடைத்தாதல் பற்றி "விரைந்தாளும் நல்குரவே" என்று அருளினார். வெருட்சி – சினம். கரைந்து – ஓலமிட்டு. தற்பரம் – உயிருக்கு மேற்பட்ட பொருள். பரிந்து – விரைந்து. பகட்டல் – வெருட்டல்.

விரைந்து வந்து ஏவல் கொள்ளும் வறுமையே! செல்வமே! கொடிய கோபமே! மகிழ்ச்சியே! வெறுப்பே! நீங்கள் வரிசையாகச் சென்று இவ்வுலகத்தைச் சிறிது சிறிதாகக் குறைத்து உண்ணுவீர்கள். உங்களுக்கு நுகரத்தக்க இன்பம் கிட்டவில்லையா? யானோ தேவர்கள் ஓலமிட்டு ஓடுமாறு வெளிப்பட்ட விடத்தை உண்ட கற்பகமாய், உயிருக்கு மேம்பட்ட பொருளாய்த் திருவாரூரில் உள்ள மேம்பட்ட சோதி வடிவினனைக் காண்கின்றவன். உங்களுடைய பண்புகளில் அகப்பட மாட்டேன். விரைந்து ஓடிவந்து என்னை அச்சுறுத்த முயலாதீர்கள்.

**2362.** மூள்வாய தொழிற்பஞ்சேந் திரிய வஞ்ச
முகரிகாண் முழுதுமிவ் வுலகை யோடி
நாள்வாயு நும்முடைய **மம்ம ராணை**
நடாத்துகின்றீர்க் கமையாதே யானேல் வானோர்
நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற
நெடுந்தூணைப் பாதாளக் கருவை யாரூர்
ஆள்வானைக் கடுகச்சென் றடைவேன் நும்மா
லாட்டுணே ணோட்டந்தீங் கலையேன் மின்னே. 9

முகரி – காக்கை. புண்ணுற்ற உடம்பினை, அதன்கண் உள்ள உயிரின் துன்பம் நோக்காது மொய்த்துக் கொத்தித் தின்னும் காக்கை போலப் பல வழிகளில் ஈர்த்துத் துன்புறுத்தலின் பஞ்சேந்திரியங்களைக் காக்கைகள் என்றார்.

தத்தம் தொழில்களிலேயே ஈடுபட்ட ஐம்பொறிகளாகிய காக்கைகளே! இவ்வுலகம் முழுவதும் சுற்றித் திரிந்து ஒவ்வொரு நாளும் **மயக்கமாகிய ஆட்சியை** நடத்துகின்ற உமக்கு இன்னும் மனநிறைவு ஏற்படவில்லையா? யானோ தேவருலகின் உச்சியைத் தாங்கி நிற்கும் பெருந்தூணாய்ப் பாதாளத்துக்கும் அடிநிலையாய் ஆரூரை ஆளும் பெருமானை விரைந்து சென்று அடைவேன். உங்களால் செயற்படுத்தப் படுவேன் அல்லேன். ஓடி வந்து என்னை வருத்த முயலாதீர்கள்.

**2363.** சுருக்கமொடு பெருக்கநிலை நித்தல் பற்றித்
துப்பறையென் றனைவீரிவ் வுலகை யோடிச்
செருக்கிமிகை செலுத்தியும செய்கை வைகல்
செய்கின்றீர்க் கமையாதே யானேல் மிக்க
தருக்கிமிக வரையெடுத்த அரக்கன் ஆகந்
தளரவடி யெடுத்தவன்றன் பாடல் கேட்டு
இரக்கமெழுந் தருளியஎம் பெருமான் பாதத்
திடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே. 10

வைகல் – நாள்தோறும்
ஆகம் – உடம்பு

சுருக்கமே! பெருக்கமே! காலநிலையே! செல்வமே! வறுமையே! இவ்வுலகைச் சுற்றிப் பெருமிதம் கொண்டு உங்கள் ஆட்சியைச் செலுத்தி நாடோறும் உங்கள் செயலை நிகழ்த்திக் கொண்டிருக்கும் செயல் போதாதோ? யானோ மிகவும் செருக்குற்றுக் கயிலையைப் பெயர்த்த இராவணனுடைய உடல் தளருமாறு அவனை அழுத்திப்பின் அவன் பாடலைக் கேட்டு இரங்கி அவனுக்கு அருளிய எம்பெருமானுடைய திருவடிகளிலே இடையீடு இன்றிச் சேர்ந்துள்ளேன். அழிந்து போகக் கூடிய நீங்கள் என்னைத் துன்புறுத்த முயலாதீர்கள்.

## 28. திருவாரூர்

(இப்பதிகம் போலும் என்னும் முடிபுடைய தொடர்க் கோவையால் இறைவனது இயல்பை விளக்கியருளியது)

ப.தொ.எண் : 241 பதிக எண் : 28

**2364.** நீற்றினையும் நெற்றிமே லிட்டார் போலும்
நீங்காமே வெள்ளெலும்பு பூண்டார் போலும்
காற்றினையுங் கடிதாக நடந்தார் போலுங்
கண்ணின்மேற் கண்ணொன் றுடையார் போலும்
கூற்றினையுங் குரைகழலால் உதைத்தார் போலுங்
கொல்புலித்தோ லாடைக் குழகர் போலும்
ஆற்றினையுஞ் செஞ்சடைமேல் வைத்தார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 1

குழகர் – அழகர். இப்பதிகம் மூலவரைப் போற்றியருளியது.

அழகிய திருவாரூர்த் திருமூலத்தானத்தில் உள்ள பெருமானார் நெற்றிக்கண் ஒன்று உடையாராய், நெற்றியில் திருநீறு அணிந்தவராய், வெள்ளிய எலும்புகளை விடாமல் அணிந்தவராய்க் காற்றைவிட விரைவாகச் செல்பவராய், ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த திருவடியால் கூற்றுவனை உதைத்தவராய்த் தம்மால் கொல்லப்பட்ட புலித்தோல் ஆடையை உடுத்த இளையராய்க் கங்கையையும் சடைமேல் வைத்தவராய், அகக்கண்களுக்குக் காட்சி நல்குகிறார்.

**2365.** பரியதோர் பாம்பரைமே லார்த்தார் போலும்
பாசுபதம் பார்த்தற் களித்தார் போலும்
கரியதோர் களிற்றுரிவை போர்த்தார் போலும்
கபாலங்கட் டங்கக் கொடியார் போலும்
பெரியதோர் மலைவில்லா எய்தார் போலும்
பேர்நந்தி யென்னும் பெயரார் போலும்
அரியதோர் அரணங்கள் அட்டார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 2

பாசுபதம் – பசுபதியாகிய சிவனது ஆற்றல் பெற்ற அம்பு
பார்த்தன் – அருச்சுனன் கட்டங்கம் – படைக்கலம்
அரணங்கள் – மதில்கள்

அணி ஆரூர்த் திருமூலட்டானனார் பருத்த பாம்பினை இடையில் இறுக்க அணிந்தவராய், அருச்சுனனுக்குப் பாசுபதாத்திரம் வழங்கியவராய்க் கரிய யானைத் தோலினைப் போர்த்தவராய், மண்டை ஓட்டினையும் கட்டங்கப் படை எழுதிய கொடியினையும் உடையவராய்ப் பெரிய மலையை வில்லாகக் கொண்டு அம்பு எய்தவராய், நந்தி என்ற பெயரினையும் உடையவராய்ப் பகைவருடைய அழித்தற்கரிய மும்மதில்களையும் அழித்தவராய், நம் மனக்கண் முன் காட்சி வழங்குகின்றார்.

**2366.** துணியுடையார் தோலுடைய ரென்பார் போலுந்
தூய திருமேனிச் செல்வர் போலும்
பிணியுடைய அடியாரைத் தீர்ப்பார் போலும்
பேசுவார்க் கெல்லாம் பெரியார் போலும்
மணியுடைய மாநாகம் ஆர்ப்பார் போலும்
வாசுகிமா நாணாக வைத்தார் போலும்
அணியுடைய நெடுவீதி நடப்பார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே.

**3**

கீளும் கோவணமும் ஆகிய குறைந்த உடைகளையும் தோல் உடையையும் உடையவராய்த் தூய திருமேனியை உடைய செல்வராய், அடியார்களுடைய பிணிகளை நீங்குமாறு போக்குபவராய், மொழியைக் கடந்த பெரும்புகழாளராய், இரத்தினங்களை உடைய மேம்பட்ட நாகங்களை அணிந்தவராய், வாசுகி என்ற பாம்பினைத் தம் வில்லின் நாணாகக் கொண்டவராய், அழகிய நீண்ட வீதிகளில் உலாவுபவராய், அழகிய ஆரூர்ப் பெருமானார் மனக்கண் முன் காட்சி வழங்குகிறார்.

**2367.** ஒட்டகத்தே ஊணாக வுகந்தார் போலும்
ஒருருவாய்த் தோன்றி உயர்ந்தார் போலும்
நாட்டகத்தே **நடைபலவும் நவின்றார் போலும்**
ஞானப் பெருங்கடற்கோர் நாதர் போலும்
காட்டகத்தே யாட லுடையார் போலும்
காமரங்கள் பாடித் திரிவார் போலும்
ஆட்டகத்தில் ஆனைந் துகந்தார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே.

**4**

அணி ஆரூர்த் திருமூலட்டானனார் மண்டை யோட்டில் பிச்சையெடுக்கும் உணவையே விரும்பியவராய், அனற் பிழம்பாய்த் தோன்றி அடிமுடி காண முடியாதவாறு உயர்ந்தவராய், நாட்டிலே மக்கள் பயின்று வரப் பல நெறிகளையும் கூறியவராய், ஞானப் பெருங்கடலுக்கு உரிமை பூண்ட தலைவராய்ச் சுடுகாட்டில் கூத்து நிகழ்த்துபவராய், சீகாமரம் என்ற பண்ணில் அமைந்த பாடல்களைப் பாடித் திரிபவராய்ப் பஞ்சகவ்விய அபிடேகத்தை உகப்பவராய் நம்மனக்கண் முன் காட்சி வழங்குகிறார்.

பதிக மகுடம் – அணியாரூர்த் திருமூலட்டானரே. நடை பலவும் நவின்றார். உயிர்களின் பக்குவ பேதத்துக்கு ஏற்றபடி அறிந்து ஒழுகும்படி பல சமய நெறிகளையும் அருளினார். ஆறு சமயத்தவரைத் தேற்றுந் தகையன”

– தேவாரம்

**2368.** ஏனத் திளமருப்புப் பூண்டார் போலும்
இமையவர்க ளேத்த இருந்தார் போலும்
கானக்கல் லாற்கீழ் நிழலார் போலுங்
கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டர் போலும்
வானத் திளமதிசேர் சடையார் போலும்
வான்கயிலை வெற்பின் மகிழ்ந்தார் போலும்
ஆனத்து முன்னெழுத்தாய் நின்றார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 5

திருமால் பன்றியாய்த் தோன்றிய சில நாட்களுக்குள்ளே அழித்தமையின் "இளமருப்பு" என்றார்.

ஆனத்து – எருதின் மேல் விளங்குகின்ற.

பன்றியின் முற்றாத கொம்பினை அணிந்தவராய்த் தேவர்கள் வழிபடும்படியாகத் தங்கியிருப்பவராய்க் காட்டில் உள்ள கல்லால மரத்தின் கீழ் அமர்ந்தவராய்க் கடல் நஞ்சினை உண்டு கறுத்த கழுத்தினராய்ப் பிறை சேர்ந்த சடையினராய், உயர்ந்த கயிலை மலையை உகந்து உறைபவராய், அகரமாகிய எழுத்து ஏனைய எழுத்துக்களின் தோற்றத்துக்கு காரணமாக இருப்பது போல ஏனைய பொருள்களுக்கெல்லாம் காரணனாய், காளையை இவர்ந்தவராய் அடியவர்கள் மனக்கண்முன் அழகிய ஆரூர்ப் பெருமானார் காட்சி வழங்குகிறார்.

**2369.** காமனையுங் கரியாகக் காய்ந்தார் போலுங்
கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டர் போலும்
சோமனையுஞ் செஞ்சடைமேல் வைத்தார் போலும்
சொல்லாகிச் சொற்பொருளாய் நின்றார் போலும்
நாமனையும் வேதத்தார் தாமே போலும்
நங்கையோர் பால்மகிழ்ந்த நம்பர் போலும்
ஆமனையுந் திருமுடியார் தாமே போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 6

சோமன் – சந்திரன். ஆம் – நீர்

அணி ஆரூர்த் திருமூலட்டானத்துப் பெருமானார் மன்மதனைச் சாம்பலாகுமாறு கோபித்துக் கடல் விடத்தை உண்டு நீலகண்டராய்ப் பிறையையும் சடையில் சூடிச் சொல், சொற்பொருள், நாவால் உச்சரிக்கப்படும் வேதம் இவற்றின் வடிவினராய்ப் பார்வதி பாகராய்க் கங்கையை முடியில் வைத்தவராய் அடியவர் மனக்கண்ணுக்குக் காட்சி வழங்குகிறார்.

**2370.** முடியார் மதியரவம் வைத்தார் போலும்
மூவுலகுந் தாமேயாய் நின்றார் போலும்
செடியார் தலைப்பலிகொண் டுழல்வார் போலும்
செல்கதிதான் கண்ட சிவனார் போலும்
கடியார்நஞ் சுண்டிருண்ட கண்டர் போலுங்
கங்காள வேடக் கருத்தர் போலும்
அடியா ரடிமை யுகப்பார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 7

ஆர் – ஆத்திமாலை. செடி – முடை நாற்றம்
கண்ட – படைத்த. கடிஆர் – நீக்குதல்
கங்காளம் – எலும்புக்கூடு அடிமை – தொண்டு

அணி ஆரூர்த் திருமூலட்டானத்துப் பெருமானார் முடியில் பிறையும் பாம்பும் சூடி, மூவுலகும் தாமேயாய்ப் பரந்து புலால் நாற்றம் கமழும் மண்டையோட்டில் பிச்சை ஏற்றுத் திரிந்து வீடுபேற்றிற்கு உரிய வழியைக் காட்டி, மற்றவர் நீக்கும் நஞ்சுண்டு நீலகண்டராய், எலும்புக் கூட்டினை அணிந்த வேடத்தை உடைய தலைவராய், அடியார்களுடைய அடிமைப் பணியினை உகப்பவராய் மனக்கண்முன் அடியவர்களுக்குக் காட்சி வழங்குகின்றார்.

2371. இந்திரத்தை யினிதாக ஈந்தார் போலும்
இமையவர்கள் வந்திறைஞ்சும் இறைவர் போலும்
சுந்தரத்த பொடிதன்னைத் துதைந்தார் போலுந்
தூத்தூய திருமேனித் தோன்றல் போலும்
மந்திரத்தை மனத்துள்ளே வைத்தார் போலும்
மாநாகம் நாணாக வளைத்தார் போலும்
அந்திரத்தே யணியாநஞ் சுண்டார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே.
8

இந்திரம் – தலைமை. துதைதல் – செறிந்து மிக்கிருத்தல்

அணி ஆரூர்த் திருமூலட்டானத்துப் பெருமானார் தலைமைப் பதவியைத் தக்கவருக்கு மகிழ்வோடு ஈந்து, தேவர்கள் வந்து வழிபடும் தலைவராய் அழகிய நீறு பூசி, மிகவும் தூய திருமேனியை உடைய தலைவராய், அடியவர்கள் உள்ளத்தே தம் திருவைந்தெழுத்தை நிலையாக அமைத்து, வாசுகியைத் தம் மலைவில்லின் நாணாக, வில்லினை வளைத்து இணைத்து, அழகிய நிலைபெற்ற அணியாகுமாறு விடம் உண்டு நீலகண்டராய் நம் மனக்கண்முன் காட்சி வழங்குகின்றார்.

2372. பிண்டத்தைக் காக்கும் பிரானார் போலும்
பிறவி யிறவி யிலாதார் போலும்
முண்டத்து முக்கண் ணுடையார் போலும்
முழுநீறு பூசும் முதல்வர் போலும்
கண்டத் திறையே கறுத்தார் போலும்
காளத்தி காரோணம் மேயார் போலும்
அண்டத்துக் கப்புறமாய் நின்றார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே.
9

பிண்டம்–உடம்புகள். முண்டம்–நெற்றி. இறை–சிறிது

எல்லா உடம்புகளையும் பாதுகாக்கும் தலைவரான திருவாரூர்ப் பெருமானார் பிறப்பு இறப்பு அற்றவராய், நெற்றியில் மூன்றாவது கண்ணை உடையவராய், உடல் முழுதும் நீறு பூசும் தலைவராய்க் கழுத்து சிறிதே கறுத்தவராய்க் காளத்தி, குடந்தை, நாகை என்ற காரோணப்பதிகள் ஆகியவற்றை உகந்தருளியிருப்பவராய், அண்டத்துப் புறத்தும் உள்ளவராய் நம் மனக்கண்முன் காட்சி வழங்குகிறார்.

2373. ஒருகாலத் தொன்றாகி நின்றார் போலும்
ஊழி பலகண் டிருந்தார் போலும்
பெருகாமே வெள்ளந் தவிர்த்தார் போலும்
பிறப்பிடும்பை சாக்காடொன் றில்லார் போலும்
உருகாதார் உள்ளத்து நில்லார் போலும்
உகப்பார் மனத்தென்றும் நீங்கார் போலும்
அருகாக வந்தென்னை யஞ்சே லென்பார்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே.
10

அணி ஆரூர்த் திருமூலத்தானப் பெருமான் ஒரு காலத்தில் தாம் ஒருவரேயாகிப் பல ஊழிக் காலங்களையும் கண்டு, கங்கையைப் பெருகாதபடி சடையில் கொண்டு தவிர்த்து, பிறப்பு துயரம் சாக்காடு என்பன இல்லாதவராய், உருகாத மனத்தவர் உள்ளத்தில் உகந்து தாங்காதவராய், தம்மை விரும்புவர் உள்ளத்தை என்றும் நீங்காதவராய் அருகில் வந்து எனக்கு அஞ்சேல் என்று அருள் செய்பவர் ஆவர்.

2374. நன்றாக நடைபலவும் நவின்றார் போலும்
ஞானப் பெருங்கடற்கோர் நாதர் போலும்
கொன்றாகிக் கொன்றதொன் றுண்டார் போலுங்
கோளரக்கர் கோன்தலைகள் குறைத்தார் போலும்
சென்றார் திரிபுரங்க ளெய்தார் போலுந்
திசையனைத்து மாயனைத்து மானார் போலும்
அன்றாகில் ஆயிரம் பேரார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 11

அணி ஆரூர்த் திருமூலட்டானப் பெருமானார் நல்ல ஒழுக்க நெறிகளை நூல்கள் வாயிலாக அறிவித்து ஞானப்பெருங்கடற்கு உரிமை உடைய தலைவராய், வேள்வியில் கொல்லப்பட்டதனை வேள்வி செய்யும் அடியவர் உகப்பிற்காக நுகர்பவராய், இராவணன் தலைகள் பத்தினையும் நசுக்கியவராய்ப் பகைவருடைய திரிபுரங்களை அம்பு எய்து அழித்தவராய்த் திசைகளிலும் திசைகளில் உள்ள பொருள்களிலும் பரவியவராய், ஒரு பெயரும் அவருடைய பெயர் அன்று ஆயினும் அடியார் உகப்பிற்காக ஆயிரம் திருநாமங்களை உடையவராய், அடியவர்கள் மனக்கண்ணுக்குக் காட்சி வழங்குகின்றார். சென்றார் – மெலித்தல் விகாரம்.

நடை – ஒழுக்கம். நவின்றது, நூலால் என்க. கொன்றது – வேள்வியுட் கொல்லப்பட்டது. அது தீது ஆயினும், நன்றென்று கருதிச் செய்வாரது கருத்து நோக்கி ஏற்றுக்கொள்கிறான் என்பது ஒரு கருத்து. இனி கொன்றது என்றது 'கொன்றதனால் ஆகிய பாவம்' எனக் கொண்டு, 'அதனை' கொலைத்தொழில் வடிவாய் நின்று நீக்கினார் எனக் கோடலுமாம். "கொன்றது" வினையைக் கொன்று நின்ற அக்குணம் என்று ஓரார்". (சித்தியார் 1–71). ஆயிரம் – அளவின்மை காட்டும் வழக்கு

## 29. திருவாரூர்

ப.தொ.எண் : 242 பதிக எண் : 29

ப.தொ.எண் 239, பதிகத்தின் மகுடம், 'ஆரூரிற் கண்டடியேன் அயர்த்தவாறே' என்பதாகும். இப்பதிகத்தின் மகுடம் 'அறியா தடிநாயேன் அயர்த்தவாறே' என்பதாகும். இரண்டையும் ஒப்பிட வேண்டும்.

2375. திருமணியைத் தித்திக்குந் தேனைப் பாலைத்
தீங்கரும்பின் இன்சுவையைத் தெளிந்த தேறல்
குருமணியைக் குழல்மொந்தை தாளம் வீணை
கொக்கரையின் சச்சரியின் பாணி யானைப்
பருமணியைப் பவளத்தைப் பசும்பொன் முத்தைப்
பருப்பதத்தில் அருங்கலத்தைப் பாவந் தீர்க்கும்
அருமணியை ஆரூரி லம்மான் தன்னை
அறியா தடிநாயே னயர்த்த வாறே. 1

செல்வம் தரும் சிந்தாமணியாய், இனிக்கும் தேன், பால், கருப்பஞ்சாறு, தெளிவாகிய அமுதம் போன்றவனாய்ச் சிறந்த ஆசிரியனாய், குழல் மொந்தை தாளம் வீணை கொக்கரை சச்சரி இவற்றின் தாளத்திற்கு ஏற்பக் கூத்து நிகழ்த்துபவனாய், எங்கும் கிட்டுதற்கு அரிய பெரிய இரத்தினம் பவளம் முத்து கிளிச்சிறை என்ற பொன் போன்றவனாய்ச் சீசைலத்தின் விலைமிக்க அணிகலனாய், பாவத்தைப் போக்கும் அரிய மாணிக்கமாய் உள்ள ஆரூர்ப் பெருமானை இதுகாறும் அறியாது நாய் போன்ற, அவன் அடியேன் மறந்திருந்தவாறு கொடியது. பாணியான் – இலயம்பட கைகொட்டி ஆடுதல்.

தேறல் – தேன். குரு – நிறம். குருமணி – சிறந்த ஆசிரியன். பாணி – தாளம் அருங்கலம் – விலைமிக்க அணிகலம். அயர்த்தல் – மறத்தல்.

**2376.** பொன்னேபோல் திருமேனி யுடையான் தன்னைப்
பொங்குவெண் ணூலானைப் புனிதன் தன்னை
மின்னானை மின்னிடையாள் பாகன் தன்னை
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தான் தன்னைத்
தன்னானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தத்துவனை யுத்தமனைத் தழல்போல் மேனி
அன்னானை ஆரூரி லம்மான் தன்னை
அறியா தடிநாயே னயர்த்த வாறே. 2

பொன்னார் மேனியனை, வெண்ணூல் அணிந்த புனிதனாய் ஒளி வீசுவானை, பார்வதி பாகனை, யானைத்தோல் போர்வையனைத், தன்வயம் உடையவனை, தன்னை ஒப்பார் பிறர் இல்லாதவனை, மெய்ப்பயனை, மேம்பட்டவனை, தழல்போன்ற செந்நிற மேனியனை – இவ்வாறெல்லாம் மனக் கண்ணுக்குக் காட்சி வழங்கும் ஆரூர்த் தலைவனை இதுகாறும் அறியாது அடிநாயேன் அயர்த்தவாறே.

தத்துவன் – உண்மைப் பொருளாயுள்ளவன். மின்னான் – மின்போலும் ஒளியுடையவன். தன்னான் – தன் வயமுடையவன். அன்னான் – அவன்.

**2377.** ஏற்றானை ஏழுலகு மானான் தன்னை
யேழ்கடலு மேழ்மலையு மானான் தன்னைக்
கூற்றானைக் கூற்ற முதைத்தான் தன்னைக்
கொடுமழுவாள் கொண்டதோர் கையான் தன்னைக்
காற்றானைத் தீயானை நீரு மாகிக்
கடிகமழும் புன்சடைமேற் கங்கை வெள்ள
ஆற்றானை ஆரூரி லம்மான் தன்னை
அறியா தடிநாயே னயர்த்த வாறே. 3

இடப வாகனனாய், ஏழ்கடலும் ஏழ்மலையும் ஏழுலகும் ஆகிப் பரந்திருப்பவனாய்க் கூற்றுவனாய்த் தருமராசருடைய ஏவலனான கூற்றை உதைத்தவனாய், மழுப்படை ஏந்திய கையனாய், காற்றும் தீயும் நீருமாகி நறுமணம் கமழும் செஞ்சடை மேல் கங்கையைத் தரித்தவனாய் உள்ள, ஆரூரிலுள்ள அம்மானை அறியாது அடிநாயேன் அயர்த்தவாறே.

**2378.** முந்திய வல்வினைகள் தீர்ப்பான் தன்னை
மூவாத மேனிமுக் கண்ணி னானைச்
சந்திரனும் வெங்கதிரு மாயி னானைச்
சங்கரனைச் சங்கக் குழையான் தன்னை
மந்திரமும் மறைப்பொருளு மானான் தன்னை
மறுமையும் இம்மையு மானான் தன்னை
அந்திரனை **ஆரூரி லம்மான் தன்னை**
**அறியா தடிநாயே னயர்த்த வாறே.** 4

முற்பிறப்புக்களில் செய்யப்பட்ட கொடிய வினைகளைத் தீர்ப்பவனாய், மூப்படையாத் திருமேனியில் மூன்று கண்கள் உடையவனாய்ச் சந்திரனும் சூரியனும் ஆகியவனாய், எல்லோருக்கும் நன்மை செய்பவனாய், சங்கினாலாகிய காதணியை உடையவனாய், மந்திரமும் வேதத்தின் பொருளும் மறுமையும் இம்மையுமாய் அழகுநிலை பெற்றிருக்கும் ஆரூரிலுள்ள அம்மானை அறியாது அடிநாயேன் அயர்த்தவாறே.

அம்திரன் – அழகு நிலைபெற்றவன். என்றும் ஒரு நிலையாய் இருப்பவன்.
பதிக மகுடம் – ஆரூரில் அம்மான் தன்னை அறியா தடிநாயேனயர்த்த வாறே.

2379. **பிறநெறி**யாய்ப் பீடாகிப் பிஞ்ஞ கனுமாய்ப்
பித்தனாய்ப் பத்தர் மனத்தி னுள்ளே
உறநெறியாய் ஓமமாய் ஈமக் காட்டில்
ஓரிபல விடநட்ட மாடி னானைத்
துறநெறியாய்த் தூபமாய்த் தோற்ற மாகி
நாற்றமாய் நன்மலர்மே லுறையா நின்ற
அறநெறியை ஆரூரி லம்மான் தன்னை
அறியா தடிநாயே னயர்த்த வாறே. 5

பீடு – பெருமை. பிஞ்ஞகன் – தலைக்கோலம் உடையவன். உற – உறவு. ஓரி – நரி.

**பிறக்கும் வழிகளாகவும்**, பெருமையாகவும், தலைக்கோலம் அணிந்தவனாகவும், பித்தனாகவும், அடியவர்கள் உள்ளத்தில் உறவுதரும் வழியாகவும், வேள்வியாகவும் அமைந்து, சுடுகாட்டிலுள்ள நரிகள் அஞ்சி ஓடக் கூத்தாடுபவனாய்த் துறவு நெறியாகவும் புகையாகவும் காட்சி வழங்கிப் பூவில் நறுமணம் போல உலகெங்கும் பரந்துள்ளவனாய் உள்ள அறநெறியை அறிவித்த ஆரூர் அம்மானை அறியாது அடிநாயேன் அயர்த்தவாறே.

2380. பழகியவல் வினைகள் பாற்று வானைப்
பசுபதியைப் பாவகனைப் பாவந் தீர்க்கும்
குழகனைக் கோளரவொன் றாட்டு வானைக்
கொடுகொட்டி கொண்டதோர் கையான் தன்னை
விழவனை வீரட்டம் மேவி னானை
விண்ணவர்க ளேத்தி விரும்பு வானை
அழகனை ஆரூரி லம்மான் தன்னை
அறியா தடிநாயே னயர்த்த வாறே. 6

பாற்றுவான் – நீக்குவான். பாவகன் – அக்கினிதேவன். விழவன் – விழாக்களை உடையவன்.

பழக்கத்தினால் ஏற்படும் வருவினையை அழிப்பவனாய், ஆன்மாக்களுக்குத் தலைவனாய், அக்கினித் தேவனாய்ப் பாவங்கள் போக்கும் இளையவனாய், பாம்பினை ஆட்டுபவனாய்க் கொடுகோட்டிப் பறையைக் கையில் கொண்டவனாய், விழாக்களில் மேவி இருப்பவனாய், வீரட்டத்தில் உறைபவனாய்த் தேவர்கள் துதித்து விரும்பும் அழகனாய் உள்ள ஆரூர் அம்மானை அறியாது அடி நாயேன் அயர்த்தவாறே.

2381. சூளா மணிசேர் முடியான் தன்னைச்
சுண்ணவெண் ணீறணிந்த சோதி யானைக்
கோள்வா யரவ மசைத்தான் தன்னைக்
கொல்புலித்தோ லாடைக் குழகன் தன்னை
நாள்வாயும் பத்தர் மனத்து ளானை
நம்பனை நக்கனை முக்க ணானை
ஆள்வானை ஆரூரில் அம்மான் தன்னை
அறியா தடிநாயே னயர்த்த வாறே. 7

கோள்வாய் – கொல்லும்வாய். சூளாமணி – உச்சிமணி நாள்வாயும் – நாள்தோறும் வந்து வழிபடுகின்ற. ஆள்வான் – எல்லா உலகங்களையும் எல்லாப் பொருள்களையும் ஆளுகின்றவன்

சூளாமணியை அணிந்த முடியை உடையவனாய், திருநீறு தரித்த ஒளியினனாய், கொடிய பாம்பினை, இடையில் இறுக்கிக் கட்டியவனாய்ப் புலித்தோல் ஆடையை அணிந்த இளையவனாய், எப்பொழுதும் அடியவர் உள்ளத்தில் இருந்து அவரால் விரும்பப்படுபவனாய், ஆடை அற்றவனாய், முக்கண்ணனாய், எல்லோரையும் ஆள்பவனாய் உள்ள ஆரூர் அம்மானை அறியாது அடி நாயேன் அயர்த்தவாறே.

2382. முத்தினை மணிதன்னை மாணிக் கத்தை
மூவாத கற்பகத்தின் கொழுந்து தன்னைக்
கொத்தினை வயிரத்தைக் கொல்லே றூர்ந்து
கோளரவொன் றாட்டுங் குழகன் தன்னைப்
பத்தனைப் பத்தர் மனத்து ளானைப்
பரிதிபோல் திருமேனி யுடையான் தன்னை
அத்தனை ஆரூரில் அம்மான் தன்னை
அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 8

மூவாத – கெடாத. கொத்து – எல்லாமணியும் கோக்கப்பட்ட மாலை.

முத்து, மணி, மாணிக்கம் என்றும் மூப்படையாத கற்பகத்தின் கொழுந்து, வயிரம் இவற்றை வைத்துக் கோத்த மாலை போல்வானாய்க் காளையை இவர்ந்து பாம்பாட்டும் இளையவனாய், எல்லோரிடத்தும் அன்புடையவனாய், பக்தர்கள் மனத்தில் நிலைத்து இருப்பவனாய், சூரியனைப் போல ஒளி வீசும் திருமேனியை உடையவனாய், எல்லோருக்கும் தலைவனாய் உள்ள ஆரூர் அம்மானை அறியாது அடிநாயேன் அயர்த்தவாறே.

2383. பையா டரவங்கை யேந்தி னானைப்
பரிதிபோல் திருமேனிப் பால்நீற் றானை
நெய்யாடு திருமேனி நிமலன் தன்னை
நெற்றிமேல் மற்றொருகண் நிறைவித்
தானைச்
செய்யானைச் செழும்பவளத் திரளொப் பானைச்
செஞ்சடைமேல் வெண்டிங்கள் சேர்த்தி
னானை
ஐயாறு மேயானை ஆரூ ரானை
அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 9

படமெடுத்தாடும் பாம்பைக் கையில் ஏந்தியவனாய்ச் சூரியனைப் போலச் சிவந்த மேனியில் பால் போன்ற வெண்ணீற்றைப் பூசியவனாய், நெய் அபிடேகம் செய்த திருமேனியை உடைய தூயவனாய், நெற்றியில் மூன்றாவது கண் உடையவனாய்ச் செழும்பவளத்திரள் போன்ற செந்நிறத் தினனாய்ச் செஞ்சடையில் வெண்பிறை சூடியவனாய்த் திருவையாற்றை உகந்தருளி யிருப்பவனான ஆரூர் அம்மானை அறியாது அடிநாயேன் அயர்த்தவாறே.

2384. சீரார் முடிபத் துடையான் தன்னைத்
தேசழியத் திருவிரலாற் சிதைய நூக்கிப்
பேரார் பெருமை கொடுத்தான் தன்னைப்
பெண்ணிரண்டும் ஆணுமாய் நின்றான்
தன்னைப்
போரார் புரங்கள் புரள நூறும்
புண்ணியனை வெண்ணீ ரணிந்தான்
தன்னை
ஆரானை ஆரூரி லம்மான் தன்னை
அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 10

தேசு – ஒளி, அழகு, புகழ். நூக்கி – வருத்தி. நூறும் – அழித்த. ஆரான் – தெவிட்டாதவன். பெண்ணிரண்டு – உமையும், கங்கையும், ஆதி – பரை.

அழகிய பத்துத் தலைகளை உடைய இராவணனை அவன் புகழ் அழியுமாறு கால்விரலால் உடல் சிதைய வருத்திப் பிறகு அவனுக்கு அந்தப் பெயருக்கு ஏற்ப எல்லாரையும் அழச்செய்பவன் என்ற பெருமையைக் கொடுத்தவனாய், பார்வதி கங்கை என்ற பெண்பாலர் இருவரைக் கொண்ட ஆண்வடிவு உடையவனாய், போரிட்ட திரிபுரங்கள் அழியுமாறு சாம்பலாக்கிய புண்ணியனாய், வெண்ணீறு அணிந்தானாய், அடியவர்களுக்குத் தெவிட்டாதவனாய் உள்ள ஆரூர் அம்மானை அறியாது அடிநாயேன் அயர்த்தவாறே.

## 30. திருவாரூர்

**(இத்திருப்பதிகம் திருமூலட்ட நாதரைப் பாடியது)**

ப.தொ.எண் : 243 பதிக எண் : 30

**2385.** எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டான்காண்
ஏழ்கடலும் ஏழுலகும் ஆயி னான்காண்
வம்புந்து கொன்றையந்தார் மாலை யான்காண்
வளர்மதிசேர் கண்ணியன்காண் வானோர் வேண்ட
அம்பொன்றால் மூவெயிலு மெரிசெய் தான்காண்
அனலாடி யானஞ்சு மாடி னான்காண்
செம்பொன்செய் மணிமாடத் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன்தானே. 1

பந்தம் – தளை. வம்பு – வாசனை

செம்பொன்னால் செய்த மணிகள் இழைக்கப்பட்ட மாடங்களை உடைய திருவாரூரில் திருமூலத்தானத்திலுள்ள எம் செல்வன் எம்மைத் தளையிடும் ஊழ்வினையால் ஏற்படும் நோயைத் தீர்த்தவன். ஏழ்கடலும் ஊழ் உலகும் ஆயவன். நறுமணம் கமழும் கொன்றை மாலையன். பிறையோடு சூடிய முடிமாலையை உடையவன். தேவர்கள் வேண்ட ஓரம்பினால் மூன்று மதில்களையும் எரித்தவன். தீயில் கூத்தாடுபவன். பஞ்சகவ்விய அபிடேகம் செய்வதை விரும்பி ஏற்பவன்.

**2386.** அக்குலாம் அரையினன்காண் அடியார்க் கென்றும்
ஆரமுதாய் அண்ணிக்கும் ஐயாற் றான்காண்
கொக்குலாம் பீலியொடு கொன்றை மாலை
குளிர்மதியுங் கூரரவும் நீருஞ் சென்னித்
தொக்குலாஞ் சடையினன்காண் தொண்டர் செல்லுந்
தூநெறிகாண் வானவர்கள் துதிசெய் தேத்தும்
திக்கெலாம் நிறைந்தபுகழ்த் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 2

அக்குஉலாம் – எலும்பு பொருந்திய. அண்ணிக்கும்– தித்திக்கின்ற. பீலி – மயிலிறகு

இடையில் எலும்புகளை அணிந்தவன். அடியார்களுக்கு எப்பொழுதும் கிட்டுதற்கு அரிய அமுதமாய் இனிக்கும் திருவையாற்றில் உறையும் இறைவன். கொக்கிறகு, கொன்றை மாலை, குளிர்ந்த பிறை, கொடுமை மிக்க பாம்பு என்பன ஒருசேரத் தங்கியிருக்கும் சடையினன். தொண்டர்கள் செல்லும் தூய வழியைக் காட்டுபவன் ஆகிய சிவபெருமான் தேவர்கள் துதித்துப் புகழுமாறு எல்லாத் திக்கிலும் நிறைந்த புகழை உடைய திருவாரூரில் திருமூலத்தானத்து உறையும் எம் செல்வனாகக் காட்சி வழங்குகிறான். கூர் – (கொடுமை)மிக்க

**2387.** நீரேறு சடைமுடியெம் நிமலன் தான்காண்
நெற்றிமேல் ஒற்றைக்கண் நிறைவித் தான்காண்
வாரேறு வனமுலையாள் பாகத் தான்காண்
வளர்மதிசேர் சடையான்காண் மாதே வன்காண்
காரேறு முகிலனைய கண்டத் தான்காண்
கல்லாலின் கீழறங்கள் சொல்லி னான்காண்
சீரேறு மணிமாடத் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 3

வார் – கச்சு. வனம் – அழகு. கார் – கருமை நிறம்

சடைமுடியில் கங்கையைத் தரித்த தூயவன். நெற்றிக்கண்ணன். கச்சணிந்த முலைகளை உடைய பார்வதி பாகன். பிறைசேர் சடையன். பெருந்தேவன். கார்முகில் போன்ற நீலகண்டன். கல்லாலின் கீழ் இருந்து அறங்களைச் சனகர் முதலிய நால்வருக்கு மோன நிலையில் உபதேசித்தவன். சிறப்பு மிக்க அழகிய மாடங்களை உடைய திருவாரூரில் திருமூலத்தானத்தில் எம் செல்வனாக அப்பெருமான் உறைகின்றான்.

| | |
|---|---|
| **2388.** கானேறு களிற்றுரிவைப் போர்வை யான்காண்<br>கற்பகங்காண் காலனையன் றுதைசெய்<br>தான்காண்<br>ஊனேறு முடைதலையிற் பலிகொள் வான்காண்<br>உத்தமன்காண் ஒற்றியூர் மேவி னான்காண்<br>ஆனேறொன் றதுவேறும் அண்ணல் தான்காண்<br>ஆதித்தன் பல்லிறுத்த ஆதி தான்காண்<br>தேனேறு மலர்ச்சோலைத் திருவா ரூரில்<br>திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே.<br>4<br><br>கான் ஏறு – காட்டில் திரிகின்ற<br>பதிக மகுடம் – திருவாரூரில் திருமூலட்டானத் தெஞ் செல்வன்தானே. | தேன்மிக்க மலர்கள் நிறைந்த சோலைகளை உடைய திருவாரூர்த் திருமூலத்தானத்தில் உறையும் எம் செல்வன் காட்டில் திரிகின்ற யானைத் தோலைப் போர்த்தியவன். கற்பகம் போன்ற கொடையாளி. கூற்றுவனை ஒருகாலத்து உதைத்தவன். புலால் நாற்றம் கமழும் தலையோட்டில் பிச்சை எடுப்பவன். உத்தமன். ஒற்றியூரில் விரும்பி உறைபவன். காளையை இவரும் தலைவன். சூரியன் ஒருவனுடைய பற்களை உதிர்த்த முதற்பொருள் ஆவான். |
| **2389.** பிறப்போ டிறப்பென்று மில்லா தான்காண்<br>பெண்ணுருவோ டாணுருவ மாயி<br>னான்காண்<br>மறப்படுமென் சிந்தைமருள் நீக்கி னான்காண்<br>வானவரு மறியாத நெறிதந் தான்காண்<br>நறப்படுபூ மலர்தூபந் தீப நல்ல<br>நறுஞ்சாந்தங் கொண்டேத்தி நாளும்<br>வானோர்<br>சிறப்போடு பூசிக்குந் திருவா ரூரில்<br>திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே.<br>5<br><br>மறப்படும் – பாவத்தின் கண் அகப்பட்ட | தேன் பொருந்திய பூக்கும் நிலையிலுள்ள மலர்கள், தூபம், தீபம், நல்ல சந்தனம் இவற்றைக் கொண்டு துதித்து நாள்தோறும் தேவர்கள் சிறப்போடு பூசனை செய்யும் திருவாரூரில் திருமூலத்தானத்தில் உறையும் செல்வன் பெண்ணும் ஆணுமாகிய உருவுடையவனாய்ப் பிறப்பு இறப்பு இல்லாதவனாய்ப் பாவத்தில் அகப்பட்ட என்மனத்தின் மயக்கத்தை நீக்கியவனாய்த் தேவர்களும் அறியாத வீடுபேற்றிற்கு உரிய வழியை எனக்கு அருள்பவன். |
| **2390.** சங்கரன்காண் சக்கரம்மாற் கருள்செய் தான்காண்<br>தருணேந்து சேகரன்காண் தலைவன்<br>தான்காண்<br>அங்கமலத் தயன்சிரங்கள் ஐந்தி லொன்றை<br>அறுத்தவன்காண் அணிபொழில்சூழ் ஐயாற்<br>றான்காண்<br>எங்கள்பெரு மான்காண்என் னிடர்கள் போக<br>அருள்செய்யும் இறைவன்காண் இமையோ<br>ரேத்துஞ்<br>செங்கமல வயல்புடைசூழ் திருவாரூரில்<br>திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே.<br>6<br><br>தருண் + இந்து – தருணேந்து. இளஞ்சந்திரன்.<br>தருணம் – இளமை. இந்து – மதி | தாமரை களையாக முளைக்கும் வயல்களால் சூழப்பட்டதாய்த் தேவர்களும் போற்றும் திருவாரூரில் திருமூலத்தானத்தில் உள்ள எம் செல்வன் எல்லோருக்கும் இன்பத்தைச் செய்பவன். திருமாலுக்குச் சக்கரப்படையை அருளியவன். பிறை சூடிய தலைவன். தாமரையிலுள்ள பிரமன் தலைகளுள் ஒன்றனை அறுத்தவன். அழகிய சோலைகளால் சூழப்பட்ட திருவையாற்றில் உறைபவன். எங்கள் தலைவன். எங்கள் துன்பங்கள் நீங்குமாறு அருள் செய்யும் இறைவன். சேகரம் – தலை |

**2391.** நன்றருளித் தீதகற்றும் நம்பி ரான்காண்
நான்மறையோ டாறங்க மாயி னான்காண்
மின்திகழுஞ் சோதியன்காண் ஆதி தான்காண்
வெள்ளேறு நின்றுலவு கொடியி னான்காண்
துன்றுபொழிற் கச்சியே கம்பன் தான்காண்
சோற்றுத் துறையான்காண் சோலை சூழ்ந்த
தென்றலார் மணங்கமழுந் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே.
7

துன்று – நெருங்கிய. ஆர்மணம் – நிறைந்த வாசனை

தென்றல் ஊரைச் சேர்ந்த சோலைகளால் மணங்கமழும் திருவாரூர்த் திருமூலத் தானத்தில் உள்ள எம் செல்வன் நன்மையை அருளித் தீமையைப் போக்கும் நம் தலைவன். நான்மறையோடு ஆறங்கம் ஆயினவன். மின்னல் போன்ற ஒளியை உடைய முற்பட்டவன். காளை எழுதிய கொடியை உடையவன். பொழில் சூழ்ந்த கச்சி ஏகம்பன். சோற்றுத்துறையிலும் உறைபவன்.

**2392.** பொன்நலத்த நறுங்கொன்றைச் சடையி னான்காண்
புகலூரும் பூவணமும் பொருந்தி னான்காண்
மின்நலத்த நுண்ணிடையாள் பாகத் தான்காண்
வேதியன்காண் வெண்புரிநூல் மார்பி னான்காண்
கொன்னலத்த மூவிலைவேல் ஏந்தி னான்காண்
கோலமா நீறணிந்த மேனி யான்காண்
செந்நலத்த வயல்புடைசூழ் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே.
8

சிறந்த வளத்தை உடைய வயல்களால் சூழப்பட்ட திருவாரூர்த் திருமூலத்தானத்தில் உள்ள எம் செல்வன் பொன்நிறக் கொன்றை சூடிய சடையினன். புகலூரிலும் பூவணத்திலும் உறைபவன். மின்னலை ஒத்த நுண்ணிய இடையை உடைய பார்வதிபாகன். வேதியன். பூணூல் அணிந்த மார்பினன். பகைவருக்கு அச்சமும் அடியாருக்கு நன்மையும் தருகின்ற, முத்தலைச் சூலத்தை ஏந்தியவன். திருநீற்றை அழகாக அணிந்த திருமேனியினன்.

**2393.** விண்டவர்தம் புரமூன்று மெரிசெய் தான்காண்
வேலைவிட முண்டிருண்ட கண்டத் தான்காண்
மண்டலத்தில் ஒளிவளர விளங்கி னான்காண்
வாய்மூரும் மறைக்காடும் மருவி னான்காண்
புண்டரிகக் கண்ணானும் பூவின் மேலைப்
புத்தேளுங் காண்பரிய புராணன் தான்காண்
தெண்டிரைநீர் வயல்புடைசூழ் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே.
9

விண்டவர் – நீங்கியவர்; பகைவர்.
வேலை – கடல். மண்டலம் – சூரியன், சந்திரன்.

தெளிந்த அலைகளை உடைய நீர்வளம் பொருந்திய வயல்களால் சூழப்பட்ட திருவாரூரில் திருமூலத்தானத்தில் உறையும் எம் செல்வன் பகைவர் முப்புரங்களையும் எரித்தவன். கடலில் தோன்றிய விடத்தை உண்டு கறுத்த கழுத்தினன். வான மண்டலத்தில் சூரியனும் சந்திரனும் ஒளிவீசுமாறு அருளியவன். வாய்மூரிலும் மறைக்காட்டிலும் உறைபவன். செந்தாமரைக் கண்ணனாகிய திருமாலும் தாமரையில் தங்கும் பிரமனும் காண முடியாத பழையவன்.

2394. செருவளருஞ் செங்கண்மா லேற்றி னான்காண்
தென்னானைக் காவன்காண் தீயில் வீழ
மருவலர்தம் புரமூன்று மெரிசெய் தான்காண்
வஞ்சகர்பா லணுகாத மைந்தன் தான்காண்
அருவரையை யெடுத்தவன்தன் சிரங்கள் பத்தும்
ஐந்நான்கு தோளுநெரிந் தலற அன்று
திருவிரலால் அடர்த்தவன்காண் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 10

செரு – போர். மால் – பெரிய. மருவலர் – பகைவர்.
மைந்தன் – வலிமையுடையவன்.
அருவரை – பெயர்த்தற்கரிய மலை – கயிலை.

திருவாரூர் திருமூலத்தானத்தில் உள்ள எம் செல்வன் போரில் மேம்பட்ட திருமாலாகிய காளையை உடையவன். அழகிய திருவானைக்காவில் உறைபவன். பகைவர் முப்புரத்தை எரித்தவன். வஞ்சகர் உள்ளத்தில் நெருங்காத வலிமை உடையவன். கயிலையைப் பெயர்த்த இராவணனுடைய பத்துத் தலைகளும் இருபது தோள்களும் நெரிக்கப்பட அவன் அலறுமாறு முன்னொருகால் திருவிரலால் வருத்தியவன்.

## 31. திருவாரூர்

(இப்பதிகம் நெஞ்சிற்கு அறிவுறுத்தலாக, உயிர்க்கு உறுதி ஆனவற்றை அருளிச் செய்கிறது)

ப.தொ.எண் : 244 பதிக எண் : 31

2395. இடர்கெடுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
ஈண்டொளிசேர் கங்கைச் சடையா யென்றும்
சுடரொளியா யுள்விளங்கு சோதீ யென்றுந்
தூநீறு சேர்ந்திலங்கு தோளா வென்றும்
கடல்விடம துண்டிருண்ட கண்டா வென்றுங்
கலைமான் மறியேந்து கையா வென்றும்
அடல்விடையாய் ஆரமுதே ஆதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே. 1

சுடரொளி – ஒருகாலைக்கொரு கால் மிக்கெழுகின்ற ஒளி.
கலைமான் – ஆண்மான். மறி – கன்று
நில் – இவ்வாறு ஒழுகு. எண்ணத்தின் பின்னதே சொல். இறைவனது அருள் நிலைகளையே நினைந்தும், சொல்லியும், பணிந்தும் ஒழுகுவார்க்கே துன்பம் அடியோடு ஒழியும்.

நெஞ்சே! நீ துன்பங்கள் ஒழியும் வகையை ஆராய்வாயாயின் இங்கே வந்து நான் சொல்வதனைக் கேள். செந்நிறம் பொருந்திய சடையில் கங்கையை அணிந்தவனே! ஞானஒளியாய் உள்ளத்தில் விளங்குபவனே! திருநீறணிந்த தோளனே! கடல்விடம் உண்டு கறுத்த கழுத்தினனே! மான் குட்டியை ஏந்திய கையனே! ஆற்றலுடைய காளை வாகனனே! கிட்டுதற்கரிய அமுதே! எல்லோருக்கும் முற்பட்டவனே! ஆரூரனே! எனப் பலகாலும் அழைப்பாயாக.

இடர்கெடுமாறு – துன்பம் ஒழியும் வகையை, எண்ணுதியேல் – ஆராய்வையாயின், நீவா என்பது, "யான் சொல்வதைக் கேள் என்னும் பொருள் பயப்பதொரு வழக்கு. ஈண்டு ஒளி என்பதை "ஒளியினையுடைய"

என்றுரைத்தலுமாம். 'சுடர் ஒளி' வினைத்தொகை, 'ஒரு காலைக் கொருகால் மிக்கெழுகின்ற ஒளி' என்பது பொருள். உள் – உயிருக்குள். சோதி என்பது அதனையுடைய பொருள் மேலாகி வாளா பெயராய் நின்றது. <u>உயிரது அறியாமை நீங்குந்தோறும், இறைவன் அதனுள் அறிவு வடிவாய் நிறைந்து நிற்றல்</u> வெளிப்பட்டு வருதலின் "சுடர் ஒளியாய் உள்விளங்கு சோதி" என்று அருளிச்செய்தார்.

"என்றென்று" என்பதன்பின், 'சொல்லி' என்னும் சொல்லெச்சம் வருவிக்க, அடுக்கு, பல்கால் அழைத்தலைக் குறித்தது. நில் – ஒழுகு, "அலறா நில்" என்னும் நிகழ்காலச் சொல் இடைவிடாமையை விதித்தற் பொருட்டாய் நின்றது. இறுதியில், 'இதுவே இடர்நீங்கும் வழியாகும்' என்னும் குறிப்பெச்சம் வருவித்து முடிக்க, இவை பின்வருகின்ற திருப்பாடல்கட்கும் ஒக்கும். எண்ணத்தின் பின்னதே சொல்லாகலின், 'இவ்வாறெல்லாம் எண்ணி' என்பது முன்னரே முடிந்தது. 'உலகியலை நினையாது, இறைவனது அருள் நிலைகளையே நினைந்தும், சொல்லியும், பணிந்தும் ஒழுகுவார்க்கே துன்பம் அடியோடு ஒழிவதாகும்' என்பது கருத்து. "தனக்குவமை யில்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால் – மனக்கவலை மாற்றலரிது" (குறள் 7) என எதிர்மறை முகத்தான் உணர்த்தியதுணர்க.

இடர்தான், 'பேரிடரும், சிற்றிடரும்' என இருவகைத்து. பேரிடர், கட்டு நீங்காதார்க்கு வினைகளான் இடையறாது வருவன. சிற்றிடர், கட்டு நீங்கினவர்க்கு, முன்னைப் பழக்கத்தால் நிகழும் மறதியான் ஒரோவழி வருவன. இவ்விருவகை இடர்களுக்கும் காரணமான கட்டும், கட்டுள் நின்ற பழக்கமும் நீங்குதல் இறை பணியால் அல்லது இன்மையின், பொதுப்பட, "இடர்" என அருளிச்செய்தார். கட்டு நீங்காதார் செய்யும் பணி அறிவுப் பணியும், கட்டு நீங்கினார் செய்யும் பணி அன்புப் பணியும் ஆகும். என்னையெனின், அவர் முறையே, 'இடர் கெடுமாறு இதுவே' என்று அறிந்த அறிவு காரணமாகவும், "இடர்களையாரேனும் எமக்கு இரங்கா ரேனும் – படரும் நெறி பணியாரேனும்" (தி 11 அற்புதத் திருவந்தாதி 2). இப்பணி தானே எமக்கு இன்பமாவது என்னும் அன்பு காரணமாகவும் செய்தலான் என்க. இப்பணியினைச் சிவாகமங்கள், சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்காக வகுத்து, 'கீழ் உள்ளவர்கள் மேலனவற்றிற்கு உரியரல்லர். மேலுள்ளவர்கள் கீழ்உள்ளவற்றிற்கும் உரியர்'. ஆகவே, ஞானிகள் மேற்சொல்லிய நான்கிற்கும் உரியர் எனக் கூறும். இதனை,

ஞானயோ கக்கிரியா சரியை நான்கும்
　நாதன்றன் பணி, ஞானி நாலினுக்கும் உரியன்,
ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கும் உரியன்
　யோகி, கிரி யாவான்றான் ஒண்கிரியை யாதி
யானஇரண் டினுக்குரியன், சரியையினில் நின்றோன்
　அச்சரியைக் கேயுரியன்.....

என்னும் (சிவஞானசித்தி சூ. 12.5) திருவிருத்தத்தால் நன்குணர்க. இந்நால்வருள் ஞானிகள் தம் பணி அன்புப் பணி என்றும், மற்றையோர் பணி அறிவுப் பணி என்றும் கொள்க. இதனால், கட்டுற்று நின்றார்க்கேயன்றி, <u>கட்டு நீங்க வீடு பெற்றார்க்கும் இறைபணி இன்றியமையாததாதல்</u> தெற்றென உணர்ந்து கொள்ளப்படும். செல்வமுற்றாரும், தமக்கு ஒரோவழி வரும் சிறு துன்பத்தையும் பெருந்துன்பமாக நினைத்து வருந்துதல்போல, வீடு பெற்றாரும் ஒரோவழித் தமக்கு மறப்பினால் தோன்றும் சிறிது இடரினையும் பேரிடராக நினைந்து வருந்துபவர், அதனை ஆங்காங்கு அறிந்து கொள்ளலாகும். இறைபணியின் பெருமை யுணர்த்துவனவே திருப்பதிகங்களுட் பெரும்பாலனவாயினும், அவற்றுள் இத்திருப்பதிகம், அஃதொன்றனையே கிளந்தெடுத்துத் தெள்ளத் தெளிய இனிதுணர்த்தும் சிறப்புடையது என்க. எனவே, இத்திருப்பதிகம், சிவநெறிக்கு இன்றியமையாச் சிறப்புடைத்தாதல் இனிது விளங்கும்.

2396. செடியேறு தீவினைகள் தீரும் வண்ணஞ்
சிந்தித்தே னெஞ்சமே திண்ண மாகப்
பொடியேறு திருமேனி யுடையா யென்றும்
புரந்தரன்றன் தோள்துணித்த புனிதா
வென்றும்
அடியேனை யாளாகக் கொண்டா யென்றும்
அம்மானே ஆரூரெம் மரசே யென்றும்
கடிநாறு பொழிற்கச்சிக் கம்பா வென்றுங்
கற்பகமே யென்றென்றே கதறா நில்லே.
2

செடி – துன்பம். புரந்தரன் – இந்திரன்
தோள்துணித்தது – தக்கன் வேள்வியில் நிகழ்ந்தது

நெஞ்சமே! துன்பம் மிக்க தீவினைகள் நீங்கும் வழியை எண்ணுவாயானால் உறுதியாகத் திருநீறணிந்த திருமேனி உடையவனே! இந்திரனுடைய தோள்களை நீக்கிய தூயனே! அடியேனை அடிமையாகக் கொண்டவனே! தலைவனே! ஆரூரில் உள்ள எம் அரசனே! நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த காஞ்சியில் உள்ள ஏகம்பனே! கற்பகமே! என்று பலகாலும் அழைப்பாயாக. புரந்தரனார் ஒரு பூங்குயிலாகி – மரந்தனில் ஏறினார் உந்தீ பற – திருவாசகம். தக்கயாக நிகழ்வுகள்.

## சரியை நெறியை விளக்கும் பாடல்

2397. நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே. 3

தலையார – தலைநிரம்ப. தலை வணங்குதலாலேயன்றி அதன்மேல் கைகுவித்தலாலும் இன்புறும் என்க.
சய – வெல்க. இப்பாடல் அடிமை நெறி உணர்த்தும் தாசமார்க்கப் படலாகும்.

நெஞ்சே! நீ தடுமாற்றம் நீங்கி நிலையாக வாழ நினைப்பாயானால் நாள்தோறும் எம்பெருமானுடைய கோவிலுக்குச் சென்று பொழுது விடிவதன் முன் கோயிலைப் பெருக்கி மெழுகிப் பூ மாலையைக் கட்டி எம்பெருமானுக்குச் சாத்தி அவனைத் துதித்துப் புகழ்ந்து பாடித் தலையால் முழுமையாக வணங்கி மகிழ்ச்சியாய்க் கூத்தாடிச் 'சங்கரா நீ வெல்க வாழ்க!' என்றும், 'கங்கையைச் சிவந்த சடையில் வைத்த ஆதிப்பொருளே!' என்றும் 'ஆரூரா!' என்றும் பலகாலும் அலறி அழைப்பாயாக.

2398. புண்ணியமும் நன்னெறியும் ஆவ தெல்லாம்
நெஞ்சமே யிதுகண்டாய் பொருந்தக் கேள்நீ
நுண்ணியவெண் ணூல்கிடந்த மார்பா என்றும்
நுந்தாத வொண்சுடரே யென்றும்நாளும்
விண்ணியங்கு தேவர்களும் வேதம் நான்கும்
விரைமலர்மேல் நான்முகனும் மாலுங் கூடி
எண்ணரிய திருநாம முடையா யென்றும்
எழிலாரூ ராவென்றே ஏத்தா நில்லே. 4

நெஞ்சமே! புண்ணியமும் அதற்கு வாயிலாகிய நல்ல வழிகளும் ஆகியவற்றை எல்லாம் நான் கூறக்கூர்ந்து கேள். பூணூல் அணிந்த மார்பனே! தூண்ட வேண்டாத விளக்கே! தேவர்களும் நால்வேதங்களும் தாமரையிலுள்ள பிரமனும் திருமாலும் ஒன்று சேர்ந்தாலும் கணக்கிட முடியாத திருநாமங்களை உடையவனே! அழகிய ஆரூரனே! என்று பலகாலும் துதிப்பாயாக.

புண்ணியத்திற்கு வாயில் நன்னெறி
நுந்தாத – தூண்ட வேண்டாத

2399. இழைத்தநா ளெல்லை கடப்ப தென்றால்
இரவினொடு நண்பகலு மேத்தி வாழ்த்திப்
பிழைத்ததெலாம் பொருத்தருள்செய் பெரியோய் என்றும்
பிஞ்ஞகனே மைஞ்ஞவிலுங் கண்டா என்றும்
அழைத்தலறி அடியேனுன் னரணங் கண்டாய்
அணியாரூர் இடங்கொண்ட அழகா என்றும்
குழற்சடையெங் கோனென்றுங் கூறு நெஞ்சே
குற்றமில்லை யென்மேல்நான் கூறி னேனே. 5

நெஞ்சே! இவ்வுடம்போடு கூடி வாழ்வதற்கு வரையறுக்கப்பட்ட நாள்களின் அளவைப் பிறவிக்கு வித்தாகாத வகையில் தாண்ட வேண்டுமென்றால் இரவும் நடுப்பகலும் எம் பெருமானைத் துதித்து வாழ்த்தித் தவறு செய்தனவற்றையெல்லாம் பொறுத்துக் கொண்டு அருள் செய்யும் பெரியோனே! தலைக்கோலம் உடையவனே! நீலகண்டனே! எனப் பலகாலும் கூப்பிட வேண்டும் என்பதனைத் தெரிந்து கொள். நான் உனக்குப் பாதுகாவலாக இருக்கிறேன். ஆரூர் உறையும் அழகா! என்றும் சுருண்ட சடையை உடைய இளையோனே! என்றும் கூப்பிடு. உனக்கு இவ்வாறு உபதேசித்துவிட்டதனால் இனி என்மேல் உனக்கு உய்யும் வழியைக் காட்டவில்லை என்ற குற்றம் ஏற்படாது செயற்படாமல் வாளா இருந்தால் குற்றம் உன்மேலதே.

அரணம் – பாதுகாப்பு; அது காக்கப்படும் பொருளைக் குறித்தது.

**2400.** நீப்பரிய பல்பிறவி நீக்கும் வண்ணம்
நினைந்திருந்தேன் காண்நெஞ்சே நித்த மாகச்
சேப்பிரியா வெல்கொடியி னானே யென்றும்
சிவலோக நெறிதந்த சிவனே யென்றும்
பூப்பிரியா நான்முகனும் புள்ளின் மேலைப்
புண்டரிகக் கண்ணானும் போற்றி யென்னத்
தீப்பிழம்பாய் நின்றவனே செல்வ மல்குந்
திருவாரூ ராவென்றே சிந்தி நெஞ்சே. 6

நீப்பு – நீத்தல்; விடுதல்.
சே – எருது. தந்த – உலகிற்குச் சொல்லிய.
புள் – கருடன்.

நெஞ்சே! அழிக்கமுடியாத பல பிறவிகளையும் போக்கும் வழியை ஆராய்ந்து பார்த்து இவ்வழியைக் கண்டுள்ளேன். நாடோறும் காளை எழுதிய கொடியை உடையவனே! சிவலோகம் அடையும் வழியைக் காட்டிய சிவனே! தாமரையை உறைவிடமாக விரும்பும் பிரமனும் கருடனை இவரும் தாமரைக் கண்ணனாகிய திருமாலும் வழிபட்டு வாழ்த்துமாறு தீப்பிழம்பாய் காட்சி வழங்குபவனே! செல்வம் நிறையும் திருவாரூரா என்று பலகாலும் 'நெஞ்சே நீ நினை'.

**2401.** பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே யென்றும்
உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கே னென்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா வென்றும்
பொழிலாரூ ராவென்றே போற்றா நில்லே. 7

பாற்றுதல் – அழித்தல். பரிசு – தன்மை; தகுதி. பாவம் நீங்கினால் உலகத் துன்பங்கள் மட்டுமே நீங்கும். பிறவித் துன்பம் நீங்காது. அது நீங்க வேண்டில் இரு வினையையும் வீழ்த்துதல் வேண்டும். அவ்வினைகள் உயிரைப் புறஞ்செல்ல ஒட்டாது வளைத்து கொண்டு நிற்றலின் "சுற்றி நின்ற சூழ்வினைகள்" என்றருளிச் செய்தார். சுற்றி நிற்றல் வளைத்து நிற்றலாகவும், சூழ்தல் பலவாக மொய்த்து நிற்றலாகவும் கொள்க. துஞ்சுதல் – இறத்தல்.

நெஞ்சே! நான் சொல்வதனைக் கேட்பாயாக. நம்மைப் பற்றி நிற்கும் பாவங்களை அழிக்க வேண்டினால், மேம்பட்ட வழிக்குச் செல்ல வேண்டும் தன்மையை விரும்பினால், உன்னைச் சுற்றி நிற்கும் வினைகளைப் போக்க நீ விரும்பினால், செயலற்று இராமல் நான் சொல்வதைக் கேள். எனக்கு உறவினரும் துணையும் நீயே. உன்னைத் தவிர வேறு எந்தத் தெய்வத்தையும் நான் பரம்பொருளாக நினையேன். புற்றில் வாழத்தக்க பாம்பினைக் கச்சாக அணிந்த தூயோனே! சோலைகள் சூழ்ந்த ஆரூரனே! என்று எம் பெருமானைப் பலகாலும் துதிப்பாயாக.

**2402.** மதிதருவன் நெஞ்சமே உஞ்சு போக
வழியாவ திதுகண்டாய் வானோர்க் கெல்லாம்
அதிபதியே ஆரமுதே ஆதீ யென்றும்
அம்மானே ஆரூரெம் ஐயா வென்றும்
துதிசெய்து துன்றுமலர் கொண்டு தூவிச்
சூழும் வலஞ்செய்து தொண்டு பாடிக்
கதிர்மதிசேர் சென்னியனே கால காலா
கற்பகமே யென்றென்றே கதறா நில்லே.
8

நெஞ்சமே! உனக்கு நான் நல்ல புத்தியைக் கொடுக்கிறேன். பிழைத்துப் போவதற்கு உரிய வழி இதுவே. தேவர்கள் தலைவனே! அரிய அமுதமே! ஆதியே! என்றும், தலைவனே! ஆரூரில் உள்ள எம் குரிசிலே என்றும், அவனைப் போற்றிக் கிட்டிய மலர்களை அவன் திருமேனி மீது தூவி, அவன் கோயிலை வலம் செய்து, தொண்டர்களையும் துதித்து, ஒளிவீசும் பிறை சேர்ந்த தலைவனே! காலனுக்கும் காலனே! கற்பகமே! என்றும் பலகாலும் கதறுவாயாக.

**2403.** பாசத்தைப் பற்றறுக்க லாகு நெஞ்சே
பரஞ்சோதி பண்டரங்கா பாவ நாசா
தேசத் தொளிவிளக்கே தேவ தேவே
திருவாரூர்த் திருமூலட் டானா வென்றும்
நேசத்தை நீபெருக்கி நேர்நின் றுள்கி
நித்தலுஞ் சென்றடிமேல் வீழ்ந்து நின்று
ஏசற்று நின்றிமையோ ரேறே யென்றும்
எம்பெருமா னென்றென்றே யேத்தா நில்லே.
9

நேர்நின்று – அவன் அருள் வழிநின்று

நெஞ்சே! மேம்பட்ட சோதியே! பாண்டரங்கக் கூத்து ஆடுபவனே! பாவத்தைப் போக்குபவனே! உலகுக்கே ஒளிதரும் விளக்கே! தேவதேவனே! திருவாரூர்த் திருமூலட்டானத்து உறையும் பெருமானே! தேவர்கள் தலைவனே! எம்பெருமானே! என்று அன்பைப் பெருக்கி அவன் முன் நின்று தியானம் செய்து நாளும் அவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிக் கூசி நின்று அவன் பெருமையைப் பாடுவாயாக. இவ்வாறு செய்தால் உலகப் பற்றினை அடியோடு நீக்கிவிடலாம்.

**2404.** புலன்கள்ஐந்தால் ஆட்டுண்டு போது போக்கிப்
புறம்புறமே திரியாதே போது நெஞ்சே
சலங்கொள்சடை முடியுடைய தலைவா என்றும்
தக்கன்செய் பெருவேள்வி தகர்த்தா
யென்றும்
இலங்கையர்கோன் சிரம்நெரித்த இறைவா
என்றும்
எழிலாரூ ரிடங்கொண்ட எந்தா யென்றும்
நலங்கொளடி யென்தலைமேல் வைத்தா யென்றும்
நாடோறும் நவின்றேத்தாய் நன்மை யாமே.
10

நெஞ்சே! ஐம்புலன்களால் செயற்படுத்தப்பட்டுக் காலத்தைக் கழித்து, மிகத் தொலைவான இடங்களுக்கு அலையாமல், என்பக்கம் வந்து யான் சொல்வதனைக் கேள். கங்கையைச் சடையில் சூடிய தலைவா! தக்கனுடைய பெரிய வேள்வியை அழித்தவனே! இராவணன் தலைகளை நெரித்த தலைவனே! அழகிய ஆரூரில் உறையும் எம் தந்தையே! உன் பல நலன்களும் கொண்ட திருவடிகளை என் தலைமேல் வைத்தவனே! என்று நாள்தோறும் கூறி அவனைத் துதிப்பாயாக. அச்செயலே நமக்கு நன்மை தருவதாகும்.

## 32. திருவாரூர்

(பாடலின் தொடர் தோறும் போற்றி போற்றி என்று வருவதால் இது போற்றித் திருத்தாண்டகம் என வழங்கப்படுகின்றது)

ப.தொ.எண் : 245 பதிக எண் : 32

2405. கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுத மானாய் போற்றி
அல்லலறுத் தடியேனை ஆண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 1

கற்றவர்கள் – மெய்ப்பொருளை நல்லாசிரியர்பால் உணர்ந்தவர்கள். கேள்வியுணர்வின் பின்னரே தலைப்பட்டுணரும் உணர்வு நிகழும்.

அற்றவர் – பிறிதொரு பற்றும் இல்லாதவர்.

அநுபவப் பொருளை ஞானதேசிகன் பால் உணர்ந்தவர்கள் உண்ணும் கனியே! திருவடிகளைச் சார்ந்தவர்கள் அடையும் நற்பேறே! உன்னையன்றிப் பிறிதொரு பற்றற்றவர்களுக்குக் கிட்டும் அமுதமே! துயர் துடைத்து அடியேனை ஆட்கொண்டவனே! பிறர் ஒப்பாகமாட்டாத வலியவனே! தேவர்கள் போற்றும் அமுதமே! பகைவர்களின் மும்மதில்களை அழித்த சிவனே! திருவாரூர் திருமூலட்டானனே! நீ வாழ்க.

2406. வங்கமலி கடல்நஞ்ச முண்டாய் போற்றி
மதயானை யீருரிவை போர்த்தாய் போற்றி
கொங்கலரும் நறுங்கொன்றைத் தாராய் போற்றி
கொல்புலித் தோலாடைக் குழகா போற்றி
அங்கணனே அமரர்கள்தம் இறைவா போற்றி
ஆலமர நீழலறஞ் சொன்னாய் போற்றி
செங்கனகத் தனிக்குன்றே சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 2

வங்கமலிகடல் – மரக்கலங்கள் நிறைந்த கடல்.

ஈர் உரிவை – உரித்த தோல். கொங்கு – தேன்.

அம்கண்ணன் – அழகிய கண்களை உடையவன். <u>கண்ணுக்கு அழகாவது, கருணை</u>.

கப்பல்கள் செல்லும் கடலின் நஞ்சை உண்டவனே! மத யானையின் உதிரப்பசுமை கெடாத தோலினைப் போர்த்தியவனே! தேனொடு மலரும் நறுங்கொன்றை மாலையை அணிந்தவனே! உன்னால் கொல்லப்பட்ட புலித்தோலை ஆடையாக உடுத்த இளையவனே! அழகிய நெற்றிக் கண்ணை உடையவனே! தேவர் தலைவனே! ஆல நிழலில் அமர்ந்து அறத்தை மௌன நிலையில் சனகர் முதலியோருக்கு அருளியவனே! ஒப்பற்ற பொற்குன்றே! சிவனே! திருமூலட்டானத்து உறைபவனே! நீ வாழ்க.

2407. மலையான் மடந்தை மணாளா போற்றி
மழவிடையாய் நின்பாதம் போற்றி போற்றி
நிலையாக என்னெஞ்சில் நின்றாய் போற்றி
நெற்றிமேல் ஒற்றைக்கண் ணுடையாய் போற்றி
இலையார்ந்த மூவிலைவே லேந்தீ போற்றி
ஏழ்கடலும் ஏழ்பொழிலு மானாய் போற்றி
சிலையாலன் றெயிலெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 3

மழவிடை – இளைய காளை. மூவிலை – மூன்று கவட்டினை உடைய. ஏழ்பொழில் – ஏழுதீவு; அவை, "சம்புத்தீவு, சாகத்தீவு, குசத்தீவு, கிரௌஞ்சத்தீவு, சான்மலித்தீவு, கோமேதகத்தீவு, புட்கரத்தீவு" என்பன.

பார்வதி மணவாளனே! இளைய காளையை உடையவனே! என் நெஞ்சில் நிலையாக நிற்பவனே! நெற்றிக் கண்ணனே! இலைவடிவாய் அமைந்த முத்தலைச் சூலம் ஏந்தியவனே! ஏழ்கடலும் ஏழ் உலகமும் ஆகியவனே! வில்லால் மும்மதில்களை எரித்த சிவனே! திருமூலட்டானத்தில் உறைபவனே! உன் திருவடி வாழ்க. ஏழ்கடல், 'உவர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ் சாற்றுக்கடல், மதுக்கடல், நன்னீர்க்கடல்'.

2408. பொன்னியலும் மேனியனே போற்றி போற்றி
பூதப் படையுடையாய் போற்றி போற்றி
மன்னியசீர் மறைநான்கு மானாய் போற்றி
மறியேந்து கையானே போற்றி போற்றி
உன்னுமவர்க் குண்மையனே போற்றி போற்றி
உலகுக் கொருவனே போற்றி போற்றி
சென்னிமிசை வெண்பிறையாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 4

பொன் இயலும் – பொன் போல விளங்கும்
உன்னுதல் – அன்பால் நினைத்தல்
உண்மையன் – உள்பொருளாகின்றவன் – நினைத்த பயனைத் தருபவன்.

பொன்னார் மேனியனே! பூதப்படையனே! சிறப்பு நிலைபெற்ற நான்கு வேதங்களும் ஆனவனே! மான்குட்டியை ஏந்திய கையினனே! உன்னையே தியானிப்பவருக்கு உள் பொருளாய் அகக்கண்களுக்குக் காட்சி வழங்குகின்றவனே! உலகுக்கு ஒப்பற்ற தலைவனே! சென்னியில் வெண்பிறை சூடியவனே! திருமூலட்டானத்தில் உறைபவனே! நீ வாழ்க. ஒருவன் – எல்லா முதன்மையும் உடைய பெருந்தலைவன். நாமெல்லாம் அவருக்கு அடிமைகள்.

**2409.** நஞ்சுடைய கண்டனே போற்றி போற்றி
நற்றவனே நின்பாதம் போற்றி போற்றி
வெஞ்சுடரோன் பல்லிறுத்த வேந்தே போற்றி
வெண்மதியங் கண்ணி விகிர்தா போற்றி
துஞ்சிருளி லாட லுகந்தாய் போற்றி
தூநீறு மெய்க்கணிந்த சோதீ போற்றி
செஞ்சடையாய் நின்பாதம் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 5

நற்றவன் – மோன முத்திரைக் கையால் மெய்ம்மையுணர்த்தும் தென்முகக் கடவுள். துஞ்சிருள் – எல்லாம் ஒடுங்கிய இருள். இந்நிலையில் ஆடுதல் மீளப் படைத்தற்குரிய செய்தலாகும். இதுவே சூக்கும நடனம் – சூக்கும ஐந்தொழில் எனப்படும்.

விடம் தங்கிய கழுத்தினனே! ஞானயோக வடிவினனே! சூரியன் ஒருவனுடைய பற்களைத் தகர்த்த வேந்தனே! வெண்பிறையை முடிமாலையாகச் சூடியவனே! எல்லாம் ஒடுங்கிய இருளில் கூத்தாடுதலை உகந்தவனே! திருநீறு பூசிய சோதியே! சிவந்த சடையை உடையவனே! திருமூலட்டானனே! உன் திருவடி வாழ்க.

**2410.** சங்கரனே **நின்பாதம்** போற்றி போற்றி
சதாசிவனே **நின்பாதம்** போற்றி போற்றி
பொங்கரவா **நின்பாதம்** போற்றி போற்றி
புண்ணியனே **நின்பாதம்** போற்றி போற்றி
அங்கமலத் தயனோடு மாலுங் காணா
அனலுருவா **நின்பாதம்** போற்றி போற்றி
செங்கமலத் **திருப்பாதம்** போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 6

சதாசிவம் – அருவுருவத் திருமேனி – சிவலிங்கம். சங்கரன் – இன்பத்தைச் செய்பவன். பொங்கு அரவன். மிக்க பாம்புகளை அணிந்தவன். இப்பாடல் முழுவதும் திருவடி வணக்கம்.

சங்கரனே! சதாசிவனே! படம் எடுக்கும் பாம்பை அணிந்தவனே! புண்ணியனே! தாமரையில் உள்ள பிரமனும், திருமாலும் காணமுடியாத தீப்பிழம்பின் வடிவானவனே! திருமூலட்டானத்து உறைபவனே! உன் திருப்பாதங்கள் வாழ்க.

அடிதோறும் திருவடி வணக்கப் பாடல். 108/ 1008 போற்றி அருச்சனை நிறைவில் அடியார்கள் இப்பாடலைப் போற்றி, போற்றியை நிறைவு செய்கிறார்கள்.

**2411.** வம்புலவு கொன்றைச் சடையாய் போற்றி
வான்பிறையும் வாளரவும் வைத்தாய் போற்றி
கொம்பனைய நுண்ணிடையாள் கூறா போற்றி
குரைகழலாற் கூற்றுதைத்த கோவே போற்றி
நம்புமவர்க் கரும்பொருளே போற்றி போற்றி
நால்வேதம் ஆறங்க மானாய் போற்றி
செம்பொனே மரகதமே மணியே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 7

வாளரவு – கொடிய பாம்பு. அரும் பொருளாதல் – கிடைத்தற்கரிய பொருள் கிடைத்தல்.

நறுமணம் கமழும் கொன்றைப் பூ அணிந்த சடையனே! சடையில் வானில் உலவும் பிறையையும் ஒளிவீசும் பாம்பினையும் சூடியவனே! பூங்கொம்பு போன்ற நுண்ணிய இடையை உடைய பார்வதி பாகனே! கழலணிந்த திருவடிகளால் கூற்றுவனை உதைத்த தலைவனே! விரும்பும் அடியார்க்குக் கிட்டுதற்கு இனிய செல்வமே! நான்கு வேதங்களும் ஆறு அங்கங்களும் ஆகியவனே! செம்பொன், மரகதம், மாணிக்கம் போன்றவனே! திருமூலட்டானத்தில் உறைகின்றவனே! நீ வாழ்க.

| | |
|---|---|
| **2412.** உள்ளமா யுள்ளத்தே நின்றாய் போற்றி<br>உகப்பார் மனத்தென்றும் நீங்காய் போற்றி<br>வள்ளலே போற்றி மணாளா போற்றி<br>வானவர்கோன் தோள்துணிந்த மைந்தா போற்றி<br>வெள்ளையே றேறும் விகிர்தா போற்றி<br>மேலோர்க்கும் மேலோர்க்கும் மேலாய் போற்றி<br>தெள்ளுநீர்க் கங்கைச் சடையாய் போற்றி<br>திருமூலட் டானனே போற்றி போற்றி. **8**<br><br>விகிர்தன் – உலகியலுக்கு வேறுபட்டவன். | என் உள்ளத்தில் நிலைத்திருப்பவனே! உன்னை விரும்புவார் உள்ளத்தை என்றும் நீங்காது இருப்பவனே! வள்ளலே! மணவாளனே! இந்திரனுடைய தோளை நீக்கிய வலிமையுடையவனே! வெண்ணிறக் காளையை ஏறும் உலகியலிலிருந்து வேறுபட்டவனே! எல்லாருக்கும் மேம்பட்டவனே! தெளிந்த நீரை உடைய கங்கையைச் சடையில் ஏற்றவனே! திருமூலட்டானத்தில் உள்ளவனே! நீ வாழ்க. |
| **2413.** பூவார்ந்த சென்னிப் புனிதா போற்றி<br>புத்தேளிர் போற்றும் பொருளே போற்றி<br>தேவார்ந்த தேவர்க்குந் தேவே போற்றி<br>திருமாலுக் காழி யளித்தாய் போற்றி<br>சாவாமே காத்தென்னை யாண்டாய் போற்றி<br>சங்கொத்த நீற்றெஞ் சதுரா போற்றி<br>சேவார்ந்த வெல்கொடியாய் போற்றி போற்றி<br>திருமூலட் டானனே போற்றி போற்றி. **9**<br><br>சே – எருது. சதுரன் – திறமையுடையவன்<br>மூலவரைப் போற்றிய பதிகம்.<br>பதிக மகுடம் – திருமூலட்டானனே போற்றி போற்றி | பூக்கள் நிறைந்த சடைமுடியை உடையவனே! தூயவனே! தேவர்கள் துதிக்கும் பரம்பொருளே! தெய்வத்தன்மை நிரம்பிய தேவர்களுக்கும் தேவனே! திருமாலுக்குச் சக்கரம் அளித்தவனே! இம்மனிதப் பிறப்பெடுத்தும் வீணாகச் சாகாமல் பிறவிப் பிணியிலிருந்து காப்பாற்றி என்னை ஆண்டவனே! சங்கினை ஒத்த வெள்ளிய நீற்றினை அணிந்த பெருந்திறமை உடையவனே! காளை வடிவம் எழுதிய கொடியை உடையவனே! திருமூலட்டானத்தில் உறைபவனே! நீ வாழ்க. |
| **2414.** பிரமன்தன் சிரமரிந்த பெரியோய் போற்றி<br>பெண்ணுருவோ டாணுருவாய் நின்றாய் போற்றி<br>கரநான்கும் முக்கண்ணும் உடையாய் போற்றி<br>காதலிப்பார்க் காற்ற எளியாய் போற்றி<br>அருமந்த தேவர்க் கரசே போற்றி<br>யன்றரக்கன் ஐந்நான்கு தோளுந் தாளுஞ்<br>சிரம்நெரித்த சேவடியாய் போற்றி போற்றி<br>திருமூலட் டானனே போற்றி போற்றி. **10** | பிரமனுடைய ஐந்தாம் தலையை நீக்கிய பெரியோனே! பெண்ணுருவும் ஆணுருவுமாய் இருப்பவனே! நான்கு கைகளும் முக்கண்களும் உடையவனே! அமுதத்தை உண்ணும் தேவர்களுக்கு அரசே! ஒரு காலத்தில் இராவணனுடைய இருபது தோள்களையும், கால்களையும், தலைகளையும் நெரித்த திருவடியை உடையவனே! திருமூலட்டானத்தில் உறைபவனே! நீ வாழ்க. |

அடியார்கள் தினமும் செய்ய வேண்டிய மலர் அர்ச்சனைக்கு மந்திரமாகச் சொல்ல வேண்டியது இப்பதிகமாகும். பதிப்பாசிரியர் உட்பட பல்லாயிரம் அடியார்களுக்கு இது மனனப் பதிகமாகும். ஒவ்வொரு போற்றி சொல்லும் போதும் ஒரு மலரெடுத்து நெஞ்சைத் தொட்டுத் திருவடியில் சாற்ற வேண்டும். இப்பதிகத்தில் 102 போற்றிகள் வருகின்றன. திருமுறைகளில் பிற பதிகங்களிலிருந்து ஆறு போற்றிகள் சேர்த்து 108 எனப்படும் அட்டோத்திர நாமாவளியாக அடியார்கள் கொண்டு சிவபூசை செய்கிறார்கள். இதைப்போன்ற பல பதிகங்களையும், ஒன்று சேர்த்து 1008 போற்றி எனப்படும் சகஸ்ரநாமாவளி அர்ச்சனையையும் அற்புதமாகச் செய்யலாம்.

## 33. திருவாரூர்த் திருமூலட்டானமும் அரநெறியும்

### பதிக வரலாறு

வாகீசர் திருவாரூர்ப் புற்றிடங்கொள் நிருத்தரைக் காலங்களில் கும்பிட்டுப் பதிகம் பல பாடி, திருவாரூரரனெறியிற்றிகழும் பரமரைப் பணிந்து பாடியருளியது இத்திருப்பதிகம். (தி. 12. திருநாவு. புரா. 227).

**குறிப்பு :** 'அரநெறி' என்பது, திருமூலட்டானத்திற்கு வேறாய், அத்திருக்கோயிலுக்குள்ளேயிருக்கும் மற்றொரு தலம். 'அரநெறி' எனினும், 'சிவநெறி' எனினும் ஒக்கும். 'அரத்துறை' என்பதொரு தலம். அரனது நெறியையடைவிக்கும் தலம்' என்பது பொருள். திருவாரூர்க் கோயிலின் உள்ளேயே தென்கிழக்கு மூலையில் அமைந்துள்ளது. சதாசிவச்செட்டியார் அவர்கள் பதிப்பில் இது 34 ஆவது திருப்பதிகமாகக் காணப்படுகின்றது.

இத்திருப்பதிகப் பாட்டுக்கள் தோறும் வெவ்வேறு ஒன்றிரண்டு தலங்களிலும், திருவாரூர், திருமூலட்டானத்திலும் இறைவன் விளங்க எழுந்தருளியிருக்கும் தன்மையினையும், அவரே அரநெறியில் தேற்றம்பட விளங்குவதனையும் உடன்கூறி அருளுதலைக் காணவேண்டும்.

ப.தொ.எண் : 246 பதிக எண் : 33

2415. பொருங்கைமத கரியுரிவைப் போர்வை யானைப்
பூவணமும் வலஞ்சுழியும் பொருந்தி
னானைக்
கரும்புதரு கட்டியையின் னமிர்தைத் தேனைக்
காண்பரிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை
இருங்கனக மதிலாரூர் மூலட் டானத்
தெழுந்தருளி யிருந்தானை யிமையோ
ரேத்தும்
அருந்தவனை அரநெறியி லப்பன் தன்னை
அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த
வாறே. 1

பொருங்கரி, கைத்தரி, மதகரி. இரு – பெரிய.

போரிடும் துதிக்கையை உடைய மத யானையின் தோலைப் போர்த்தியவனாய்ப் பூவணமும் வலஞ்சுழியும் உறைவிடமாகக் கொண்டவனாய்க் கருப்பங்கட்டியையும் அமுதையும் தேனையும் போன்ற இனியவனாய், காட்சிக்கு செஞ்சுடராய்ப் பொற்குன்றாய்ப் பெரிய பொன்மயமான மதில்களை உடைய ஆரூர் மூலட்டானத்து எழுந்தருளியவனாய், தேவர்கள் துதிக்கும் பெருந்தவத்தோனாய் உள்ள திருவாரூர் அரநெறியப்பனை அடைந்து அடியேன் நீக்கற்கரிய வினையாகிய நோயினைப் போக்கிக் கொண்ட திறம் நன்று.

2416. கற்பகமும் இருசுடரு மாயி னானைக்
காளத்தி கயிலாய மலையு ளானை
விற்பயிலும் மதனழிய விழித்தான் தன்னை
விசயனுக்கு வேடுவனாய் நின்றான்
தன்னைப்
பொற்பமரும் பொழிலாரூர் மூலட் டானம்
பொருந்தியஎம் பெருமானைப் பொருந்தார்
சிந்தை
அற்புதனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த
வாறே. 2

மதன் – மன்மதன்

கற்பகமும், சோம சூரியருமாய் ஆகிக் காளத்தி மலையிலும் கயிலாயத்திலும் உறைந்து, விற்றொழிலில் பழகிய மன்மதன் நீறாகுமாறு நெற்றிக்கண்ணை விழித்து, அருச்சுனன் முன் வேடனாய்க் காட்சியளித்து, அழகிய சோலைகள் சூழ்ந்த ஆரூர் மூலட்டானத்திலே பொருந்திய எம்பெருமானாய்ப் பகைவர்கள் உள்ளத்தே சூனியமாய் உள்ளவனாய் உள்ள அரநெறியில் அப்பனை அடைந்து அடியேன் அருவினை நோய் அறுத்தவாறே.

2417. பாதியொரு பெண்முடிமேற் கங்கை யானைப்
பாசூரும் பரங்குன்றும் மேயான் தன்னை
வேதியனைத் தன்னடியார்க் கெளியான் தன்னை
மெய்ஞ்ஞான விளக்கானை விரையே நாறும்
போதியலும் பொழிலாரூர் மூலட் டானம்
புற்றிடங்கொண் டிருந்தானைப்
போற்றுவார்கள்
ஆதியனை அரநெறியில் அப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த
வாறே. 3

பார்வதி பாகனாய்க் கங்கையை இருத்திய முடியினனாய்ப் பாசூரிலும் பரங்குன்றிலும் விரும்பி உறைபவனாய், வேதியனாய்த் தன் அடியார்களுக்கு எளியவனாய், மெய்ஞ்ஞான விளக்காய், நறுமணம் கமழும் மலர்கள் மிக்க சோலைகளை உடைய ஆரூர் மூலட்டானத்தில் உள்ள புற்றிடங்கொண்ட பெருமானாய்த் தன்னைத் துதிப்பவர்கள் தலைவனாய் உள்ள அரநெறியில் அப்பனை அடைந்து அடியேன் அருவினைநோய் அறுத்தவாறே.

விரை – வாசனை

2418. நந்திபணி கொண்டருளும் நம்பன் தன்னை
நாகேச் சரமிடமா நண்ணி னானைச்
சந்திமல ரிட்டணிந்து வானோ ரேத்துந்
தத்துவனைச் சக்கரம்மாற் கீந்தான் தன்னை
இந்துநுழை பொழிலாரூர் மூலட் டானம்
இடங்கொண்ட பெருமானை யிமையோர்
போற்றும்
அந்தணனை அரநெறியில் அப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த
வாறே. 4

நந்திதேவருடைய முதற்பெருங்காவலை ஏற்றுக் கொண்ட தலைவனாய், நாகேச்சுரத்தில் உறைபவனாய், காலை நண்பகல் மாலை என்ற முப்போதும் வானவர்கள் பூக்களால் அலங்கரித்துத் துதிக்கும் மெய்ப் பொருளாய், திருமாலுக்குச் சக்கரம் ஈந்தவனாய், சந்திரன் நுழைந்து செல்லுமாறு வானளாவி உயர்ந்த சோலைகளை உடைய ஆரூர் மூலட்டானத்தில் உறையும் பெருமானாய், தேவர்கள் போற்றும் அந்தணனாய் உள்ள ஆரூரில் அரநெறியின் அப்பனை அடைந்து அடியேன் அருவினை நோய் அறுத்தவாறே.

சந்தி – சந்திக்கும் பொழுதுகள்
காலை, நண்பகல், மாலை பூசை நேரங்கள்
இந்து – சந்திரன்

**2419.** சுடர்ப்பவளத் திருமேனி வெண்ணீற் றானைச்
சோதிலிங்கத் தூங்கானை மாடத் தானை
விடக்கிடுகா டிடமாக வுடையான் தன்னை
மிக்கரண மெரியூட்ட வல்லான் தன்னை
மடற்குலவு பொழிலாரூர் மூலட் டானம்
மன்னியவெம் பெருமானை மதியார் வேள்வி
அடர்த்தவனை அரநெறியில் அப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த
வாறே. 5

பவளம் போல ஒளி வீசும் செம்மேனியில் வெண்ணீறு அணிந்தவனைச் சோதிலிங்கமாக உள்ளவனைப் பெண்ணாகடத்துத் தூங்கானை மாடத்து உறைபவனைப் பிணங்கள் இடும் சுடுகாட்டை உறைவிடமாக உடையவனை, தீமை மிக்க முப்புரங்களை எரித்தவனை, பூக்களின் இதழ்கள் மிக்க சோலைகளை உடைய ஆரூர் மூலட்டானத்தில் நிலைபெற்ற எம்பெருமான் தன்னை மதியாதவர்களுடைய வேள்வியை அழித்தவனை, அரநெறியில் உறையும் தலைவனை இத்தகைய பண்புகளையும் செயல்களையும் உடைய பெருமானை அடைந்து அடியேன் அருவினை நோய் அறுத்தவாறே.

விடக்கு – இறைச்சிகளையுடைய
மடல் – பூவிதழ், குலவும் – விளங்குகின்ற
பதிக மகுடம் – அரநெறியில் அப்பன் தன்னை அடைந்தடியேன் அருவினை நோய் அறுத்தவாறே.

**2420.** தாயவனை யெவ்வுயிர்க்குந் தன்னொப் பில்லாத்
தகுதில்லை நடம்பயிலும் தலைவன் தன்னை
மாயவனும் மலரவனும் வானோ ரேத்த
மறிகடல்நஞ் சுண்டுகந்த மைந்தன் தன்னை
மேயவனைப் பொழிலாரூர் மூலட் டானம்
விரும்பியவெம் பெருமானை யெல்லாம்
முன்னே
ஆயவனை அரநெறியில் அப்பன்தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த
வாறே. 6

எல்லா உயிர்களுக்கும் தாயாய், தனக்கு ஒப்பு இல்லாத திருத்தலமாகிய தில்லையில் கூத்தனாய், திருமாலும், பிரமனும் ஏனைய வானவரும் துதிக்குமாறு அலைகள் மோதி மீளும் கடலின் நஞ்சினை உண்டு மகிழ்ந்த வலியவனாய், எல்லா உயிர்களையும் விரும்பியவனாய், சோலைகளை உடைய ஆரூர் மூலட்டானத்தை விரும்பிய எம்பெருமானாய், எல்லாப் பொருள்களிலும் தொடக்கத்திலேயே பரவி அவற்றைச் செயற்படுத்துபவனாய் உள்ள ஆரூரில் அரநெறியில் உறையும் அப்பனை அடைந்து அடியேன் அருவினை நோய் அறுத்தவாறே.

மேயவன் – விரும்பியவன்
மூலட்டானம் மேயவனை
அரநெறியில் ஆயவனை

2421. பொருளியல்நற் சொற்பதங்க ளாயி னானைப்
புகலூரும் புறம்பயமும் மேயான் தன்னை
மருளியலுஞ் சிந்தையர்க்கு மருந்து தன்னை
மறைக்காடுஞ் சாய்க்காடும் மன்னி னானை
இருளியல்நற் பொழிலாரூர் மூலட் டானத்
தினிதமரும் பெருமானை யிமையோ ரேத்த
அருளியனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த
வாறே. 7

பொருள்களை உடைய சொற்களாக அமைந்தவனாய், புகலூரிலும் புறம்பயத்திலும் விரும்பி உறைபவனாய், மயக்கம் பொருந்திய மனத்தவருக்கு மயக்கம் போக்கும் அமுதமாய், மறைக்காட்டிலும், சாய்க்காட்டிலும் உறைபவனாய், மரச்செறிவால் இருண்ட பெரிய பொழில்களை உடைய ஆரூர் மூலட்டானத்தில் மகிழ்வாக அமர்ந்திருக்கும் பெருமானாய்த் தேவர்கள் துதிக்க அவர்களுக்கு அருளியவனாய் உள்ள அரநெறியின் அப்பனை அடைந்து அடியேன் அருவினை நோய் அறுத்தவாறே.

பொருள் இயல் – பொருள் விளங்குதற்கு ஏதுவாகிய
நற்சொல் – புறத்தே இனிதிசைக்கும் சொல்; இது வைகரிவாக்கு எனப்படும். அதன் நுண் நிலைகள். மத்திமை, பைசந்தி, சூக்குமை எனப் பகுக்கப்பட்டு வாக்குகள் நான்காகும். மருள் இயலும் சிந்தை – தன்னைப் பொருளாக உணராது பிறவற்றைப் பொருளென்று உணரும் மயக்கம். அதனை நீக்கும் மருந்து சிவபெருமான் ஆவார்.

2422. காலனைக்கா லாற்காய்ந்த கடவுள் தன்னைக்
காரோணங் கழிப்பாலை மேயான் தன்னைப்
பாலனுக்குப் பாற்கடலன் றீந்தான் தன்னைப்
பணியுகந்த அடியார்கட் கினியான்
தன்னைச்
சேலுகளும் வயலாரூர் மூலட் டானஞ்
சேர்ந்திருந்த பெருமானைப் பவள மீன்ற
ஆலவனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த
வாறே. 8

பணியுகந்த – தொண்டினை விரும்பிச் செய்யும்.
ஆல் – ஆலம் விழுது போலும் சடை

காலனைக் காலால் வெகுண்ட கடவுளாய், குடந்தை நாகைக் காரோணங்களையும் கழிப்பாலையையும் விரும்பி உறைபவனாய், உபமன்னியுவாகிய பாலனுக்காகப் பாற்கடலையே அளித்தவனாய், தன் திருத்தொண்டில் மகிழ்ந்து ஈடுபட்ட அடியவர்களுக்கு இனியனாய், சேல்மீன்கள் தாவித் திரியும் வயல்களை உடைய திருவாரூர் மூலட்டானத்தில் சேர்ந்திருக்கும் பெருமானாய், பவளத்தின் ஒளியைத் தருகின்ற ஆலம்விழுது போன்ற சடையை உடையவனாய் உள்ள ஆரூரின் அரநெறியின் அப்பனை அடைந்து அடியேன் அருவினை நோய் அறுத்தவாறே.

2423. ஒப்பொருவ ரில்லாத ஒருவன் தன்னை
ஒத்தூரும் உறையூரும் மேவி னானை
வைப்பவனை மாணிக்கச் சோதி யானை
மாருதமுந் தீவெளிநீர் மண்ணா னானைப்
பொ.......................................................................
9

தன்னை ஒப்பவர் வேறு யாவரும் இல்லாத ஒப்பற்றவனாய், ஒத்தூரையும், உறையூரையும் விரும்பி உறைபவனாய், நமக்குச் சேமநிதி போல்வானாய், மாணிக்கத்தின் ஒளியை உடையவனாய், காற்றும், தீயும், ஆகாயமும், நீரும், மண்ணும் ஆகிய ஐம்பூதங்களாகவும் உள்ளவனாய்....

2424. பகலவன்தன் பல்லுகுத்த படிறன் தன்னைப்
பராய்த் துறைபைஞ் ஞீலியிடம் பாவித்
தானை
இகலவனை இராவணனை யிடர்செய் தானை
யேத்தாதார் மனத்தகத்துள் இருளா
னானைப்
புகழ்நிலவு பொழிலாரூர் மூலட் டானம்
பொருந்தியவெம் பெருமானைப் போற்றார்
சிந்தை
அகலவனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த
வாறே. 10

சூரியன் ஒருவனுடைய பற்களைத் தகர்த்த வஞ்சகனாய், பராய்த்துறையையும் பைஞ்ஞீலியையும் உறைவிடங்களாகக் கருதியவனாய், மாறுபட்ட இராவணனைத் துன்புறுத்தியவனாய்த் தன்னைத் துதியாதவர் மனத்தினில் இருளாக இருப்பவனாய்ப் புகழ் பொருந்திய சோலைகளை உடைய ஆரூர் மூலட்டானத்தை உறைவிடமாகக் கொண்ட எம்பெருமானாய் உள்ள அரநெறியின் அப்பனை அடைந்து அடியேன் அருவினைநோய் அறுத்தவாறே.

படிறன் – வஞ்சகன். 'வஞ்சகன்'
போல நின்று செய்தான். பாவித்தான் – கருதினான்
இகலவன் – மாறுபாடு உடையவன். இருளாதல் – தோன்றாதிருத்தல். அகலவன் – நீங்குதலையுடையவன்.

## 34. திருவாரூர்

(இத்திருப்பதிகம் திருவாரூர்த் தலத்தின் தொன்மையை வியந்து அருளிச் செய்தது. இதனுள் நாள் என்றன பலவும் பொதுப்படத்தொன்மை ஒன்றையே குறித்து நின்றன)

### திருவாரூரின் தொன்மை

1. சிவபெருமான் பிரம்ம, விட்டுணு, உருத்திரர்களுக்கு மேலாக நின்ற நாள் எதுவோ ?
2. காலனைக் காய்ந்த நாள் எதுவோ ?
3. காமனை விழித்த நாள் எந்த நாளோ ?
4. கடல் விடம் அருந்திய நாள் எந்த நாளோ ?
5. அடிமுடி தேடிய காலம் எதுவோ ?
6. திரிபுர சம்காரம் எப்போது நடந்தது ?
7. பாசுபதம் அருச்சுனன் என்று பெற்றான் ? எப்போது பாரதம் நடந்தது ?
8. பொன்னம்பலத்தில் கூத்தாடியது எப்போது ? புலியும் பாம்பும் பார்த்தது எப்போது ?
9. தக்கயாக சம்காரம் எப்போது ?
10. தாருகா வனநிகழ்வுகளுக்கு என்ன கால ஆதாரம் ?

11. பிட்சாடனருக்கு முன்னோ பின்னோ ?

12. சலந்தர சம்காரம் எப்போது ?

13. வேத முரைத்த காலம் எது ?

14. சண்டீசர் பதம் பெற்றது எப்போது ?

15. கங்கை, பிறை, பாம்பு எப்போது அணிந்தார் ?

16. மகேச்சுர மூர்த்தங்களை எப்போது பெற்றோம்

17. பிரம்ம சம்காரம் நடந்த நாள் எதுவோ ?

18. இதுவரை எத்தனை சுனாமிப் பேரலைகள் வந்து போயுள்ளன ? எவ்வளவு மகாசங்காரங்கள் நிகழ்ந்துள்ளன ?

19. திசைகள் எட்டும் எப்போது தோன்றின ?

இந்நிகழ்வுகள் நடந்த கால அட்டவணையை நம்மால் தயாரிக்க இயலுமா ? முயன்று முடிவு கிடைத்தால் திருவாரூர்க் கோயிலின் தொன்மையையும், தமிழகத்தின் தொன்மையையும் நிலை நாட்டலாம்.

ப.தொ.எண் : 247 பதிக எண் : 34

2425. ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவ மான நாளோ
கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும் விண்ணுந் தெரித்த நாளோ
மான்மறிகை யேந்தியோர் மாதோர் பாகத்
திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்டநாளே. 1

ஒப்பற்ற தலைவனாய், உலகங்கள் துதிக்க நின்றவனே! ஒரே உருவம் அரி, அயன், அரன் என்ற மூன்று வடிவம் ஆனவனே! கோபங்கொண்டு கூற்றுவனை உதைத்தவனே! மன்மதனையும் கண்ணிலிருந்து தோன்றிய நெருப்பினால் சாம்பலாக்கியவனே! பொருந்துதல் உடையவனாய் மண் உலகையும், தேவர் உலகையும் படைத்தவனே! மான்குட்டியைக் கையில் ஏந்தியவனே! அழகியவளாம் பார்வதியை ஒரு பாகமாக உடலில் கொண்டவனே! இச்செயல்களை எல்லாம் செய்வதற்கு முன்னோ, செய்த பின்னோ நீ திருவாரூரை உகந்தருளும் திருத்தலமாகக் கொண்டுள்ளாய் ?

மருவனாய் – பொருந்துதல் உடையவனாய்.
தெரித்த – படைத்த

| | |
|---|---|
| **2426.** மலையார்பொற் பாவையொடு மகிழ்ந்த நாளோ<br>வானவரை வலியமுத மூட்டி யந்நாள்<br>நிலைபேறு பெறுவித்து நின்ற நாளோ<br>நினைப்பரிய தழற்பிழம்பாய் நிமிர்ந்த நாளோ<br>அலைசாமே அலைகடல்நஞ் சுண்ட நாளோ<br>அமரர்கணம் புடைசூழ இருந்த நாளோ<br>சிலையான்முப் புரமெரித்த முன்னோ பின்னோ<br>திருவாரூர் கோயிலாக் கொண்டநாளே. 2<br><br>மலைஆர் – மலையில் வளர்ந்த. வலி – இறவாதிருக்கும் வலிமை. அலைசாமே – தளராமல். | அழகிய மலை மங்கையாகிய பார்வதியோடு மகிழ்ந்தவனே! தேவர்கள் வருந்தாதபடி கடல் விடத்தை உண்டவனே! தேவர்கணம் புடைசூழ இருந்தவனே! அவர்களுக்கு வலிமை தரும் அமுதத்தை உண்பித்து நிலைபேற்றை அருளியவனே! நினைக்கவும் முடியாத தீப்பிழம்பாக ஓங்கி இருந்தவனே! வில்லால் மும்மதில்களையும் எரித்துச் சாம்பலாக்கியவனே! இச்செயல்களைச் செய்வதன் முன்னோ செய்த பின்னோ நீ திருவாரூரைக் கோயிலாகக் கொண்டாய்? |
| **2427.** பாடகஞ்சேர் மெல்லடிநற் பாவை யாளும்<br>நீயும்போய்ப் பார்த்தனது பலத்தைக் காண்பான்<br>வேடனாய் வில்வாங்கி எய்த நாளோ<br>விண்ணவர்க்குங் கண்ணவனாய் நின்ற நாளோ<br>மாடமொடு மாளிகைகள் மல்கு தில்லை<br>மணிதிகழும் அம்பலத்தே மன்னிக் கூத்தை<br>ஆடுவான் புகுவதற்கு முன்னோ பின்னோ<br>அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 3 | பாடகம் என்ற அணியினை அணிந்த மெல்லிய அடிகளை உடைய பார்வதியோடு பார்த்தனுடைய வலிமையைப் பரிசோதிப்பதற்கு வேடனாய் வில்லை வளைத்துக் கொண்டு நின்றவனே! தேவர்களுக்குப் பற்றுக் கோடாய் நின்றவனே! மாடமாளிகைகள் நிறைந்த தில்லைத் திருப்பதியில் அழகு விளங்கும் பொன்னம்பலத்தில் நிலைபெற்றுக் கூத்தாடத் தொடங்கியவனே! இச்செயல்களைச் செய்வதன் முன்னோ செய்த பின்னோ நீ திருவாரூரைக் கோயிலாகக் கொண்டாய்? |
| **2428.** ஓங்கி உயர்ந்தெழுந்து நின்ற நாளோ<br>ஓருகம்போல் ஏழுகமாய் நின்ற நாளோ<br>தாங்கியசீர்த் தலையான வானோர் செய்த<br>தக்கன்தன் பெருவேள்வி தகர்த்த நாளோ<br>நீங்கியநீர்த் தாமரையான் நெடுமா லோடு<br>நில்லாயெம் பெருமானே யென்றங்கேத்தி<br>வாங்கிமதி வைப்பதற்கு முன்னோ பின்னோ<br>வளராரூர் கோயிலாக் கொண்ட நாளே. 4<br><br>"ஆரூர் கோயிலாக் கொண்ட நாளே" என்பது பதிக மகுடம். | ஓங்கி உயர்ந்து எழுந்து நின்றவனே! ஓர் ஊழியில் போலப் பல ஊழிகளிலும் நிலைபெற்றிருப்பவனே! மிகச் சிறப்புடைய உயர்ந்த தேவர்களின் ஒத்துழைப்போடு நிகழ்த்தப்பட்ட தக்கனுடைய பெரிய வேள்வியை அழித்தவனே! நீருள் பூக்காது திருமாலின் உந்தியில் பூத்த தாமரையில் தோன்றிய பிரமனும், திருமாலும், 'பெருமானே! எங்கள் உள்ளத்தில் நிலைபெற்றிருப்பாயாக' என்று துதித்து, தம் உள்ளத்தின்கண் கொண்டு செறித்து வைக்கப்பட்டிருப்பவனே! இச் செயல்கள் நிகழ்த்தப்படுவதன் முன்னோ நிகழ்த்தப்பட்ட பின்னோ நீ திருவாரூரைக் கோயிலாகக் கொண்டாய்? |

**2429.** பாலனாய் வளர்ந்திலாப் பான்மை யானே
பணிவார்கட் கங்கங்கே பற்றா னானே
நீலமா மணிகண்டத் தெண்டோ ளானே
நெருநலையாய் இன்றாகி நாளை யாகுஞ்
சீலமே சிவலோக நெறியே யாகுஞ்
சீர்மையே கூர்மையே குணமே நல்ல
கோலம்நீ கொள்வதற்கு முன்னோ பின்னோ
குளிராரூர் கோயிலாக் கொண்ட நாளே. 5

நெருதல் – நேற்று. சீலம் – செயல்.
சீர்மை – புகழுக்குரிய தன்மை.
கூர்மை – நுண்ணறிவு. நல்ல கோலம் – அருளுருவம் அவை போக வடிவம், யோக வடிவம், வேக வடிவம் என மூவகைப்படும். உயிர்களுக்கு நன்மை செய்வன.
போக வடிவம் – உமாமகேசுவரர், சந்திரசேகரர், கலியாணசுந்தரர்
யோக வடிவம் – தட்சிணாமூர்த்தி
வேக வடிவம் – வீரபத்திரர், பைரவர், பிட்சாடணர்

பாலர் முதலிய பருவங்களைக் கொண்டு வளராமல் என்றும் ஒரே நிலையில் இருப்பவனே! வழிபடும் அடியவர்களுக்கு அவ்வவ்விடங்களில் பற்றுக்கோடாய் இருப்பவனே! நீலகண்டனே! பெருந்தோள்களை உடையவனே! முக்காலமும் ஆளும் செயலை உடையவனே! சிவலோகம் சேரும் நெறியை அடியாருக்கு அருளும் புகழுக்குரிய தன்மையனே! நுண்ணறிவு உடையவனே! நற்பண்புகளுக்கு இருப்பிடமானவனே! அருளுருவம் கொண்டவனே! இச்செயல்கள் நிகழ்த்தப்படுவதன் முன்னோ நிகழ்த்தப்பட்டதன் பின்னோ நீ திருவாரூரைக் கோயிலாகக் கொண்டாய்?

**2430.** திறம்பலவும் வழிகாட்டிச் செய்கை காட்டிச்
சிறியையாய்ப் பெரியையாய் நின்ற நாளோ
மறம்பலவு முடையாரை மயக்கந் தீர்த்து
மாமுனிவர்க் கருள்செய்தங் கிருந்த நாளோ
பிறங்கியசீர்ப் பிரமன்தன் தலைகை யேந்திப்
பிச்சையேற் றுண்டுழன்று நின்ற நாளோ
அறம்பலவும் உரைப்பதற்கு முன்னோ பின்னோ
அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே.
6

திறம் – பயன். வழி – பயனை அடையும் முறை

உயிர்களுக்கு மனித வாழ்க்கையின் பயனையும் அப்பயனை அடையும் வழி முறைகளையும் அறிவர் வாயிலாகக் காட்டியவனே! அணுவை விடச் சிறிய அணுவாகவும் பெரிய பொருள்களை விடப் பெரியவனாகியும் உள்ளவனே! ஒவ்வாத செயல்கள் பலவும் உடைய தாருகாவனத்து முனிவருடைய மயக்கத்தைத் தீர்த்து அருள் செய்து இருந்தவனே! மிக்க சிறப்புடைய பிரமனுடைய மண்டையோட்டைக் கையில் ஏந்திப் பிச்சை ஏற்று உண்டு உழன்று நிற்பவனே! அறம்பலவும் உரைத்தவனே! இச் செயல்களை நீ செய்வதன் முன்னோ செய்த பின்னோ திருவாரூரைக் கோயிலாகக் கொண்டாய்?

2431. நிலந்தரத்து நீண்டுருவ மான நாளோ
நிற்பனவும் நடப்பனவும் நீயே யாகிக்
கலந்துரைக்கக் கற்பகமாய் நின்ற நாளோ
காரணத்தால் நாரணனைக் கற்பித் தன்று
வலஞ்சுருக்கி வல்லசுரர் மாண்டு வீழ
வாசுகியை வாய்மடுத்து வானோ ருய்யச்
சலந்தரனைக் கொல்வதற்கு முன்னோ பின்னோ
தண்ணாரூர் கோயிலாக் கொண்ட நாளே.

7

அந்தரம் – ஆகாயம்

மண்ணும் விண்ணும் ஒன்றுபட நீண்ட உருவம் ஆயினவனே! கலப்பினால் சராசரங்கள் யாவுமாகி நிற்பவனே! எல்லோரும் கூடி உன் பெருமையைப் பேசக் கற்பகமாய் உள்ளவனே! வானோருக்கு அசுரர்கள் தீங்கு விளைத்த காரணத்தால் திருமாலைப் படைத்து அசுரர்களுடைய வலிமையைச் சுருக்கி அவர்கள் மாண்டு அழியச் செய்தவனே! வாசுகியால் வெளிப்பட்ட ஆலகால விடத்தை உண்டவனே! சலந்தரனை அழித்தவனே! இச்செயல்கள் செய்வதற்கு முன்னோ செய்த பின்னோ நீ குளிர்ந்த ஆரூரைக் கோயிலாகக் கொண்டாய்?

2432. பாதத்தால் முயலகனைப் பாது காத்துப்
பாரகத்தே பரஞ்சுடராய் நின்ற நாளோ
கீதத்தை மிகப்பாடும் அடியார்க் கென்றுங்
கேடிலா வானுலகங் கொடுத்த நாளோ
பூதத்தான் பொருநீலி புனிதன் மேவிப்
பொய்யுரையா மறைநால்வர் விண்ணோர்க் கென்றும்
வேதத்தை விரிப்பதற்கு முன்னோ பின்னோ
விழவாரூர் கோயிலாக் கொண்ட நாளே.

8

முயலகன் – தாருகாவனத்து முனிவன் விடுத்த அசுரன். பாதுகாத்து – சிறைப்படுத்தி.

பாரகத்தே பரஞ்சுடராய் நின்றது – கூத்தப் பெருமானை.

அழுத்திய திருவடியால் முயலகனை யாருக்கும் தீங்கு நிகழ்த்தாதவாறு அழுத்திவைத்து உலகில் மேம்பட்ட சுடராய்த் திகழ்பவனே! உன் புகழ்பாடு அடியவர்களுக்கு என்றும் அழிவில்லா வீட்டுலகம் நல்கியவனே! பூத கணங்களை உடைய நந்தி தேவர், தனக்குத் தானே ஒப்பாகும் பார்வதி, புனிதனாகிய பிரமன், பொய்யுரையாத வேதத்தில் வல்ல நால்வர் மற்றத் தேவர் எல்லோருக்கும் வேதக் கருத்தை விரித்து உரைத்தவனே! நீ இச் செயல்களைச் செய்வதன் முன்னரோ செய்த பின்னரோ திருவாரூரைக் கோயிலாகக் கொண்டாய்?

**2433.** புகையெட்டும் போக்கெட்டும் புலன்க ளெட்டும்
பூதலங்க ளவையெட்டும் பொழில்க ளெட்டும்
கலையெட்டுங் காப்பெட்டுங் காட்சி யெட்டுங்
கழற்சே வடியடைந்தார் களைக ணெட்டும்
நகையெட்டும் நாளெட்டும் நன்மை யெட்டும்
நலஞ்சிறந்தார் மனத்தகத்து மலர்க ளெட்டும்
திகையெட்டுந் தெரிப்பதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே.
**9**

புகுவது – புகை. எவ்விடத்திலும் புகுவது

சென்று சேரத்தக்க எண் வகைப் பிறப்புக்கள், எண்வகைக் குற்றங்கள், எண்புலன்கள், எண்வகை உலகங்கள், எண்வகைத் தீவுகள், எண்வகைக் கடல்கள், எண்வகை அரண்கள், தீவுகள் எட்டின் எண்வகைப்பட்ட இயல்புகள், உன் திருவடிகளை அடைந்தவர்களுக்குக் கிட்டும் பயன்கள் எட்டு, எண்வகை ஒலிகள், ஒன்றும் பலவும் ஆகிய பகுதிகளை உடைய எட்டு நாள்கள், எட்டு நன்மைகள், ஞானத்தின் மேம்பட்ட அடியார்களின் மனத்தில் அமைந்த எண்வகைப் பண்புகளாகிய எண்மலர்கள், எட்டுத்திசைகள் ஆகிய இவற்றைத் தோன்றச் செய்வதன் முன்னோ தோன்றிய பின்னோ நீ திருவாரூரைக் கோயிலாகக் கொண்டாய்?

## I. புலன்கள் எட்டும்

எட்டு என்பதை எண்ணாக மட்டும் கொள்ளாமல் எட்டுதற்குரிய, நெருங்குதற்குரிய, மதிக்கத்தக்க என்ற பொருள்களோடும் கொண்டு நோக்கலாம்.

புகுதப்படுதல் பற்றிக் கதியை, 'புகை' என்றருளிச் செய்தார்; 'மிகு, நகு' என்பவை ஐகாரம் பெற்று மிகை, நகை என வருதல் போல, 'புகு' என்பது ஐகாரம் பெற்று, 'புகை' என வந்தது. புகு + ஐ = புகை. நெருப்பிற் புகைக்கும் அப்பெயர், எவ்விடத்தும் புகுதலுடைமை பற்றியே வந்ததென்க. எழுவகைப் பிறப்புக்களோடு, 'நரகர்' என்னும் பிறப்புங் கூட்ட, பிறப்பு எட்டாம். அவையே ஈண்டுக் கதியெனப்பட்டன. நரகரைத் தேவருள் அடக்கி, 'பிறப்பு ஏழ்' எனப்படுமாயினும், 'நரகரைத் தேவுசெய்வானும்' (தி.4. ப.4. பா.2) என்பது முதலிய பலவற்றானும், யாதனாசரீரமும் பூதசார சரீரமும் வேறு வேறேயாகலானும் நரகர் தேவரின் வேறாதலே யாண்டும் துணிபு. இனி புகை என்ற சொல்லுக்கு உயிர் அல்லது ஆன்மா என்ற பெயரும் உண்டு. அது எவ்வாறெனின், ஆன்மா முன்னைய உடம்பு விழுந்து மறு உடம்பு பெறுவதற்கு முன் புகை போலிருக்கும். எனவே புகை என்பது உவமையாகுபெயராய் ஆன்மா என்னும் பொருள் படவும் நின்று, புகை எட்டும் – ஆன்மா எட்டுதற்குரிய என்றும் பொருள் தரும்.

## II. போக்கு எட்டு

போக்கு – குற்றம். குற்றம் எட்டாவன, அறியாமை, மயக்கம், யான் என்றல் (அகங்காரம்), எனதென்றல் (மமகாரம்), விருப்பு, வெறுப்பு, நல்வினை, தீவினை என்பன, பிறவாறு கூறுங்குற்றங்களெல்லாம் இவற்றுள் அடங்குமாறறிந்து கொள்க. இவை மேற்கூறிய கதிகட்கு ஏதுவாதலுணர்க.

## III. புலன்கள் எட்டும்

புலன்கள் – புலன் முதலிய கருவிகள். அவை உணரப்படுங்கால், புலன் முதலாகவே உணரப்படுதலின், எல்லாவற்றையும் 'புலன்கள்' என்றே அருளிச் செய்தார். 'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்

என்றைந்தின் – வகை தெரிவான் கட்டே உலகு' (குறள். 27) எனத் திருவள்ளுவ நாயனாரும் புலன்களையே எடுத்தோதினார். அவை எட்டாவன, தன்மாத்திரை, பூதம், ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தக்கரணம், குணம், மூலப்பகுதி, புருட தத்துவம்' என்பன. இவற்றை 'எட்டுக்கொத்து' என்பர். இவற்றுள், புலன் – அறிவு. அறியாமையை எட்டச் செய்கின்ற / விளைவிக்கின்ற அறிவு என்றும் கொள்ளலாம். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்துடன் கலை, அராகம், வித்தை மூன்றும் சேர்ந்து எட்டென்றும் சொல்லுவர்.

### IV. பூதங்கள் எட்டு

'பூதலங்கள்' என்றதை, 'பூவோடு (பூமியோடு) கூடிய தலங்கள்' என விரிக்க. 'தலங்கள்' எனப் பொதுப்பட அருளிச்செய்தது, கீழுலகங்களையும் மேலுலகங்களையும் இருமுறையான் உணர்த்தற் பொருட்டென்க. எனவே, நடுநிற்பதாய பூவுலகம் கீழ்ஏழுலகங்களோடும், மேல் ஏழ் உலகங்களோடும் இயைதற்குரித்தாக, 'எட்டு' என அனைத்துலகங்களையும் அருளிச் செய்தவாறாயிற்று. இவ்வுலகங்கள் மேற்கூறியவற்றை எய்திய உயிர்கள் போக்கு வரவு புரிதற்கு இடமாய் நிற்றலறிக.

### V. பொழில்கள் எட்டு

பொழில்கள் – தீவுகள் : அவை எட்டாவன. 'நாவல், சாகம், குசை, கிரௌஞ்சம், சான்மலி, கோமேதகம், புட்கரம்' என்னும் மக்களிடமாகிய ஏழும், அவற்றிற்குப் புறத்தேயுள்ள பொன்னிலமாகிய தேவர் இடம் ஒன்றுமாம். ஈண்டுள்ளார்க்குப் புலனாகாமை பற்றி நரகரையும் தேவருள் அடக்கிப் பிறப்பு ஏழென்றல்போல தேவர்க்குரிய பொன்னிலத்துக்கு அப்பால் பேய்கட் குரித்தாய் உள்ள இருள் நிலத்தையும் பொன்னிலத்துளடக்கி, 'பொழில்கள் எட்டு' என்று அருளிச் செய்தார்.

### VI. கலைகள் எட்டு

கலை – அத்தீவுகட்கு உடையாய் அமைந்த கடல்கள். இப்பெற்றி தோன்றவே கடல் என்னாது, 'கலை' என்றருளினார்; பிறவும் அன்ன. கடல் எட்டாவன, 'உவர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன் கடல், நன்னீர்க்கடல் என்னும் ஏழும், அவற்றிற்கு அப்பால் சக்கரவாள கிரியைச் சூழ்ந்துள்ள பெரும்புறக் கடல் ஒன்றுமாம்'.

### VII. காப்பு எட்டு

காப்பு – அரண்; அஃதாவது அக்கடல்களைச் சூழ்ந்து அரண்போல நிற்கும் மலைகள். அவை எட்டாவன, ஏழுகடலையும் சூழ்ந்துள்ள மலைகள் ஏழும், பொன்னிலத்தைச் சூழ்ந்துள்ள சக்கர வாளகிரி ஒன்றுமாம்.

### VIII. காட்சி எட்டு

காட்சி எட்டாவன, பொழில்கள் எட்டினும் காணப்படும் எண் வேறு வகைப்பட்ட இயல்புகள், எண்ணங்கள், அவைகளையெல்லாம் சிவாகமங்களுள்ளும், கந்தபுராணத்து அண்டகோசப் படலத்துள்ளும், சிவஞான மாபாடியத்துள்ளும் காணலாம்.

பொழில்கள் முதலிய நான்கும் இவ்வுலகத்தனவாகலின், அவைகளை வகுத்தருளிச் செய்தார்.

## IX. கழற்சேவடி அடைந்தார் களைகண் எட்டு

பயனை 'களைகண்' என்றருளிச் செய்தார், 'அவை காரணமாகவே கழற்சேவடியடைந்தார்' என்பது அறிவித்தற்கு. எனவே, பயன்கருதி வழிபட்டார் அடையும் பயன்கள் எட்டென்ற வாறாயிற்று; அவை, 'புவலோகம், சுவலோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், பிரமலோகம், விட்டுணுலோகம், உருத்திரலோகம்' என்பன. இவையெல்லாம் பதங்கள் (பதவிகள்) எனப்படும் புண்ணிய லோகங்கள்; சிவலோகமாகிய வீட்டுலகம் இவையனைத்திலும் மேலாய் உளது. அதனிற் சென்றார்க்கு மாறிப்பிறத்தல் இல்லை. பயன் கருதாது வழிபடுதல் உலகியலிற்பற்று நீங்காதவர்க்குக் கூடாமையின், வீட்டுலகத்தை அடைதல் அவர்க்கு இயலாதாயிற்று. உலகியலின் நீங்காதவருள்ளும் பயன் கருதாது வழிபடுவாருளராயினும், 'வேண்டேன்புகழ் வேண்டேன்செல்வம் வேண்டேன் மண்ணும் விண்ணும்' (தி. 8 திருவாசகம். உயிருண்ணிப்பத்து 7) என உவர்த்து, 'வார்கடலுலகின் வாழ்கிலேன் கண்டாய் வருகவென் றருள்புரியாயே' (தி. 8 திருவாசகம். வாழாப்பத்து 1) என வேண்டுவாரல்ல ராகலின், அவர் ஒருவாற்றாற் பயன் கருதி வழிபடுவோரே என்க; எனினும் இவர் உருத்திரலோகத்தை அடைவர் என்க.

## X. நகை எட்டு

நகை – ஒளி; அஃது அதனை உடைய பொருள்களைக் குறித்தது. அவை எட்டாவன. இராகு கேதுக்கள் ஒழிந்த கோள்கள் ஏழும், விண்மீன்களுமாம். சிறப்புப் பற்றி ஞாயிற்றையுந் திங்களையும் வேறுவே றெண்ணுவார், ஏனைய கோள்களையும் அவ்வாறு எண்ணி, சிறப்பில்லாத விண்மீன்களை ஒன்றாக வைத்து அருளிச் செய்தார்; வானத்திற் காணப்படுனவற்றையே ஈண்டுக் கூறுதலின், 'நகை' என்றது தீயின் மேற்செல்லாதாயிற்று. இவை இரண்டு தொடர்களாலும் மேலுலகங்களும், அவற்றுள் முன்னிற்பதாய புவலோக மண்டலங்களும் அருளிச் செய்தவாறு.

## XI. நாள் எட்டு

'நாள்' என்றது, அஃது ஒன்றும் பலவுமாய பகுதிகளை. அவை எட்டாவன, 'நாள், வாரம், பட்சம், மாதம், இருது, அயனம், ஆண்டு, உகம் என்பன. 'புலன்கள்' என்புழிக் கூறப்பட்ட காலம். பொருள் தொறும் நிற்கும் சிறப்புக் காலம் எனவும், இஃது எல்லாப் பொருள்களுக்கும் பொதுவாகிய பொதுக் காலம் எனவும் உணர்க. 'பூதலங்கள்' முதலாகச் சொல்லப்பட்டன யாவும் அன்ன.

## XII. நன்மை எட்டு

நன்மை எட்டாவன, 'அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கும், அவற்றிற்கு மறுதலையாய. 'மறம், இன்மை, துன்பம், பிறப்பு' என்னும் நான்குமாம். உறுதிப் பொருட்கு மறுதலையாயவற்றையும், 'நன்மை' என்றருளிச் செய்தார். மலத்தைத் தேய்த்தலிற் பிழையாமை நோக்கி, அங்ஙனம் அல்லாக்கால் அவை, கருணையுடையவனாற் படைக்கப்படுதல் என்னையோ வென்க.

## XIII. நலஞ்சிறந்தார் மனத்தகத்து மலர்களெட்டு

'நலம்' என்றது, ஞானத்தை. அதுமிக்காருடைய உள்ளத்தில் இருந்து ஞானபூசைக்கு உரியவாகும். மலர்கள் எட்டாவன 'கொல்லாமை, பொறியடக்கம், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு' என்பன.

## XIV. திகையெட்டு

திகை – திசை. அவை எட்டு. கிழக்கு முதலிய பெருந்திசை நான்கும். தென்கிழக்கு முதலிய கோணத்திசை நான்குமாம். 'காட்சி எட்டும்' என்பதனை அடுத்து நிற்றற்பாலதாய. 'திகை எட்டும்' என்பது, செய்யுள் நோக்கி இறுதிக்கண் நின்றது.

தெரித்தல் – தோன்றச் செய்தல்; படைத்தல். 'மண்ணும் விண்ணும் தெரித்தநாளோ' என மேலும் (ப. 34. பா.1) அருளிச் செய்தார்.

'எட்டு' என்பது பல்கால் வந்தது, சொற்பொருட் பின்வரு நிலையோடு, இதுவும் ஓர் எண்ணலங்காரம் என்க.

இவ்வாற்றாலெல்லாம் உலகத்தோற்றத்தை வகுத்தெடுத்தருளிச் செய்தவாறு. வேதாகம வழக்கும் ஆன்றோர் வழக்கும் பற்றி வரும் இன்னோரன்ன பொருள்கள் எல்லாவற்றையும் ஓரோர் இடத்து ஓரோர்வாயிலால் தன்னுட்கொண்டு நிற்றல் பெருமொழிகட்கு இயல்பென உணர்வோமாக.

2434. ஈசனா யுலகேழும் மலையு மாகி
இராவணனை ஈடழித்திட் டிருந்த நாளோ
வாசமலர் மகிழ்தென்ற லான நாளோ
மதயானை யுரிபோர்த்து மகிழ்ந்த நாளோ
தாதுமலர் சண்டிக்குக் கொடுத்த நாளோ
**சகரர்களை** மறித்திட்டாட் கொண்ட நாளோ
தேசமுமை யறிவதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 10

ஈடு – வலிமை

உலகம் ஏழையும் மலைகள் ஏழையும் அடக்கி ஆள்பவனே! இராவணன் ஆற்றலை அழித்து இருப்பவனே! பொதிய மலையில் அமர்ந்து மலர்களின் மணங்களை மகிழ்ந்து ஏற்கும் தென்றலாகி இருப்பவனே! மதயானையின் தோலைப் போர்த்து மகிழ்ந்தவனே! சூடிய மலர் மாலையைச் சண்டிகேசுவரருக்குக் கொடுத்தவனே! சகரபுத்திரர்களின் சாபத்தைத் தீர்த்து அவர்களை ஆட்கொண்டவனே! இச் செயல்களால் உலகவர் உன்னைப் பரம்பொருள் என்று அறிவதற்கு முன்னோ அறிந்தபின்னோ நீ திருவாரூரைக் கோயிலாகக் கொண்டாய்?

'சகரர்கள்' என்பார் அறுபதினாயிரவர் என்பதும், அவர் கபில முனிவரது வெகுளித்தீயால் சாம்பலாகி நரகமடைந்தனர் என்பதும், அவர் வழியிற் தோன்றிய பகீரதன் தவம்செய்து தேவகங்கையை மண்ணிற் கொணர்ந்து, அதனைச் சடையில் ஏற்றுப்பின்னர்த் தன் முன்னோர்கள் நல்லுலகை அடையுமாறு, அவர்தம் சாம்பலிற் சென்று பாய விடுக்கும்படி சிவபிரானை வேண்டி அங்ஙனம் செய்யப் பெற்றான். உம்மை என்னும் உறுபேற்ற முன்னிலைப் பெயர் இடைக்குறைந்து, 'உமை' என நின்றது. சிவபிரானை உலகம் அறிந்தது மிகப்பழைய காலத்தென்க.

## 35. திருவெண்காடு

(இத்திருப்பதிகத்துள் முதல் திருப்பாடலும், மூன்று முதல் ஏழு முடிய உள்ள திருப்பாடல்களும் பெருந்திணைப் பெண்பாற் கூற்றாக அருளிச் செய்யப்பட்டன)

ப.தொ.எண் : 248 | பதிக எண் : 35

2435. தூண்டு சுடர்மேனித் தூநீ றாடிச்
சூலங்கை யேந்தியோர் சுழல்வாய் நாகம்
பூண்டு பொறியரவங் காதிற் பெய்து
பொற்சடைக ளவைதாழப் புரிவெண் ணூலர்
நீண்டு கிடந்திலங்கு திங்கள் சூடி
நெடுந்தெருவே வந்தெனது நெஞ்சங் கொண்டார்
வேண்டு நடைநடக்கும் வெள்ளே றேறி
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 1

வாய் என்றது நாவினை; ஆகுபெயர்; நாவினைப் பல வழியிலும் அடிக்கடி நீட்டுதல் நாகத்திற்கு இயல்பு.

தாம் விரும்பியவாறே விரைந்தும் தாவியும் மெல்லென்றும் நடக்கும் காளையை இவர்ந்து திருவெண்காட்டை விரும்பி அடைந்த, உலகியலுக்கு வேறுபட்ட பெருமான், தூண்டப்பட்ட விளக்கினது ஒளி போன்ற பிரகாசம் உடைய திருமேனியில் வெண்ணீறணிந்து, சூலத்தைக் கையில் ஏந்திச் சுழலும் நாக்கினை உடைய பாம்பினை அணிகலனாகப் பூண்டு, காதிலும் பாம்பினை அணிந்து, பொன் போன்ற சடைகள் தொங்கப் பூணூல் அணிந்தவராய் நீண்டு கிடந்து விளங்கும் பிறைச் சந்திரனைச் சூடி நீண்ட தெருவழியே வந்து என் நெஞ்சத்தைக் கைப்பற்றிக் கொண்டார்.

2436. பாதந் தரிப்பார்மேல் வைத்த பாதர்
பாதாள மேழுருவப் பாய்ந்த பாதர்
ஏதம் படாவண்ணம் நின்ற பாதர்
ஏழுலகு மாய்நின்ற ஏக பாதர்
ஓதத் தொலிமடங்கி யூருண் டேறி
யொத்துலக மெல்லா மொடுங்கி யபின்
வேதத் தொலிகொண்டு வீணை கேட்பார்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 2

ஏதம் – துன்பம்

மறைத்தல் – மறக்கருணை – திரோதானசத்தி அருளல் – அறக்கருணை – அருட்சத்தி.

இவ்விரண்டனுள் உலகத்தை அதனொடு கலந்து நின்று தோற்றி நிறுத்தி ஒடுக்குதலாகிய தொழிலைச் செய்தது. திரோதான சத்தி ஒன்றேயாதல் பற்றி ஏழுலகமாய் நின்ற ஏகபாதர் என்றருளிச் செய்தார். பிரம விட்டுணு உருத்திரர்கள் ஒரே காலில் நிற்பது போல அமைப்பது ஏகபாத மூர்த்தம். ஓதம் – அலைகள்.

வெண்காடு மேவிய விகிர்தனார் தம் திருவடிகளை மனத்துக் கொள்ளும் அடியவர்களுக்குத் திருவடி தீட்சை செய்து, பாதலத்தையும் கடந்து, கீழ் உருவிச் சென்ற திருவடிகளை உடையவராய், யாருக்கும் தீங்கு நேராதவகையில் ஏழுலகமாய் நின்ற ஒரே திருவடியை உடையவராய், ஊழி வெள்ளத்தில் ஒலி, உலகையெல்லாம் வெள்ளம் மூழ்குவித்து அவ்வுலகமெல்லாம் அழிந்த பின்னர் அடங்கியபோது, தாம் ஒடுங்காது வேதம் ஓதி வீணையை இசைத்து அவ்வொலியில் மகிழ்வர்.

**2437.** நென்னலையோர் ஓடேந்திப் பிச்சைக் கென்று
வந்தார்க்கு வந்தேனென் றில்லே புக்கேன்
அந்நிலையே நிற்கின்றார் ஐயங் கொள்ளார்
அருகே வருவார்போல் நோக்கு கின்றார்
நுந்நிலைமை யேதோநும் மூர்தா னேதோ
என்றேனுக் கொன்றாகச் சொல்ல மாட்டார்
மென்முலையார் கூடி விரும்பி யாடும்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 3

நென்னல் – நேற்று
பதிக மகுடம் – வெண்காடு மேவிய விகிர்தனாரே.

மெல்லிய தனங்களை உடைய மகளிர் கூடி விரும்பி விளையாடும் வெண்காடு மேவிய விகிர்தனார் நேற்று ஒரு மண்டையோட்டைக் கையில் ஏந்திப் பிச்சை பெறுவதற்காக வந்தாராக 'இதோ வந்துவிட்டேன்' என்று வீட்டிற்குள் புகுந்து உணவுடன் நான் மீண்டுவர நின்ற இடத்திலேயே நின்று கொண்டு யான் இடவந்த பிச்சையை ஏற்காமல் பக்கத்தில் வருபவரைப் போல என்னைக் கூர்ந்து நோக்கினார். 'உம் மன நிலை எவ்வாறு இருக்கிறது ? உம்முடைய ஊர் யாது ?' என்று வினவிய எனக்கு மறுமாற்றம் தாராமலே நின்று பின் சென்று விட்டார் ?

**2438.** ஆகத் துமையடக்கி யாறு சூடி
ஐவா யரவசைத்தங் கானே றேறிப்
போகம் பலவுடைத்தாய்ப் பூதஞ் சூழப்
புலித்தோ லுடையாப் புகுந்து நின்றார்
பாகிடுவான் சென்றேனைப் பற்றி நோக்கிப்
பரிசழித்தென் வளைகவர்ந்தார் பாவி யேனை
மேக முகிலுரிஞ்சு சோலை சூழ்ந்த
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 4

பாகு – பாகம். மேகமுகில் – நீரைப் பொழிகின்ற முகில்.

பார்வதியைப் பாகமாகக் கொண்டு கங்கையைத் தலையில் சூடி ஐந்தலைப் பாம்பினை இடையில் இறுக்கிக் கட்டிக் காளையை இவர்ந்து சிவபோகத்தை நுகரும் பூதங்கள் பலவும் தம்மைச் சூழப் புலித்தோலை உடுத்து இல்லத்துப் புகுந்து நின்ற அவருக்கு உணவு வழங்க வந்த என்னை உள்ளத்தால் பற்றிக் கூர்ந்து நோக்கி என் அடக்கம் என்ற பண்பினை அழித்துத் தீ வினையை உடைய என் வளைகளை, மேக மண்டலத்தை அளாவிய சோலை சூழ்ந்த வெண்காடு மேவிய விகிர்தனார் கவர்ந்து சென்றுவிட்டார்.

**2439.** கொள்ளைக் குழைக்காதிற் குண்டைப் பூதங்
கொடுகொட்டி கொட்டிக் குனித்துப் பாட
உள்ளங் கவர்ந்திட்டுப் போவார் போல
உழிதருவர் நான்தெரிய மாட்டேன் மீண்டேன்
கள்ள விழிவிழிப்பர் காணாக் கண்ணாற்
கண்ணுள்ளார் போலே கரந்து நிற்பர்
வெள்ளச் சடைமுடியர் வேத நாவர்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 5

கொள்ளை – அழகு. குண்டை – பெருவயிறு.
உழி தருதல் – சுற்றித் திரிதல். சுழலுதல்.
காணாக்கண் – பாராதது போலப் பார்த்தல்.
கண் உள்ளார் போல – கண்ணுக்கு அகப்படுவார் போல்

மிக்க ஒளியை உடைய குழைகளை அணிந்த, பருத்துக் குறிய வடிவுடைய பூதங்கள் கொடுகொட்டி என்ற பறையை இசைத்துக் கூத்தாடிப்பாட, என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டு போவாரைப் போல என்னைச் சுற்றி வருகிறார். நான் அவரை உள்ளவாறு அறிய இயலாதேனாய்த் திரும்பினேன். என்னை நேரில் பாராதவரைப் போல அரைக்கண்ணால் பார்க்கிறார். கண்ணுக்கு அகப்படுவரைப் போலக் காட்டி மறைந்து நிற்கிறார். அவர் கங்கையைச் சடையில் கொண்டவர். வேதம் ஓதிய நாவினை உடையவராய் வெண்காடு மேவிய விகிர்தனார் ஆவர்.

2440. தொட்டிலங்கு சூலத்தர் மழுவா ளேந்திச்
சுடர்க்கொன்றைத் தாரணிந்து சுவைகள் பேசிப்
பட்டிவெள் ளேறேறிப் பலியுங் கொள்ளார்
பார்ப்பாரைப் பரிசழிப்பா ரொக்கின் றாரால்
கட்டிலங்கு வெண்ணீற்றர் கனலப் பேசிக்
கருத்தழித்து வளைகவர்ந்தார் காலை மாலை
விட்டிலங்கு சடைமுடியர் வேத நாவர்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 6

தொட்டு – ஏவி. பட்டி – தொழுவம். பரிசு – இயல்பு

காலையும் மாலையும் எப்பொழுதும் மின்னுகின்ற சடைமுடியை உடையவராய், வேதம் ஓதும் நாவினராய், வெண்காடு மேவிய விகிர்தனார், ஏவிப்பணி கொள்ளும் சூலம் மழு என்ற படைகளை ஏந்தியவராய், ஒளி வீசும் கொன்றைப் பூ மாலையை அணிந்து இரு பொருள்படச் சுவையான சொற்களைப் பேசித் தொழுவத்தில் தங்கக் கூடிய வெண்ணிறக் காளையை இவர்ந்து வந்து பிச்சையையும் ஏற்காதவராய்த் தம்மை நோக்கி நிற்பவர் இயல்பினை அழிக்கின்றவர் போல, முப்பட்டைகளாகத் திருநீற்றை அணிந்து எனக்குக் காமத் தீ ஏற்படும் வகையில் பேசி என் உள்ளத்தில் அடக்கத்தை நீக்கி என் வளைகளையும் கவர்ந்து சென்று விட்டார்.

2441. பெண்பா லொருபாகம் பேணா வாழ்க்கைக்
கோணாகம் பூண்பனவும் நாணாஞ் சொல்லார்
உண்பார் உறங்குவார் ஒவ்வா நங்காய்
உண்பதுவும் நஞ்சன்றேல் ஓவியுண்ணார்
பண்பால் விரிசடையர் பற்றி நோக்கிப்
பாலைப் பரிசழியப் பேசு கின்றார்
விண்பால் மதிசூடி வேதம் ஓதி
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 7

| | |
|---|---|
| பேணா வாழ்க்கை | – ஒருவரும் விரும்பாத வாழ்க்கை |
| | – பிச்சையூண் வாழ்க்கை |
| கோணாகம் | – கோண் (வளைந்த) + நாகம் |
| | – கோள் (கொடிய) + நாகம் |
| ஓவி | – ஒழித்து |

நங்காய்! வானத்தில் இயங்கும் பிறையைச் சூடி, வேதம் ஓதி, வெண்காடு மேவிய விகிர்தனார் பார்வதியைப் பாகமாகக் கொண்டு, பெண்கள் விரும்பாத வாழ்க்கை வாழ்ந்து கொடிய பாம்புகளைப் பூண்டு நான் வெட்கப்படும்படியாக என்னை நலம் பாராட்டுவார். உலகில் உண்பார் உறங்குவார் செயல்களோடு அவருடைய செயல்கள் ஒவ்வா. அவர் விடம் ஒன்றே உண்பார். அன்றேல் கஞ்சத்தனத்தால் உண்பதனை விடுத்து உண்ணாதே இருப்பார். அழகாக விரிந்த சடையுடையவர். என்னை நெருங்கி வந்து கூர்ந்து பார்த்துப் பாலினும் இனிமையாக என்னிடம் பேசுகின்றார்.

**2442.** மருதங்க ளாமொழிவர் மங்கை யோடு
வானவரும் மாலயனுங் கூடித் தங்கள்
கருதங்க ளாற்றுதித்துத் தூநீ ராட்டித்
தோத்திரங்கள் பலசொல்லித் தூபங் காட்டிக்
கருதுங்கொல் எம்பெருமான் செய்குற்றேவல்
என்பார்க்கு வேண்டும் வரங்கொ டுத்து
விகிர்தங் களாநடப்பர் வெள்ளே றேறி
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 8

சுருதம் – கேள்வி; மந்திரம்.
விகிர்தங்கள் – வேறுபட்ட செயல்கள்

வெண்ணிறக் காளையை இவர்ந்து வெண்காடு மேவிய விகிர்தனார் பார்வதியிடம் அவள் ஊடலைப் போக்கும் சொற்களைப் பேசுபவராய்த் தேவர்களும் திருமாலும் பிரமனும் கூடி வேத வாக்கியங்களால் துதித்து அபிடேகம் செய்து தோத்திரங்கள் பலவற்றைச் சொல்லி நறுமணப் பொருள்களைப் புகைத்து, 'எம்பெருமான் யாங்கள் செய்யும் குற்றேவல்களை மனத்துக் கொள்வாரோ' என்று வேண்டுபவர்களுக்கு அவர்கள் வேண்டிய வரங்களைக் கொடுத்துத் தமக்கு வேறுபட்ட செயல்கள் உளவாகக் கொண்டு அவற்றிற்காக இடம் பெயர்ந்து செல்வர்.

**2443.** புள்ளானும் நான்முகனும் புக்கும் போந்துங்
காணார் பொறியழலாய் நின்றான் தன்னை
உள்ளானை யொன்றலா உருவி னானை
உலகுக் கொருவிளக்காய் நின்றான் தன்னைக்
கள்ளேந்து கொன்றைதூய்க் காலை மூன்றும்
ஓவாமே நின்று தவங்கள் செய்த
வெள்ளானை வேண்டும் வரங்கொ டுப்பார்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 9

புள்ளான் – கருடக் கொடியை உடையவன்.

வெண்காடு மேவிய விகிர்தனார், கருடனை உடைய திருமாலும் நான்கு முகங்களை உடைய பிரமனும் கீழும் மேலும் தேடிச் சென்றும் காண இயலாதவராய்ப் பொறிகளை வெளிப்படுத்தும் அழற்பிழம்பாய் நின்றவராய் எல்லாப் பொருள்களின் உள்ளிடத்தும் இருப்பவராய், அடியார்கள் விரும்பும் பல உருவங்களையும் உடையவராய்த் தேன் நிறைந்த கொன்றைப்பூவை அருச்சித்து நீங்காமல் நன்னெறியில் நின்று தவம் செய்த ஐராவதம் என்ற வெள்ளானைக்கு அது வேண்டிய வரங்களைக் கொடுப்பவர் ஆவர்.

**2444.** மாக்குன் றெடுத்தோன்தன் மைந்த னாகி
மாவேழம் வில்லா மதித்தான் தன்னை
நோக்குந் துணைத்தேவ ரெல்லாம் நிற்க
நொடிவரையில் நோவ விழித்தான் தன்னைக்
காக்குங் கடலிலங்கைக் கோமான் தன்னைக்
கதிர்முடியுங் கண்ணும் பிதுங்க வூன்றி
வீக்கந் தவிர்த்த விரலார் போலும்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 10

வேழம் – கரும்பு

வெண்காடு மேவிய விகிர்தனார் கோவர்த்தன மலையைக் குடையாக உயர்த்திய கண்ணனாகிய திருமாலின் மகனாய்க் கரும்பையே வில்லாகக் கொண்ட மன்மதனுக்குத் துணையாக வந்த தேவர்களெல்லாம் பார்த்துக் கொண்டு நின்ற போதே ஒரே நொடி நேரத்தில் அவன் சம்பலாகுமாறு நெற்றிக் கண்ணால் நோக்கியவர், கடலே அரணாகப் பாதுகாக்கப்பட்ட இலங்கை மன்னனான இராவணனுடைய ஒளிவீசும் மகுடம் தாங்கிய தலைகளும் கண்களும் நசுங்கி வெளிப்புறம் தோன்றுமாறு தம் திருவடி விரலை ஊன்றி அவனுடைய செருக்கினை அடக்கியவர் ஆவர்.

## 36. திருப்பழனம்

(இத்திருப்பதிகத்துப் பாடல்கள் யாவும் "தாமே" என்னும் முடிபுடைய பல்பெயர்க் கோவையை உடையன)

ப.தொ.எண் : 249 பதிக எண் : 36

2445. அலையார் கடல்நஞ்ச முண்டார் தாமே
அமரர்களுக் கருள்செய்யும் ஆதி தாமே
கொலையாய கூற்ற முதைத்தார் தாமே
கொல்வேங்கைத் தோலொன் றசைத்தார் தாமே
சிலையால் புரமூன் றெரித்தார் தாமே
தீநோய் களைந்தென்னை யாண்டார் தாமே
பலிதேர்ந் தழகாய பண்பர் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 1

"பழன நகரெம் பிரானார் தாமே" என்பது பதிக மகுடம்

திருப்பழனத்திலே உகந்தருளி உறையும் எம் பெருமான் அலைகள் பொருந்திய கடலின் நஞ்சினை உண்டவர். தேவர்களுக்கு அருள் செய்யும் முதற்பொருள். உயிர்களைக் கவரும் கூற்றினை உதைத்தவர். தம்மால் கொல்லப்பட்ட வேங்கைப் புலியின் தோலை உடுத்தவர். வில்லால் திரிபுரத்தை எரித்தவர். கொடிய சூலை நோயைப் போக்கி என்னை ஆட் கொண்டவர். பிச்சை எடுக்கும் நிலையிலும் அழகான பண்புடையவர்.

2446. வெள்ள மொருசடைமே லேற்றார் தாமே
மேலார்கண் மேலார்கண் மேலார்தாமே
கள்ளங் கடிந்தென்னை யாண்டார் தாமே
கருத்துடைய பூதப் படையார் தாமே
உள்ளத் துவகை தருவார் தாமே
யுறுநோய் சிறுபிணிகள் தீர்ப்பார் தாமே
பள்ளப் பரவைநஞ் சுண்டார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 2

பழன நகர் எம்பிரானார் ஒற்றைச் சடையிலே கங்கை வெள்ளத்தை ஏற்றவர். மேம்பட்டவர். எல்லோருக்கும் மேம்பட்டவர். வஞ்சத்தைப் போக்கி என்னை ஆட்கொண்டவர். ஞானம் பெற்ற பூதங்களைப் படையாக உடையவர். தம்மை நினைக்கும் மனத்திற்கு மகிழ்ச்சி தருபவர். தீராத பெரிய நோய்களையும், சிறிய நோய்களையும் தீர்ப்பவர். ஆழமான கடலில் தோன்றிய நஞ்சினை உண்டவர்.

2447. இரவும் பகலுமாய் நின்றார் தாமே
எப்போதும் என்நெஞ்சத் துள்ளார் தாமே
அரவ மரையில் அசைத்தார் தாமே
அனலாடி யங்கை மறித்தார் தாமே
குரவங் கமழுங்குற் றாலர் தாமே
கோலங்கள் மேன்மே லுகப்பார் தாமே
பரவும் அடியார்க்குப் பாங்கர் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 3

பாங்கர் – தோழர்

பழன நகர் எம்பிரானார் இரவும் பகலும் எப்போதும் என் நெஞ்சத்து உள்ளவராய்ப் பாம்பினை இடையில் இறுக்கிக் கட்டியவராய்த் தீயில் கூத்தாடித் தம் கையால் எல்லோருக்கும் 'அஞ்சன்மின்' என்று அபயம் அளிப்பவராய்க் குரா மலர் மணம் கமழும் குற்றாலத்தில் உறைபவராய்ப் பலபல வேடங்களை விரும்புபவராய்த் தம்மை வழிபடும் அடியவர்களுக்கு என்றும் பக்கலில் இருந்து உதவுபவர்.

| | |
|---|---|
| **2448.** மாறில் மதில்மூன்று மெய்தார் தாமே<br>வரியரவங் கச்சாக வார்த்தார் தாமே<br>நீறுசேர் திருமேனி நிமலர் தாமே<br>நெற்றி நெருப்புக்கண் வைத்தார் தாமே<br>ஏறுகொடுஞ் சூலக் கையர் தாமே<br>யென்பா பரண மணிந்தார் தாமே<br>பாறுண் தலையிற் பலியார் தாமே<br>பழன நகரெம் பிரானார் தாமே. 4<br><br>பாறு – பருந்து | பழன நகர் எம்பிரானார் தமக்கு நிகரில்லாத மதில்கள் மூன்றனையும் அழித்தவராய்க் கோடுகளை உடைய பாம்பினைக் கச்சாக அணிந்தவராய், திருநீறணிந்த தூயவராய், நெற்றியில் அக்கினியாகிய கண்ணை உடையவராய்க் கொடிய சூலத்தை ஏந்தியவராய், எலும்புகளை அணிகளாக அணிந்தவராய்ப் பருந்துகள் புலால் நாற்றமறிந்து வட்டமிடும் மண்டையோட்டில் பிச்சை ஏற்பவராய் உள்ளார். |
| **2449.** சீரால் வணங்கப் படுவார் தாமே<br>திசைக்கெல்லாந் தேவாகி நின்றார் தாமே<br>ஆரா அமுதமு மானார் தாமே<br>யளவில் பெருமை யுடையார் தாமே<br>நீரார் நியமம் உடையார் தாமே<br>நீள்வரைவில் லாக வளைத்தார் தாமே<br>பாரார் பரவப் படுவார் தாமே<br>பழன நகரெம் பிரானார் தாமே. 5<br><br>ஆரா – தெவிட்டாத, சீரால் – புகழோடு | பழன நகர் எம்பிரானார் எல்லோராலும் புகழ்ந்து வணங்கப் படுபவராய், எண் திசைகளுக்கும் உரிய தேவராய், தெவிட்டாத அமுதம் ஆவாராய், எல்லையற்ற பெருமை உடையவராய், நீர்வளம் பொருந்திய நியமம் என்ற திருத்தலத்தை உடையவராய், மேருமலையை வில்லாக வளைத்தவராய், எல்லா உலகத்தாராலும் முன் நின்று துதிக்கப்படுபவர் ஆவர். நீரார் – நீர் போலும் தெளிந்த ஒழுக்கமுடையவராய் இருத்தல். |
| **2450.** காலனுயிர் வௌவ வல்லார் தாமே<br>கடிதோடும் வெள்ளை விடையார் தாமே<br>கோலம் பலவு முகப்பார் தாமே<br>கோணாகம் நாணாகப் பூண்டார் தாமே<br>நீலம் பொலிந்த மிடற்றார் தாமே<br>நீள்வரையி னுச்சி யிருப்பார் தாமே<br>பால விருத்தரு மானார் தாமே<br>பழன நகரெம் பிரானார் தாமே. 6<br><br>நாண் – அரைநாண். நீள் வரை – ஊழிதோறும் உயர்கின்ற மலை | பழன நகர் எம்பிரானார் காலன் உயிரைப் போக்க வல்லவராய், விரைந்து ஓடும் வெள்ளை நிறக் காளையை உடையவராய்ப் பல வேடங்களையும் விரும்புபவராய்க் கொடிய பாம்பினைத் தம் வில்லின் நாணாக இணைத்தவராய், நீல கண்டராய்க் கயிலாயத்தின் உச்சியில் உள்ளாராய், பாலன், மூத்தோன் முதலிய எல்லாப் பருவங்களையும் உடையவராய் உள்ளார். |
| **2451.** ஏய்ந்த வுமைநங்கை பங்கர் தாமே<br>யேழூழிக் கப்புறமாய் நின்றார் தாமே<br>ஆய்ந்து மலர்தூவ நின்றார் தாமே<br>அளவில் பெருமை யுடையார் தாமே<br>தேய்ந்த பிறைசடைமேல் வைத்தார் தாமே<br>தீவாய் அரவதனை யார்த்தார் தாமே<br>பாய்ந்த படர்கங்கை யேற்றார் தாமே<br>பழன நகரெம் பிரானார் தாமே. 7 | பழன நகர் எம்பிரானார் தமக்குப் பொருந்திய பார்வதி பாகராய், ஏழு ஊழிக்காலங்களுக்கும் அப்பாற்பட்டவராய், அடியார்கள் மலர்களைத் தூய்மை செய்து அணிவிக்க அவற்றை ஏற்று நிற்பவராய், எல்லை கடந்த பெருமை உடையவராய், உருவில் சிறிய பிறையைச் சடையில் அணிந்தவராய், விடம் கக்கும் வாயினை உடைய பாம்பினை இடையில் இறுக்கிக் கட்டியவராய்த் தேவருலகிலிருந்து கீழ்நோக்கிப் பாய்ந்த கங்கையைச் சடையில் ஏற்றவராய் உள்ளார். |

2452. ஓராதா ருள்ளத்தில் நில்லார் தாமே
யுள்ளூறும் அன்பர் மனத்தார் தாமே
பேராதென் சிந்தை யிருந்தார் தாமே
பிறர்க்கென்றுங் காட்சிக் கரியார் தாமே
ஊராரு மூவுலகத் துள்ளார் தாமே
யுலகை நடுங்காமற் காப்பார் தாமே
பாரார் முழவத் திடையார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 8

ஓராதார் – நினையாதவர்

பழன நகர் எம்பிரானார் தம்மை நினையாதவர் உள்ளத்தில் நிலையாக இல்லாதவராய், உள்ளத்தில் அன்பு சுரந்து பெருகுகின்ற அன்பர்கள் உள்ளத்தில் நிலையாக இருப்பவராய், என் உள்ளத்தை விட்டு அகலாது இருப்பவராய், தம் அடியவர் அல்லாத பிறருக்குக் காண்பதற்கு அரியவராய், ஊர்கள் நிறைந்த மூவுலகத்தும் பரவியிருப்பவராய், உலகம் துயரால் நடுங்காதபடி காப்பவராய், இவ்வுலகைச் சூழ்ந்த கடல்களிலும் பரவியிருப்பவராய் உள்ளார்.

2453. நீண்டவர்க்கோர் நெருப்புருவ மானார் தாமே
நேரிழையை யொருபாகம் வைத்தார் தாமே
பூண்டரவைப் புலித்தோல்மே லார்த்தார் தாமே
பொன்னிறத்த வெள்ளச் சடையார் தாமே
ஆண்டுலகே ழனைத்தினையும் வைத்தார் தாமே
**அங்கங்கே சிவமாகி நின்றார் தாமே**
பாண்டவரிற் பார்த்தனுக்குப் பரிந்தார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 9

நீண்டவர் – திருமால்; நீண்டு மூவுலகையும் அளந்த அவர்க்கே அளப்பரிதாக நீண்டார்.
"தாவர சங்கமங்கள் என்று இரண்டுருவில் நின்று மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க்கருளை வைப்பன்".

பழன நகர் எம்பிரானார் திருமாலுக்கு அடியினைக் காணமுடியாத தீப்பிழம்பின் வடிவில் காட்சி வழங்கியவராய், பார்வதி பாகராய், புலித்தோல் மீது பாம்பினை இறுகக் கட்டி இடையில் அணிபவராய், செஞ்சடையில் கங்கை வெள்ளத்தைத் தேக்கியவராய், ஏழு உலகங்களையும் படைத்து ஆள்பவராய், பல இடங்களிலும் சிவமாகிக் காட்சி வழங்குபவராய், பாண்டவரில் அருச்சுனனுக்கு இரங்கிப் படைகள் வழங்கி அருள்புரிந்தவராய் உள்ளார்.

2454. விடையேறி வேண்டுலகத் திருப்பார் தாமே
விரிகதிரோன் சோற்றுத் துறையார் தாமே
புடைசூழத் தேவர் குழாத்தார் தாமே
பூந்துருத்தி நெய்த்தானம் மேயார் தாமே
அடைவே புனல்சூழ்ஐ யாற்றார் தாமே
அரக்கனையும் ஆற்ற லழித்தார் தாமே
படையாப் பல்பூத முடையார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 10

பழன நகர் எம்பிரானார் காளையை இவர்ந்து தாம் விரும்பிய உலகத்து இருப்பவராய்ச் சூரியன் வழிபடும் சோற்றுத்துறையில் உறைபவராய்த் தேவர் கூட்டத்தால் நாற்பக்கமும் சூழப் பெற்றவராய்ப் பூந்துருத்தியையும் நெய்த்தானத்தையும் விரும்பியவராய், அடுத்துப் புனல்சூழும் திருவையாற்றை உகந்தருளி உறைபவராய், இராவணனுடைய ஆற்றலை அழித்தவராய்ப் பூதங்களைப் படையாக உடையவராய் உள்ளார்.

## 37. திருவையாறு

(இத்திருப்பதிகம், இறைவனை இடைவிடாது துதிக்கும் பேறு பெற்ற மகிழ்வினால் அருளிச் செய்தது)

"யானே தவமுடையேன் என் நெஞ்சே நன்னெஞ்சம்
யானே பிறப்பறுப்பான் எண்ணினேன் – யானேஅக்
கைம்மா உரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற
அம்மானுக் காளாயினேன்"

– காரைக்காலம்மையார் – அற்புதத் திருவந்தாதி

ப.தொ.எண் : 250 பதிக எண் : 37

2455. ஆரார் திரிபுரங்கள் நீறா நோக்கும்
அனலாடி ஆரமுதே யென்றேன் நானே
கூரார் மழுவாட் படையொன் றேந்திக்
குறட்பூதப் பல்படையா யென்றேன் நானே
பேரா யிரமுடையா யென்றேன் நானே
பிறைசூடும் பிஞ்ஞகனே யென்றேன் நானே
ஆரா அமுதேயென் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

1

பகைவருடைய முப்புரங்களை அழித்தவனே! தீயில் கூத்து நிகழ்த்துபவனே! கிட்டுதற்கு அரிய அமுதமே! கூரிய மழுப்படையை ஏந்துபவனே! குட்டையான பல பூதங்களைப் படையாக உடையவனே! ஆயிரம் பெயர் உடையவனே! பிறையைச் சூடும் தலைக்கோலம் உடையவனே! ஆரா அமுதமாம் ஐயாற்றெம் பெருமானே! என்று பலகாலும் வாய்விட்டு அழைத்து மனம் உருகி நைகின்றேன்.

ஆரார் – பொருந்தார்; பகைவர். நைகின்றேன் – மனம் உருகி நிற்கின்றேன். அனலாடி ஆரமுது – முரண் அணி. புரங்களில் வாழ்ந்த பகைவர்க்கு அனலாடி. அடியார்க்கு ஆரமுது.

---

2456. தீவாயின் முப்புரங்கள் நீறா நோக்குந்
தீர்த்தா புராணனே யென்றேன் நானே
மூவா மதிசூடி யென்றேன் நானே
முதல்வாமுக் கண்ணனே யென்றேன் நானே
ஏவார் சிலையானே யென்றேன் நானே
இடும்பைக் கடல்நின்றும் ஏற வாங்கி
ஆவாவென் றருள்புரியும் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

2

திரிபுரங்களைச் சுட்டுச் சாம்பலாக்கிய தூயோனே! பழையோய்! பிறைசூடி! முதல்வா! முக்கண்ணா! அம்பு பூட்டிய வில்லினனே! துயர்க்கடலில் அடியேன் அழுந்தாமல் எடுத்துக் கரையேற்றி ஐயோ! என்று இரங்கி அருள்புரியும் ஐயாறனே! என்று வாய்விட்டு அழைத்து நான் மனம் உருகி நிற்கின்றேன்.

ஏஆர்சிலை – அம்பு பொருந்தும் வில் – பினாகம் என்னும் பெயருடையது. தீர்த்தன் – தூயோன். நீறா நோக்கும் தீர்த்தா – புரமெரித்தமையும் அவர்களை புனிதராக்குவதற்கு என்பார்.

2457. அஞ்சுண்ண வண்ணனே யென்றேன் நானே
அடியார்கட் காரமுதே யென்றேன் நானே
நஞ்சணி கண்டனே யென்றேன் நானே
நாவலர்கள் நான்மறையே என்றேன் நானே
நெஞ்சுணர வுள்புக் கிருந்த போது
நிறையும் அமுதமே யென்றேன் நானே
அஞ்சாதே யாள்வானே ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

3

அழகிய நறுமணப் பொடி பூசியவனே! அடியவர்களுக்கு ஆரமுதே! விடம் அணிந்த கழுத்தினை உடையவனே! சான்றோர்கள் ஓதும் நான்கு வேத வடிவினனே! என் மனம் உணருமாறு உள்ளே புகுந்திருக்கும் போதெல்லாம் எனக்கு அமுதம் போன்ற இனியனே! நாங்கள் அஞ்சாதபடி எங்களை ஆட்கொண்ட ஐயாற்றுப் பெருமானே! என்று நான் அரற்றி நைகின்றேன்.

'ஐயாறன்னே யென்றென்றே நானரற்றி நைகின்றேனே' என்பது பதிக மகுடம்.

2458. தொல்லைத் தொடுகடலே யென்றேன் நானே
துலங்கும் இளம்பிறையா யென்றேன் நானே
எல்லை நிறைந்தானே யென்றேன் நானே
ஏழ்நரம்பின் இன்னிசையா யென்றேன் நானே
அல்லற் கடல்புக் கழுந்து வேனை
வாங்கியருள் செய்தா யென்றேன் நானே
எல்லையாம் ஐயாறா என்றேன் நானே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

4

பழைய மேல் கடலே! சகர புத்திரர்களால் தோண்டப்பட்ட கீழ்க்கடலே! விளங்கும் இளம் பிறை சூடீ! உலகம் முழுதும் நிறைந்தவனே! ஏழு நரம்பாலும் எழுப்பப்படும் ஏழிசையானவனே! துயரக் கடலில் மூழ்கி வருந்தும் என்னைக் கரைக்குக் கொண்டுவந்து அருள் செய்தவனே! ஐயாற்றை உகந்தருளி உறைவிடமாகக் கொண்டவனே! என்று நான் அரற்றி நைகின்றேன்.

தொடுகடல் – வளைந்தகடல் என்றும் கொள்ளலாம்

2459. இண்டைச் சடைமுடியா யென்றேன் நானே
இருசுடர் வானத்தா யென்றேன் நானே
தொண்டர் தொழப்படுவா யென்றேன் நானே
துருத்திநெய்த் தானத்தா யென்றேன் நானே
கண்டங் கறுத்தானே யென்றேன் நானே
கனலாகுங் கண்ணானே யென்றேன் நானே
அண்டத்துக் கப்பாலாம் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

5

சடையில் முடி மாலை அணிந்தவனே! சூரிய சந்திரர் உலவும் ஆகாய வடிவினனே! அடியவரால் வணங்கப் படுபவனே! துருத்தியிலும் நெய்த்தானத்திலும் உறைபவனே! நீலகண்டனே! தீக்கண்ணனே! அண்டங்களையும் கடந்த ஐயாற்றுப் பெருமானே! என்று நான் அரற்றி நைகின்றேன்.

2460. பற்றார் புரமெரித்தா யென்றேன் நானே
பசுபதீ பண்டரங்கா வென்றேன் நானே
கற்றார்கள் நாவினா யென்றேன் நானே
கடுவிடை யொன்றூர்தியா யென்றேன் நானே
பற்றானார் நெஞ்சுளா யென்றேன் நானே
பார்த்தர்க் கருள்செய்தா யென்றேன் நானே
அற்றார்க் கருள்செய்யும் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 6

கடுவிடை – விரைந்து செல்லும் எருது

பகைவர் திரிபுரத்தை எரித்தவனே! ஆன்மாக்களுக்குத் தலைவனே! பண்டரங்கக் கூத்து ஆடுபவனே! அனுபவப் பொருளை ஞானதேசிகர் பால் அறிந்த சான்றோர்களின் நாவில் இருப்பவனே! விரைந்து செல்லும் காளை வாகனனே! உன்னையே பற்றுக் கோடாக உடையவரின் நெஞ்சினை உறைவிடமாகக் கொண்டவனே! அருச்சுனனுக்கு அருள்செய்தவனே! வேற்றுக் களைகண் இல்லாதவர்களுக்கு அருள் செய்யும் ஐயாற்றுப் பெருமானே! என்று நான் அரற்றி நைகின்றேன்.

2461. விண்ணோர் தலைவனே யென்றேன் நானே
விளங்கும் இளம்பிறையா யென்றேன் நானே
எண்ணா ரெயிலெரித்தா யென்றேன் நானே
ஏகம்பம் மேயானே யென்றேன் நானே
பண்ணார் மறைபாடி யென்றேன் நானே
பசுபதீ பால்நீற்றா யென்றேன் நானே
அண்ணாஐ யாறனே யென்றேன் நானே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 7

தேவர் தலைவனே! விளங்கும் பிறை சூடியே! பகைவருடைய மும்மதிலையும் எரித்தவனே! ஏகம்பத்தில் உறைபவனே! பண் நிறைந்த வேதம் ஓதுபவனே! ஆன்மாக்களின் தலைவனே! வெள்ளிய நீறணிந்தவனே! அண்ணா! ஐயாற்றுப் பெருமானே! என்று நான் அரற்றி நைகின்றேன்.

2462. அவனென்று நானுன்னை யஞ்சா தேனை
அல்லல் அறுப்பானே யென்றேன் நானே
சிவனென்று நானுன்னை யெல்லாஞ் சொல்லச்
செல்வந் தருவானே யென்றேன் நானே
பவனாகி யென்னுள்ளத் துள்ளே நின்று
பண்டை வினையறுப்பா யென்றேன் நானே
அவனென்றே யாதியே ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 8

அவன் – அவம் உடையவன். வீணன்
பவன் – விளங்கித் தோன்றுவோன்
சிறந்த சிவநாமங்கள்

வீணன் என்று சொல்லுமாறு, உன்னை அஞ்சாது தீய வழியில் சென்று வருந்திய என்னுடைய துன்பங்களைப் போக்கியவனே! இன்பத்துக்குக் காரணன் என்று நான் உன் பெருமை எல்லாம் சொல்ல எனக்கு உன் திருவருட் செல்வத்தை வழங்குகின்றவனே! என் உள்ளத்துள்ளே விளங்கித் தோன்றுபவனாய் இருந்து என் பழைய ஊழ்வினையை நீக்குபவனே! ஆதியே! ஐயாற்றுப் பெருமானே! நீயே யாவுமாய் எங்குமாய் நிற்கும் அவன் எனப்படும் பரம்பொருள் என்று நான் அரற்றி நைகின்றேன்.

2463. கச்சியே கம்பனே யென்றேன் நானே
கயிலாயா காரோணா என்றேன் நானே
நிச்சன் மணாளனே யென்றேன் நானே
நினைப்பார் மனத்துளா யென்றேன் நானே
உச்சம்போ தேறேறீ யென்றேன் நானே
உள்குவா ருள்ளத்தா யென்றேன் நானே
அச்சம் பிணிதீர்க்கும் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 9

கச்சியில் ஏகம்பத்து உறைபவனே! கயிலாயனே! குடந்தை நாகைக் காரோணனே! நித்திய கல்யாணனே! விரும்பி நினைப்பவர் மனத்து உள்ளவனே! நண்பகலில் காளையை இவர்ந்து உலவுபவனே! தியானம் செய்பவர் மனத்தை உறைவிடமாகக் கொள்பவனே! அச்சம், நோய் இவற்றைப் போக்கும் ஐயாற்றுப் பெருமானே! என்று நான் அரற்றி நைகின்றேன்.

நிச்சல் மணாளன் – என்றும் அழகன், அழிவில்லாதவன்.
உச்சம் போது ஏறு – ஊர்திகள் எல்லாவற்றினும் மேலாக விரைந்து வருகின்ற காளை.
நினைத்தல் – ஞாபகம் கொள்ளல்.
உள்குதல் – தியானம் செய்தல்.

2464. வில்லாடி வேடனே யென்றேன் நானே
வெண்ணீறு மெய்க்கணிந்தா யென்றேன் நானே
சொல்லாய சூழலா யென்றேன் நானே
சுலாவாய தொல்நெறியே யென்றேன் நானே
எல்லாமா யென்னுயிரே யென்றேன் நானே
இலங்கையர்கோன் தோளிறுத்தா யென்றேன் நானே
அல்லா வினைதீர்க்கும் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 10

வில்லைச் செலுத்தும் வேடர் வடிவில் தோன்றியவனே! திருமேனியில் வெண்ணீறு அணிந்தவனே! வேதங்கள் ஓதப்படும் இடங்களில் உள்ளவனே! எங்கும் பரவிய நல்லவர்கள் பின்பற்றும் நன்னெறி ஆகியவனே! எனக்கு எல்லாச் செல்வங் களாகவும் உயிராகவும் இருப்பவனே! இராவணனுடைய தோள்களை நெரித்தவனே! உன்னைச் சார்தற்கு இடையூறாக இருக்கும் தீவினையைப் போக்கும் ஐயாற்றுப் பெருமானே! என்று நான் அரற்றி நைகின்றேன்.

# 38. திருவையாறு

ப.தொ.எண் : 251 பதிக எண் : 38

2465. ஓசை யொலியெலா மானாய் நீயே
உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலா மானாய் நீயே
மலையான் மருகனாய் நின்றாய் நீயே
பேசப் பெரிதும் இனியாய் நீயே
பிரானாய் அடியென்மேல் வைத்தாய் நீயே
தேச விளக்கெலா மானாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

1

ஓசை – பொருளற்ற சத்தம்
ஒலி – பொருளுடைய சத்தம். எழுத்தும் சொல்லுமாக அறியப்படும்.

திருவையாற்றை விடுத்து நீங்காத செம்பொன் போன்ற ஒளியை உடையவனே! பொருளில்லாத வெற்று ஓசையாகவும், பொருளுடைய எழுத்து சொல் என்பனவாக உள்ள ஒலியாகவும் நீ உள்ளாய். இவ்வுலகுக்குத் தன்னிகரில்லாத் தலைவனாக உள்ளாய். மலரில் மணம் போல உலகமெங்கும் பரவியுள்ளாய். இமவான் மருமகனாய் உள்ளாய். உன் பெருமையைப் பேசுதற்கு இனியனாய் உள்ளாய். எனக்குத் தலைவனாய் உன் திருவடிகளை என் தலைமீது வைத்தாய். உலகில் உள்ள ஞாயிறு, திங்கள், கோள்கள், விண்மீன்கள் முதலிய யாவுமாகியுள்ளாய்.

2466. நோக்கரிய திருமேனி யுடையாய் நீயே
நோவாமே நோக்கருள வல்லாய் நீயே
காப்பரிய ஐம்புலனுங் காத்தாய் நீயே
காமனையுங் கண்ணழலாற் காய்ந்தாய் நீயே
ஆர்ப்பரிய மாநாக மார்த்தாய் நீயே
அடியானென் றடியென்மேல் வைத்தாய் நீயே
தீர்ப்பரிய வல்வினைநோய் தீர்ப்பாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

2

ஊனக்கண்ணால் காணுதற்கு இயலாத திருமேனியை உடையாய்! பசி, பிணி முதலியவற்றினால் வருந்தாதபடி அருட்பார்வையால் காப்பவன் நீ, அடக்க முடியாத என் ஐம்புலன்களையும் அடக்குமாறு செய்தாய். மன்மதனை நெருப்புக் கண்ணால் வெகுண்டாய். கட்டுதற்கு அரிய பெரிய பாம்பினை வில்நாணாகக் கட்டினாய். உன் அடியவன் என்று என் தலையில் உன் திருவடிகளை வைத்தாய். மற்றவரால் போக்க முடியாத ஊழ்வினையால் ஏற்படும் துயரங்களை நீக்கினாய். இவ்வாறு செய்து திருவையாறு அகலாத செம்பொன் சோதியாய் உள்ளாய்.

**2467.** கனத்தகத்துக் கடுஞ்சுடராய் நின்றாய் நீயே
கடல்வரைவான் ஆகாய மானாய் நீயே
தனத்தகத்துத் தலைகலனாக் கொண்டாய் நீயே
சார்ந்தாரைத் தகைந்தாள வல்லாய் நீயே
மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய் நீயே
மலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
சினத்திருந்த திருநீல கண்டன் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

3

கனம் – மேகம். கடுஞ்சுடர் – மிக்க ஒளி; மின்னல்
தகைந்து – தடுத்து

திருவையாறு அகலாத செம்பொன் சோதியே! நீ மேகத்தில் மின்னல்களாகவும், கடல் மலை மேகம் ஆகாயம் என்பனவாகியும், மண்டை ஓட்டையே செல்வமாகக் கொண்டவனாகவும், உன்னைச் சார்ந்த அடியவர்களைத் தவறான வழிகளில் செல்லாமல் தடுத்து அடிமை கொள்ள வல்லவனாகவும், அடியவர் உள்ளக் கருத்தை அறிந்து நிறைவேற்றுபவனாகவும், என் தலைமேல் தாமரை போன்ற உன் திருவடிகளை வைத்தவனாகவும், சிவந்த திருமேனியில் நீலகண்டனாகவும் உள்ளாய்.

**2468.** வானுற்ற மாமலைக ளானாய் நீயே
வடகயிலை மன்னி யிருந்தாய் நீயே
ஊனுற்ற வொளிமழுவாட் படையாய் நீயே
ஒளிமதியோ டரவுபுனல் வைத்தாய் நீயே
ஆனுற்ற ஐந்தும் அமர்ந்தாய் நீயே
அடியானென் றடியென்மேல் வைத்தாய் நீயே
தேனுற்ற சொல்மட வாள் பங்கன் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

4

வான் உற்ற – ஆகாயத்தை அளாவிய

திருவையாறு அகலாத செம்பொற் சோதியாகிய நீ வானளாவிய மலைகளில் வடக்கிலுள்ள கயிலை மலையில் உறைவாய். புலால் மணம் கமழும் ஒளி வீசும் மழுப்படையை உடையாய். சடையில் பிறை, பாம்பு, கங்கை இவற்றை வைத்தாய். பஞ்சகவ்விய அபிடேகத்தை விரும்புகிறாய். அடியவன் என்று என் தலை மீது உன் திருவடிகளை வைத்தாய். தேன் போன்ற சொற்களை உடைய பார்வதி பாகனாய் உள்ளாய்.

**2469.** பெண்ணாண் பிறப்பிலியாய் நின்றாய் நீயே
பெரியார்கட் கெல்லாம் பெரியோய் நீயே
உண்ணா வருநஞ்ச முண்டாய் நீயே
ஊழி முதல்வனாய் நின்றாய் நீயே
கண்ணா யுலகெலாங் காத்தாய் நீயே
கழற்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்ணார் மழுவாட் படையாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

5

பதிக மகுடம் – திருவையாறகலாத செம்பொற் சோதீ.

திருவையாறு அகலாத செம்பொன் சோதியாகிய நீ பெண்ணும் ஆணும் ஆகிய பிறப்புக்களை இல்லாதவனாய்ப் பெரியவர்களுக்கு எல்லாம் பெரியவனாய், மற்றவர் உண்ணாத கொடிய நஞ்சினை உண்டவனாய், ஊழிகளுக்கெல்லாம் தலைவனாய்ப் பற்றுக்கோடாய் இருந்து உலகங்களை எல்லாம் காத்தவனாய்க் கழலணிந்த சிவந்த திருவடிகளை என் தலைமேல் வைத்தவனாய், வலிமை வாய்ந்த மழுப்படையை உடையவனாய் உள்ளாய்.

2470. உற்றிருந்த உணர்வெலா மானாய் நீயே
உற்றவர்க்கோர் சுற்றமாய் நின்றாய் நீயே
கற்றிருந்த கலைஞான மானாய் நீயே
கற்றவர்க்கோர் கற்பகமாய் நின்றாய் நீயே
பெற்றிருந்த தாயவளின் நல்லாய் நீயே
பிரானா யடியென்மேல் வைத்தாய் நீயே
செற்றிருந்த திருநீல கண்டன் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.
6

செற்று – நஞ்சினைச் செறுத்து. அடக்கி.

திருவையாறு அகலாத செம்பொற் சோதியாகிய நீ பொருள்களில் அவற்றின் பண்புகளாக உள்ளாய். அடியவர்கள் சுற்றமாக உள்ளாய். கற்கும் கலையறிவாகவும் அநுபவப் பொருளை ஞானதேசிகர்பால் கேட்டவர்க்கு வேண்டியவை வழங்கும் கற்பகமாகவும் உள்ளாய். பெற்ற தாயை விட மேம்பட்டவனாய் உள்ளாய். பிரானாய் அடி என்மேல் வைத்தாய். நஞ்சினை அடக்கிய நீல கண்டன் நீயே ஆவாய்.

2471. எல்லா உலகமு மானாய் நீயே
ஏகம்ப மேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே
ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைக ளறுப்பாய் நீயே
புகழ்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வந் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.
7

"எல்லா உலகமுமானாய் நீ" – இறைவனது பெரு நிலை. சருவ வியாபக நிலை. ஏகம்பமேவியிருந்தாய் நீ. பேரருளால் எளிவந்தருளும் நிலை. ஏகதேச நிலை. ஏகம்பத்தின் மேல் சுவாமிகளுக்கு எப்போதும் அன்பு அதிகம்.

திருவையாறு அகலாத செம்பொற் சோதீ! நீ எல்லா உலகங்களும் ஆனவனாய், ஏகம்பத்தில் விரும்பியிருப்பவனாய், நல்லவர்களின் நன்மையை அறிந்து அவருக்கு அருள் செய்பவனாய், ஞான ஒளி வீசும் விளக்காய், கொடிய வினைகளைப் போக்குபவனாய்ப் புகழ்ச் சேவடி என் மேல் வைத்தவனாய்ச் செல்வங்களுள் மேம்பட்ட வீடுபேற்றுச் செல்வத்தை அருளுபவனாய் உள்ளாய்.

**2472.** ஆவினில் ஐந்தும் அமர்ந்தாய் நீயே
அளவில் பெருமை யுடையாய் நீயே
பூவினில் நாற்றமாய் நின்றாய் நீயே
போர்க்கோலங் கொண்டெயி லெய்தாய் நீயே
நாவில் நடுவுரையாய் நின்றாய் நீயே
நண்ணி யடியென்மேல் வைத்தாய் நீயே
தேவ ரறியாத தேவன் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

8

திருவையாறு அகலாத செம்பொற் சோதீ! நீ பஞ்ச கவ்விய அபிடேகத்தை உகப்பவனாய், எல்லையற்ற பெருமையை உடையவனாய், பூவினில் நாற்றம் போல எங்கும் பரவியவனாய், போர்க் கோலம் பூண்டு மும்மதில்களையும் அழித்தவனாய், நாவினால் பேசும் நடுவுநிலையான சொற்களை உடையவனாய், நண்ணி என் தலை மீது திருவடிகளை வைத்தவனாய், ஏனைய தேவர்களும் அறிய முடியாத தேவனாய் உள்ளாய்.

நடுவுரை – நடுவுநிலையான சொல். நீதியான தீர்ப்பு. அறங்கூறவையத்தில் (நீதிமன்றத்தில்) இருப்பவர்கட்கு இறைவன் நடுவு (நீதி) நிலையில் நின்று அதனிற் பிறழாதோர்க்கு அருளும், பிறழ்ந்தோர்க்குத் தெருளும் (துண்டனையும்) செய்தருளுவன். எனவேதான் திருமுறைகளைப் பல இடங்களில் சுவாமி நீதி வடிவினன் என்று போற்றப்படுகிறார். இறைவன் உண்மையை முதலாகக் கொள்ள வேண்டும்.

---

**2473.** எண்டிசைக்கும் ஒண்சுடராய் நின்றாய் நீயே
ஏகம்ப மேய இறைவன் நீயே
வண்டிசைக்கும் நறுங்கொன்றைத் தாராய் நீயே
வாரா வுலகருள வல்லாய் நீயே
தொண்டிசைத்துன் அடிபரவ நின்றாய் நீயே
தூமலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்சிலைக்கோர் சரங்கூட்ட வல்லாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

9

திருவையாறு அகலாத செம்பொற் சோதீ! நீ எண்திசைகளிலும் உள்ள ஒளி வீசும் சுடர்கள் ஆனாய். ஏகம்பம் மேவிய இறைவன் நீ. வண்டுகள் ஒலிக்கும் நறுமணம் கமழும் கொன்றை மாலையை உடையவன். சென்றால் மீண்டு வருதல் இல்லாத வீடுபேற்றை அளிப்பவன். அடியார்கள் உன் திருத்தொண்டில் ஈடுபட்டு உன் திருவடிகளை முன்நின்று துதிக்குமாறு உள்ளாய். தூய மலர்போன்ற உன் சிவந்த திருவடிகளை என் தலைமேல் வைத்தாய். திண்ணிய மலையாகிய வில்லுக்கு ஏற்ற அம்பினை இணைத்துச் செயற்பட்டவன் ஆவாய்.

திண்சிலை – மேருவாகிய வில்
ஓர் சரம் – திருமாலாகிய அம்பு

2474. விண்டார் புரமூன்று மெய்தாய் நீயே
விண்ணவர்க்கு மேலாகி நின்றாய் நீயே
**கண்டாரைக் கொல்லுநஞ் சுண்டாய் நீயே**
காலங்கள் ஊழியாய் நின்றாய் நீயே
தொண்டா அடியேனை ஆண்டாய் நீயே
தூமலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்டோள்விட் டெரியாட லுகந்தாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

10

திருவையாறு அகலாத சொம்பொற் சோதீ! நீ பகைவர் முப்புரங்களை அழித்தாய். தேவர்களுக்கும் மேம்பட்டு நின்றாய். பார்த்தவர்களையே உயிரைப் போக்கும் கொடிய விடத்தை உண்டாய். பல ஊழிக்காலங்களாக நிலைபெற்றிருக்கிறாய். அடியேனைத் தொண்டனாக அடிமை கொண்டாய். தூமலர்ச் சேவடி என்மேல் வைத்தாய். திண்ணிய தோள்களை வீசித் தீயில் கூத்தாடுதலில் திறமை உடையாய்.

விண்டார் – பகைத்தார். பாற்கடலில் தோன்றிய நஞ்சு காட்சி மாத்திரையால் தேவர்களை அடர்த்தது.

2475. ஆரு மறியா இடத்தாய் நீயே
ஆகாயந் தேரூர வல்லாய் நீயே
பேரும் பெரிய இலங்கை வேந்தன்
பெரிய முடிபத் திறுத்தாய் நீயே
ஊரும் புரமூன்றும் அட்டாய் நீயே
ஒண்டா மரையானும் மாலுங் கூடித்
தேரும் அடியென்மேல் வைத்தாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

11

ஒருவரும் அறிய முடியாத உயர் நிலையில் உள்ளாய். வானத்திலே தேரைச் செலுத்த வல்லமை உடையாய். பெரிய புகழை உடைய இராவணனுடைய பத்துத் தலைகளையும் நசுக்கினாய். வானத்தில் உலாவிய மூன்று மதில்களையும் அழித்தாய். பிரமனும் திருமாலும் கூடித்தேடும் அடிகளை என் தலைமேல் வைத்தாய். அத்தகைய நீ திருவையாற்றை விடுத்து நீங்காத செம்பொன் போன்ற ஒளியை உடையையாய் அனைவருக்கும் காட்சி வழங்குகிறாய்.

ஊரும் புரம் மூன்றும் – வானத்தில் திரியும் மூன்று கோட்டைகள்.

## 39. திருமழபாடி

(இத்திருப்பதிகம் கண்டாய் என்னும் முடிபுடைய தொடர்க் கோவையால், இறைவனது பெருமைகளை எடுத்தோதி அருளியது)

ப.தொ.எண் : 252 பதிக எண் : 39

2476. **நீறேறு திருமேனி யுடையான் கண்டாய்**
நெற்றிமே லொற்றைக்கண் நிறைந்தான் கண்டாய்
கூறாக உமைபாகங் கொண்டான் கண்டாய்
கொடியவிட முண்டிருண்ட கண்டன் கண்டாய்
ஏறேறி யெங்குந் திரிவான் கண்டாய்
ஏழுலகும் ஏழ்மலையு மானான் கண்டாய்
மாறானார் தம்அரணம் அட்டான் கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 1

மழபாடியில் உறையும் அழகன் திருநீறணிந்த அழகிய திருமேனியன். நெற்றிக்கண்ணன். பார்வதி பாகன். விடமுண்ட நீலகண்டன். காளையை இவர்ந்து எங்கும் திரிபவன். ஏழுலகமும் ஏழ்மலையும் ஆயவன். பகைவருடைய மும்மதில்களையும் அழித்தவன்.

மணாளன் – அழகன்
அட்டான் – அழித்தான்
மாறு – பகை

2477. கொக்கிறகு சென்னி யுடையான் கண்டாய்
கொல்லை விடையேறுங் கூத்தன் கண்டாய்
அக்கரைமே லாட லுடையான் கண்டாய்
அனலங்கை யேந்திய ஆதி கண்டாய்
அக்கோ டரவ மணிந்தான் கண்டாய்
அடியார்கட் காரமுத மானான் கண்டாய்
மற்றிருந்த கங்கைச் சடையான் கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 2

மழபாடி மன்னும் மணாளன் சென்னியில் கொக்கு இறகை அணிந்தவன். முல்லை நிலக்கடவுளாகிய திருமாலாகிய காளையை இவர்பவன். கூத்தாடுபவன். தான் கூத்தாடும்போது இடையில் கட்டிய சங்குமணி ஆடுதலை உடையவன். தீயினை உள்ளங்கையில் ஏந்திய முதற்கடவுள். எலும்பையும், பாம்பையும் அணிந்தவன். அடியவர்களுக்குக் கிட்டுதற்கரிய அமுதமானவன். கங்கை அடங்கியிருக்கும் சடையை உடையவன்.

கொக்கிறகு – கொக்குவடிவாயிருந்த குரண்டன் எனும் அசுரனை அழித்து அவன் இறகை சுவாமி அணிந்தார்.
அக்கு – எலும்பு, சங்குமணி
கொல்லை – முல்லை நிலம்

2478. நெற்றித் தனிக்கண் ணுடையான் கண்டாய்
நேரிழையோர் பாகமாய் நின்றான் கண்டாய்
பற்றிப்பாம் பாட்டும் படிறன் கண்டாய்
பல்லூர் பலிதேர் பரமன் கண்டாய்
செற்றார் புரமூன்றுஞ் செற்றான் கண்டாய்
செழுமா மதிசென்னி வைத்தான் கண்டாய்
மற்றொரு குற்ற மிலாதான் கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 3

படிறன் – வஞ்சன்; என்ற பாம்பையும் அஞ்சுவித்து ஆட்டுதல் பற்றி.
பலிதேர் – பிச்சையை நாடிச் செல்லுதல்

மழபாடி மன்னும் மணாளன், நெற்றிமேல் ஒற்றைக்கண்ணை உடையவன். பார்வதி பாகன். பாம்பைப் பிடித்து ஆட்டும் வஞ்சகன். பல ஊர்களிலும் பிச்சை எடுக்கும் மேம்பட்டவன். பகைவர் மும்மதில்களையும் அழித்தவன். பிறையைச் சடையில் அணிந்தவன். எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாகிய அவன் குற்றமே இல்லாதவன்.

2479. அலையார்ந்த புனற்கங்கைச் சடையான் கண்டாய்
அண்டத்துக் கப்பாலாய் நின்றான் கண்டாய்
கொலையான கூற்றங் குமைத்தான் கண்டாய்
கொல்வேங்கைத் தோலொன் றுடுத்தான் கண்டாய்
சிலையால் திரிபுரங்கள் செற்றான் கண்டாய்
செழுமா மதிசென்னி வைத்தான் கண்டாய்
மலையார் மடந்தை மணாளன் கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 4

குமைத்தான் – அழித்தான்.

மழபாடி மன்னும் மணாளன், அலைமிக்க கங்கையைச் சடையில் ஏற்றவன். உலகங்களுக்கு எல்லாம் புறத்தவனாக நிற்பவன். கொலைத் தொழிலைச் செய்யும் கூற்றுவனைத் தண்டித்தவன். தன்னால் கொல்லப்பட்ட வேங்கைத்தோலை ஆடையாக உடுத்தவன். வில்லால் முப்புரங்களை அழித்தவன். பிறையைச் சடையில் வைத்தவன். பார்வதியின் தலைவன்.

2480. உலந்தார்தம் அங்கம் அணிந்தான் கண்டாய்
உவகையோ டின்னருள்கள் செய்தான் கண்டாய்
நலந்திகழுங் கொன்றைச் சடையான் கண்டாய்
நால்வேதம் ஆறங்க மானான் கண்டாய்
உலந்தார் தலைகலனாக் கொண்டான் கண்டாய்
உம்பரார் தங்கள் பெருமான் கண்டாய்
மலர்ந்தார் திருவடியென் தலைமேல் வைத்த
மழபாடி மன்னு மணாளன் றானே. 5

உலந்தார் – இறந்தார். அங்கம் – எலும்பு

மழபாடி மன்னும் மணாளன், இறந்தவர்களுடைய எலும்புகளை அணிந்தவன். மகிழ்வோடு பிறருக்கு அருள் செய்பவன். அழகு விளங்கும் சடையில் கொன்றையை அணிந்தவன். நான்கு வேதங்களும் ஆறு அங்கங்களும் ஆகியவன். இறந்தவர்களின் தலைகளை அணிகலனாக உடையவன். தேவர்களுக்குத் தலைவன். எங்கும் நிறைந்த தன் திருவடிகளை என் தலைமேல் வைத்தவன்.

2481. தாமரையான் தன்தலையைச் சாய்த்தான் கண்டாய்
தகவுடையார் நெஞ்சிருக்கை கொண்டான் கண்டாய்
பூமலரான் ஏத்தும் புனிதன் கண்டாய்
புணர்ச்சிப் பொருளாகி நின்றான் கண்டாய்
ஏமருவு வெஞ்சிலையொன் றேந்தி கண்டாய்
இருளார்ந்த கண்டத் திறைவன் கண்டாய்
மாமருவுங் கலைகையி லேந்தி கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 6

மழபாடி மன்னும் மணாளன், பிரமனுடைய தலை ஒன்றனை நீக்கி நற்பண்புடையவர்கள் நெஞ்சினைத் தன் இருப்பிடமாகக் கொண்டு பூத்த மலர்களால் எல்லோராலும் வழிபடப்படும் தூயவனாய், எல்லோரும் சார்தற்குரிய பொருளாய் இருப்பவனாய், அம்புகள் பொருந்தக் கொடிய வில்லை ஏந்தியவனாய், நீலகண்டத் தெய்வமாய் விலங்குத் தன்மை பொருந்திய மானைக் கையில் ஏந்தியவனாய் உள்ளான்.

பிரமன் தலையைக் கிள்ளியது மெய்யுணர்வு பெறுவித்தற் பொருட்டு.

தகவு – தகுதி. ஏ–அம்பு. சிலை–வில்.

2482. நீராகி நெடுவரைக ளானான் கண்டாய்
நிழலாகி நீள்விசும்பு மானான் கண்டாய்
பாராகிப் பௌவமே ழானான் கண்டாய்
பகலாகி வானாகி நின்றான் கண்டாய்
ஆரேனுந் தன்னடியார்க் கன்பன் கண்டாய்
அணுவாகி ஆதியாய் நின்றான் கண்டாய்
வாரார்ந்த வனமுலையாள் பங்கன் கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 7

மழபாடி மன்னும் மணாளர், நீராகவும் பெரிய மலைகளாகவும் ஆகி, ஒளியாகி, ஆகாயமும் ஆகி, நிலமாகி, ஏழ்கடலும் ஆகிச் சூரியனும், மேகமும் ஆகித் தன் அடியவர் எவரிடத்தும் அன்பனாய், நுட்பமான சக்தியாகி உலகுக்கு எல்லாம் காரணமாய்க் கச்சணிந்த அழகிய முலையை உடைய பார்வதி பாகனாய் உள்ளான்

நிழல் – ஒளி. பௌவம் – கடல். பார் – பூமி.

2483. பொன்னியலுந் திருமேனி உடையான் கண்டாய்
பூங்கொன்றைத் தாரொன் றணிந்தான் கண்டாய்
மின்னியலும் வார்சடையெம் பெருமான் கண்டாய்
வேழத்தின் உரிவிரும்பிப் போர்த்தான் கண்டாய்
தன்னியல்பார் மற்றொருவ ரில்லான் கண்டாய்
**தாங்கரிய சிவந்தானாய் நின்றான்** கண்டாய்
மன்னிய மங்கையோர் கூறன் கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 8

மழபாடி மன்னும் மணாளன், பொன்னார் மேனியனாய்க் கொன்றைப் பூ மாலை அணிந்தவனாய், ஒளிவீசும் நீண்ட சடை உடையவனாய், யானைத் தோலை விரும்பிப் போர்த்தவனாய்த் தன் தகுதியை உடையார் மற்றொருவர் இல்லாதானாய்ப் பிறர் ஒருவராலும் பொருந்துதற்கரிய மங்கலப் பொருளாய்த் தன்னோடு கூடிய பார்வதி பாகனாய் உள்ளான்.

பொன் இயலும் – பொன்னால் இயல்வது போலும். மின் இயலும் – மின்போல அசைகின்ற. தாங்கரிய சிவம் – பிறர் ஒருவராலும் பொருந்துதற்கரிய மங்கலப் பொருள் என்றதனால் ஞாயிற்றின் ஒளி நேரே கண்களால் ஏற்க வியலாததுபோல, அவனது பேரருளும், பேராற்றலும் உயிர்களால் நேரே ஏற்றுக் கோடற்கு இயலாதன.

ஆகவே, சத்தியென்னும் நிலை வாயிலாகவே ஒருவாறு ஏற்கப்படும் என்பதாம். 'மங்கை ஓர் கூறன்' என்றதும், இக்கருத்துணர்த்தும் குறிப்பினது என்க. 'பாலுண் குழவி பசுங்குடர், பொறாதென – நோயுண் மருந்து தாயுண்டாங்கு... திருந்திழை காணச் சிற்சபை பொலியத் திருநடம் புரியும் – அற்புதக் கூத்து' (சிதம்பர மும்மணிக்கோவை 1.14–21) என இப்பொருள் விளக்கப்பட்டமை காண்க.

2484. ஆலாலம் உண்டுகந்த ஆதி கண்டாய்
அடையலர்தம் புரமூன்றும் எய்தான் கண்டாய்
காலாலக் காலனையும் காய்ந்தான் கண்டாய்
கண்ணப்பர்க் கருள்செய்த காளை கண்டாய்
பாலாரும் மொழிமடவாள் பாகன் கண்டாய்
பசுவேறிப் பலிதிரியும் பண்பன் கண்டாய்
மாலாலும் அறிவரிய மைந்தன் கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 9

மழபாடி மன்னும் மணாளன், ஆலகால விடத்தை உண்டு மகிழ்ந்த முதற்பொருளாய்ப் பகைவருடைய மும்மதில்களையும் அழித்தவனாய்த் தன் திருவடியால் கூற்றுவனை ஒறுத்தவனாய், கண்ணப்பருக்கு அருள் செய்த தலைமகனாய், பால்போன்ற சொற்களை உடைய பார்வதி பாகனாய், காளை மீது இவர்ந்து பிச்சைக்கு அலையும் பண்பினனாய்த் திருமாலும் அறிவதற்கரிய வலியவனாய் உள்ளான். அடையலர் – பகைவர்

2485. ஒருசுடராய் உலகேழு மானான் கண்டாய்
ஓங்காரத் துட்பொருளாய் நின்றான் கண்டாய்
விரிசுடராய் விளங்கொளியாய் நின்றான் கண்டாய்
விழவொலியும் வேள்வொலியு மானான் கண்டாய்
இருசுடர்மீ தோடா இலங்கைக் கோனை
யீடழிய இருபதுதோ ளிறுத்தான் கண்டாய்
மருசுடரின் மாணிக்கக் குன்று கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 10

மழபாடி மன்னும் மணாளன் ஒப்பற்ற பேரொளியாய், உலகு ஏழும் பரவி ஓங்காரத்தின் உட்பொருளாய் நின்று, ஞாயிறு முதலிய ஒளிப் பொருள்களாகவும், அவற்றிலிருந்து வெளிப்படும் ஒளியாகவும் அமைந்து, திரு விழாக்களிலும் வேள்விகளிலும் செவிமடுக்கப் படும் ஒலிவடிவினனாய், தன் மீது ஞாயிறும் திங்களும் வானில் ஊர்ந்து செல்வது இராவணனுடைய ஆணையால் தடுக்கப்பட்ட இலங்கையில் மன்னனாகிய அவனுடைய வலிமை அழியுமாறு அவன் இருபது தோள்களையும் நசுங்கச் செய்து ஒளிவிளங்கும் மாணிக்கக்குன்றாய் விளங்குகின்றான்.

ஈடு–வலிமை.
பதிக மகுடம் – மழபாடி மன்னு மணாளன்றானே

## 40. திருமழபாடி

**(நன்னெறி காட்டி இடைவிடாது வணங்கும்பேற்றை நல்கிய மழபாடி வயிரத் தூணை பல காலம் வாய்விட்டு அழைத்து மனம் உருகி நின்று பாடி அருள்கிறார்)**

**ப.தொ.எண் : 253** **பதிக எண் : 40**

**2486.** அலையடுத்த பெருங்கடல்நஞ் சமுதா வுண்டு
அமரர்கள்தந் தலைகாத்த ஐயர் செம்பொன்
சிலையெடுத்து மாநாகம் நெருப்புக் கோத்துத்
திரிபுரங்கள் தீயிட்ட செல்வர் போலும்
நிலையடுத்த பசும்பொன்னால் முத்தால் நீண்ட
நிரைவயிரப் பலகையாற் குவையார்த் துற்ற
மலையடுத்த மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

**1**

செல்வர் எனப் படர்க்கையாகவும், வயிரத்தூணே என முன்னிலையாகவும் பாடுகிறார்.
பதிக மகுடம் – மழபாடி வயிரத்தூணே என்றென்றே நானரற்றி நைகின்றேனே.

அலைகள் பொருந்திய பெரிய கடலில் தோன்றிய விடத்தை அமுதமாக உண்டு தேவர்களுடைய உயிரைப் பாதுகாத்த தலைவர் என்றும், மேருவை வில்லாக வளைத்துப் பெரிய பாம்பினை நாணாகப் பூட்டி நெருப்பாகிய அம்பினைக் கோத்து முப்புரங்களையும் எரித்த செல்வர் என்றும், தன் மாற்றுக் குறையாத கிளிச்சிறை என்ற பசிய பொன்னாலும் முத்தாலும் நீண்ட பலகை போன்ற வயிரத்தாலும் குவியலாகத் திரட்டி இயற்றப்பட்ட மழபாடியில் உறையும், மலை போல உறுதியாக அமைந்த வயிரத்தூணே என்றும் எம்பெருமானை முன்னிலையாகவும் படர்க்கையாகவும் சொல்லி நான் மனம் உருகுகின்றேன்.

**2487.** அறைகலந்த குழல்மொந்தை வீணை யாழும்
அந்தரத்திற் கந்தருவர் அமரர் ஏத்த
மறைகலந்த மந்திரமும் நீரும் கொண்டு
வழிபட்டார் வானாளக் கொடுத்தி யன்றே
கறைகலந்த பொழிற்கச்சிக் கம்பம் மேய
கனவயிரத் திரள்தூணே கழிசூழ் மாட
மறைகலந்த மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

**2**

அறை – ஓசை. கறை – கறுப்பு; இருண்ட மேகம். கலி – ஆரவாரம்.
வானாளக் கொடுத்தி – வானுலகத்தை உரிமையாகக் கொடுப்பாய்.

ஓசை பொருந்திய குழல், மொந்தை, வீணை, யாழ் என்ற இசைக்கருவிகளை இசைத்து வானத்தில் கந்தருவர் என்ற தேவகணத்தாரும் தேவர்களும் துதித்து வேதமந்திரமும் ஓதி, நீரினால் அபிடேகம் செய்து வழிபட, அவர்களுக்கு வானுலகில் வெகுகாலம் அநுபவிக்கும் செல்வத்தைக் கொடுக்கும், செறிவினால் இருண்ட பொழில்களை உடைய காஞ்சி நகரில் ஏகம்பத்தில் விரும்பியிருக்கும் மேம்பட்ட வயிரக்குவியலால் அமைந்த தூண் போல்வாய் என்றும், நான் பலகாலும் எம்பெருமானை அழைத்து உள்ளம் உருகுகின்றேன்.

2488. உரங்கொடுக்கு மிருண்மெய்யர் மூர்க்கர் பொல்லா
ஊத்தைவாய்ச் சமணர்தமை யுறவாக் கொண்ட
பரங்கெடுத்திங் கடியேனை யாண்டு கொண்ட
பவளத்தின் திரள்தூணே பசும்பொன் முத்தே
புரங்கெடுத்துப் பொல்லாத காமன் ஆகம்
பொடியாக விழித்தருளிப் **புவியோர்க் கென்றும்**
**வரங்கொடுக்கும் மழபாடி வயிரத் தூணே**
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 3

உரம்–வலிமை. பரம்–சுமை. இங்கு பொறுக்க வொண்ணாத பாவத்தைக் குறித்தது. பொன்முத்து–பொன்னிற் பதித்த முத்து. புவியோர்க்கென்றும் வரங் கொடுக்கும் மழபாடி வயிரத்தூணே! – இத்தொடர் மண்ணுலகத்தின் பெருமையைக் குறித்து அருளியதாகும்.

வலிமை மிக்க கறுத்த உடம்பினராய், உண்மையறிவு அற்றவராய், நல்லவரல்லாத ஊத்தை வாயை உடைய சமணர்களை ஆன்மபந்துக்களாகக் கொண்ட பாவமாகிய சுமையை நீக்கி, அடியேனை அடிமையாகக் கொண்ட பருத்த பவளத்தூணே! பசிய பொன்னில் பதிக்கப்பட்ட முத்தே! திரிபுரங்களை அழித்துத் தவறான செயலில் ஈடுபட்ட மன்மதனுடைய உடம்பு சாம்பலாகுமாறு தீ விழித்து உலக மக்களுக்கு என்றும் மேம்பட்ட வாழ்வை அருளும் மழபாடியில் உள்ள வயிரத்தூணே! என்று பலகாலும் நான் வாய்விட்டு அழைத்து உள்ளம் உருகுகின்றேன்.

2489. ஊனிகந்தூ ணுறிக்கையர் குண்டர் பொல்லா
வூத்தைவாய்ச் சமணருற வாகக் கொண்டு
ஞானகஞ்சேர்ந் துள்ளவயி ரத்தை நண்ணா
நாயேனைப் பொருளாக ஆண்டு கொண்ட
மீனகஞ்சேர் வெள்ளநீர் விதியாற் சூடும்
வேந்தனே விண்ணவர்தம் பெருமான் மேக
வானகஞ்சேர் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 4

விதி என்றது, உலகை அழியாமற் காக்கக் கொண்ட அருளைக் குறித்தது.

சுவைத்து உண்ணுதலை விடுத்துக்கையில் உறியில் கரகத்தைத் தாங்கி உடல்பருத்த பொலிவற்ற, ஊத்தைவாயினை உடைய சமணர்களை ஆன்மபந்துகளாகக் கொண்டு, உள்ளத்தில் நல்லறிவு பெற்று, உள்ளத்தில் வயிரம் போல ஒளி வீசும் எம்பெருமானை நெருங்காத நாய் போன்ற கீழோனாகிய என்னை ஒரு பொருளாகக் கருதி அடிமையாகக் கொண்ட, மீன் பொருந்திய கங்கையைத் தன் ஆணையால் தலையிலே தங்குமாறு சூடிய அரசனே! தேவர்கள் தலைவனே! மேகத்தை உடைய வானளாவிய மாடி வீடுகளை உடைய மழபாடியில் உகந்தருளியிருக்கும் வயிரத்தூணே என்று நான் பலகாலும் வாய்விட்டுக் கூப்பிட்டு உள்ளம் உருகுகின்றேன்.

**2490.** சிரமேற்ற நான்முகன்றன் றலையும் மற்றைத்
**திருமால்தன் செழுந்தலையும்** பொன்றச் சிந்தி
உரமேற்ற இரவிபல் தகர்த்துச் சோமன்
ஒளிர்கலைகள் படவுழக்கி உயிரைநல்கி
நரையேற்ற விடையேறி நாகம் பூண்ட
நம்பியையே மறைநான்கும் ஓல மிட்டு
வரமேற்கும் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 5

சோமன் – சந்திரன். உழக்கி – தேய்த்து; நரையேற்ற – வெண்மையைக் கொண்ட

ஐந்தலைகளைக் கொண்ட பிரமனது ஐந்தாவது தலை அழியுமாறும் திருமாலுடைய தலைமை அழியுமாறும் போக்கி, வலிமை உடைய சூரியன் ஒருவனுடைய பற்களை உடைத்துச் சந்திரனுடைய ஒளிவீசும் கலைகள் அழியுமாறு கலக்கி, அவர்களை உயிரோடு விட்டு, வெண்ணிறக் காளையை இவர்ந்து, பாம்பினை அணிந்த குணபூரணனே! தலைவனே! நான்கு வேதங்களும் உன்புகழ் பாடிப் பெருமை பெறுகின்ற மழபாடி வயிரத்தூணே என்று நான் அரற்றி நைகின்றேன்.

**2491.** சினந்திருத்துஞ் சிறுப்பெரியார் குண்டர் தங்கள்
செதுமதியார் தீவினைக்கே விழுந்தேன் தேடிப்
புனந்திருத்தும் பொல்லாத பிண்டி பேணும்
பொறியிலியேன் தனைப்பொருளா ஆண்டு கொண்டு
தனந்திருத்து மவர்திறத்தை யொழியப் பாற்றித்
தயாமூல தன்மவழி யெனக்கு நல்கி
மனந்திருத்தும் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 6

செதுமதி – பொல்லாத அறிவு. புனம் – காடு. பாற்றி – நீக்கி

சினந்து பிறரைத் திருத்த முற்படும் சிறுமையினை மேம்பட்ட பருத்த உடலை உடைய சமணர்களாகிய பொல்லாத அறிவினை உடையவர்கள் காட்டிய தீவினைகளில் அழுந்தினேனாய் விளை நிலங்களை அழித்து அவ்விடத்தில் அசோக மரத்தை வளர்த்துப் பாதுகாக்கும் நல்வினையில்லேனாகிய என்னையும் ஒரு பொருளாக ஏற்று அடிமை கொண்டு மகளிரைப் பற்றிய எண்ணத்தை யான் நினையாதவாறு நீக்கி இரக்கத்திற்கு அடிப்படையான அறவழியை எனக்கு வழங்கி என் மனத்தை நல்வழியில் திருத்தும் மழபாடி வயிரத்தூணே என்று நான் அரற்றி நைகின்றேன்.

2492. சுழித்துணையாம் பிறவிவழித் துக்கம் நீக்குஞ்
சுருள்சடையெம் பெருமானே தூய
தெண்ணீர்
இழிப்பரிய பசுபாசப் பிறப்பை நீக்கும்
என்துணையே யென்னுடைய பெம்மான்
தம்மான்
பழிப்பரிய திருமாலும் அயனும் காணாப்
பரிதியே சுருதிமுடிக் கணியாய் வாய்த்த
வழித்துணையாம் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.
7

X X X X X X X X X X X 8, 9, 10

சுழி–சுழல். தம்மான்–உயிர்கட்குத் தலைவன்

நீர்ச்சுழிக்கு ஒப்பாகித் தன்னிடத்திலேயே ஆழ்த்தும் பிறவி வழியாகிய துக்கத்தைப் போக்கும் சுருண்ட சடையை உடைய எம் பெருமானே! சடையில் தூய தெளிந்த நீராகிய கங்கையை ஏற்றவனே! போக்குதற்கு அரிய பசுத்தன்மையால் உள்ள பாசத்தால் ஏற்படும் பிறப்பை நீக்கிய என் துணைவனே! என் தலைவனே! எல்லோருக்கும் தலைவனே! குறை கூறுதற்கரிய திருமாலும் பிரமனும் காணாத ஒளிப்பிழம்பே! வேதத்தின் முடிவாகிய உபநிடதங்களுக்கு அணிகலனாய் எனக்குக் கிட்டிய வழித்துணையாகிய மழபாடி வயிரத்தூணே என்று நான் பலகாலும் வாய்விட்டுக் கூப்பிட்டு உள்ளம் உருகுகின்றேன்.

## 41. திருநெய்த்தானம்

ப.தொ.எண் : 254 பதிக எண் : 41

2493. வகையெலா முடையாயும் நீயே யென்றும்
வான்கயிலை மேவினாய் நீயே யென்றும்
மிகையெலாம் மிக்காயும் நீயே யென்றும்
வெண்காடு மேவினாய் நீயே யென்றும்
பகையெலாந் தீர்த்தாண்டாய் நீயே யென்றும்
பாசூ ரமர்ந்தாயும் நீயே யென்றும்
திகையெலாந் தொழச் செல்வாய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
1

வகையெலாம் – உடையவர்க்கு உரிய வகைகள் பலவும். வகையெலாம் உடையாய், மிகையெலாம் மிக்காய் என்பன இறைவனின் பொருள்சேர் புகழைப் பாடுவனவாகும்.

திருநெய்த்தானத்தில் உகந்தருளி உறையும் பெருமானே! செல்வர்க்கு உரிய கூறுபாடுகள் யாவும் உடைய நீ, உயர்ந்த கயிலை மலையை விரும்பி உறைவாய். உயர்வற உயர்நலம் யாவும் உடையாய். வெண்காடு, பாசூர் இவற்றை உறைவிடமாக விரும்புகிறாய். பகைகளை எல்லாம் போக்கி எமை ஆண்டாய். எண் திசையிலுள்ளாரும் உன்னை வழிபடுமாறு ஆங்கெல்லாம் செல்வாய் என்று உன் பண்பு நலன்களை நாங்கள் எடுத்துத் துதிக்கிறோம். ஆன்மாக்களின் பாசத்தைப் போக்கி இன்பமளிக்கும் வகைகளை உடையாய்.

2494. ஆர்த்த எனக்கன்பன் நீயே யென்றும்
ஆதிக் கயிலாயன் நீயே யென்றும்
கூர்த்த நடமாடி நீயே யென்றுங்
கோடிகா மேய குழகா என்றும்
பார்த்தற் கருள் செய்தாய் நீயே யென்றும்
பழையனூர் மேவிய பண்பா என்றும்
தீர்த்தன் சிவலோகன் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
2

இத்திருப்பதிகத்தின் ஒவ்வொரு திருப்பாடலிலும் முதலடியில் திருக்கயிலையை நினைந்து அருளிச் செய்துள்ளார்.

நின்ற நெய்த்தானா! உனக்கு அடிமையாகப் பிணிக்கப்பட்ட அடியேனிடம் அன்பு உடையாய், பழைய கயிலாயம், கோடிகா, பழையனூர் இவற்றில் உறைகின்றாய். நடனக்கலையின் நுட்பங்களெல்லாம் அமையக் கூத்தாடு கின்றாய். அருச்சுனனுக்கு அருள் செய்தாய். தூயவனும் சிவலோகநாதனுமாக உள்ளாய் என்று அடியோங்கள் நின்னை துதிக்கின்றோம்.

2495. அல்லாய்ப் பகலானாய் நீயே யென்றும்
ஆதிக் கயிலாயன் நீயே யென்றும்
கல்லா லமர்ந்தாயும் நீயே யென்றுங்
காளத்திக் கற்பகமும் நீயே யென்றும்
சொல்லாய்ப் பொருளானாய் நீயே யென்றுந்
சோற்றுத் துறையுறைவாய் நீயே யென்றும்
செல்வாய்த் திருவானாய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
3

அல் – இரவு. செல்வாய்த்திரு – யாவும் நடத்தற்கு வழியாகிய செல்வம்.

நின்ற நெய்த்தானா! நீ இரவாகவும், பகலாகவும் உள்ளாய். பழைய கயிலாயம், காளத்தி, சோற்றுத்துறை இவற்றை விரும்பி உறைவாய். கல்லாலின் கீழ் அமர்ந்தவனும், சொல்லும் பொருளுமாய் இருப்பவனும், நீயே. உலகில் எல்லா நிகழ்ச்சிகளும் நடப்பதற்கு உதவும் செல்வமாகவும் நீ உள்ளாய் என்று அடியோங்கள் நின்னைத் துதிக்கின்றோம்.

2496. மின்னே ரிடைபங்கன் நீயே யென்றும்
வெண்கயிலை மேவினாய் நீயே யென்றும்
பொன்னேர் சடைமுடியாய் நீயே யென்றும்
பூத கணநாதன் நீயே யென்றும்
என்னா விரதத்தாய் நீயே யென்றும்
**ஏகம்பத் தென்னீசன்** நீயே யென்றும்
தென்னூர்ப் பதியுளாய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
4

ஏகம்பநாதர் சுவாமிகளின் வழிபாட்டுப் பெருமான்.

நின்ற நெய்த்தானா! நீ வெள்ளிய கயிலை மலை, ஏகம்பம், தென்னூர் இவற்றில் விரும்பி உறைகின்றாய். மின்னலை ஒத்த இடையை உடைய பார்வதிபாகனாய், பொன்னை ஒத்து ஒளிவீசும் சடை முடியனாய்ப் பூதகணத் தலைவனாய் எம் நாவினில் இனிக்கின்ற சுவைப் பொருளாய் உள்ளாய் என்று அடியோங்கள் நினைத்துத் துதிக்கின்றோம். என் நா இரதத்தாய் – எனது நாவில் இனிக்கின்ற சுவையாயினாய்.

2497. முந்தி யிருந்தாயும் நீயே யென்றும்
முன்கயிலை மேவினாய் நீயே யென்றும்
நந்திக் கருள்செய்தாய் நீயே யென்றும்
நடமாடி நள்ளாறன் நீயே யென்றும்
பந்திப் பரியாயும் நீயே யென்றும்
பைஞ்ஞீலீ மேவினாய் நீயே யென்றும்
சிந்திப் பரியாயும் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
5

பந்திப்பு அரியாய் – பாசத்தாற் பிணிக்க ஒண்ணாதவனே!

நின்ற நெய்த்தானா! கயிலை, நள்ளாறு பைஞ்ஞீலி என்ற தலங்களைக் கூத்தனாய் நீ விரும்பி உறைகின்றாய். எல்லாப் பொருளுக்கும் முற்பட்டவனாய் நந்திதேவருக்கு அருள் செய்தவனாய், பாசத்தால் பிணிக்க ஒண்ணாதவனாய்ச் சிந்தையால் அணுக ஒண்ணாதவனாய் உள்ளாய் என்று அடியோங்கள் நினைத்துத் துதிக்கின்றோம்.

2498. தக்கா ரடியார்க்கு நீயே யென்றுந்
தலையார் கயிலாயன் நீயே யென்றும்
அக்காரம் பூண்டாயும் நீயே யென்றும்
ஆக்கூரில் தான்றோன்றி நீயே யென்றும்
புக்காய ஏழுலகும் நீயே யென்றும்
புள்ளிருக்கு வேளூராய் நீயே யென்றும்
தெக்காரு மாகோணத் தானே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
6

தக்காராய அடியார்கட்குத் துணை நீயே.
அக்கு ஆரம் – எலும்பு மாலை.

நின்ற நெய்த்தானா! நீ மேம்பட்ட கயிலாயனாகவும் ஆக்கூரில் தான்தோன்றி ஈசனாகவும், புள்ளிருக்குவேளூர், தெற்கே உள்ள மாகோணம் இவற்றில் உறைபவனாகவும் உள்ளாய். தகுதியுடையவரான அடியாருக்கு நீயே துணையாகவும் எலும்பு மாலை அணிபவனாகவும், உயிர்கள் புகுந்து வாழும் ஏழுலகங்களாகவும் உள்ளாய் என்று அடியோங்கள் நின்னைத் துதிக்கின்றோம்.

2499. புகழும் பெருமையாய் நீயே யென்றும்
பூங்கயிலை மேவினாய் நீயே யென்றும்
இகழுந் தலையேந்தி நீயே யென்றும்
இராமேச் சுரத்தின்பன் நீயே யென்றும்
அகழும் மதிலுடையாய் நீயே யென்றும்
ஆலவாய் மேவினாய் நீயே யென்றும்
திகழும் மதிசூடி நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
7

நின்ற நெய்த்தானா! அழகிய கயிலை, இராமேச்சுரம் ஆலவாய் இவற்றில் உகந்து உறைபவனே! எல்லோரும் புகழும் பெருமையை உடையையாய், யாவரும் இகழும் மண்டையோட்டை உண்கலமாக ஏந்தியையாய், ஆலவாயில் அகழும் மதிலும் உடையையாய், விளங்கும் பிறை சூடியாய் உள்ளாய் என்று அடியோங்கள் நின்னைத் துதிக்கின்றோம்.

2500. வானவர்க்கு மூத்திளையாய் நீயே யென்றும்
வானக் கயிலாயன் நீயே யென்றும்
கான நடமாடி நீயே யென்றுங்
கடவூரில் வீரட்டன் நீயே யென்றும்
ஊனார் முடியறுத்தாய் நீயே யென்றும்
ஒற்றியூ ராரூராய் நீயே யென்றும்
தேனாய் அமுதானாய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
8

வானவர் தோற்றத்திற்கு முன் உள்ளமையின் மூத்தாய் என்றும் ஒடுக்கத்திற்குப்பின் உள்ளமையின் இளையாய் என்றும் அருளிச் செய்தார்.

ஊனார் – மேலிடத்துள்ளார்; தேவர். இனிமை பயத்தலின் – தேன். இனிமையோடு இறவாமை பயத்தலின் – அமுதம்.

நின்ற நெய்த்தானா! நீ வானளாவிய கயிலாயனாய்க் கடவூர் வீரட்டனாய், ஒற்றியூரிலும் ஆரூரிலும் உறைபவனாய்த் தேனும் அமுதும் போல இனியனாய் உள்ளாய். தேவர்களுக்கும் முற்பட்டவனாய், சுடுகாட்டில் கூத்தாடுபவனாய்த் தக்க யாகத்தில் ஈடுபட்ட தேவர்களின் தலைகளைப் போக்கினாய் என்று அடியோங்கள் நின்னைத் துதிக்கின்றோம்.

2501. தந்தைதா யில்லாதாய் நீயே யென்றுந்
தலையார் கயிலாயன் நீயே யென்றும்
எந்தாயெம் பிரானானாய் நீயே யென்றும்
ஏகம்பத் தென்னீசன் நீயே யென்றும்
முந்திய முக்கணாய் நீயே யென்றும்
மூவலூர் மேவினாய் நீயே யென்றும்
சிந்தையாய்த் தேனூராய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
9

மூவலூர், தேனூர் – வைப்புத்தலங்கள். இப்பதிகத்தின் நான்காவது பாடலிலும் ஏகம்பத்து ஈசனைப் பாடுகிறார்.

நின்ற நெய்த்தானா! நீ எங்கள் உள்ளத்திலும் மேம்பட்ட கயிலாயம், ஏகம்பம், மூவலூர், தேனூர் என்ற திருத்தலங்களிலும் உறைகின்றாய். தந்தை தாய் இல்லாத பிறவா யாக்கைப் பெரியோனாய், யாவருக்கும் முற்பட்ட முக்கண்ணனாய், எங்களுக்குத் தாய் தந்தையாகவும் தலைவனாகவும் உள்ளாய் என்று அடியோங்கள் நின்னைத் துதிக்கின்றோம்.

2502. மறித்தான் வலிசெற்றாய் நீயே யென்றும்
வான்கயிலை மேவினாய் நீயே என்றும்
வெறுத்தார் பிறப்பறுப்பாய் நீயே யென்றும்
வீழி மிழலையாய் நீயே யென்றும்
அறத்தாய் அமுதீந்தாய் நீயே யென்றும்
யாவர்க்குந் தாங்கொணா நஞ்ச முண்டு
பொறுத்தாய் புலனைந்தும் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே.
10

மறித்தான்–தனது ஊர்தியை நிறுத்திப் பெயர்த்தவன். பதிக மகுடம் – நின்ற நெய்த்தானாவென் நெஞ்சுளாயே.

நின்ற நெய்த்தானா! நீ உயரிய கயிலை, வீழிமிழலை இவற்றில் உறைபவன். தன் விமானத்தை நிறுத்திக் கயிலையைப் பெயர்த்த இராவணனது வலிமையை அழித்து, உலகப் பற்றைத் துறந்த அடியார்களுடைய பிறவிப் பிணியைப் போக்கி, அறவடிவினனாய், வானோர்க்கு அமுதம் வழங்கி, ஒருவராலும் பொறுக்க முடியாத விடத்தை உண்டு, பொறிவாயில் ஐந்து அவித்துள்ளாய் என்று அடியோங்கள் நின்னைத் துதிக்கின்றோம்.

## 42. திருநெய்த்தானம்

(இத்திருப்பதிகம் நெஞ்சிற்கு அருளும் அறிவுரையாக அருளிச் செய்யப்பட்டது)

ப.தொ.எண் : 255 பதிக எண் : 42

2503. மெய்த்தானத் தகம்படியுள் ஐவர் நின்று
வேண்டிற்றுக் குறைமுடித்து வினைக்குக் கூடாம்
இத்தானத் திருந்திங்ங னுய்வா னெண்ணும்
இதனையொழி இயம்பக்கேள் ஏழை நெஞ்சே
மைத்தான நீள்நயனி பங்கன் வங்கம்
வருதிரைநீர் நஞ்சுண்ட கண்டன் மேய
நெய்த்தான நன்னகரென் றேத்தி நின்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 1

மெய்த்தானம் – உடம்பாகிய இடம்.
அகம்படியுள் – உட்புறத்தில்
வேண்டிற்றுக்குறை – விரும்பியதாகிய இன்றியமையாப் பொருளை.
ஏழைமை – அறியாமை
மைத்து ஆனநீள் நயனி – மையணிந்த நீண்ட கண்ணையுடைய உமாதேவி
வங்கம் – மரக்கலம்

அறிவில்லாத நெஞ்சமே! யான் கூற நீ கேட்பாயாக. உடம்பாகிய இடத்தின் உட்புறத்தில், ஐம்பொறிகள் பரு உடம்பாய் நின்று, விரும்பிய இன்றியமையாத பொருள்களைத் தந்து நிரப்பி, வினைகளுக்குத் தங்கும் இடமாகிய இந்த உடம்பில் இருந்து, ஐம்புல நுகர்ச்சி நுகர்ந்து கொண்டே தப்பித்துப் போகலாம் என்ற எண்ணத்தை விட்டுவிடு. நீண்ட கருங்கண்ணியாகிய பார்வதி பாகனாய்க் கப்பல்கள் இயங்கும் கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு நிறுத்திய நீலகண்டன் விரும்பி உறையும் திருநெய்த்தானத் திருக்கோயிலைத் துதித்துத் தியானிக்க வேண்டும் என்பதனை விருப்புற்று நினைத்து நீ செயற்பட்டால் பிறவிப் பிணியிலிருந்து தப்பலாம்.

---

2504. ஈண்டா விரும்பிறவித் துறவா ஆக்கை
இதுநீங்க லாம்விதியுண் டென்று சொல்ல
வேண்டாவே நெஞ்சமே விளம்பக் கேள்நீ
விண்ணவர்தம் பெருமானார் மண்ணி லென்னை
ஆண்டானன் றருவரையாற் புரமூன் றெய்த
அம்மானை அரி அயனுங் காணா வண்ணம்
நீண்டா னுறைதுறைநெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 2

துறவா – நீக்க முடியாத
பதிக மகுடம் – நெய்த்தானமென்று நினையுமா நினைந்தக்கால் உய்யலாமே.

நெஞ்சமே! நான் கூறுவதனைக் கேள்! பிறப்புக்கள் பலவற்றிற்கு ஏதுவாகி நீங்காத இவ்வுடல் தொடர்பிலிருந்து விரைவாக நீங்குதற்குரிய வழி உள்ளது என்பதனை யான் நினக்குக் கூறல் வேண்டா. தேவர்கள் தலைவராய், இவ்வுலகிலே என்னை அடிமை கொண்டவராய், மலையை வில்லாகக் கொண்டு மும்மதில்களையும் அழித்த பெருமானாராய்த் திருமாலும் பிரமனும் காணா வண்ணம் தீப்பிழம்பாய் நீண்டவராய் உள்ளவர் உகந்தருளியிருக்கும் நெய்த்தானம் என்ற தலத்தைத் தியானிக்கும் வழியை விரும்பி நினைப்பாயானால் பிறவிப் பிணியிலிருந்து தப்பித்தல் கூடும்.

2505. பரவிப் பலபலவுந் தேடி யோடிப்
பாழாங் குரம்பையிடைக் கிடந்து வாளா
குரவிக் குடிவாழ்க்கை வாழ வெண்ணிக்
குலைகை தவிர்நெஞ்சே கூறக் கேள்நீ
இரவிக் குலமுதலா வானோர் கூடி
யெண்ணிறந்த கோடி யமர ராயம்
நிரவிக் கரியவன் நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.
3

இரவிக் குலம் – சூரியக் கூட்டம். 12 பேர்.
ஆயம் – கூட்டம். குரவி – குரவை – கூத்து.
குலைகை – உடைதல். நிரவிக்க – அளக்க
இரவிக்குலம் – 12 சூரியக் குலம்.

நெஞ்சே! நான் கூறுவதைக் கேள். உலகெங்கும் தேவை என்று கருதிப் பல பொருள்களையும் தேடித் திரிந்து பாழான இவ்வுடம்பிலே கிடந்து பின்விளைவை நோக்காது, உற்றார் உறவினரோடு கூடி வாழும் குடும்ப வாழ்க்கையை வாழ எண்ணி உடைந்து போதலை நீக்கு. பன்னிரு ஆதித்தர் முதலாகிய வானவர் இனத்தைச் சேர்ந்த கணக்கற்ற தேவர் கூட்டத்தார் ஒன்று சேர்ந்தாலும் தன் புகழை முழுமையாகச் சொல்ல முடியாத சிவபெருமானுடைய நெய்த்தானத்தை நினையுமா நினைந்தக்கால் உய்யலாம்.

2506. அலையார் வினைத்திறஞ்சே ராக்கை யுள்ளே
யகப்பட்டு ளாசையெனும் பாசந் தன்னுள்
தலையாய்க் கடையாகும் வாழ்வி லாழ்ந்து
தளர்ந்துமிக நெஞ்சமே அஞ்ச வேண்டா
இலையார் புனக்கொன்றை யெறிநீர்த் திங்கள்
இருஞ்சடைமேல் வைத்துகந்தான் இமையோ ரேத்தும்
நிலையா னுறைநிறைநெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.
4

நெஞ்சமே! அலைகள் போல ஓயாது செயற்படும் வினைக் கூறுகளுக்குச் சார்பாகிய இவ்வுடம்பில் அகப்பட்டு, ஆசை என்னும் கயிற்றால் சுருக்கிடப்படுமாறு தலையைக் கொடுத்து, கீழான இந்த உலக வாழ்வில் முழுகி மிகத் தளர்ந்து, நீ அஞ்சுதல் வேண்டா. இலைகளிடையே தோன்றும் கொன்றைப் பூ, கங்கை, பிறை இவற்றைப் பெரிய சடையிலே வைத்து மகிழ்ந்தவனாய்த் தேவர்கள் போற்றும் மேம்பட்ட நிலையிலுள்ளவனாகிய சிவபெருமான் உகந்தருளியிருக்கும் நெய்த்தானம் நினையுமா நினைந்தக்கால் உய்யலாகும்.

**2507.** தினைத்தனையோர் பொறையிலாவுயிர்போங் கூட்டைப்
பொருளென்று மிகவுன்னி மதியா லிந்த
அனைத்துலகும் ஆளலா மென்று பேசும்
ஆங்காரந் தவிர்நெஞ்சே யமரர்க் காக
முனைத்துவரு மதில்மூன்றும் பொன்ற அன்று
முடுகியவெஞ் சிலைவளைத்துச் செந்தீ மூழ்க
நினைத்த பெருங் கருணையன்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 5

ஓர் (ஒன்று) – சிறிது. பொறை – பொறுத்தல், தாமதித்தல், நிலைபெறுத்தல். முனைத்து – முற்பட்டு. முடுகிய – விரைந்த

நெஞ்சே! உரிய காலம் முடிந்த பின் சிறிது நேரமும் தாமதிக்காமல் உயிர்விடுத்து நீங்கும் இவ்வுடம்பை மேம்பட்ட பொருளாகப் பெரிதும் கருதி நம் புத்தியினாலே இந்த உலகம் முழுதையும் நமக்கு அடிமைப்படுத்தலாம் என்று பேசும் தன்முனைப்பை நீக்கு. தேவர்களுக்காகப் பகைத்து வந்த மதில்கள் மூன்றும் அழியுமாறு முன்னொரு காலத்தில் விரைவாகத் தூக்கிய வில்லை வளைத்து அம்மதில்களைத் தீக்கு இரையாக்க நினைத்துச் செயற்பட்ட பெரிய கருணையை உடைய சிவபெருமான் உகந்தருளியிருக்கும் நெய்த்தானம் என்று நினையுமா நினைந்தக்கால் உய்யலாகும்.

**2508.** மிறைபடுமிவ் வுடல்வாழ்வை மெய்யென் றெண்ணி
வினையிலே கிடந்தழுந்தி வியவேல் நெஞ்சே
குறைவுடையார் மனத்துளான் குமரன் தாதை
**கூத்தாடுங்குணமுடையான்** கொலைவேற் கையான்
அறைகழலுந் திருவடிமேற் சிலம்பும் ஆர்ப்ப
**அவனிதலம் பெயரவரு நட்டம்** நின்ற
நிறைவுடையா னிடமாம்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 6

மிறைபடும் – துன்பமே விளைகின்ற
வியவேல் – மகிழாதே

நெஞ்சே! துன்பமே விளைக்கின்ற இந்த உடலில் வாழும் வாழ்வு நிலையானது என்று கருதி வினைப்பயனிலே கிடந்து ஈடுபட்டு மகிழாதே. தம்மைப் பற்றித் தாழ்வாகக் கருதுபவர் மனத்து இருப்பவனாய், முருகனுக்குத் தந்தையாய், கூத்தாடுதலைப் பண்பாக உடையவனாய், கொல்லும் முத்தலை வேல் ஏந்திய கையனாய்த் திருவடிகளில், கழலும், சிலம்பும் ஒலிக்க இவ்வுலகமே பெயருமாறு ஆடும் ஊழிக் காலத்தில் மனநிறைவுடையவனாகிய சிவபெருமானுடைய திருத்தலமாகிய நெய்த்தானம் என்று நினையுமா நினைந்தக்கால் உய்யலாம்.

2509. பேசப் பொருளலாப் பிறவி தன்னைப்
பெரிதென்றுன் சிறுமனத்தால் வேண்டி யீண்டு
வாசக் குழல்மடவார் போக மென்னும்
வலைப்பட்டு வீழாதே வருக நெஞ்சே
தூசக் கரியுரித்தான் தூநீ றாடித்
துதைந்திலங்கு நூல்மார்பன் தொடர கில்லா
நீசர்க் கரியவன்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.
7

தூசு – ஆடை; போர்வை. துதைந்து – நிறைந்து

நெஞ்சே! வருக. பேசுதற்கு ஏற்ற உயர்ந்த பொருள் அல்லாத இப்பிறவியைக் கிட்டுதற்கு அரிய பொருளாக உன் அற்பப் புத்தியில் கருதி நறுமணம் கமழும் கூந்தலையுடைய மகளிர் இன்பம் என்னும் வலையில் அகப்பட்டு அழியாமல், யானைத் தோலை உரித்துப் போர்த்துத் தூய திருநீறுப் பூசிப் பூணூல் அணிந்து, தன்னை அணுகாத கீழ்மக்களுக்கு அரியவனாயுள்ள சிவபெருமானுடைய நெய்த்தானம் என்று நினையுமா நினைந்தக்கால் உய்யலாம்.

2510. அஞ்சப் புலனிவற்றா லாட்ட வாட்டுண்
டருநோய்க் கிடமாய வுடலின் தன்மை
தஞ்ச மெனக்கருதித் தாழேல் நெஞ்சே
தாழக் கருதுதியே தன்னைச் சேரா
வஞ்ச மனத்தவர்கள் காண வொண்ணா
மணிகண்டன் வானவர்தம் பிரானென் றேத்தும்
நெஞ்சர்க் கினியவன்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.
8

தஞ்சம் – புகலிடம். தாழேல் – அழுந்தாதே

நெஞ்சே! ஐம்புலன்களால் நினைத்தவாறு செயற்படுத்தப்பட்டுக் கொடிய நோய்களுக்கு இருப்பிடமாகிய இவ்வுடலில் நிலையாமையை உனக்குப் புகலிடம் என்று கருதி ஐம்புல இன்பத்தில் ஆழ்ந்து போகாதே. தன்னைப் பற்றுக்கோடாக அடையாத வஞ்சமனத்தவர் காண முடியாத நீலகண்டனாய்த் தேவர்கள் தலைவன் என்று போற்றப்படும் மனத்துக்கினிய சிவபெருமானுடைய நெய்த்தானம் என்று நினையுமா நினைந்தக்கால் உய்யலாகும்.

2511. பொருந்தாத உடலகத்திற் புக்க ஆவி
போமா றறிந்தறிந்தே புலைவாழ் வுன்னி
இருந்தாங் கிடர்ப்படநீ வேண்டா நெஞ்சே
யிமையவர்தம் பெருமானன் றுமையா ளஞ்சக்
கருந்தாள் மதகரியை வெருவச் சீறுங்
கண்ணுதல்கண் டமராடிக் கருதார் வேள்வி
நிரந்தரமா இனிதுறைநெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.
9

புலை – கீழ்மை. தாள் – முயற்சி; வலிமை.
கருதார் – பகைவர்

நெஞ்சே! தகுதியற்ற இவ்வுடலில் வினைவயத்தால் புகுந்த உயிர் இதனை எந்த நேரத்திலும் விடுத்து நீங்கிவிடும் என்பதனை அறிந்தும் கீழான ஐம்புல நுகர்ச்சி வாழ்வினையே கருதிக் கொண்டிருந்து துயர்ப்படல் வேண்டா. தேவர்கள் தலைவனாய், ஒருகாலத்தில் பார்வதி அஞ்சுமாறு, கரிய அடிகளை உடைய மதயானை அஞ்ச அதனை வெகுண்டவனாய், நெற்றிக் கண்ணனாய், தன்னைப் பரம்பொருளாகக் கருதாதவர் கூடி நிகழ்த்திய வேள்வியைப் போரிட்டு அழித்தவனாய், நிலையாக உகந்தருளியிருக்கும் நெய்த்தானம் என்று நினையுமா நினைந்தக்கால் உய்யலாம்.

2512. உரித்தன் றுனக்கிவ் வுடலின் தன்மை
உண்மை யுரைத்தேன் விரத மெல்லாந்
தரித்துந் தவமுயன்றும் வாழா நெஞ்சே
தம்மிடையி லில்லார்க்கொன் றல்லார்க்
கன்னன்
எரித்தான் அனலுடையான் எண்டோ ளானே
யெம்பெருமா னென்றேத்தா இலங்கைக்
கோனை
நெரித்தானை நெய்த்தானம் மேவி னானை
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.
10

"இவ்வுடலின் தன்மை உனக்கு உரித்தன்று" – ஆன்ம தரிசனம் செய்யப்பட்டது.

விரதங்களை எல்லாம் மேற்கொண்டு தவ வாழ்வு வாழ முயன்று வாழாத நெஞ்சே! நிலையாமையை உடைய இவ்வுடல் என்றும் உள்ள உயிரைப்பற்ற வேண்டிய உனக்கு உரிய பொருள் அன்று. உண்மையை உனக்குக் கூறிவிட்டேன். தம்மிடத்துப் பொருளில்லாத வறியவர்களுக்கு ஒன்றும் ஈயாதவர்களுக்குத் தானும் எதுவும் ஈயாதவனாய்த் திரிபுரங்களை எரித்தவனாய்க் கையில் தீயை உடையவனாய் எட்டுத் தோள்களை உடைய எம்பெருமானே என்று தன்னைத் துதிக்காத இலங்கை மன்னனான இராவணனை நெரித்த, நெய்த்தானம் என்ற திருத்தலத்தை உகந்தருளி உறைகின்ற பெருமானை நினையுமா நினைந்தக்கால் உய்யலாம்.

## 43. திருப்பூந்துருத்தி

ப.தொ.எண் : 256 பதிக எண் : 43

2513. நில்லாத நீர்சடைமேல் நிற்பித் தானை
நினையாவென் நெஞ்சை நினைவித்
தானைக்
**கல்லா தன**வெல்லாங் கற்பித் தானைக்
**காணா தன**வெல்லாங் காட்டி னானைச்
**சொல்லா தன**வெல்லாஞ் சொல்லி யென்னைத்
தொடர்ந்திங் கடியேனை யாளாக் கொண்டு
பொல்லாவென் நோய்தீர்த்த புநிதன் தன்னைப்
புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன்
நானே. 1

கங்கையைச் சடையில் இருத்தி, அவனை நினையாத என் மனத்தை அவனை நினைக்கச் செய்து, அரும் பேருண்மைகளை எல்லாம் சொல்லி, என்னைத் தொடர்ந்து, என்னை அடிமையாகக் கொண்டு, கொடிய சூலை நோயைத் தீர்த்து எனக்குக் காணாதன எல்லாம் காட்டிய தூயோனாகிய புண்ணியனைப் பூந்துருத்தியில் யான் கண்டேன்.

காணாதன – எங்கும் யாரும் கண்டறியாதன. அவை, வெய்ய நீற்றறையதும், தான் ஐயர் திருவடிநீழல் அருளாகிக் குளிர்ந்ததும், வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர் தந்த நஞ்சு அமுதாயதும், பொங்கு கடற் கல்மிதந்ததும் போல்வன. சொல்லாதன – மறை பொருள்கள். அவை, 'நமச்சிவாயவே ஞானமுங் கல்வியும்' என்றற் றொடக்கத்து அரும் பேருண்மைகள். 'என்னை' என்பதனை, 'எனக்கு எனத் திரிந்து, 'எனக்குச் சொல்லி' என மாறிக் கூட்டுக. சொல்லி – தமக்கையார் வாயிலாகத் தெரிவித்து, தொடர்ந்து – இடையறாது அருள் பண்ணி, 'என் பொல்லாநோய்' என இயையும், அது, 'கொல்லாது குடர் முடக்கி நின்ற சூலைநோய்' என்பது வெளிப்படை. 'பூந்துருத்தி கண்டேன்' என்பதும் பாடம்.

**2514.** குற்றாலங் கோகரணம் மேவி னானைக்
கொடுங்கைக் கடுங்கூற்றைப் பாய்ந்தான் தன்னை
உற்றால நஞ்சுண் டொடுக்கி னானை
யுணராவென் நெஞ்சை யுணர்வித் தானைப்
பற்றாலின் கீழங் கிருந்தான் தன்னைப்
பண்ணார்ந்த வீணை பயின்றான் தன்னைப்
புற்றா டரவார்த்த புனிதன் தன்னைப்
புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 2

கை – செய்கை. உற்று – மனம் (பொருந்தி)

குற்றாலம், கோகரணம் இவற்றை விரும்பி உறைந்து, கொடிய செயலை உடைய கடியவனாகிய கூற்றுவனை ஒறுத்து, ஆலகால விடத்தை உண்டு கழுத்தில் இருத்தி, உணராத என் நெஞ்சத்தில் அரும் பேருண்மைகளை உணர்வித்து, கல்லால மரத்தின் கீழ் அதனைச் சார்பாகக் கொண்டிருந்து, பண் நிறைந்த வீணையை வாசித்து, புற்றிலிருக்கும் படம் எடுத்தாடும் பாம்பினை இறுக அணிந்த தூயோனாகிய புண்ணியனை நான் பூந்துருத்தியில் கண்டேன்.

**2515.** எனக்கென்றும் இனியானை யெம்மான் தன்னை
யெழிலாரும் ஏகம்பம் மேயான் தன்னை
மனக்கென்றும் வருவானை வஞ்சர் நெஞ்சில்
நில்லானை நின்றியூர் மேயான் தன்னைத்
தனக்கென்றும் அடியேனை யாளாக் கொண்ட
சங்கரனைச் சங்கவார் குழையான் தன்னைப்
புனக்கொன்றைத் தாரணிந்த புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 3

புனம் – முல்லை நிலம்

ஏகம்பம், நின்றியூர் இவற்றில் தங்குபவனாய், எனக்கு என்றும் இனிய எம் தலைவனாய், மனத்தில் என்றும் இருப்பவனாய், வஞ்சகர் நெஞ்சில் நில்லாதவனாய், என்னைத் தனக்கு என்றும் ஆளாகக் கொண்டு நன்மை செய்கின்றவனாய், சங்கினால் ஆகிய நீண்ட காதணியை உடையவனாய் மேட்டு நிலத்தில் வளரும் கொன்றைப் பூமாலை அணிந்து தூயோனாகிய, பாசம் இல்லாதவனை, யான் பூந்துருத்தியில் கண்டேன்.

**2516.** வெறியார் மலர்க்கொன்றை சூடி னானை
வெள்ளானை வந்திறைஞ்சும் வெண்காட் டானை
அறியா தடியே னகப்பட் டேனை
அல்லற்கடல் நின்று மேற வாங்கி
நெறிதா னிதுவென்று காட்டி னானை
நிச்சல் நலிபிணிகள் தீர்ப்பான் தன்னைப்
பொறியா டரவார்த்த புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 4

வெறி – வாசனை. நிச்சல் – நித்தல். பொறி–புள்ளி

மணம் கமழும் கொன்றைப் பூச் சூடி, ஐராவதம் வழிபட்ட வெண்காட்டில் உறைவானாய், அறியாத புறச்சமயத்தில் அகப்பட்ட என்னை அத்துயரக்கடலில் மூழ்காதபடி தூக்கி எடுத்து, இது தான் நேரிய வழி என்று காட்டி, நாடோறும் என்னை வருத்தும் பிணிகளைத் தீர்த்து, புள்ளிகளை உடைய ஆடும் பாம்பினை இறுகக் கட்டிய தூயோனாகிய பாசம் அற்றவனை நான் பூந்துருத்தியில் கண்டேன்.

2517. மிக்கானை வெண்ணீறு சண்ணித் தானை
விண்டார் புரமூன்றும் வேவ நோக்கி
நக்கானை நான்மறைகள் பாடி னானை
நல்லார்கள் பேணிப் பரவ நின்ற
தக்கானைத் தண்டா மரைமே லண்ணல்
தலைகொண்டு மாத்திரைக்கண் உலக
மெல்லாம்
புக்கானைப் புண்ணியனைப் புநிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன்
நானே. 5

சண்ணித்தான் – பூசினான்
மாத்திரைக்கண் – நொடி நேரத்தில்

எல்லாரினும் மேம்பட்டவனாய், வெண்ணீறு பூசி, பகைவரின் மும்மதில்களையும் அழித்து, அவற்றின் அழிவுகண்டு சிரித்து, நான்கு வேதங்களையும் ஓதித் தக்கோர்களால் விரும்பி முன்னின்று துதிக்கப்படுபவனாய், பிரமன் மண்டை ஓட்டைச் சுமந்து ஒரு கண நேரத்தில் உலகமெல்லாம் சுற்றித் திரியும் புண்ணியனாய்த் தூயனாய்ப் பாசம் அற்றவனாயுள்ள எம்பெருமானைப் பூந்துருத்தியில் யான் கண்டேன்.

2518. ஆர்த்தானை வாசுகியை அரைக்கோர் கச்சா
அசைத்தானை அழகாய பொன்னார் மேனிப்
பூத்தானத் தான் முடியைப் பொருந்தா வண்ணம்
புணர்ந்தானைப் பூங்கணையா னுடலம்
வேவப்
பார்த்தானைப் பரிந்தானைப் பனிநீர்க் கங்கை
படர்சடைமேற் பயின்றானைப் பதைப்ப
யானை
போர்த்தானைப் புண்ணியனைப் புநிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன்
நானே. 6

ஆர்த்தான் – கட்டினான்
அசைத்தான் – ஆட்டினான்
பூத்தானத்தான் – பூவை உறைவிடமாகக் கொண்டவன்
பரிந்தான் – அருள்கூர்ந்தான்

வாசுகி என்ற பாம்பினையே வில்லுக்கு நாணாகக் கட்டியும், இடையிலே கச்சாக அணிந்தும் இருப்பவனாய், பொன் போன்ற உடம்பும் தாமரையாகிய இருப்பிடமும் உடைய பிரமனுடைய தலை ஒன்றனை அவன் உடலில் பொருந்தாதபடி நீக்கியவனாய், மன்மதன் உடல் சாம்பலாகுமாறு நெற்றிக்கண்ணால் நோக்கியவனாய்ப் பின் அவனிடம் அருள் கூர்ந்தவனாய், கங்கையைச் சடைமீது தரித்தவனாய், யானை நடுங்க அதன் தோலை உரித்துப் போர்த்தவனாய்ப் புண்ணியனாய்த் தூயோனாய்ப் பாசம் அற்றவனாய் உள்ள பெருமானைப் பூந்துருத்தியில் நான் கண்டேன்.

2519. எரித்தானை எண்ணார் புரங்கள் மூன்றும்
இமைப்பளவிற் பொடியாக எழிலார் கையால்
உரித்தானை மதகரியை யுற்றுப் பற்றி
யுமையதனைக் கண்டஞ்சி நடுங்கக் கண்டு
சிரித்தானைச் சீரார்ந்த பூதஞ் சூழத்
திருச்சடைமேல் திங்களும் பாம்பும் நீரும்
புரித்தானைப் புண்ணியனைப் புநிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன்
நானே. 7

பொடியாக எரித்தானை எனவும்
கையாற் பற்றி உரித்தானை எனவும் படிக்கவும்

பகைவர் முப்புரங்களையும் இமைகொட்டும் நேரத்திற்குள் பொடியாகுமாறு எரித்து, மத யானையைப் பற்றித் தன் அழகிய கைகளால் தோலை உரித்து, உமாதேவி அது கண்டு அஞ்ச, அவள் அச்சத்தைப் பார்த்து, சிரித்துச் சடையில் பிறையும் பாம்பும் கங்கையும் சூடிப் பூதகணங்கள் சூழ இருக்கும் புண்ணியனாய்த் தூயோனாய்ப் பாசம் இல்லாதவனான பெருமானை யான் பூந்துருத்தியில் கண்டேன்.

2520. வைத்தானை வானோ ருலக மெல்லாம்
வந்திறைஞ்சி மலர்கொண்டு நின்று போற்றும்
வித்தானை வேண்டிற்றொன் றீவான் தன்னை
விண்ணவர்தம் பெருமானை வினைகள் போக
உய்த்தானை யொலிகங்கை சடைமேற் றாங்கி
யொளித்தானை யொருபாகத் துமையோ டாங்கே
பொய்த்தானைப் புண்ணியனைப் புநிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 8

வித்தான் – காரணன். உய்த்தான் – ஓட்டினான்

வானோர் உலகமெல்லாம் படைத்தவனாய், அத்தேவர்கள் வந்து வணங்கி மலர் கொண்டு நின்று துதிக்கும் உலக காரணனாய், அடியவர்கள் விரும்பியதை அளிப்பவனாய், இந்திரனுக்கு ஏற்பட்ட சாபத்தைப் போக்கியவனாய், கங்கையைச் சடையில் மறைத்துப் பாதி உருவாய் உள்ள பார்வதிக்குப் புலப்படாதவாறு செய்தவனாய்ப் புண்ணியனாய்த் தூயோனாயுள்ள பாசமற்றவனை நான் பூந்துருத்தியில் கண்டேன்.

2521. ஆண்டானை வானோ ருலக மெல்லாம்
அந்நா ளறியாத தக்கன் வேள்வி
மீண்டானை விண்ணவர்க ளோடுங் கூடி
விரைமலர்மேல் நான்முகனும் மாலுந் தேட
நீண்டானை நெருப்புருவ மானான் தன்னை
நிலையிலார் மும்மதிலும் வேவ வில்லைப்
பூண்டானைப் புண்ணியனைப் புநிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 9

பதிக மகுடம் : புநிதன் தன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே.

தேவருலகமெல்லாம் ஆண்டவனாய், ஒரு காலத்தில் தக்கன் வேள்வியில் தொடர்பு கொண்டு தன்னால் தண்டிக்கப்பட்ட தேவர்களோடும் திரும்பியவனாய், தாமரையில் உள்ள பிரமனும் திருமாலும் தேடுமாறு தீப்பிழம்பாய் நின்றவனாய், பகைவருடைய மும்மதிலும் தீப்பற்றி அழியுமாறு வில்லைப் பூண்டவனாய்ப் புண்ணியனாய்த் தூயோனாய் உள்ள பாசம் அற்றவனைப் பூந்துருத்தியில் யான் கண்டேன்.

2522. மறுத்தானை மலைகோத்தங் கெடுத்தான் தன்னை
மணிமுடியோ டிருபதுதோள் நெரியக் காலால்
இறுத்தானை யெழுநரம்பி னிசைகேட் டானை
யெண்டிசைக்கும் கண்ணானான் சிரமே லொன்றை
அறுத்தானை யமரர்களுக் கமுதீந் தானை
யாவர்க்குந் தாங்கொணா நஞ்ச முண்டு
பொறுத்தானைப் புண்ணியனைப் புநிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 10

நந்தி பெருமான் அறிவுரையை அலட்சியம் செய்து தன் கைகளைக் கோத்துக் கயிலை மலையை எடுத்த இராவணனைப் பத்துத் தலைகளும் இருபது தோள்களும் நெரியுமாறு காலால் அமுத்தியவனாய்ப்பின் அவன் பாடிய ஏழுநரம்பின் ஓசையைக் கேட்டு அவனுக்கு அருள் செய்தவனாய், எட்டுக் கண்களை உடைய பிரமனின் மேல்தலையாகிய ஐந்தாம் தலையை அறுத்தவனாய்த் தேவர்களுக்கு அமுதம் ஈந்தவனாய், எவராலும் பொறுக்க முடியாத விடத்தை உண்டு அதனைக் கழுத்தில் இருத்தியவனாய்ப் புண்ணியனாய்த் தூயோனாய்ப் பாசம் அற்றவனாய் உள்ள பெருமானைப் பூந்துருத்தியில் நான் கண்டேன்.

## 44. திருச்சோற்றுத்துறை

ப.தொ.எண் : 257

பதிக எண் : 44

2523. மூத்தவனாய் உலகுக்கு முந்தி னானே
முறைமையால் எல்லாம் படைக்கின் றானே
ஏத்தவனாய் ஏழுலகு மாயி னானே
இன்பனாய்த் துன்பங் களைகின் றானே
காத்தவனாய் எல்லாந்தான் காண்கின் றானே
கடுவினையேன் தீவினையைக் கண்டு போகத்
தீர்த்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 1

காலத்தால் எல்லாருக்கும் முற்பட்டவனே! வினைக்கீடாக எல்லா உலகையும் படைக்கின்றவனே! ஏழுலகும் தாங்குகின்றவனே! இன்பம் தருபவனாய்த் துன்பங்களைப் போக்குகின்றவனே! முன்னே காத்தமை போல எப்பொழுதும் எல்லோரையும் காக்கின்றவனே! தீவினையை உடைய அடியேனுடைய தீவினையை நீக்கியவனே! திருச்சோற்றுத்துறையிலுள்ள விளங்கும் ஒளியை உடைய சிவனே! அடியேன் உன் அடைக்கலம்.

மூத்தவன் – காலத்தால் எல்லார்க்கும் முன்னர் உள்ளவன். முறைமையால் – ஊழின்படி 'ஏந்து' என்பது வலிந்து நின்றது. ஏந்து அவன் – எல்லாவற்றையும் தாங்குகின்றவன்.

அபயம் – பயமின்மை

திகழ்ஒளி – ஒளிகளெல்லாம் திகழக் காரணமான ஒளி.

2524. தலையவனாய் உலகுக்கோர் தன்மை யானே
தத்துவனாய்ச் சார்ந்தார்க்கின் னமுதா னானே
நிலையவனாய் நின்னொப்பா ரில்லா தானே
நின்றுணராக் கூற்றத்தைச் சீறிப் பாய்ந்த
கொலையவனே கொல்யானைத் தோல்மே லிட்ட
கூற்றுவனே கொடிமதில்கள் மூன்று மெய்த
சிலையவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 2

உலகத் தலைவனே! தத்துவனே! அடியார்க்கு அமுதே! நிலைபேறுடையவனே! ஒப்பற்றவனே! அறிவில்லாத கூற்றுவனை வெகுண்டு உதைத்துத் தண்டித்தவனே! யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்திய கஜசம்கார மூர்த்தியே! கொடிகள் உயர்த்தப்பட்ட மும்மதில்களையும் அழித்த வில்லை உடையவனே! திருச்சோற்றுத்துறையில் உறையும் திகழ் ஒளியாம் சிவனே! அடியேன் உன் அடைக்கலம்.

தத்துவன் – முதல் பொருளானவன்.

நிலையவன் – அழிவில்லாதவன்.

**2525.** முற்றாத பான்மதியஞ் சூடி னானே
முளைத்தெழுந்த கற்பகத்தின் கொழுந்தொப் பானே
உற்றாரென் றொருவரையு மில்லா தானே
உலகோம்பும் ஒண்சுடரே யோதும் வேதங்
கற்றானே யெல்லாக் கலைஞா னமுங்
கல்லாதேன் தீவினைநோய் கண்டு போகச்
செற்றானே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே.

3

வெள்ளிய பிறை மதி சூடியே! முளைத்து வெளிப்பட்ட கற்பகத் தளிர் ஒப்பவனே! தனக்கென வேண்டியவர் யாரும் இல்லாதானே! உலகைப் பாதுகாக்கும் சுடரே! எல்லாக் கலைஞானமும் ஓதாதுணர்ந்து வேதம் ஓதுபவனே! ஒன்றும் கல்லாத அடியேனுடைய தீவினையும் அதனால் விளையும் நோயும் நீங்குமாறு அவற்றை அழித்தவனே! திருச்சோற்றுத் துறையுள் உறையும் திகழ் ஒளியாம் சிவனே! அடியேன் உன் அடைக்கலம்.

**2526.** கண்ணவனாய் உலகெல்லாங் காக்கின் றானே
காலங்க ளூழிகண் டிருக்கின் றானே
விண்ணவனாய் விண்ணவர்க்கும் அருள்செய் வானே
வேதனாய் வேதம் விரித்திட் டானே
எண்ணவனா யெண்ணார் புரங்கள் மூன்றும்
இமையாமுன் எரிகொளுவ நோக்கி நக்க
திண்ணவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே.

4

விரித்திட்டான் – செய்திட்டான். சுவாமி வேதம் ஓதுகிறார் என்றால் அது மற்றவர்களை ஓதுவித்தற் பொருட்டாகும். எண் அவன் – எல்லாவற்றையும் நினைவு மாத்திரையால் செய்யும் அத்தன்மையன். எண்ணார் – மதியாதவர். திண்ணவன் – வலியவன்.

பற்றுக்கோடாய் இருந்து உலகைக் காப்பவனே! பல ஊழிகளையும் கண்ட, காலம் கடந்த பெருமானே! தேவனாய்த் தேவர்களுக்கும் மற்றை உயிர்களுக்கும் அருள் செய்பவனே! வேத வடிவினனாய் வேதக் கருத்தை விரித்து உரைத்தவனே! எங்கள் உள்ளத்தில் இருப்பவனாய்ப் பகைவருடைய மும்மதிலும் இமைகொட்டும் நேரத்தில் தீக்கு இரையாகுமாறு அவற்றைக் கண்டு சிரித்த உறுதியுடையவனே! திருச்சோற்றுத்துறையில் உறையும் திகழ் ஒளியாம் சிவனே! யான் உன் அடைக்கலம்.

**2527.** நம்பனே நான்மறைக ளாயி னானே
நடமாட வல்லானே ஞானக் கூத்தா
கம்பனே கச்சிமா நகரு ளானே
கடிமதில்கள் மூன்றினையும் பொடியா எய்த
அம்பனே அளவிலாப் பெருமை யானே
அடியார்கட் காரமுதே ஆனே றேறுஞ்
செம்பொனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே.

5

பதிக மகுடம் – திருச்சோற்றுத்துறையுளானே.
திகழொளியே சிவனே யுன்னபயம் நானே.

எல்லோராலும் விரும்பப்படுபவனே! நால் வேத வடிவினனே! கூத்தாடவல்ல ஞானக் கூத்தனே! கச்சி ஏகம்பனே! காவலை உடைய மும்மதில்களும் பொடியாகுமாறு செலுத்திய அம்பினை உடையவனே! எல்லையற்ற பெருமை உடையவனே! அடியவர்களுக்குக் கிட்டுதற்கரிய அமுதமானவனே! காளையை இவரும் பொன்னார் மேனியனே! திருச்சோற்றுத்துறை உறையும் திகழ் ஒளியாம் சிவனே! அடியேன் உன் அடைக்கலம்.

2528. ஆர்ந்தவனே யுலகெலாம் நீயே யாகி
யமைந்தவனே யளவிலாப் பெருமை யானே
கூர்ந்தவனே குற்றாலம் மேய கூத்தா
கொடுமூ விலையதோர் சூல மேந்திப்
பேர்ந்தவனே பிரளயங்க ளெல்லா மாய
பெம்மானென் றெப்போதும் பேசும் நெஞ்சிற்
சேர்ந்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே.

6

ஆர்த்தவன் – பொருந்தினவன். கூர்ந்தவன் – உயிர்களிடத்து அருள் மிகுந்தவன்.
பேர்ந்தவன் – உலாவியவன். பிரளயம் – ஒடுக்கம்.

உலகமெல்லாம் சர்வ வியாபமாக நீயேயாகிப் பொருந்திக் குறையாதுமின்றி நிரம்பி யிருப்பவனே! எல்லையற்ற பெருமை உடையவனே! உயிர்களிடத்து அருள் மிகுந்தவனே! குற்றாலத்தை விரும்பிய கூத்தனே! முத்தலைச் சூலம் ஏந்தி ஊழி வெள்ளங்கள் எல்லாம் மறையுமாறு உலாவுபவனே! உன்னைப் பெருமான் என்று நினைக்கும் உள்ளங்களில் சேர்ந்தவனே! திருச்சோற்றுத்துறையில் உள்ள திகழ் ஒளியாம் சிவனே! அடியேன் உன் அடைக்கலம்.

2529. வானவனாய் வண்மை மனத்தி னானே
மாமணிசேர் வானோர் பெருமான் நீயே
கானவனாய் ஏனத்தின் பின்சென் றானே
கடிய அரணங்கள் மூன்றட் டானே
தானவனாய்த் தண்கயிலை மேவி னானே
தன்னொப்பா ரில்லாத மங்கைக் கென்றுந்
தேனவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே.

7

தானவன் – எவற்றையும் கொடுப்பவன்.

தேவனாய் வரம் கொடுக்கும் உள்ளத்தானே! சிந்தாமணியை உடைய தேவர்கள் பெருமானே! வேடனாய்ப் பன்றிப் பின் சென்றவனே! கொடிய மும்மதில்களை அழித்தவனே! குளிர்ந்த கயிலாயத்தை உறைவிடமாக விரும்பி உறைபவனே! தன்னை ஒப்பார் பிறர் இல்லாத பார்வதிக்கு இனியனே! திருச்சோற்றுத் துறையுள் திகழ் ஒளியாய் விளங்கும் சிவனே! அடியேன் உன் அடைக்கலம்.

2530. தன்னவனாய் உலகெல்லாந் தானே யாகித்
தத்துவனாய்ச் சார்ந்தார்க்கின் னமுதா
னானே
என்னவனா யென்னிதயம் மேவி னானே
யீசனே பாச வினைகள் தீர்க்கும்
மன்னவனே மலைமங்கை பாக மாக
வைத்தவனே வானோர் வணங்கும்
பொன்னித்
தென்னவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே.

8

சுதந்திரனாய், எல்லா உலகங்களும் தானே ஆனவனாய், மெய்ப்பொருளாய், அடியார்க்கு அமுதமாய் என்னை அடிமை கொண்டவனாய், என் உள்ளத்தில் விரும்பி உறைபவனாய், எல்லோரையும் அடக்கி ஆள்பவனாய், பாச வினைகளைப் போக்கும் தலைவனாய்ப் பார்வதி பாகனாய்த் தேவர்கள் வணங்கும் காவிரியின் தென்கரையிலுள்ள திருச்சோற்றுத்துறையுள் திகழ் ஒளியாய் விளங்கும் சிவனே! அடியேன் உன் அடைக்கலம்.

2531. எறிந்தானே எண்டிசைக்குங் கண்ணா னானே
ஏழுலக மெல்லாமுன் னாய்நின் றானே
அறிந்தார்தாம் ஓரிருவ ரறியா வண்ணம்
ஆதியும் அந்தமு மாகி யங்கே
பிறிந்தானே பிறரொருவ ரறியா வண்ணம்
பெம்மானென் றெப்போதும் ஏத்து நெஞ்சிற்
செறிந்தானே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே.
9

எறிந்தான் – அழித்தான்

எட்டுத் திசைகளுக்கும் கண்ணாகி உலகங்களைக் காப்பவனாய், முன் ஏழ் உலகங்களையும் படைக்கும் முதற் பொருளாய் நின்று, பின் அவற்றை அழித்தவனே! பிரமனும் திருமாலும் அறியாவண்ணம் ஆதியும் முடிவும் ஆகி அவர்களிலிருந்து வேறுபட்டவனே! தன்னைத் தலைவன் என்று துதிப்பவர்கள் மனத்தில் மற்றவர் அறியாதபடி பொருந்தியிருப்பவனே! திருச்சோற்றுத் துறையில் உறையும் திகழ் ஒளியாம் சிவனே! அடியேன் உன் அடைக்கலம்.

2532. மையனைய கண்டத்தாய் மாலும் மற்றை
வானவரும் அறியாத வண்ணச் சூலக்
கையவனே கடியிலங்கைக் கோனை யன்று
கால்விரலாற் கதிர்முடியுந் தோளுஞ் செற்ற
மெய்யவனே யடியார்கள் வேண்டிற் றீயும்
விண்ணவனே விண்ணப்பங் கேட்டு நல்குஞ்
செய்யவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே.
10

நீலகண்டனே! திருமாலும் மற்றைத் தேவரும் அறியாத சூலபாணியே! இராவணனுடைய ஒளி வீசும் தலைகளையும் தோள்களையும் கால் விரலால் நசுக்கிய மெய்ப்பொருளே! அடியவர்கள் விரும்பியவற்றை அருளும் தேவனே! உயிரினங்களின் வேண்டுகோளைக் கேட்டு அவர்களுக்கு அருளும் நடுநிலையாளனே! திருச்சோற்றுத்துறையில் உறையும் திகழ் ஒளியாம் சிவனே! அடியேன் உன் அடைக்கலம்.

## 45. திருவொற்றியூர்

ப.தொ.எண் : 258 பதிக எண் : 45

2533. வண்டோங்கு செங்கமலங் கழுநீர் மல்கும்
மதமத்தஞ் சேர்சடைமேல் மதியஞ் சூடித்
திண்டோள்கள் ஆயிரமும் வீசி நின்று
திசைசேர நடமாடிச் சிவலோ கனார்
உண்டார்நஞ் சுலகுக்கோ ருறுதி வேண்டி
ஒற்றியூர் மேய வொளிவண் ணனார்
கண்டேன்நான் கனவகத்திற் கண்டேற் கென்றன்
கடும்பிணியுஞ் சுடுந்தொழிலுங் கைவிட்
டவே. 1

ஓங்கு – உயரப் பறக்கும். மல்கும் – நிறைந்த

சிவலோகநாதராய ஒற்றியூரில் விரும்பி உறையும் சோதிவடிவினர். வண்டுகள் மொய்க்கும் செந்தாமரை, கழுநீர், ஊமத்தை இவற்றை அணிந்த சடை மீது பிறை சூடி, ஆயிரம் தோள்களையும் எட்டுத் திசைகளின் எல்லைகளையும் அவை அடையுமாறு வீசிக்கொண்டு, கூத்தாடி, உலகுக்கு நலன் பயப்பதற்காக விடத்தை உண்டவர். அவரை அடியேன் கனவில் கண்டேனாக, அவ்வளவில் என் கடிய நோயும் அவை செய்த செயல்களும் நீங்கி விட்டன.

**2534.** ஆகத்தோர் பாம்பசைத்து வெள்ளே றேறி
அணிகங்கை செஞ்சடைமே லார்க்கச் சூடிய
பாகத்தோர் பெண்ணுடையார் ஆணு மாவர்
பசுவேறி யுழிதருமெம் பரம யோகி
காமத்தால் ஐங்கணையான் தன்னை வீழக்
கனலா எரிவிழித்த கண்மூன் றினார்
ஓமத்தால் நான்மறைகள் ஓதல் ஓவா
ஒளிதிகழ் ஒற்றியூ ருறைகின் றாரே. 2

ஆகம் – மார்பு. ஆர்க்க – ஒலிக்க

மார்பில் பாம்பு சூடி, வெண்ணிறக் காளையை இவர்ந்து, கங்கையைச் சடையில் ஆரவாரிக்குமாறு சூடிப் பார்வதி பாகராய், ஆண்மைத் தொழிலராய், அக்காளையை இவர்ந்தே உலகங்களைச் சுற்றி உலவும் மேம்பட்ட யோகியாய், காமவேட்கையில் பழகுகின்ற ஐந்து மலரம்புகளை உடைய மன்மதன் சாம்பலாகி விழுமாறு வெகுண்டு மூன்றாம் கண்ணைத் தீப் புறப்பட விழித்த பெருமான், வேள்விகளோடு நான்கு வேதம் ஓதுதலும் நீங்காத ஞான ஒளி விளங்கும் ஒற்றியூரில் உகந்தருளியிருக்கின்றார்.

**2535.** வெள்ளத்தைச் செஞ்சடைமேல் விரும்பி வைத்தீர்
வெண்மதியும் பாம்பு முடனே வைத்தீர்
கள்ளத்தை மனத்தகத்தே கரந்து வைத்தீர்
கண்டார்க்குப் பொல்லாது கண்டீர் எல்லே
கொள்ளத்தான் இசைபாடிப் பலியுங் கொள்ளீர்
கோளரவுங் குளிர்மதியுங் கொடியுங் காட்டி
உள்ளத்தை நீர்கொண்டீர் ஓதல் ஓவா
ஒளிதிகழ் ஒற்றியூ ருடைய கோவே. 3

ஓதல் – கடலோசை

வேதம் ஓதுதல் நீங்காத ஞான ஒளி திகழும் ஒற்றியூரை உடைய தலைவரே, நீர் விரும்பிக் கங்கையைச் சடையில் சூடி, அதன்கண் பிறையையும் பாம்பையும் உடன் வைத்து, காதல் உணர்வாகிய வஞ்சனையை மனத்தில் மறைத்து வைத்திருப்பது காண்பவர்களுக்குப் பெரியதொரு தீங்காய்த் தோன்றுவதாகும். பகற்பொழுதில் பிச்சை வாங்க வருபவரைப் போல இசையைப் பாடிக் கொண்டு வந்து, பிச்சையையும் ஏலாது, உம்முடைய பாம்பு, பிறை, காளை எழுதிய கொடி இவற்றைக் காணச் செய்து, எம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டீர். இதனைச் சற்று நினைத்துப் பார்ப்பீராக.

**2536.** நரையார்ந்த விடையேறி நீறு பூசி
நாகங்கச் சரைக்கார்த்தோர் தலைகை
யேந்தி
உரையாவந் தில்புகுந்து பலிதான் வேண்ட
எம்மடிக ளும்மூர்தான் ஏதோ என்ன
விரையாதே கேட்டியேல் வேற்கண் நல்லாய்
விடுங்கலங்கள் நெடுங்கடலுள்நின்று
தோன்றுந்
திரைமோதக் கரையேறிச் சங்க மூருந்
திருவொற்றி யூரென்றார் தீய வாறே. 4

நரை – வெண்மை. உரையா – சொல்லாமல்
விரையாது – பதையாமல்

வெள்ளை நிறக் காளையை இவர்ந்து, நீறுபூசி, இடுப்பில் பாம்பைக் கச்சாக உடுத்தி, மண்டை ஓட்டைக் கையில் ஏந்தி, ஏதும் பேசாது, எம் இல்லத்தினுள் வந்து பிச்சை வேண்ட, 'எம் வணக்கத்திற்கு உரியவரே! உம் ஊர் யாது?' என்று யான் வினவ 'வேல் போன்ற கண்களை உடைய பெண்ணே! அவசரப்படாமல் கேள். கடலில் மரக்கலங்கள் காணப்படுவதும், திரைகள் தள்ளுவதனால் சங்குகள் கரையை அடைந்து தவழ்வதுமாகிய திருஒற்றியூர்' என்றார். ஒற்றியூரே ஒழியச் சொந்த ஊர் ஒன்று இல்லாமையால் அவரை எங்குச் சென்று மீண்டும் காணஇயலும்! என்ற எண்ணத்தால் அவருக்கு என ஒரு சொந்த ஊர் இல்லாதது என் தீவினையே என்றாள்.

**2537.** மத்தமா களியானை யுரிவை போர்த்து
வானகத்தார் தானகத்தா ராகி நின்று
பித்தர்தாம் போலங்கோர் பெருமை பேசிப்
பேதையரை யச்சுறுத்திப் பெயரக் கண்டு
பத்தர்கள்தாம் பலருடனே கூடிப் பாடிப்
பயின்றிருக்கு மூரேதோ பணீயீ ரென்ன
ஒத்தமைந்த உத்திரநாள் தீர்த்த மாக
ஒளிதிகழும் ஒற்றியூ ரென்கின் றாரே. 5

மதயானைத் தோலைப் போர்த்தித் தேவருலகில் இருக்க வேண்டிய அவர், எம் வீட்டிற்குள் வந்து பைத்தியம் பிடித்தவரைப் போலத் தாமே தம் பெருமையைப் பேசிக்கொண்டு, பெண்களைப் பயமுறுத்திவிட்டு வெளியே வரக்கண்டு, பத்தர்கள் பலரும் அவரை அணுகி 'நீங்கள் பாடிக்கொண்டே தங்கியிருக்கும் ஊர் யாது ?' என்று வினவப் பங்குனி உத்திரத்தில் தீர்த்த விழாக் கொண்டாடும் ஒளி திகழும் ஒற்றியூர் என்றார்.

**2538.** கடிய விடையேறிக் காள கண்டர்
கலையோடு மழுவாளோர் கையி லேந்தி
இடிய பலிகொள்ளார் போவா ரல்லர்
எல்லாந்தா னிவ்வடிகள் யாரென் பாரே
வடிவுடைய மங்கையுந் தாமு மெல்லாம்
வருவாரை யெதிர்கண்டோம் மயிலாப் புள்ளே
செடிபடுவெண் டலையொன் றேந்தி வந்து
திருவொற்றி யூரென்றார் தீய வாறே. 6

கடிய – விரைவுடைய. இடிய பலி – மாவால் அமைந்த பிச்சை. செடிபடு – முடை நாற்றம் தோன்றுகின்ற

நீலகண்டர் கைகளில் மானையும் மழுவையும் ஏந்தி, விரைந்து செல்லும் காளையை இவர்ந்து, இடவந்த உணவையும் பிச்சையாகக் கொள்ளாராய், இடத்தை விட்டு நீங்காதவராயும் உள்ள இப்பெரியவர் யார் என்று எல்லோரும் மருண்டனர். முன்பு இவர் வடிவுடைய மங்கையும் தாமுமாய் மயிலாப்பூரில் வந்த காட்சியைக் கண்டுள்ளோம். பின் ஒரு நாள் புலால் நாற்றம் வீசும் மண்டை ஓட்டை ஏந்தி இங்கு உலவியவராய்த் திருவொற்றியூரில் புகுந்து விட்டார். இவர் எவ்வூரார் என்பதனைக் கூட அறிய முடியாமல் இருப்பது நம் தீவினையாகும்.

**2539.** வல்லாராய் வானவர்க ளெல்லாங் கூடி
வணங்குவார் வாழ்த்துவார் வந்து நிற்பார்
எல்லேயெம் பெருமானைக் காணோ மென்ன
எவ்வாற்றால் எவ்வகையாற் காண மாட்டார்
நல்லார்கள் நான்மறையோர் கூடி நேடி
நாமிருக்கு மூர்பணியீ ரடிகே ளென்ன
ஒல்லைதான் திரையேறி யோதம் மீளும்
**ஒளிதிகழும் ஒற்றியூ ரென்கின் றாரே.** 7

பிரமதேவனது யோகாக்கினியே இங்குக் கோயிலாக அமைந்தது என்னும் இத்தலத்துப் புராண வரலாற்றை நினைப்பிக்கின்றது.

தேவர்கள் எல்லோரும் கூடி வணங்கி வாழ்த்தி நிற்கும் பெருமான் எல்லாச் செயல்கள் செய்வதிலும் வல்லாராகவே, பகற் காலத்தில் எந்த வழியினாலும் எந்த வடிவினாலும் தேவர்கள் தம்மைக் காணமாட்டாதவராய், இவ்வுலகில் எழுந்தருளப் பெண்களும் நான்மறை வல்லோர்களும் ஒன்று கூடி அவரைத் தேடிக் கண்டு 'சான்றீரே! தாங்கள் இருக்கும் ஊர் யாது' என்று வினவ, விரைவில் கடல் அலைகள் கரையில் மோதி மீளும் ஒற்றியூர் என்கின்றார்.

**2540.** நிலைப்பாடே நான்கண்ட தேடீ கேளாய்
நெருநலைநற் பகலிங்கோ ரடிகள் வந்து
கலைப்பாடுங் கண்மலருங் கலக்க நோக்கிக்
கலந்து பலியிடுவே னெங்குங் காணேன்
சலப்பாடே யினியொருநாட் காண்பே னாகில்
தன்னாகத் தென்னாகம் ஒடுங்கும் வண்ண
முலைப்பாடே படத்தழுவிப் போக லொட்டேன்
ஒற்றியூ ருறைந்திங்கே திரிவானையே. 8

தலைவி தோழிக்குக் கூறியவாறாக அருளப்பட்ட பாடலாகும். கலைப்பாடு – உடையினது பெருமை. ஆகம் – மார்பு. சலப்பாடு – வஞ்சத்தன்மை.
உலைப்பாடு – உலைக்களத்து இரும்புத்தன்மை உண்டாக.

தோழி! நான் என் பண்டை நிலையை அடைவதற்கு முடிவு செய்த வழியைக் கூறுகின்றேன் கேளாய். நேற்று நடுப்பகலில் இங்குப் பெரியவர் ஒருவர் வந்து என் உடையினது பெருமையும் கண்களும் அவர் உள்ளத்திலும் கண்களிலும் பொருந்துமாறு என்னைக் கூர்ந்து நோக்கி என்னை உள்ளத்தால் கலந்தாராக. அவருக்கு உணவு கொண்டு வரச்சென்ற நான் திரும்பி வர எங்கும் காணேனாய், வஞ்சனையாக மறைந்துவிட்டார். இனி ஒருநாள் அவரைக் காண்பேனானால் அவர் மார்பிலே என் மார்பு அழுந்தும் வண்ணம் என் முலைச்சுவடு அவர் மார்பில் படும்படியாகத் தழுவிக்கொண்டு, ஒற்றியூரில் தங்கி இங்கு உலவும் அவரை, என்னை விடுத்து ஒற்றியூருக்குப் போக விடமாட்டேன்.

**2541.** மண்ணல்லை விண்ணல்லை வலய மல்லை
மலையல்லை கடலல்லை வாயு வல்லை
எண்ணல்லை யெழுத்தல்லை யெரியு மல்லை
யிரவல்லை பகலல்லை யாவு மல்லை
பெண்ணல்லை யாணல்லை பேடு மல்லை
பிறிதல்லை யானாயும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை
உணர்வரிய ஒற்றியூ ருடைய கோவே. 9

எங்கள் உள்ளத்தால் உணர முடியாத ஒற்றியூர்த் தலைவனே. நீ – மண், விண், ஞாயிறு முதலிய மண்டலங்கள், மலை, கடல், காற்று, எரி, எண், எழுத்து, இரவு, பகல், பெண், ஆண், பேடு முதலிய அல்லையாயும் இவற்றுள் கரந்து எங்கும் பரந்துள்ள பெரியையாயும் பெண்களுக்குத் தீமை செய்யாத நல்ல உள்ளத்தையாயும் உள்ளாய். பேடு – அலி.

வலயம் – ஞாயிறு முதலிய மண்டிலங்கள். உள்நல்லை – மனம் நன்றாக உடையாய்.

**2542.** மருவுற்ற மலர்க்குழலி மடவா ளஞ்ச
மலைதுளங்கத் திசைநடுங்கச் செறுத்து நோக்கிச்
செருவுற்ற வாளரக்கன் வலிதான் மாளத்
திருவடியின் விரலொன்றால் அலற வூன்றி
உருவொற்றி யங்கிருவ ரோடிக் காண
ஓங்கினவவ் வொள்ளழலா ரிங்கே வந்து
திருவொற்றி யூர்நம்மூ ரென்று போனார்
செறிவளைகள் ஒன்றொன்றாச் சென்ற வாறே. 10

மரு – வாசனை

எம்பெருமான், தன்னைப் பொருந்திய மலர் சூடிய கூந்தலை உடைய பார்வதி அஞ்சுமாறு, இராவணன் செய்த செயலால் கயிலை மலை அசைய, எண் திசைகளும் நடுங்க, அவனை வெகுண்டு நோக்கி, அவன் பலம் முழுதும் அழியுமாறு திருவடிவிரல் ஒன்றினால் அவன் அலறுமாறு அழுத்தி, தன் உருவத்தைத் தேடிப் பிரமனும் திருமாலும் முயன்று காணுமாறு தீப்பிழம்பாய் உயர்ந்த பெருமானார் இங்கே (என்னிடத்தில்) வந்து தம்முடைய ஊர் திருவொற்றியூர் என்று கூறிச் சென்றார். அவர் நினைவால் என்னுடைய செறிந்த வளையல்கள் ஒன்று ஒன்றாய் கழன்று விட்டன.

## 46. திருஆவடுதுறை

(இத்தலத்தை முதல் முறை வழிபட்டபோது பாடியது.
அளவில் திருத்தாண்டகமென்று சேக்கிழார் போற்றுகின்றார்)

ப.தொ.எண் : 259 பதிக எண் : 46

2543. நம்பனை நால்வேதங் கரைகண் டானை
ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக்
கம்பனைக் கல்லா லிருந்தான் தன்னைக்
கற்பகமா யடியார்கட் கருள்செய் வானைச்
செம்பொன்னைப் பவளத்தைத் திரளு முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை
அம்பொன்னை யாவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. 1

நம்மால் விரும்பப்படுபவனாய், நான்கு வேதங்களையும் கரை கண்டவனாய், ஞானப் பெருங்கடலாய், நன்மையாய், ஏகம்பனாய், கல்லாலின் கீழ் இருந்தானாய், கற்பகமாய், அடியார்களுக்கு அருள் செய்வானாய், செம்பொன், பவளம், முத்துத்திரள் திங்கள், ஞாயிறு, தீ இவற்றை ஒப்பானாய், நீராய், செல்வமாய் உள்ள ஆவடுதுறையிலுள்ள சிவபெருமான் திருவடிகளை அடியேன் அடைந்து தீவினையிலிருந்து பிழைத்தேன்.

'ஆஅடுதுறை' என்பது ஆவினால் (பசுவினால்) அடுக்கப்பட்ட (அடையப்பட்ட) துறை என்னுங் காரணத்தாற் பெற்ற பெயர். உமை பசு வடிவில் வழிபட்டதலம்.

ஆஅடு என்றால் பசுத்தன்மை நீங்கிய என்றும் கொள்ளலாம்.

2544. மின்னானை மின்னிடைச்சே ருருமி னானை
வெண்முகிலாய் எழுந்துமழை பொழிவான்
தன்னைத்
தன்னானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தாயாகிப் பல்லுயிர்க்கோர் தந்தை யாகி
என்னானை யெந்தை பெருமான் தன்னை
இருநிலமும் அண்டமுமாய்ச் செக்கர் வானே
அன்னானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. 2

மின்னாய், மின்னிடையே சேரும் இடியாய், வெண்முகிலாய், மழைபெய்யும் கார்முகிலாய்ச் சுதந்திரனாய், தன்னை ஒப்பார் பிறர் இல்லாதவனாய்ப் பல்லுயிர்க்கும் தாயாய்த் தந்தையாய் எனக்கு உரிய எந்தையாய்ப் பெரிய உலகங்களும் உலகங்களின் தொகுப்பாகிய அண்டங்களுமாய்ச் செவ்வான் போன்ற நிறத்தினனாய், ஆவடுதுறையுள்மேய அரனடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேனே.

மின் – மின்னல். உருமு – இடி.

மழை – கருணை மழை.

அன்னான் – போன்றவன்.

மின்னலின் ஒளியும், ஓசையும் ஒரு காலத்தே, ஓரிடத்தே உளவாயினும் ஒளியின் வேக மிகுதியால் மின்ஒளி முன்னர் காணப்படும். சில வினாடிகளுக்குப்பின் இடி கேட்கப்படும். ஆதலின் இடியைப் பின்னே வைத்தார்.

**2545.** பத்தர்கள் சித்தத்தே பாவித் தானைப்
பவளக் கொழுந்தினை மாணிக் கத்தின்
தொத்தினைத் தூநெறியாய் நின்றான் தன்னை
சொல்லுவார் சொற்பொருளின் தோற்ற மாகி
வித்தினை முளைக்கிளையை வேரைச் சீரை
வினைவயத்தின் தன்சார்பை வெய்ய
தீர்க்கும்
அத்தனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. **3**

அடியார் உள்ளத்தே பரவினவாய்ப் பவளக் கொழுந்தாய், மாணிக்கக் கொத்தாய்த் தன்னை அடைவதற்குத்தானே பற்றுக் கோடாகிய வழியாய்ச் சொற்பொருளின் உணர்வாய், வித்தாய், முளையாய், முளைகளின் கிளையாய், வேராய்ப் பயனாய், ஊழ்வினை வயத்தால் வந்த அதன் கொடிய தொடர்பான துயரங்களைத் தீர்க்கும் தலைவனாய், ஆவடுதுறை மேய அத்தனாய் உள்ள அரனடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேன்.

தொத்து – கொத்து. தோற்றம் என்றது உணர்வை. சீர் என்றது பயனை.

**2546.** பேணியநற் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பித்தராம் அடியார்க்கு முத்தி காட்டும்
ஏணியை யிடர்க்கடலுட் சுழிக்கப் பட்டிங்
கிளைக்கின்றேற் கக்கரைக்கே யேற
வாங்குந்
தோணியைத் தொண்டனேன் தூய சோதிச்
சுலாவெண் குழையானைச் சுடர்பொற்
காசின்
ஆணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. **4**

பிறைதவழ் செஞ்சடையனாய்த் தன்பால் பெரும் பற்றுக் கொண்ட அடியவரை வீட்டுலகத்திற்கு ஏற்றும் ஏணியாய்த் துயர்க்கடல் சுழியில் அகப்பட்டு வருந்தும் அடியேனை ஏறி அக்கரை அடைய உதவிச்சேர்க்கும் தோணியாய், தூய ஒளி வீசும் வெள்ளிய காதணி அணிந்தவனாய், ஒளி வீசும் பொற்காசின் மாற்றினை அளக்கும் உரையாணியாய் ஆவடுதுறையில் மேவிய அரனடியே தொண்டனாகிய அடிநாயேன் அடைந்து உய்ந்தேன்.

பித்தர் – பேரன்புடையார்.
அக்கரை – அவ்வுலகு. சுலாவுதல் – அசைதல்.
ஆணி – பொன்னின் மாற்றினை அளக்கும் உரையாணி
ஏணி – தான் இருந்தபடி இருந்து தன் வழி அடைந்து முயல்பவர் மேலேஏற உதவுவது.
தோணி – நீரினுள் நின்றும் சென்றும் தான் கரையேற வேண்டாது தன்னை அடைந்து முயல்வார் கரையேற உதவுவது.
ஏணி – தோணி குறிப்புருவகம். தோணியப்பரையும், தோணிபுரத்தையும் நினைப்போம்.

2547. ஒருமணியை உலகுக்கோ ருறுதி தன்னை
உதயத்தி னுச்சியை உருமா னானைப்
பருமணியைப் பாலோடஞ் சாடி னானைப்
பவித்திரனைப் பசுபதியைப் பவளக்
குன்றைத்
திருமணியைத் தித்திப்பைத் தேன தாகித்
தீங்கரும்பி னின்சுவையைத் திகழுஞ் சோதி
அருமணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. 5

ஒப்பற்ற மாணிக்கமாய், உலகுக்கு உறுதியாய், உதயமலையின் உச்சியாய், இடியாய், பெரிய இரத்தினமாய், பஞ்சகவ்ய அபிடேகப் பிரியனாய், தூயனாய், ஆன்மாக்களின் தலைவனாய்ப் பவளக்குன்றாய், செல்வம் நல்கும் சிந்தாமணியாய்த் தேன் கரும்பு இவற்றின் இனிப்பாய், ஒளிவீசும் கிட்டுதற்கு அரிய மாணிக்கமாய், ஆவடுதுறைமேய அரன் அடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேன்.

ஒரு மணி – ஒப்பற்ற மாணிக்கம். பருமணி – பெரிய மாணிக்கம்.
அருமணி – யாண்டும் கிடைத்தற்கரிய மாணிக்கம். பசுபதி – உயிர்கட்குத் தலைவன்.
பவித்திரன் – தூயோன். உதயத்தின் உச்சி – தோன்றும் ஒளிப்பொருள்களுக்கெல்லாம் முன் தோன்றுபவன்.

2548. ஏற்றானை யெண்டோ ளுடையான் தன்னை
யெல்லி நடமாட வல்லான் தன்னைக்
கூற்றானைக் கூற்ற முதைத்தான் தன்னைக்
குரைகடல்வாய் நஞ்சுண்ட கண்டன் தன்னை
நீற்றானை நீளரவொன் றார்த்தான் தன்னை
நீண்ட சடைமுடிமேல் நீரார் கங்கை
ஆற்றானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. 6

காளை வாகனனாய், எண்தோளனாய், இரவில் கூத்து நிகழ்த்துபவனாய், அழித்தற் கடவுளாய்க் கூற்றுவனை உதைத்தவனாய்க் கடலில் தோன்றிய நஞ்சுண்ட நீலகண்டனாய்த் திருநீறு அணிந்தவனாய், நீண்ட பாம்பு ஒன்றனை இடையில் இறுகக் கட்டியவனாய், நீண்ட சடையில் கங்கை சூடியாய், ஆவடுதுறை மேய அரனடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேன்.

குரைகடல் – ஒலிக்கின்ற கடல்

2549. கைம்மான மதகளிற்றை உரித்தான் தன்னைக்
**கடல்வரைவா னாகாச மானான்**
**தன்னைச்**
செம்மானப் பவளத்தைத் திகழும் முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயா னானை
எம்மானை என்மனமே கோயி லாக
இருந்தானை என்புருகும் அடியார் தங்கள்
அம்மானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. 7

துதிக்கையை உடைய தோலாத மத யானைத் தோலை உரித்தவனாய்க் கடல், மலை, மேகம், ஆகாயம் இவையாவும் ஆனவனாய்ச் செம்பவளமும் வெண்முத்தும் போன்றவனாய்த் திங்கள் சூரியன் தீ என்ற முச்சுடராய், எம் தலைவனாய், என் மனத்தையே இருப்பிடமாகக் கொண்டிருப்பது போல எலும்பும் உருகும் அடியவர்களுக்கும் தலைவனாய், ஆவடுதுறையுள் மேய அரன் அடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேன். கடல் – மலை – வான் – ஆகாசம் – விசுபரூப தரிசனம்.

எம்மான் – எம்தலைவன். அம்மான் – அனைவருக்கும் தலைவன்.
மானப்பவளம் – பெருமை உடைய பவளம்.
பதிக மகுடம் – ஆவடு தண்டுறையுள் மேய அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்தேனே.

**2550.** மெய்யானைப் பொய்யரொடு விரவா தானை
வெள்ளிடையைத் தண்ணிழலை வெந்தீ
யேந்துங்
கையானைக் காமனுடல் வேவக் காய்ந்த
கண்ணானைக் கண்மூன் றுடையான்
தன்னைப்
பையா டரவமதி யுடனே வைத்த
சடையானைப் பாய்புலித்தோ லுடையான்
தன்னை
ஐயானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. **8**

வாய்மை வடிவினனாய், வஞ்சகக் கலப்பு இல்லாதவனாய், வெற்றிடமாய், குளிர்ந்த நிழலாய்த் தீ ஏந்திய கையனாய்க் காமன் உடலை எரித்த கண்ணனாய், முக்கண்ணனாய், படமெடுத்தாடும் பாம்பையும் பிறையையும் சேர்த்து வைத்த சடையனாய்ப் புலித்தோல் ஆடையனாய், எல்லாருக்கும் தலைவனாய் ஆவடுதுறை மேவிய அரனடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேன்.

வெள்ளிடை – வெற்றிடம். பை – படம்
ஐயான் – அழகியான், தலைவன்.

**2551.** வேண்டாமை வேண்டுவது மில்லான் தன்னை
விசயனைமுன் னசைவித்த வேடன்
தன்னைத்
தூண்டாமைச் சுடர்விடுநற் சோதி தன்னைச்
சூலப் படையானைக் காலன் வாழ்நாள்
மாண்டோட வுதைசெய்த மைந்தன் தன்னை
மண்ணவரும் விண்ணவரும் வணங்கி
யேத்தும்
ஆண்டானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. **9**

வேண்டுவது – விரும்புதல்
வேண்டாமை – வெறுத்தல்
அசைவித்த – தளர்வித்த

வேண்டுதல் வேண்டாமை இலானாய், அருச்சுனனை முன்னொரு காலத்தில் தளரச் செய்தருளிய வேடனாய்த் தூண்டாமலே ஒளிவீசும் சோதியாய்ச் சூலப்படையானாய், கூற்றுவன் வாழ்நாள் கழியுமாறு உதைத்த வலியவனாய், மக்களும் தேவரும் வணங்கித் துதிக்கும் தலைவனாய், ஆவடுதுறையுள் மேய அரன் அடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேன்.

ஆண்டான் – தலைவன்

"வேண்டுதல் வேண்டாமை இலான்"

(குறள் 4)

2552. பந்தணவு மெல்விரலாள் பாகன் தன்னைப்
பாடலோ டாடல் பயின்றான் தன்னைக்
கொந்தணவு நறுங்கொன்றை மாலை யானைக்
கோலமா நீல மிடற்றான் தன்னைச்
செந்தமிழோ டாரியனைச் சீரி யானைத்
திருமார்பிற் புரிவெண்ணூல் திகழப் பூண்ட
அந்தணனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. 10

பந்தினைப் பொருந்திய மெல்லிய விரல்களை உடைய பார்வதி பாகனாய்ப் பாடலும் ஆடலும் பயின்றவனாய்க் கொத்தாகப் பூக்கும் நறிய கொன்றை மாலையை அணிந்தவனாய், அழகிய நீலகண்டனாய்த் தமிழும் வடமொழியும் ஆகிய மேம்பட்டவனாய், மார்பில் வெள்ளிய பூணூல் அணிந்த அந்தணனாய், ஆவடுதுறை மேவிய அரன் அடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேன்.

பந்து – அகங்கை, புறங்கை. இரண்டுங்கூடிய திரட்சி. அது பந்துபோலத் திரண்டு தோன்றுதல்.
கொந்து அணவு – கொத்திற் பொருந்திய.
கோலமாம் – அழகான

2553. தரித்தானைத் தண்கடல்நஞ் சுண்டான் தன்னைத்
தக்கன்றன் பெருவேள்வி தகர்த்தான்
தன்னைப்
பிரித்தானைப் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பெருவலியால் மலையெடுத்த அரக்கன்
தன்னை
நெரித்தானை நேரிழையாள் பாகத் தானை
நீசனேன் உடலுறு நோயான தீர
அரித்தானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்
தேனே. 11

கடலில் தோன்றிய விடத்தை உண்டு அதனைக் கழுத்தில் தரித்தவனாய்த் தக்கனுடைய பெரிய வேள்வியை அழித்தவனாய், அவனுடைய செருக்கைப் போக்கியவனாய்ச் சடையில் பிறை சூடியாய்ப் பெரிய வலிமையால் கயிலையை பெயர்த்த இராவணனை நெரித்தவனாய்ப் பார்வதி பாகனாய்க் கீழ் மகனான அடியேனுடைய உடலில் ஏற்பட்ட நோயை நீக்கிய ஆவடுதுறை மேவிய அரன் அடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேன்.

தரித்தது – நஞ்சினை. பிரித்தது – தக்கன் செருக்கினை. அரித்தது – அழித்தது, நீக்கியது நோயை.
அடைந்து – புகலாகச் சேர்ந்து. முன்னர் திருமூலர் அடைந்ததை நினைந்து அதனைப் பின்பற்றி நானும் அடைந்தேன் என்கிறார். 'காலனைக் காலாற், கடந்த காரணங் கண்டு கண்டடியேன்... அன்பொடுமடைந்தேன் என்று இவ்வாறே பின்னர் இவற்றைக் கண்டு ஆளுடைய நம்பிகள் இங்கு அடைந்தமை அவர்தம் வாக்கால் ஏழாம் திருமுறையில் அறியலாம். பிறவி தீர்ந்து பசுத்தன்மை நீங்க வேண்டுவோர் அடையுமிடம் ஆவடுதுறை. இப்பெரியார்களைப் பின்பற்றி இக்கருத்தே கடைப்பிடித்துப் பிற்காலத்தில், பட்டினத்துப்பிள்ளை, திருமாளிகைத் தேவர், நமச்சிவாய தேசிகர் முதலிய ஞான முனிவர்களும் இங்கு வந்தடைந்ததைக் கருத்தில் கொள்ள வேண்டும். ஞானராச தானியாக நமச்சிவாய மூர்த்திகள் வழிவந்த திருமடம் குலவும் பெருமை இன்றும் காணத்தக்கது.

## 47. திருஆவடுதுறை

ப.தொ.எண் : 260 பதிக எண் : 47

2554. திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க
உருவேஎன் **னுறவே**என் **ஊனே** ஊனின்
**உள்ளமே** உள்ளத்தி னுள்ளே நின்ற
**கருவே**யென் கற்பகமே **கண்ணே** கண்ணிற்
**கருமணி**யே மணியாடு **பாவாய்** காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே.
1

நல்லூழே! என் செல்வமே! வானோர்க்குப் புகழ் உண்டாக ஆற்றலை அருளும் ஞானமே! அடியார்க்குத் திருக்காட்சி வழங்கும் பெரிய சோதியே! என் கற்பகமாகவும் உறவாகவும், உடலாகவும் உள்ளமாகவும் உள்ளத்தின் உணர்வாகவும் கண்ணாகவும் கண்ணின் கருமணியாகவும் கருமணியின் பாவையாகவும் செயற்படும் ஆவடுதுறையிலுள்ள தேவர் தலைவனே! வடிவு புலப்படாத என் வல்வினை நோய் என்னைத் தாக்காதபடி காப்பாயாக.

அமரரேறே என்று அப்பர் பாட ஏழாம் திருமுறையில் நம்பிகள் அமரர்களேறே என்று பாடுகிறார்.

உரு–உறவு–ஊன்–உள்ளம்–கரு–கண்–மணி–பாவை என்பன அருமைப்பாடு குறிப்பன. அன்றியும் "ஊன் கருவில் உள் நின்ற சோதியானை", "உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்" என்றபடி உடம்புட் கலந்து நின்று இறைவன் உணர்த்தும் முறையினைக் குறிப்பன.

"திரு" என்பது இங்கு திருமகளது வரவிற்குக் காரணமாகிய நல்லூழ்; புண்ணியம். "என்" என்பது, "திரு" என்றதனோடும் இயையும். உலகின்பங்கள் எல்லாவற்றையும் தருதலின், "செல்வம்" என்றும், சித்தத்துள் தித்தித்தலின், "தேன்" என்றும், வானோர்க்குப் புகழ் உண்டாக ஒரோர் ஆற்றலை வழங்கலின், அவர்க்குச் சுடர் (விளக்கு) என்றும், முன்னைத் தவம் உடையார்க்குத் தனது உண்மை வடிவிற்றோன்றி யருளுதலின், "செழுஞ்சுடர் நற்சோதி மிக்க உருவே" என்றும் தமக்கு ஆவன பலவும் அவனே அறிந்து செய்தலின், "உறவே" என்றும், உடலும் உள்ளமும் அருளே ஆகப்பெற்றமையின் "என் ஊனே ஊனின் உள்ளமே" என்றும், உள் நின்று உணர்வைத் தோற்றுவித்து உணர்விற்கு வித்தாய் நிற்றலின், "உள்ளத்தினுள்ளே நின்ற கருவே" என்றும், வேண்டியவற்றை வேண்டியவாறே பெறத் தருதலின், "என் கற்பகமே" என்றும், உணருந்தோறும் உணருந்தோறும் மேன்மேற் சிறந்து தோன்றலின், "கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்" என்றும், உருவாய உடல்நோயின் நீக்குதற்கு "அருவாய வல்வினை நோய்" என்றும் அருளிச் செய்தார். "அருவாய வல்வினை நோய் அடையா வண்ணம் காவாய்" எனக் கூட்டி, அதனை இறுதிக்கண் தந்து முடிக்க "கரு" என்றது. வித்தென்னும் பொருளது. 'உரு, அரு' என்பன இங்கு பொறிகட்குப் புலனாதலையும், ஆகாமையையும் குறிக்கும். அமரர் ஏறு – அமரராகிய விலங்குகட்கு அரியேறு (ஆண் சிங்கம்) போன்றவன் – தலைவன் என்றவாறு. "செழுஞ்சுடர் நற்சோதி" என்பது சமாசப் பதிப்பு தரும் பாடம்.

**2555. மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவின்**
**மறவேன் திருவருள்கள் வஞ்ச நெஞ்சின்**
**ஏற்றேன் பிறதெய்வம் எண்ணா நாயேன்**
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்
மேற்றான்நீ செய்வனகள் செய்யக் கண்டு
வேதனைக்கே யிடங்கொடுத்து நாளு நாளும்
ஆற்றேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 2

திருவைந்தெழுத்தை என் நாவிலிருந்து நீக்கேன், திருவருள்களை என் நெஞ்சினால் மறவேன். எண்ணினால் எம்பெருமான் திருவடிகளையே எண்ணுவதல்லால் பிற தெய்வங்களை எண்ணா நாயேன் அத்தெய்வங்களை என் நெஞ்சில் ஏலேன். என்மேல் நீ செய்யும் செயல்களைக் கண்டு வேதனைப் பட்டு நானும் பொறுக்க இயலாதவனாக உள்ளேன். ஆவடுதுறையில் உறையும் தேவர் தலைவனே! அடியேனை அஞ்சேல் என்று அருளுவாயாக.

"எண்ணின் எம்பெருமான் திருவடியேயல்லால் பிறதெய்வம் எண்ணா நாயேன்" என மாற்றிக் கூட்டிப் படிக்க வேண்டும். சுவாமிகள் திருவைந்தெழுத்தை இடைவிடாது பயிலும் பழக்கமுடையவர்.

2556. வரையார் மடமங்கை பங்கா கங்கை
மணவாளா வார்சடையாய் **நின்றன் நாமம்**
**உரையா உயிர்போகப் பெறுவே னாகில்**
**உறுநோய்வந் தெத்தனையு முற்றா லென்னே**
கரையா நினைந்துருகிக் கண்ணீர் மல்கிக்
காதலித்து நின்கழலே யேத்து மன்பர்க்
கரையா அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 3

பார்வதி பாகனே! கங்கையைச் சடையில் தரித்த மணவாளா! உன் திருநாமங்களைச் சொல்லிக் கொண்டே உயிர் நீங்கப் பெறுவேனாயின் மிக்க நோய்கள் எத்தனையும் என்னை அடைந்து என் செய்ய முடியும்? கரைந்து நினைந்து உருகிக் கண்ணீர் வடித்துக் காதலித்து உன் திருவடிகளே துதிக்கும் அன்பர்களுக்கு அரசே! ஆவடுதுறை உறையும் அமரர் ஏறே! அடியேனை அஞ்சேல் என்று அருளுவாயாக.

உரையா – சொல்லிக்கொண்டு. ஊனுயிர் வேறாகுங்காலத்து இறைவனை நினைத்துத் துதிப்பவர்க்குப் பிறவி நீங்குதல் திண்ணம். ஊன் உயிர் வேறாகும் போது சிவபெருமானை நினையவும், சொல்லவும் பெற வேண்டுமென்பது நாயனார் கேட்கும் மிகச் சில வரங்களுள் ஒன்று.

2557. சிலைத்தார் திரிபுரங்கள் தீயில் வேவச்
சிலைவளைவித் துமையவளை யஞ்ச நோக்கிக்
கலித்தாங் கிரும்பிடிமேற் கைவைத் தோடுங்
களிறுரித்த கங்காளா எங்கள் கோவே
நிலத்தார் அவர்தமக்கே பொறையாய் நாளும்
நில்லா வுயிரோம்பு நீத னேன்நான்
அலுத்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 4

ஆவடுதுறையில் உறையும் தேவர் தலைவனே! ஆரவாரித்த அசுரர்களின் மும்மதில்களும் தீயில் வேகுமாறு வில்லை வளைத்து, பார்வதியை அஞ்சுமாறு பார்த்துக் கரிய பெண் யானையைத் தழுவி ஓடிய யானையின் தோலை உரித்தவனே! முழு எலும்புக்கூட்டை அணிந்தவனே! எங்கள் தலைவனே! பூமிக்குப் பாரமாய், நில்லாத உயிரை உடலில் நிலைநிறுத்த உடலைப் பாதுகாக்கும் கீழ்மகனாகிய அடியேன் அலுத்துவிட்டேன். அடியேனை அஞ்சேல் என்று காப்பாயாக.

சிலைத்தார் – (சினத்தால்) ஆரவாரித்தவர். கலித்து – பிளிறி. பொறை – சுமை

**2558. நறுமா மலர்கொய்து நீரின் மூழ்கி**
நாடோறும் நின்கழலே யேத்தி வாழ்த்தித்
துறவாத துன்பந் துறந்தேன் தன்னைச்
சூழுலகில் ஊழ்வினைவந் துற்றா லென்னே
உறவாகி வானவர்கள் முற்றும் வேண்ட
ஒலிதிரைநீர்க் கடல்நஞ்சுண் டுய்யக் கொண்ட
அறவா அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 5

நீரில் மூழ்கிப் பின் நறிய சிறந்த மலர்களைப் பறித்து உன் திருவடிகளிலே இட்டு, உன்னைத் துதித்து வாழ்த்தித் துன்பங்களைப் போக்கிய அடியேனை, இவ்வுலகில் ஊழ்வினை வந்து யாது செய்ய இயலும்? தேவர்களிடத்து உறவு பூண்டு அவர்கள் வேண்டியதனால் கடல் நஞ்சினை உண்டு அவர்களைப் பாதுகாத்த அறவோனாகிய ஆவடுதுறை அமரர் ஏறே! அடியேனை அஞ்சேல் என்பாயாக.

"நீரின் மூழ்கி நறுமா மலர்கொய்து" என மாறிக் கூட்டுக. ஏத்தி – புகழ்ந்து. துறவாத – நீக்கலாகாத. 'துன்பம்' என்றது, துன்பங்கள் எல்லாவற்றிற்கும் அடியாய பேதைமையை. இதனை, "பிறப்பென்னும் பேதைமை" (குறள் – 358) என்றருளினார், திருவள்ளுவ நாயனார். சிவாகமங்களுள், 'ஆணவம்' எனப்படுவது இதுவே. இதுவே துன்பத்திற்கெல்லாம் முதலாய் எல்லா உயிர்களும் எஞ்சாது, பற்றியது தெரியாமற் பற்றி, நீக்குதற்கரிதாய் நின்று வருத்துதலின், "பொல்லாத ஆணவம்" (சிவஞான சித்தி சூ.2–79) என்றருளினார், அருணந்திதேவ நாயனார். இதனை நீக்கிக் கொண்டோர்க்கு <u>பிராரத்த கன்மமும் உயிரைத் தாக்காது உடலோடேபற்றி யொழிந்திடுமாகலின்,</u> சூழுலகில் ஊழ்வினை வந்து உற்றால் என்னே" என்றருளிச் செய்தார். "வானந்துளங்கிலென் மண்கம்பமாகிலென்" (தி. 4. ப. 112 பா. 8) என்றற் றொடக்கத்தக்கனவாக சுவாமிகளும், "எங்கெழிலென் ஞாயிறெமக்கு" (தி. 8, திருவாசகம், திருவெம்பாவை – 19) என ஆளுடைய அடிகளும் அருளிச் செய்தன, இந்நிலைப் பற்றியே என்க. இங்ஙனம் அருளிச் செய்தவர், "அஞ்சேல் என்னாய்" என வேண்டியது. 'இந்நிலை சலிக்குங்கொலோ' என்றெழுந்த அச்சம்பற்றி யென்க. இதனை, "பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சும் – அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு" (குறள் – 1295) என்றருளிய அப்பொருளின் வைத்து அறிந்து கொள்க. "நறுமாமலர் கொய்து" முதலியன, துறவாத துன்பம் துறத்தற்கு வாயிலை உடம்பொடு புணர்த்தலாக அருளியவாறு. அறவன் – அறம் உடையவன். "தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின் – அருளாதான் செய்யும் அறம்" (குறள் – 249) என்பதனால், அருளுடையவனே அறமுடையவன் ஆவனாகலானும், பிறர் உய்தற்பொருட்டுத் தான் நஞ்சுண்டவன்போலப் பேரருளுடையார் பிறர் ஒருவரும் ஓரிடத்தும் இன்மையானும், சிவபிரானை, "அறவா" என வாயார அழைத்தருளினார். 'அன்ன அறமுடையை ஆதலின், அடியேனை அஞ்சேல் என்னாய்' என்பது குறிப்பு.

**2559.** கோன்நா ரணன் அங்கந் தோள்மேற் கொண்டு
கொழுமலரான் தன்சிரத்தைக் கையி லேந்திக்
கானார் களிற்றுரிவைப் போர்வை மூடிக்
கங்காள வேடராய் எங்குஞ் செல்வீர்
நானார் உமக்கோர் வினைக்கே டனேன்
நல்வினையுந் தீவினையு மெல்லாம் முன்னே
ஆனாய் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 6

அரசனாகிய நாராயணனுடைய முழு எலும்புக் கூட்டைத் தோள் மேல் தரித்துப் பிரமன் மண்டையோட்டைக் கையில் ஏந்தி யானைத் தோலைப் போர்த்துக் கங்காள வேடம் தரித்தவராய், எங்கும் உலவுபவரே! அடியேன் உமக்கு என்ன உரிமை உடையேன்? வினையாகிய கேட்டினை உடைய எமக்கு எல்லா நல்வினையும் தீவினையும் ஆகிய ஆவடுதுறைத் தேவர் தலைவனே! அடியேனை அஞ்சேல் என்பாயாக.

2560. உழையுரித்த மானுரிதோ லாடை யானே
உமையவள்தம் பெருமானே இமையோர் ஏற
கழையிறுத்த கருங்கடல்நஞ் சுண்ட கண்டா
கயிலாய மலையானே உன்பா லன்பர்
பிழைபொறுத்தி என்பதுவும் பெரியோய் நின்றன்
கடனன்றே பேரருளுன் பால தன்றே
அழையுறுத்து மாமயில்க ளாலுஞ் சோலை
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே.
7

அகவிக்கொண்டு மயில்கள் ஆடும் ஆவடுதுறைத் தேவர் தலைவனே! மானை உரித்து அதன் தோலை ஆடையாக உடையவனே! பார்வதியின் தலைவனே! தேவர் தலைவனே! மூங்கிற்கோல் சுட்டும் ஆழத்தையும் கடந்த ஆழத்தை உடைய கடலின் நஞ்சினை உண்ட நீலகண்டனே! கயிலாய மலையில் உறைபவனே! உன் அடியவர் பிழைகளைப் பொறுப்பதும் உன் கடமை அன்றோ? உன்பால் பேரருள் உண்டு அன்றோ?

கழை இறுத்த – மூங்கில்களை ஒடித்த. அழை – அகவுதலை.
'அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல, நம்மை இகழ்வாரைப் பொறுத்தல்' குறள் 151.
'பிழைத்தவை பொறுக்கை எல்லாம் பெரியவர் கடமை' – திருவாசகம்

2561. உலந்தார் தலைகலனொன் றேந்தி வானோ
ருலகம் பலிதிரிவாய் உன்பா லன்பு
கலந்தார் மனங்கவருங் காத லானே
கனலாடுங் கையவனே ஐயா மெய்யே
**மலந்தாங் குயிர்ப்பிறவி மாயக் காய**
மயக்குளே விழுந்தழுந்தி நாளும் நாளும்
அலந்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே.
8

ஆவடுதுறைத் தேவர் தலைவனே! இறந்தவருடைய தலையோட்டைக் கையில் ஏந்தித் தேவர் உலகில் பிச்சை ஏற்பானே! உன்பால் அன்பால் கவர்ந்தவர்களுடைய உள்ளத்தைக் கவரும் அன்புடையாய்! கையில் தீ கொழுந்துவிட்டு எரியுமாறு வைத்திருப்பவனே! தலைவனே! உண்மையாகத் தூய்மை அற்ற இவ்வுடலில் ஏற்பட்ட மயக்கங்களில் விழுந்து அழுந்தி ஒவ்வொருநாளும் வருந்தும் அடியேனை அஞ்சேல் என்று அருள்செய்வாயாக.

உலந்தார் – இறந்தார். அலந்தேன் – துன்பமுற்றேன். மலந்தாங்கு உயிர்ப்பிறவி மாயக்காயம் – இயல்பாகவே மலத்தினை உடைய உயிரினது பிறவியாகிய நிலையாமை உடைய உடம்பு

காதலான் – அருளாளன். "மேவினார் பிரிய மாட்டா விமலனார்" (தி. 12 கண்ணப்பர் புரா. 174) என்றதுங் காண்க. மலம் தாங்கு உயிர்ப் பிறவி மாயக் காயம் – இயல்பாகவே மலத்தினை உடைய உயிரினது பிறவியாகிய நிலையாமையுடைய உடம்பு, இதனால்

"நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே – வல்லி
மலகன்மம் அன்றுளவாம்" – (சிவஞானபோதம் சூ. 2 அதி. 2)

என்பதற்கு உரையளவை பெறப்பட்டது.

2562. பல்லார்ந்த வெண்டலை கையி லேந்திப்
பசுவேறி யூரூரன் பலிகொள் வானே
கல்லார்ந்த மலைமகளும் நீயு மெல்லாங்
கரிகாட்டி லாட்டுகந்தீர் கருதீ ராகில்
எல்லாரு மென்தன்னை யிகழ்வர் போலும்
ஏழையமண் குண்டர்சாக் கியர்களொன்றுக்
கல்லாதார் திறத்தொழிந்தேன் <u>அஞ்சே லென்னாய்</u>
<u>ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே.</u> 9

"அஞ்சே லென்னாய் ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே" என்பது பதிக மகுடம்.

ஆவடுதுறைத் தேவர் தலைவனே! பல் நிறைந்த வெள்ளிய மண்டையோட்டைக் கையில் ஏந்திக் காளையை இவர்ந்து ஊர் ஊராகப் பிச்சை எடுப்பவனே! பார்வதியும் நீயும் சுடுகாட்டில் கூத்தாடுதலை விரும்புகிறீர். நீங்கள் இருவீரும் என்னை ஆட்கொள்ளக் கருதவில்லை யென்றால் மக்களெல்லாரும் அடியேனை இகழ்ந்து கூறுவர். அறிவற்ற பரு உடல்களை உடைய சமணர் புத்தர் ஆகிய பயனற்றவர் தொடர்பை நீக்கிவிட்ட அடியேனை அஞ்சேல் என்பாயாக.

2563. துறந்தார்தந் தூநெறிக்கண் சென்றே னல்லேன்
துணைமாலை சூட்டநான் தூயே னல்லேன்
பிறந்தேன்நின் திருவருளே பேசி னல்லாற்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே
செறிந்தார் மதிலிலங்கைக் கோமான் தன்னைச்
செறுவரைக்கீ ழடர்த்தருளிச் செய்கை யெல்லாம்
அறிந்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 10

ஆவடுதுறைத் தேவர் பெருமானே! துறந்தவர் செல்லும் தூய நெறியிலே வாழ்கின்றேன் அல்லேன். உனக்கு இணையான மாலைகளைச் சூட்டும் தூய்மை உடையேன் அல்லேன். உன் திருவருளைப் பற்றிப் பேசியும் அப்படிப் பேசாத நாள்களைப் பயனற்ற நாள்களாகக் கணக்கிட்டும் வாழ்கின்றேன். செறிவாகப் பொருந்திய மதில்களை உடைய இலங்கை அரசனாகிய இராவணனைச் செறிவான கயிலை மலைக்கீழ் நசுக்கிப் பின் அவனுக்கு அருளிய உன் செயல்களை எல்லாம் அறிந்த அடியேனை அஞ்சேல் என்பாயாக.

## 48. திருவலிவலம்

(இத்திருப்பதிகம் இறைவன் இயல்புகளை, "காண்" என்னும் முடிபினை உடைய பல தொடர்க் கோவைகளால் புகழ்ந்து, அவ்விறைவன் என் மனத்தின்கண் உள்ளான் என்றருளுகின்றது)

ப.தொ.எண் : 261 பதிக எண் : 48

2564. நல்லான்காண் நான்மறைக ளாயி னான்காண்
நம்பன்காண் நணுகாதார் புரமூன் றெய்த
வில்லான்காண் விண்ணவர்க்கும் மேலா னான்காண்
மெல்லியலாள் பாகன்காண் வேத வேள்விச்
சொல்லான்காண் சுடர்மூன்று மாயி னான்காண்
தொண்டாகிப் பணிவார்க்குத் தொல்வான் ஈய
வல்லான்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் **காணவனென்** மனத்து ளானே. 1

பெரியவனாய், நான்கு வேத சொரூபனாய் நம்மால் விரும்பப்படுபவனாய்ப் பகைவருடைய மும்மதில்களையும் எய்தவில்லை உடையவனாய்த் தேவர்களுக்கும் மேம்பட்டவனாய்ப் பார்வதி பாகனாய், மந்திர வடிவினனாய்ச் சந்திரன் சூரியன் தீ என்ற மூஒளிகளின் உருவனாய்த் தொண்டராகி வழிபடுபவர்களுக்கு வீட்டுலகை ஈய வல்லவனாய்த் தேவர்கள் வணங்கித் துதிக்கும் வலிவலத்தை உகந்தருளியிருக்கும் பெருமான் என் உள்ளத்தில் உள்ளான்.

**2565.** ஊனவன்காண் உடல்தனக்கோர் உயிரா
னான்காண்
உள்ளவன்காண் இல்லவன்காண் உமையாட்
கென்றுந்
தேனவன்காண் திருவவன்காண் திசையா
னான்காண்
தீர்த்தன்காண் பார்த்தன்றன் பணியைக்
கண்ட
கானவன்காண் கடலவன்காண் மலையா
னான்காண்
களியானை யீரூரிவை கதறப் போர்த்த
வானவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து
ளானே. 2

வலிவலத்துப் பெருமான் எல்லோருக்கும் உடம்பாய், உயிராய், அருளாளர்களுக்கு அநுபவப் பொருளாய், உலகியலில் திளைப்பார்க்கு அநுபவம் ஆகாதவனாய்ப் பார்வதிக்குத் தேன் போன்று இனியனாய்ச் செல்வமாய்த் திசைகளாய்த் தூயவனாய், அருச்சுனனுடைய போர்த்தொழிலை அனுபவித்த வேடனாய், கடலாய், மலையாய், மதயானையைக் கொன்று அதன் உதிரப் பசுமை கெடாத தோலைப் போர்த்திய தேவனாய், தேவர்களும் வணங்கித் துதிக்கப்படுபவனாய் என் உள்ளத்தில் உள்ளான்.

**2566.** ஏயவன்காண் எல்லார்க்கு மியல்பா னான்காண்
இன்பன்காண் துன்பங்க ளில்லா தான்காண்
தாயவன்காண் உலகுக்கோர் தன்னொப் பில்லாத்
தத்துவன்காண் உத்தமன்காண் தானே
யெங்கும்
ஆயவன்காண் அண்டத்துக் கப்பா லான்காண்
அகங்குழைந்து மெய்யரும்பி அழுவார்
தங்கள்
வாயவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து
ளானே. 3

பதிக மகுடம் – வானவர்கள் வணங்கியேத்தும் வலிவலத்தான் காண் அவனென் மனத்துளானே.

எப்பொருளையும் நடத்துபவனாய், எல்லாருக்கும் இயக்கத்தை வழங்குபவனாய்த் துன்பக் கலப்பற்ற இன்பம் உடையவனாய்த் தாயாய், உலகில் தன்னை ஒப்பார் இல்லாத மெய்ப்பொருளாய், உத்தமனாய்த்தானே எங்கும் பரவியவனாய், அண்டங்களுக்கும் அப்பாற்பட்டவனாய், மனம் உருகி மெய் மயிர் பொடித்து அழும் அடியவர்களுக்குத் தன்னை அழைக்கும் அவர்கள் வாயிலுள்ளவனாய்த் தேவர்கள் வணங்கித் துதிக்கும் வலிவலத்தில் உறைபவன் என் உள்ளத்தில் உள்ளான்.

**2567.** உய்த்தவன்காண்உடல் தனக்கோர் உயிரானான்
காண்
ஓங்காரத் தொருவன்காண் உலகுக்
கெல்லாம்
வித்தவன்காண் விண்பொழியும் மழையா
னான்காண்
விளைவவன்காண் விரும்பாதார்
நெஞ்சத்தென்றும்
பொய்த்தவன்காண் பொழிலேழுந் தாங்கி
னான்காண்
புனலோடு வளர்மதியும் பாம்புஞ் சென்னி
வைத்தவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து
ளானே. 4

வலிவலத்துப் பெருமான் உடலுக்கு உயிராய் அதனைச் செலுத்துபவனாய், ஓங்காரத்தால் குறிப்பிடப்படும் எப்பொருட்கும் தலைவனாய், உலகுக்கெல்லாம் காரணனாய், வானத்து மழையாய், மழையின் விளைவாய்த் தன்னை விரும்பாதார் மனத்துத் தோன்றாதவனாய், ஏழுலகையும் தாங்குபவனாய்த் தலையில் கங்கை, பிறை, பாம்பு இவற்றை அணிந்தவனாய், வானவர்கள் வணங்கித் துதிக்கப்படுபவனாய் என் உள்ளத்தில் உள்ளான்.

உய்த்தவன் – எல்லாவற்றையும் செலுத்தியவன். ஓங்காரத்தொருவன் – எப்பொருட்கும் தலைவன். பொய்த்தவன் – தோன்றாதவன்

**2568.** கூற்றவன்காண் குணமவன்காண்குறியா
னான்காண்
குற்றங்க ளனைத்துங்காண் கோல மாய
நீற்றவன்காண் நிழலவன்காண் நெருப்பா
னான்காண்
நிமிர்புன் சடைமுடிமேல் நீரார் கங்கை
ஏற்றவன்காண் ஏழுலகு மாயி னான்காண்
இமைப்பளவிற் காமனைமுன் பொடியாய் வீழ
மாற்றவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து
ளானே. 5

தேவர்கள் வணங்கித் துதிக்கும் வலிவலத்துப் பெருமான் சொற்களாகவும், சொற்பொருளின் பொதுத் தன்மையாகவும், சிறப்புத் தன்மையாகவும், எல்லாக் குற்றங்களாகவும், நீறணிந்தவனாகவும், நிழலாகவும், வெப்பமாகவும், மேல்நோக்கிய சிவந்த சடையின் மேல் கங்கை நீரை ஏற்றவனாகவும், ஏழுலகும் ஆகியவனாய் இமை நேரத்தில் மன்மதனைச் சாம்பலாக்கியவனாய், என் உள்ளத்து உள்ளான்.

கூற்று – சொல். சொல்லின் பொருள் குணம், குறி. குணம் – பொதுத்தன்மை. குறி–சிறப்புத்தன்மை

**2569.** நிலையவன்காண் தோற்றவன்கா ணிறையா
னான்காண்
நீரவன்காண் பாரவன்காண் ஊர்மூன் றெய்த
சிலையவன்காண் செய்யவாய்க் கரிய கூந்தல்
தேன்மொழியை ஒருபாகஞ் சேர்த்தி
னான்காண்
கலையவன்காண் காற்றவன்காண் காலன் வீழக்
கறுத்தவன்காண் கயிலாய மென்னுந் தெய்வ
மலையவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்துளானே.
6

தேவர்கள் வணங்கித் துதிக்கும் வலிவலத்துப் பெருமான் தோற்றம் நிலை இறுதியாய் நீராய் நிலனாய்த் திரிபுரம் எரித்த வில்லேந்திய வனாய்ச் செவ்வாயினையும் கரிய கூந்தலையும் உடைய பார்வதி பாகனாய்க் கலைகளாய்க் காற்றாய்க் கூற்றுவன் கீழே விழுமாறு அவனை வெகுண்டவனாய்க் கயிலாய மலையினனாய் என் உள்ளத்து உள்ளான்.

நிறை – நிறைவு; இறுதி. கலை – நூல்.

**2570.** பெண்ணவன்காண் ஆணவன்காண் பெரியோர்க்
கென்றும்
பெரியவன்காண் அரியவன்காண் அயனா
னான்காண்
எண்ணவன்காண் எழுத்தவன்காண் இன்பக்
கேள்வி
இசையவன்காண் இயலவன்காண் எல்லாங்
காணுங்
கண்ணவன்காண் கருத்தவன்காண் கழிந்தோர்
செல்லுங்
கதியவன்காண் மதியவன்காண் கடலேழ்
சூழ்ந்த
மண்ணவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்துளானே.
7

தேவர்கள் வணங்கித் துதிக்கும் வலிவலத்துப் பெருமான் பெண்ணாய், ஆணாய், அரியாய்ப் பிரமனாய்ப் பெரியோரில் பெரியோனாய், எண்ணாய், எழுத்தாய், இயலாய்ச் செவிக்கு இன்பம் தரும் இசையாய்க் கண்ணாய்க் கருத்தாய், இறந்தோர் செல்லும் வழியாய், ஞானமாய், ஏழ்கடல் சூழ்ந்த நிலமாய் என் உள்ளத்து உள்ளான்.

பெரியோர்க்குப் பெரியவன் – பெரியவர்க்குத் தன் பெருமை தோன்ற நிற்பவன். எனவே சிறியராயினார்க்கு அவ்வாறு நில்லாதவன்.

| | |
|---|---|
| 2571. முன்னவன்காண் பின்னவன்காண் மூவா மேனி<br>முதலவன்காண் முடிவவன்காண் மூன்று சோதி<br>அன்னவன்காண் அடியார்க்கும் அண்டத் தார்க்கும்<br>அணியவன்காண் சேயவன்காண் அளவில்சோதி<br>மின்னவன்காண் உருமவன்காண் திருமால் பாகம்<br>வேண்டினன்கா ணீண்டுபுனற் கங்கைக் கென்றும்<br>மன்னவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்<br>வலிவலத்தான் காணவனென் மனத்துளானே.<br>8 | வானவர்கள் வணங்கித் துதிக்கும் வலிவலத்துப் பெருமான் முன்னவனாய்ப் பின்னவனாய், என்றும் ஒரே நிலையிலிருக்கும் முதலும் முடிவுமாய் இருப்பவனாய்த் திங்கள், ஞாயிறு, தீ என்ற மூவொளியாய், அடியார்க்கு அணியனாய், உலகியலில் மூழ்கியவர்களுக்குத் தொலைவில் உள்ளவனாய், எல்லையற்ற ஒளியை உடைய மின்னலாய், இடியாய்த் திருமாலை உடலின் ஒரு பாகமாகக் கொண்டவனாய்க் கங்கையைச் சடையில் நிலைபெறச் செய்தவனாய் என் உள்ளத்து உள்ளான். |
| 2572. நெதியவன்காண் யாவர்க்கும் நினைய வொண்ணா<br>நீதியன்காண் வேதியன்காண் நினைவார்க் கென்றுங்<br>கதியவன்காண் காரவன்காண் கனலா னான்காண்<br>காலங்க ளூழியாய்க் கலந்து நின்ற<br>பதியவன்காண் பழமவன்காண் இரதந் தான்காண்<br>பாம்போடு திங்கள் பயில வைத்த<br>மதியவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்<br>வலிவலத்தான் காணவனென் மனத்துளானே.<br>9<br><br>நீதியன் – அரசனால் அநீதி நடந்தாலும் பின் திருவருள் நீதியை நிலைநாட்டும் | வானவர்கள் வணங்கித் துதிக்கும் வலிவலத்துப் பெருமான் செல்வமாய், யாரும் மனத்தால் அணுக இயலாத நீதியனாய் வேதியனாய்த் தன்னை விருப்புற்று நினைக்கும் அடியவர் சென்று சேரும் கதியாய், நீராய்த் தீயாய்ப் பல ஊழிக்காலங்களாய், எல்லாருக்கும் தலைவனாய்ப் பழமாய்ப் பழத்தின் சாறாய்ப் பாம்பையும் பிறையையும் பழகுமாறு அருகில் வைத்த ஞானமுடையவனாய் என் உள்ளத்து உள்ளான். நெதி – நிதி. ஒண்ணா – மனத்தால் அணுக இயலாத. கார் – மேகம். இரதி – சுவை. |
| 2573. பங்கயத்தின் மேலானும் பால னாகி<br>உலகளந்த படியானும் பரவிக் காணா<br>தங்கைவைத்த சென்னியரா யளக்க மாட்டா<br>அனலவன்காண் அலைகடல்சூ ழிலங்கை வேந்தன்<br>கொங்கலர்த்த முடி நெரிய விரலா லூன்றுங்<br>குழகன்காண் அழகன்காண் கோல மாய<br>மங்கையர்க்கோர் கூறன்காண் வானோ ரேத்தும்<br>வலிவலத்தான் காணவனென் மனத்துளானே.<br>10<br><br>குழகன் – இளையன். படியான் – நிலைமையன். | தேவர் வழிபடும் வலிவலத்தான் தாமரையில் உறையும் பிரமனும், வாமனனாய் உலகை அளந்த திருமாலும் கைகளைத் தலைமிசைக் குவித்து முன்னின்று துதித்து முடியையும் அடிகளையும் எளிமையில் காணமாட்டாது, தம் முயற்சியால் காண முற்பட்டமையின் காணமுடியாத தீப்பிழம்பாக நின்றவனாய் இராவணனுடைய பூக்களைச் சூடிய தலைகள் நெரியுமாறு விரலால் அவனை அழுத்திய இளையனாய், அழகனாய், அழகிய பார்வதி பாகனாய் என் உள்ளத்தில் உள்ளான். |

## 49. திருக்கோகரணம்

### பதிக வரலாறு

திருநாவுக்கரசர், தொண்டை நாட்டில் திருக்காளத்திதொழுது கயிலை யாத்திரையை மேற்கொண்டு செல்லும் பொழுது தெலுங்க நாட்டில் சீசைலத்தை வணங்கிக் கன்னட நாட்டைக் கடந்து வனங்கள், திரு நதித்துறைகள், நெடிய மலைகள் முதலிய யாவும் பிற்படச் செல்லுங்கால், துளுவ நாட்டில் மேலைக் கடலாகிய மாகடல்சூழ் கோகரணம் மன்னினானை வணங்கிப் பாடியருளியதேயாகும் இத்திருப்பதிகம் (தி. 12 திருநாவு. புரா. 351).

**குறிப்பு :** இதுவும் மேலைத் திருப்பதிகம் போல, 'காண்' என்னும் முடிபுடைய தொடர்களால், இறைவனது இயல்புகளை வகுத்துணர்த்தியருளியது. இதனுள், 'கோகர்ணம்' என்னும் வடசொல், 'கோகரணம்' எனத் திரிந்து நின்றது.

ப.தொ.எண் : 262 பதிக எண் : 49

2574. சந்திரனுங் தண்புனலுஞ் சந்தித் தான்காண்
தாழ்சடையான்காண் சார்ந்தார்க் கமுதா னான்காண்
அந்தரத்தி லசுரர்புரம் மூன்றட் டான்காண்
அவ்வுருவி லவ்வுருவ மாயி னான்காண்
பந்தரத்து நான்மறைகள் பாடி னான்காண்
பலபலவும் பாணி பயில்கின் றான்காண்
மந்திரத்து மறைப்பொருளு மாயி னான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 1

சந்தித்தான் – பொருந்தினான்; அணிந்தான்.
பண்தரத்து – பந்தரத்து – இசை வகைகளை உடைய.
பாணி – தாளம்

பெரிய மேலைக் கடலால் ஒருபுறம் சூழப்பட்ட கோகரணத்தில் உகந்தருளியிருக்கும் எம்பெருமான் தாழ்ந்த சடையில் பிறையையும் கங்கையையும் அணிந்தவனாய், அடியார்களுக்கு அமுதாய் வானத்தில் உலவிய அசுரரின் முப்புரங்களையும் அழித்தவனாய், அழகிய உருவங்களின் மேம்பட்ட அழகுடைய உருவினனாய், இசைவகைகளை உடைய நான்கு வேதங்களையும் பாடினவனாய்த் தாளத்திற்கு ஏற்பக் கூத்து நிகழ்த்துபவனாய், மந்திரத்தை உடைய வேதமாகவும் உள்ளான்.

2575. தந்தவத்தன் தன்தலையைத் தாங்கி னான்காண்
சாரணன்காண் சார்ந்தார்க்கின் னமுதா னான்காண்
கெந்தத்தன் காண்கெடில வீரட் டன்காண்
கேடிலிகாண் கெடுப்பாற்மற் றில்லா தான்காண்
வெந்தொத்த நீறுமெய் பூசி னான்காண்
வீரன்காண் வியன்கயிலை மேவி னான்காண்
வந்தொத்த நெடுமாற்கும் அறிவொ ணான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 2

தந்த அத்தன். உலகத்தைப் பெற்ற தந்தை.
சாரணன் – எங்கும் சரிப்பவன்.
கெந்தத்தன் – மணம் போல்பவன்.

மேற்குக் கடலை அடுத்த கோகரணப் பெருமான் உலகைப் படைத்த பிரமனது மண்டையோட்டை ஏந்தி எங்கும் சஞ்சரிப்பவனாய், அடியவர்களுக்கு அமுதமாய், மலரில் மணம் போல எங்கும் பரவியவனாய், அதிகை வீரட்டனாய்த் தான் என்றும் அழிவில்லாதவனாய்த் தன்னை அழிப்பாரும் இல்லாதவனாய்த் திருநீறு பூசியவனாய்த் தவமாகிய பெருமிதம் உடையவனாய், பரந்த கயிலாயத்தை விரும்பி உறைபவனாய்த் தன்னிடத்துத் தோன்றித் தன் கருத்துக்கு ஏற்பக் காத்தல் தொழிலைச் செய்கின்ற திருமாலாலும் உள்ளபடி அறிய ஒண்ணாதவனாய் உள்ளான்.

2576. தன்னுருவம் யாவருக்குந் தாக்கா தான்காண்
தாழ்சடையெம் பெருமான்காண் தக்கார்க் குள்ள
பொன்னுருவச் சோதிபுன லாடி னான்காண்
புராணன்காண் பூதங்க ளாயி னான்காண்
மின்னுருவ நுண்ணிடையாள் பாகத் தான்காண்
வேழத்தி னுரிவெருவப் போர்த்தான் தான்காண்
மன்னுருவாய் மாமறைக ளோதி னான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 3

மன்உரு – நிலைபெற்ற
தாக்குதல் – எதிர்ப்படுதல்

மாகடல் சூழ் கோகரணம் மன்னிய பெருமான் தன் உருவை யார்க்கும் எதிர்ப்படச் செய்யாதவனாய்த் தாழ் சடையனாய், அடியார்களுக்கு அநுபவப் பொருளாகிய பொற்சோதியாய், கங்காதரனாய், பழையோனாய், ஐம்பூதங்களாய், மின்னல் போன்ற நுண்ணிய இடையை உடைய பார்வதி பாகனாய், யானையின் தோலை உமாதேவி அஞ்சுமாறு போர்த்தவனாய், என்றும் நிலை பெற்ற உருவமுடையவனாய், வேதங்களை ஓதிக்கொண்டு இருப்பவன் ஆவான்.

2577. ஆறேறு செஞ்சடையெம் ஆரூ ரன்காண்
அன்பன்காண் அணிபழனம் மேயான் றான்காண்
நீறேறி நிழல்திகழும் மேனி யான்காண்
நிருபன்காண் நிகரொன்று மில்லா தான்காண்
கூறேறு கொடுமழுவாட் படையி னான்காண்
கொக்கரையன் காண்குழுநற் பூதத் தான்காண்
மாறாய மதில்மூன்றும் மாய்வித் தான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 4

நிருபன் – அரசன். நிழல் – ஒளி
கூறுஏறு – பிளவு தோன்றுவதற்குக் கருவியாகிய

மாகடல் சூழ்கோகரணம் மன்னிய பெருமான் கங்கையைச் சடையில் சூடிய ஆரூரனாய்ப் பழனத்தில் உறைபவனாய், அன்பனாய்த் திருநீறணிந்து ஒளிவீசும் மேனியனாய், தலைவனாய், ஒப்பற்றவனாய், பிளவு தோன்றுதற்குக் கருவியாகிய மழுப்படை யினனாய், கொக்கரை என்ற வாத்தியத்தை உடையவனாய், மேம்பட்ட பூதக்கூட்டத்தை உடையனாய், பகையாகச் செயற்பட்ட மும்மதிலையும் அழித்து மறையச் செய்தவனாவான். மாறு – பகை.

2578. சென்றச் சிலைவாங்கிச் சேர்வித் தான்காண்
தீயம்பன் காண்திரி புரங்கள் மூன்றும்
பொன்றப் பொடியாக நோக்கி னான்காண்
பூதன்காண் பூதப் படையா ளிகாண்
**அன்றப் பொழுதே அருள்செய் தான்காண்**
அனலாடி காண்அடியார்க் கமுதா னான்காண்
மன்றல் மணங்கமழும் வார்சடை யான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 5

தீஅம்பு – அக்கினி தேவனாகிய அம்பு.
மன்றல் மணம் – நறுமணம்

மாகடல் சூழ்கோகரணம் மன்னிய பெருமான் திரிபுரங்களை நோக்கிச் சென்று மேரு மலையாகிய வில்லை வளைத்துத் தீயாகிய அம்பைச் செலுத்தி வானத்தில் திரிந்த மும்மதில்களும் சாம்பலாகுமாறு செய்தவனாய், உயிர்களை ஆளாக உடையவனாய், பூதப்படை உடையவனாய், அடியார்களுக்கு அன்றன்று அவ்வப்பொழுதே அருள் செய்தவனாய்த் தீயிடையே கூத்தாடுபவனாய், அடியவர் களுக்கு அமுதானவனாய், நறுமணம் கமழும் நீண்ட சடையை உடையவனாய் உள்ளான்.

**2579.** பிறையோடு பெண்ணொருபால் வைத்தான்
றான்காண்
பேரவன்காண் பிறப்பொன்று மில்லா
தான்காண்
கறையோடு மணிமிடற்றுக் காபா லிகாண்
கட்டங்கன் காண்கையிற் கபால மேந்திப்
பறையோடு பல்கீதம் பாடி னான்காண்
ஆடினான் காண்பாணி யாக நின்று
மறையோடு மாகீதங் கேட்டான் றான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே.
6

கறையோடு – நஞ்சுபொருந்திய
மறைகேட்டல் – பொருள் பற்றி.
கீதம் கேட்டல் – இனிமை பற்றி

மாகடல் சூழ்கோகரணம் மன்னிய பெருமான் சடைமுடியாகிய ஓரிடத்தில் பிறையையும் கங்கையையும் சேர்த்து வைத்த புகழோனாய், பிறப்பில்லாதவனாய், நஞ்சுபொருந்திய நீல கண்டனாய்க் காபாலக் கூத்து ஆடுபவனாய்க் கட்டங்கம் என்ற படை உடையவனாய்க் கையில் மண்டையோட்டை ஏந்திப் பறை ஒலிக்கப் பல பாடல்கள் பாடியவனாய், தாளத்திற்கு ஏற்ப ஆடியவனாய், அடியார்கள் ஓதும் வேத ஒலியையும் பாடும் பாடல் இசையையும் செவிமடுத்தவனாவன்.

**2580.** மின்னளந்த மேல்முகட்டின் மேலுற் றான்காண்
விண்ணவர்தம் பெருமான்காண் மேவி
லெங்கும்
முன்னளந்த மூவர்க்கும் முதலா னான்காண்
மூவிலைவேற் சூலத்தெங் கோலத்
தான்காண்
எண்ணளந்தென் சிந்தையே மேவி னான்காண்
ஏவலன்காண் இமையோர்க ளேத்த நின்று
மண்ணளந்த மாலறியா மாயத் தான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே.
7

முகடு – உச்சி. எண் – எண்ணம்.
ஏவலன் – அம்பு எய்தலில் வல்லவன்

மாகடல்சூழ் கோகரணம் மன்னிய பெருமான் ஒளிவீசும் அண்டச்சுவரின் மேலும் பொருந்தியவனாய்த் தேவர்கள் தலைவனாய், எவ்விடத்தையும் தம் தொழிலுக்கு உட்படுத்திய மூவருக்கும் காரணனாய், முத்தலைச்சூலம் ஏந்திய அழகினனாய், என் எண்ணத்தை அளந்து என் உள்ளத்தில் விரும்பி உறைபவனாய், அம்பு எய்தலில் வல்லவனாய்த் தேவர்கள் துதிக்குமாறு இருந்து, உலகை அளந்த திருமாலால் அறியப்பட முடியாத வியக்கத்தக்க நிலை உடையவனாக உள்ளான்.

**2581.** பின்னு சடைமேற்பிறை சூடி னான்காண்
பேரருளன் காண்பிறப்பொன் றில்லா
தான்காண்
முன்னி யுலகுக்கு முன்னா னான்காண்
மூவெயிலுஞ் செற்றுகந்த முதல்வன்
றான்காண்
இன்னவுரு வென்றறிவொண் ணாதான்
றான்காண்
ஏழ்கடலு மேழுலகு மாயி னான்காண்
மன்னும் மடந்தையோர் பாகத் தான்காண்
**மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே.**
8

மாகடல் சூழ் கோகரணம் மன்னினானே – பதிக மகுடம்.

மாகடல்சூழ் கோகரணம் மன்னிய பெருமான் இணைத்த சடைமீது பிறை சூடிப் பேரருளாளனாய்ப் பிறப்பிலியாய், உலகுக்குக் காரணனாய், மும்மதிலும் அழித்து மகிழ்ந்த முதல்வனாய்த் தன் உண்மை உருவை மற்றையார் அறிய இயலாத இயல்பினனாய், ஏழ்கடலும் ஏழ்உலகும் ஆயவனாய்ப் பார்வதி பாகனாய் உள்ளான்.

2582. வெட்ட வெடித்தார்க்கோர் வெவ்வழ லன்காண்
வீரன்காண் வீரட்டம் மேவி னான்காண்
பொட்ட அநங்கனையும் நோக்கி னான்காண்
பூதன்காண் பூதப் படையி னான்காண்
கட்டக் கடுவினைகள் காத்தாள் வான்காண்
கண்டன்காண் வண்டுண்ட கொன்றை யான்காண்
வட்ட மதிப்பாகஞ் சூடி னான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே.

9

வெடித்தல் – ஒலித்தல். கட்டவினை – துன்பம் தரும் வினை. கண்டன் – கண்டு (சருக்கரை) போன்றவன்.

மாகடல் சூழ்கோகரணம் மன்னிய பெருமான் வீணாக அடியவர்களை உரத்தகுழலில் இழித்துப் பேசுபவருக்குக் கொடிய நெருப்புப் போன்றவனாய்த் தவத்தின் பெருமிதம் உடையவனாய், வீரட்டத் தலங்களில் விரும்பியிருப்பவனாய், விரைவாக மன்மதனைச் சாம்பலாகுமாறு தீ விழித்தவனாய், ஐம்பூத வடிவினனாய்ப் பூதப் படையினனாய், தீங்குதரும் கொடிய வினைகள் தாக்காதவாறு காத்து அடியவர்களை ஆட்கொள்பவனாய், கற்கண்டு போன்ற இனியவனாய், வண்டு தேன் உண்ட கொன்றையைச் சூடியவனாய், பிறை சூடியாய் உள்ளான்.

2583. கையாற் கயிலை யெடுத்தான் தன்னைக்
கால்விரலால் தோள்நெரிய வூன்றி னான்காண்
மெய்யின் நரம்பிசையாற் கேட்பித் தாற்கு
மீண்டே யவற்கருள்கள் நல்கி னான்காண்
பொய்யர் மனத்துப் புறம்பா வான்காண்
**போர்ப்படையான் காண்பொருவாரில்லா தான்காண்**
மைகொள் மணிமிடற்று வார்சடை யான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே.

10

போர் செய்வதற்குரிய எல்லாப் படைக்கலங்களையும் உடையவன்; ஆயினும் அவற்றால் போர் செய்யப்படுவார் ஒருவரும் இல்லாதவன்; யாவரும் நெற்றிக்கண், புன்முறுவல், கைந்நகம், கால், கால்விரல் என்பவற்றுக்கே ஆற்றாராயினர்.

மாகடல் சூழ்கோகரணம் மன்னிய பெருமான் கைகளால் கயிலை மலையைப் பெயர்த்த இராவணனை, கால் விரலால் தோள்கள் நெரியுமாறு அழுத்தியவனாய், தன் உடம்பில் உள்ள நரம்புகளை வீணை நரம்புகளாகக் கொண்டு இன்னிசை எழுப்பி தன்னைச் செவிமடுக்கச்செய்த இராவணனுக்கு அருள்களை விரும்பிக் கொடுத்தவனாய்ப் பொய்யருடைய உள்ளங்களுக்கு அப்பாற்பட்டவனாய், போரிடுவதற்குரிய படைக்கலன் ஏந்தியவனாய், அவற்றால் போர் செய்யப்படுவார் ஒருவரும் இல்லாதானாய், நீலகண்டமும், நீண்ட சடையும் உடையவனாய், அடியார்கள் அகக்கண்ணுக்குத் தோற்றம் வழங்குகின்றான்.

## 50. திருவீழிமிழலை

(சிவபெருமானைச் சேராதவர் தீநெறி சென்று கெடுவர் என்று உணர்வித்தருளிச் செய்தது)

ப.தொ.எண் : 263 பதிக எண் : 50

2584. போரானை ஈருரிவைப் போர்வை யானைப்
புலியதளே யுடையாடை போற்றி னானைப்
பாரானை மதியானைப் பகலா னானைப்
பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற
நீரானைக் காற்றானைத்தீயா னானை
நினையாதார் புரமெரிய நினைந்த தெய்வத்
தேரானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 1

போர் ஆனை – போர் செய்யவந்த யானை; கயாசுரன். ஈர் உரிவை – உரித்த தோல். உடை – இடையில் உடுக்கப்படுவது. ஆடை மேலே இடப்படுவது. யானைத் தோலைப் போர்வையாகவும், புலித்தோலை உடுப்பதும், மேலே இடுவதும் ஆகிய கூறைகளாக இறைவன் கொண்டுள்ளான். "புலி அதளாகிய ஏய் (பொருந்திய) உடைஆடை" என்க.

தன்னை எதிர்த்து வந்த யானையின் உதிரப் பசுமை கெடாத தோலை மேலே போர்த்தி, புலித்தோலை ஆடையாக உடுத்தவனாய், நிலனாய்ச் சந்திரனாய்ச் சூரியனாய், வானவெளியாய், நீராய் காற்றாய்த் தீயாய்ப் பல உயிர்களாய் அட்ட மூர்த்தியாகப் பரந்து நிற்பவனாய், பகைவருடைய மும்மதில்களும் எரியுமாறு நினைத்த போது இவர்ந்து சென்ற தெய்வத்தேருடையவனான திருவீழி மிழலைப் பெருமானை அணுகி வழிபடாதவர்கள் தீய வழிகளிலேயே சென்று கெடுகின்றவர் ஆவார்கள்.

2585. சவந்தாங்கு மயானத்துச் சாம்ப லென்பு
தலையோடு மயிர்க்கயிறு தரித்தான் தன்னைப்
பவந்தாங்கு பாசுபத வேடத் தானைப்
பண்டமரர் கொண்டுகந்த வேள்வி யெல்லாங்
கவர்ந்தானைக் கச்சியே கம்பன் தன்னைக்
கழலடைந்தான் மேற்கறுத்த காலன் வீழச்
சிவந்தானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 2

மயிர்க்கயிறு – மயிரினாலாகிய பூணூல் – பஞ்சவடி. பவந்தாங்கு – பிறப்பைத் தடுக்கின்ற. கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப்பொருள் (தொல். சொல். 372)

பிணங்களை உடைய சுடுகாட்டுச் சாம்பல், எலும்பு மண்டையோடு பஞ்சவடி என்ற இவற்றை அணிந்தவனாய்ப் பிறப்பைத் தடுக்கின்ற பாசுபத மதத்தினர் விரும்பிக் கொள்ளும் வேடத்தைத் தரித்தவனாய்த் தன்னை ஒழிந்த தேவர்களைக் கொண்டு தக்கன் செய்த வேள்வியை அழித்தவனாய்க் கச்சி ஏகம்பனாய்த் தன் திருவடிகளைச் சார்ந்த அடியவனைக் கோபித்து வந்த கூற்றுவனைக் கீழே விழுமாறு அவனைக் கோபித்து உதைத்தவனாய்த் திருவீழிமிழலையில் உள்ள பெருமானை அடையாதவர் தீ நெறிக்கண் சேர்கின்றவராவர்.

**2586.** அன்றாலின் கீழிருந்தங் கறஞ்சொன் னானை
அகத்தியனை யுகப்பானை அயன்மால் தேட
நின்றானைக் கிடந்தகடல் நஞ்சுண் டானை
**நேரிழையைக் கலந்திருந்தே புலன்க ளைந்தும்**
**வென்றானை** மீயச்சூர் மேவி னானை
மெல்லியலாள் தவத்தினிறை யளக்க லுற்றுச்
சென்றானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 3

நிறை – திண்மை. உயிர்கட்கு போகம் அமைதல் வேண்டிப் போகவடிவம் கொண்டு போகி போல நிற்கும். அவ்வளவேயன்றி உண்மையில் போகியல்லன்.

"மங்கையோடிருந்து யோகு செய்வானை" திருவிசைப்பா.

ஒரு காலத்தில் கல்லால மரத்தின் கீழிருந்து அறத்தை உபதேசித்தவனாய், அகத்தியனை அவன் பெருமை தோன்ற உயரச் செய்தவனாய்ப் பிரமனும் திருமாலும் தேடுமாறு அனற் பிழம்பாய் நின்றவனாய், கடல்விடம் உண்டவனாய்ப் பார்வதியோடு சேர்ந்திருந்தே பொறிவாயில் ஐந்து அவித்தவனாய், மீயச்சூரை உறைவிடமாக விரும்பியவனாய்ப் பார்வதியின் தவத்தின் திண்மையை அளக்கச் சென்றவனாய்த் திருவீழிமிழலையில் எழுந்தருளியிருக்கும் பெருமானைச் சேராதார் தீ நெறிக்கண் செல்பவராவர்.

**2587.** தூயானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத்
தோன்றிய எவ்வுயிர்க்குந் துணையாய் நின்ற
தாயானைச் சக்கரமாற் கீந்தான் தன்னைச்
சங்கரனைச் சந்தோக சாமம் ஓதும்
வாயானை மந்திரிப்பார் மனத்து ளானை
வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்து வார்க்குச்
சேயானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 4

வஞ்சனை – பயனைத் தெரியாமல் ஐயுற்று

தூயனாய்ப் பவளத்தின் ஒளியை உடையவனாய், எல்லா உயிர்களுக்கும் துணையாக நின்ற தாயாய்த் திருமாலுக்குச் சக்கரம் ஈந்தவனாய், எல்லாருக்கும் நன்மை செய்பவனாய்ச் சந்தோகசாமம் ஓதுபவனாய், மந்திரங்களை எண்ணுபவர் மனத்து உறைபவனாய்த் திருவைந்தெழுத்தின் பயனைத் தெளியாது ஐயுற்று ஓதுபவர்களுக்குத் தொலைவில் உள்ளவனாய், உள்ள திருவீழிமிழலையானைச் சேராதார் தீய நெறிக்கண் செல்பவராவர்.

**2588.** நற்றவத்தின் நல்லானைத் தீதாய் வந்த
நஞ்சமுது செய்தானை அமுத முண்ட
மற்றமரர் உலந்தாலும் உலவா தானை
வருகாலஞ் செல்காலம் வந்த காலம்
உற்றவத்தை யுணர்ந்தாரும் உணர லாகா
ஒருசுடரை இருவிசும்பி னூர்மூன் றொன்றச்
செற்றவனைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 5

முக்காலமும் உணர்தல் யோகத்தாற்கூடும். இறைவனை உணர்தல் அவனருளே கண்ணாகக் காணும் ஞானத்தாலன்றி கூடாது. எனவே முக்காலமும் உணர்ந்தாலும் திருவருளன்றி அவரைக் காண முடியாது.

ஞானத்தின் பொருட்டுச் செய்யப்படும் தவத்திற்குப் பயன் அளிக்கும் பெரியவனாய், தீங்கு செய்வதாய் வந்த விடத்தை அமுதாக உண்டவனாய், அமுதமுண்ட தேவர்கள் இறந்தாலும் தான் இறவாதவனாய், முக்காலப் பொருள்களை உணரும் ஞானிகளும் உணர முடியாத ஒப்பற்ற ஞானப்பிரகாசனாய், வானத்தில் உலவிய மதில்கள் மூன்றையும் ஒரு சேர அழித்தவனாய், உள்ள திருவீழி மிழலையானைச் சேராதார் தீ நெறிக்கண் செல்பவர் ஆவர்.

**2589.** மைவான மிடற்றானை அவ்வான் மின்போல்
வளர்சடைமேல் மதியானை மழையா
யெங்கும்
பெய்வானைப் பிச்சாட லாடு வானைப்
பிலவாய பேய்க்கணங்க ளார்க்கச் சூலம்
பொய்வானைப் பொய்யிலா மெய்யன் தன்னைப்
பூதலமும் மண்டலமும் பொருந்து வாழ்க்கை
செய்வானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 6

பதிக மகுடம் – திருவீழிமிழலையானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே.

கரிய மேகம் போன்ற நீலகண்டனாய், வானத்து மின்னல் போலச் சடையில் ஒளிவீசும் பிறை அணிந்தவனாய், எங்கும் மழையாய் அருளைப் பொழிவானாய், எங்கும் சென்று பிச்சை எடுப்பானாய்ப் பள்ளம் போன்ற வாயை உடைய பேய்க் கூட்டங்கள் ஆரவாரிக்க நிறைந்த தூணியிலிருந்து அம்பைச் செலுத்துபவனாய்ப் பொய்கலவாத மெய்யனாய்ப் பூமியிலும் மேலுலகங்களிலும் பொருந்தும் வாழ்க்கையில் உயிர்களைப் பிறக்கச் செய்வானாய் உள்ள திருவீழிமிழலையானைச் சேராதார் தீ நெறிக்கண் செல்பவராவர்.

**2590.** **மிக்கானைக்** குறைந்தடைந்தார் மேவ லானை
வெவ்வேறாய் இருமூன்று சமய மாகிப்
புக்கானை எப்பொருட்கும் பொதுவா னானைப்
பொன்னுலகத் தவர்போற்றும் பொருளுக்
கெல்லாந்
தக்கானைத் தானன்றி வேறொன் றில்லாத்
தத்துவனைத் தடவரையை நடுவு செய்த
திக்கானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 7

எல்லோருக்கும் மேலானவனாய்க் குறையிரந்து வருபவர்களை விரும்பிக் குறைமுடிப்பவனாய், அறுவகை வைதிக சமயங்களாகவும் ஆகியவனாய், எல்லாப் பொருள்களுக்கும் பொதுவானவனாய்த் தேவர்களும் போற்றத்தக்கானாய்த் தன்னைத் தவிர வேறு மெய்ப்பொருள் இல்லாதவனாய், மேருமலையை நடுவாக வைத்துத் திசைகளைப் பகுக்கச் செய்தவனாய் உள்ள திருவீழிமிழலையானைச் சேராதார் தீ நெறிக்கண் செல்பவராவர்.

மிக்கான் – மேமேலான். குறைந்து – குறையுற்று; குறையிரந்து. 'அடைந்தாரை' என இரண்டாவது விரிக்க. மேவலான் – விரும்புதல் உடையவன்; இது, 'மேவல்' என்பது அடியாக வந்த பெயர்.

இரு மூன்று சமயம், ஆறு சமயங்கள், சமயங்களை ஆறாகக் கூறுதல் தொன்றுதொட்ட வழக்கு. ஆயினும் அவை இவை என்பதனை வேறுவேறாகக் கூறுவர்.

'சைவம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம், சாத்தேயம், சௌரம்' என்றல் ஒருவகை; இவை வேதத்திற் சொல்லப்பட்டு அவரவரால் வழிபடப்படும் கடவுளரைப் பற்றிக் கூறப்படுவன.

'வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம்' இவை உட்சமயங்கள் என்றும், 'உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பட்டாசாரியம்' இவை புறச் சமயங்கள் என்றும் கூறுதல் ஒருவகை (பிங்கல நிகண்டு). இவை பழைமை புதுமை பற்றிக் கூறப்படுவன.

இவையெல்லாம் இன்றி, 'புறப்புறம், புறம், அகப்புறம், அகம்' என நால்வகைப்படுத்து ஒவ்வொன்றனுள்ளும் அவ்வாறு சமயங்கள் சிவஞானமாபாடியத்துட் கூறப்பட்டன. எவ்வாறாயினும், சமயங்கள் ஆறு. எனவே யாண்டும் கூறப்படுதல் அறிக.

'பொருளுக்கு' 'பொருள்களுள்' என வேற்றுமை மயக்கம். தக்கான் – மேலானவன். தத்துவன் – உண்மை இயல்புடையவன். "தடவரை" என்றது, மேரு மலையை; அதனை நடுவாக வைத்தே நிலத்துத் திசைகள் பகுக்கப்படுதலின் "தடவரையை நடுவுசெய்த திக்கான்" என்றருளினார்.

2591. வானவர்கோன் தோளிறுத்த மைந்தன் தன்னை
வளைகுளமும் மறைக்காடும் மன்னி னானை
ஊனவனை உயிரவனை யொருநாட் பார்த்தன்
உயர்தவத்தின் நிலையறிய லுற்றுச் சென்ற
கானவனைக் கயிலாயம் மேவி னானைக்
கங்கைசேர் சடையானைக் கலந்தார்க் கென்றுந்
தேனவனைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 8

இந்திரனுடைய தோள்களை நீக்கிய வலிமை உடையவனாய், வலைகுளம் மறைக்காடு என்ற தலங்களில் உறைபவனாய், உடலாகவும் உயிராகவும் இருப்பவனாய், ஒரு காலத்தில் அருச்சுனனுடைய தவத்தின் உறுதி நிலையை அறியச் சென்ற வேடுவனாய்க் கயிலாயத்தை விரும்பி உறைபவனாய்க் கங்கை தங்கிய சடையினனாய்த் தன்னைச் சேர்ந்தவர் களுக்குத் தேன் போல இனியவனாய், உள்ள திருவீழிமிழலையானைச் சேராதார் தீ நெறிக்கண் செல்பவராவர்.

2592. பரத்தானை யிப்பக்கம் பலவா னானைப்
பசுபதியைப் பத்தர்க்கு முத்தி காட்டும்
வரத்தானை வணங்குவார் மனத்து ளானை
மாருதமால் எரிமூன்றும் வாய்அம் பீர்க்காஞ்
சரத்தானைச் சரத்தையுந்தன் தாட்கீழ் வைத்த
தபோதனனைச் சடாமகுடத் தணிந்த பைங்கட்
சிரத்தானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 9

மாயைக்கு அப்பாற்பட்ட நிலையில் உள்ளவனாய், மாயைக்கு இப்பால் அளவற்ற வடிவங்களும் உடையவனாய், ஆன்மாக் களுக்குத் தலைவனாய், அடியவர்களுக்கு முத்தி நிலையைக் காட்டும் மேம்பட்டவனாய்த் தன்னை வணங்குபவர் மனத்து இருப்பவனாய், வாயுதேவன், திருமால், அக்கினி தேவன் இம்மூவரையும் முறையே அம்பின் சிறகாகவும் அம்பாகவும், அம்பின் கூரிய நுனியாகவும் கொண்டவனாய், அந்த அம்பையும் பயன்படுத்தாது விடுத்த தவச்செல்வனாய்த் தாருகவனத்து முனிவர் விடுத்த வெண்தலையைச் சடைமுடியில் அணிந்தவ னாய்த் திருவீழிமிழலையில் உள்ள பெருமானைச் சேராதார் தீ நெறிக்கண் செல்பவராவர்.

**2593.** அறுத்தானை அயன்தலைகள் அஞ்சி லொன்றை
அஞ்சாதே வரையெடுத்த அரக்கன் தோள்கள்
இறுத்தானை யெழுநரம்பி னிசைகேட் டானை
இந்துவினைத் தேய்த்தானை இரவி தன்பல்
பறித்தானைப் **பகீரதற்காய் வானோர் வேண்டப்**
பரந்திழியும் புனற்கங்கை பனிபோ லாங்குச்
செறித்தானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 10

பிரமனுடைய ஐந்தலைகளுள் ஒன்றனை அறுத்தானாய், அஞ்சாமல் கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணன் தோள்களை முரித்து அவன் இசைத்த நரம்பின் ஒலியைக் கேட்டவனாய்த் தக்கன் வேள்வியில் சந்திரனைக் காலால் தேய்த்தவனாய், சூரியன் ஒருவனுடைய பற்களை உடைத்தவனாய்ப் பகீரதனுக்காகவும் தேவர்கள் வேண்டியதற் காகவும் பரவலாக இறங்கிவந்த கங்கையைப் பனித்துளி போலத் தன் சடையில் அடக்கியவனாய், உள்ள திருவீழிமிழலையில் உள்ள பெருமானைச் சேராதார் தீ நெறிக்கண் செல்பவராவர்.

"ஒன்றை அறுத்தானை" எனக் கூட்டுக. இறுத்தான் – முறித்தான். இசை, அவன் (இராவணன்) பாடியது. இந்து – சந்திரன். இரவி – சூரியன். சந்திர சூரியரை ஒறுத்தது தக்கன் வேள்வியில். 'கங்கைப் புனல்' என மாற்றிக்கொள்க. 'பனி போல்' என்றது. 'புல் நுனிமேற் பனித்துளிபோல' என்றபடி. ஆங்கு – அப்பொழுதே. 'பனி போலாக' என்பதும் பாடம். செறித்தான் – அடக்கினான்.

'பகீரதற்காகவும், வானோர் வேண்டவும்' என எண்ணுப் பொருளாகக் கொள்க. சிவபிரான் கங்கையைச் சடையில் அடக்கியதற்கு, இவ்விரு காரணங்களும் புராணங்களுட் பெறப்படுகின்றன. அவற்றுட் பகீரதற்காக நிகழ்ந்தது மேலே (ப. 34. பா. 10) குறித்தாம். வானோர் வேண்ட அடக்கியது, "உமையம்மை விளையாட்டால் சிவபிரானது கண்களைப் பொத்திய ஞான்று உலகில் மூடிய இருளை நீக்குதற்கு அப்பெருமான் நெற்றிக் கண்ணைத் திறந்தபொழுது அம்மை அஞ்சி பெயர்த்துக் கைகளை வாங்கி விதிர்க்க, அக் கைகளின் விரல்கள் பத்தினும் பத்துக் கங்கைகள் தோன்றிப் பெருகி உலகை அழிக்கத் தொடங்குதலும், அதனையறிந்து அஞ்சிய வானோர் வந்து வேண்டிக்கொண்டமையின், சிவபிரான் அவைகள் அனைத்தையும் ஒன்றாக்கி வருவித்துச் சடையில் ஏற்றனன்" என்பது.

இத் திருத்தாண்டகம், சிவபிரானது எல்லாம்வல்ல தன்மையை எடுத்தோதி, 'அவனை அடையாதார்க்கு உய்யும் நெறி வேறு உண்டாவதில்லை' என அறிவுறுத்தருளியதாதல் அறிக.

## 51. திருவீழிமிழலை

ப.தொ.எண் : 264 பதிக எண் : 51

2594. கயிலாய மலையுள்ளார் காரோ ணத்தார்
கந்தமா தனத்துளார் காளத்தி யார்
மயிலாடு துறையுளார் மாகா ளத்தார்
வக்கரையார் சக்கரம்மாற் கீந்தார் வாய்ந்த
அயில்வாய சூலமுங் காபா லமும்
அமருந் திருக்கரத்தார் ஆனே றேறி
வெயிலாய சோதி விளங்கு நீற்றார்
வீழி மிழலையே மேவி னாரே. 1

திருமாலுக்குச் சக்கரம் ஈந்த பெருமானார், கூரிய நுனியினை உடைய சூலமும் மண்டையோடும் விளங்கும் திருக்கைகளை உடையவராய், காளையை இவர்ந்து வெயில்போல ஒளிவீசும் நீற்றினைப் பூசிக் கயிலை மலை, நாகை குடந்தைக் காரோணங்கள், கந்தமாதனம், காளத்தி, மயிலாடுதுறை, இரும்பை அம்பர் மாகாளங்கள், வக்கரை இவற்றில் தங்கித் திருவீழிமிழலையை விரும்பி வந்தடைந்தார்.

கந்தமாதனம் – ஒரு மலை. நெய்தலும், குறிஞ்சியும் மயங்கிய திணைப் பகுதி. தேவார வைப்புத்தலம். வீரவாகுத்தேவர் சூரபதுமன்பால் தூது சென்ற போது கந்தமாதன மலையில் ஒரு பேருருவம் எடுத்து நின்று, வீரமகேந்திரபுரியையும் பிறவற்றையும் நோக்கினாரென்றும், அவ்வாறு அவர் நிற்றலை ஆற்றாது அம்மலைகீழ் ஆழ்ந்து, பின் அவர், எழுக! என்று வழங்கிய அருளால் மீண்டும் முன்போல மேலே எழுந்ததென்றும் வரும் வரலாறுகள் கந்தபுராணத்துள் பேசப்பட்டுள்ளன.

2595. பூதியணி பொன்னிறத்தர் பூண நூலர்
பொங்கரவர் சங்கரர்வெண் குழையோர்
காதர்
கேதிசரம் மேவினார் கேதா ரத்தார்
கெடில வடஅதிகை வீரட் டத்தார்
**மாதுயரந் தீர்த்தென்னை உய்யக் கொண்டார்**
மழபாடி மேய மழுவா ளனார்
வேதிகுடி யுள்ளார் மீயச் சூரார்
வீழி மிழலையே மேவி னாரே. 2

கெடிலக்கரையிலுள்ள அதிகை வீரத்தானப் பெருமான் பெருந்துயரைத் தீர்த்து என்னை வாழச் செய்தவராய்ப் பொன்னார் மேனியில் நீறு பூசி, பூணூல் தரித்து, கோபம் மிக்க பாம்பினை அணிந்து, காதில் வெண்குழையை இட்டு, எல்லோருக்கும் நன்மை செய்பவராய், கேதீச்சரம், கேதாரம், மழு ஏந்தும் மழபாடி, வேதிகுடி, மீயச்சூர் இவற்றில் தங்கித் திருவீழிமிழலையை விரும்பி வந்தடைந்தார்.

பதிக மகுடம் – வீழிமிழலையே மேவினாரே.
நாயனாரது சரித அகச்சான்று.

2596. அண்ணா மலையமர்ந்தார் ஆரூ ருள்ளார்
அளப்பூரார் அந்தணர்கள் மாடக் கோயில்
உண்ணா ழிகையார் உமையா ளோடும்
இமையோர் பெருமானார் ஒற்றி யூரார்
பெண்ணா கடத்துப் பெருந்தூங் கானை
மாடத்தார் கூடத்தார் பேரா வூரார்
விண்ணோர்க ளெல்லாம் விரும்பி யேத்த
வீழி மிழலையே மேவி னாரே. 3

இமையோர் பெருமானார் உமையாளோடும் தேவர்கள் எல்லோரும் விரும்பித் துதிக்க அண்ணாமலை, ஆரூர், அளப்பூர், அந்தணர்கள் மிக்க வைகல், மாடக்கோயிலின் மூலத்தானம், ஒற்றியூர், பெண்ணாகடத்துத் தூங்கானை மாடம், ஏமகூடம், பேராவூர் இவற்றில் தங்கித் திருவீழிமிழலையை விரும்பி வந்து அடைந்தார்.

உண்ணாழிகை – மூலத்தானம்

**2597.** வெண்காட்டார் செங்காட்டங் குடியார் வெண்ணி
நன்னகரார் வேட்களத்தார் வேத நாவார்
பண்காட்டும் வண்டார் பழனத் துள்ளார்
பராய்த்துறையார்சிராப்பள்ளி யுள்ளார் பண்டோர்
**வெண்கோட்டுக் கருங்களிற்றைப்** பிளிறப் பற்றி
யுரித்துரிவை போர்த்த விடலை வேடம்
விண்காட்டும் பிறைநுதலி அஞ்சக் காட்டி
வீழி மிழலையே மேவி னாரே. 4

விடலை – காளை
வண்டார் – வண்டுகள் ஒலிக்கின்ற
வெண்கோட்டுக் கருங்களிறு – முரண் அணி

வேதம் ஓதும் நாவினராய், முன்பு வெண்கோட்டுக் கருங்களிறு ஒன்றை அது பேரொலி செய்யுமாறு பற்றி, அதன் தோலை உரித்துப் போர்த்திய கோபமுற்ற வடிவினைப் பிறை போன்ற நெற்றியை உடைய உமாதேவி அஞ்சுமாறு காட்டி, வெண்காடு, செங்காட்டங்குடி, வெண்ணி, வேட்களம், வண்டுகள் பண்பாடும் பழனம், பராய்த்துறை, சிராப்பள்ளி இவற்றில் தங்கிய பெருமான் திருவீழிமிழலையை விரும்பி வந்தடைந்தார்.

---

**2598.** புடைசூழ்ந்த பூதங்கள் வேதம் பாடப்
புலியூர்ச்சிற் றம்பலத்தே நடமா டுவார்
உடைசூழ்ந்த புலித்தோலர் கலிக்கச்சிமேற்
றளியுளார் குளிர்சோலை யேகம் பத்தார்
கடைசூழ்ந்து பலிதேருங் கங்கா ளனார்
கழுமலத்தார் செழுமலர்த்தார்க் குழலி யோடும்
விடைசூழ்ந்த வெல்கொடியார் மல்கு செல்வ
வீழி மிழலையே மேவி னாரே. 5

கலி – ஒலி

தம்மைச் சுற்றிப் பூதங்கள் வேதம் பாடப் புலியூர்ச் சிற்றம்பலத்தே கூத்து நிகழ்த்தும் பெருமான், புலித்தோலை உடுத்துக் கச்சிமேற்றளி, குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த ஏகம்பம், கழுமலம் இவற்றில் வீடுகள் தோறும் பிச்சைக்கு உலவும், முழு எலும்புக் கூட்டைத் தோளில் அணிந்த வடிவத்தாராய், மலர் மாலையை அணிந்த கூந்தலை உடைய பார்வதியோடும் காளை வடிவம் எழுதப்பட்ட கொடியோடும் செல்வம் மிகும் திருவீழிமிழலையை விரும்பி வந்தடைந்தார்.

---

**2599.** பெரும்புலியூர் விரும்பினார் பெரும்பா ழிய்யார்
பெரும்பற்றப் புலியூர்மூ லட்டா னத்தார்
இரும்புதலார் இரும்பூளை யுள்ளார் ஏரார்
இன்னம்ப ரார்ஈங்கோய் மலையார் இன்சொற்
கரும்பனையாள் உமையோடுங் கருகா வூரார்
கருப்பறிய லூரார் கரவீ ரத்தார்
விரும்பமரர் இரவுபகல் பரவி யேத்த
வீழி மிழலையே மேவி னாரே. 6

கரும்பு போன்று இனிய உமாதேவியோடு பெரும்புலியூரை விரும்பிய பெருமான், பெரும்பற்றப்புலியூர் மூலத்தானம், அரதைப்பெரும்பாழி, இரும்புதல், இரும்பூளை, இன்னம்பர், ஈங்கோய்மலை, கருகாவூர், கருப்பறியலூர், கரவீரம் என்ற இடங்களில் தங்கித் தம்மை விரும்பும் தேவர்கள் இரவும் பகலும் முன்னின்று புகழ்ந்து துதிக்குமாறு திருவீழிமிழலையையே விரும்பி அடைந்தார்.

2600. மறைக்காட்டார் வலிவலத்தார் வாய்மூர் மேயார்
வாழ்கொளி புத்தூரார் மாகா ளத்தார்
கறைக்காட்டுங் கண்டனார் காபா லிய்யார்
கற்குடியார் விற்குடியார் கானப் பேரார்
பறைக்காட்டுங் குழிவிழிகண் பல்பேய் சூழப்
பழையனூர் ஆலங்காட் டடிகள் பண்டோர்
மிறைக்காட்டுங் கொடுங்கோலன் வீடப் பாய்ந்தார்
வீழி மிழலையே மேவி னாரே. 7

பறைக்காட்டும் – பறை போலத் தோன்றும்
மிறை – துன்பம்

பழையனூர் ஆலங்காட்டுப் பெருமானார் மண்டை ஓட்டினை ஏந்திப் பறையைப் போல குழிந்த விழிகளை உடைய பேய்கள் பல சூழ, நீலகண்டராய், மார்க்கண்டேயனுக்குத் துன்பம் தரவந்த காலன் அழியுமாறு அவனை ஒறுத்து, மறைக்காடு, வலிவலம், வாய்மூர், வாழ்கொளிபுத்தூர், உஞ்சேனி இரும்பை அம்பர் மாகாளங்கள், கற்குடி, விற்குடி, கானப்பேர் இவற்றில் தங்கி வீழிமிழலையை விரும்பி வந்தடைந்தார்.

2601. அஞ்சைக் களத்துள்ளார் ஐயாற் றுள்ளார்
ஆரூரார் பேரூரார் அழுந்தூ ருள்ளார்
தஞ்சைத் தளிக்குளத்தார் தக்க ளூரார்
சாந்தை அயவந்தி தங்கி னார்தாம்
நஞ்சைத் தமக்கமுதா வுண்ட நம்பர்
நாகேச் சரத்துள்ளார் நாரை யூரார்
வெஞ்சொற் சமண்சிறையி லென்னை மீட்டார்
வீழி மிழலையே மேவி னாரே. 8

பெருமானார் விடத்தைத் தமக்கு அமுதமாக உண்டு நம்மைப் பாதுகாத்தமையால் நம்மால் விரும்பப்படுபவராய்க் கொடிய சொற்களை உடைய சமணசமயச் சிறையிலிருந்து என்னை மீட்டவராய், அஞ்சைக்களம், ஐயாறு, ஆரூர், பேரூர், அழுந்தூர், தஞ்சைத்தளிக்குளம், தக்களூர், சாத்தமங்கையிலுள்ள திருக்கோயிலாகிய அயவந்தி, நாகேச்சரம், நாரையூர் இவற்றில் தங்கி, திருவீழிமிழலையை விரும்பி வந்தடைந்தார்.

2602. கொண்டலுள்ளார் கொண்டீச் சரத்தி னுள்ளார்
கோவலூர் வீரட்டங் கோயில் கொண்டார்
தண்டலையோர் தலையாலங் காட்டி லுள்ளார்
தலைச்சங்கைப் பெருங்கோயில் தங்கி னார்தாம்
வண்டலொடு மணற்கொணரும் பொன்னி நன்னீர்
வலஞ்சுழியார் வைகலின்மேல் மாடத் துள்ளார்
வெண்டலைகைக் கொண்ட விகிர்த வேடர்
வீழி மிழலையே மேவி னாரே. 9

விகிர்த வேடம் – வேறுபட்ட வேடம்

வெள்ளிய மண்டையோட்டைக் கையில் ஏந்திய, உலகத்தார் கொள்ளும் வேடங்களிலிருந்து வேறுபட்ட வேடத்தை உடைய பெருமானார், கொண்டல், கொண்டீச்சரம், கோவலூர் வீரட்டம், சோலைகள் சூழ்ந்த தலையாலங்காடு, தலைச்சங்காடு, காவிரி வண்டலொடு மணலைக் கரையில் சேர்க்கும் திருவலஞ்சுழி, வைகல் மாடக்கோயில் ஆகிய தலங்களில் தங்கி திருவீழிமிழலையை விரும்பி வந்தடைந்தார்.

2603. அரிச்சந் திரத்துள்ளார் அம்ப ருள்ளார்
அரிபிரமர் இந்திரர்க்கும் அரிய ரானார்
புரிச்சந்தி ரத்துள்ளார் போகத் துள்ளார்
பொருப்பரையன் மகளோடு விருப்ப ராகி
எரிச்சந்தி வேட்கு மிடத்தார் ஏம
கூடத்தார் பாடத்தே னிசையார் கீதர்
விரிச்சங்கை யெரிக்கொண்டங் காடும் வேடர்
வீழி மிழலையே மேவி னாரே. 10

ஏமகூடம் – திருஏமகூடமலை. முருகப்பெருமான் சூரனோடு போர் புரிவது கருதித் திருச்செந்தூர் செல்லும் வழியில் இலங்கையில் வீரமகேந்திரபுரம் என்னும் சூரன் ஊருக்குச் சற்று முன்னர் போய் அங்கு பாடி வீடு ஒன்று உளதாக்கிப் போர்முகத்தராய் எழுந்தருளியிருந்த இடம் ஏமகூடம் எனப்படும். "ஓர் கோநகர் இயற்றியே நாடு மேமகூடமென்று நாமமொன்று நாட்டினான்" (கந்தபுராணம் – ஏமகூடப்படலம் : 33). இந்நாளில் இவ்வூர் கதிர்காமம் என்று வழங்கப்படுகிறது.

திருமால், பிரமன், இந்திரன் என்பவர்களுக்குக் காண்டற்கு அரியராய் உள்ளாராய், உலகவர் நுகரும் எல்லா இன்பங்களிலும் கலந்திருப்பாராய், இமவான் மகளாகிய பார்வதியிடத்து விருப்பமுடையவராய், மூன்று சந்திகளிலும் தீயை ஓம்பும் வேள்விச் சாலைகளில் உகந்திருப்பவராய், தாம் சூடிய மாலைகளில் வண்டுகள் பாட ஏழிசையும் பொருந்திய பண்களைப் பாடுபவராய், உள்ளங்கையை விரித்து அதன்கண் அனலை ஏந்தி ஆடும் வேடம் உடையவராய்ச் சிவபெருமான், அரிச்சந்திரம், அம்பர்மாகாளம், புரிச்சந்திரம், ஏமகூடம் இவற்றில் தங்கி திருவீழிமிழலையை விரும்பி வந்தடைந்தார்.

2604. புன்கூரார் புறம்பயத்தார் புத்தூ ருள்ளார்
பூவணத்தார் புலிவலத்தார் வலியின் மிக்க
தன்கூர்மை கருதிவரை யெடுக்க லுற்றான்
தலைகளொடு மலைகளன்ன தாளுந் தோளும்
பொன்கூருங் கழலடியோர் விரலா லூன்றிப்
பொருப்பதன்கீழ் நெரித்தருள்செய் புவன நாதர்
மின்கூருஞ் சடைமுடியார் விடையின் பாகர்
வீழி மிழலையே மேவி னாரே. 11

பாகர் – செலுத்துவோர், முதல்வர்

ஒளிவீசும் சடைமுடி உடையவராய், காளையை வாகனமாக உடையவராய், வலிமை மிக்க தன் ஆற்றலை நினைத்துக் கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணனுடைய மலைகளை ஒத்த தலைகளையும் தோள்களையும் தாள்களையும் பொற்கழலணிந்த தம் திருவடியின் ஒரு விரலை ஊன்றி மலையின் கீழ் நொறுங்குமாறு செய்து, பின் அவனுக்கு அருள் செய்த உலக நாயகர், புன்கூர், புறம் பயம், புத்தூர், பூவணம், புலிவலம் இவற்றில் தங்கி, திருவீழிமிழலையை விருப்புற்று வந்தடைந்தார்.

## 52. திருவீழிமிழலை

ப.தொ.எண் : 265 பதிக எண் : 52

2605. **கண்ணவன்காண்** கண்ணொளிசேர் காட்சி யான்காண்
கந்திருவம் பாட்டிசையிற் காட்டு கின்ற
பண்ணவன்காண் பண்ணவற்றின் திறலா னான்காண்
பழமாகிச் சுவையாகிப் பயக்கின் றான்காண்
மண்ணவன்காண் தீயவன்காண் நீரா னான்காண்
வந்தலைக்கும் மாருதன்காண் மழைமே கஞ்சேர்
விண்ணவன்காண் விண்ணவர்க்கு மேலா னான்காண்
விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 1

திருமாலால் விண்ணுலகிலிருந்து கொண்டு வந்து நிறுவப்பெற்ற விமானத்தை உடைய குளிர்ந்த வீழிமிழலையில் உள்ள பெருமான், கண்ணாய் கண்ணினது ஒளிசேர்தலால் உண்டாகும் காணுதல் தொழிலாய்ப் பாட்டின்கண் உள்ள இசையாகிய இலக்கியத்தில் வைத்துக் காட்டப்படுகின்ற பண்ணாய், அப்பண்களின் உட்பிரிவுகளாய்ப் பழமாய்ச் சுவையாய்ப் பயன்தருகின்றவனாய், மண், நீர், தீ எல்லாவற்றையும் அசைக்கும் காற்று, நீர் உட்கொண்ட மேகம் சேரும் வானம் என்ற ஐம்பூதங்களாய், தேவர்களுக்கு மேம்பட்டவனாய் உள்ளான்.

"கண்ணவன்" முதலியவற்றில் "அகரம்", சாரியை. இறைவன் உயிர்களோடும் உலகத்தோடும் பொருந்தி நிற்கும் நிலையில், கலப்பினால் அப்பொருள்களேயாகியும், தன் தன்மையால் தானேயாகியும், அவைகளை உடன்நின்று இயக்கும் முறையால் அவைகளும் தானுமாகியும் நிற்பன். இந்நிலைகள் முறையே 'ஒன்றாய் (அபேதமாய்), வேறாய் (பேதமாய்), உடனாய் (பேதா பேதமாய்) நிற்றல்' எனக் கூறப்படும். இங்ஙனம், 'பேதம், அபேதம், பேதாபேதம்' என்னும் மூன்று நிலையும் தோன்ற, அம்மூன்றற்கும் பொதுவாய்ப் பொருந்தி நிற்கும் நிலையே, 'அத்வைத சம்பந்தம்' எனப்படுகின்றது. "பிரமப் பொருள் ஒன்றே; அஃது அத்விதீயம்" என்னும் உபநிடத வாக்கியத்திற்கும் இதுவே பொருளாகும். இதுபற்றி வேறுவேறு கூறுவார் கூறுவனவெல்லாம் பொருந்தாமையை ஆசிரியர் மெய்கண்ட தேவநாயனார், தமது அரிய சிவஞானபோத நூலாலும், அருணந்தி தேவ நாயனார் முதலிய அருள்மாணாக்கர்களுக்குச் செய்த உபதேசத்தாலும் இனிது விளங்கச் செய்தார். அதனால், அம்முதல்நூலின் பாடியத்தாலும், வழிநூல் சார்பு நூல்களாலும் மேற்குறித்த பொருள் யாவரும் அறிய இனிது விளங்கித் திகழ்கின்றது. அவ்விளக்கங்களை உணர வேண்டுவார், அந்நூல்களிலும், பாடியத்திலும் பரக்கக் கண்டுகொள்க.

இவ்வத்துவித நிலையில், இறைவன் கலப்பினால் உலகமேயாய் நிற்கும் அபேதநிலையே, முதற்கண், உலகத்தை நிலைபெறுவித்தற்கு இன்றியமையாததாதல் பற்றி அதனையே அருளாசிரியர்கள் பெரும்பான்மையாகப் பலவிடங்களில் அருளிச் செய்வர்; அவ்வாறு வருவது இத்திருப்பதிகம் ஆதலின், "கண்ணவன் காண்" என்பதை, 'கண்ணாகி உள்ளவன்' என்று பொருள் கொள்வது போலப் பிற

சொற்களுக்கும் பொருள் கொள்க. இதற்கு முன்னும் பின்னும் இவ்வாறு பல திருப்பதிகங்கள் இருத்தலையும் அறிந்து கொள்க.

கண் ஒளிசேர் காட்சி – கண்ணினது ஒளி சேர்தலால் உண்டாகும் காணுதற் றொழில். கந்திருவம் – இசையிலக்கண நூல். பாட்டு இசையில் காட்டுகின்ற – (அந்நூல்) பாட்டின்கண் உள்ள இசையாகிய இலக்கியத்தில் வைத்துத் தெரிவிக்கின்ற.

திறல் – திறம்; இசை, 'பண், திறம், திறத்திறம்' என மூவகைப் படுதலின், திறத்தையும் திறத்திறத்தையும், "திறல்" என்றருளினார். 'திறமானான் என்பதே பாடம்' எனினும் அமையும். பயக்கின்றான் – பயன் தருகின்றான். மாருதன் – காற்றாய் உள்ளவன். திருவீழிமிழலைக் கோயிலின் விமானம், திருமாலால் விண்ணுலகத்திலிருந்து கொணர்ந்து நிறுவப்பட்டதாகலின், "விண் இழி தண் வீழிமிழலை" என்றருளிச் செய்தார்.

**2606.** ஆலைப் படுகரும்பின் சாறு போல
அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத் தான்காண்
சீல முடையடியார் சிந்தை யான்காண்
திரிபுரமூன் றெரிபடுத்த சிலையி னான்காண்
பாலினொடு தயிர்நறுநெய் யாடி னான்காண்
பண்டரங்க வேடன்காண் பலிதேர் வான்காண்
வேலை விடமுண்ட மிடற்றி னான்காண்
விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 2

வேலை – கடல்

விண்ணிழி தண் வீழிமிழலையான் ஆலையினின்றும் ஒழுகுகின்ற கரும்பின் சாறு போலத் தித்திக்கும் திருவைந்தெழுத்தைத் தனக்குப் பெயராக உடையவனாய், நற்பண்புடைய அடியவர்களின் உள்ளத்தில் இருப்பவனாய், வானில் திரியும் மும்மதில்களையும் தீக்கு இரையாக்கிய வில்லை உடையவனாய், பால், தயிர், நெய் இவற்றால் அபிடேகிக்கப்படுபவனாய், பண்டரங்கக் கூத்தாடுபவனாய், சாம்பலை உடல் முழுதும் பூசிய வடிவினனாய்ப் பிச்சை எடுப்பவனாய், கடல் விடம் உண்டதால் நீலகண்டனாய் உள்ளான்.

| | |
|---|---|
| 2607. தண்மையொடு வெம்மைதா னாயி னான்காண்<br>சக்கரம்புட் பாகற் கருள்செய் தான்காண்<br>கண்ணுமொரு மூன்றுடைய காபாலிகாண்<br>காமனுடல் வேவித்த கண்ணி னான்காண்<br>எண்ணில்சமண் தீர்த்தென்னை யாட்கொண்<br>டான்காண்<br>இருவர்க் கெரியா யருளி னான்காண்<br>விண்ணவர்கள் போற்ற இருக்கின் றான்காண்<br>**விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 3**<br><br>புட்பாகன் – கருடனை ஊர்பவன், திருமால்.<br>பதிக மகுடம் – விண்ணிழி தண் வீழிமிழலை யானே. | விண்ணிழி தண் வீழிமிழலையான் தண்மை வெம்மை என்ற இரு திறமும் உடையவனாய்த் திருமாலுக்குச் சக்கரத்தை அருளியவனாய், மூன்று கண்களை உடையவனாய், காபாலக்கூத்து ஆடுபவனாய்க் காமன் உடலைச் சாம்பலாக்கிய நெற்றிக்கண்ணனாய், என் உள்ளத்தில் இருந்த சமண சமயப் பற்றினை நீக்கி என்னை ஆட்கொண்டவனாய், பிரமன் திருமால் இருவருக்கும் தீம்பிழம்பாய்க் காட்சி வழங்கியவனாய்த் தேவர்கள் துதிக்குமாறு உள்ளான். |
| 2608. காதிசைந்த சங்கக் குழையி னான்காண்<br>கனக மலையனைய காட்சி யான்காண்<br>மாதிசைந்த மாதவமுஞ் சோதித் தான்காண்<br>வல்லேன வெள்ளெயிற்றா பரணத்<br>தான்காண்<br>ஆதியன்காண் அண்டத்துக் கப்பா லான்காண்<br>ஐந்தலைமா நாகம்நாண் ஆக்கி னான்காண்<br>வேதியன்காண் வேதவிதி காட்டி னான்காண்<br>விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 4<br><br>எயிறு – பல்; கொம்பு. ஏனம் – பன்றி.<br>கனக மலை–பொன்மலை | விண்இழி தண் வீழிமிழலையான் காதில் சங்கக் குழை அணிந்தவனாய்ப் பொன்மலை போன்ற உருவத்தானாய்ப் பார்வதியின் மேம்பட்ட தவத்தைச் சோதித்தவனாய், வலிய பன்றியின் வெள்ளிய கொம்பினை அணியாக அணிந்தவனாய், எல்லாவற்றிற்கும் முற்பட்டவனாய், அண்டங்களையும் கடந்து பரந்தவனாய், ஐந்தலைப் பாம்பினைத் தன் வில்லுக்கு நாணாகக் கொண்டவனாய், வேதம் ஓதுபவனாய், வேத நெறியை உலகிற்கு உபதேசித்தவனாய் உள்ளான். |
| 2609. நெய்யினொடு பாலிளநீ ராடி னான்காண்<br>**நித்தமண வாளனென நிற்கின் றான்காண்**<br>கையின்மழு வாளொடுமா னேந்தி னான்காண்<br>காலனுயிர் காலாற் கழிவித் தான்காண்<br>செய்யதிரு மேனிவெண் ணீற்றி னான்காண்<br>செஞ்சடைமேல் வெண்மதியஞ் சேர்த்தி<br>னான்காண்<br>வெய்ய கனல்விளையாட் டாடி னான்காண்<br>விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 5<br><br>நித்த மணவாளன் – நிரந்தர மணக்கோலம் உடையவன்.<br>"நித்த மணாளர் நிரம்ப அழகியர்" திருவாசகம் | விண்இழி தண்வீழிமிழலையான் நெய், பால், இளநீர் இவற்றால் அபிடேகிக்கப்பட்டவனாய், நித்திய கல்யாணனாகக் காட்சி வழங்குகின்றவனாய், கைகளில் மழுவும் மானும் ஏந்தியவனாய்க் காலன் உயிரைத் தன் காலால் போக்கியவனாய்ச் சிவந்த அழகிய திருமேனியில் வெண்ணீறு அணிந்தவனாய்ச் செஞ்சடைமேல் வெண்பிறையைச் சேர்த்தியவனாய், சூடான தீயில் திருகூத்தாடுபவனாய் உள்ளான். |

2610. கண்துஞ்சுங் கருநெடுமால் ஆழி வேண்டிக்
கண்ணிடந்து சூட்டக்கண் டருளு
வான்காண்
வண்டுண்ணும் மதுக்கொன்றை வன்னி மத்தம்
வான்கங்கை சடைக்கரந்த மாதே வன்காண்
பண்தங்கு மொழிமடவாள் பாகத் தான்காண்
பரமன்காண் பரமேட்டி யாயி னான்காண்
வெண்டிங்கள் அரவொடுசெஞ் சடைவைத்
தான்காண்
விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 6

கண்துஞ்சும்மால் – எப்பொழுதும் அறிதுயில் கொள்ளும் திருமால். பரமேட்டி – மேலான வணக்கத்துக்குரியவன். திருமால் சக்கரம் பெற வேண்டித் தவஞ்செய்து 1000 மலர் கொண்டு தினமும் அர்ச்சித்து கண்ணையிடந்து பூசித்து கண்ணன் என்ற பெயரையும் சக்கரமும் பெற்ற வரலாறு இப்பாடலிலும், அடுத்த பாடலிலும் பாடப்பட்டுள்ளது.

விண்இழி தண் வீழிமிழலையான் எப்பொழுதும் அறிதுயில் கொள்ளும் திருமால் தனக்குச் சக்கராயுதம் வேண்டுமென்று செந்தாமரை போன்ற தன் கண் ஒன்றனைக் குறைந்த மலராகக் கொண்டு அருச்சித்த அதனைக் கண்டு, அவனுக்குச் சக்கரம் அருளியவனாய், வண்டுகள் உண்ணும் தேனை உடைய கொன்றை, வன்னி, ஊமத்தை என்னும் இவற்றை ஆகாய கங்கையோடு சடையில் மறைத்த பெரியதேவனாய், பண்போன்ற இனிய சொற்களை உடைய பார்வதி பாகனாய், மேம்பட்டவனாய், உயர்ந்த இடத்தில் இருப்பவனாய்ப் பிறையைப் பாம்போடு சடையில் வைத்தவனாய், அடியார் மனக்கண்ணுக்குக் காட்சி வழங்குகின்றான்.

2611. கற்பொலிதோள் சலந்தரனைப் பிளந்த ஆழி
கருமாலுக் கருள்செய்த கருணை
யான்காண்
விற்பொலிதோள் விசயன்வலி தேய்வித்
தான்காண்
வேடுவனாய்ப் போர்பொருது காட்டி
னான்காண்
தற்பரமாந் தற்பரமாய் நிற்கின் றான்காண்
சதாசிவன்காண் தன்னொப்பா ரில்லா
தான்காண்
வெற்பரையன் பாவை விருப்பு ளான்காண்
விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 7

கல்பொலிதோள் – மலை போல விளங்கிய தோள்

விண்இழி தண் வீழிமிழலையான் மலை போல விளங்கிய தோள்களை உடைய சலந்தரன் என்ற அசுரனுடைய உடலைப் பிளந்த சக்கராயுதத்தைத் திருமாலுக்கு வழங்கிய கருணையாளனாய், வில் விளங்கும் தோளை உடைய அருச்சுனன் வலிமையைக் குறையச் செய்து, வேடுவனாய் அவனோடு போர் செய்து தன் போர்த் திறமையைக் காட்டியவனாய், மாயையின் மேம்பட்டதாகிய உயிரினும் மேம்பட்ட பொருளாய் இருக்கின்றவனாய்ச் சதாசிவனாய், ஒப்பற்றவனாய், பார்வதியைத் தானும் விரும்பி அவளால் விரும்பப்படுபவனாய் இருப்பவனாவான்.

2612. மெய்த்தவன்காண் மெய்த்தவத்தில் நிற்பார்க்
கெல்லாம்
விருப்பிலா இருப்புமன வினையர்க் கென்றும்
பொய்த்தவன் காண் புத்தன் மறவா தோடி
யெறிசல்லி புதுமலர்க ளாக்கி னான்காண்
உய்த்தவன்காண் உயர்கதிக்கே உள்கி னாரை
உலகனைத்தும் ஒளித்தளித்திட் டுய்யச்
செய்யும்
வித்தகன்காண் வித்தகர்தாம் விரும்பி யேத்தும்
விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 8

சல்லி – கல். வித்தகன் – திறனுடையவன்.

ஞானிகள் விரும்பிப் போற்றும் விண்இழி தண் வீழிமிழலையான் உண்மையான தவத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு உள்பொருளாய் விளங்குபவனாய்த் தன் இடத்து விருப்பம் இல்லாத இரும்பு போன்ற கடிய மனத்தவர் களுக்குத் தன் உருவத்தைக் காட்டாது மறைந்தே இருப்பவனாய், சாக்கியநாயனார் மறவாமல் இடும் சிறு கற்களைப் புதிய மலர்களாக ஏற்பவனாய், தன்னைத் தியானித்தவர்களை உயர்கதிக்கண் செலுத்துபவனாய், உலகங்களை அழித்துப் படைத்துக் காக்கும் திறல் உடையோனாய் உள்ளான்.

2613. சந்திரனைத் திருவடியால் தளர்வித் தான்காண்
தக்கனையும் முனிந்தெச்சன்
தலைகொண்டான்காண்
இந்திரனைத் தோள்முரிவித் தருள்செய்
தான்காண்
ஈசன்காண் நேசன்காண் **நினைவோர்க்**
**கெல்லாம்**
**மந்திரமும் மறைப்பொருளு மாயி னான்காண்**
மாலொடயன் மேலொடுகீழ் அறியா
வண்ணம்
வெந்தழலின் விரிசுடராய் ஓங்கி னான்காண்
விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 9

தக்கன் வேள்வியில் கலந்து கொண்ட தேவர்களுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனைகளைத் திருவாசகத்தில் திருவுந்தியார் திருப்பதிகத்தில் விரிவாகக் காணலாம்.

விண்இழி தண் வீழிமிழலையான் தக்கன் வேள்வியில் சந்திரனைத் திருவடியால் தேய்த்துத் தக்கனை வெகுண்டு எச்சன் தலையை நீக்கி இந்திரனுடைய தோள்களை ஒடித்துப்பின் அவர்களுக்கு அருள் செய்தவனாய், எல்லோரையும் அடக்கி ஆள்பவனாய், தன்னை விருப்போடு நினைப்பவர்களுக்கு அன்பனாய், மந்திரமும் வேதப்பொருளும் ஆயினானாய்ப் பிரமனும் திருமாலும் மேலும் கீழும் அறியாவண்ணம் தீப்பிழம்பாய் நீண்டவனாய் உள்ளான்.

2614. ஈங்கைப்பே ரீமவனத் திருக்கின் றான்காண்
எம்மான்காண் கைம்மாவி னுரிபோர்த்
தான்காண்
ஓங்குமலைக் கரையன்றன் பாவை யோடும்
ஒருருவாய் நின்றான்காண் ஓங்கா ரன்காண்
கோங்குமலர்க்கொன்றையந்தார்க் கண்ணி
யான்காண்
கொல்லேறு வெல்கொடி மேற் கூட்டினான்
காண்
வேங்கைவரிப் புலித்தோல்மே லாடை யான்காண்
விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 10

விண்இழி தண் வீழிமிழலையான் இண்டங் கொடிகள் அடர்ந்த சுடுகாட்டில் இருப்பவனாய், எங்கள் தலைவனாய், யானைத் தோலைப் போர்த்தியவனாய்ப் பார்வதியோடு ஒரே உருவமாய் நின்றவனாய், ஓங்கார வடிவினனாய், கோங்கு கொன்றை ஆகிய மாலையை உடையவனாய்க் காளை எழுதிய கொடியை உடையவனாய், வேங்கைத் தோலை மேலாடையாகக் கொண்டவனாய் உள்ளான்.

ஈங்கை–இண்டங்கொடி. ஈமவனம் – சுடுகாடு. இருபெயரொட்டு

## 53. திருவீழிமிழலை

(இத்திருப்பதிகம் 'போலும்' என்னும் முடிபுடைய தொடர்களால் இறைவனது இயல்பினை வகுத்தோதியருளியது )

ப.தொ.எண் : 266 பதிக எண் : 53

2615. மானேறு கரமுடைய வரதர் போலும்
மால்வரைகால் வளைவில்லா வளைத்தார் போலும்
கானேறு கரிகதற வுரித்தார் போலுங்
கட்டங்கங் கொடிதுடிகைக் கொண்டார் போலும்
தேனேறு திருவிதழித் தாரார் போலுந்
திருவீழி மிழலையமர் செல்வர் போலும்
ஆனேற தேறும் அழகர் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 1

வரதர் – வரத்தைக் கொடுப்பவர். கால் வளைவில் – இருமுனையும் வளையும் வில். துடி–இடை. இதழி – கொன்றை. இப்பதிகத்தின் மகுடம் – "அடியேனை ஆளுடைய அடிகள் தாமே" என்பதாகும்.

திருவீழிமிழலையில் அமர்ந்த செல்வராய், அடியேனை ஆட்கொண்ட அடிகள் கையில் மானை ஏந்தி வரம் கொடுப்பவராய், பெரிய மலையின் இரு பகுதிகளையும் வில்லாகுமாறு வளைத்தவராய், காட்டில் உலவும் யானை கதறுமாறு அதன் தோலை உரித்தவராய்க் கட்டங்கப்படை, உடுக்கை இவற்றைக் கைகளில் கொண்டவராய், தேன் பொருந்திய கொன்றைப் பூ மாலையை அணிந்தவராய், காளையை இவரும் அழகராய்க் காட்சி வழங்குகிறார்.

அடிகள் – முதல்வர். இஃது, 'அடி' என்பது அடியாகப் பிறந்த பெயர்; 'அடி' எனினும், முதல் எனினும் ஒக்கும்; அது பண்பாகு பெயராய், முதலாவாரையுணர்த்தி, ஆண்பால் பெண்பால் இரு பாலார்க்கும் பொதுவாய் நிற்கும். பின்னர், அஃது உயர்வு பற்றி வந்த திணைவழுவமைதியும் பால்வழுவமைதியுமாக, 'கோக்கள், குருக்கள்' என்பனபோல அஃறிணைப் பன்மைவிகுதியாகிய 'கள்' என்பதனோடு புணர்ந்து, மேற்கூறியவாறே இருபாலார்க்கும் பொதுவாய் நிற்கும்; எனவே, **இது, 'சுவாமி' என்னும் வடசொற்கு நேராய தமிழ்ச்சொல் என்பது பெறப்படும்.** இதனானே, 'சுவாமி' என்பதும், தமிழ் மொழியுள் 'சுவாமிகள்' என, கள்ளொடு புணர்த்து வழங்கப்படுகின்றது. 'அடிகள்' எனற்பாலதனைச் சேக்கிழார் நாயனார், "வாகீசத் திருவடி" (தி. 12 திருநாவுக்கரசர் புராணம் – 109) என முதற்கண் 'திரு' என்பதனை, புணர்த்து அருளிச்செய்தார். இப்பெயர் உயர்ந்தோர்க்கு உரியதாதல் பற்றி, "மாமடிகள்" (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் – அம்புலி – 6) என்றாற்போலச் சிலர்க்கு முகமனுரையாய் வழங்கும். எனினும், 'தலைவர்' என்பதே இதன் பொருளாகலின், ஆடவருள்ளும் பெண்டிருள்ளும் தலைவராயினார்க்கே இஃது உண்மையில் உரியதாகும். **துறவறத்தில் நிற்பவர் பிறர்யாவர்க்கும் தலைவராதல் பற்றி, அவர்களையே சிறப்பாக 'அடிகள்' என வழங்குவர்.** இங்கு, "அடியேனை ஆளுடைய அடிகள்" என்றருளியதனால், 'அடிகள்' என்பது தலைவர் என்றவாறாதல் இனிது விளங்குதல் காண்க. பொருட்பன்மையன்றி உயர்வுப் பன்மையாகலின், பன்மையொருமை மயக்கமாக ஒருமைச் சொல்லொடு இயைதலும் உண்டு. தாம், ஏ அசைகள். 'அடிகள் தாம்' என்பதே எழுவாய்.

**2616.** சமரம்மிகு சலந்தரன்போர் வேண்டி னானைச்
சக்கரத்தாற் பிளப்பித்த சதுரர் போலும்
நமனையொரு கால்குறைத்த நாதர் போலும்
நாரணனை யிடப்பாகத் தடைத்தார் போலும்
**குமரனையும் மகனாக வுடையார் போலுங்**
குளிர்வீழி மிழலையமர் குழகர் போலும்
அமரர்கள்பின் அமுதுணநஞ் சுண்டார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.

2

சமரம் – போர். சதுரர் – திறலுடையவர். பிறர் பின்பு அமுதுண்ணுதற்குத் தாம் முன்பு நஞ்சுண்டவர் என அவரது பெருங்கருணைத் திறத்தை நினைந்துருகி அருள்கிறார்.

குளிர்ந்த வீழிமிழலையில் விரும்பித் தங்கும் இளையவராய், அடியேனை ஆட்கொண்ட அடிகள் தம்மோடு போரிடவந்த சலந்தரன் என்ற அசுரனைச் சக்கரத்தால் பிளந்த திறமை உடையவராய், நமனை ஒரு காலால் உதைத்து அழித்தவராய், திருமாலை இடப்பாகத்துக் கொண்டவராய், முருகனையும் மகனாக உடையவராய்த் தேவர்கள் பிறகு அமுதம் உண்ணுமாறு முன்னர் அவர்களை அழிக்க வந்த நஞ்சினை உண்டவராவார்.

**2617.** நீறணிந்த திருமேனி நிமலர் போலும்
நேமிநெடு மாற்கருளிச் செய்தார் போலும்
ஏறணிந்த கொடியுடையெம் மிறைவர் போலும்
எயில்மூன்றும் எரிசரத்தா லெய்தார் போலும்
வேறணிந்த கோலமுடை வேடர் போலும்
வியன்வீழி மிழலையுறை விகிர்தர் போலும்
ஆறணிந்த சடாமகுடத் தழகர் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 3

நேமி – சக்கரம். சரம் – அம்பு. தல வரலாற்றுப் பாடல். பெரும்பாலான பதிகங்களில் ஈற்றடியில் பாடப்பெறும் தலத்தை வைத்துப் பாடும் நாயனார் இப்பதிகத்தின் அனைத்துப் பாடல்களிலும் மூன்றாம் அடியிலேயே தலத்தைப் போற்றுகிறார்.

வியன்வீழிமிழலை உறை விகிர்தராய் அடியேனை அடிமையாகக் கொண்ட அடிகள் திருமேனியில் நீறு அணிந்த தூயோராய்த் திருமாலுக்குச் சக்கரத்தை வழங்கியவராய், காளை எழுதிய கொடியை உடைய என் தலைவராய், நெருப்பாகிய அம்பினால் மூன்று மதில்களையும் எய்தவராய், உலகியலுக்கு வேறாகக் கொண்ட வடிவுடைய வேடராய்ச் சடைமுடியில் கங்கையை அணிந்த அழகராய்க் காட்சி வழங்குகிறார்.

**2618. கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலுங்**
கயாசுரனை யவனாற்கொல் வித்தார் போலும்
செய்வேள்வித் தக்கனைமுன் சிதைத்தார் போலும்
திசைமுகன்றன் சிரமொன்று சிதைத்தார் போலும்
மெய்வேள்வி மூர்த்திதலை யறுத்தார் போலும்
வியன்வீழி மிழலையிடங் கொண்டார் போலும்
ஐவேள்வி ஆறங்க மானார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 4

பெரிய வீழிமிழலையில் உறையும் வேறுபட்ட இயல்பினை உடையவராய் அடியேனை ஆட்கொண்ட அடிகள் விநாயகனைப் படைத்து, அவனால் கயாசுரனைக் கொல்வித்துத் தக்கனுடைய வேள்வியையும் பிரமன் தலை ஒன்றனையும் அழித்து, யாகதேவன் தலையை அறுத்து, ஐவகை வேள்விகளும் வேதங்களின் ஆறு அங்கங்களுமாக உள்ளார். தேவாரங்களுள் விநாயகர் வரலாறு கூறும் சில இடங்களில் இஃதொன்று.

கை வேழம் – கையை உடையதாகிய யானை; இது கையுடைமையை விதந்தருளியவாறு. வேழ முகத்தவன், விநாயகக் கடவுள். "கயாசுரன்" என்றது, கயமுகாசுரனை, அவனை விநாயகக் கடவுளைத் தோற்றுவித்து அழிப்பித்த வரலாற்றைக் கந்தபுராணத்துட் காண்க. வேள்விமூர்த்தி – யாக தேவன். ஐ வேள்வி – 'பிரமவேள்வி, தேவவேள்வி, மனித வேள்வி, உயிர் வேள்வி, பிதிர் வேள்வி என்பன. இவை முறையே வேதம் ஓதுதலும், வழிபாடு செய்தலும், விருந்தோம்பலும், உயிர்களிடத்து இரக்கங்கொண்டு உணவிடுதல் முதலியன செய்தலும், தென்புலத்தார் கடன் தீர்த்தலும் ஆகும். "விருந்தின் துணைத் துணை வேள்விப் பயன்" எனவும், "விருந்தோம்பி வேள்வி தலைப்படாதார்" எனவும் **விருந்தோம்பலை, திருவள்ளுவநாயனாரும் 'வேள்வி' என்றருளினார். (குறள். 87, 88)** இவை முறையே 'பிரமயாகம் தேவயாகம், மானுடயாகம், பூதயாகம், பிதிர்யாகம்' எனப்படும். இவையெல்லாம் வைதிக முறை. இனிச் சைவ முறையிற் சொல்லப்படும் ஐவகை வேள்விகள். 'கன்மவேள்வி, தவவேள்வி, செபவேள்வி, தியானவேள்வி, ஞானவேள்வி' என்பன. வைதிக முறையிற் சொல்லப்பட்ட ஐவகை வேள்விகளும் சைவ முறையில், 'கன்ம வேள்வி' என ஒன்றாய் அடங்கும். 'சமயம், விசேடம்' என்னும் இருவகைத் தீக்கைகளின் வழி, 'சரியை, கிரியை, யோகம்' என்னும் மூன்று நெறிகளினும் நிற்றல் தவவேள்வி; அத்தீக்கைகளிற் பெற்றவாறே திருவைந்தெழுத்தைக் கணித்தல்.

செபவேள்வி; அச் செபத்தின்வழிச் சரியை முதலிய மூன்று நெறியிலும் முறையே சிவபிரானது 'உருவம், அருவுருவம், அருவம்' என்னும் மூவகைத் திருமேனிகளைத் தியானித்தல் தியான வேள்வி; பதியாகிய சிவபிரானது இயல்புகளையும் அவனுக்கு அடிமையும் உடைமையும் ஆகிய பசு, பாசங்களின் இயல்புகளையும் உள்ளவாறுணர்த்தும் ஞான நூல்களை ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தல், நல்லாசிரியரிடத்தே அந்நூற்பொருளை இனிது கேட்டல், பின்னர்ச் சிந்தித்தல் என்பன ஞான வேள்வி. இவ்வகை வேள்விகளுட் சிறந்ததாகிய ஞான வேள்வியை,

"ஞானநூல் தனைஓதல் ஓது வித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்றாய்
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை"

என (சிவஞானசித்தி. சூ. 8. அதி. 2) எடுத்தோதுவதும் காண்க.

**2619.** துன்னத்தின் கோவணமொன் றுடையார் போலுஞ்
சுடர்மூன்றுஞ் சோதியுமாய்த் தூயார் போலும்
பொன்னொத்த திருமேனிப் புனிதர் போலும்
பூதகணம் புடைசூழ வருவார் போலும்
மின்னொத்த செஞ்சடைவெண் பிறையார் போலும்
வியன்வீழி மிழலைசேர் விமலர் போலும்
அன்னத்தேர் அயன்முடிசேர் அடிகள் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.

5

துன்னம் – (கீளோடு) இணைத்தல்
அன்னத்தேர் – அன்னப்பறவையாகிய ஊர்தி

பரந்த வீழிமிழலையைச் சேர்ந்த தூயோராய் அடியேனை ஆட்கொண்ட அடிகள் கீளோடு இணைக்கப்பட்ட கோவணம் ஒன்று உடையாராய், மூன்று சுடர்களும் அவற்றின் ஒளியுமாகிய தூயவராய், பொன்னார் மேனிப் புனிதராய், பூதகணம் தம்மைச் சுற்றிவரத் தாம் வருபவராய், மின்னலை ஒத்து ஒளிவீசும் சிவந்த சடையில் பிறை சூடியவராய், அன்னத்தை வாகனமாக உடைய பிரமனுடைய மண்டையோட்டினை ஏந்திய தலைவராய் உள்ளார்.

**2620.** மாலாலும் அறிவரிய வரதர் போலும்
மறவாதார் பிறப்பறுக்க வல்லார் போலும்
நாலாய மறைக்கிறைவ ரானார் போலும்
நாமவெழுத் தஞ்சாய நம்பர் போலும்
**வேலார்கை வீரியைமுன் படைத்தார் போலும்**
வியன்வீழி மிழலையமர் விகிர்தர் போலும்
ஆலாலம் மிடற்றடக்கி அளித்தார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.

6

வேல் – இங்கு சூலம். வீரி – காளி
தாருகன் என்னும் அசுரனை அழித்தற்பொருட்டுப் படைத்தருளினார்.

வியன் வீழிமிழலை அமர்ந்த விகிர்தராய் அடியேனை ஆட்கொண்ட அடிகள் திருமாலாலும் அறிய முடியாதவராய், வரம் அருளுபவராய், தம்மை மறவாதவர் பிறவிப் பிணியைப் போக்க வல்லவராய், நான்கு வேதங்களுக்கும் தலைவராய், அஞ்செழுத்தாகிய பெயரை உடையவராய், நம்மால் விரும்பப்படுபவராய், கையில் வேலை ஏந்திய காளியைத் தாருகன் என்ற அசுரனை அழிப்பதற்காகப் படைத்தவராய், விடத்தைத் தம் கழுத்தில் அடக்கித் தேவர்களைப் பாதுகாத்தவராவர்.

**2621.** பஞ்சடுத்த மெல்விரலாள் பங்கர் போலும்
பைந்நாகம் அரைக்கசைத்த பரமர் போலும்
மஞ்சடுத்த மணிநீல கண்டர் போலும்
வடகயிலை மலையுடைய மணாளர் போலுஞ்
செஞ்சடைக்கண் வெண்பிறை கொண்டணிந்தார் போலுந்
திருவீழி மிழலையமர் சிவனார் போலும்
அஞ்சடக்கும் அடியவர்கட் கணியார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.

7

மஞ்சு அடுத்த – மேகம் அடுத்தது போன்ற. மணாளர் – தலைவர்.

திருவீழிமிழலை அமர்ந்த சிவனாராகி அடியேனை ஆட்கொண்ட அடிகள் செம்பஞ்சு போன்ற மெல்லிய விரல்களை உடைய பார்வதி பாகராய், படம் எடுக்கும் பாம்பினை இடையில் இறுகக் கட்டிய மேம்பட்டவராய், காளமேகம் போன்ற அழகிய நீலகண்டராய், வடகயிலைத் தலைவராய், செஞ்சடையில் வெண்பிறை சூடியவராய், ஐம்பொறிகளையும் அடக்கி ஆளும் அடியவர்களுக்கு நெருக்கத்தில் இருப்பவராய் உள்ளார்.

2622. குண்டரொடு பிரித்தெனையாட் கொண்டார் போலும்
குடமூக்கி லிடமாக்கிக் கொண்டார் போலும்
புண்டரிகப் புதுமலரா தனத்தார் போலும்
புள்ளரசைக் கொன்றுயிர்பின் கொடுத்தார் போலும்
வெண்டலையிற் பலிகொண்ட விகிர்தர் போலும்
வியன்வீழி மிழலைநக ருடையார் போலும்
அண்டத்துப் புறத்தப்பா லானார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.
8

வியன் வீழிமிழலை நகருடையவராய் அடியேனை ஆட்கொண்ட அடிகள் சமணரிடமிருந்து அடியேனை ஆட்கொண்டவராய், குடந்தையில் உறைபவராய், அடியவர்கள் உள்ளத் தாமரையை ஆசனமாகக் கொண்டவராய், கருடனைக் கொன்று, பின் அவனை உயிர்ப்பித்தவராய், வெள்ளிய மண்டையோட்டில் பிச்சை ஏற்கும் விகிர்தராய், அண்டங்களுக்கும் அப்பாற்பட்டவராய் உள்ளார்.

புள்ளரசு – கருடன்

நாயனாரது சரித அகச்சான்று

2623. முத்தனைய முகிழ்முறுவ லுடையார் போலும்
மொய்பவளக் கொடியனைய சடையார் போலும்
எத்தனையும் பத்திசெய்வார்க் கினியார் போலும்
இருநான்கு மூர்த்திகளு மானார் போலும்
மித்திரவச் சிரவணற்கு விருப்பர் போலும்
வியன்வீழி மிழலையமர் விகிர்தர் போலும்
அத்தனொடும் அம்மையெனக் கானார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.
9

வியன் வீழிமிழலை அமர் விகிர்தராய் அடியேனை அடிமைகொண்ட அடிகள், முத்துப் போன்ற சிறிதே அரும்புகின்ற நகைப்பினையும், செறிந்த பவளக்கொடி போன்ற சடையினையும் உடையவராய், சிறிதளவு, தம்பால் பக்தி உடையவருக்கும் இனியராய், அட்டமூர்த்த உருவினராய், நண்பனாகிய குபேரனிடம் விருப்பு உடையவராய், அடியேனுக்குத் தந்தையும் தாயும் ஆவார்.

முகிழ் முறுவல் – சிறிதே அரும்புகின்ற நகைப்பு.
மித்திரன் – தோழன். அத்தன் – தந்தை
மித்திரவச்சிரவணன் – குபேரன்
“நிதிபதி செய்த நிறைதவ நோக்கி யது பதியாக அமர்ந்திருந்தானே” திருமந்திரம்

**2624.** கரியுரிசெய் துமைவெருவக் கண்டார் போலுங்
கங்கையையுஞ் செஞ்சடைமேற் கரந்தார் போலும்
எரியதொரு கைத்தரித்த இறைவர் போலும்
ஏனத்தின் கூனெயிறு பூண்டார் போலும்
விரிகதிரோ ரிருவரைமுன் வெகுண்டார் போலும்
வியன்வீழி மிழலையமர் விமலர் போலும்
அரிபிரமர் துதிசெயநின் றளித்தார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.

10

பரந்த வீழிமிழலையில் விரும்பித் தங்கிய தூயராய், அடியேனை ஆளுடைய அடிகள், பார்வதி அஞ்சுமாறு யானைத் தோலை உரித்துப் போர்த்துக் கங்கையையும் சிவந்த சடையில் மறைத்து, அக்கினி தேவனுடைய ஒரு கையை நீக்கிய தலைவராய்ப் பன்றியின் கூரிய பல்லை அணிகலனாகப் பூண்டு, சந்திரன் சூரியன் என்ற இருவரையும் தக்கன் வேள்விக்களத்தில் வெகுண்டு ஒறுத்துத் திருமாலும் பிரமனும் தம்மைத் தோத்திரிக்க, அவர்களுக்கு அருள் செய்தவர்.

செங்கதிரோன் – சூரியன்;
வெண்கதிரோன் – சந்திரன்

---

**2625.** கயிலாய மலையெடுத்தான் கதறி வீழக்
கால்விரலால் அடர்த்தருளிச் செய்தார் போலும்
குயிலாரும் மென்மொழியாள் குளிர்ந்து நோக்கக்
கூத்தாட வல்ல குழகர் போலும்
வெயிலாய சோதிவிளக் கானார் போலும்
வியன்வீழி மிழலையமர் விகிர்தர் போலும்
அயிலாரும் மூவிலைவேற் படையார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.

11

வீழிமிழலை அமர் விகிர்தராய் அடியேனை ஆட்கொண்ட அடிகள் கயிலாய மலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணன் கதறிக் கொண்டு விழுமாறு அவனைக் கால் விரலால் நசுக்கிப் பின் அவனுக்கு அருள் செய்தவராய், குயில் போன்ற இனிய சொற்களை உடைய உமையம்மை மனம் குளிர்ந்து காணுமாறு கூத்தாடுதலில் வல்ல இளையராய்ப் பகலவன் போல, ஏனைய ஒளிகளைத் தாழ்த்தித் தாம் ஒளி வீசுபவராய்க் கூர்மையான முத்தலைச் சூலப்படையுடையவராய் இருக்கின்றார்.

அயில் – கூர்மை. வெயிலாய சோதி – இது பிற வெளிகளைத் தன்னுள் அடக்கி நிற்கும் தொழில் பற்றி வந்த உவமை, பல்வேறு சிறப்பியல்புகளை உடைய உயிர்களின் அறிவுகள் எல்லாவற்றையும் தம் அறிவினுள் அடக்கி நிற்றல் பொருள் என்க.



## 54. திருப்புள்ளிருக்கு வேளூர்

ப.தொ.எண் : 267 | பதிக எண் : 54

**2626.** ஆண்டானை அடியேனை ஆளாக் கொண்டு
அடியோடு முடியயன்மா லறியா வண்ணம்
நீண்டானை நெடுங்களமா நகரான் தன்னை
நேமிவான் படையால்நீ ளுரவோன் ஆகங்
கீண்டானைக் கேதாரம் மேவி னானைக்
கேடிலியைக் கிளர்பொறிவா ளரவோ டென்பு
பூண்டானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 1

"ஆளாக் கொண்டு ஆண்டான்" எனக் கூட்டுக. அறியாதிருந்த அறியாமையை நீக்கி அறிவித்து அருள் செய்தான். நேமிவான் படை – சக்கரப்படை. நீள் உரவோன் – மிக்க வலிமையுடையவன் – சலந்தரன். கேடிலி – அழிவில்லாதவன். வாளரவு – கொடிய பாம்பு.

அடியேனை அடிமையாகக் கொண்டு ஆண்டவனாய், திருமாலும் பிரமனும் அடியையும் முடியையும் அறியாவண்ணம் அனற் பிழம்பாய் நீண்டவனாய், நெடுங்களக் கோயிலில் உறைவானாய், சக்கரப்படையால் பேராற்றலுடைய சலந்தரனுடைய மார்பினைப் பிளந்தவனாய், கேதாரத்தில் உறைவோனாய், ஒரு காலத்தும் அழிதல் இல்லாதவனாய், ஒளி வீசும் புள்ளிகளை உடைய பாம்போடு எலும்பினை அணிகலனாகப் பூண்டவனாகிய, புள்ளிருக்கு வேளூர்ப் பெருமானைத் துதிக்காமல் பல நாள்களை வீணாகக் கழித்து விட்டேனே.

**2627.** சீர்த்தானைச் சிறந்தடியேன் சிந்தை யுள்ளே
திகழ்ந்தானைச் சிவன்தன்னைத் தேவதேவைக்
கூர்த்தானைக் கொடுநெடுவேற் கூற்றந் தன்னைக்
குரைகழலாற் குமைத்துமுனி கொண்ட அச்சம்
பேர்த்தானைப் பிறப்பிலியை இறப்பொன் றில்லாப்
பெம்மானைக் கைம்மாவி னுரிவை பேணிப்
போர்த்தானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 2

அடியேனுடைய உள்ளத்தில் சிறப்பாகக் கிட்டினவனாய் விளங்குகின்ற சிவனாகிய தேவதேவனாய், மிக நுண்ணியனாய், கொடிய நீண்ட வேலை ஏந்தி வந்த கூற்றுவனைத் திருவடியால் உதைத்து, முனிவனாகிய மார்க்கண்டேயன் கொண்ட யம பயத்தைப் போக்கியவனாய், பிறப்பு இறப்பு இல்லாத தலைவனாய், யானைத் தோலை விரும்பிப் போர்த்தவனாய் உள்ள புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே.

சீர்த்தல் – வாய்த்தல். கூர்த்தான் – நுணுகியவன். குமைத்து – அழித்து. உரிவை – தோல். கைம்மா – யானை.

**2628.** பத்திமையாற் பணிந்தடியேன் றன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித் தானை
எத்தேவும் ஏத்தும் இறைவன் தன்னை
எம்மானை என்னுள்ளத் துள்ளே யூறும்
அத்தேனை அமுதத்தை ஆவின் பாலை
அண்ணிக்குந் தீங்கரும்பை அரனை ஆதிப்
புத்தேளைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.

3

அடியேன் பக்தியோடு வணங்கித் தன்னைப் பலநாளும் பாமாலைகளால் போற்றுமாறு பழக்கியவனாய், எல்லாத் தெய்வங்களும் துதிக்கும் கடவுளாய், என் தலைவனாய், என் உள்ளத்து ஊறும் தேன், அமுதம், பசுப்பால், இனிய கரும்பு என்பன போன்று இனியனாய்ப் பகைவரை அழிப்பவனாய், ஆதிக் கடவுளாய் உள்ள புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாமல் ஆற்ற நாள் போக்கினேனே.

ஆதிப் புத்தேள் – முதற் கடவுள்

---

**2629.** இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி
யிடர்பாவங் கெடுத்தேழை யேனை யுய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற்
சிவலோக நெறியறியச் சிந்தை தந்த
அருளானை ஆதிமா தவத்து ளானை
ஆறங்க நால்வேதத் தப்பால் நின்ற
பொருளானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே.

4

என் இருண்ட உள்ளத்திலுள்ள அஞ்ஞானத்தைப் போக்க, அறிவற்ற என் துயரங்களையும் தீவினைகளையும் போக்கி, நான் கடைத்தேறுமாறு என் தெளிவற்ற மனத்தில் தெளிவு பிறப்பித்து, தன்னைப் போலச் சிவலோகத்தின் வழியை அறியும் உள்ளத்தை வழங்கிய அருளாளனாய், தொடக்கத்திலிருந்தே பெரிய தவத்தில் நிலைபெற்றிருப்பவனாய், நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள் இவற்றிற்கு அப்பாற்பட்ட பொருளாய் உள்ள புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாமல் ஆற்ற நாள் போக்கினேனே.

ஆதிமாதவம் – முதற்கண் நின்ற பெரிய தவநிலை.
ஏழைமை – அறிவின்மை.
இருளாய – அறியாமை வடிவாகிய
இடர்பாவம் – இடரையும் அதற்கு முதலாயுள்ள பாவத்தையும்.
அவரே முதற்கண் ஆசியராய் இருந்து செய்து காட்டுதல்

**2630.** மின்னுருவை விண்ணகத்தில் ஒன்றாய் மிக்கு
வீசுங்கால் தன்னகத்தில் இரண்டாய்ச்
செந்தீத்
தன்னுருவின் மூன்றாய்த்தாழ் புனலின்
நான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி யெஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை
வளரொளியை வயிரத்தை மாசொன் றில்லாப்
பொன்னுருவைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.

5

மின்னுரு – மின்னலின் ஒளியாய் உள்ளவன்.
"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி" திருவாசகம்
கால் – காற்று. உருஎன்றது பருநிலையை.
தாழ்புனல் – வீழும் இயல்புடைய நீர். தரணி – பூமி

மின்னல் போன்று பிரகாசிக்கும் உருவினனாய், வானத்தில் ஒலி என்ற ஒரே பண்பாய், வீசும் காற்றில் ஒலி, ஊறு என்ற இரு பண்புகளாய், சிவந்த நெருப்பில் ஒளி, ஊறு, ஒலி என்ற முப்பண்புகளாய், பள்ளம் நோக்கிச் செல்லும் நீரில் சுவை, ஒளி, ஊறு, ஒலி என்ற நான்கு பண்புகளாய், நிலத்தில் நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஒலி என்ற ஐந்து பண்புகளாய்க் குறையாத புகலிடமாக நிலைபெற்ற பொருளாய், பவளக் கொழுந்தாய், முத்தாய், வளர் ஒளியாய், வயிரமாய், பொன்போலும் நிறமுடைய புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே.

மன் உரு – நிலை பெற்ற பொருள்.

---

**2631.** அறையார்பொற் கழலார்ப்ப அணியார் தில்லை
அம்பலத்துள் நடமாடும் அழகன் தன்னைக்
கறையார்மூ விலைநெடுவேற் கடவுள் தன்னைக்
கடல்நாகைக் காரோணங் கருதி னானை
இறையானை என்னுள்ளத் துள்ளே விள்ளா
திருந்தானை ஏழ்பொழிலுந் தாங்கி நின்ற
பொறையானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.

6

அறை ஆர் – ஒலித்தல் பொருந்திய. கறை–நஞ்சு. படைக்கலங்களின் வாயில் நஞ்சு பூசப்பட்டிருத்தல் இயல்பு. விள்ளாது – நீங்காது. பொழில் – உலகம். பொறை – சுமை.

பொன்னாலாகிய கழல் ஒலிக்கத் தில்லை அம்பலத்துள் கூத்தாடும் அழகனாய், விடக்கறை பொருந்திய முத்தலைச் சூலப்படையனாய்க் கடலை அடுத்த நாகைக் காரோணத்தை உறைவிடமாக விரும்பியவனாய், என் உள்ளத்துள்ளே தங்கி நீங்காது இருந்தவனாய், ஏழுலகப் பாரத்தையும் தாங்குபவனாய், உள்ள புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே.

| | |
|---|---|
| **2632.** நெருப்பனைய திருமேனி வெண்ணீற் றானை<br>நீங்காதென் னுள்ளத்தி னுள்ளே நின்ற<br>விருப்பவனை வேதியனை வேத வித்தை<br>வெண்காடும் வியன்துருத்தி நகரும் மேவி<br>இருப்பவனை யிடைமருதோ டீங்கோய் நீங்கா<br>இறையவனை யெனையாளுங் கயிலை யென்னும்<br>பொருப்பவனைப் **புள்ளிருக்கு வேளூ ரானைப்**<br>**போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.**<br>7<br><br>பதிக மகுடம் – புள்ளிருக்கு வேளூ ரானைப் போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. | நெருப்பினை ஒத்த சிவந்த திருமேனியில் வெண்ணீறு அணிந்தவனாய், என் உள்ளத்தினுள்ளே நீங்காது விரும்பி இருப்பவனாய், வேதம் ஓதுபவனாய், வேதத்தை நன்கு உணர்ந்தவனாய், வெண்காடு, துருத்தி, இடைமருது, ஈங்கோய்மலை இவற்றை நீங்காத இறையவனாய், என்னை ஆட்கொண்ட கயிலாய மலையை உறைவிடமாகக் கொண்ட புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே. |
| **2633.** பேரா யிரம்பரவி வானோ ரேத்தும்<br>பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும்<br>வாராத செல்வம் வருவிப் பானை<br>**மந்திரமுந் தந்திரமும் மருந்து மாகித்**<br>**தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்**<br>திரிபுரங்கள் தீயெழத்திண் சிலைகைக் கொண்ட<br>போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்<br>போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.<br>8 | ஆயிரம் திருநாமங்களை முன்னின்று உச்சரித்துத் தேவர்கள் துதிக்கும் பெருமானாய்த் தன்னை விடுத்து நீங்காத அடியவர்களுக்கும் என்றும் பிறப்பெடுக்க வாராத வீடுபேற்றுச் செல்வத்தை வழங்குபவனாய், மந்திரமும் அவற்றைச் செயற்படுத்தும் முறைகளும், மருந்துமாகித் தீராத நோய்களைப் போக்கியருள வல்லானாய், திரிபுரங்கள் தீப்பற்றிச் சாம்பலாகுமாறு திண்ணிய வில்லைக் கைக்கொண்டு போரிடுதலில் ஈடுபட்டவனான புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே. |
| **2634.** பண்ணியனைப் பைங்கொடியாள் பாகன் தன்னைப்<br>படர்சடைமேற் புனல்கரந்த படிறன் தன்னை<br>நண்ணியனை யென்னாக்கித் தன்னா னானை<br>நான்மறையின் நற்பொருளை நளிர்வெண் டிங்கட்<br>கண்ணியனைக் கடியநடை விடையொன் றேறுங்<br>காரணனை நாரணனைக் கமலத் தோங்கும்<br>புண்ணியனைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்<br>போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.<br>9<br><br>படிறன் – இங்கு கரந்தமை பற்றிக் கூறப்பட்டது.<br>நளிர் – குளிர்மை | எல்லாப் பொருள்களையும் ஆக்கியவனாய்ப் பார்வதிபாகனாய், பரவிய சடையிலே கங்கையை மறைத்தவனாய், எனக்குத் துணையாய், உடன் நின்று என்னைத் திருத்தித் தன்னிடத்தினின்றும் நீங்காது அணைத்துக் கொண்டவனாய், நான்மறையின் சிறந்த பொருளாய், குளிர்ந்த வெண்பிறையை முடிமாலையாகச் சூடியவனாய், விரைந்து செல்லும் காளையை இவர்ந்த உலகக் காரணனாய், நாரணனாய், தாமரையில் தங்கும் பிரமனாய் உள்ள புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே. |

2635. இறுத்தானை இலங்கையர்கோன் சிரங்கள் பத்தும்
எழுநரம்பின் இன்னிசைகேட் டின்புற் றானை
அறுத்தானை அடியார்தம் அருநோய் பாவம்
அலைகடலில் ஆலால முண்டு கண்டங்
கறுத்தானைக் கண்ணழலாற் காமன் ஆகங்
காய்ந்தானைக் கனன்மழுவுங் கலையு மங்கை
பொறுத்தானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 10

இறுத்தல் – நெரித்தல்

இராவணனுடைய பத்துத் தலைகளையும், நசுக்கியவனாய், பின் அவன் எழுப்பிய நரம்பின் இசை கேட்டு மகிழ்ந்தவனாய், அடியார்களுடைய கொடிய நோய்களையும் தீவினைகளையும் போக்கியவனாய், அலைவீசும் கடலின் விடமுண்ட நீல கண்டனாய், நெற்றிக்கண் தீயினால் மன்மதனுடைய உடலை எரித்தவனாய், தீப்பொறி கக்கும் மழுப்படையையும் மானையும் அழகிய கைகளில் கொண்டவனாய், உள்ள புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே.



**திருக்கயிலாயம் (வடக்கு முகம்)**



திருக்கயிலாயம்: தெற்குமுகம்

## 55. திருக்கயிலாயம்

### பதிக வரலாறு

சுவாமிகள் கயிலை செல்லும் காதல் கொண்டு திருக்காளத்தியினின்றும் புறப்பட்டுத் திருப்பருப்பதம் வணங்கி, தெலுங்கு, கன்னடம், மாளவம், இலாடம், மத்தியம் ஆகிய நாடுகளைக் கடந்து வாரணாசி சென்று தொழுது கற்சுரத்தை அடைந்து செல்லுகையில் கால்கள் தேய்ந்தமையால் கைகளை ஊன்றிச் செல்ல, அவைகளும் தேய்ந்தன. பின்பு, மார்பால் உந்தியும் புரண்டும் சென்றார். அதனால் அவ்வுறுப்புக்களும் அழிந்தன. ஆகவே, கயிலைமால்வரையின் தாழ்வரையில் செயலின்றிக் கிடந்தார். சுவாமிகளது நிலைக்கு இரங்கிய கயிலைப் பரமர் அவர் கயிலையை அணைவதற்கு அருளாராய் ஓர் முனிவராகி எதிர்தோன்றி, 'உம் உறுப்புக்களழிய இப்பாலையில் வந்தது என் கருதி' என வினவினார். "மலைமகளுடன் வட கயிலை அண்டர் நாயகர் இருக்கும் அப்பரிசு அடியேன் கண்டு கும்பிடக் காதலின் அடைந்தேன்; **ஆளும் நாயகன் கயிலையிலிருக்கை கண்டலல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்**" என்றார்கள், சுவாமிகள். இறைவர் சுவாமிகளது மன உறுதியைக் கண்டு அருகிலுள்ள பொய்கையைக் காட்டி, 'இப்பொய்கையில் மூழ்கி நம்மை நீ கயிலையிலிருந்த அம்முறையைத் திருவையாற்றின்காண்' எனப் பணித்து மறைந்தருளினார். சுவாமிகள் தீங்கு நீங்கிய திருமேனியுடன் இறையருளாணையின் வண்ணம் திருக்கயிலையில் உள்ள பொய்கையில் ஐந்தெழுத்தோதி மூழ்கி ஐயாற்றில் ஓர் வாவியில் உலகெலாம் வியப்ப எழுந்து, வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும் வள்ளலார் கயிலையிலிருந்த கோலம் கண்டு தொழுது பாடியருளியன இது முதல் மூன்று திருப்பதிகங்கள். கயிலை மலையானையே போற்றியருளியதால் இவை மூன்றும் கயிலைத் திருப்பதிகங்களே ஆயின (தி. 12 திருநாவு. புரா. 381). சுவாமிகள் பொய்கையில் மூழ்கியதைக் குறிக்குமிடத்தில் (370) சேக்கிழார், 'வேற்று மாகிவிண் ணாகிநின் றார்மொழி விரும்பி' என்றது, விண்ணிலே மறைந்து அருள் புரிந்த நிலையை நினைந்து மூழ்கி, அந்நினைவோடே ஐயாற்றில் எழுந்து தாண்டகம் தொடங்கி அருளினார் என்றற்கு என்க. இது முதல், மூன்று பதிகங்களும் போற்றி (வணக்கம்) கூறி அருளியது.

ப.தொ.எண் : 268 பதிக எண் : 55

2636. வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 1

வேறு என்னும் உரிச்சொல் வேற்று எனத் திரிந்து பெயராய் நின்று வேறாயபொருள்களைக் குறிக்கிறது. உள்ளே ஒளித்தாய் – புறக்கண்ணிற்குப் புலனாகாது உயிரறிவினுள் நின்றவன். ஆற்று – ஆற்றல், சக்தி.

விண்ணாகியும் வேறு பூதங்களாகியும் நிலை பெற்றிருப்பவனே! அடியேனை வேறிடத்துக்குத் திரும்பிச் செல்லாதபடி அடிமையாகக் கொண்டவனே! இன்ப ஊற்றாகி உயிர் அறிவினுள்ளே நிலைபெற்றிருப்பவனே! இடையறாத சொற்களின் ஒலியே! சக்தியாகி ஐம்பூதங்களிலும் நான்கு வேதங்களிலும் ஆறு அங்கங்களிலும் இருப்பவனே! காற்றாகி எங்கும் கலந்தவனே! கயிலை மலையில் உறைபவனே! உனக்கு வணக்கங்கள் பல.

2637. பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி யறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்று மெய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாக மசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

பிச்சாடல் – பலவகை நடனங்களையும் செய்தல். பேயோடு பிச்சாடல் புரிவதும், பிறவி அறுப்பதும் அவரால் மட்டும் முடியும். வைச்சு – வைத்து – உயிர்களைப் பலவகையான பிறவிகளில் வைத்து.

பேய்களோடு கூத்தாடுதலை உகந்தவனே! பிறவியைப் போக்கும் தலைவனே! உயிர்களைப் பல வகையான பிறப்புகளில் நிறுத்தி விளையாடுதலில் வல்லவனே! விரும்பி என் உள்ளத்துப் புகுந்தவனே! பொய்யைச் சார்பாகக் கொண்ட முப்புரங்களை அழித்தவனே! என் சிந்தையை விடுத்துப் போகாது இருப்பவனே! பாம்பைக் கச்சாக அணிந்தவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல. பேயோடு பிச்சாடல் உகந்தாய்.

2638. மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி
உள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி
திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி யோடும் முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

மருவார் – பொருந்தாதார், பகைவர்.

பகைவர் மும்மதில்களையும் அழித்து, விரும்பி என் உள்ளத்துப் புகுந்து, என்னை உருவமுடையவனாகப் படைத்து, என் உயிர் உடம்பின்வழிப் படாதபடி நீக்கி நின் வழிப்படுத்து எனக்கு இன்பமாகிநின்ற செயலுடையவனாய், உலகத்தாரால் முன்னின்று துதிக்கப் படுபவனாய், கருவாய்க்கப் பெற்றுச் சஞ்சரிக்கும் காளமேகம் போல் உலகுக்கு நலன் தருவானாய், உள்ள கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

**2639.** வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கும் உடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குந் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாட லுகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

பதிக மகுடம் – கயிலை மலையானே போற்றி போற்றி

தேவர் போற்றும் அமுதமாய், வந்து என் உள்ளம் புகுந்தவனாய், உயிர்களின் குறையைப் போக்கும் அருள் உருவம் உடையவனாய், ஓங்கித் தீம்பிழம்பாய் உயர்ந்தவனாய், தேனை வடித்த தெளிவு போல்பவனாய், தேவர்களுக்கும் தேவனாய், சுடுகாட்டுத் தீயில் கூத்தாடுதலை விரும்பியவனாய் உள்ள கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

**2640.** ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வா ரொருவரையு மில்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

நேர்வார் – நிகராவார். காராகி நின்ற – கருமை நிறம் பெற்று நின்ற.

ஊர்களாகவும் உலகமாகவும் பரவியவனே! அனற்பிழம்பாய் ஓங்கி உயர்ந்தவனே! புகழ் வடிவினனாய் எங்கும் பரவியவனே! நீங்காது என் உள்ளத்தில் புகுந்தவனே! நீர் நிறைந்த ஓடை போலக் குளிர்ச்சி தருபவனே! ஒப்பற்றவனே! கார்முகில் போல அருள வல்லவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

**2641.** சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவ ரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்ந்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி யுலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

பூட்சி – பூண (மேற்கொள்ள)ப்படுவது; வாழ்க்கை

முதற்கண் சில வேறு தேவர்களாய் நின்று அருள் வழங்கிப் பின் அத்தேவர்களும் நீ ஒருவனேயாகி ஒன்றி நின்றவனே! தேவர்களும் அறிய முடியாத பெரிய தேவனே! புல்லாகிய ஓரறிவு உயிருக்கும் வாழ்க்கை வழங்கியவனே! நீங்காது என் உள்ளத்துப் புகுந்தவனே! உலகுகள் தோறும் பல உயிர்களாக நிற்பவனே! உலகைப் பற்றி அதனைக் கைவிடாதவனே! கல்லின் கண்ணும் உள்ள உயிர்களாய் நிற்கும் ஒளிப்பொருளே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

சில் உருவாய்ச் சென்று – முதற்கண் சில வேறு தேவர்களாய் வேறுவேறு அருளை வழங்கி நடந்து, திரண்டாய், பின்னர் அத்துணைத் தேவர்களும் நீ ஒருவனேயாய் ஒன்றி நின்றவனே. 'அத்தேவர்களாலும் அறியப்படாத தேவனே' என்க. சிவபிரான் இவ்வாறு நிற்கும் நிலையை, 'அறிவினால் மிக்க அறுவகைச் சமயத்தவ்வவர்க்கங்கே ஆரருள் புரிந்து' (தி. 7, ப. 55, பா. 9) எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகளும், 'மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம் – தேற்றனே தேற்றத் தெளிவே' (தி. 8 திருவா. சிவபுரா. 81, 82) என ஆளுடைய அடிகளும் அருளிச் செய்தமை காண்க. புல் உயிர் – புல்லாகிய உயிர்; இதுவே உயிர்களுட்கடைப் பட்டதாதலை, 'புல்லும், மரனும் ஓரறி வினவே' (தொல். பொருள் – 583) எனவும், 'புல்லாகிப் பூடாய்' (தி. 8 திருவா. சிவபு. 26) எனவும், வந்தனவற்றால் அறிக. பூட்சி – பூண (மேற்கொள்ள)ப்படுவது; வாழ்க்கை; அது, தனு கரண புவன போகங்களையும், இன்ப, துன்பங்களையும், யான் எனது என்பனவற்றையும் கொண்டு நிற்றல். 'பார்' என்றது, 'உலகம்' என்னும் பொருளது, அதனைப் பற்றுதலும், விடாமையும் அருள் காரணமாக என்க. கல் உயிர் – கல்லின் கண் உள்ள உயிர்; கல்லின் கண்ணும் உயிர்கள் உள்ளன என்பது, தேரை காணப்படுதல் பற்றி அறியப்படும்; எனவே, 'கல்லாய் மனிதராய்' (தி. 8 திருவா. சிவபு. –28) என்பதிலும், 'கல்' என்னும் பெயர் அதன்கண் உள்ள உயிர்மேல் நின்றமை பெறப்படும். 'கனலே' என்றது, 'ஒளிப்பொருளே' என்றவாறு. இவ்வாறு அருளிச் செய்தது, கல்லினுள்ளும் கதிரவன் ஒளி, ஊடு சென்று ஆங்கு நுண்ணுயிர்களைக் காத்தல் பற்றியென்க.

**2642.** பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்துஞ்சொல் லானாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனுந்தீ யானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

பண்ணின் இசையாகி இருப்பவனே! உன்னைத் தியானிப்பவரின் பாவத்தைப் போக்குபவனே! எண்ணும் எழுத்தும் சொல்லும் ஆனவனே! என் உள்ளத்தை நீங்காத தலைவனே! விண்ணும் தீயும் நிலனும் ஆகியவனே! மேலார்க்கும் மேலாயவனே! கண்ணின் மணி போன்ற அருமையானவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

**2643.** இமையா துயிரா திருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
ஊழியே ழான வொருவா போற்றி
அமையா வருநஞ்ச மார்ந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

ஏனைய உயிர்களைப் போல இமைக்காமல் மூச்சு விடாமல் இருப்பவனே! என் உள்ளத்தை நீங்காத தலைவனே! பார்வதி பாகனே! பல ஊழிகளையும் கடந்தவனே! பொருந்தாத கொடிய விடத்தை உண்டவனே! முதற் பழையோனே! பொறுமையாகச் செயற்படும் ஞான ஒளி உடையவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

கமை – பொறுமை; அருள். ஆர்ந்தாய் – உண்டவனே.

2644. மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி
சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக் கெல்லாம் போற்றி
அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

நலிய – வருத்த. அலந்தேன் – வருந்தினேன்.

மூத்தலோ பிறத்தலோ இறத்தலோ இல்லாது எல்லாப் பொருள்களுக்கும் முற்பட்டு என்றும் இயற்கையாகவே விளங்கும் தேவர் தலைவரும் தொழும் தெய்வமே! எங்கும் பரவியிருப்பவனே! ஐயோ! என்று வருந்தும் அடியேனுக்கு எல்லாமாய் இருக்கும் பெருமானே! கனகத்திரள் போல்பவனே! கயிலை மலையானே! அடியேன் துயரங்கள் வருத்த வருந்துகின்றேன். என்னைக் காப்பாயாக. உனக்கு வணக்கங்கள் பல.

2645. நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள அகல முடையாய் போற்றி
அடியும் முடியு மிகலிப் போற்றி
யங்கொன் றறியாமை நின்றாய் போற்றி
கொடியவன் கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.
10

இகலி – (தம்முள்) மாறுபட்டு. ஒன்று – சிறிது.
உரும் – இடி

பெரும்பரப்புடைய வானகத்திற்கு இருப்பிடமாய், எப்பொருளின் நீள அகலங்களையும் தன்னுள் அடக்கியவனாய், உன் அடியையும், முடியையும் காண அரியும், அயனும் தம்முள் மாறுபட்டு முயன்றும் அறிய முடியாமல், அனற்பிழம்பாய் நின்றவனாய்க் கொடிய வலிய கூற்றுவனை உதைத்தவனாய், அடியேனுடைய உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டவனாய், கொடிய இடியும் மின்னலும் ஆகியுள்ள கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

2646. உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
ஓதாதே வேத முணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணா ரிசையின்சொற் கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 11

உண்ணாது உறங்காது இருப்பவனே! வேதங்களை ஓதாது உணர்ந்தவனே! உன் பெருமையை நினைத்துப் பார்க்காது செயற்பட்ட இராவணனைச் சிறிதளவு விரலை அழுத்தி நசுக்கி மகிழ்ந்து, அடக்கி ஆள்பவனே! பின் அவன்பால் பண்ணோடு கூடிய இசையின் இனிமையைச் செவிமடுத்தவனே! முன்னரேயே அடியேனுடைய உள்ளத்தில் புகுந்தவனே! உலகுக்குப் பற்றுக்கோடாய் இருப்பவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

இறைவைத்த – சிறிது ஊன்றி

இப்பதிகத்தில் 88 நிறைவுப் போற்றிகள் போற்றப்பட்டுள்ளன. ஒவ்வொரு போற்றிக்கும் ஒரு மலரிட்டு அருச்சனை புரிய வேண்டும்.
அடுத்த பதிகத்தில்ருந்து 30 போற்றிகளைச் சேர்த்து அன்றாடம் சிவபூசையில் மலர்களுடன் 108 போற்றி அருச்சனை புரியவேண்டும். பின்னர் அது 1008 ஆகத் திருவருள் கூட்ட வேண்டும்.

## 56. திருக்கயிலாயம்

ப.தொ.எண் : 269 | பதிக எண் : 56

2647. பொறையுடைய பூமிநீ ரானாய் போற்றி
பூதப் படையாள் புனிதா போற்றி
நிறையுடைய நெஞ்சி னிடையாய் போற்றி
நீங்காதென் னுள்ளத் திருந்தாய் போற்றி
மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி
வானோர் வணங்கப் படுவாய் போற்றி
கறையுடைய கண்ட முடையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

நிறை – நல்வழியில் நிறுத்தப்படுதல்
மறை – மறைத்துச் சொல்லப்படும் பொருள்கள்; மறைத்தல் உணர மாட்டாதார்க்கு
கறை – நஞ்சு

எதனையும் தாங்குதலை உடைய நிலமாகவும் நீராகவும் இருப்பவனே! பூதப்படையை ஆளும் தூயவனே! நல்வழியில் நிறுத்தப்படும் நெஞ்சில் இருப்பவனே! என் உள்ளத்தில் நீங்காது இருப்பவனே! மறைத்துச் சொல்லப்படும் பொருள்களை உடைய வேதத்தை விரித்து உரைத்தவனே! தேவர்களால் வணங்கப் படுபவனே! நீலகண்டனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

2648. முன்பாகி நின்ற முதலே போற்றி
மூவாத மேனிமுக் கண்ணா போற்றி
அன்பாகி நின்றார்க் கணியாய் போற்றி
ஆறேறு சென்னிச் சடையாய் போற்றி
என்பாக எங்கும் அணிந்தாய் போற்றி
யென்சிந்தை நீங்கா இறைவா போற்றி
கண்பாவி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

எல்லாவற்றிற்கும் முன் உள்ள காரணப் பொருளே! மூப்படையாத உடலை உடைய முக்கண் பெருமானே! அன்பர்களுக்கு ஆபரணமே! கங்கைச் சடையானே! எலும்பாகிய அணிகலன்கள் உடையவனே! என் உள்ளத்தை நீங்காத தலைவனே! கண்ணில் பரவியுள்ள ஒளியே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

2649. மாலை யெழுந்த மதியே போற்றி
மன்னியென் சிந்தை யிருந்தாய் போற்றி
மேலை வினைகள் அறுப்பாய் போற்றி
மேலாடு திங்கள் முடியாய் போற்றி
ஆலைக் கரும்பின் தெளிவே போற்றி
அடியார்கட் காரமுத மானாய் போற்றி
காலை முளைத்த கதிரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

மாலை யெழுந்த மதி, காலை முளைத்த கதிர் என அவற்றின் இயல்புகளை வியந்தோதியது.

மாலை மதியமே! என் சிந்தையில் நிலைபெற்று இருப்பவனே! இனித்தோன்றும் என் வினைகளைப் போக்குபவனே! வானில் உலவும் பிறை முடியனே! ஆலையில் பிழியப்படும் கருப்பஞ்சாற்றின் தெளிவே! அடியார் அமுதமே! காலையில் தோன்றும் இளஞாயிறே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

**2650.** உடலின் வினைக ளறுப்பாய் போற்றி
ஒள்ளெரி வீசும் பிரானே போற்றி
படருஞ் சடைமேல் மதியாய் போற்றி
பல்கணக் கூத்தப் பிரானே போற்றி
சுடரின் திகழ்கின்ற சோதீ போற்றி
தோன்றியென் னுள்ளத் திருந்தாய் போற்றி
கடலில் ஒளியாய முத்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

உடலில் நுகரப்படும் வினைகளை அறுப்பவனே! எரியை ஏந்தி ஆடும் பிரானே! பிறையை அணிந்த சடையனே! பல பூதங்களோடு கூத்தாடும் பெருமானே! விளக்குப் போல ஒளிவிடுகின்ற சோதியே! என் உள்ளத்தில் தோன்றியிருப்பவனே! கடலில் ஆழ்ந்திருக்கும் முத்துப் போன்றவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

உடலின் வினைகள் – உடம்பிற்குரிய வினைகள். பிராரத்தம்.

'உடலின் வினைகள்' என்பது, 'முருகனது குறிஞ்சி' என்பது போன்றது. 'உடம்பிற்கு உரிய வினைகள்' என்பது பொருள். இதனை, 'பிராரத்தம்' என்ப; அவற்றை அறுத்தலாவது, அவை உயிரைத் தாக்கி விருப்பு வெறுப்புக்களைத் தோற்றுவியாது, உடலூழாய்க் கழியும்படி, தான் முன்னின்றருளுதலும், அவை தம்மையும் மெலியவாய் வந்து பொருந்தச் செய்தலும், வேண்டுமிடத்து, அவற்றை அடியோடு ஆற்றல் கெடச் செய்தலுமாம். அவற்றது ஆற்றலைக் கெடுத்தருளினமையை, சுவாமிகளுக்கு, அமணர் தந்த நஞ்சு யாதும் செய்யா தொழிந்தமை முதலியவற்றின் அறிக. எரி வீசும் – எரியைப் போல ஒளிவிடுகின்ற. 'வீசும்', வீசுதற்கு இடமாய் உள்ள; 'ஏந்தியுள்ள' என்றுமாம். படரும் – விரிந்த. பல்கணம். பூத கணங்களே யன்றி, பதினென்கணங்களும் என்க. கணக்கூத்து, கணங்களின் இடையிற் செய்யப்படும் கூத்து. கூத்தப்பிரான் – நடராசன். சுடரின் – விளக்குப் போல. 'அவ்வாறு (விளக்கு போலத்) தோன்றி' என எடுத்துக்கொண்டுரைக்க. இறைவன் உள்ளமாகிய வெளியில் சுடர்போலத் தோன்றுதலை உணர்ந்து வழிபடும் முறையை 'தகர வித்தை' என உபநிடதம் கூறுதலை மேலே (ப. 16. பா. 17) குறித்தாம். கடலில் ஒளி ஆய – கடலினுள் ஒளிதலை (மறைந்திருத்தலை) உடைய; என்றது, 'ஆழ்ந்தும் அகன்றும் நுணுகியுணரும் பேரறிவாளர்க்கே கிடைப்பவன்' என்றபடி.

---

**2651.** மைசேர்ந்த கண்ட மிடற்றாய் போற்றி
மாலுக்கும் ஓராழி யீந்தாய் போற்றி
பொய்சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி
போகாதென் னுள்ளத் திருந்தாய் போற்றி
மெய்சேரப் பால்வெண்ணீ றாடீ போற்றி
மிக்கார்க ளேத்தும் விளக்கே போற்றி
கைசே ரனலேந்தி யாடீ போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

நீலகண்டனே! திருமாலுக்குச் சக்கரம் ஈந்தவனே! ஐயம் திரிபுகள் உள்ள உள்ளங்களில் புகாதவனே! என் உள்ளத்தே நீங்காது இருப்பவனே! உடல் முழுதும் வெள்ளிய நீறு பூசியவனே! சான்றோர்கள் போற்றும் ஞானதீபமே! கையில் அனலை ஏந்திக் கூத்து நிகழ்த்துபவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

மை – கருநிறம்

2652. ஆறேறு சென்னி முடியாய் போற்றி
அடியார்கட் காரமுதாய் நின்றாய் போற்றி
நீறேறு மேனி யுடையாய் போற்றி
நீங்காதென் னுள்ளத் திருந்தாய் போற்றி
கூறேறு மங்கை மழுவா போற்றி
கொள்ளுங் கிழமையே ழானாய் போற்றி
காறேறு கண்ட மிடற்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

கங்கைச் சடையனே! அடியார்களுக்கு ஆரமுதே! நீறு பூசிய மேனியனே! நீங்காது என் உள்ளத்து இருப்பவனே! கையில் கூரிய மழுப்படையை ஏந்தியவனே! ஏழு கிழமைகளாகவும் உள்ளவனே! நீலகண்டனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

2653. அண்டமே ழன்று கடந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
பண்டை வினைக ளறுப்பாய் போற்றி
பாரோர்விண் ணேத்தப் படுவாய் போற்றி
தொண்டர் பரவு மிடத்தாய் போற்றி
தொழில்நோக்கி யாளுஞ் சுடரே போற்றி
கண்டங் கறுக்கவும் வல்லாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

பரவுமிடம் – கும்பம் (கலசம்), திருவுரு, இலிங்கம்

தொழில் – வழிபாடு / கிரியை

ஏழுலகம் கடந்தவனே! ஆதிப்பழம் பொருளே! பழையவினைகளை நீக்குபவனே! மன்னவரும் விண்ணவரும் போற்றும் மூர்த்தியே! அடியார்கள் போற்றும் திருத்தலங்களில் உறைபவனே! வழிபாட்டினை நோக்கி அடியவர்களை ஆளும் ஒளியே! நீலகண்டனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

2654. பெருகி யலைக்கின்ற ஆறே போற்றி
பேராநோய் பேர விடுப்பாய் போற்றி
உருகிநினை வார்தம் முள்ளாய் போற்றி
ஊனந் தவிர்க்கும் பிரானே போற்றி
அருகி மிளிர்கின்ற பொன்னே போற்றி
யாரு மிகழப் படாதாய் போற்றி
கருகிப் பொழிந்தோடு நீரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

அருகி – அரிதிற்கிடைக்கப்பட்டு

பெருகி அலைவீசும் ஆறுபோல்பவனே! நீங்காத நோய்களை நீக்குபவனே! உருகி நினைப்பவர்களின் உள்ளத்தில் உள்ளவனே! குறைபாடுகளை நீக்கும் பெருமானே! அரிதில் கிட்டப்பெற்று ஒளிவீசும் பொன் போன்றவனே! ஒருவராலும் குறை கூறப்படாதவனே! கார் மேகமாகிப் பொழியும் மழையானவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

**2655.** செய்யமலர் மேலான் கண்ணன் போற்றி
தேடியுணராமை நின்றாய் போற்றி
பொய்யாநஞ் சுண்ட பொறையே போற்றி
பொருளாக வென்னையாட் கொண்டாய் போற்றி
மெய்யாக ஆனஞ் சுகந்தாய் போற்றி
மிக்கார்க ளேத்துங் குணத்தாய் போற்றி
கையானை மெய்த்தோ லுரித்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

பதிக மகுடம் – கயிலை மலையானே போற்றி போற்றி

செந்தாமரை மலர்மேல் உள்ள பிரமனும் திருமாலும் தேடியும் காணமுடியாதவாறு நின்றவனே! விடத்தை உண்ட தவறாத அருள் வடிவே! என்னையும் ஒரு பொருளாக ஆண்டு கொண்டவனே! பஞ்சகவ்விய நீராட்டை விரும்புபவனே! சான்றோர்கள் புகழும் நற்குணனே! துதிக்கையை உடைய யானைத் தோலை உரித்தவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

**2656.** மேல்வைத்த வானோர் பெருமான் போற்றி
மேலாடு புரமூன்று மெய்தாய் போற்றி
சீலத்தான் தென்னிலங்கை மன்னன் போற்றி
சிலையெடுக்க வாயலற வைத்தாய் போற்றி
கோலத்தாற் குறைவில்லான் தன்னை யன்று
கொடிதாகக் காய்ந்த குழகா போற்றி
காலத்தாற் காலனையுங் காய்ந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 10

இப்பதிகத்தில் 79 நிறைவுப் போற்றிகள் இடம் பெற்றுள்ளன. சிலை – மலை.
கோலம் – அழகு

மேல் உலகில் தங்கும் வாய்ப்பளிக்கப்பட்ட தேவர்கள் தலைவனே! வானில் உலவிய மூன்று மதில்களையும் அம்பு எய்து அழித்தவனே! இராவணன் கயிலையைப் பெயர்க்க அவனை வாயால் அலற வைத்துப் பின் அவனை, உன்னை வழிபடும் பண்பினன் ஆக்கியவனே! அழகில் குறைவில்லாத மன்மதனை ஒருகாலத்தில் சாம்பலாகும்படி கோபித்தவனே! ஒருகாலத்தில் கூற்றுவனையும் வெகுண்டவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

## 57. திருக்கயிலாயம்

ப.தொ.எண் : 270 பதிக எண் : 55

**2657.** பாட்டான **நல்ல தொடையாய்** போற்றி
பரிசை யறியாமை நின்றாய் போற்றி
சூட்டான திங்கள் முடியாய் போற்றி
தூமாலை மத்தம் அணிந்தாய் போற்றி
ஆட்டான தஞ்சும் அமர்ந்தாய் போற்றி
அடங்கார் புரமெரிய நக்காய் போற்றி
காட்டானை மெய்த்தோ லுரித்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

**மேம்பட்ட பாமாலை சூடியவனே!** உன் தன்மை இன்னது என்று பிறரால் அறியப்படாதவனே! பிறையை முடியில் சூடியவனே! ஊமத்த மாலையை அணிந்தவனே! பஞ்ச கவ்விய அபிடேகத்தை விரும்புபவனே! பகைவருடைய முப்புரமும் எரியுமாறு நகைத்தவனே! யானையின் தோலை உரித்தவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல. "அர்ச்சனை பாட்டேயாகும்". இறைவன் அருளியது.

பாட்டான நல்ல தொடை – பாமாலை. பாமாலை வழிபாட்டை, பூமாலை வழிபாட்டை விட இறைவன் உகக்கிறான். உடல் ஒத்துழைப்பு இல்லாமல் பூமாலை சாற்ற முடியாது. ஆனால் எந்த வேலையும் செய்ய முடியாமல் படுத்த படுக்கைக்குச் சென்ற பின்னரும் உயிரால் பாமாலை சாற்ற முடியும். உயிர் உடலை விட்டுப் பிரியும் போது அது கற்ற கல்வியுடன் தான் செல்லும். "ஒருமையுள் ஒருவன் கற்ற கல்வி" – குறள். அந்தக் கல்வியின் பயனே சிவனுக்குப் பாமாலை சூட்டுவதாகும். இந்த அவையில் இந்த நூலோடு அமர்ந்திருக்கும் நாமெல்லாம் முற்பிறவிகளில் முறையாகப் படிக்க முயற்சித்தவர்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**2658.** அதிரா வினைகள் அறுப்பாய் போற்றி
ஆல நிழற்கீழ் அமர்ந்தாய் போற்றி
சதுரா சதுரக் குழையாய் போற்றி
சாம்பர்மெய் பூசுந் தலைவா போற்றி
எதிரா வுலகம் அமைப்பாய் போற்றி
யென்றும்மீ ளாவருள் செய்வாய் போற்றி
கதிரார் கதிருக்கோர் கண்ணே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 2

மீளா அருள் – மீளாமைக்கு ஏதுவான அருள்.
அதிர்த்தல் – நடுங்கச் செய்தல்
சதுரக்குழை – சிறந்து விளங்குங்குழை
கதிருக்கோர் கண்ணே – ஞாயிற்றின் ஒளிக்கும் முதலொளியாய் நிற்றல்.

வினைகள் நடுங்கச் செய்யாதபடி அவற்றை நீக்குபவனே! கல்லால மர நிழற்கீழ் அமர்ந்தவனே! திறமை உடையவனே! சிறந்த குழை என்னும் காதணியை அணிந்தவனே! சாம்பலை உடலில் பூசும் தலைவனே! தனக்கு ஒப்பில்லாத முத்தி உலகை அமைத்து அதனை அடையும் அடியவருக்கு என்றும் பிறப்பிற்குத் திரும்பி வாராத அருளைச் செய்பவனே! ஒளி வீசும் சூரியன் முதலிய ஒளிகளுக்குப் பற்றுக் கோடாக இருப்பவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

**2659.** செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி
செல்லாத செல்வ முடையாய் போற்றி
ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி
ஆகாய வண்ண முடையாய் போற்றி
வெய்யாய் தணியாய் அணியாய் போற்றி
வேளாத வேள்வி யுடையாய் போற்றி
கையார் தழலார் விடங்கா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

செம்மை – இறைவர் பாகம்
கருமை – அம்மை பாகம்

செம்மை கருமை வெண்ணிறம் இவற்றை உடையவனே! நீங்காத செல்வம் உடையவனே! வியக்கத்தக்கவனே! பெரிய பொருள்களும் சிறிய பொருள்களும் ஆகியவனே! ஆகாயத்தின் தன்மை உடையவனே! தீயோருக்கு வெப்பமும் அடியார்க்குக் குளிர்ச்சியும் அண்மையுமாய் உள்ளவனே! ஓம்பாதே நிலைபெற்றிருக்கும் அருட் சக்தியை உடையவனே! அனல் ஏந்திய அழகனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

'செம்மை, கருமை, வெண்மை' என்னும் மூன்றுமே முதல் நிறங்களாதல் பற்றியும் அவை முறையே இராசத, தாமத, சாத்துவிக குணங்களைக் குறிக்கும் குறிப்புக்களாதல் பற்றியும், 'எல்லாப் பொருளுமாயினவன்' என்பார், அவற்றை வகுத்தோதியருளினார். செல்லாத – நீங்காத, நீங்காத செல்வமாவன தன்வயத்தனாதல் முதலிய குணங்கள். ஐ – வியப்பு; தலைமையுமாம். வண்ணம் – தன்மை. ஆகாயத்தின் தன்மையாவது, அருவாதலும், எல்லாப் பொருளையும் தன்னுள் அடக்கி நிற்றலுமாம். இவ்வாறாதல் பற்றியே இறைவனது குணத்தினை, 'சிதாகாசம், அருள்வெளி' என்பன போன்ற சொற்களாற் குறிப்பர். இப்பெற்றி நோக்கியே, 'விசும்பு மெய்யாக' (நற்றிணை – கடவுள் வாழ்த்து) என, இறைவற்கு ஆகாயத்தை உடம்பாகக் கூறினார். சான்றோர் எனத் தைத்திரீய உபநிடதமும் கூறும். வெய்யாய் – வெம்மை உடையவனே. தணியாய் – தண்மையுடையவனே. அண்மை – 'அணிமை' எனப்படுதல் போல, தண்மை – 'தணிமை' எனப்பட்டது; 'வெய்யாய் தணியாய் இயமானனாம்விமலா' என, ஆளுடைய அடிகளும் அருளினர். (தி. 8 திருவா. சிவபு. 36) அணியாய் – அண்மையில் உள்ளவனே. இங்ஙனம் அருளியவாற்றால் அணிமையின் மறுதலைபற்றி

'சேயாய்' என்பதுங் கொள்ளப்படும். 'செய்யாய் கரியாய்' என்றது முதலிய பலவற்றால், ஒன்றோடொன்று ஒவ்வாப் பொருள்கள் பலவும் தான் ஒருவனேயாய் நிற்கும் அதிசயநிலை அருளிச் செய்யப்பட்டது; 'செல்லாத செல்வம்', 'வேளாத வேள்வி' என்றருளியனவும் அன்ன, வேளாத வேள்வி – ஓம்பாதே நிலைபெற்றிருக்கும் வேள்வி; என்றது அருட்சத்தியை. அது, சிவபிரானைப் பயன்கருதியும் கருதாதும் வழிபடுவோர்க்குத் தூய்தான உலகப் பயனையும், வீடுபேற்றையும் தரும் என்பதனை, தூயதல்லாத உலகப் பயனைத்தரும் வேள்விகளிலே மனஞ்செல்வார்க்கு அறிவுறுத்தற் பொருட்டு, வேள்வியாக அருளிச் செய்தார். தூய்தன்மை மயக்கஞ் செய்தலும், தூய்மை அது செய்யாமையுமாம். இன்னும் தேவர்க்குக் கொடுக்கும் அவியுணவுகளை வேள்வித் தீ வழியாகக் கொடுத்தல் போல, சிவபிரானுக்கு நிவேதிக்கும் நிவேதனங்கள் அனைத்தும் அவனது அருட்சத்தி வழியாகவே நிவேதிக்கப்படுதலின், அதனை அவ்வாறருளிச் செய்தற்கு இயைபுண்மையறிக. இது பற்றியே, சிவபிரானுக்கு வேள்வித் தீ வழியாகக் கொடுக்குமிடத்தும் சிவாக்கினி வழியாகவே கொடுத்தல் சிவநெறி முறைமையாயிற்று, இதனானே, சைவவேள்வி, பூதாக்கினியையே வளர்க்கும் வைதிக வேள்வி போலாது, சிவாக்கினியை வளர்க்கும் வேள்வியாதலறிக. சிவாக்கினியைப் பிறப்பிக்கும் முறை, அதனை வளர்க்கும் முறை முதலியவெல்லாம், பிரமாணங்கள் முதலியவற்றினன்றிச் சைவாகமங்களிலே அறியப்படுவனவாம். 'கையின்கண்' என உருபு விரிக்க. 'ஆர்' இரண்டனுள் முன்னது மிகுதியையும், பின்னது பொருந்துதலையும் குறித்தன. 'ஆரழல்' என்பதே பாடம் என்றலுமாம். விடங்கன் – வீரம் உடையவன்.

## இறைவனின் எண்குணப் பாடல்

**2660.** ஆட்சி யுலகை யுடையாய் போற்றி
அடியார்க் கமுதெலாம் ஈவாய் போற்றி
சூட்சி சிறிது மிலாதாய் போற்றி
சூழ்ந்த கடல்நஞ்ச முண்டாய் போற்றி
மாட்சி பெரிது முடையாய் போற்றி
மன்னியென் சிந்தை மகிழ்ந்தாய் போற்றி
காட்சி பெரிது மரியாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

உலகை ஆள்பவனே! அடியார்களுக்கு இன்பம் அளிப்பவனே! சிறிதும் வஞ்சனை இல்லாதவனே! கடல் விடம் உண்டவனே! மேம்பட்ட மாண்புகளை உடையவனே! என் உள்ளத்துள் நிலைபெற்றிருப்பவனே! தம் முயற்சியால் யாரும் காண்டற்கு அரியவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

**2661.** முன்னியாய் நின்ற முதல்வா போற்றி
மூவாத மேனி யுடையாய் போற்றி
என்னியா யெந்தை பிரானே போற்றி
**யேழி னிசையே யுகப்பாய் போற்றி**
மன்னிய மங்கை மணாளா போற்றி
மந்திரமுந் தந்திரமு மானாய் போற்றி
கன்னியார் கங்கைத் தலைவா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

சுவாமி இசைப்பிரியர். அளப்பில் கீதஞ்சொன்னார்க்கு அடிகள் தாம் அருளுமாறே. முன்னி – முன்னிற்பவர்.
என்னி – எனது உடைமையானவர்.
கன்னியார் – கன்னியாம் தன்மை பொருந்திய.

தவக்கோலம் பூண்ட முதல்வனே! மூப்படையாத திருமேனியனே! எனக்குத் தாயும் தந்தையும் ஆயவனே! ஏழிசையை விரும்புபவனே! உன்னோடு கூடிய பார்வதியின் துணைவனே! மந்திரமும் அவற்றைச் செயற்படுத்தும் செயல்களும் ஆனவனே! என்றும் அழிவில்லாத கங்கைக்குத் தலைவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல. தந்திரம் – ஆகம நூல். ஆர்கங்கை – நிறைந்த கங்கை.

**2662.** உரியா யுலகினுக் கெல்லாம் போற்றி
உணர்வென்னும் ஊர்வ துடையாய் போற்றி
எரியாய தெய்வச் சுடரே போற்றி
யேசுமா முண்டி யுடையாய் போற்றி
அரியா யமரர்கட் கெல்லாம் போற்றி
அறிவே யடக்க முடையா போற்றி
கரியானுக் காழியன் றீந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

முண்டி – தசை நீங்கிய தலை. ஏசம் – இகழப்படுகின்ற
கரியான் – திருமால்

எல்லா உலகிற்கும் உரிமை உடையவனே! உன் கருத்தறிந்து செயற்படும் காளையை வாகனமாக உடையவனே! எரி போன்ற அருள் விளக்கே! பிறர் இகழுமாறு மண்டையோட்டினை ஏந்தினவனே! தேவர்கள் அணுகுவதற்கு அரியவனே! அறிவு வடிவானவனே! நுண்ணியனே! ஒரு காலத்தில் திருமாலுக்குச் சக்கரம் ஈந்தவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

**2663.** எண்மேலும் எண்ண முடையாய் போற்றி
யேறிய வேறுங் குணத்தாய் போற்றி
பண்மேலே பாவித் திருந்தாய் போற்றி
பண்ணொடியாழ் வீணை பயின்றாய் போற்றி
விண்மேலும் மேலும் நிமிர்ந்தாய் போற்றி
மேலார்கண் மேலார்கண் மேலாய் போற்றி
கண்மேலுங் கண்ணொன் றுடையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

எண் – உயிர்களது எண்ணம்
எண்ணம் – எண்ணுதல்
பதிக மகுடம் – கயிலை மலையானே போற்றி போற்றி

உயிர்களுடைய எண்ணங்களுக்கு மேற்பட்ட எண்ணங்களை உடையவனே! உயிர்களைக் கரையேற்றும் பொருட்டு மேம்பட்ட குணங்களை உடையவனே! பண்ணிடத்திலே விருப்பம் கொண்டு பண்ணோடு யாழினையும் வீணையையும் இசைக்கின்றவனே! வானத்தையும் கடந்து ஓங்கியிருப்பவனே! மேலோருக்கெல்லாம் மேலோனே! இரு கண்களுக்கு மேலே மூன்றாவதான நெற்றிக் கண்ணை உடையவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

**2664.** முடியார் சடையின் மதியாய் போற்றி
முழுநீறு சண்ணித்த மூர்த்தீ போற்றி
துடியா ரிடையுமையாள் பங்கா போற்றி
சோதித்தார் காணாமை நின்றாய் போற்றி
அடியார் அடிமை அறிவாய் போற்றி
அமரர் பதியாள வைத்தாய் போற்றி
கடியார் புரமூன்று மெய்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

கடியார் – கொடியவர்

சடையில் பிறை சூடி, திருநீறு பூசிய மூர்த்தியே! உடுக்கை போன்ற இடையை உடைய பார்வதி பாகனே! தம் முயற்சியால் அறிய முற்படுபவர் காணமுடியாதபடி இருப்பவனே! அடியவர்களின் அடிமைத் தன்மையின் உண்மையை அறிபவனே! அவர்களைத் தேவருலகை ஆள வைப்பவனே! காவல் பொருந்திய மும்மதில்களையும் அழித்தவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

2665. போற்றிசைத்துன் னடிபரவ நின்றாய் போற்றி
புண்ணியனே நண்ண லரியாய் போற்றி
ஏற்றிசைக்கும் வான்மே லிருந்தாய் போற்றி
எண்ணா யிரநூறு பெயராய் போற்றி
நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி
நான்முகற்கும் மாற்கும் அரியாய் போற்றி
காற்றிசைக்கும் திசைக்கெல்லாம் வித்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

அடியார்கள் வணக்கம் சொல்லித் திருவடிகளை வழிபடுமாறு இருப்பவனே! புண்ணியனே! முயற்சியால் அணுக அரியவனே! இடி ஒலிக்கும் வான்மேல் இருப்பவனே! எண்ணிறந்த பெயர்களை உடையவனே! நான்கு திசைகளுக்கும் ஒலி வழங்கும் தலைவனே! பிரமனுக்கும் திருமாலுக்கும் உள்ளவாறு உணர்தற்கு அரியவனே! காற்று இயங்கும் திசைகளுக்கெல்லாம் காரணனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கம் பல.

* * * * * * * 10

இப்பதிகத்தில் 72 நிறைவுப் போற்றிகள் உள்ளன

## 58. திருவலம்புரம்

ப.தொ.எண் : 271 பதிக எண் : 58

2666. மண்ணளந்த மணிவண்ணர் தாமும் மற்றை
மறையவனும் வானவருஞ் சூழ நின்று
கண்மலிந்த திருநெற்றி யுடையார் **ஒற்றை**
**கதநாகங் கையுடையார் காணீ ரன்றே**
பண்மலிந்த மொழியவரும் யானு மெல்லாம்
பணிந்திறைஞ்சித் தம்முடைய பின்பின் செல்ல
மண்மலிந்த வயல்புடைசூழ் மாடவீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 1

உலகத்தை அளந்த நீலமணி நிறத்தவரான திருமாலும் பிரமனும் தேவர்களும் தம்மைச் சூழ, நெற்றிக்கண்ணராய், ஒற்றைப் பாம்பினைக் கையில் உடையவராய், இனிய மொழிகளை யுடைய மற்றப் பெண்களும் யானும் பணிந்து வணங்கித் தம்பின்னே செல்லவும், மண்வளம் நிறைந்த வயல்களால் சூழப்பட்ட மாட வீதிகளையுடைய வலம்புர நகரில் புகுந்து, பெருமான் அங்கேயே தங்கிவிட்டார்.

ஒற்றைக்கத நாகம் – அணிந்தவை பல பாம்புகளாயினும், கையிற் பிடித்து ஆடுவது ஒற்றைப் பாம்பையே.
கதம் – சினம்

**2667.** சிலைநவின்ற தொருகணையாற் புரமூன் றெய்த
தீவண்ணர் சிறந்திமையோர் இறைஞ்சி யேத்தக்
கொலைநவின்ற களியானை யுரிவை போர்த்துக்
கூத்தாடித் திரிதருமக் கூத்தர் நல்ல
கலைநவின்ற மறையவர்கள் காணக் காணக்
கடுவிடைமேற் பாரிடங்கள் சூழக் காதல்
மலைமகளுங் கங்கையுந் தாமு மெல்லாம்
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 2

சிலை நவின்ற – வில்லிற் பொருந்திய
பாரிடம் – பூதகணம்

வில்லில் பழகிய அம்பு ஒன்றால் முப்புரமும் அழித்த, தீயைப் போன்ற செந்நிறமுடைய பெருமானாய், இமையவர்கள் வழிபட்டுப் புகழக் கொலைத் தொழிலில் பழகிய மதயானையின் தோலை உரித்துப் போர்த்துக் கூத்தாடிக் கொண்டு எங்கும் செல்லும் அக்கூத்தர், கலைகளில் பழகிய அந்தணர்கள் காணவும், பூதகணங்கள் சூழவும், விரைவாகச் செல்லும் காளை மீது பார்வதியும் கங்கையும் தாமுமாக இவர்ந்து, வலம்புரம் சென்று அங்கே தங்கி விட்டார்.

**2668.** தீக்கூருந் திருமேனி யொருபால் மற்றை
யொருபாலும் அரியுருவந் திகழ்ந்த செல்வர்
ஆக்கூரில் தான்தோன்றிப் புகுவார் போல
வருவினையேன் செல்வதுமே யப்பா லெங்கும்
நோக்கா ரொருவிடத்து நூலுந் தோலுந்
துதைந்திலங்குந் திருமேனி வெண்ணீ றாடி
வாக்கால் மறைவிரித்து மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 3

தீக்கூரும் – நெருப்பு மிக்கெரிவது போலும். அரி உருவம் ஒரு பாலும் – ஒரு பாதி தாமாகவும், மறுபாதி திருமாலாகவும் இருப்பதைச் சங்கர நாராயணன் என்பர். இந்நிலை படைப்புக் காலத்தில் திருமாலை இடப்பாகத்தில் தோற்றுவித்து அவர் வாயிலாக பிரமனைத் தோற்றுவித்து அவர் வாயிலாக உலகங்களைத் தோற்றுவித்தலைக் குறிக்கும்.

திருமேனியின் ஒரு பகுதி தீயின் நிறமாகவும், மற்றைப் பகுதி திருமாலின் நிறமாகவும், விளங்கித் தோன்ற, ஆக்கூரிலுள்ள தான்தோன்றி மாடத்திற்குச் செல்பவரைப் போல யான் அப்பக்கம் சென்ற அளவில் ஓரிடத்தையும் நோக்காமல், பூணூலும் மான்தோலும் பொருந்திய தம் மேனியில் வெள்ளிய நீறு பூசி, வேதக் கருத்துக்களை விரித்து, மாயமாகச் சில பேசிய வண்ணம், வலம்புரமே புக்கு அங்கே மன்னினாரே.

**2669.** மூவாத மூக்கப்பாம் பரையிற் சாத்தி
மூவர் உருவாய முதல்வ ரிந்நாள்
கோவாத எரிகணையைச் சிலைமேற் கோத்த
குழகனார் குளிர்கொன்றை சூடி யிங்கே
போவாரைக் கண்டடியேன் பின்பின் செல்லப்
புறக்கணித்துத் தம்முடைய பூதஞ் சூழ
வாவா வெனவுரைத்து மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 4

இறைவனை அடைந்த பொருள்களும் என்றும் ஒரு பெற்றியவாய் நீடு வாழ்தலின் பாம்பும் மூவாதாயிற்று. கோவாத கணை – தொடுக்கப்படாத அம்பு.

மூப்படையாத கொடிய பாம்பை அரையில் கட்டி, மும்மூர்த்திகளின் உருவமாக உள்ள முதற்கடவுளாம் சிவபெருமான், வேறு யாரும் இணைக்க முடியாத அக்கினியாகிய அம்பினை வில்லில் கோத்த இளையராய், குளிர்ந்த கொன்றைப் பூவைச் சூடி, இன்று இங்கே போகின்றவரைக் கண்டு அடியேன் பின்னே செல்ல, என்னைப் புறக்கணித்து, என்னை வா வா என்று பொய்யாக அழைத்துவிட்டுத் தம்முடைய பூதகணம் தம்மைச் சூழ, வலம்புரமேபுக்கு அங்கே மன்னினாரே.

**2670.** அனலொருகை யதுவேந்தி யதளி னோடே
ஐந்தலைய மாநாகம் அரையிற் சாத்திப்
புனல் பொதிந்த சடைக்கற்றைப் பொன்போல்மேனிப்
புனிதனார் புரிந்தமரர் இறைஞ்சி யேத்தச்
சினவிடையை மேல்கொண்டு திருவா ரூருஞ்
சிரபுரமும் இடைமருதுஞ் சேர்வார் போல
மனமுருக வளைகழல மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 5

அதள் – தோல். புரிந்து – விரும்பி

ஒரு கையில் தீயை ஏந்தி, இடையில் அணிந்த தோலாடை மீது ஐந்தலையை உடைய பெரிய பாம்பினை இறுகக் கட்டிக் கங்கை தங்கிய சடைமுடியும் பொன் போன்ற திருமேனியும் உடைய புனிதர், விரும்பித் தேவர்கள் வழிபட்டுத் துதிக்கக் கோபம் உடைய காளையை இவர்ந்து, திருவாரூரும் சிரபுரமும், இடைமருதும் அடைபவரைப் போல, என் மனம் உருகுமாறும் வளைகள் கழலுமாறும் என்னிடத்துப் பொய்யாகச் சிலவற்றைப் பேசி வலம்புரமேபுக்கு அங்கே மன்னினார்.

**2671.** கறுத்ததொரு கண்டத்தர் காலன் வீழக்
காலினாற் காய்ந்துகந்த காபா லியார்
முறித்ததொரு தோலுடுத்து முண்டஞ் சாத்தி
முனிகணங்கள் புடைசூழ முற்றந் தோறுந்
தெறித்ததொரு வீணையராய்ச் செல்வார் தம்வாய்ச்
சிறுமுறுவல் வந்தெனது சிந்தை வௌவ
மறித்தொருகால் நோக்காதே மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 6

முறித்தது – உரித்தது. முண்டம் – தலைமாலை

நீலகண்டராய்க் கூற்றுவன் அழியுமாறு காலினால் உதைத்து மகிழ்ந்த காபாலக் கூத்தாடும் பெருமானார் தாம் உரித்த தோலை ஆடையாக உடுத்து, திருநீறு பூசி முனிவர்கள் தம் இருபுடையும் சூழ்ந்து வர, வீடுகளில் முன்னிடம் தோறும் வீணையை இசைத்துக் கொண்டு சென்றாராக, அவருடைய புன்சிரிப்பு என் சிந்தையைக் கவர, மீண்டும் ஒருமுறை என்னை நோக்காமல் பொய்யாக ஏதோ பேசி, வலம்புரமேபுக்கு அங்கே மன்னினார்.

**2672.** பட்டுடுத்துப் பவளம்போல் மேனி யெல்லாம்
பசுஞ்சாந்தம் கொண்டணிந்து பாதம் நோவ
இட்டெடுத்து நடமாடி யிங்கே வந்தார்க்
கெவ்வூரீர் எம்பெருமா னென்றே னாவி
விட்டிடுமா றதுசெய்து விரைந்து நோக்கி
வேறோர் பதிபுகப் போவார் போல
வட்டணைகள் படநடந்து மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 7

வட்டணைகள் பட – சுழற்சி தோன்ற

பட்டினை உடுத்துப் பவளம் போன்ற தம் மேனியில் பசிய சந்தனம் பூசித் தம் திருவடிகளை ஊன்றியும் தூக்கியும் கூத்தாடிக் கொண்டு என்னிடம் வந்தாராக. யான் 'எம்பெருமான் நீர் எவ்வூரைச் சேர்ந்தவர்' என்று வினவ என் உயிர்போகுமாறு என்னை விரைந்து பார்த்து, எனக்கு காமமீதூர்வினை வழங்கி, வேறோர் ஊருக்குச் செல்பவரைப் போலப் பொய் பேசிச் சுழன்று நடந்து, வலம்புரமே புக்கு அங்கே மன்னினாரே.

**2673.** பல்லார் பயில்பழனம் பாசூ ரென்று
**பழனம் பதிபழமை சொல்லி நின்றார்**
நல்லார் நனிபள்ளி யின்று வைகி
நாளைப்போய் நள்ளாறு சேர்து மென்றார்
சொல்லா ரொருவிடமாத் தோள்கை வீசிச்
சுந்தரராய் வெந்தநீ றாடி யெங்கு
மல்லார் வயல்புடை சூழ்மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 8

மல் – வளம். பதிக மகுடம் – வலம்புரமே புக்கங்கே மன்னினாரே

பலரும் தங்கியிருக்கு திருப்பழனம், பாசூர் என்ற தம் ஊர்களைக் குறிப்பிட்டு, அவற்றுள் பழனப்பதியில் தமக்கு உள்ள பழந்தொடர்பைக் கூறி, நல்லவர்கள் மிக்க நனிபள்ளியில் இன்று தங்கி, மறுநாள் நள்ளாறு போய்ச் சேர எண்ணியுள்ளதாகக் கூறினார். இன்ன இடத்துக்குப் போகப் போவதாக உறுதியாய்க் கூறாமல், திருநீறு பூசிய அழகியராய்த் தம் கைகளை வீசிக் கொண்டு, வளம் பொருந்திய வயல்களால் சூழப்பட்ட மாட வீதிகளை உடைய வலம்புரமேபுக்கு அங்கே மன்னினார்.

**2674.** பொங்கா டரவொன்று கையிற் கொண்டு
போர்வெண் மழுவேந்திப் போகா நிற்பர்
தங்கா ரொருவிடத்துந் தம்மே லார்வந்
தவிர்த்தருளார் தத்துவத்தே நின்றே
னென்பர்
எங்கே யிவர்செய்கை யொன்றொன் றொவ்வா
என்கண்ணின் நின்றகலா வேடங் காட்டி
மங்குல் மதிதவழும் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 9

பொங்கு – சினம் மிக்க. வெண்மை – கூர்மையைக் குறிக்கும். தத்துவம் – உண்மை.

படமெடுத்து ஆடும் பாம்பு ஒன்றனைக் கையில் கொண்டு, மறுகையில் போரிடும் மழுப்படையை ஏந்தி, ஓரிடத்தும் தங்காராய்ப் போய்க் கொண்டே, தம்மிடத்து மற்றவர் கொள்ளும் விருப்பத்தை நீக்காராய் மெய்ப்பொருளிடத்தே நிற்பவராகத் தம்மைக் கூறிக்கொண்டே, ஒன்றோடொன்று பொருந்தாத செயல்களை உடையவராய், என் கண்களை விட்டு நீங்காத தம் இனிய வேடத்தைக் காட்டி, வானத்திலுள்ள சந்திரன் தவழும்படியான உயர்ந்த மாட வீடுகளைக் கொண்ட வலம்புரமேபுக்கு அங்கே மன்னினார்.

2675. செங்கண்மால் சிலைபிடித்துச் சேனை யோடுஞ்
சேதுபந் தனஞ்செய்து சென்று புக்குப்
பொங்குபோர் பலசெய்து புகலால் வென்ற
போரரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ
அங்கொருதன் திருவிரலால் இறையே யூன்றி
யடர்த்தவற்கே அருள்புரிந்த அடிக ளிந்நாள்
வங்கமலி கடல்புடைசூழ் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 10

திருமால் அரிதில் வெல்லும் ஆற்றலுடையவனைக் கால் விரலால் சிறிதே ஊன்றி அடர்த்தார் எனவும் திருமால் போல அடர்த்தே ஒழியாது, பின்பு அவனுக்கு அருள் புரிந்தார் எனவும் வியந்து போற்றி மகிழ்கிறார். ஆண்மையும், அருளும் உடைய ஆடவரிடத்தே தான் மகளிருக்குக் காதல் பிறக்கும் என்பதற்குச் சங்க இலக்கியங்களில் நிறைய ஆதாரங்கள் உள்ளன.

திருமால் வில்லை ஏந்திக் குரங்குச் சேனையோடு, கடலில் அணைகட்டி, இலங்கையைச் சென்று அடைந்து, மேம்பட்ட பலபோர்கள் செய்து, தன்னை அடைக்கலமாக வந்தடைந்த சுக்கிரீவன், வீடணன் முதலியோர் உதவியதால் அரிதில் வென்றழித்த இராவணனுடைய நீண்ட கிரீடங்கள் பொடியாய் விழுமாறு, தன் ஒற்றைக் கால் விரலைச் சிறிதளவு ஊன்றி, அவனை வருத்திப் பின் அவனுக்கே அருளையும் செய்தவர் சிவபெருமான். அப்பெருமானார், இன்று **கப்பல்கள் நிறைந்த கடலால் ஒருபுறம் சூழப்பட்டதாய், மாடவீதிகளை உடைய வலம்புரம் என்ற ஊரை அடைந்து அங்கேயே நிலையாகத் தங்கிவிட்டார். வலம்புரம் ஒரு பெரிய துறைமுகப்பட்டினமாய் விளங்கியிருக்கும் போலும்.**

## 59. திருவெண்ணியூர்

ப.தொ.எண் : 272 பதிக எண் : 59

2676. **தொண்டிலங்கும் அடியவர்க்கோர்** நெறியி னாருந்
தூநீறு துதைந்திலங்கு மார்பி னாரும்
புண்டரிகத் தயனொடுமால் காணா வண்ணம்
பொங்குதழற் பிழம்பாய புராண னாரும்
வண்டமரும் மலர்க்கொன்றை மாலை யாரும்
வானவர்க்கா நஞ்சுண்ட மைந்த னாரும்
விண்டவர்தம் புரமூன்றும் எரி செய்தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே.
1

மைந்தனார் – வலியவர். விண்டவர் – பிரிந்தவர், பகைவர்.
பதிக மகுடம் – வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்தனாரே.

வெண்ணி என்ற திருத்தலத்திலே விரும்பித் தங்கியிருக்கின்ற உலகியலிலிருந்து வேறுபட்டவராகிய சிவபெருமானார், **தொண்டுகளால் விளங்கும் அடியவர்களுக்கு** ஒப்பற்ற வழியாய் உள்ளவரும், திருநீறு அணிந்த மார்பினரும், தாமரையிலுள்ள பிரமனும் திருமாலும் காணமுடியாதபடி தழற்பிழம்பாய்க் காட்சி வழங்கிய பழம்பொருளானவரும், வண்டுகள் தங்கும் கொன்றை மாலை அணிந்தவரும், தேவர்களுக்காக விடத்தை உண்டவலியவரும், பகைவருடைய மும்மதில்களையும் தீக்கு இரையாக்கியவரும் ஆவார்.

**2677.** நெருப்பனைய மேனிமேல் வெண்ணீற் றாரும்
நெற்றிமே லொற்றைக்கண் நிறைவித் தாரும்
பொருப்பரையன் மடப்பாவை யிடப்பா லாரும்
பூந்துருத்தி நகர்மேய புராண னாரும்
மருப்பனைய வெண்மதியக் கண்ணி யாரும்
வளைகுளமும் மறைக்காடும் மன்னி னாரும்
விருப்புடைய அடியவர்தம் முள்ளத் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே.
2

மருப்பு – யானைக்கொம்பு
வளைகுளம் – வைப்புத்தலம்

செம்மேனியில் வெண்ணீறு பூசியவரும், நெற்றிக் கண்ணரும், பார்வதி பாகரும், பூந்துருத்தியில் உறையும் பழையவரும், யானைக் கொம்பு போன்ற பிறையை முடி மாலையாச் சூடியவரும், வலைகுளம், மறைக்காடு இவற்றில் தங்கியவரும், தம்மை விரும்பும் அடியாருடைய உள்ளத்தில் உறைபவரும், வெண்ணி அமர்ந்து உறைகின்ற விகிர்தர் ஆவார்.

**2678.** கையுலாம் மூவிலைவே லேந்தி னாருங்
கரிகாட்டில் எரியாடுங் கடவு ளாரும்
பையுலாம் நாகங்கொண் டாட்டு வாரும்
பரவுவார் பாவங்கள் பாற்று வாரும்
செய்யுலாங் கயல்பாய வயல்கள் சூழ்ந்த
திருப்புன்கூர் மேவிய செல்வ னாரும்
மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே.
3

கரிக்காடு – கரிகின்ற காடு; சுடலை.
பை உலாம் – படம் பொருந்திய – பாற்றுவார் – அழிப்பார்.

வெண்ணி அமர்ந்துறையும் விகிர்தனார், கையில் முத்தலைச் சூலம் ஏத்தினாரும், சுடுகாட்டு நெருப்பில் கூத்து நிகழ்த்தும் கடவுளும், படமெடுக்கும் பாம்பினை ஆட்டுபவரும், தம்மை வழிபடுகின்றவர்களின் பாவத்தை அழிப்பவரும், கயல் மீன்கள் பாயும் வயல்களை உடைய திருப்புன்கூர் மேவிய செல்வரும், உடல் முழுதும் வெண்ணீறு பூசியவரும் ஆவர்.

**2679.** சடையேறு புனல்வைத்த சதுர னாருந்
தக்கன்றன் பெருவேள்வி தடைசெய் தாரும்
உடையேறு புலியதள்மேல் நாகங் கட்டி
யுண்பலிக்கென் றூரூரி னுழிதர் வாரும்
மடையேறிக் கயல்பாய வயல்கள் சூழ்ந்த
மயிலாடு துறையுறையும் மணாள னாரும்
விடையேறு வெல்கொடியெம் விமல னாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே.
4

ஏறுபுனல் –பெருகும் நீர். உழிதரல் – திரிதல்
மணாளனார் – தலைவர்.

சடையில் கங்கை வெள்ளத்தைச் சூடிய திறலுடையவரும், தக்கனுடைய பெரிய வேள்வி நிறைவேறாமல் தடுத்தவரும், உடையாக அணிந்த புலித்தோல் மீது பாம்பினை இறுக்கிக் கட்டிப் பிச்சைக்காக ஊர் ஊராகத் திரிபவரும், நீர்மடையில் ஏறிக் கயல்பாயுமாறு நீர்வளம் மிக்க வயல்களால் சூழப்பட்ட மயிலாடுதுறையின் தலைவரும், காளை எழுதிய கொடியை உயர்த்திய எம் புனிதரும், வெண்ணி அமர்ந்துறைகின்ற விகிர்தனாரே.

2680. மண்ணிலங்கு நீரனல்கால் வானு மாகி
மற்றவற்றின் குணமெலா மாய்நின் றாரும்
பண்ணிலங்கு பாடலோ டாட லாரும்
பருப்பதமும் பாசூரும் மன்னி னாரும்
கண்ணிலங்கு நுதலாருங் கபால மேந்திக்
கடைதோறும் பலிகொள்ளுங் காட்சி யாரும்
விண்ணிலங்கு வெண்மதியக் கண்ணி யாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 5

ஐம்பூதங்களும், அவற்றின் பண்புகளுமாய் நிலைபெற்றவரும், பண்ணோடு கூடிய பாடலும் கூத்தும் நிகழும் சீசைலம், பாசூர் இவற்றில் உறைபவரும், நெற்றிக்கண்ணினரும், மண்டையோட்டினை ஏந்தி வீட்டு வாயில்தோறும் பிச்சை ஏற்கும் செயலை உடையவரும், பிறையை முடிமாலையாக உடையவரும், வெண்ணியமர்ந்து உறைகின்ற விகிர்தனாரே.

கடை – வாயில்

2681. வீடுதனை மெய்யடியார்க் கருள்செய் வாரும்
வேலைவிட முண்டிருண்ட கண்டத் தாரும்
கூடலர்தம் மூவெயிலும் எரிசெய் தாரும்
குரைகழ லாற் கூற்றுவனைக் குமைசெய் தாரும்
ஆடுமர வரைக்கசைத்தங் காடு வாரும்
ஆலமர நீழலிருந் தறஞ்சொன் னாரும்
வேடுவராய் மேல்விசயற் கருள்செய் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 6

அடியவருக்கு வீட்டுலகம் நல்குபவரும், விடமுண்ட நீலகண்டரும், பகைவருடைய மும்மதில்களையும் எரித்தவரும், திருவடியால் கூற்றுவனை உதைத்தவரும், படமெடுத்தாடும் பாம்பினை இடையில் இறுகக் கட்டிக் கொண்டு கூத்து நிகழ்த்துபவரும், கல்லால மர நிழலிலிருந்து அறத்தை உபதேசித்தவரும், வேடராய் முன்னொரு காலத்தில் அருச்சுனனுக்கு அருளியவரும், வெண்ணி அமர்ந்து உறைகின்ற விகிர்தனாரே.

மெய்யடியார் – பயன் கருதாது அன்பு காரணமாக வழிபடுவர். கூடலர் – பகைவர்.
குமை – அழித்தல். வேலை – கடல்.

2682. மட்டிலங்கு கொன்றையந்தார் மாலை சூடி
மடவா ளவளோடு மானொன் றேந்திச்
சிட்டிலங்கு வேடத்த ராகி நாளுஞ்
சில்பலிக்கென் றூரூர் திரிதர் வாருங்
கட்டிலங்கு பாசத்தால் வீச வந்த
**காலன்றன் கால மறுப்பார்** தாமும்
விட்டிலங்கு வெண்குழைசேர் காதி னாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 7

தேன்பொருந்திய கொன்றை மாலை சூடி மான் ஒன்றைக் கையில் ஏந்திப் பார்வதியோடு ஞானம் புலப்படும் வேடத்தோடும் சிலவாகிய பிச்சைக்காக ஊர் ஊராகத் திரிபவரும், உறுதியான பாசத்தால் மார்க்கண்டேயனைக் கட்டவந்த **கூற்றுவனுடைய வாழ்நாளைப் போக்கியவரும்,** ஒளிவீசும் வெள்ளிய காதணி சேரும் காதுகளை உடையவரும், வெண்ணி அமர்ந்து உறைகின்ற விகிர்தனாரே.

மட்டு இலங்கு – தேன் விளங்கும்

**2683.** செஞ்சடைக்கோர் வெண்டிங்கள் சூடி னாருந்
திருவால வாயுறையுஞ் செல்வ னாரும்
அஞ்சனக்கண் அரிவையொரு பாகத் தாரும்
ஆறங்கம் நால்வேத மாய்நின் றாரும்
மஞ்சடுத்த நீள்சோலை மாட வீதி
மதிலாரூர் புக்கங்கே மன்னி னாரும்
வெஞ்சினத்த வேழமது உரிசெய் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே.

8

மஞ்சு – மேகம்

செஞ்சடையில் வெண்பிறை சூடியவரும், திருவாலவாய் உறையும் செல்வரும், மை தீட்டிய கண்களை உடைய பார்வதி பாகரும், நான்கு வேதங்களும் ஆறு அங்கங்களுமாகி இருப்பவரும், மேகத்தை அளாவிய நீண்ட சோலைகளையும் மாட வீதிகளையும் மதிலையும் உடைய ஆரூரில் புகுந்து அங்கே நிலையாகத் தங்கியவரும், மிக்க கோபத்தை உடைய யானையின் தோலை உரித்தவரும், வெண்ணி அமர்ந்து உறைகின்ற விகிர்தனாரே.

---

**2684.** வளங்கிளர்மா மதிசூடும் வேணி யாரும்
வானவர்க்கா நஞ்சுண்ட மைந்த னாருங்
களங்கொளவென் சிந்தை யுள்ளே மன்னினாருங்
கச்சியே கம்பத்தெங் கடவு ளாரும்
உளங்குளிர அமுதூறி யண்ணிப் பாரும்
உத்தமரா யெத்திசையும் மன்னி னாரும்
விளங்கிளரும் வெண்மழுவொன் றேந்தி னாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே.

9

அண்ணிப்பார் – இனிப்பார்.

வளமான பிறைசூடும் சடையினரும், தேவர்களுக்காக விடத்தை உண்ட வலியவரும், என் உள்ளத்தை உறைவிடமாகக் கொண்டு தங்கியவரும் கச்சி ஏகம்பத்து உறைபவரும், என் உள்ளம் குளிருமாறு அமுதமாக ஊற்றெடுத்து இனிப்பவரும், மேம்பட்டவராய் எல்லாத் திசைகளிலும் நிலைபெற்றிருப்பவரும், ஒளிவீசும் வெள்ளிய மழுப்படையை ஏந்தியவரும் வெண்ணி அமர்ந்து உறைகின்ற விகிர்தனாரே.

---

**2685.** பொன்னிலங்கு கொன்றையந்தார் மாலை சூடிப்
புகலூரும் பூவணமும் பொருந்தி னாருங்
கொன்னிலங்கு மூவிலைவே லேந்தி னாருங்
குளிரார்ந்த செஞ்சடையெங் குழக னாருந்
தென்னிலங்கை மன்னவர்கோன் சிரங்கள் பத்துந்
திருவிரலா லடர்த்தவனுக் கருள்செய் தாரும்
மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகத் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே.

10

தார் இன்ப நிலையிலும், மாலை வெற்றியிலும் அணியப்படுவன.
கொன் – அச்சம்

பொன்போல் விளங்கும் கொன்றை மாலை சூடிப் புகலூரிலும் பூவணத்திலும் உறைபவரும், அச்சம் தரும் முத்தலைச் சூலம் ஏந்தியவரும், குளிர்ச்சி தரும் கங்கை பொருந்திய செஞ்சடையை உடைய இளையரும், இராவணனுடைய பத்துத் தலைகளையும் தம் காலின் அழகிய விரலால் வருத்திப் பின் அவனுக்கு அருள் செய்தவரும், மின்னல் போன்ற நுண்ணிய இடையை உடைய பார்வதி பாகரும், வெண்ணி அமர்ந்து உறைகின்ற விகிர்தனாரே.

## 60. திருக்கற்குடி

ப.தொ.எண் : 273

பதிக எண் : 60

2686. மூத்தவனை வானவர்க்கு மூவா மேனி
முதலவனைத் திருவரையின் மூக்கப் பாம்பொன்
றார்த்தவனை அக்கரவ மார மாக
அணிந்தவனைப் பணிந்தடியா ரடைந்த அன்போ
டேத்தவனை யிறுவரையில் தேனை ஏனோர்க்
கின்னமுத மளித்தவனை யிடரை யெல்லாங்
காத்தவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 1

அக்கு – எலும்பு. இறுவரை – பெரியமலை
விழுமியான் – மேலானவன்.

தேவர்களுக்கு எல்லாம் மூத்தவனாய், மூப்படையாத திருமேனியை உடைய முதல்வனாய், இடுப்பில் கொடிய பாம்பைச் சுற்றியவனாய், எலும்புகளையும், பாம்புகளையும் மாலையாக அணிந்தவனாய், அடியவர்களால் பணிந்து அன்போடு தோத்திரிக்கப் படுபவனாய், பெரிய மலையில் உள்ள தேன் போன்றவனாய், தேவர்களுக்கு இனிய அமுதம் வழங்கியவனாய், துயரங்களில் இருந்து எல்லோரையும் காத்தவனாய், கற்பகம் போன்றவனாய்க் கற்குடியில் மேம்பட்டவனாய் உள்ள பெருமானை அடியேன் கண்ணாரக் கண்டேன்.

2687. செய்யானை வெளியானைக் கரியான் தன்னைத்
திசைமுகனைத் திசையெட்டுஞ் செறிந்தான் தன்னை
ஐயானை நொய்யானைச் சீரி யானை
அணியானைச் சேயானை ஆனஞ் சாடும்
மெய்யானைப் பொய்யாது மில்லான் தன்னை
விடையானைச் சடையானை வெறித்த மான்கொள்
கையானைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 2

நொய்யான் – நுணுகியவன். சீரியான் – புகழுடையவன்.
மெய்யான் – திருமேனியை உடையவன்.
வெறித்த – மருண்ட.

செம்மை, வெண்மை, கருமை என்ற நிறங்களை உடையவனாய், பிரமனாய், பெருந்திசையும் பரவியவனாய், அழகியவனாய், நன்மையனாய், புகழுடையவனாய், அண்மையில் உள்ளவனாய்த் தீயவர்களுக்குத் தொலைவில் இருப்பவனாய், பஞ்சகவ்வியத்தில் நீராடும் திருமேனியனாய், பொய்யேதும் இல்லாதவனாய், காளை வாகனனாய், சடைமுடியுடையவனாய், மருண்ட மானைக் கையில் ஏந்தியவனாய், கற்பகமாய்க் கற்குடியில் உறையும் சிறப்புடையவனை நான் கண்ணாரக் கண்டேன்.

2688. மண்ணதனில் ஐந்தைமா நீரில் நான்கை
வயங்கெரியில் மூன்றைமா ருதத்தி ரண்டை
விண்ணதனி லொன்றை விரிக திரைத்
தண்மதியைத் தாரகைகள் தம்மின் மிக்க
எண்ணதனில் எழுத்தைஏ ழிசையைக் காமன்
எழிலழிய எரியுமிழ்ந்த இமையா நெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 3

தாரகைகள் – விண்மீன்கள்

மண்ணில் ஐந்து, நீரில் நான்கு, தீயில் மூன்று, காற்றில் இரண்டு, விண்ணில் ஒன்று என்ற பண்புகளுக்குக் காரணனாய், சூரியனாய், சந்திரனாய், விண்மீன்களாய், அவைகளிலும் எண்ணிறந்தவனாய் உள்ள பொருள்கள் மேல் நிகழும் சொற்களாய், ஏழிசையாய், மன்மதனுடைய அழகிய உடல் அழியுமாறு தீயை வெளிப்படுத்திய அதற்குமுன், திறக்கப்படாத நெற்றிக்கண்ணனாய், கற்பகமாய் உள்ள கற்குடியில் விழுமியானைக் கண்ணாரக் கண்டேன் நானே.

**2689.** நற்றவனைப் புற்றரவ நாணி னானை
நாணாது நகுதலையூண் நயந்தான் தன்னை
முற்றவனை மூவாத மேனி யானை
முந்நீரின் நஞ்சமுகந் துண்டான் தன்னைப்
பற்றவனைப் பற்றார்தம் பதிகள் செற்ற
படையானை அடைவார்தம் பாவம் போக்கக்
கற்றவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன்
நானே. 4

நகுதலைஊண் – வெற்றெலும்பாய்ச் சிரிப்பது போலக் காணப்படும் தலையோட்டில் உண்ணுதல்.
நயந்தான் – விரும்பினான். முந்நீர் – கடல்
செற்ற – அழித்த. "கற்குடியில் விழுமியானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே" பதிக மகுடம்

மேம்பட்ட தவத்தினனாய்ப் பாம்பை வில் நாணாகக் கொண்டவனாய் வெட்கப்படாமல் மண்டையோட்டில் இடப்படும் பிச்சையை விரும்பியவனாய், நிறைவுடையவனாய், மூப்படையாத உடம்பினனாய், கடல் நஞ்சை விரும்பி உண்டவனாய், எப்பொருட்கும் பற்றுக்கோடாய் உள்ளவனாய், பகைவருடைய மும்மதில்களையும் அழித்த படையை உடையவனாய், தன்னை அடைந்த அடியவருடைய பாவத்தைப் போக்க கற்றவனாய், கற்பகமாய், கற்குடியில் உள்ள விழுமியானைக் கண்ணாரக் கண்டேன் நானே.

**2690.** சங்கைதனைத் தவிர்த்தாண்ட தலைவன்
தன்னைச்
சங்கரனைத் தழலுறுதாள் மழுவாள் தாங்கும்
அங்கையனை அங்கமணி ஆகத் தானை
ஆகத்தோர் பாகத்தே அமர வைத்த
மங்கையனை மதியொடுமா சுணமுந் தம்மின்
மருவவிரி சடைமுடிமேல் வைத்த வான்நீர்க்
கங்கையனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன்
நானே. 5

சங்கை – ஐயம்
தாள் – கைப்பிடி; முயற்சிக்குரிய. அங்கம் – எலும்பு

ஐயத்தைப் போக்கி அடிமை கொண்ட தலைவனாய், நன்மை செய்பவனாய், கைப்பிடியை உடைய நெருப்பைப் போன்ற கொடிய மழுப்படையைத் தாங்கும் கையனாய், எலும்பை அணிந்த மார்பினனாய், பார்வதி பாகனாய், பிறையும் பாம்பும் நட்புடன் பழகும் தன் சடைமுடிமேல் ஆகாய கங்கையை வைத்தவனாய், கற்பகமாய், உள்ள கற்குடியில் விழுமியானைக் கண்ணாரக் கண்டேன் நானே. 'ஆகம்' இரண்டில் முன்னது மார்பு; பின்னது உடம்பு.

**2691.** பெண்ணவனை ஆணவனைப் பேடா னானைப்
பிறப்பிலியை இறப்பிலியைப் பேரா வாணி
விண்ணவனை விண்ணவர்க்கு மேலா னானை
வேதியனை வேதத்தின் கீதம் பாடும்
பண்ணவனைப் பண்ணில்வரு பயனா னானைப்
பாரவனைப் பாரில்வாழ் உயிர்கட் கெல்லாங்
கண்ணவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன்
நானே. 6

பேரா – நீங்காத. வாணி –சொல்; ஓசை ஆகாயத்தின் குணம்; சொல்லுக்குக் காரணமாய் உள்ள ஆகாயம்.

பெண்ணாய், ஆணாய், அலியாய்ப் பிறப்பு இறப்பு அற்றவனாய், ஓசை நீங்காத விண்ணாய், விண்ணவர்க்கு மேம்பட்டவனாய், வேதியனாய், வேத கீதம் பாடும் பண்ணாய்ப் பண்ணில் வரும் பயனாய் அமைபவனாய், நில உலகமாய், அவ்வுலகில் வாழும் உயிர்களுக்கு எல்லாம் பற்றுக்கோடாய், கற்பகமாய் உள்ள கற்குடியில் விழுமியானைக் கண்ணாரக் கண்டேன் நானே.

**2692.** பண்டானைப் பரந்தானைக் குவிந்தான் தன்னைப்
பாரானை விண்ணாயிவ் வுலக மெல்லாம்
உண்டானை உமிழ்ந்தானை உடையான் தன்னை
யொருவருந்தன் பெருமைதனை அறிய
வொண்ணா
விண்டானை விண்டார்தம் புரங்கள் மூன்றும்
வெவ்வழலில் வெந்துபொடி யாகி வீழக்
கண்டானைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன்
நானே. 7

உண்டான் – ஒடுக்கினான். உமிழ்ந்தான் – படைத்தான்
விண்டான் – நீங்கினான்; சேயனாயினான்.
கண்டான் – செய்தான்

பண்டையனாய், உலகத் தோற்றத்தில் பரந்து நிற்பவனாய், உலக ஒழுக்கத்தில் குவிந்து இருப்பவனாய், இவ்வுலகாய், தேவருலகாய், இவ்வுலகமெல்லாம் உண்டவனாய்ப் பின் வெளிப்படுத்தியவனாய், அவற்றிற்கு உரிமையாளனாய், ஒருவரும் தன் பெருமையை அறிய முடியாதபடி சேயனாய், பகைவர் முப்புரமும் தீயில் வெந்து பொடியாகி விழச் செய்தவனாய், கற்பகமாய், உள்ள கற்குடியில் விழுமியானைக் கண்ணாரக் கண்டேன் நானே.

**2693.** வானவனை வானவர்க்கு மேலா னானை
வணங்குமடி யார்மனத்துள் மருவிப் புக்க
தேனவனைத் தேவர்தொழு கழலான் தன்னைச்
செய்குணங்கள் பலவாகி நின்ற வெற்றிக்
கோனவனைக் கொல்லை விடை யேற்றி
னானைக்
குழல்முழவம் இயம்பக்கூத் தாட வல்ல
கானவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன்
நானே. 8

குணங்கள் என்றது செயலை; அச்செயல்கள் அனைத்தும் தான் நினைத்தவாறே முடித்தலின் ''நின்ற வெற்றிக்கோன்'' என்றருளிச் செய்தார் 'கானவன்' என்றது காட்டில் ஆடுதல் பற்றி

வானவனாய், தேவர்களுக்கு மேம்பட்டவனாய், தன்னை வணங்கும் அடியவர் மனத்துள் விரும்பிப் புகுந்த தேன் போன்றவனாய், தேவர்கள் தொழும் திருவடிகளை உடையவனாய், பலவாகி நின்ற தன் செயல்கள் யாவினும் வெற்றி காணும் தலைவனாய், முல்லை நிலத்தெய்வமாம் திருமாலாகிய காளையை உடையவனாய், குழலும் முழவும் ஒலிக்கச் சுடுகாட்டில் கூத்தாடவல்ல, கற்பகம் போன்ற கற்குடியில் விழுமியானைக் கண்ணாரக் கண்டேன் நானே.

**2694.** கொலையானை யுரிபோர்த்த கொள்கை யானைக்
கோளரியைக் கூரம்பா வரைமேற் கோத்த
சிலையானைச் செம்மைதரு பொருளான்
தன்னைத்
**திரிபுரத்தோர் மூவர்க்குச் செம்மை செய்த
தலையானைத்** தத்துவங்க ளானான் தன்னைத்
தையலோர் பங்கினனைத் தன்கை யேந்து
கலையானைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன்
நானே. 9

கோள் அரி – சகலரை வெற்றி கொள்ளும் திருமால்

தன்னால் கொல்லப்பட்ட யானையின் தோலைப் போர்த்த செயலினனாய், மலையாகிய வில்லில் திருமாலைக் கூரிய அம்பாகக் கோத்தவனாய், எல்லோருக்கும் நன்மை செய்பவனாய், திரிபுர அசுரருள் சுதர்மன், சுசீலன், சுமாலி என்ற மூவருக்கு நலன் செய்த மேம்பட்டவனாய், மெய்ப்பொருள்கள் ஆகியவனாய், பார்வதி பாகனாய், கையில் மானை ஏந்தியவனாய், கற்பகமாய், கற்குடியில் உள்ள விழுமியானைக் கண்ணாரக் கண்டேன் நானே.

## திரிபுரத்தார் மூவர்க்கும் செம்மை செய்த தலையான்

தாரகாட்சன், கமலாட்சன், வித்துவன் மாலி என்ற மூவரும் தான் திரிபுர அசுரர்களின் தலைவர்கள். அவர்களன்றி திரிபுரத்து ஓர் மூவர், 'சுதன்மன், சுசீலன், சுமாலி' என்பவர். தலைவர்கள் மற்ற திரிபுரத்து அசுரர்கள், புத்தனும் நாரதனும் மயக்கிச் சொல்லிய உரைகளால் மயங்கிச் சிவபத்தியைக் கைவிட்ட பொழுதும், அதிற் பிறழாது நின்றவர் இம்மூவரும். அதனால், திரிபுரம் முழுதும் வெந்து நீறாகச் செய்தபொழுது, சிவபிரான், இம்மூவரையும் உய்யக் கொண்டான். இப்பேரருட்டிறத்தினை,

"உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்
டெய்யவல் லானுக்கே யுந்தீபற"

என ஆளுடைய அடிகளும், (தி. 8 திருவா. திருவுந்தி. 4) 'மூவார்புரங்கள் எரித்த அன்று மூவர்க் கருள் செய்தார்' (தி. 1 ப. 69 பா. 1) என ஆளுடைய பிள்ளையாரும்,

"மூவெ யில்செற்ற ஞான்றுய்ந்தமூவரில்
இருவர் நின்றிருக் கோயிலின் வாய்தல்
காவலாளரென் றேவிய பின்னை
ஒருவன் நீகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநடம் மகிழ
மணிமு ழாமுழக் கவ்வருள் செய்த
தேவ தேவநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூரு ளானே"

என ஆளுடைய நம்பிகளும் (தி. 7 ப. 55 பா. 8) சிறந்தெடுத்தருளிச் செய்தமை காண்க. இம்மூவர்க்குச் செம்மை செய்தமைதானே, தன்னையடைந்தார்க்கு எஞ்ஞான்றும் இடையூறுவாராது காத்துச் செம்மை தருவன் என்பதற்கு அமையும் சான்று என்பது குறித்தருளியவாறு. **இந்நூலின் பயனே சிவபத்தியை எந்தச் சூழலிலும் கைவிடக்கூடாது என்ற மாபெரும் கோட்பாட்டை எல்லா உயிர்களும் பெறவேண்டுமென்பதேயாகும்.** தலையான் – முதல்வன். தத்துவங்கள் – காரணப் பொருள்கள். கலை – மான்.

**2695.** பொழிலானைப் பொழிலாரும் புன்கூ ரானைப்
புறம்பயனை அறம்புரிந்த புகலூ ரானை
எழிலானை இடைமருதி னிடங்கொண் டானை
ஈங்கோய்நீங் காதுறையும் இறைவன் தன்னை
அழலாடு மேனியனை அன்று சென்றக்
குன்றெடுத்த அரக்கன்தோள் நெரிய ஊன்றுங்
கழலானைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 10

உலகமாய் உள்ளவனாய், சோலைகள் நிறைந்த புன்கூர், புறம்பயம், அறத்தை விரும்பிச் செய்கின்ற புகலூர், இடைமருது, ஈங்கோய் இவற்றில் அழகாக இடங்கொண்டு நீங்காது தங்கும் தலைவனாய், தீயில் கூத்தாடும் திருமேனியை உடையவனாய், ஒரு காலத்தில் கயிலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணனுடைய தோள்கள் நெரியுமாறு ஊன்றிய திருவடியை உடையவனாய்க் கற்பகமாய் உள்ள கற்குடியில் விழுமியானைக் கண்ணாரக் கண்டேன் நானே.

"புறம்பயம் அதனில் அறம்பல அருளியும்" திருவாசகம்.
அழலாடு மேனி – நெருப்பு எரிவது போலும் திருமேனி.

## 61. திருக்கன்றாப்பூர்

ப.தொ.எண் : 274 | நடுதறி வரலாறு | பதிக எண் : 61

ஊர்க்கும் இறைவர்க்கும் முறையே **கன்றாப்பூர், நடு தறியப்பர்** எனப் பெயர் ஏற்பட்டமைக்குக் காரணம்: சைவர் குடியில் தோன்றிய ஒரு பெண்ணை, அவரது பெற்றோர் வைணவர் ஒருவர்க்குத் திருமணஞ் செய்து கொடுத்தனர். அப்பெண் மாமியார் வீட்டார்க்குப் புலப்படாதவாறு, கன்றுக்குட்டி கட்டியிருக்கும் முளையையே சிவலிங்கமாகப் பாவித்து வழிபட்டுவந்தனர். ஒருநாள் கணவன் அதைக்கண்டு, அம்முளையைக் கோடாலியால் வெட்ட, இறைவர் அம்முளையிலிருந்து வெளிப்பட்ட காரணத்தால், அவர் நடுதறியப்பர் என்னும் பெயர் எய்தினார். ஊரும் கன்றாப்பூர் என்னும் பெயர் எய்திற்று. பூசையின் தவ வலிமையை என்னவென்று சொல்லுவது ?

**2696.** மாதினையோர் கூறுகந்தாய் மறைகொள் நாவா
மதிசூடி வானவர்கள் தங்கட் கெல்லாம்
நாதனே யென்றென்று பரவி நாளும்
நைஞ்சுருகி வஞ்சகமற் றன்பு கூர்ந்து
வாதனையால் முப்பொழுதும் பூநீர் கொண்டு
வைகல் மறவாது வாழ்த்தி யேத்திக்
காதன்மையால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.
1

வாசனை என்னும் வடமொழிப்பதம் வாதனை எனத் திரிந்து வந்துள்ளது. கால்நடைகளைக் கயிற்றால் கட்டுவதற்கு நடப்பட்ட தறிதானே சிவனுரு வாயினமையின் இங்கு சிவபிரானை நடுதறி என்றே அருளிச் செய்தார்.

பார்வதி பாகனே! வேதம் ஓதும் நாவனே! பிறை சூடியவனே! தேவர்கள் தலைவனே! என்று புகழ்ந்து நாடோறும் மனம் இளகி உருகி, வஞ்சகமில்லாத அன்பு மிகுந்து, முப்பொழுதும் வாசனை மிக்க நீரும் பூவும் கொண்டு வைகல் மறவாது வாழ்த்திப் புகழ்ந்து அன்போடு தொழும் அன்பருடைய மனத்தினுள்ளே கன்றாப்பூரில் நடப்பட்ட முளை வடிவினனாய் உள்ள பெருமானைக் காணலாம்.

**2697.** விடிவதுமே வெண்ணீற்றை மெய்யிற் பூசி
வெளுத்தமைந்த கீளொடுகோ வணமுந் தற்றுச்
செடியுடைய வல்வினைநோய் தீர்ப்பாய் என்றுஞ்
செல்கதிக்கு வழிகாட்டுஞ் சிவனே யென்றுந்
துடியனைய இடைமடவாள் பங்கா வென்றுஞ்
சுடலைதனில் நடமாடுஞ் சோதீ யென்றுங்
கடிமலர்தூய்த் தொழுமடியார்நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.
2

செடி – கீழ்மை. கடி – வாசனை

பொழுது விடிந்த அளவில் திருநீற்றை மெய்யில் பூசி, வெளுத்த கீளொடு கூடிய கோவணத்தை அணிந்து, கீழ்மையை உடைய வல்வினையால் ஏற்பட்ட நோயினைத் தீர்ப்பவனே! சென்று சேர வேண்டிய நல்லகதிக்கு வழிகாட்டும் சிவனே! உடுக்கை போன்ற இடையை உடைய பார்வதி பாகனே! சுடுகாட்டில் கூத்து நிகழ்த்தும் ஒளி உருவனே! என்று நறுமண மலர்களைத் தூவி வழிபடும் அடியவர்கள் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாம்.

2698. எவரேனுந் தாமாக விலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
உவராதே யவரவரைக் கண்ட போதே
உகந்தடிமைத் திறம்நினைந்தங் குவந்து நோக்கி
இவர்தேவர் அவர்தேவ ரென்று சொல்லி
இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.

3

இலாடம் – நெற்றி. சாதனம் – துணைப்பொருள் உருத்திராக்கம் முதலியன.

உவராதே – வெறுப்படையாமல்.

பதிக மகுடம் – தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே.

யாவரேயாயினும் நெற்றியில் திருநீறு அணிந்து, உருத்திராக்கம் பூண்டு இருப்பவரைக் கண்டால், திருவேடத்தின் பெருமையை நினைத்து, வெறுப்பில்லாமல், அவர்களைக் கண்ட போதே விரும்பி அடிமைத் திறத்தை நினைத்து, விரும்பி நோக்கி இவர்கள் நம்மால் வழிபடத்தக்க தேவரா என உள்ளத்தை இருவகையாகச் செலுத்தாமல் இறைவனிடத்துச் செய்யும் செயல்களையே அடியவரிடத்தும் விரும்பிச் செய்து, அங்ஙனம் செய்யும்பொழுது மனத்தில் இருதிறக் கருத்து நிகழாத வகையில் இறைவனையும் அடியவரையும் ஒரே நிலையில் மனத்துக் கொண்டு தொழும், அடியவர் உள்ளத்தில் கன்றாப்பூர் நடுதறியைக் காணலாம்.

2699. இலங்காலஞ் செல்லாநா ளென்று நெஞ்சத்
திடையாதே யாவர்க்கும் பிச்சை யிட்டு
விலங்காதே நெறிநின்றங் கறிவே மிக்கு
மெய்யன்பு புகப்பெய்து பொய்யை நீக்கித்
துலங்காமெய் வானவரைக் காத்து நஞ்சம்
உண்டபிரா னடியிணைக்கே சித்தம் வைத்துக்
கலங்காதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.

4

மெய்யன்பு – பயன் கருதாது செலுத்தும் அன்பு

பொய் – பயன் கருதி அன்பு செய்தல்

'யாம் பொருள் இல்லாதேம் இக்காலம் நம்மால் ஒன்றும் இயலாத காலம்' என்று மனத்தில் தளர்ச்சியுறாமல், பிச்சை ஏற்க வருவோர் எல்லோருக்கும் பிச்சையிட்டு, நல்ல வழியில் பிறழாமல் நின்று, இறைவன் பெருங் கருணையாளன் ஆதலை அறியும் அறிவு மிக்கு, பயன் கருதாமல் செய்யும் அன்பை மேற்கொண்டு, பொய்யை விடுத்து, மெய்யுணர்வு விளங்கப் பெறாத தேவர்களைக் காக்க விடம் உண்ட பெருமான் திருவடிக்கண் மனத்தை வைத்துக் கலக்கம் இன்றித் தொழும் அடியவர் உள்ளத்தினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாம்.

2700. விருத்தனே வேலைவிட முண்ட கண்டா
விரிசடைமேல் வெண்டிங்கள் விளங்கச் சூடும்
ஒருத்தனே உமைகணவா உலக மூர்த்தீ
நுந்தாத வொண்சுடரே அடியார் தங்கள்
பொருத்தனே யென்றென்று புலம்பி நாளும்
புலனைந்தும் அகத்தடக்கிப் புலம்பி நோக்கிக்
கருத்தினால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.
5

பொருத்தன் – உறவினன்.
"புலம்பி" இரண்டனுள் முன்னது – முறையிட்டு, பின்னது 'பிறிது பற்றின்றி' .
கருத்து – விருப்பம்.

'மூத்தோனே! விடம் உண்ட நீலகண்டா! சந்திர சடாதரனே! உமைபாகனே! உலகத்தை வடிவாக உடையவனே! தூண்ட வேண்டாத ஒளிவிளக்கே! அடியவர்கள் உறவினனே! என்று பல காலம் கூப்பிட்டு, ஐம்புலன்களையும் உள்ளே அடக்கி, வேற்றுப் பற்றின்றித் தியானித்து, உள்ளத்தோடு தொழும் அடியவர் உள்ளத்துள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாம்.

2701. பொசியினால் மிடைந்துபுழுப் பொதிந்த போர்வைப்
பொல்லாத புலாலுடம்பை நிலாசு மென்று
பசியினால் மீதூரப் பட்டே யீட்டிப்
பலர்க்குதவ லதுவொழிந்து பவள வாயார்
வசியினா லகப்பட்டு வீழா முன்னம்
வானவர்கோன் திருநாமம் அஞ்சுஞ் சொல்லிக்
கசிவினால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.
6

பொதிந்த – மூடிய. பொல்லாத – இழிந்த.
நிலாசும் – நிலைபெற்றிருக்கும்.
வசி – வசப்படுத்துதல். கசிவு – நெகிழ்ச்சி; அன்பு.

செந்நீர், வெண்ணீர், நிணம் முதலியவற்றின் கசிவோடு இணைக்கப்பட்டுப் புழுக்களை உள்ளே வைத்துத் தோலால் மூடப்பட்ட இழிந்த இந்தப் புலால் மயமான உடம்பு நிலையாக இருக்கும் என்று உறுதியாக எண்ணிப் பசிப் பிணியையும் பொறுத்துக் கொண்டு பொருளைச் சம்பாதித்து, அப்பொருளால் ஏழைகள் பலருக்கும் உதவுதலைவிடுத்து, பவளம் போன்ற வாயினை உடைய பெண்களிடம் வசப்பட்டு அழிவதன் முன்னம் தேவாதி தேவனுடைய திருநாமமாகிய திருவைந்தெழுத்தைச் சொல்லி உருக்கத்தோடு தொழும் அடியவருடைய நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாம்.

2702. ஐயினால் மிடறடைப்புண் டாக்கை விட்டு
ஆவியார் போவதுமே அகத்தார் கூடி
மையினாற் கண்ணெழுதி மாலை சூட்டி
மயானத்தி லிடுவதன்முன் மதியஞ் சூடும்
ஐயனார்க் காளாகி அன்பு மிக்கு
அகங்குழைந்து மெய்யரும்பி அடிகள் பாதங்
கையினால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 7

ஐ – கோழை; மிடறு – குரல்

கோழையினால் குரல்வளை அடைக்கப்பட்டு, உடம்பைவிட்டு உயிர்போன அளவிலேயே, வீட்டிலுள்ளவர்கள் ஒன்று சேர்ந்து, கண்களை மையினால் எழுதி, மாலை சூட்டிப் பிணத்தைச் சுடுகாட்டில் இடுவதன் முன்பு, பிறைசூடும் பெருமானுக்கு அடியவராகி, அன்புமிக்கு மனம் குழைந்து மெய் மயிர் சிலிர்த்து, எம்பெருமான் திருவடிகளைக் கைகளால் தொழும் அடியவர் உள்ளத்தினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாம்.

---

2703. திருதிமையால் ஐவரையுங் காவ லேவித்
திகையாதே சிவாயநம வென்னுஞ் சிந்தைச்
சுருதிதனைத் துயக்கறுத்துத் துன்ப வெள்ளக்
கடல்நீந்திக் கரையேறுங் கருத்தே மிக்குப்
பரிதிதனைப் பற்பறித்த பாவ நாசா
பரஞ்சுடரே யென்றென்று பரவி நாளுங்
கருதிமிகத் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 8

திருதி – மனஉறுதி. சுருதி – மறை;
மந்திரம் – மானதமாகக் கணிக்கப்படுவது.
துயக்கு – மயக்கம். கருதி – தியானித்து

9

மன உறுதியால் ஐம்பொறிகளையும் காவலில் வைத்து மனம் கலங்காமல், சூக்கும ஐந்தெழுத்தாகிய மானதமாகக் கணிக்கப்படும் மந்திரத்தைத் தியானித்தலால் மயக்கத்தைப் போக்கித் துன்பமாகிய வெள்ளம் நிறைந்த வாழ்க்கையாகிய கடலைக் கடந்து, முத்தி நிலையாகிய கரைக்கு ஏறும் எண்ணமே மிக்கு, 'சூரியன் ஒருவனுடைய பற்களை நீக்கிய பாவநாசனே! மேம்பட்ட ஒளியே! என்று துதித்து, நாள்தோறும் விரும்பி மிகத்தொழும் அடியவர் உள்ளத்தினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாம்.

---

2704. குனிந்தசிலை யாற்புரமூன் றெரித்தாய் என்றுங்
கூற்றுதைத்த குரைகழற்சே வடியாய் என்றுந்
தனஞ்சயற்குப் பாசுபத மீந்தாய் என்றுந்
தசக்கிரிவன் மலையெடுக்க விரலால் ஊன்றி
முனிந்தவன்தன் சிரம்பத்துந் தாளுந் தோளும்
முரணழித்திட்டருள்கொடுத்த மூர்த்தீயென்றுங்
கனிந்துமிகத் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 10

தனஞ்செயன் – அருச்சுனன்.
தசக்கிரிவன் – இராவணன். முரண்–வலிமை

வளைந்த வில்லால் முப்புரங்களை எரித்தவனே! யமனை உதைத்த, ஒலிக்கும் கழல் அணிந்த சிவந்த அடியவனே! அருச்சுனனுக்குப் பாசுபதப்படை ஈந்தவனே! இராவணன் மலையைப் பெயர்க்க, வெகுண்டு, விரலை ஊன்றி, அவன் பத்துத் தலைகளும் தாள்களும் தோள்களும் வலிமை அழியச் செய்து, பின், அவனுக்கு அருள் செய்த பெருமானே! என்று உருகி மிகத் தொழும் அடியவர் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாம்.

## 62. திருவானைக்கா

ப.தொ.எண் : 275

பதிக எண் : 62

2705. எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்
செத்தால்வந் துதவுவார் ஒருவ ரில்லை
சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா என்றன்
அத்தாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய்
கேனே. 1

எத்தனை மேம்பட்ட நற்றாய், செவிலித்தாயர், தந்தை, சுற்றத்தார் என்று நம்மால் போற்றப்படுபவருள் எவர் நமக்கு நல்லவர்கள்! எந்தச் செல்வம் நம்மைத் தாங்கக் கூடியதாகும்? நாம் இறந்தால் நம் தேகபந்துக்களோ, நாம் ஈட்டி வைத்த செல்வமோ நமக்கு உதவும் வாய்ப்பு இல்லை. சிறிய விறகால் தீ மூட்டி இறந்த உடலைக் கொளுத்தி விட்டு எல்லோரும் பிரிந்து செல்வர். ஆதலின் ஏனைய தேகபந்துக்களை விடுத்து, 'என் தலைவனே! ஞானவடிவினனே! நீர்வளம் மிக்க காவரிக் கரையில் அமைந்த திருவானைக்காவை உகந்தருளியிருக்கும் இடமாக உடைய செல்வனே! உன் பொலிவுடைய திருவடிகளைச் சரணாக அடையப் பெற்றால், துன்பத்தால் வருந்தும் நிலையை யான் அடைவேனோ?' எனக்குத் துன்புறும் நிலை ஏற்படாது என்றபடி.

அல்ல கண்டம் – துன்பம்.
என்செய்கேன் – வருந்துதல்.

எத்தாயர் என்பது முதலியவற்றில் எகர வினா "எத்துணைச்சிறந்த" என உயர்வு குறித்து நின்றது. சும்மாடு – தாங்குவது. எளிதிற் பற்றுவதற்கு இடுவன சிறு விறகு. அல்ல கண்டம் – துன்பம். திருவானைக்கா பஞ்சபூதத் தலங்களில் நீர்த்தலம். உயர்ந்த சிற்ப வேலைப்பாடுகள் உடைய கோயில். மூலவர் விமானமே கல்லால் ஆனது. விநோதமாக 5 கலசங்கள் உள்ளன. ஜம்பு முனிவர் பூசித்த சிவலிங்கம். நந்தி – கொடிக்கம்ப – பலிபீட மண்டபம், மிக உயர்ந்த அணிவெட்டுக்கால் – யாழி அமைப்பில் அமைக்கப்பட்டுத் தமிழனின் சிற்ப சாத்திர அறிவைப் பறை சாற்றுவதாக அமைந்துள்ளது.

2706. ஊனாகி உயிராகி யதனுள் நின்ற
உணர்வாகிப் பிறவனைத்தும் நீயாய் நின்றாய்
**நானேதும் அறியாமே யென்னுள் வந்து**
**நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்**
தேனாருங் கொன்றையனே நின்றி யூராய்
திருவானைக் காவிலுறை சிவனே ஞானம்
ஆனாய்உன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய்
கேனே. 2

திருவானைக்காவில் உறையும் சிவபெருமானே! ஞானவடிவினனே! என் உடம்பாய் உயிராய், உயிருள் இருக்கும் ஞானமாய்ப் பிற எல்லாமாகவும், நீ உள்ளாய். யான் ஏதும் அறியாத நிலையில் என்னுள் வந்து சேர்ந்து, எனக்கு நல்ல செயல்களையும் தீய செயல்களையும் அறிவிக்கின்றாய், தேன் நிறைந்த கொன்றைப் பூ மாலையை அணிந்தவனே! திருநின்றியூரில் உறைபவனே! உன் அழகிய திருவடிகளை அடியேன் அடையப் பெறுவேனானால் துன்பத்தால் வருந்தும் நிலை எனக்கு ஏற்படாது.

பதிக மகுடம் – பொற்பாதம் அடையப் பெற்றால் அல்லகண்டங் கொண்டடியேன் என் செய்கேனே.

2707. ஒப்பாயிவ் வுலகத்தோ டொட்டி வாழ்வான்
ஒன்றாலத் தவத்தாரோ டுடனே நின்று
துப்பாருங் குறையடிசில் துற்றி நற்றுன்
திறம்மறந்து திரிவேனைக் காத்து நீவந்
தெப்பாலும் நுன்னுணர்வே யாக்கி யென்னை
ஆண்டவனே யெழிலானைக் காவா
வானோர்
அப்பாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய்
கேனே. 3

அழகான ஆனைக்காவில் உள்ளவனே! தேவர்கள் தலைவனே! எல்லோருடனும் சமமாய் இவ்வுலக நடையோடு பொருந்தி வாழ்வதனை மேற்கொள்ளாத சமணத்துறவியரோடு பொருந்தி வாழ்ந்து, உண்ணுதற்கேற்ற கஞ்சியுணவை நிரம்ப உண்டு, நன்மை தரும் உன் பண்பு செயல்களை மறந்து திரிந்த அடியேனைப் பாதுகாத்து, அடியேன் உள்ளத்து வந்து, எப்பொருட் கண்ணும் உன்னை உணரும் உணர்வைத் தந்து, என்னை அடிமை கொண்டவனே! உன் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்லகண்டம் கொண்டு அடியேன் என் செய்கேனே.

---

2708. நினைத்தவர்கள் நெஞ்சுளாய் வஞ்சக் கள்வா
நிறைமதியஞ் சடைவைத்தாய்
அடையாதுன்பால்
முனைத்தவர்கள் புரமூன்று மெரியச் செற்றாய்
முன்னானைத் தோல்போர்த்த முதல்வா
வென்றுங்
கனைத்துவரும் எருதேறுங் காள கண்டா
கயிலாய மலையாநின் கழலே சேர்ந்தேன்
அனைத்துலகும் ஆள்வானே ஆனைக் காவா
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய்
கேனே. 4

காள கண்டன் – நஞ்சு பொருந்திய கழுத்தினை உடையவன். முனைத்தவர் – போர் செய்ய முற்பட்டவர்.

எல்லா உலகங்களையும் ஆள்கின்ற ஆனைக்காப் பெருமானே! உன்னை அன்போடு நினைப்பவர்களுடைய நெஞ்சிலே மறைந்து உறையும் வஞ்சனையை உடைய கள்வனே! ஒளி நிறைந்த பிறையைச் சடையில் சூடியவனே! உன்னைச் சரணடையாது, உன்னோடு பகைத்தவர்களின் மதில்கள் மூன்றும் தீயில் எரியுமாறு அழித்தவனே! முன் ஒரு காலத்தில் யானை ஒன்றனைக் கொன்று அதன் தோலைப் போர்த்திய உலக காரணனே! செருக்கி ஒலித்துக் கொண்டு வரும் காளையை இவர்ந்த நீல கண்டனே! கயிலாய மலையில் உறைபவனே! உன் திருவடிகளை அடைந்த அடியேன் அல்லகண்டம் கொண்டு என் செய்கேனே!

2709. இம்மாயப் பிறப்பென்னுங் கடலாந் துன்பத்
திடைச்சுழிப்பட் டிளைப்பேனை இளையா வண்ணங்
**கைம்மான மனத்துதவிக் கருணை செய்து**
**காதலரு ளவைவைத்தாய் காண நில்லாய்**
வெம்மான மதகரியி னுரிவை போர்த்த
வேதியனே தென்னானைக் காவுள் மேய
அம்மான்நின் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 5

கொடிய மதச் செருக்குடைய யானைத் தோலைப் போர்த்த வேதியனே! அழகான ஆனைக்காவை உகந்தருளியிருக்கும் தலைவனே! இந்த நிலையின்மையை உடைய பிறவிக் கடலில் துன்பமாகிய சுழியில் அகப்பட்டு, வருந்தும் என்னைக் கைகொடுத்து நீர்ச்சுழியிலிருந்து காப்பவரைப்போல, மனத்திலிருந்து உதவி செய்து, கருணை காட்டி, என்னிடத்தில் அன்பையும், அருளையும் பொழிந்தும், யான் கண்ணால் காணுமாறு வெளியே நிற்கின்றாய் அல்லை. நின் பொற்பாதத்தை அடியேன் அடையப் பெற்றால் அல்லகண்டம் கொண்டு என் செய்கேனே!

மாயம் – நிலையின்மை.

கைமான மனத்து உதவி – கை (கொடுத்தல்) போல மனத்தின் கண் உதவி செய்து சமணத்திலிருந்து சைவத்துக்குத் திருப்பியது. உதவிக் கருணை செய்தார். காதலருளவை வைத்தார். ஆனால், ஊனக் கண்ணிற்குக் காட்சி கிடைக்கவில்லை.

---

2710. உரையாரும் புகழானே யொற்றி யூராய்
கச்சியே கம்பனே காரோ ணத்தாய்
விரையாரும் மலர்தூவி வணங்கு வார்பால்
மிக்கானே அக்கரவம் ஆரம் பூண்டாய்
திரையாரும் புனற்<u>**பொன்னித் தீர்த்தம் மல்கு**</u>
<u>**திருவானைக் காவி**</u>லுறை தேனே வானோர்
அரையாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 6

புகழுவார் புகழும் சொற்களிலெல்லாம் நிறைந்த புகழுடையவனே! ஒற்றியூர், கச்சி ஏகம்பம், குடந்தை நாகைக் காரோணங்கள் இவற்றில் உறைபவனே! நறுமணமுடைய மலர்களைத் தூவி வணங்கும் அடியவர் மனத்தில் மிக்கு விளங்குபவனே! எலும்பையும் பாம்பையும் மாலையாகப் பூண்டவனே! அலைகள் நிறைந்த நீரை உடைய காவிரியாகிய புண்ணிய தீர்த்தம் நிறைந்த திருவானைக்காவில் உள்ள தேன் போன்ற இனியவனே! தேவர் தலைவனே! உன் பொற்பாதம் அடியேன் அடையப் பெற்றால் அல்ல கண்டம் கொண்டு என் செய்கேனே.

---

பஞ்சபூதத்தலங்களில் திருவானைக்கா நீர்த்தலமாகும்.

2711. மையாரும் மணிமிடற்றாய் மாதோர் கூறாய்
மான்மறியும் மாமழுவும் அனலு மேந்துங்
கையானே காலனுடல் மாளச் செற்ற
கங்காளா முன்கோளும் விளைவு மானாய்
செய்யானே திருமேனி யரியாய் தேவர்
குலக்கொழுந்தே தென்னானைக் காவுள் மேய
ஐயாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 7

நீலகண்டனே! பார்வதிபாகனே! மான்கன்று, பெரிய மழுப்படை, நெருப்பு இவற்றைத் தாங்கும் திருக்கரங்களை உடையவனே! கூற்றுவனுடைய உயிர் போகுமாறு அவனை அழித்த, முழு எலும்புக்கூடு அணிந்தவனே! முற்பிறப்புக்களில் செய்து கொள்ளப்பட்ட வினைகளும் அவற்றின் பயன்களும் ஆனவனே! செம்மேனி அம்மானே! யாவர்க்கும் நேராகக் காண்பதற்கு அரியவனே! தேவர் குலத்துத் தளிர் போன்றவனே! அழகிய ஆனைக்காவுள் உறையும் தலைவனே! உன் பொற்பாதங்களை அடியேன் அடையப் பெற்றால் அல்ல கண்டம் கொண்டு என் செய்கேனே.

---

2712. இலையாருஞ் சூலத்தாய் எண்டோ ளானே
எவ்விடத்தும் நீயல்லா தில்லை யென்று
தலையாரக் கும்பிடுவார் தன்மை யானை
தழல்மடுத்த மாமேருக் கையில் வைத்த
சிலையானே திருவானைக் காவுள் மேய
தீயாடீ சிறுநோயால் நலிவுண் டுள்ளம்
அலையாதே நின்னடியே அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 8

இலைவடிவாக அமைந்த சூலத்தை ஏந்தியவனே! பெருந் தோள்களை உடையவனே! எவ்விடத்தும் உன்னைத் தவிர வேறு பொருள் இல்லை என்று, தலைமேல் கைகுவித்துக் கும்பிடுபவர் செயல்களுக்கு உதவும் பண்பினனே! மேருவாகிய வில்லைக் கையில் கொண்டு, திரிபுரத்தைத் தீக்கு இரை ஆக்கியவனே! திருவானைக்காவுள் உறையும், தீயில் கூத்து நிகழ்த்துபவனே! சிறிய நோய்களால் துன்புறுத்தப்பட்டு உள்ளம் வருந்தாது, நின் அடியே அடைதல் கூடுமாயின் அல்லகண்டம் கொண்டு அடியேன் என் செய்கேனே.

2713. விண்ணாரும் புனல்பொதிசெஞ் சடையாய்வேத
நெறியானே யெறிகடலின் நஞ்ச முண்டாய்
எண்ணாரும் புகழானே உன்னை யெம்மான்
என்றென்றே நாவினில்எப் பொழுதும்
உன்னிக்
கண்ணாரக் கண்டிருக்கக் களித்தெப் போதுங்
கடிபொழில்சூழ் தென்னானைக் காவுள் மேய
அண்ணாநின் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய்
கேனே. 9

ஆகாய கங்கை தங்கிய செந்நிறச் சடையனே! வேத நெறியை உபதேசித்தவனே! கடலின் விடத்தை உண்டவனே! எண் நிறைந்த புகழ்களுக்கு உரிய பண்புகளையும் செயல்களையும் உடையவனே! உன்னை என் தலைவன் என்று நாவினால் எப்பொழுதும் கூறி மனத்தால் நினைத்துக் கண்கள் மகிழ்ச்சி நிறையுமாறு காணும்படி எப்பொழுதும் நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த அழகிய ஆனைக்காவுள் உகந்தருளியிருக்கும் அண்ணலே! நின் பொற்பாதம் அடையப் பெற்றால் அல்ல கண்டம் கொண்டு என் செய்கேனே.

பொதி – கரந்த. நாவினால் சொல்லி, மனத்தினால் உன்னி (எண்ணி)

அண்ணா – அண்ணல் – தலைவன்.

2714. கொடியேயும் வெள்ளேற்றாய் கூளி பாடக்
குறட்பூதங் கூத்தாட நீயும் ஆடி
வடிவேயும் மங்கைதனை வைத்த மைந்தா
மதிலானைக் காவுளாய் மாகா ளத்தாய்
படியேயுங் கடலிலங்கைக் கோமான் தன்னைப்
பருமுடியுந் திரள்தோளும் அடர்த்து கந்த
அடியேவந் தடைந்தடிமை யாகப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய்
கேனே. 10

கொடியில் எழுதப்பட்ட உருவாக அமைந்த காளையை உடையவனே! பேய்கள் பாடக் குட்டையான பூதங்கள் கூத்தாட, நீயும் கூத்து நிகழ்த்தி, அழகிய பார்வதி பாகனாய், மதில்களை உடைய ஆனைக்காவிலும், உஞ்சேனி, இரும்பை, அம்பர் மாகாளங்களிலும் உறைபவனே! நிலம் முழுதும் சூழ்ந்த கடலிடையே உள்ள இலங்கை மன்னனான இராவணனுடைய பருத்த தலைகளையும் வலிய தோள்களையும் நெரித்து, மகிழ்ந்த உன் திருவடிகளைச் சரணாக அடைந்து உனக்கு அடிமையாகப் பெற்றால் அல்ல கண்டம் கொண்டு அடியேன் என் செய்கேனே.

கூளி – பேய்.

மதில் ஆனைக்கா என்றருளிய இத்தலத்தின் திருமதிலை சிவபெருமானே எழுந்தருளி வந்து திருநீற்றைக் கூலியாகக் கொடுத்துக்கட்டியது எனவும் இது பாதலம் வரை ஊடுருவியுள்ளது எனவும் கூறுவர்.

## 63. திருவானைக்கா

(இப்பதிகத்தின் கண் சிவபெருமான் மிக்க நீர்த்திரளாய் (அப்புலிங்கமாய்) நிற்கும் நிலை வியந்துரைக்கப்பட்டது)

ப.தொ.எண் : 276 பதிக எண் : 63

2715. முன்னானைத் தோல்போர்த்த மூர்த்தி தன்னை
மூவாத சிந்தையே மனமே வாக்கே
தன்னானை யாப்பண்ணி யேறி னானைச்
சார்தற் கரியானை தாதை தன்னை
என்னானைக் கன்றினையென் ஈசன் தன்னை
யெறிநீர்த் திரையுகளும் காவிரிசூழ்
தென்னானைக் காவானைத் தேனைப் பாலைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 1

முன் ஒரு காலத்தில் யானையைக் கொன்று, அதன் தோலைப் போர்த்தியவனாய், ஞானம் மிகப் பெறாத அடியேனுடைய சிந்தை மனம் வாக்கு இவற்றைத்தான் இவரும் யானைகளாகக் கொண்டு இவர்ந்தானாய், அடியார்க்கு அல்லது மற்றவருக்குக் கிட்டுதற்கு அரியனாய், எல்லோருக்கும் தந்தையாய், என் ஆனைக்கன்று போன்று எனக்கு இனியவனாய், என்னை அடக்கி ஆள்பவனாய், அலைகள் மோதும் காவிரியை அடுத்த அழகிய ஆனைக்காவில் தேனாகவும் பாலாகவும் இனியானாய், நீர்த்திரள் வடிவாக அமைந்த பெருமானை நான் தலைப்பட்டேன். கருவறையில் இலிங்க மூர்த்திக்குக் கீழே இன்றும் நீர் உள்ளது. குருக்கள் தட்டிக் காண்பித்தலை இன்றும் காண்கிறோம்.

செழுநீர்த்திரள் – இத்தலத்துள் இறைவன் நீர் ஊற்றாய் விளங்குதல் பற்றி அப்புலிங்கம். உகளுதல் – புரளுதல். செழுநீர் – மிக்க நீர். தென் – தெற்கு, அழகு.

2716. மருந்தானை மந்திரிப்பார் மனத்து ளானை
வளர்மதியஞ் சடையானை மகிழ்ந்தென் உள்ளத்
திருந்தானை இறப்பிலியைப் பிறப்பி லானை
இமையவர்தம் பெருமானை யுமையா ளஞ்சக்
கருந்தான மதகளிற்றி னுரிபோர்த் தானைக்
கனமழுவாட் படையானைப் பலிகொண் டூரூர்
திரிந்தானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 2

அமுதமாக உள்ளவனாய், தியானிப்பவர் மனத்து இருப்பவனாய், பிறையை அணிந்த சடையனாய், மகிழ்ந்து என் உள்ளத்து இருப்பானாய், பிறப்பு இறப்பு இல்லாதவனாய், தேவர்கள் தலைவனாய், பார்வதி அஞ்சுமாறு கரிய மத நீரை உடைய யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்தியவனாய், வலிய யானைப்படையை உடையவனாய், ஊர் ஊராய்ப் பிச்சை எடுத்துத் திரிவானாய்த் திருவானைக்காவில் உள்ள நீர்த்திரள் வடிவாக அமைந்த பெருமானைத் தலைப்பட்டேன்.

2717. முற்றாத வெண்டிங்கட் கண்ணி யானை
முந்நீர்நஞ் சுண்டிமையோர்க் கமுதம் நல்கும்
உற்றானைப் பல்லுயிர்க்குந் துணையா னானை
ஓங்காரத் துட்பொருளை உலக மெல்லாம்
பெற்றானைப் பின்னிறக்கஞ் செய்வான் தன்னைப்
பிரானென்று போற்றாதார் புரங்கள் மூன்றுஞ்
செற்றானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 3

முந்நீர் – கடல். பெற்றான் – தோற்றுவித்தான்.
இறக்கம் செய்தல் – ஒடுக்குதலைச் செய்தல்.

பிறையை முடிமாலையாக அணிந்தவனாய், கடலில் தோன்றிய விடத்தை உண்டு தேவர்க்கு அமுதம் வழங்கும் உறவினனாய், பல உயிர்களுக்கும் துணையாவானாய், ஓங்காரத்தின் உட்பொருளாய், உலகங்களை எல்லாம் தோற்றுவித்துப் பின் ஒடுக்குபவனாய்த் தன்னைத் தலைவன் என்று போற்றாத அசுரர்களின் முப்புரங்களையும் அழித்தவனாய்த் திருவானைக்காவுள் உறைபவனாய் உள்ள செழுநீர்த் திரளைச் சென்று ஆடினேனே.

2718. காராருங் கறைமிடற்றெம் பெருமான் தன்னைக்
காதில்வெண் குழையானைக் கமழ்பூங் கொன்றைத்
தாரானைப் புலியதளி னாடை யானைத்
தானன்றி வேறொன்று மில்லா ஞானப்
பேரானை மணியார மார்பி னானைப்
பிஞ்ஞகனைத் தெய்வநான் மறைகள் பூண்ட
தேரானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 4

எலும்பு, தலை மாலைகளன்றி ஏனையோரொடொப்ப மணிமாலை அணிதலும் சிவபெருமானுக்குண்டு – மணியார மார்பினான்.

கருமை நிறைந்த நீலகண்டனாய்க் காதில் வெண்ணிறக்குழையை அணிந்தவனாய், நறுமணம் கமழும் கொன்றைப் பூ மாலையனாய், புலித்தோலை ஆடையாக அணிந்தவனாய், ஞானமே வடிவாகிய பொருளாய் உள்ளவனாய், படிகமணிமாலையை மார்பில் அணிபவனாய், உலகங்களை அழிப்பவனாய், தெய்வத்தன்மை பொருந்திய நான்கு வேதங்களாகிய குதிரைகள் பூட்டப்பட்ட தேரை உடையவனாய், திருவானைக்காவில் உறைபவனாய், உள்ள செழு நீர்த்திரளைச் சென்று ஆடினேனே.

2719. பொய்யேது மில்லாத மெய்யன் தன்னைப்
புண்ணியனை நண்ணாதார் புரம்நீ றாக
எய்தானைச் செய்தவத்தின் மிக்கான் தன்னை
ஏறமரும் பெருமானை யிடமான் ஏந்தும்
கையானைக் கங்காள வேடத் தானைக்
கட்டங்கக் கொடியானைக் கனல்போல் மேனிச்
செய்யானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 5

பதிக மகுடம் – திருவானைக்காவுளானைச் செழு நீர்த்திரளைச் சென்றாடினேனே.

பொய்க்கலப்பற்ற மெய்ம்மை வடிவினனாய், புண்ணியனாய், பகைவர் மும்மதில்களும் சாம்பலாகுமாறு அம்பு செலுத்தியவனாய், தவத்தில் மேம்பட்டவனாய், காளை வாகனனாய், மானை ஏந்தும் இடக்கையனாய், கங்காள வேடத்தானாய், கட்டங்கம் என்ற படையின் வடிவம் எழுதப்பட்ட கொடியை உடையவனாய், தீயைப் போன்று சிவந்த மேனியனாய்த் திருவானைக்காவுள் உறைபவனாய் உள்ள செழு நீர்த்திரளைச் சென்று ஆடினேனே.

**2720.** கலையானைப் பரசுதர பாணி யானைக்
கனவயிரத் திரளானை மணிமா ணிக்க
மலையானை யென்தலையி னுச்சி யானை
வார்தருபுன் சடையானை மயானம் மன்னும்
நிலையானை வரியரவு நாணாக் கோத்து
நினையாதார் புரமெரிய வளைத்த மேருச்
சிலையானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 6

பரசு தர பாணி – மழு தரித்த கை.
வார்தரு – நீண்ட

மானையும், மழுப்படையையும் ஏந்திய கைகளை உடையவனாய், பெரிய வயிரத்திரளாய், மாணிக்கமலையாய், என் தலையின்மேல் உள்ளானாய், நீண்ட செஞ்சடையனாய், சுடுகாட்டில் நிலையாக இருப்பவனாய், வாசுகி என்ற பாம்பை நாணாகக் கோத்து, தன்னை விருப்புற்று நினையாத அசுரர்களின் மும்மதில்களும் எரிந்து சாம்பலாகுமாறு, வளைக்கப்பட்ட மேருமலையாகிய வில்லினை உடையவனாய், திருவானைக்காவில் உள்ள செழுநீர்த் திரளைச் சென்று ஆடினேனே.

**2721.** ஆதியனை யெறிமணியி னோசை யானை
அண்டத்தார்க் கறிவொண்ணா தப்பால் மிக்க
சோதியனைத் தூமறையின் பொருளான் தன்னை
சுரும்பமரும் மலர்க்கொன்றை தொன்னூல் பூண்ட
வேதியனை அறமுரைத்த பட்டன் தன்னை
விளங்குமல ரயன்சிரங்கள் ஐந்தி லொன்றைச்
சேதியனைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 7

ஆதியன் – முதல்வன். அண்டத்தார் – வானவர்
பட்டன் – ஆசிரியன். சேதி – அறுத்தல்

எல்லோருக்கும் முற்பட்டவனாய், மணியின் ஓசை போல எங்கும் பரந்தவனாய், உலகில் உள்ளவரால் அறிய முடியாதபடி உலகுக்கு அப்பாலும் பரவிய சோதி வடிவினனாய், வேதத்தின் விழுமிய பொருளாய், வண்டுகள் தங்கும் கொன்றை மலர், எல்லோருக்கும் முற்படத் தான் பூண்ட பூணூல் இவற்றால் விளங்கும் வேதியனாய், அறத்தை உபதேசித்த ஆசிரியனாய், தாமரையில் விளங்கும் பிரமனுடைய ஐந்து தலைகளில் ஒன்றை நீக்கியவனாய், திருவானைக்காவில் உறைபவனாய், உள்ள செழு நீர்த்திரளைச் சென்று ஆடினேனே.

**2722.** மகிழ்ந்தானைக் கச்சியே கம்பன் தன்னை
மறவாது கழல்நினைந்து வாழ்த்தி ஏத்திப்
புகழ்ந்தாரைப் பொன்னுலகம் ஆள்விப் பானைப்
பூதகணப் படையானைப் புறங்காட் டாடல்
உகந்தானைப் பிச்சையே யிச்சிப் பானை
ஒண்பவளத் திரளையென் னுள்ளத் துள்ளே
திகழ்ந்தானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 8

ஆள்வித்தல் – அதன்கண் பெறும் இன்பம் எல்லாவற்றையும் நுகர்வித்தல்.

கச்சி ஏகம்பத்தை விரும்பி உறைபவனாய், தன் திருவடிகளை மறவாது விருப்புற்று நினைத்து வாழ்த்தி உயர்த்திப் புகழ்ந்த அடியவர்களைப் பொன்னுலகு எனப்படும் தேவர் உலகை ஆளச் செய்பவனாய், பூதகணமாகிய படையை உடையவனாய், சுடுகாட்டில் கூத்தாடுதலை விரும்புபவனாய், பிச்சை ஏற்றலை ஆசைப்படுபவனாய், பவளத்திரள் போல என் உள்ளத்தில் விளங்குபவனாய், திருவானைக்காவுள் உறைபவனாய், உள்ள செழு நீர்த்திரளைச் சென்று ஆடினேனே.

**2723.** நசையானை நால்வேதத் தப்பா லானை
நல்குரவு தீப்பிணிநோய் காப்பான் தன்னை
இசையானை யெண்ணிறந்த குணத்தான் தன்னை
இடைமருதும் ஈங்கோயும் நீங்கா தேற்றின்
மிசையானை விரிகடலும் மண்ணும் விண்ணும்
மிகுதீயும் புனலெறிகாற் றாகி யெட்டுத்
திசையானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 9

நசையான் – விருப்பத்திற்குரியவன்.
நல்குரவு – வறுமை

எல்லோருடைய விருப்பத்திற்கும் உரியவனாய், நான்கு வேதங்களுக்கும் அப்பாற்பட்டவனாய், வறுமை, மனநோய்கள், உடல்நோய்கள் ஆகியவற்றை நீக்குபவனாய்ப் புகழுக்கு உரியவனாய், எல்லையற்ற நற்குணங்களுக்கு இருப்பிடமாயவனாய், இடைமருதும், ஈங்கோயும் உறைவிடமாக உடையவனாய், காளை வாகனனாய், விரிந்த கடலும் ஐம்பூதங்களும் எட்டுத் திசைகளும் ஆகியவனாய், திருவானைக்காவுள் உறைவானாய், உள்ள செழுநீர்த் திரளைச் சென்று ஆடினேனே.

**2724.** பார்த்தானைக் காமனுடல் பொடியாய் வீழப்
பண்டயன்மால் இருவர்க்கும் அறியா வண்ணஞ்
சீர்த்தானைச் செந்தழல்போ லுருவி னானைத்
தேவர்கள் தம் பெருமானைத் திறமுன்னாதே
ஆர்த்தோடி மலையெடுத்த இலங்கை வேந்தன்
ஆண்மையெலாங் கெடுத்தவன்தன் இடரப் போதே
தீர்த்தானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 10

சீர்த்தான் – உயர்ந்து தோன்றியவன். திறம் – வலிமை. (வினைவலி + தன் வலி). உன்னாதே – ஆராயாமலே
ஆர்த்து – ஆரவாரித்து

மன்மதன் உடல் சாம்பலாகுமாறு அவனை நெற்றிக் கண்ணால் நோக்கியவனாய், ஒருகாலத்தில் பிரமன், திருமால் இருவரும் தன்னை முடி அடி அறிய முடியாதவாறு தீப்பிழம்பாய் நின்றவனாய், தேவர்கள் தலைவனாய், தன்னுடைய வலிமையை நினைத்துப் பாராமல் ஆரவாரித்து ஓடிவந்து, கயிலை மலையை எடுத்த இராவணனுடைய ஆற்றலைப் போக்கிப்பின் அவன் துயரை அப்பொழுதே தீர்த்தானாய்த் திருவானைக்காவுள் உறைபவனாய் உள்ள செழுநீர்த்திரளைச் சென்று ஆடினேனே.

## 64. திருக்கச்சி ஏகம்பம்

(இத்திருப்பதிகம் 'காண்' என்னும் முடிபுடைய தொடர்க் கோவையால் கச்சியேகம்பனது பெருமைகளை வகுத்தோதி உருகி அருளிச் செய்தது)

ப.தொ.எண் : 277 பதிக எண் : 64

2725. கூற்றுவன்காண் கூற்றுவனைக்குமைத்த கோன்காண்
குவலயன்காண் குவலயத்தின் நீரா னான்காண்
காற்றவன்காண் கனலவன்காண் கலிக்கும் மின்காண்
கனபவளச் செம்மேனி கலந்த வெள்ளை
நீற்றவன்காண் நிலாவூருஞ் சென்னி யான்காண்
நிறையார்ந்த புனற்கங்கை நிமிர்ச டைமேல்
ஏற்றவன்காண் **எழிலாரும் பொழிலார் கச்சி**
**ஏகம்பன்** காண் அவன்என் எண்ணத் தானே. 1

உலகை ஒடுக்குபவனாய், கூற்றுவனை அழித்த தலைவனாய், உலக காரணனாய், உலகில் நீரும் காற்றும் கனலும் ஒலிக்கின்ற மேகமும் அதன் மின்னலுமாகி, பவளச் செம்மேனியில் வெண்ணீறு அணிந்து, பிறைதவழும் சென்னியனாய், கங்கை வெள்ளத்தை நிமிர்ந்த சடைமேல் ஏற்றவனாய், அழகு நிறைந்த சோலைகள் சூழ்ந்த கச்சி ஏகம்பத்திலுள்ள பெருமான் என் எண்ணத்தின்கண் ஆயினான்.

"அவன் என் எண்ணத்தான்" என்றது சுவாமிகளுக்கு அப்பெருமானிடத்துள்ள பேரார்வத்தைக் குறிக்கும். இவ்வாறே அவரை" என் மனத்தே வைத்தேனே" என நான்காம் திருமுறையில் ஒரு பதிகத்தையே (4.7) அருளிச் செய்துள்ளார்.
குவலயம் – பூமி. ஒலிக்கின்ற – இடிக்கின்ற மின்னலும் இடியும் புலப்பாட்டு வகையால் காரண காரியங்கள்.
கனம் – பெருமை. ஊர்தல் – தவழ்தல்.

2726. பரந்தவன்காண் பல்லுயிர்க ளாகி யெங்கும்
பணிந்தெழுவார் பாவமும் வினையும் போகத்
துரந்தவன்காண் தூமலரங் கண்ணி யான்காண்
தோற்ற நிலையிறுதிப் பொருளாய் வந்த
மருந்தவன்காண் வையகங்கள் பொறைதீர்ப் பான்காண்
மலர்தூவி நினைத்தெழுவா ருள்ளம் நீங்கா
திருந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண் அவன்என் எண்ணத் தானே. 2

பல உயிர்களாகி எங்கும் பரந்தவனாய், தன்னை வழிபட்டு எழுபவருடைய பாவங்களையும் வினைகளையும் போக்கியவனாய், தூய பூக்களாலாகிய முடிமாலையை உடையவனாய், உலகைப் படைத்துக் காத்து அழிக்கும் பொருளாய் அமைந்த அமுதமாய், உலகங்களின் பாரத்தைப் போக்குபவனாய், மலர்களைத் திருவடிகளில் சேர்த்து, விருப்புற்று நினைத்து வழிபடுபவர்களுடைய உள்ளத்தை விடுத்து நீங்காது இருப்பவனாய், உள்ள எழில் ஆரும் பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தான். பொறை – சுமை.

எங்கும் பரந்தவன் – எல்லாப் புவனங்களிலும் பரந்தவன்.
பாவம், இருவினை எதையும் நீக்குவான்.
நோயைத் தீர்ப்பவனும் மருந்து என்று சொல்லப்படுவான்.

2727. நீற்றவன்காண் நீராகித் தீயா னான்காண்
நிறைமழுவுந் தமருகமும் எரியுங் கையில்
தோற்றவன்காண் தோற்றக் கேடில்லா தான்காண்
துணையிலிகாண் துணையென்று தொழுவா
ருள்ளம்
போற்றவன்காண் புகழ்கள்தமைப் படைத்தான்
றான்காண்
பொறியரவும் விரிசடைமேற் புனலுங் கங்கை
ஏற்றவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண் அவன்என் எண்ணத் தானே.
3

தமருகம் – உடுக்கை, துடி.
தோற்றவன் – தோன்றுதலை உடையவன்.
துணைஇலி – ஒப்பு இலாதவன்.
போற்றவன் – காத்தல் உடையவன்.

திருநீறு அணிந்தவனாய், நீரும் தீயும் ஆனவனாய், கனமான மழுப்படை உடுக்கை அக்கினி இவற்றைக் கைகளில் ஏந்தியவனாய்த் தனக்குப் பிறப்பும் இறப்பும் இல்லாதவனாய், ஒப்பற்றவனாய், தன்னைத் துணையாகக் கொண்டு தொழும் அடியவர்களுடைய உள்ளத்தைப் பாதுகாப்பவனாய், புகழ்கள் படைத்தவனாய், விரிந்த சடைமீது புள்ளிகளை உடைய பாம்பினையும் கங்கையையும் ஏற்றவனாய், உள்ள எழில் ஆரும் பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தான்.

2728. தாயவன்காண் உலகிற்குத் தன்னொப் பில்லாத
தத்துவன்காண் மலைமங்கை பங்கா என்பார்
வாயவன்காண் வரும்பிறவி நோய்தீர்ப் பான்காண்
வானவர்க்குந் தானவர்க்கும் மண்ணு
ளோர்க்கும்
சேயவன்காண் நினைவார்க்குச் சித்த மாரத்
திருவடியே உள்கிநினைந் தெழுவா ருள்ளம்
ஏயவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே.
4

வாயவன் – சொல்லின்கண் விளங்கி நின்று பயன் தருபவன். இதனால் சிவனடியார்கள் நிறைமொழி மாந்தராய் விளங்குவர்.
வானவர் – தேவர். தானவர் – அசுரர்.
மண்ணுளோர் – மக்கள்.
ஏயவன் – பொருந்துதல் உடையவன்.

உலகிற்குத் தாயாய், தன்னொப்பார் இல்லாத தத்துவனாய், பார்வதி பாகனாய், அடியவர்கள் வாக்கில் இருப்பவனாய், இனி வரக்கூடிய பிறவி நோயைத் தீர்ப்பானாய், உலகியலிலேயே ஈடுபடும் தன்னை நினையாத தேவர் தானவர் மக்கள் ஆகியோருக்குத் தூரத்திலுள்ளவனாய், மனமாரத் திருவடியை விரும்பித் தியானித்து எழுபவர் உள்ளத்தில் பொருந்தியவனாய், உள்ள எழில் ஆரும் பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தான். வினையால் பிறப்பும், பிறப்பால் வினையும் எனக் காரண காரியத் தொடர்ச்சியாக முடிவின்றி வருகின்றன.

2729. அடுத்தானை யுரித்தான் காண்
..................................
5

பாடல் நிறைவு பெறவில்லை.

தன்னைக் கொல்ல நெருங்கி வந்த யானையைக் கொன்று அதன் தோலை உரித்தவன்.

2730. அழித்தவன்காண் எயில்மூன்றும் அயில்வா யம்பால்
ஐயாறும் இடைமருதும் ஆள்வான் தான்காண்
பழித்தவன்காண் அடையாரை அடைவார் தங்கள்
பற்றவன்காண் புற்றரவ நாணி னான்காண்
சுழித்தவன்காண் முடிக்கங்கை அடியே போற்றுந்
தூயமா முனிவர்க்காப் பார்மேல் நிற்க
இழித்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே.
6

அயில்வாய் – கூர்மையான வாய். தன்னை அடையாதார்க்கு முன்னின்று அருளான்.
கங்கையைச் சடையில் தரித்த நிலை – கங்காதர மூர்த்தி. அக்கங்கையைச் சிறிது நிலத்தில் விடுத்த நிலை பற்றி – கங்கா விசர்ச்சன மூர்த்தி எனவும் கூறுவர்.

கூரிய வாயை உடைய அம்பினாலே மும்மதிலையும் அழித்தவனாய், ஐயாறும், இடைமருதும் ஆள்பவனாய், பகைவரைப் பழித்தவனாய், அடியார்களுக்குத் துணையாய் இருப்பவனாய், பாம்பினை வில் நாணாகக் கொண்டவனாய், தலையில் கங்கையைச் சுழன்று தங்கச் செய்தவனாய், தன் திருவடிகளை வழிபட்ட பகீரதனுக்காக உலகில் ஓடுமாறு கங்கை நீரைச் சிறிது இறக்கியவனாய், உள்ள எழில் ஆரும் பொழில் ஆரும் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தான்.

சுழித்தவன் – அடக்கியவன்.

இழித்தவன் – இறக்கியவன்.

2731. அசைந்தவன்காண் நடமாடிப் பாடல் பேணி
அழல்வண்ணத் தில்அடியும் முடியுந் தேடப்
பசைந்தவன்காண் பேய்க்கணங்கள் பரவி யேத்தும்
பான்மையன் காண் பரவிநினைந் தெழுவார் தம்பால்
கசிந்தவன்காண் கரியினுரி போர்த்தான் தான்காண்
கடலில்விடம் உண்டமரர்க் கமுத மீய
இசைந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே.
7

பசைந்தவன் – இரங்கியவன், கசிந்தவன்.

மற்றவர்கள் இசையவில்லை.

அப்பர் சுவாமிகள் ஏகம்பத்தின் மேல் பெருங் காதல் கொண்டவர்.

பாடலை விரும்பி, உடல் அசைந்து கூத்து நிகழ்த்தியவனாய், தன் தீப்பிழம்பாகிய வடிவில் அடியும், முடியும், மாலும், அயனும் தேட, அவர்களுக்கு இரங்கியவனாய், பேய்க் கூட்டங்கள் முன் நின்று துதித்துப் புகழும் இயல்பினனாய், தன்னை முன் நின்று துதித்துத் தியானிப்பவர்பால் மனம் இளகியவனாய், யானைத் தோலைப் போர்த்தவனாய், கடலின் விடத்தை உண்டு தேவர்களுக்கு அமுதம் ஈய மனம் பொருந்தியவனாய், உள்ள எழில் ஆரும் பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

2732. முடித்தவன்காண் வன்கூற்றைச் சீற்றத் தீயால்
வலியார்தம் புரமூன்றும் வேவச் சாபம்
பிடித்தவன்காண் பிஞ்ஞகனாம் வேடத் தான்காண்
பிணையல்வெறி கமழ்கொன்றை அரவு சென்னி
முடித்தவன்காண் மூவிலைநல் வேலி னான்காண்
முழங்கிஉரு மெனத்தோன்றும் மழையாய் மின்னி
இடித்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே.
8

கொடிய கூற்றுவனை அழித்தவனாய், தன் கோபத்தீயினால், வலிய பகைவர்களின் மும்மதில்களும் தீயில் வெந்து அழியுமாறு, வில்லை ஏந்தியவனாய், தலைக்கோலம் அணிந்த வேடத்தானாய், நறுமணம் கமழும் கொன்றை மாலையையும், பாம்பையும், தலையில் அணிந்தவனாய், முத்தலைச் சூலத்தை உடையவனாய், மழையாய் மின்னி இடித்தவனாய், உள்ள எழிலாரும் பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

பதிக மகுடம் – எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் காண் அவன்என் எண்ணத்தானே.

சாபம் – வில். அடுத்த திருப்பதிகமும் இதே பதிக மகுடத்தைப் பெற்றிருப்பது சிறப்பு.

2733. வருந்தவன்காண் மனமுருகி நினையா தார்க்கு
வஞ்சன்காண் அஞ்செழுத்து நினைவார்க் கென்றும்
மருந்தவன்காண் வான்பிணிகள் தீரும் வண்ணம்
வானகமும் மண்ணகமும் மற்று மாகிப்
பரந்தவன்காண் படர்சடையெட் டுடையான் தான்காண்
பங்கயத்தோன் தன்சிரத்தை யேந்தி யூரூர்
இரந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண் அவன்என் எண்ணத் தானே.
9

தன்னை மனம் உருகி நினையாதாருக்கு வஞ்சனாய், அஞ்செழுத்தை விருப்புற்று நினைப்பவர்களுக்கு என்றும் அவர்களுடைய பெரிய பிணிகளைத் தீர்க்கும் மருந்தான வனாய், தேவருலகும் மண்ணுலகும் மற்ற உலகங்களுமாகப் பரவியவனாய், நடுச்சடையை விடுத்துத் திசைக்கு ஒன்றாக ஆடும் எட்டுச்சடைகளை உடையவனாய், பிரமனுடைய மண்டையோட்டைக் கையில் ஏந்தி, ஊர் ஊராகப் பிச்சை எடுத்தவனாய், உள்ள எழிலாரும் பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

ஏகம்பத்தின் மேல் பாடப்பட்டுள்ள இரண்டு தாண்டகங்களும் ஒரே பதிக மகுடத்தைக் கொண்டன. இது ஏகம்பத்தின் சிறப்பு. கயிலைப் பதிகங்கள் மூன்றும் கயிலை மலையானே போற்றி போற்றி என்ற மகுடந் தாங்கி நிற்பது, அத்திருமலையின் சிறப்பை உணர்த்துவதற்காகும்.

2734. **வெம்மான உழுவை**யத ளுரிபோர்த் தான்காண்
வேதத்தின் பொருளான்காண் என்றி யம்பி
விம்மாநின் றழுவார்கட் களிப்பான் தான்காண்
விடையேறித் திரிவான்காண் நடஞ்செய் பூதத்
தம்மான்காண் அகலிடங்கள் தாங்கி னான்காண்
அற்புதன்காண் சொற்பதமுங் கடந்து நின்ற
எம்மான்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே. 10

வேட்டையின்போது இடப்பக்கம் விழுகின்ற விலங்கை உண்ணாத, கொடிய பெருமை மிக்க புலித்தோலைப் போர்த்தி, வேதத்தின் பொருளாய், எம் இறைவன் உள்ளான் என்று சொல்லி, மிடறு தழுதழுத்து, அழும் அடியவர்களுக்கு அருள் வழங்குபவனாய், காளையை இவர்ந்து திரிபவனாய், கூத்தாடும் பூதங்களின் தலைவனாய், உலகங்களைத் தாங்கும் அற்புதனாய், சொல்லின் அளவைக் கடந்து நின்ற புகழை உடைய எம் தலைவனாய், எழில் ஆரும் பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

உழுவை – புலி. அதள் – தோல்.

உழுவை – புலி; அதனை, 'மானம்' உடையதாக அருளியது, இடம் வீழ்ந்ததனை உண்ணாமை முதலியன நோக்கி; 'புலி தனது வேட்டத்தின்கண் இடப் பக்கத்து வீழ்ந்த விலங்கினை உண்ணாதிருந்து வலப்பக்கத்து வீழ்ந்ததனையே உண்ணும்' என்பதனை, "கடமா தொலைச்சிய கானுறை வேங்கை – இடம் வீழ்ந்த துண்ணாதிறக்கும்" (நாலடி. 300). "கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென – அன்றவண் உண்ணா தாகி வழிநாள் – பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து – இருங்களிற்றொருத்தல் நல்வலம் படுக்கும் – புலி" (புறம். – 190) என்றாற் போல்வனவற்றால் அறிக. அதள் – தோல்; 'உரி' என்றது 'உரிக்கப்பட்டது' எனப் பொதுமையில் நிற்ப, அதனை "அதள்" என்றது பொதுமை நீக்கிச் சிறப்பித்தது என்க; எனவே, 'அதளாகிய உரி' என விரிதல் பெறப்பட்டது; போர்த்தல், ஈண்டு மேலாடையாக இடுதல்; புலித்தோலைச் சிவபிரான் தன் அரையிற் கட்டுதலேயன்றி, மேலாடையாக அணிதலும் சிலவிடத்துக் கூறப்படுதல் அறிக. "என்று இயம்பி" என்றருளினாராயினும், 'இன்னோ ரன்ன புகழை இயம்பி' என்பதே கருத்தாகக் கொள்க. அழுதல் – கண்கலுழ்தல். அளிப்பான் – அவர்க்கு வேண்டுவன ஈவான்; அன்றி, 'அழுவாரை' என உருபு மயக்கமாகக் கொண்டு, 'காப்பான்' என்றுரைத்தலுமாம். "நடம்" என்றது, துணங்கை போல்பவற்றை, 'பூதத்தை உடைய அம்மான்' என்க. அற்புதன் – அதிசய நிலையினன். சொற்பதம் – சொல்லினது நிலை; உம்மை. சிறப்பு.

2735. அறுத்தான்காண் அயன்சிரத்தை அமரர்வேண்ட
ஆழ்கடலின் நஞ்சுண்டங் கணிநீர்க் கங்கை
செறுத்தான்காண் தேவர்க்குந் தேவன் தான்காண்
திசையனைத்துந் தொழுதேத்தக் கலைமான் கையில்
பொறுத்தான்காண் புகலிடத்தை நலிய வந்து
பொருகயிலை எடுத்தவன்தன் முடிதோள் நாலஞ்
சிறுத்தான்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே. 11

பிரமன் தலை ஒன்றை அறுத்தவனாய், தேவர் வேண்ட ஆழ்ந்த கடலின் விடத்தை உண்டு, கங்கையைச் சடையில் அடக்கியவனாய், தேவர்களுக்குத் தேவனாய், எண்திசையும் தொழுது வணங்குமாறு கலைமானைக் கையில் தாங்கியவனாய், தன் இருப்பிடமாகிய கயிலை மலையை அசைக்கவந்து, அதனைப் பெயர்த்த இராவணனுடைய பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் நசுக்கியவனான, எழில் ஆரும் பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

செறுத்தான் – அடக்கினான்.
கலைமான் – ஆண்மான்
புகலிடம் – வீட்டுநெறி அடைய வேண்டுவோர் புகுதலை உடைய இடம் – நிலவுலகம்
பொருகயிலை – தடையாய் நின்ற கயிலை.

## 65. திருக்கச்சி ஏகம்பம்

இத்திருப்பதிகமும், மேலைத் திருப்பதிகத்தோடு ஒரு தன்மைப்பட்டது. இவ்வாறு இரண்டு திருப்பதிகங்கள் ஒரு தன்மையனவாகக் காணப்படுதல் அரிதேயாம். "ஐயாறன் அடித்தலமே" என முடியும் திருவிருத்தங்கள் இருபது உடைய திருப்பதிகம் (தி.4 ப. 92) இரண்டாகக் கொள்ளப்படாது, ஒன்றாகவே கொள்ளப்படுதல் கருதத்தக்கது. இதனாலும் சுவாமிகளுக்குத் திருவேகம்பத்துள் உள்ள பேரார்வம் புலனாகும். ஏகம்பன்காண் அவன்என் எண்ணத்தான் எனப்போற்றிப் பணிந்தின்புற்றார்.

ப.தொ.எண் : 278 பதிக எண் : 65

2736. உரித்தவன்காண் உரக்களிற்றை உமையாள் ஒல்க
ஓங்காரத் தொருவன்காண்உணர் மெய்ஞ் ஞானம்
விரித்தவன்காண் விரித்தநால் வேதத் தான்காண்
வியனுலகிற் பல்லுயிரை விதியி னாலே
தரித்தவன்காண் சில்லுருவாய்த் தோன்றி யெங்குந்
திரண்டவன்காண் திரிபுரத்தை வேவ வில்லால்
எரித்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத் தானே. 1

பார்வதி கண்டு அச்சத்தால் தளருமாறு, வலிய யானையின் தோலை உரித்தவனாய், ஓங்காரத்தால் உணர்த்தப்படுகின்ற பரம் பொருளாய் மெய்ஞ்ஞானத்தை விரித்தவனாய், நான்கு வேதங்களையும் ஓதுபவனாய், உலகில் பல உயிர்களையும் ஊழ்வினைப்படி படைத்தவனாய், எங்கும் சிறுதெய்வங்களாகவும் தோன்றிப் பரந்திருப்பவனாய், முப்புரங்களும் சாம்பலாகுமாறு வில்லால் எரித்தவனாய், அழகு நிறைந்த சோலைகள் நிரம்பிய கச்சி ஏகம்பன் என் எண்ணத்தில் உள்ளான்.

உரம் – வலிமை. ஒல்க – தளர; அஞ்ச.
ஒருவன் – ஏகன். தன்போல்வார் ஒருவருமன்றித் தான் ஒருவனேயாய் நிற்பவன்.
தெரித்தவன் – படைத்தவன்.

2737. நேசன்காண் நேசர்க்கு நேசந் தன்பால்
இல்லாத நெஞ்சத்து நீசர் தம்மைக்
கூசன்காண் கூசாதார் நெஞ்சு தஞ்சே
குடிகொண்ட குழகன்காண் அழகார் கொன்றை
வாசன்காண் மலைமங்கை பங்கன் தான்காண்
வானவர்கள் எப்பொழுதும் வணங்கி யேத்தும்
ஈசன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே. 2

அடியார்க்கு அன்பனாய், தன்னிடம் அன்பு இல்லாத கீழ்மக்களை நினைத்துக் கூசி அகல்பவனாய், தன்னை வணங்குதற்கு நாணாதவர் மனத்தின் கண் எளிமையாய்த் தங்கும் இளையவனாய், அழகிய மணம் கமழும் கொன்றையை அணிந்தவனாய், பார்வதி பாகனாய், தேவர்கள் எப்பொழுதும் வணங்கித் துதிக்கும் எழிலாரும் பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

கூசுதல் – நாணுதல்

2738. பொறையவன்காண் பூமியேழ் தாங்கி யோங்கும்
புண்ணியன்காண் நண்ணியபுண்டரிகப்
போதின்
மறையவன்காண் மறையவனைப் பயந்தோன்
தான்காண்
வார்சடைமா சுணமணிந்து வளரும் பிள்ளைப்
பிறையவன்காண் பிறைதிகழும் எயிற்றுப்
பேழ்வாய்ப்
பேயோடங் கிடுகாட்டில் எல்லி யாடும்
இறையவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே.
3

பூமி முதலிய ஏழு உலகங்களையும் தாங்கி, மேம்படும் பாரத்தைச் சுமப்பவனாய், புண்ணியனாய், தாமரையில் உறையும் வேதா எனப்படும் பிரமனாய், அவனைப் படைத்த திருமாலாய், நீண்ட சடையில் பாம்போடு பிறையைச் சூடியவனாய், பிறையைப் போன்ற பற்களையும் பிளந்த வாயையும் உடைய பேய்களோடு சுடுகாட்டில் இரவில் கூத்து நிகழ்த்தும் தலைவனாய் உள்ள எழில் ஆரும் பொழில் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

எயிறு – பல்
பேழ்வாய் – பெரியவாய்
பொறை – பொறுத்தல்; தாங்குதல்
எல்லி – இரவு

2739. பாரவன்காண் விசும்பவன்காண் பவ்வந்
தான்காண்
பனிவரைகள் இரவினொடு பகலாய் நின்ற
சீரவன்காண் திசையவன்காண் திசைக ளெட்டுஞ்
செறிந்தவன்காண் சிறந்தடியார் சிந்தை
செய்யும்
**பேரவன்காண் பேரா யிரங்க ளேத்தும்**
**பெரியவன்**காண் அரியவன்காண் பெற்றம்
ஊர்ந்த
ஏரவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண் அவன்என் எண்ணத்
தானே. 4

பூமியாய், வானமாய், வெள்ளத்தை உடைய கடலாய், பனி உறையும் மலைகளாய், இரவாய்ப் பகலாய் உள்ள சிறப்பை உடையவனாய், திசைகளாய், திசைகள் எட்டின் கண்ணும் செறிந்தவனாய், அடியவர்கள் சிறப்பாகத் தியானிக்கும் பெயர்களை உடையவனாய், ஆயிரம் பெயர்களால் போற்றப்படும் பெரியவனாய், அடியார் அல்லார்க்குக் கிட்டுதற்கு அரியவனாய், காளையை இவரும் அழகினை உடையவனாய் உள்ள எழில் ஆரும் பொழில் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

சீரவன் – புகழை உடையவன்
ஏரவன் – அழகன்

2740. பெருந்தவத்தெம் பிஞ்ஞகன்காண் பிறைசூ
டிகாண்
பேதையேன் வாதையுறு பிணியைத் தீர்க்கும்
மருந்தவன்காண் மந்திரங்க ளாயி னான்காண்
வானவர்கள் தாம்வணங்கும் மாதே
வன்காண்
அருந்தவத்தான் ஆயிழையாள் உமையாள் பாகம்
அமர்ந்தவன்காண் அமரர்கள்தாம் அர்ச்சித்
தேத்த
இருந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே.
5

பெரிய தவக்கோலத்தையும், தலைக் கோலத்தையும் உடையவனாய்ப் பிறையைச் சூடியவனாய், அடியேனுடைய துன்புறுத்தும் நோயைத் தீர்க்கும் மருந்தாய், மந்திரங்களாய், தேவர்கள் வணங்கும் பெருந்தேவனாய், மிக்க தவத்தை உடைய பார்வதி பாகனாய், தேவர்கள் அருச்சனை செய்து துதிக்குமாறு இருப்பவனாய், உள்ள எழில் ஆரும் பொழில் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

வாதை – துன்பம்

2741. ஆய்ந்தவன்காண் அருமறையோ டங்கம் ஆறும்
அணிந்தவன்காண் ஆடரவோ டென்பு
மாமை
காய்ந்தவன்காண் கண்ணழலாற் காமன் ஆகங்
கனன்றெழுந்த காலனுடல் பொடியாய் வீழப்
பாய்ந்தவன்காண் பண்டுபல சருகால் பந்தர்
பயின்றநூற் சிலந்திக்குப் பாராள் செல்வம்
ஈந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே.
6

அரிய வேதங்களையும், ஆறு அங்கங்களையும் ஆராய்பவனாய், படம் எடுத்து ஆடும் பாம்பு, எலும்பு, ஆமை இவற்றை அணிந்தவனாய், கண்ணிலிருந்து புறப்பட்ட தீயினால் மன்மதனுடைய உடம்பை எரித்தவனாய், வெகுண்டெழுந்த கூற்றுவனுடைய உடம்பு அழியுமாறு காலால் பாய்ந்தவனாய், ஒரு காலத்தில் பல சருகுகளைத் தன் வாயிலிருந்து வெளிப்படும் நூலால் இணைத்துத் தனக்கு நிழல் தரும் பந்தலை அமைத்த சிலந்திக்கு நாட்டை ஆளும் செல்வத்தை ஈந்தவனாய் உள்ள எழில் ஆரும் பொழில் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

ஆகம் – உடம்பு

2742. உமையவளை யொருபாகஞ் சேர்த்தி னான்காண்
உகந்தொலிநீர்க் கங்கைசடை யொழுக்கி
னான்காண்
இமய வடகயிலைச் செல்வன் தான்காண்
இற்பலிக்குச் சென்றுழலும் நல்கூர்ந்
தான்காண்
**சமயமவை யாறினுக்குந் தலைவன் தான்காண்**
தத்துவன்காண் உத்தமன்காண் தானே யாய
இமையவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண் அவன்என் எண்ணத் தானே.
7

பார்வதி பாகனாய், மகிழ்ந்து கங்கையைச் சடையில் ஒடுக்கியவனாய், இமயமலையில் உள்ள வடகயிலை மலையில் உறையும் செல்வனாய், வீடுகள் தோறும் பிச்சைக்கு அலையும் வறியவனாய், ஆறுவகை வைதிகச் சமயங்களுக்கும் தலைவனாய், மெய்ப்பொருளாய், உயர்வற உயர்நலம் உடையவனாய்த் தனக்குத்தானே நிகராகும் தேவனாய் உள்ள எழில் ஆரும் பொழில் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

எல்லாச் சமயங்களையும் உயிர்களின் அறிவு நிலைக்கேற்ப இறைவன் உலகில் தோன்றி நிலவச் செய்தலின் அவன் ஒருவனே எல்லாச் சமயங்கட்கும் உண்மைத்தலைவன் என்க. எல்லாக் கலைகளுக்கும் சிவபெருமானே முதல்வன்.

2743. தொண்டுபடு தொண்டர்துயர் தீர்ப்பான் தான்காண்
தூமலர்ச்சே வடியிணையெம் சோதி யான்காண்
உண்டுபடு விடங்கண்டத் தொடுக்கி னான்காண்
ஒலிகடலில் அமுதமரர்க் குதவி னான்காண்
வண்டுபடு மலர்க்கொன்றை மாலை யான்காண்
வாண்மதியாய் நாண்மீனு மாயி னான்காண்
எண்டிசையும் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே. 8

தொண்டுபடு – தொண்டு பொருந்திய. படுவிடம் – இறத்தற்கு ஏதுவாகிய நஞ்சு

அடிமை செய்யும் அடியார் துயரங்களைத் தீர்ப்பவனாய், தூய மலர்போன்ற திருவடிகளை உடைய, எம் சோதி வடிவினனாய், உண்ட விடத்தைக் கழுத்தில் ஒடுக்கியவனாய், கடலிலிருந்து வெளிப்பட்ட அமுதத்தைத் தேவர்களுக்கு உதவியவனாய், வண்டுகள் பொருந்தும் கொன்றை மலர் மாலையனாய், ஒளி பொருந்திய சந்திரனும் விண்மீன்களும் ஆயினவனாய், எட்டுத் திசைகளிலும் அழகு நிறைந்த பொழில் ஆர் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே. வாள் – ஒளி.

2744. முந்தைகாண் மூவரினும் முதலா னான்காண்
மூவிலைவேல் மூர்த்திகாண் **முருக வேட்குத்
தந்தைகாண் தண்கடமா முகத்தி னாற்குத்
தாதைகாண்** தாழ்ந்தடியே வணங்கு வார்க்குச்
சிந்தைகாண் சிந்தாத சித்தத் தார்க்குச்
சிவனவன்காண் செங்கண்மால் விடையொன் றேறும்
எந்தைகாண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தானே. 9

அயன் அரி அரன் – பிரம்மா, திருமால், குணிருத்திரன் என்னும் மூவருக்கும் முதல்வன் / முற்பட்டவன். மகா ருத்திரனாகிய சிவபெருமான். இப்பாட்டில் கணபதி, முருகன் இருவரையும் குறிப்பிடுகிறார்.

தண்கடமா – குளிர்ந்த மதநீருடைய விலங்கு – யானை

யாவரினும் முற்பட்டவனாய், மும்மூர்த்திகளிலும் வேறுபட்டு, அவர்கள் தோற்றத்துக்குக் காரணனாய், முத்தலைச் சூலம் ஏந்தியவனாய், முருகனுக்கும் யானைமுகத்தானாகிய விநாயகனுக்கும் தந்தையாய், பணிந்து தன் திருவடிகளை வணங்கும் அடியவர்களுக்கு அவர்கள் சிந்தையில் அகப்படுபவனாய், புறப்பொருள்கள் மாட்டுச் செல்லாத உள்ளத்தாருக்கு இன்பவடிவினனாய், செங்கண்ணனாகிய திருமாலைக் காளையாகக் கொண்டு இவரும் எம் தலைவனாய் உள்ள எழில் ஆரும் பொழில் கச்சி ஏகம்பன் என் எண்ணத்தானே.

2745. பொன்னிசையும் புரிசடையெம் புனிதன் தான்காண்
பூதகண நாதன்காண் புலித்தோ லாடை
தன்னிசைய வைத்தளழி லரவி னான்காண்
சங்கவெண் குழைக்காதிற் சதுரன் தான்காண்
மின்னிசையும் வெள்ளெயிற்றோன் வெகுண்டு வெற்பை
யெடுக்கஅடி யடர்ப்பமீண் டவன்றன் வாயில்
இன்னிசைகேட் டிலங்கொளிவா ளீந்தோன் கச்சி
ஏகம்பன் காண் அவன்என் எண்ணத் தானே.

10

பொன் போன்ற ஒளிவீசும் முறுக்கேறிய சடையை உடைய எம் தூயோனாய், பூதகணத் தலைவனாய், புலித்தோலாகிய ஆடையின் மேல் இறுக்கிச் சுற்றிய அழகிய பாம்பினை உடையவனாய், காதில் சங்கினாலாகிய குழையை அணிந்த திறமை உடையவனாய், மின்னலைப் போல ஒளி வீசும் வெள்ளிய பற்களை உடைய இராவணன், கோபம் கொண்டு கயிலை மலையை அசைக்கத் தன் திருவடி அவனை நசுக்க, பின்னர் அவன் வாயிலிருந்து வெளிப்பட்ட இனிய இசையைக் கேட்டு, அவனுக்கு சந்திரகாசம் என்ற வாளினை வழங்கிய கச்சி ஏகம்பன் என் எண்ணத்திலுள்ளான்.

## 66. திருநாகேச்சரம்

(தெய்வச் சேக்கிழாரின் ஆன்மார்த்த தலம். இந்நினைவு பற்றியே தமது பதியான குன்றத்தூரில் சிவாலயம் எழுப்பி அதற்கு திருநாகேச்சரம் என்று பெயரிட்டார்)

ப.தொ.எண் : 279 பதிக எண் : 66

2746. தாயவனை வானோர்க்கும் ஏனோருக்குந்
தலையவனை மலையவனை உலக மெல்லாம்
ஆயவனைச் சேயவனை அணியான் தன்னை
அழலவனை நிழலவனை அறிய வொண்ணா
மாயவனை மறையவனை மறையோர் தங்கள்
மந்திரனைத் தந்திரனை வளரா நின்ற
தீயவனைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.

1

தேவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தாய் போல்பவனாய், எல்லாருக்கும் தலைவனாய், மலைகளில் உறைபவனாய், எல்லா உலகங்களும் ஆகியவனாய், அடியார் அல்லாதாருக்குத் தீப் போன்றவனாய்ச் சேய்மையிலுள்ளவனாய், அடியார்களுக்கு நிழல் போன்றவனாய் அண்மையில் உள்ளவனாய், பிறரால் அறியப்படாத வியத்தகு பண்பு செயல்களை உடையவனாய், வேதம் ஓதுபவனாய், வேதியர்கள் தியானிக்கும் மந்திர வடிவாய் உள்ளவனாய், ஆகமமாக இருப்பவனாய், வேள்வித்தீயாய் இருப்பவனாய், திருநாகேச்சரத்தில் உள்ள பெருமானை அடைந்து வழிபடாதவர்கள் நல்ல வழியில் செல்லாதவராவர்.

1. தாயவன் – தாயாய் இருப்பவன்
2. தலையவன் – தலைவன். யகரம் நீங்கப் பெற்றவன் தான் உண்மைத் தலைவன்.
3. மலையவன் – மலையின் கண் உள்ளவன்.
4. சேயவன் – அடியாரல்லாதார்க்கு தூரமாய் உள்ளவன்
5. அணியான் – அடியார்க்கு அண்மையில் – பக்கத்தில் உள்ளவன்
6. மாயவன் – வஞ்சன் 7. மறையன் – வேதத்தில் உள்ளவன் 8. மந்திரன் – மந்திர வடிவாய் உள்ளவன்
9. தந்திரன் – ஆகம நூல்களில் உள்ளவன். 10 அழலவன் – வெம்மையாய் உள்ளவன்.
11. நிழலவன் – தண்மையாய் (குளிர்ச்சியாய்) உள்ளவன்.

2747. உரித்தானை மதவேழந் தன்னை மின்னா
ரொளிமுடியெம் பெருமானை உமையோர் பாகந்
தரித்தானைத் தரியலர்தம் புரமெய் தானைத்
தன்னடைந்தார் தம்வினைநோய் பாவ மெல்லாம்
அரித்தானை ஆலதன்கீழ் இருந்து நால்வர்க்
**கறம்பொருள்வீ டின்பமா றங்கம் வேதந்**
**தெரித்தானைத்** திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.

2

மத யானைத் தோலை உரித்தவனாய், மின்னல் போல ஒளி வீசும் சடை முடி உடையவனாய், பார்வதி பாகனாய், பகைவர் மும்மதில்களை எரித்தவனாய், அடியார்களுடைய வினைப் பயனாம் நோய்களையும் பாவங்களையும் போக்கியவனாய், கல்லால மரத்தின் அடியில் அமர்ந்து முனிவர் நால்வர்க்கு **அறம், பொருள், இன்பம், வீடு என்ற உறுதிப் பொருள்களையும் அவற்றை உணரும் கருவிகளாகிய நான்கு வேதம் ஆறு அங்கங்கள்** ஆகியவற்றையும் உபதேசித்தவனாய்த் திருநாகேச்சரத்தில் உறையும் பெருமானைச் சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.

தரியலர் – பகைவர். அரித்தான் – அறுத்தான்.
அறம் பொருள் இன்பம் வீடு என்றது
தெரித்தான் – அறிவித்தவன்.

"ஈதலறம்; தீவினை விட்டீட்டல்பொருள்; எஞ்ஞான்றும்
காதல் இருவர் கருத்தொருமித் – தாதரவு
பட்டதே இன்பம்; பரனை நினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு" – ஔவையார் பாடல்.
என்றாற் போலக் கூறும் அவற்றின் இலக்கணங்களைத் தெரித்தான் – விளக்கினான்.

2748. காரானை உரிபோர்த்த கடவுள் தன்னைக்
காதலித்து நினையாத கயவர் நெஞ்சில்
வாரானை மதிப்பவர்தம் மனத்து ளானை
மற்றொருவர் தன்னொப்பா ரொப்பி லாத
ஏரானை இமையவர்தம் பெருமான் தன்னை
**இயல்பாகி உலகெலாம் நிறைந்து மிக்க**
**சீரானைத்** திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.

3

யானைத்தோல் போர்த்த கடவுளாய், தன்னை விரும்பி நினையாத கீழ் மக்கள் உள்ளத்துக்கண் வாராதானாய், தன்னை மதிப்பவர் மனத்து இருப்பவனாய், தன்னிகர் இல்லாத அழகனாய், தேவர்கள் தலைவனாய், இயல்பாகவே உலகமெல்லாம் நிறைந்து விளங்கும் பொருள்சேர் புகழ் உடையவனாய்த் திருநாகேச்சரத்து உறையும் பெருமானைச் சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.

காரானைஉரி – கரிதாகிய யானையினது தோல்.

ஏர் – எழுச்சி, உயர்வு. மிக்க சீரான் – "ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென் ஆலவாயில் உறையும்எம் ஆதியே" என்ற திருஞானசம்பந்தர் வாக்குப்படி இறைவன் புகழே உலகெலாம் நிறைந்து மிக்கு விளங்க வேண்டும். நம் புகழைப் பாடிக் கொண்டிருந்தால் இங்கேயே (பூவுலகிலேயே) இருக்க வேண்டியிருக்கும்.

**2749.** தலையானை எவ்வுலகுந் தானா னானைத்
**தன்னுருவம் யாவர்க்கும் அறிய வொண்ணா**
நிலையானை நேசர்க்கு நேசன் தன்னை
நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற
மலையானை வரியரவு நாணாக் கோத்து
வல்லசுரர் புரமூன்றும் மடிய எய்த
சிலையானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.
4

தலைவனாய், எல்லா உலகும் தானே ஆனவனாய், தன் உருவத்தைப் பிறர் அறிய முடியாத நிலையினனாய், அடியார்க்கு அன்பனாய், நீண்ட வானத்து உச்சியைத் தடுத்து ஓங்கிய மலைகளானவனாய், கோடுகளை உடைய பாம்பினை நாணாகக் கட்டி, கொடிய அசுரருடைய மும்மதில்களையும் அழியுமாறு அம்பு எய்த வில்லை ஏந்தியவனாய்த் திருநாகேச்சரத்து உறையும் பெருமானைச் சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.

## சிவபரத்துவம்

தலையான் – தலைவன்; முதல்வன்; பதி. இறைவனை யாவரும் உருவறியார் என்பதனை,

"அன்றுந் திருவுருவங் காணாதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் – என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது" **(தி. 11 அற்புதத்திருவந்தாதி – 61)**

என்று அருளிய அம்மை திருமொழியாலுங் காண்க. உருவம் என்றது, திருமேனியையேயன்றி அவனது உண்மை இயல்பையும் குறிப்பதேயாம். வீடு பெற்றார்க்கும் அவனது இன்பத்தை நுகர்ந்து வாழ்தலன்றி, அவனது இயல்பினை முற்றும் அளவிட்டுணர்தல் இயலாது என்பதை,

"கடல்அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்
கடல்அளக்க வாராதாற் போலப் – படியில்
அருத்திசெய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம்
கருத்துக்குச் சேயனாய்க் காண்" **(திருக்களிற்றுப்படியார் – 90).**

**2750.** மெய்யானைத் தன்பக்கல் விரும்பு வார்க்கு
விரும்பாத வரும்பாவி யவர்கட் கென்றும்
பொய்யானைப் புறங்காட்டி லாட லானைப்
பொன்பொலிந்த சடையானைப்
பொடிகொள் பூதிப்
பையானைப் பையரவ மசைத்தான் தன்னைப்
பரந்தானைப் பவளமால் வரைபோல் மேனிச்
செய்யானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.
5

அரும்பாவியர் – நீக்குதற்கரிய மிக்க பாவத்தை உடையவர்கள்.
பதிக மகுடம் – திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.

தன்பக்கல் விருப்பமுடைய அடியவர்களுக்கு உண்மையானவனாய், தன்னை விரும்பாத கொடிய பாவிகளுக்குப் பொய்யானவனாய், சுடுகாட்டில் கூத்தாடுபவனாய், பொன் போல ஒளிவீசும் சடையினனாய், திருநீறு நிறைந்த பையை உடையவனாய், பாம்பினை அணிந்தவனாய், எங்கும் பரவியிருப்பவனாய், பவளமலை போலச் சிவந்த திருமேனியை உடையவனாய்த் திருநாகேச்சரத்து உறையும் பெருமானைச் சேராதார் நன்னெறிக் கண் சேராதாரே.

2751. துறந்தானை அறம்புரியாத் துரிசர் தம்மைத்
தோத்திரங்கள் பலசொல்லி வானோ ரேத்த
நிறைந்தானை நீர்நிலந்தீ வெளிகாற் றாகி
நிற்பனவும் நடப்பனவு மாயி னானை
மறந்தானைத் தன்னினையா வஞ்சர் தம்மை
**அஞ்செழுத்தும் வாய்நவில வல்லோர்க்** கென்றுஞ்
சிறந்தானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.
6

துரிசர் – குற்றமுடையவர்
"நான் மறக்கினுஞ் சொல்லும் நா நமச்சிவாயவே"
– சுந்தரர்

அறத்தை விரும்பாத குற்றமுடையவர்களைக் கைவிட்டவனாய், தேவர்கள் பலவாகத் துதித்துப் புகழுமாறு, எல்லா முதன்மைகளாலும் நிறைந்தவனாய், ஐம்பூதமும், அவற்றின் காரியமாகிய சராசரமும் ஆகியவனாய், தன்னைத் தியானிக்காத வஞ்சர்களை மறந்து திருவைந்தெழுத்தை ஓதுபவர்களுக்கு எக் காலத்திலும் சிறந்து உதவுபவனாய், திருநாகேச்சரத்து உறையும் பெருமானைச் சேராதார் நன்னெறிக் கண் சேராதாரே.

2752. மறையானை மால்விடையொன் றூர்தி யானை
மால்கடல்நஞ் சுண்டானை வானோர் தங்கள்
இறையானை யென்பிறவித் துயர்தீர்ப் பானை
இன்னமுதை மன்னியசீர் ஏகம் பத்தில்
உறைவானை **ஒருவருமீங் கறியா வண்ணம்**
**என்னுள்ளத் துள்ளே யொளித்து வைத்த**
**சிறையானைத்** திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.
7

வேதப் பொருளாய் உள்ளவனாய், பெரிய காளை வாகனனாய், பெரிய கடலில் தோன்றிய விடத்தை உண்டவனாய், தேவர்கள் தலைவனாய், என் பிறவித்துயரைப் போக்குபவனாய், நிலைபெற்ற சிறப்பினை உடைய ஏகம்பத்தில் இனிய அமுதமாக உறைபவனாய், மற்றவருக்குப் புலப்படாத வகையில் அடியேன் உள்ளத்தினுள்ளே சிறை செய்து வைக்கப்பட்டவனாய், திருநாகேச்சரத்து உறையும் பெருமானைச் சேராதார் நன்னெறிக் கண் சேராதாரே. மால்கடல் – பெரிய கடல்

மறையான் – வேதத்தின்கண் உள்ளவன்; வேதப் பொருளாய் உள்ளவன். மால்கடல் – பெரிய கடல். இறையான் – கடவுள்; 'தேவர்க்குத் தேவன்' என்றவாறு, 'யான்ஒளித்து வைத்த' என்க. சிறையான் – சிறையில் உள்ளவன். இறைவனைத் தாம் அனுபவமாக இடையறாது உணர்ந்து இன்புற்றிருக்கவும், பிறர் ஒருஞான்றும் அதுமாட்டாது, துன்பிற்கிடந்து சுழல்கின்றார் என்பதனை, பான்மை வகையால் இவ்வாறு அருளிச் செய்தார்.

"நாடி நாரணன் நான்முக னென்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை அம்பலத்
தாடி பாதம்என் நெஞ்சு ளிருக்கவே" (தி. 5 ப. 1 பா. 10)

எனத் திருக்குறுந்தொகையினும் அருளிச் செய்தார்.

"ஆர்வல்லார் காண அரனவனை அன்பென்னும்
போர்வை யதனாலே போர்த்தமைத்துச் – சீர்வல்ல
தாயத்தால் நாமுந் தனிநெஞ்சி னுள்ளடைத்து
மாயத்தால் வைத்தோம் மறைத்து" (தி. 11 அற்புதத் திருவந்தாதி – 96)

என அம்மையும் இவ்வாறே அருளுதல் காண்க.

**2753.** எய்தானைப் புரமூன்றும் இமைக்கும் போதில்
இருவிசும்பில் வரும்புனலைத் திருவார் சென்னிப்
பெய்தானைப் பிறப்பிலியை **அறத்தில் நில்லாப்**
**பிரமன்தன் சிரமொன்றைக்** கரமொன் றினால்
கொய்தானைக் கூத்தாட வல்லான் தன்னைக்
**குறியிலாக் கொடியேனை** அடியே னாகச்
செய்தானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.
**8**

இமைகொட்டும் நேரத்தில் மும்மதில்களையும் அம்பு எய்து அழித்தவனாய், வானிலிருந்து இறங்கிய கங்கை வெள்ளத்தை அழகிய தலையில் ஏற்றவனாய், பிறப்பில்லாதவனாய், அறவழியில் நில்லாத பிரமனுடைய தலை ஒன்றனைத் தன் கை ஒன்றினால் நீக்கியவனாய், கூத்து நிகழ்த்துதலில் வல்லவனாய், குறிக்கோள் ஏதும் இல்லாத கொடியவனான என்னை அடியவனாகச் செய்தானாய் உள்ள திருநாகேச்சரத்து உறையும் பெருமானைச் சேராதார் நன்னெறிக் கண் சேராதாரே.

இமைக்கும் போதில் எய்தமை (புரமூன்றும்)

இமைக்கும் போதில் பெய்தமை (கங்கையைத் தாங்கியமை)

அறத்தில் நில்லாப் பிரமன் – அறம் என்றது வேதத்தின் பொருளை; அஃதாவது, 'சிவபெருமானே முழுமுதற் பொருள்' என்பது வேதத்தினை ஒழியாது ஓதியும், உணர்ந்தும், பிறர்க்கு உரைத்தும் தான் அடங்காப் பெரும் பேதையாயினானாகலின் அவனை உணர்த்தும் வாயிலின்றித் தலைகளில் ஒன்றைக் கொய்தான் என்றபடி. குறிக்கோளிலாது கெட்டேன். **4 – 67 – 9.**

**2754.** அளியானை அண்ணிக்கும் ஆன்பால் தன்னை
வான்பயிரை அப்பயிரின் வாட்டந் தீர்க்குந்
துளியானை அயன்மாலுந் தேடிக் காணாச்
சுடரானைத் துரிசறத் தொண்டு பட்டார்க்
கெளியானை யாவர்க்கும் அரியான் தன்னை
இன்கரும்பின் தன்னுள்ளா லிருந்த தேறல்
தெளியானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.
**9**

கருணை உடையவனாய், இனிக்கும் பசுப்பால் போல்பவனாய், உலகில் வளரும் பயிர்களாய், அப்பயிர்களின் வாட்டம் தீர்க்கும் மழையாய் உள்ளவனாய், பிரமனும், திருமாலும் தேடியும் காண முடியாத தீப்பிழம்பாய், குற்றம் தீரத் தொண்டு செய்யும் அடியவருக்கு எளியவனாய், மற்ற யாவருக்கும் அரியவனாய், இனிய கருப்பஞ்சாற்றின் தெளிவு போன்றவனாய்த் திருநாகேச்சரத்து உறையும் பெருமானைச் சேராதார் நன்னெறிக் கண் சேராதாரே.

அளியான் – கருணை உடையவன். ஆன்பால் – பசுவின் பால். அண்ணிக்கும் – தித்திக்கின்ற. துளி – மழை துரிசு – குற்றம். கரும்பின் பயன் அதன் சாறே. எனவே தேறல் என்றார் சுவாமி. ஆன்பால், தேறலின் தெளிவு.

2755. சீர்த்தானை யுலகேழுஞ் சிறந்து போற்றச்
சிறந்தானை நிறைந்தோங்கு செல்வன் தன்னைப்
பார்த்தானை மதனவேள் பொடியாய் வீழப்
பனிமதியஞ் சடையானைப் புநிதன் தன்னை
ஆர்த்தோடி மலையெடுத்த அரக்கன் அஞ்ச
அருவிரலால் அடர்த்தானை அடைந்தோர் பாவந்
தீர்த்தானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே. 10

உலகங்கள் ஏழும் பரவிப் போற்றும்படியான புகழுடையவனாய், ஏனையோரினும் சிறந்தவனாய், நிறைந்து உயரும் செல்வத்தனாய், மன்மதன் சாம்பலாகுமாறு அவனை நெற்றிக் கண்ணால் பார்த்தவனாய், பிறை சூடிய சடையினனாய், தூயோனாய், ஆரவாரித்து ஓடி வந்து கயிலை மலையைப் பெயர்த்த இராவணன் அஞ்சுமாறு, அவனைக் கால் விரல் ஒன்றினால் நசுக்கியவனாய், தன்னைச் சரணாக அடைந்தவர்களின் பாவங்களைப் போக்குபவனாய், உள்ள திருநாகேச்சரத்து உறையும் பெருமானைச் சேராதார் நன்னெறிக் கண் சேராதாரே.

சீர்த்தான் – புகழை உடையவன். சிறந்து – ஞானத்தால் சிறந்து நின்று. ஆர்த்து – ஆரவாரித்து.

## 67. திருக்கீழ்வேளூர்

ப.தொ.எண் : 280 பதிக எண் : 67

2756. ஆளான அடியவர்கட் கன்பன் தன்னை
ஆனஞ்சும் ஆடியைநான் அபயம் புக்க
தாளானைத் தன்னொப்பா ரில்லா தானைச்
சந்தனமுங் குங்குமமுஞ் சாந்துந் தோய்ந்த
தோளானைத் தோளாத முத்தொப் பானைத்
தூவெளுத்த கோவணத்தை அரையி லார்த்த
கீளானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 1

தனக்கு அடிமையான அன்பர்களுக்குத் தானும் அன்பனாய், பஞ்சகவ்விய அபிடேகம் ஏற்பவனாய், நான் அடைக்கலம் புகுந்த திருவடிகளை உடையவனாய், ஒப்பற்றவனாய், சந்தனமும் குங்குமமும் வாசக்கலவைகளும் பூசப்பட்ட தோள்களை உடையவனாய், துளையிடப்படாத முத்தினை ஒப்பவனாய், தூய வெள்ளிய கோவணத்தைக் கீளோடு இடுப்பில் கட்டியவனாய்க் கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள என்றும் அழிதல் இல்லாத பெருமானை அடைக்கலமாக அடைபவர்கள் பிறந்து இறத்தலாகிய கேட்டினை எதிர்காலத்தில் பெறாதார் ஆவர்.

ஆளான அடியார் – சுவாமியை அறிந்து அடைந்தோர் அவர்கட்கு அன்பன் – அவர்க்கு வேண்டுவன யாவும் தானே முன்வந்து அருளுதல்.

இதனை திருஞானசம்பந்தருக்கு முத்துச்சிவிகை, முத்துப்பந்தர் முதலியவைகளும், அப்பருக்குப் பொதிச் சோறும், இருவருக்கும் படிக்காசும், சுந்தரருக்குப் பொன்னும், நெல்லும், சோறும் முன்வந்து அளித்தமையாலும், பிறவற்றாலும் பெறப்படும். கீள் – கோவணத்தை இணைத்து வைத்திருக்குமது.

2757. சொற்பாவும் பொருள்தெரிந்து தூய்மை நோக்கித்
தூங்காதார் மனத்திருளை வாங்கா தானை
நற்பான்மை அறியாத நாயி னேனை
நன்னெறிக்கே செலும்வண்ணம் நல்கி னானைப்
பற்பாவும் வாயாரப் பாடி யாடிப்
பணிந்தெழுந்து குறைந்தடைந்தார் பாவம் போக்க
கிற்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 2

சொற்பாவும் பொருள் – சொல்லின் கண் பரவி நிறைந்துள்ள பொருள்.

நாயினேனை – இழிவுடைமைக்கு நாயினை உவமையாகக் கூறுதல் தொன்றுதொட்டதொரு வழக்கு.

போக்ககிற்பான் – நீக்க வல்லவன்.

சிவபெருமானுடைய இயல்புகளை உணர்த்தும் பாடல்களில் உள்ள சொற்களின் பொருளை நன்றாக உணர்ந்து, மலங்கள் பற்றற நீங்கப் பெற்றுப் பசுபோதம் நீங்கி, அருளில் அடங்கி நில்லாதவர்கள் உள்ளத்திலுள்ள அஞ்ஞானத்தை நீக்காதவனாய், உய்வதற்குரிய வழியை அறியாத நாய் போன்ற கீழ்மையனாகிய என்னை நல்ல வழியில் செல்லும் வண்ணம் விரும்பி ஆட்கொண்டவனாய், பற்கள் வரிசையாக அமைந்த வாயினால், உச்சரிப்பில் குறை ஏற்படாத வகையில் பாடியும் ஆடியும் பணிந்து எழுந்தும், குறை இரந்து தன்னைச் சரணமாக அடைந்தவர்களுடைய பாவங்களைப் போக்கும் ஆற்றலுடையவனாய்க் கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள அழிவற்ற பெருமானை அடைக்கலமாக அடைந்தவர்கள் கேடுஇலார்.

2758. அளைவாயில் அரவசைத்த அழகன் தன்னை
ஆதரிக்கும் அடியவர்கட் கன்பே யென்றும்
விளைவானை மெய்ஞ்ஞானப் பொருளா னானை
வித்தகனை எத்தனையும் பத்தர் பத்திக்
குளைவானை அல்லாதார்க் குளையா தானை
உலப்பிலியை உள்புக்கென் மனத்து மாசு
கிளைவானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 3

அளைவாயில் – புற்றாகிய இடத்தில் உள்ள.
வித்தகன் – திறல் உடையவன். உளைதல் – வருந்துதல், மனம் இரங்குதல். உலப்பு – அழிவு.

புற்றில் உள்ள பாம்புகளை அணிந்த அழகனாய், தன்னை விரும்பும் அடியவர்களுக்கு அன்பனாய், மெய்ஞ்ஞானப் பொருளாய், பெருந்திறல் உடையவனாய், பத்தர்களுடைய பத்தி எவ்வளவிற்றாயினும் அதற்கு மனம் இரங்குபவனாய், பத்தர் அல்லாதவருக்கு இரங்கானாய், என்றும் அழிவில்லாதவனாய், என் உள்ளத்துப்புக்கு அங்குள்ள மாசுகளைக் கல்லி எடுத்து நீக்குபவனாய்க் கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள அழிவற்ற பெருமானை அடைக்கலம் அடைந்தவர்கள் கேடிலாரே.

2759. தாட்பாவு கமலமலர்த் தயங்கு வானைத்
தலையறுத்து மாவிரதந் தரித்தான் தன்னைக்
கோட்பாவு நாளெல்லா மானான் தன்னைக்
கொடுவினையேன் கொடுநரகக் குழியில் நின்றால்
மீட்பானை வித்துருவின் கொத்தொப் பானை
வேதியனை வேதத்தின் பொருள்கொள் வீணை
கேட்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 4

தண்டிலே விரிந்த தாமரையில் உறையும் பிரமனுடைய தலை ஒன்றினை அறுத்தவனாய், மாவிரத சமயத்திற்கு உரிய வேடத்தை அணிந்தவனாய், கிரகங்களின் பெயரால் அமைந்த கிழமைகள் யாவும் ஆவானாய், தீவினையை உடைய அடியேன் நின்ற கொடிய நரகக் குழியிலிருந்து அடியேனை மீட்பவனாய், பவளக் கொத்தினை ஒத்த நிறத்தினனாய், வேதம் ஓதுபவனாய், வேதத்தின் பொருள் கொண்ட வீணை ஒலியைக் கேட்பானாய்க் கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள பெருமானை அடைக்கலமாக அடைந்தவர்கள் கேடிலாரே.

தயங்குவான் – விளங்குவான். வித்துருமம் – பவளம் பதிக மகுடம் – கீழ்வேளூராளுங் கோவைக் கேடிலியை நாடுமவர் கேடிலாரே.

---

2760. நல்லானை நரைவிடையொன் றூர்தி யானை
நால்வேதத் தாறங்கம் நணுக மாட்டாச்
சொல்லானைச் சுடர்மூன்று மானான் தன்னைத்
தொண்டாகிப் பணிவார்கட் கணியான் தன்னை
வில்லானை மெல்லியலோர் பங்கன் தன்னை
மெய்யராய் நினையாதார் வினைகள் தீர்க்க
கில்லானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 5

பெரியவனாய், வெண்ணிறக் காளை வாகனனாய், நான்கு வேதங்களும் ஆறு அங்கங்களும் அணுகமாட்டாத அருள் ஞானத்தானாய், மூன்று சுடர்களும் ஆனவனாய், தொண்டர்களாகித் தன்னை பணிபவர்களுக்கு அருகில் உள்ளவனாய், சுயம் பிரகாசனாய், பார்வதி பாகனாய், உண்மையாகத் தன்னை தியானிக்காதவர்கள் வினைகளைப் போக்காதவனாய்க் கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள பெருமானை அடைக்கலமாக அடைந்தவர்கள் கேடிலாரே.

நரைவிடை – வெள்விடை. முதிய விடை

2761. சுழித்தானைக் கங்கைமலர் வன்னி கொன்றை
தூமத்தம் வாளரவஞ் சூடி னானை
அழித்தானை அரணங்கள் மூன்றும் வேவ
ஆலால நஞ்சதனை உண்டான் தன்னை
விழித்தானைக் காமனுடல் பொடியாய் வீழ
மெல்லியலோர் பங்கனைமுன் வேன லானை
கிழித்தானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 6

சுழித்தல் – வளைத்தல், அடக்குதல். வன்னி இலை யாயினும் மலர்களோடு ஒப்பக் கொள்ளப்படுகிறது. ஆலாலம் – பாற்கடலில் தோன்றிய விடத்தின் பெயர். வேல்நல் ஆனை கிழித்தான் – வேல்போலும் நகத்தால் வன்மை மிக்க யானையைப் பிளந்தான்.

கங்கையைச் சடையில் வளைத்துக் கொண்டவனாய், அச்சடையில் வன்னி, கொன்றை, ஊமத்தை மலர்கள், ஒளி பொருந்திய பாம்பு இவற்றைச் சூடியவனாய், மும்மதில்களும் தீயில் வெந்து சாம்பலாகுமாறு அழித்தவனாய், ஆலகால விடத்தை உண்டவனாய், மன்மதன் உடல் பொடியாக விழுமாறு தீக்கண்ணால் விழித்தானாய், பார்வதி பாகனாய், முன்னொரு காலத்தில் வேல் போன்ற கூரிய தந்தங்களை உடைய யானைத் தோலைக் கிழித்து உரித்தவனாய்க் கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள பெருமானை அடைக்கலமாக அடைந்தவர்கள் கேடிலாரே.

2762. உளரொளியை உள்ளத்தி னுள்ளே நின்ற
ஓங்காரத்துட் பொருள்தான் ஆயி னானை
விளரொளியை விடுசுடர்கள் இரண்டும் ஒன்றும்
விண்ணொடுமண் ஆகாச மாயி னானை
வளரொளியை மரகதத்தி னுருவி னானை
வானவர்க ளெப்பொழுதும் வாழ்த்தி யேத்துங்
கிளரொளியைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 7

உளர் ஒளி – காற்றுக் காரணமாக எஞ்ஞான்றும் அசைந்து விளங்கும் விளக்கு. ஆகாயம், மண், விண் உட்பட அனைத்து உலகங்களையும் உள்ளடக்கியது.

அசைகின்ற ஒளிவிளக்காய், உள்ளத்து நிலை பெற்ற ஓங்காரத்தின் உட்பொருளாய், வெள்ளொளி உடைய சூரியன், சந்திரன், செந்நிறமுடைய அக்கினி என்ற இவையாகி, நிலவுலகுக்கும், தேவருலகுக்கும் மேற்பட்ட ஆகாயமுமாகி, மாணிக்கத்தின் ஒளியும் மரகதத்தின் ஒளியுமாகி, தேவர் எப்பொழுதும் வாழ்த்தித் துதிக்கும் ஒளிமிக்க திருமேனியை உடையவனாய்க் கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள பெருமானை அடைக்கலமாக அடைந்தவர்கள் கேடிலாரே.

2763. தடுத்தானைக் காலனைக் காலாற் பொன்றத்
தன்னடைந்த மாணிக்கன் றருள்செய்
தானை
உடுத்தானைப் புலியதளோ டக்கும் பாம்பும்
உள்குவா ருள்ளத்தி னுள்ளான் தன்னை
மடுத்தானை அருநஞ்சம் மிடற்றுள் தங்க
வானவர்கள் கூடியஅத் தக்கன் வேள்வி
கெடுத்தானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 8

மடுத்தான் – வாய் மடுத்தான் – உண்டான் – மிடற்றுள் தங்கமடுத்தான்.

கூற்றுவன் இறக்குமாறு அவனைக் காலால் உதைத்து, தன்னைச் சரணடைந்த மார்க்கண்டேயனுக்கு ஒரு காலத்தில் அருள் செய்தவனாய், புலித்தோலோடு எலும்பும் பாம்பும் பூண்டவனாய், தன்னை அன்போடு வழிபடுபவர் உள்ளத்து இருப்பவனாய், கொடிய நஞ்சினைத் தன் கழுத்தில் தங்குமாறு உண்டவனாய், தேவர்கள் கூடியிருந்த தக்கனுடைய வேள்வியை அழித்தவனாய், உள்ள கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள பெருமானை அடைக்கலமாக அடைந்தவர்கள் கேடிலாரே.

**2764.** மாண்டா ரெலும்பணிந்த வாழ்க்கை யானை
மயானத்திற் கூத்தனைவா ளரவோ டென்பு
பூண்டானைப் புறங்காட்டி லாட லானைப்
போகாதென் னுள்புகுந் திடங்கொண்
டென்னை
ஆண்டானை அறிவரிய சிந்தை யானை
அசங்கையனை அமரர்கள்தஞ் சங்கை
யெல்லாங்
கீண்டானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. **9**

இறந்தவர்களுடைய எலும்புகளை அணியும் இயல்பினனாய், கடவூர் மயானம் முதலிய இடங்களில் கூத்தாடுபவனாய், ஒளி பொருந்திய பாம்போடு எலும்பை அணிபவனாய், சுடுகாட்டில் ஆடுபவனாய், என் உள்ளத்தில் இடம் பெற்று, அதனை விடுத்து நீங்காது, என்னை அடிமை கொண்டானாய், தன் உள்ளத்திருப்பதனைப் பிறர் அறிய இயலாதவனாய், அச்சம் இல்லாதவனாய்த் தேவர்களின் அச்சத்தைப் போக்கியவனாய்க் கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள பெருமானை அடைக்கலமாக அடைந்தவர்கள் கேடிலாரே.

மயானம் – உலக முழுதும் ஒடுங்கிய நிலை. புறங்காடு – உலகப் புறங்காடு.

மாண்டார் எலும்பு அணிந்த வாழ்க்கை – எலும்பை அணிதற்கு ஏதுவாய் நின்ற வாழ்க்கை. வறுமை வாழ்க்கை. பழித்தது போலப் புகழ்வது. அரனொடு என்பு பூண்டான் – பற்றின்மை, பரத்துவம் ஆகியவற்றைக் குறிப்பது. கங்கை – அச்சம்; அசங்கை – அச்சமின்மை.

கீண்டான் – பிளந்தான்; அழித்தான்.

**2765.** முறிப்பான பேசிமலை யெடுத்தான் தானும்
முதுகிறமுன் கைந்நரம்பை யெடுத்துப் பாடப்
பறிப்பான்கைச் சிற்றரிவாள் நீட்டி னானைப்
பாவியேன் நெஞ்சகத்தே பாதப் போது
பொறித்தானைப் புரமூன்றும் எரிசெய் தானைப்
பொய்யர்களைப் பொய்செய்து போது
போக்கிக்
கிறிப்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. **10**

தனக்கு அறிவுரை கூறிய தேர்ப்பாகனிடம் கடுஞ் சொற்கள் பேசிக் கயிலைமலையை அசைத்த இராவணன் முதுகு நொறுங்குமாறு அழுத்திப்பின் அவன் தன் கை நரம்புகளை வீணைத் தந்திகளாகக் கொண்டு பாட மலையை அசைத்த அவனுக்குச் சிறிய வாளை அருள் செய்தவனாய், அடியேன் உள்ளத்தே தன் திருவடிகளைப் பதித்தவனாய், மும்மதில் களையும் எரித்துச் சாம்பல் ஆக்கியவனாய், அன்பின்றி வழிபடுபவர்களுக்குத் தானும் அருள்புரிவான் போன்று காட்டி வஞ்சிப்பவனாய்க் கீழ்வேளூரை ஆளும் அரசனாய் உள்ள பெருமானை அடைக்கலமாக அடைந்தவர்கள் கேடிலாரே.

முறிப்பு ஆன – தொடர்பை அறுப்பனவாகிய சொற்கள்.

அரிவாள் – பகைவரது உறுப்புக்களை அறுக்கின்ற வாள்.

கிறி – வஞ்சனையாதல்.

## 68. திருமுதுகுன்றம் (விருத்தாச்சலம்)

(திருமுதுகுன்றத்துச் சிவபெருமானைத் தீவினையால் முன்னம் அறியாமல் திகைத்துத் திரிந்தவாறுதான் என்னே! என்றிரங்கியது பழம்பொருட்கெல்லாம் பழைமையாய் நின்ற அவரையும் அறியாதிருந்தது தமது தீவினையும், அறியாமையும் ஆகியவற்றின் மிகுதி என்று எண்ணிய ஆற்றாமை)

ப.தொ.எண் : 281

பதிக எண் : 68

2766. கருமணியைக் கனகத்தின் குன்றொப் பானைக்
கருதுவார்க் காற்ற எளியான் தன்னைக்
குருமணியைக் கோளரவொன் றாட்டு வானைக்
கொல்வேங்கை யதளானைக் கோவ ணன்னை
அருமணியை அடைந்தவர்கட் கமுதொப் பானை
ஆனஞ்சும் ஆடியைநான் அபயம் புக்க
திருமணியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.

1

கருமணி – கண்ணில் உள்ளது. கனகம் – பொன்.
குருமணி – நிறம் வாய்ந்த மணி.
அருமணி – கிடைத்தற்கரியது.
திருமணி – அழகிய மணி. திகைத்தல் – மயங்குதல்

கண்ணின் கருமணியைப் போன்று அருமையானவனாய், பொற்குன்று ஒப்பவனாய், தியானிக்கும் அடியவர்களுக்கு மிகவும் எளியவனாய், நல்ல நிறமுடைய மாணிக்கமாய், கொடிய பாம்பு ஒன்றினை ஆட்டுபவனாய், வேங்கைத் தோலை உடுத்தவனாய், கோவணம் அணிந்தவனாய், சிந்தாமணியாய், தன்னைச் சரணம் புகுந்தவர்களுக்கு அமுதம் போன்று இனியனாய், பஞ்சகவ்விய அபிடேகத்தை உகப்பவனாய், அடியேன் சரணடைந்த வீடுபேறாகிய செல்வத்தை நல்கும் மணியாய்த் திருமுதுகுன்றத்தில் உறையும் பெருமானை, தீவினையை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே.

2767. காரொளிய கண்டத்தெங் கடவுள் தன்னைக்
காபாலி கட்டங்க மேந்தி னானைப்
பாரொளியை விண்ணொளியைப் பாதாளனைப்
பால்மதியஞ் சூடியோர் பண்பன் தன்னைப்
பேரொளியைப் பெண்பாகம் வைத்தான் தன்னைப்
பேணுவார் தம்வினையைப் பேணி வாங்குஞ்
சீரொளியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.

2

நீலகண்டனாய்க் காபாலக்கூத்து ஆடுபவனாய், கட்டங்கப்படையை ஏந்தியவனாய், நில உலகு, விண் உலகு, பாதாள உலகு இவற்றிற்கு ஒளி வழங்குபவனாய், வெள்ளிய பிறையைச் சூடியவனாய், நற்பண்புக்கு நிலைக்களனாய், தனக்கு நிகரில்லாத ஞான ஒளியை உடையவனாய், பார்வதி பாகனாய், தன்னை விரும்பும் அடியவர்களைத் தானும் விரும்பி, அவர்கள் வினைகளைப் போக்கும் சிறப்பான புகழ் ஒளியை உடையவனாய்த் திருமுதுகுன்றத்தில் உறையும் பெருமானை, தீவினை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே.

**2768.** எத்திசையும் வானவர்கள் தொழநின் றானை
ஏறூர்ந்த பெம்மானை யெம்மா னென்று
பத்தனாய்ப் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித் தானை
முத்தினை யென்மணியை மாணிக் கத்தை
முளைத்தெழுந்த செழும்பவளக் கொழுந்தொப்பானைச்
சித்தனையென் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 3

எல்லாத் திசைகளிலும் நின்று தத்தம் தொழிலைச் செய்து கொண்டிருக்கும் தேவர்களால் தொழப்படுபவனாய், இடப வாகனனாய், அடியேன் என் தலைவன் என்று பக்தியோடு பணியத் தன்னைப் பல நாளும் பாமாலை பாடப் பழகுவித்தவனாய், முத்து, மணி, மாணிக்கம், முளைத்தெழுந்த செம்பவளக் கொத்து என்பன போலக் கண்ணுக்கு இனியவனாய், எல்லாம் செய்ய வல்லவனாய்த் திருமுதுகுன்றத்தில் உறையும் பெருமானை, தீவினை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே.

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் மனம் நின்பால் தாழ்த்துவதும் தாம் உயர்ந்து தம்மை எல்லாம் தொழ வேண்டி" – திருவாசகம்.

**2769.** ஊன்கருவின் உள்நின்ற சோதி யானை
உத்தமனைப் பத்தர்மனம் குடிகொண் டானைக்
கான்திரிந்து காண்டீப மேந்தி னானைக்
கார்மேக மிடற்றானைக் கனலைக் காற்றைத்
தான்தெரிந்தங் கடியேனை யாளாக் கொண்டு
தன்னுடைய திருவடியென் தலைமேல் வைத்த
தீங்கரும்பைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 4

உடம்பில் கருவாகி நின்ற உயிருக்குள் ஒளி வடிவாய் உள்ளவனாய், உத்தமனாய், அடியார் மனத்தில் உறைபவனாய், காட்டில் வேடனாய்த் திரிந்து, அருச்சுனன் பொருட்டுக் காண்டீபம் என்ற வில்லினை ஏந்தியவனாய், கார்மேகம் போன்ற நீலகண்டனாய், கனலாகவும், காற்றாகவும் உள்ளானாய், தானே ஆராய்ந்து அடியேனைத் தன் அடிமையாகக் கொண்டு, தன்னுடைய திருவடிகளை என் தலைமேல் வைத்த கரும்பு போன்ற இனியனாய், திருமுதுகுன்றத்தில் உறையும் பெருமானை, தீவினை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே.

2770. தக்கனது பெருவேள்வி தகர்த்தா னாகித்
தாமரையான் நான்முகனுந் தானே யாகி
மிக்கதொரு தீவளிநீர் ஆகா சம்மாய்
மேலுலகுக் கப்பாலா யிப்பா லானை
அக்கினொடு முத்தினையு மணிந்து தொண்டர்க்
கங்கங்கே அறுசமய மாகி நின்ற
திக்கினையென் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.

5

தக்கனுடைய பெரிய வேள்வியை அழித்து, தாமரையில் உறையும் பிரமனும் தானேயாகி, ஐம்பூதங்களும், மேலுலகும், அதற்கு அப்பாலும் இப்பாலுமாய்ப் பரந்து, சங்கு மணியையும், முத்தையும் அணிந்து, அடியவர்களுக்கு அவர்களுடைய பக்குவ நிலைக்கு ஏற்ப ஆறு வைதிக சமயங்களாகிய வழியானவனாய், திருமுதுகுன்றத்தில் உறையும் பெருமானை, தீவினை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே.

அக்கினையும், முத்தினையும் ஒப்ப அணிந்து என்றது வேண்டுதல் வேண்டாமை இன்மையைப் புலப்படுத்துகிறது.

2771. புகழொளியைப் புரமெரித்த புனிதன் தன்னைப்
பொன்பொதிந்த மேனியனைப் புராணன் தன்னை
விழவொலியும் விண்ணொலியு மானான் தன்னை
வெண்காடு மேவிய விகிர்தன் தன்னைக்
கழலொலியுங் கைவளையும் ஆர்ப்ப ஆர்ப்பக்
கடைதோறு மிடுபிச்சைக் கென்று செல்லுந்
திகழொளியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.

6

புகழாகிய ஒளியை உடையவனாய், திரிபுரத்தை எரித்த தூயோனாய், பொன்னிறம் அமைந்த திருமேனியனாய், பழமையானவனாய், விண்ணின் பண்பாகிய ஒளியும் திருவிழாக்களில் கேட்கப்படும் ஒலியும் ஆகியவனாய், வெண்காட்டில் உறையும் விகிர்தனாய், கால்களில் அணிந்த கழல்களின் ஒலியும் கங்கணங்களின் ஒலியும் சிறக்க வீடுகள் தோறும் பிச்சைக்கு என்று சஞ்சரிக்கும் மேம்பட்ட ஒளியை உடையவனாய், திருமுதுகுன்றத்தில் உறையும் பெருமானை, தீவினை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே.

பதிக மகுடம் – திருமுது குன்றுடையான் தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.

2772. போர்த்தானை யின்னுரிதோல் பொங்கப் பொங்கப்
புலியதளே உடையாகத் திரிவான் தன்னை
காத்தானை ஐம்புலனும் புரங்கள் மூன்றும்
காலனையுங் குரைகழலாற் காய்ந்தான் தன்னை
மாத்தாடிப் பத்தராய் வணங்குந் தொண்டர்
வல்வினைவே றறும்வண்ணம் மருந்து மாகித்
தீர்த்தானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.
7

"ஆனையின் உரிதோல் பொங்கப் பொங்கப் போர்த்துத் திரிவான்" எனக்கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். ஆனையின் தோலை உரித்த போது கொண்ட திருமேனியின் பேரொளியைக் காணமாட்டாது தேவர்கள் கண்ணொளி இழக்க, அத்துன்பம் நீங்குதற் பொருட்டுச் சிவபெருமான் அவ்யானையின் தோலைத் திருமேனி மறையப் போர்த்துக் கொண்டான் என்பது புராண வரலாறாகும்.

யானையை உரித்த தோலைப் போர்த்துத் திருமேனியில் புலித்தோலை உடுத்துத் திரிவானாய், பொறிவாயில் ஐந்தவித்தானாய், முப்புரங்களையும் வெகுண்டவனாய், காலனைத் திருவடியால் உதைத்தவனாய், மேம்பட்ட கூத்தினை நிகழ்த்துபவனாய், பத்தர்களாய் வணங்கும் அடியார்களுடைய வலிய வினைகளும், அவற்றால் நிகழும் நோய்களும், நீங்குமாறு மருந்தாகி அவற்றைப் போக்கியவனாய், திருமுதுகுன்றத்தில் உறையும் பெருமானை, தீவினை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே. மாத்து ஆடி – பெரிதாக ஆடி.

2773. துறவாதே யாக்கை துறந்தான் தன்னைச்
சோதி முழுமுதலாய் நின்றான் தன்னைப்
பிறவாதே எவ்வுயிர்க்குந் தானே யாகிப்
பெண்ணினோ டாணுருவாய் நின்றான் தன்னை
மறவாதே தன்திறமே வாழ்த்துந் தொண்டர்
மனத்தகத்தே அனவரதம் மன்னி நின்ற
திறலானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.
8

அனவரதம் – எப்பொழுதும்

இயல்பாகவே உடம்பு இன்றி இருப்பவனாய், சோதி வடிவினனாய், தான் பிறப்பெடுக்காமல் பிறவி எடுக்கும் உயிர்களுக்கெல்லாம் தானே நலன் செய்பவனாய், பெண்ணுருவும், ஆண் உருவுமாக இருப்பவனாய், தன்னை மறவாமல், தன் பண்பு செயல்களையே வாழ்த்தும் அடியவர்களின் உள்ளத்தே எப்பொழுதும் நிலை பெற்றிருக்கும் பண்பினை உடையவனாய், திருமுதுகுன்றத்தில் உறையும் பெருமானை, தீவினை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே.

2774. பொற்றூணைப் புலால்நாறு கபால மேந்திப்
புவலோக மெல்லா முழிதந் தானை
முற்றாத வெண்டிங்கட் கண்ணி யானை
முழுமுதலாய் மூவுலகும் முடிவொன்
றில்லாக்
கற்றூணைக் காளத்தி மலையான் தன்னைக்
கருதாதார் புரமூன்றும் எரிய அம்பால்
செற்றானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.

9

பொற்றூண் – உயர்வு பற்றி அருளிய உவமை.

புவலோகம் – அதனை முதலாக உடைய மேலுலகங்களைக் குறித்த ஆகுபெயர்.

பொன்மயமான தூண் போல்பவனாய், புலால் நாற்றம் வீசும் மண்டையோட்டினை ஏந்தி மேல் உலகம் எல்லாம் திரிபவனாய், பிறையை முடிமாலையாக அணிந்தவனாய், முழுமுதற் கடவுளாய், எல்லா உலகங்களிலும் விரவி நின்று, தனக்கு இறுதியில்லாது கற்றூண் போல அவற்றைத் தாங்குபவனாய்க் காளத்தி மலையில் உறைபவனாய், பகைவருடைய மும்மதில்களையும் எரியுமாறு வில்லால் அழித்தவனாய், திருமுதுகுன்றம் உறையும் பெருமானை, தீவினை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே.

2775. இகழ்ந்தானை இருபதுதோள் நெரிய வூன்றி
யெழுநரம்பி னிசைபாட இனிது கேட்டுப்
புகழ்ந்தானைப் பூந்துருத்தி மேயான் தன்னைப்
புண்ணியனை விண்ணவர்கள் நிதியந்
தன்னை
மகிழ்ந்தானை மலைமகளோர் பாகம் வைத்து
வளர்மதியஞ் சடைவைத்து மாலோர் பாகந்
திகழ்ந்தானைத் திருமுதுகுன் றுடையான்
தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே.

10

இகழ்ந்தானைப் புகழ்ந்தான்

தன்னை இகழ்ந்து, கயிலையை அசைத்த இராவணனுடைய இருபது தோள்களும் நெரியுமாறு விரலை ஊன்றி, அவன் ஏழு நரம்புகளைக் கொண்டு இசைபாட, அதனை இனிது கேட்டு, அவன் இசை ஞானத்தைப் புகழ்ந்தவனாய், பூந்துருத்தியில் உறையும் புண்ணியனாய், தேவர்களுக்குச் செல்வமாய், பார்வதி பாகனாய் மகிழ்ந்தவனாய், பிறையை சடையில் சூடித் திருமாலைத் திருமேனியின் ஒருபாகமாகக் கொண்டு விளங்குபவனாய், திருமுதுகுன்றத்தில் உறையும் பெருமானை, தீவினை உடைய நான் இதுகாறும் உள்ளவாறு அறியாமல் மயங்கிப் போனேனே.

## 69. திருப்பள்ளியின் முக்கூடல்

ப.தொ.எண் : 282 பதிக எண் : 69

2776. ஆராத இன்னமுதை அம்மான் தன்னை
அயனொடுமா லறியாத ஆதி யானைத்
தாராரும் மலர்க்கொன்றைச் சடையான் தன்னைச்
சங்கரனைத் தன்னொப்பா ரில்லா தானை
நீரானைக் காற்றானைத் தீயா னானை
நீள்விசும்பாய் ஆழ்கடல்க ளேழுஞ் சூழ்ந்த
பாரானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 1

ஆராத – நிறையாத; தெவிட்டாத

தெவிட்டாத இனிய அமுதமாய்த் தலைவனாய், பிரமனும் திருமாலும் அறியாத முதல்வனாய், கொன்றை மாலை அணிந்த சடையனாய், நன்மை தருபவனாய், ஒப்பற்றவனாய், நீராய், தீயாய், காற்றாய், நீண்ட வானமாய், ஆழ்ந்த கடல்கள் ஏழும் சூழ்ந்த நிலனாய்ப் பரந்து இருக்கும் பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

2777. விடையானை விண்ணவர்கள் எண்ணத் தானை
வேதியனை வெண்டிங்கள் சூடுஞ் சென்னிச்
சடையானைச் சாமம்போல் கண்டத் தானைத்
தத்துவனைத் தன்னொப்பா ரில்லா தானை
அடையாதார் மும்மதிலுந் தீயில் மூழ்க
அடுகணைகோத் தெய்தானை அயில்கொள் சூலப்
படையானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 2

சாமம் – கருமை. அயில் – கூர்மை

காளை வாகனனாய், தேவர்களால் தியானிக்கப் படுபவனாய், வேதம் ஓதுபவனாய், வெண்பிறை சூடிய சடையனாய், நீலகண்டனாய், மெய்ப் பொருளாய், ஒப்பற்றவனாய், பகைவருடைய மும்மதிலும் தீயில் மூழ்க அழிக்கும் அம்பினைக் கோத்து எய்தவனாய், கூரிய சூலப் படையை உடையவனாய், உள்ள பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

2778. பூதியனைப் பொன்வரையே போல்வான் தன்னைப்
புரிசடைமேல் புனல்கரந்த புனிதன் தன்னை
வேதியனை வெண்காடு மேயான் தன்னை
வெள்ளேற்றின் மேலானை விண்ணோர்க் கெல்லாம்
ஆதியனை ஆதிரைநன் னாளான் தன்னை
அம்மானை மைம்மேவு கண்ணி யாளோர்
பாதியனைப் பள்ளியின் முக்கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 3

பதிகமகுடம் – பள்ளியின் முக்கூடலானைப் பயிலாதே பாழே நான் உழன்ற வாறே.

நீறு அணிந்தவனாய், பொன்மலை போல்வானாய், முறுக்கேறிய சடையின் கங்கையை மறைத்த தூயோனாய், வேதியனாய், வெண்காட்டில் உறைவானாய், வெண்மையான காளை வாகனனாய், தேவர்களுக்கு எல்லாம் முற்பட்டவனாய், திருவாதிரை நட்சத்திரத்திற்கு முன்னுரிமை பூண்டவனாய், தலைவனாய், மை தீட்டிய கண்களை உடைய பார்வதி பாகனாய், உள்ள பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

**2779.** போர்த்தானை ஆனையின் தோல் புரங்கள் மூன்றும்
பொடியாக எய்தானைப் புனிதன் தன்னை
வார்த்தாங்கு வனமுலையாள் பாகன் தன்னை
மறிகடலுள் நஞ்சுண்டு வானோ ரச்சந்
தீர்த்தானைத் தென்றிசைக்கே காமன் செல்லச்
சிறிதளவில் அவனுடலம் பொடியா வாங்கே
பார்த்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 4

வார் – கச்சு. வனம் (வண்ணம்) – அழகு

யானையின் தோலைப் போர்த்தவனாய், முப்புரங்களும் சாம்பலாகுமாறு அம்பு எய்தவனாய், தூயனாய், கச்சணிந்த முலையை உடைய பார்வதிபாகனாய், அலைகள் கரையை அடைந்து மீண்டுவரும் கடலுள் தோன்றிய விடத்தை உண்டு, தேவர்களின் அச்சத்தைப் போக்கியவனாய், மன்மதன் யமனுலகத்தை அடையுமாறு சிறிது நேரத்தில் அவன் உடலம் சாம்பலாகுமாறு தீத்தோன்ற விழித்தவனாய், உள்ள பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

**2780.** <u>அடைந்தார்தம் பாவங்கள் அல்லல் நோய்கள்
அருவினைகள் நல்குரவு செல்லா வண்ணங்
கடிந்தானைக்</u> கார்முகில்போற் கண்டத் தானைக்
கடுஞ்சினத்தோன் தன்னுடலை நேமி யாலே
தடிந்தானைத் தன்னொப் பாரில்லா தானைத்
தத்துவனை உத்தமனை நினைவார் நெஞ்சில்
படிந்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 5

நேமி – சக்கரம்.
பாவங்கள் – பிராரத்தம். அருவினைகள் – சஞ்சிதம்.
நல்குரவு – வறுமை. படிந்தான் – ஊன்றியிருந்தான்.

தன்னைச் சரணாக அடைந்த அடியவர்பால் பாவங்கள், துன்பங்கள், நோய்கள், பழைய தீவினைகள், வறுமை என்பன அணுகாதவாறு அவற்றைப் போக்கியவனாய், கார்முகில் போன்ற நீலகண்டனாய், மிக்க வெகுளியை உடைய சலந்தரனுடைய உடலைச் சக்கரத்தாலே அழித்தவனாய், ஒப்பற்றவனாய், மெய்ப்பொருளாய், உத்தமனாய், தன்னைத் தியானிக்கும் அடியவர் நெஞ்சில் ஊன்றி யிருப்பவனாய், உள்ள பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

**2781.** கரந்தானைச் செஞ்சடைமேல் கங்கை வெள்ளங்
கனலாடு திருமேனிக் கமலத் தோன்தன்
சிரந்தாங்கு கையானைத் தேவ தேவைத்
திகழொளியைத் தன்னடியே சிந்தை செய்வார்
வருந்தாமைக் காப்பானை மண்ணாய் விண்ணாய்
மறிகடலாய் மால்விசும்பாய் மற்று மாகிப்
பரந்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 6

சிவந்த சடையின் மீது கங்கை வெள்ளத்தை மறைத்தவனாய், தீப் போன்ற சிவந்த தன் திருமேனிக்கண் பிரமனுடைய மண்டை யோட்டினைச் சுமக்கும் கையை உடையவனாய், தேவர்களுக்குத் தலைமைத் தேவனாய், விளங்குகின்ற ஞானப்பிரகாசனாய், தன் திருவடிகளைத் தியானிப்பவர் வருந்தாத வகையில் அவரைக் காப்பவனாய், ஐம்பூதங்களாகி எங்கும் பரவியுள்ளவனாய், உள்ள பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

**2782.** நதியாருஞ் சடையானை நல்லூ ரானை
நள்ளாற்றின் மேயானை நல்லத் தானை
மதுவாரும் பொழில்புடைசூழ் வாய்மூ ரானை
மறைக்காடு மேயானை ஆக்கூ ரானை
நிதியாளன் தோழனை நீடு ரானை
நெய்த்தான மேயானை ஆரூ ரென்னும்
பதியானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே.

7

நிதியாளன் – குபேரன். மதுவாகும் – தேன் ஒழுகுகின்ற

கங்கை தங்கிய சடையினனாய், குபேரனுக்குத் தோழனாய், நல்லூர், நள்ளாறு, நல்லம், தேன் ஒழுகும் பொழில்களால் சூழப்பட்ட வாய்மூர், மறைக்காடு, ஆக்கூர், நீடூர், நெய்த்தானம், ஆரூர் என்னும் திருத்தலங்களில் உறைபவன் ஆகிய பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

**2783.** நற்றவனை நான்மறைக ளாயி னானை
நல்லானை நணுகாதார் புரங்கள் மூன்றுஞ்
செற்றவனைச் செஞ்சடைமேல் திங்கள் சூடுந்
திருவாரூர்த் திருமூலட் டானம் மேய
கொற்றவனைக் கூரரவம் பூண்டான் தன்னைக்
குறைந்தடைந்து **தன்திறமே கொண்டார்க்** கென்றும்
பற்றவனைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே.

8

கொற்றவன் – தலைவன். கூர்அரவம் – மிக்க பாம்புகள். தன்திறமே கொண்டார் – தனது தன்மையையே கடவுள் தன்மையாகத் துணிந்தவர்கள்.

பெருந்தவத்தை உடையவனாய், நான்கு வேத வடிவினனாய், பெரியவனாய், பகைவர் மதில்கள் மூன்றையும் அழித்தவனாய், சிவந்த சடையின் மீது பிறையைச் சூடித் திருவாரூர்த் திருமூலட்டானத்தில் விரும்பி உறையும் வெற்றியனாய், கொடிய பாம்புகளைப் பூண்டவனாய், தம் தேவையைக் கருதித் தன் தன்மையையே கடவுள் தன்மையாகத் துணிந்த அடியவர்களுக்கு என்றும் பற்றுக்கோடாக இருப்பவனாய், உள்ள பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

**2784.** ஊனவனை உடலவனை உயிரா னானை
உலகேழு மானானை உம்பர் கோவை
வானவனை மதிசூடும் வளவி யானை
மலைமகள்முன் வராகத்தின் பின்பே சென்ற
கானவனைக் கயிலாய மலையு ளானைக்
கலந்துருகி நைவார்தம் நெஞ்சி னுள்ளே
பானவனைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே.

9

ஊனவன் – தசை முதலியவாய் உள்ளவன்.
உடலவன் – தசையாலான உடம்பாய் உள்ளவன்.
உயிர் ஆனான் – உடலின்கண் உயிராயிருப்பவன்.
வளவியான் – வளவி என்னும் வைப்புத்தலத்தில் இருப்பவன்.

ஊனாய், உடலாய், உயிராய், ஏழுலகமுமாய், தேவர்கள் தலைவனாய், பரமபதமாகிய வீட்டுலகில் இருப்பவனாய், பிறை சூடியாய், வளவி என்ற தலத்தில் உறைபவனாய், பார்வதி காணப் பன்றியின்பின் போன வேடனாய், கயிலாய மலையில் உள்ளவனாய், ஒன்றுபட்டு இளகி உருகும் அடியவருடைய நெஞ்சில், அப்பொழுது கறந்த பால் போல் இனியவனாய், உள்ள பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

2785. தடுத்தானைத் தான்முனிந்து தன்தோள் கொட்டித்
தடவரையை இருபதுதோள் தலையி னாலும்
எடுத்தானைத் தாள்விரலால் மாள வூன்றி
எழுநரம்பின் இசைபாடல் இனிது கேட்டுக்
கொடுத்தானைப் பேரோடுங் கூர்வாள் தன்னைக்
குரைகழலாற் கூற்றுவனை மாள அன்று
படுத்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 10

தன்னைத் தடுத்த தேர்ப்பாகனை வெகுண்டு, தன் தோள்களைக் கொட்டிக் கயிலை மலையைப் பத்துத் தலைகளாலும் இருபது தோள்களாலும் பெயர்த்த தசக்கிரிவனைத் தன் கால் விரலால் நசுங்குமாறு அழுத்தி, அவன் நரம்பு ஒலியோடு இசைத்த பாடலை மகிழ்வோடு கேட்டு, இராவணன் என்ற பெயரையும், கூரிய வாளையும் கொடுத்தவனாய், கழல் ஒலிக்கும் திருவடியால் கூற்றுவன் மாளுமாறு ஒரு காலத்தில் உதைத்தவனாய், உள்ள பள்ளியின் முக்கூடலில் உறைகின்ற பெருமானைப் பலகாலும் சிந்திக்காமல், பயனில்லாமல் யான் தடுமாறித் திரிந்த செயல் இரங்கத்தக்கது.

## 70. பொது

### திருத்தலக்கோவை (திருப்பதிக்கோவை)

சிவதலங்களை நினைத்தலும், அவைகளின் திருப்பெயரைச் சொல்லுதலுமே பெரும்பயன் தருவதாதல் பற்றி, இத்திருப்பதிகத்தினுள் அவைகளை எடுத்துத் தொகுத்தோதியருளினார். பாவநாசத் திருப்பதிகத்துள் (தி. 4. ப. 15). தலங்களையே எடுத்தோதி அருளினமை காண்க. தலங்களைச் சென்று வழிபடும் மதுகையும், காதலும் இல்லாதார்க்கு இது போலும் திருப்பதிகங்கள் பெரிதும் பயன் தருவனவாமென்க. சேத்திரம் – தலங்களைக் குறிக்கும் வடசொல்லாகும்.

ப.தொ.எண் : 283 பதிக எண் : 70

2786. தில்லைச்சிற் றம்பலமுஞ் செம்பொன் பள்ளி
தேவன் குடிசிராப் பள்ளி தெங்கூர்
கொல்லிக் குளிரறைப் பள்ளி கோவல்
வீரட்டங் கோகரணங் கோடி காவும்
முல்லைப் புறவம் முருகன் பூண்டி
முழையூர் பழையாறை சத்தி முற்றங்
கல்லில் திகழ்சீரார் காளத்தியுங்
கயிலாய நாதனையே காண லாமே. 1

தில்லைச்சிற்றம்பலம், செம்பொன்பள்ளி, தேவன்குடி, சிராப்பள்ளி, தெங்கூர், கொல்லி அறைப்பள்ளி, கோவல் வீரட்டம், கோகரணம், கோடிகா, முல்லைக் கொடிகளை உடைய காடுகளை உடைய முருகன் பூண்டி, முழையூர், பழையாறை, சத்தி, முற்றம், குறிஞ்சி நிலத்தில் திகழ்கின்ற சிறப்பு நிறைந்த காளத்தி ஆகிய திருத்தலங்களில் கயிலாய நாதனைக் காணலாம்.

நிலவுலகின் பொருட்டு இறைவன் திருக்கயிலையில் புவனபதியாய், அறக்கருணையும் மறக்கருணையும் புரிந்து வீற்றிருத்தலின், மக்கள் யாவரும் அவனையே நினைத்தும், வாழ்த்தியும், வணங்கியும் உய்தல் வேண்டும். அனைவர்க்கும் அது கூடாமை அறிந்து, அப்பெருமான் நிலமுழுதும் ஆங்காங்குத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருந்து அருள்புரிகின்றானாதலின், இத்தலங்களில் எல்லாம், "கயிலாய நாதனையே காணலாமே" என்று அருளிச் செய்தார். ஏகாரங்கள் இரண்டனுள் முன்னையது பிரிநிலை; பின்னையது தேற்றம். இதனால், 'சிவபிரானை, நிலவுலகத்தில் எவ்விடத்து எவ்வுருவில் எவ்வாறு கண்டு வழிபடினும், அவ்விடத்தைத் திருக் கயிலையாகவும், ஆங்கு விளங்கும் இறைவனைக் கயிலைத் தலைவனாகவும் கருதி வழிபடுதல் வேண்டும்' என்பது பெறப்பட்டது. இது சமய தீக்கைக்கண்ணே வலியுறுத்தப்படுகின்றது; ஆயினும், அதற்கு மேற்பட்ட தீக்கை முதலியவற்றை அடைந்தோர்க்கும் யாவர்க்கும் இதுவே நெறி என்பதே திருமுறைகளின் முடிபு. 'திருக்கயிலையை நேர்படக் கண்டு வழிபடும் வழிபாடே நிலவுலகில் சிவபிரானை நேர்படக்கண்டு வழிபடும் வழிபாடு' என்பதனானே, நாயனார், இவ்வுடல்மாளுதற்கு முன் எவ்வாறேனும் திருக்கயிலையைக் கண்டு வழிபடுதல் வேண்டும் என்னும் உறைப்புடன் எத்துணை இடையூறுகளாலும் மனம் பின்னிடையாது கயிலை நோக்கிச் செவ்வனஞ் சென்று கொண்டே இருந்தார். ஆயினும், அவர் வாயிலாக அருளிச் செய்ய வேண்டிய இன்றியமையாத அரும்பெருந் திருப்பதிகங்கள் அதுகாறும் அருளிச் செய்யப்படாதிருந்தமையின், அவைகளை அருளுவித்தற் பொருட்டு அவரை இறைவன் இடைவழியினின்றும் மீள எளிதில் தமிழ்நாடு போதரச் செய்தான் என்க.

**2787.** ஆரூர்மூ லட்டானம் ஆனைக் காவும்
ஆக்கூரில் தான்தோன்றி மாடம் ஆவூர்
பேரூர் பிரமபுரம் பேரா வூரும்
பெருந்துறை காம்பீலி பிடவூர் பேணுங்
கூரார் குறுக்கைவீ ரட்டா னம்முங்
கோட்டூர் குடமூக்குக் கோழம் பமுங்
காரார் கழுக்குன்றுங் கானப் பேருங்
கயிலாய நாதனையே காண லாமே. **2**

ஆரூர் மூலட்டானம், ஆனைக்கா, ஆக்கூரில் உள்ள தான் தோன்றி மாடம், ஆவூர், பேரூர், பிரமபுரம், பேராவூர், பெருந்துறை, காம்பீலி, பிடவூர், எல்லோரும் விரும்பும் சிறப்பு மிக்க குறுக்கை வீரட்டம், கோட்டூர், குடமூக்கு, கோழம்பம், மேகங்கள் தங்கும் கழுக்குன்றம், கானப்பேரூர்... இவற்றில் கயிலாய நாதனைக் காணலாம்.

இப்பாடலின் முதலடியில் நான்கு ஊர்களைக் குறிப்பிடுகிறார். நான்கும் 'ஆ' என்ற எழுத்தில் ஆரம்பிக்கின்றன. இரண்டாமடியில் (ஒரு தலத்தைத் தவிர) தலங்களெல்லாம் 'ப'கரமாக பே, பி, பே, பெ, பி என்று ஆரம்பிக்கின்றன. மூன்று நான்காமடிகள் பெரும்பாலும் 'க' கரங்களாக ஆரம்பிக்கிறார். இசையோடு பாடுவதற்காகவும், எளிதில் மனனம் செய்வதற்காகவும் தமிழின் சிறப்பை உணர்த்துவதற்காகவும் இவ்வாறு பாடுகிறார்.

| | |
|---|---|
| **2788.** இடைமரு தீங்கோ யிராமேச் சரம்<br>இன்னம்பர் ஏரிடவை ஏமப் பேறூர்<br>சடைமுடி சாலைக் குடிதக்களூர்<br>தலையாலங் காடு தலைச்சங் காடு<br>கொடுமுடி குற்றாலங் கொள்ளம் பூதூர்<br>கோத்திட்டை கோட்டாறு கோட்டுக் காடு<br>கடைமுடி கானூர் கடம்பந் துறை<br>கயிலாய நாதனையே காண லாமே. 3 | இடைமருது, ஈங்கோய், இராமேச்சரம், இன்னம்பர், ஏர்இடவை, ஏமப்பேறூர், சடைமுடி, சாலைக்குடி, தக்களூர், தலையாலங்காடு, தலைச்சங்காடு, கொடுமுடி, குற்றாலம், கொள்ளம்பூதூர், கோத்திட்டை, கோட்டாறு, கோட்டுக்காடு, கடைமுடி, கானூர், கடம்பந்துறை ஆகிய இவற்றில் கயிலாய நாதனைக் காணலாம். |
| **2789.** எச்சி லிளமர் ஏம நல்லூர்<br>இலம்பையங் கோட்டூர் இறையான் சேரி<br>அச்சிறு பாக்க மளப்பூர் அம்பர்<br>ஆவடு தண்டுறை யழுந்தூர் ஆறை<br>கைச்சினங் கற்குடி கச்சூர் ஆலக்<br>கோயில் கரவீரங் காட்டுப் பள்ளி<br>கச்சிப் பலதளியும் ஏகம் பத்துங்<br>கயிலாய நாதனையே காண லாமே. 4 | எச்சில் இளமர், ஏமநல்லூர், இலம்பையங் கோட்டூர், இறையான்சேரி, அச்சிறுபாக்கம், அளப்பூர், அம்பர், ஆவடுதுறை, அழுந்தூர், ஆறை, கைச்சினம், கற்குடி, கச்சூர், ஆலக்கோயில், கரவீரம், காட்டுப்பள்ளி, கச்சிப்பலதளி, ஏகம்பம்... இவற்றில் கயிலாய நாதனைக் காணலாம். பாடல் பெற்ற 276 தலங்கள் போல நேரடியாகப் பாடல் பெறாமல் வேறு ஏதாவது ஓரிடத்தில் வைத்துப் பாடப்பட்ட தலங்கள் வைப்புத்தலங்கள் எனப்படுகின்றன. தவத்தின் பெயர்கள் மட்டும் சொல்லப் பட்டிருக்கும். முழுப்பாடலோ, பதிகமோ இராது. |
| **2790.** கொடுங்கோளூர் அஞ்சைக் களஞ்செங் குன்றூர்<br>கொங்கணங் குன்றியூர் குரக்குக் காவும்<br>நெடுங்களம் நன்னிலம் நெல்லிக் காவு<br>நின்றியூர் நீடூர் நியம நல்லூர்<br>இடும்பா வனமெழுமூர் ஏழூர் தோழூர்<br>எறும்பியூர் ஏராரு மேம கூடங்<br>கடம்பை யிளங்கோயில் தன்னி னுள்ளுங்<br>கயிலாய நாதனையே காண லாமே. 5 | கொடுங்கோளூர், அஞ்சைக்களம், செங்குன்றூர், கொங்கணம், குன்றியூர், குரக்குக்கா, நெடுங்களம், நன்னிலம், நெல்லிக்கா, நின்றியூர், நீடூர், நியமநல்லூர், இடும்பாவனம், எழுமூர், ஏழூர், தோழூர், எறும்பியூர், அழகிய ஏமகூடம், கடம்பை இளங் கோயில்... ஆகிய இடங்களில் கயிலாய நாதனைக் காணலாம். |
| **2791.** மண்ணிப் படிக்கரை வாழ்கொளி புத்தூர்<br>வக்கரை மந்தாரம் வார ணாசி<br>வெண்ணி விளத்தொட்டி வேள்விக் குடி<br>விளமர் விராடபுரம் வேட்க ளத்தும்<br>பெண்ணை யருட்டுறைதண் பெண்ணா கடம்<br>பிரம்பில் பெரும்புலியூர் பெருவே ளூருங்<br>கண்ணை களர்காறை கழிப்பா லையுங்<br>கயிலாய நாதனையே காண லாமே. 6<br><br>பதிக மகுடம் – கயிலாய நாதனையே காணலாமே | மண்ணிப்படிக்கரை, வாழ்கொளிபுத்தூர், வக்கரை, மந்தாரம், வாரணாசி, வெண்ணி, விளத்தொட்டி, வேள்விக்குடி, விளமர், விராடபுரம், வேட்களம், பெண்ணையாற்றங் கரையிலுள்ள அருட்டுறை, பெண்ணாகடம், பிரம்பில், பெரும்புலியூர், பெருவேளூர், கண்ணை, களர், காறை, கழிப்பாலை முதலிய இடங்களில் கயிலாய நாதனைக் காணலாம். |

| | |
|---|---|
| **2792.** வீழி மிழலைவெண் காடு வேங்கூர்<br>வேதிகுடி விசய மங்கை வியலூர்<br>ஆழி யகத்தியான் பள்ளி யண்ணா<br>மலையாலங் காடும் அரதைப் பெரும்<br>பாழி பழனம்பனந் தாள்பா தாளம்<br>பராய்த்துறை பைஞ்ஞீலி பனங்காட் டூர்தண்<br>காழி கடல்நாகைக் காரோ ணத்துங்<br>கயிலாய நாதனையே காண லாமே. 7 | வீழிமிழலை, வெண்காடு, வேங்கூர், வேதிகுடி, விசயமங்கை, வியலூர், ஆழி, அகத்தியான் பள்ளி, அண்ணாமலை, ஆலங்காடு, அரதைப் பெரும்பாழி, பழனம், பனந்தாள், பாதாளம், பராய்த்துறை, பைஞ்ஞீலி, பனங்காட்டூர், காழி, கடற்கரையை அடுத்த நாகைக்காரோணம்.. ஆகிய இடங்களில் கயிலாயநாதனைக் காணலாம். |
| **2793.** உஞ்சேனை மாகாளம் ஊறல் ஒத்தூர்<br>உருத்திர கோடி மறைக்காட் டுள்ளும்<br>மஞ்சார் பொதியின்மலை தஞ்சை வழுவூர்<br>வீரட்டம் மாதானங் கேதா ரத்தும்<br>வெஞ்சமாக் கூடல்மீ யச்சூர் வைகா<br>வேதீச்சுரம் விவீச்சுரம் வெற்றி யூரும்<br>கஞ்சனூர் கஞ்சாறு பஞ்சாக் கையுங்<br>கயிலாய நாதனையே காண லாமே. 8 | உஞ்சேனை மாகாளம், ஊறல், ஒத்தூர், உருத்திரகோடி, மறைக்காடு, மேகங்கள் பொருந்திய பொதியமலை, தஞ்சை, வழுவூர் வீரட்டம், மாதானம், கேதாரம், வெஞ்சமாக்கூடல், மீயச்சூர், வைகாவூர், வேதீச்சரம், விவீச்சுரம், வெற்றியூர், கஞ்சனூர், கஞ்சாறு, பஞ்சாக்கை... ஆகிய இடங்களில் கயிலாய நாதனைக் காணலாம். |
| **2794.** திண்டீச்சரஞ் சேய்ஞலூர் செம்பொன் பள்ளி<br>தேவூர் சிரபுரஞ்சிற் றேமம் சேறை<br>கொண்டீச்சரங் கூந்தலூர் கூழையூர் கூடல்<br>குருகாவூர் வெள்ளடை குமரி கொங்கு<br>அண்டர் தொழும்அதிகை வீரட் டானம்<br>ஐயா றசோகந்தி ஆமாத் தூருங்<br>கண்டியூர் வீரட்டங் கருகா வூருங்<br>கயிலாய நாதனையே காண லாமே. 9 | திண்டீச்சரம், சேய்ஞலூர், செம்பொன்பள்ளி, தேவூர், சிரபுரம், சிற்றேமம், சேறை, கொண்டீச்சரம், கூந்தலூர், கூழையூர், கூடல் , குருகாவூர், வெள்ளடை, குமரி, கொங்கு, தேவர்கள் தொழும் அதிகை வீரட்டம், ஐயாறு, அசோகந்தி, ஆமாத்தூர், கண்டியூர் வீரட்டம், கருகாவூர்.... ஆகிய இடங்களில் கயிலாய நாதனைக் காணலாம். |
| **2795.** நறையூரிற் சித்தீச் சரம்நள் ளாறு<br>நாரையூர் நாகேச்சரம் நல்லூர் நல்ல<br>துறையூர் சோற்றுத்துறை சூல மங்கை<br>தோணிபுரந் துருத்தி சோமேச் சரம்<br>உறையூர் கடலொற்றி யூரூற் றத்தூர்<br>ஓமாம் புலியூர்ஓட ஏட கத்துங்<br>கறையூர் கருப்பறியல் கன்றாப் பூருங்<br>கயிலாய நாதனையே காண லாமே. 10 | நறையூரிலுள்ள சித்தீச்சரம், நள்ளாறு, நாரையூர், நாகேச்சரம், நல்லூர், மேம்பட்ட துறையூர், சோற்றுத்துறை, சூலமங்கை, தோணிபுரம், துருத்தி, சோமேச்சரம், உறையூர், கடலை அடுத்த ஒற்றியூர், ஊற்றத்தூர், ஓமாம்புலியூர், ஒப்பற்ற ஏடகம், கறையூர், கருப்பறியல், கன்றாப்பூர்.... ஆகிய இடங்களில் கயிலாய நாதனைக் காணலாம். |

2796. புலிவலம் புத்தூர் புகலூர் புன்கூர்
புறம்பயம் பூவணம் பொய்கை நல்லூர்
வலிவலம் மாற்பேறு வாய்மூர் வைகல்
வலஞ்சுழி வாஞ்சியம் மருகல் வன்னி
நிலமலிநெய்த் தானத்தோ **டெத் தானத்தும்**
**நிலவுபெருங் கோயில்பல கண்டால்**
தொண்டீர்
கலிவலிமிக் கோனைக்கால் விரலாற் செற்ற
கயிலாய நாதனையே காண லாமே. 11

எத்தானத்தும் – எடுத்தோதியனவேயன்றிப் பெரியோரால் வணங்கப்படும் எத்தலத்திலும். நிலவு பெருங்கோயில் பல கண்டால் – விளங்குகின்ற பெருமை பொருந்திய திருக்கோயில்கள் பலவும் சென்று காண்பீராகின்.

புலிவலம், புத்தூர், புகலூர், புன்கூர், புறம்பயம், பூவணம், பொய்கைநல்லூர், வலிவலம், மாற்பேறு, வாய்மூர், வைகல், வலஞ்சுழி, வாஞ்சியம், மருகல், வன்னி, வளமான நிலத்தை உடைய நெய்த்தானம் முதலிய எந்த ஊரிலும் விளங்குகின்ற பெருங்கோயில்கள் பலவற்றைக் கண்டால், தொண்டர்களே! செருக்கிய வலிமை மிக்க இராவணனைத் தன் கால் விரலால் நசுக்கிய கயிலாய நாதனை அவ்விடங்களிலெல்லாம் காணலாம்.

கலி – எழுச்சி.

புலிவலம், பொய்கை நல்லூர் – இவை வைப்புத்தலங்கள்.

## 71. பொது (அடைவுத் திருத்தாண்டகம்)

இத்திருப்பதிகம், மேலைத் திருப்பதிகத்துள் ஓதியருளியனவும், பிறவுமாகிய தலங்களைப் பெயர் ஒற்றுமையால் வகைப்படுத்து அருளிச்செய்தது, அப்பெயர்கள்தாம் சத்தகோடி மகாமந்திரங்கள் போல ஒரு பெற்றியனவான பல்வேறு முடிபுடையனவாய் இயைந்து, ஓதுவார் உள்ளத்தில் எளிதிற் பொருந்தி நின்று பயன் தருமாகலின், சுவாமிகளும் இதனுள் பெரும்பாலும் அத்தலப் பெயர்களைச் சொல்லுதலையே வலியுறுத்தி அருளினார். 'அடைவு, முறைமை' என்பன ஒரு பொருட் சொற்கள். முறைமையாவது ஒரு தன்மைப்பட்ட பொருள்கள் தொடர்ந்து வருதல்.

அடைவு – புகலாக அடையத்தகுமிடம். பிறவி வேதனைக்கு அஞ்சிய உயிர்கள் வந்தடையுமிடங்கள் சிவாலயங்களே. அத்திருத்தலங்கள் இப்பதிகத்தில் தொகுத்து வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளன.

**ப.தொ.எண் : 284** **சிவம் உறை பள்ளிகள்** **பதிக எண் : 71**

2797. பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன் றெய்து
புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான்
பொற்சக்
கரப்பள்ளி திருக்காட்டுப் பள்ளி கள்ளார்
கமழ்கொல்லி யறைப்பள்ளி கலவஞ் சாரற்
சிரப்பள்ளி சிவப்பள்ளி செம்பொன் பள்ளி
செழுநனி பள்ளிதவப் பள்ளி சீரார்
பரப்பள்ளி யென்றென்று பகர்வோ ரெல்லாம்
பரலோகத் தினிதாகப் பாலிப் பாரே. 1

மேருவை வில்லாகக் கொண்டு திரிபுரங்களை அம்பால் எய்தானது பொருப்பள்ளி, வருந்தி அழியுமாறு சலந்தரனைச் சக்கரத்தால் பிளந்தானது அழகிய சக்கரப்பள்ளி, திருக்காட்டுப்பள்ளி, மது நிறைந்து மலர்கள் மணம் கமழும் கொல்லியறைப்பள்ளி, மயில்கள் ஆடும் சாரலினை உடைய சிராப்பள்ளி, சிவப்பள்ளி, செம்பொன்பள்ளி, செழிப்புமிக்க நனிபள்ளி, தவப்பள்ளி புகழ்பொருந்திய பரப்பள்ளி என்று இத்தலப்பெயர்களைப் பலகாலும் சொல்லுவார் எல்லாரும் மேலான தேவருலகை அடைந்து அதன் இனிமைமிகக் காப்பாராவார்.

## அட்ட வீரட்டத்தலங்கள்

**2798.** காவிரியின் கரைக்கண்டி வீரட் டானங்
கடவூர்வீ ரட்டானங் காமருசீ ரதிகை
மேவியவீ ரட்டானம் வழுவைவீ ரட்டம்
வியன்பறியல் வீரட்டம் விடையூர்திக் கிடமாம்
கோவல்நகர் வீரட்டங் குறுக்கைவீ ரட்டங்
கோத்திட்டைக் குடிவீரட் டான<u>மிவை கூறி</u>
<u>நாவில்நவின் றுரைப்பார்க்கு நணுகச் சென்றால்</u>
<u>நமன்தமருஞ் சிவன்தமரென் றகல்வர்</u>
<u>நன்கே.</u> 2

காவிரியின் கரையிலுள்ள கண்டியூர் வீரட்டானம், கடவூர் வீரட்டானம், விரும்பத்தக்க புகழினை உடைய அதிகை வீரட்டானம், வழுவூர் வீரட்டானம், பரப்பு மிக்க பறியலூர் வீரட்டானம், இடபத்தை ஊர்தியாக உடைய சிவபெருமானுக்குரிய இடமாகிய கோவலூர் வீரட்டானம், குறுக்கை வீரட்டானம், தலைமையும் மேன்மையுமுடைய விற்குடி வீரட்டானம் என்னும் வீரட்டானங்கள் எட்டினையும் முறைப்பட முன்னர் ஒருமுறை மொழிந்து பின்னர் அம்முறையே நாவில் பழகிப் பலகாலும் போற்றுவார்க்கு அருகில் இயம தூதர்கள் ஒருகால் செல்ல நேரிடின் இவர் சிவபெருமானுக்கு அடியர் என்று உடனே உணர்ந்து அவரைவிட்டு வெகு தொலைவு அகல நீங்குவர்.

60, 75, 80, 100 அகவைப் பூரணங்களைக் கொண்டாட விரும்பும் அன்பர்களுக்கு நாண் மங்கலங் செய்யுங் காலை இப்பாடலை ஓதிச் செய்ய வேண்டுமென்பது மணிவாசகப் பெருமன்றத்தின் தலைவரும், நமது குருநாதரும், முதுமுனைவருமான பேராசான் ந.இரா. சென்னியப்பனாரின் அன்புக் கட்டளை. இயமதூதர் நம்மை அணுகாதிருக்க எவ்வளவு நல்ல பாடலைத் தேர்வு செய்து நமக்குக் கொடுத்துள்ளார் என்பதை நாமெல்லாம் உணர்ந்து படித்து, கூறி அனுபவித்துச் சிவகணங்களை எதிர்பார்த்துக் காத்திருப்போமாக!

## ‘குடி’ எனத் திருப்பெயர் நிறைவுறும் சிவத்தலங்கள்

**2799.** நற்கொடிமேல் விடையுயர்த்த நம்பன் செம்பங்
குடிநல்லக் குடிநளிநாட் டியத்தான் குடி
கற்குடிதென் களக்குடிசெங் காட்டங் குடி
கருந்திட்டைக் குடிகடையக் குடிகா
ணுங்கால்
விற்குடிவேள் விக்குடி நல்வேட்டக் குடி
வேதிகுடி மாணிகுடி விடைவாய்க் குடி
புற்குடிமா குடிதேவன் குடிநீலக்குடி
புதுக்குடியும் போற்றஇடர் போகு மன்றே. 3

நல்ல இடபக் கொடியை மேலே உயரத் தூக்கியவனும், நம்புதற்குரியவனுமாகிய சிவபெருமானுடைய செம்பங்குடி, நல்லக்குடி, பெருமைமிக்க நாட்டியத்தான்குடி, கற்குடி, இனிய களக்குடி, செங்காட்டங்குடி, கருந்திட்டைக்குடி, கடையக்குடி ஆகியவற்றோடு ஆராயுங்கால் குடியில் முடியும் ஊர்களாகிய விற்குடி, வேள்விக்குடி, நன்மைமிகு வேட்டக்குடி, வேதிகுடி, மாணிகுடி, விடைவாய்க் குடி, புற்குடி, தேவன்குடி, நீலக்குடி, புதுக்குடி என்பனவற்றையும் புகழ்ந்து கூறத் துன்பம் நீங்கும்.

## சிவனுறை ஊர்கள்

2800. பிறையூருஞ் சடைமுடியெம் பெருமா னாரூர்
பெரும்பற்றப் புலியூரும் பேரா வூரும்
நறையூரும் நல்லூரும் நல்லாற் றூரும்
நாலூருஞ் சேற்றூரும் நாரை யூரும்
உறையூரும் ஒத்தூரும் ஊற்றத் தூரும்
அளப்பூரோ மாம்புலியூ ரொற்றி யூரும்
துறையூருந் துவையூருந் தோழூர் தானுந்
துடையூருந் தொழஇடர்கள் தொடரா
வன்றே. 4

பிறை தவழும் சடைமுடிச் சிவபெருமானுடைய ஆரூர், பெரும்பற்றப்புலியூர், பேராவூர், நறையூர், நல்லூர், நல்லாற்றூர், நாலூர், சேற்றூர், நாரையூர், உறையூர், ஒத்தூர், ஊற்றத்தூர், அளப்பூர், ஓமாம்புலியூர், ஒற்றியூர், துறையூர், துவையூர், தோழூர், துடையூர் என்னுமிவற்றைத் தொழத் துன்பங்கள் தொடர மாட்டா.

## சிவனுறையும் கோயில்கள்

2801. பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றுங்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியற் பொருப்பனைய கொகுடிக்
கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்
கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும்
அன்றே. 5

நீர்ப்பெருக்கினை உடைய கங்கையாற்றைச் சடையிலணிந்த சிவபெருமான் திகழும் பெருங்கோயில்கள் எழுபத்தெட்டுடன், கடம்பூர் கரக்கோயில், மணங்கமழும் பொழில்கள் சூழ்ந்த ஞாழற்கோயில், கருப்பறியலூரில் மலை போன்று விளங்கும் கொகுடிக்கோயில், அந்தணர்கள் வேதம் ஓதி வழிபாடு செய்து துதிக்கும் இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயிலாகிய திருக்கோயில் என்னும் சிவபெருமானுறையும் கோயில்களை வலம் வந்து படிமீது வீழ்ந்து வணங்கத் தீவினைகள் யாவும் தீரும்.

## 'காடு' எனத் திருப்பெயர் நிறைவுறும் சிவத்தலங்கள்

2802. மலையார்தம் மகளொடுமா தேவன் சேரும்
மறைக்காடு வண்பொழில்சூழ் தலைச்சங்
காடு
தலையாலங் காடுதடங் கடல்சூ ழந்தண்
சாய்க்காடு தள்ளுபுனற் கொள்ளிக் காடு
பலர்பாடும் பழையனூ ராலங் காடு
பனங்காடு பாவையர்கள் பாவம் நீங்க
விலையாடும் வளைதிளைக்கக் குடையும்
பொய்கை
வெண்காடும் அடையவினை வேறா மன்றே.
6

மலையரசன் மகளாகிய பார்வதியொடு மகா தேவன் மகிழ்ந்துறையும் மறைக்காடு, வளப்பம் மிக்க சோலைகள் சூழ்ந்த தலைச்சங்காடு, தலையாலங்காடு, பரந்த கடலால் சூழப்பட்டதும், அழகியதும், குளிர்ந்ததுமாகிய சாய்க்காடு. மோதித்தள்ளும் நீரையுடைய கொள்ளிக்காடு, பலரும் புகழும் பழையனூர் ஆலங்காடு, பனங்காடு, பாவை போன்ற பெண்கள் தங்கள் பாவம் நீங்குதற்காக விலை ஏறப்பெற்ற தம் வளையல்கள் கலந்து ஒலிக்கும்படி ஆடும் பொய்கைகளை உடைய வெண்காடு ஆகியவற்றை அடைந்து வணங்க வினைகள் விட்டு நீங்கும்.

## சிவனுறை வாயில்கள்

2803. கடுவாயர் தமைநீக்கி யென்னை யாட்கொள்
கண்ணுதலோன்நண்ணுமிடம்
அண்ணல்வாயில்
நெடுவாயில் நிறைவயல்சூழ் நெய்தல் வாயில்
நிகழ்முல்லை வாயிலொடு ஞாழல் வாயில்
மடுவார்தென் மதுரைநக ரால வாயில்
மறிகடல்சூழ் புனவாயில் மாடநீடு
குடவாயில் குணவாயி லான வெல்லாம்
புகுவாரைக் கொடுவினைகள் கூடா
வன்றே. 7

கடுக்காயைத் தின்னும் வாயினராகிய சமணரை நீக்கி என்னை அடிமை கொள்ளும் கண்ணுதற் கடவுளாகிய சிவபெருமான் விரும்பித் தங்கும் இடங்களாகிய அண்ணல்வாயில், நெடுவாயில், பயிர் நிறைந்த வயல் சூழ்ந்த நெய்தல்வாயில், நிலவும் முல்லை வாயில், ஞாழல்வாயில், வையை நீர் பொருந்திய அழகிய மதுரை நகரத்து மன்னும் ஆலவாயில், அலை எழுந்து மடங்கும் கடல்சூழ்ந்த புனவாயில், மாடங்கள் உயர்ந்து தோன்றும் குடவாயில், குணவாயில் ஆகிய இவற்றுள் எல்லாம் புகுந்து வணங்குவாரைப் பாவச் செயல்கள் ஒரு நாளும் பற்றமாட்டா.

## இறைவனுறை சுரம் பல

2804. நாடகமா டிடநந்தி கேச்சுரமா காளேச்
சுரநாகேச் சுரநாக ளேச்சுரநன் கான
கோடீச்சுரங் கொண்டீச் சுரந்திண் டீச்சுரங்
குக்குடேச் சுரமக்கீச் சுரங்கூறுங்கால்
ஆடகேச் சுரமகத்தீச் சுரமய னீச்சுர
மத்தீச்சுரஞ் சித்தீச்சுர மந்தண் கானல்
ஈடுதிரை யிராமேச்சுர மென்றென் றேத்தி
யிறைவனுறை சுரம்பலவு மியம்பு வோமே.
8

கூத்தப் பெருமானது இடமாகிய நந்திகேச்சுரம், மாகாளேச்சுரம், நாகேச்சுரம், நாகளேச்சுரம், நன்மை பொருந்திய கோடீச்சுரம், கொண்டீச்சுரம், திண்டீச்சுரம், குக்குடேச்சுரம், அக்கீச்சுரம் என்றுமிவற்றைக் கூறுமிடத்து உடன்வரும் ஆடகேச்சுரம், அகத்தீச்சுரம், அயனீச்சுரம், அத்தீச்சுரம், சித்தீச்சுரம், அழகிய குளிர்ந்த கடற்கரையில் முத்து பவளம் முதலியவற்றைக் கொணர்ந்து போடும் திரைகள் சூழ்ந்த இராமேச்சுரம் என்றெல்லாம் இறைவன் தங்குகின்ற ஈச்சுரம் பலவற்றையும் கூறி அவனைப் புகழ்வோமாக.

## இறைவன் சுரம் – ஈச்சுரம்

(பேராசிரியர் திரு. ஆ. சிவலிங்கனார், மயிலம்)

இதில் நந்திகேச்சுரம் முதல் இராமேச்சுரம் வரையிலும் பதினான்கு ஈச்சுரங்கள் கூறப்பட்டன. "ஈச்சுரம்" என்ற சொல் "இறைவன் உள்ள கோயில்" என்னும் பொருளில் வழங்கப்படுகின்றது. ஈஸ்வரன் உள்ள இடம் ஈஸ்வரம் என்பர். ஈஸ்வரம் என்பது – ஈச்வரம் – ஈச்சுரம் – ஈசுவரம் என்பனவாக திரிந்து வரும் என்றும் கூறுவர். ஆனால் நம் அப்பரடிகள் ஈச்சுரம் என்பதை வடசொல் எனக் கொண்டார் என்று கூறுதற்கில்லை. நந்திகேச்சுரம் முதலானவற்றை "இறைவனுறை சுரம்" என்றார். ஈச்சுரம் என்ற சொல்லைப்

பிரித்துச் சுரம் எனத் தனித்துக் கூறுதல் பொருந்தாது. அதனால் ஈச்சுரம் என்ற சொல் இறைவனுடைய சுரம் என்ற பொருளுடையதானால்தான், 'சுரம்' எனத் தனியாகப் பிரிக்க இயலும். 'இறைவன்', 'சுரம்' என்ற இரு சொற்கள் மருவி, 'அருமருந்தன் பிள்ளை' என்னும் சொற்கள் 'அருமந்த பிள்ளை' என மருவியது போல் 'ஈச்சுரம்' என்றாயிருக்க வேண்டும். அதனால்தான் அப்பரடிகள் "இறைவன் உறை ஈச்சுரம் பலவும்" என்னாமல் "இறைவன் உறை சுரம் பலவும்" என்றார்.

சுரம் என்ற சொல்லைத் தனிச் சொல்லாகவே கொண்டு கூறினார் அடிகள் என்பதற்கு, அவருடைய மேற்பாடலின் முன்பின் பாடல்களும் சான்று பகரும். "பெருக்காறு சடைக்கரந்த" என்று தொடங்கும் தாண்டகத்தில் கரக்கோயில் முதலாகத் திருக்கோயில் இறுதியாகக் கூறி அவற்றை இறுதியில் "சிவனுறையும் கோயில்" என்று பாடியுள்ளார்.

"கந்தமாதனம் கயிலை" என்று தொடங்கும் பாடலில் கந்தமாதனம் முதலாக அத்தமலை யிறுதியாகக் கூறி அவற்றை "இந்து சேகரன் உறையும் மலைகள்" என்றார். எனவே கோயில்களின் முழுபெயர்களைக் கூறி இறுதியில் அப்பெயர்களின் இறுதிச்சொல்லை மட்டும் கொண்டு இறைவனுக்குரியதாகக் கூறியதாகக் காணலாம். அதுபோலவே மேற்பாடலில் பல ஈச்சுரங்களைக் கூறி, இறுமுடிபாகத்தில் 'இறைவன் உரையும் சுரம்' என்றார். அதனால் சுரம் என்ற சொல்லை ஒரு பொருள் பொருந்திய தனிச்சொல்லாகவே கொண்டார் அடிகள் எனலாம். அன்றியும் இறைவனுடைய குடி, ஊர், காடு, வாயில், ஆறு, குளம், கா முதலியவற்றால் முடியும் ஊர்களையும் கூறியமைக்கேற்பச் சுரம் என்ற சொல்லால் முடிந்த ஊர்களையும் கூறினார். அதனால் சுரம் என்றது ஒரு தனிச்சொல் எனலாம். எனவே ஈச்சுரம் என்பது, 'இறைவன்', 'சுரம்' என்ற இரண்டு சொற்களின் மரூஉ எனலாம்.

இனி "ஈச்சுரம்" என்றதன் பொருளைக் காண்போம். சுரம் என்பதற்குப் பல பொருள் உண்டு. ஒன்று காடு என்பதாம்.

"சுரம் போழ்ந்த இகலாற்றல்" (மதுரைக் காஞ்சி, ருஅ)

என்ற விடத்தில் 'சுரம்' என்பது 'காடு' என்ற பொருளில் வந்தது காண்க. பழங்காலத்தில் ஊர்களின் பெயர்கள் பலவகையில் அமைந்தன. அவற்றுள் ஒருவகை காடு பற்றியது. தில்லை மரங்கள் நிறைந்த காட்டுப்பகுதி தில்லை என்றும், மருத மரங்கள் நிறைந்த பகுதி மருதூர் என்றும் பெயர் பெற்றன. காடு கெடுத்து நாடாக்கிய காலத்தில் காட்டின் பெயரே நாட்டுக்கு – ஊர்க்கு வைக்கப்பட்டது. காடுகெடுத்த காலங்களில் அக்காட்டில் இலிங்கங்கள் காணப்பட்டன. இலிங்கம் ஒன்று காணப்பட்ட காட்டுப் பகுதியை இறைவன் சுரம் என்றார்கள். அக்காட்டுப் பகுதி மரத்தின் பெயரால் ஊர் அமையவே அங்கிருந்த இறைவன் இடம் (கோயில்) இறைவன் சுரம் எனப்பட்டது. இறைவன் சுரம் என்பது மருவி ஈச்சுரம் என்றாகியது. பின்னர் ஈச்சுரம் என்றால் கோயில் என்ற பொருள் வந்தது. பின்னர் அது பொதுப் பெயராகிக் காட்டில் இருந்த கோயில்களுக்கு மட்டுமின்றி, எல்லாக் கோயில்களுக்கும் வழங்கும் பெயராகியது. அதனாலேயே ஈடுதிரை இராமேச்சுரமும் அப்பெயர் பெற்றது.

இப்பால் ஈஸ்வரன் உள்ள இடம் ஈஸ்வரம் என்ற வடசொல்லின் கருத்தும் கோயிலைச் சுட்டுதலின், ஈச்சுரம் என்ற தமிழ் மரூஉச் சொல்லுக்கும் ஈஸ்வரம் என்பது ஈச்சுரம் எனவந்த வடசொல்லுக்கும் வேறுபாடில்லாமல் அவை வழக்கத்தில் வந்தன. ஆனால் ஈச்சுரம் என்பது வடசொல் என்ற எண்ணமே பெரிதும் நிலைப்பதாயிற்று. அப்பரடிகள் இறைவன் உறை ஈச்சுரம் என்னாமல் இறைவனுறைசுரம் என்றமையால், அவர் கருத்து, 'ஈச்சுரம் என்பது தமிழ்ச் சொல்லே' என்பதாகலாம்.

## இந்துசேகரன் உறையும் மலைகள்

2805. கந்தமா தனங்கயிலை மலைகே தாரங்
காளத்தி கழுக்குன்றங் கண்ணா ரண்ணா
மந்தமாம் பொழிற்சாரல் வடபற்பதம்
மகேந்திரமா மலைநீலம் ஏம கூடம்
விந்தமா மலைவேதஞ் சையம் மிக்க
வியன்பொதியின் மலைமேரு உதயம் அத்தம்
இந்துசே கரனுறையும் மலைகள் மற்றும்
ஏத்துவோம் இடர்கெடநின் றேத்து வோமே. 9

கந்தமாதனம், கயிலைமலை, கேதாரம், காளத்தி, கழுக்குன்றம், இடமகன்ற அண்ணாமலை, தென்றல் தவழும் பொழில்களை உடைய சரிவுகளுடன் கூடிய வடபற்பதம், மகேந்திரமாமலை, நீலமலை, ஏமகூடமலை, விந்தமாமலை, வேதமலை, சையமலை, சோலைகள் மிக்க அகன்ற பொதியின் மலை, மேருமலை, உதயமலை, அத்தமலை ஆகிய இவையும் பிறவுமாகிய சந்திரனை முடியிலணிந்த சிவபெருமானுடைய மலைகளைப் புகழ்வோம். எம் இடர்கெடத் திசைநோக்கி நின்று அவற்றைப் புகழ்ந்து போற்றுவோம்.

## கள்ளார்ந்த கொன்றையான் நின்ற ஆறும், குளமும், களமும், காவும்

2806. நள்ளாறும் பழையாறுங் கோட்டாற் றோடு
நலந்திகழும் நாலாறுந் திருவை யாறுந்
தெள்ளாறும் வளைகுளமுந் தளிக்குளமு நல்
லிடைக்குளமுந் திருக்குளத்தோ டஞ்சைக் களம்
விள்ளாத நெடுங்களம்வேட் களம்நெல் லிக்கா
கோலக்கா ஆனைக்கா வியன்கோடிகா
கள்ளார்ந்த கொன்றையான் நின்ற ஆறுங்
குளம்களங்கா என அனைத்துங் கூறுவோமே. 10

நள்ளாறு, பழையாறு, கோட்டாறு, நன்மை நிலவும் நாலாறு, திருஐயாறு, தெள்ளாறு, வளைகுளம், தளிக்குளம், நல்ல இடைக்குளம், திருக்குளம், அஞ்சைக்களம், குறையாத சிறப்புடைய நெடுங்களம், வேட்களம், நெல்லிக்கா, கோலக்கா, ஆனைக்கா, பரந்து திகழும் கோடிகா என்றெல்லாம் தேன் நிறைந்த கொன்றைப் பூ மாலை அணிந்த சிவபெருமான் விளங்கும் ஆறு, குளம், களம், கா ஆகிய எல்லாவற்றையும் கூறுவோம்.

## சிவபெருமான் வீற்றிருக்கும் துறைகள்

2807. கயிலாய மலையெடுத்தான் கரங்க ளோடு
சிரங்களுரம் நெரியக்கால் விரலாற் செற்றோன்
பயில்வாய பராய்த்துறைதென் பாலைத் துறை
பண்டெழுவர்தவத்துறை வெண்டுறைபைம் பொழில்
குயிலாலந் துறைசோற்றுத் துறைபூந் துறை
பெருந்துறையுங் குரங்காடு துறையி னோடு
மயிலாடு துறைகடம்பந் துறைஆவடு
துறைமற்றுந் துறையனைத்தும் வணங்கு வோமே. 11

கயிலாய மலையை எடுத்த இராவணனுடைய கரங்களும் சிரங்களும் வலிமை சிதையும் வண்ணம் தன் கால் விரலால் அழிவுண்டாக்கிய சிவபெருமான் பயின்றுறையும் பராய்த்துறை, தென்பாலைத் துறை, எழுமுனிவர் பண்டுதவம் செய்த தவத்துறை, வெண்டுறை, பசிய சோலையிடத்துக் குயில்கள் வாழும் ஆலந்துறை, சோற்றுத்துறை, பூந்துறை, பெருந்துறை, குரங்காடுதுறை, மயிலாடுதுறை, கடம்பந்துறை, ஆவடுதுறை ஆகியவற்றையும் துறை என்னும் பெயர் தாங்கும் மற்றைத் திருத்தலங்களையும் வணங்குவோம்.

## 72. திருவலஞ்சுழி

ப.தொ.எண் : 285

பதிக எண் : 72

2808. அலையார் புனற்கங்கைநங்கை காண
அம்பலத்தில் அருநட்ட மாடி வேடந்
தொலையாத வென்றியார் நின்றி யூரும்
நெடுங்களமும் மேவி விடையை மேல்கொண்
டிலையார் படைகையி லேந்தி யெங்கும்
**இமையவரும் உமையவளும் இறைஞ்சி யேத்த**
மலையார் திரளருவிப் பொன்னி சூழ்ந்த
வலஞ்சுழியே புக்கிடமா மருவி னாரே. 1

அலைபொருந்திய நீரையுடைய கங்கையை உமையம்மை காணுமாறு அம்பலத்தில் பிறர் ஆடுதற்குரிய திருக்கூத்தை ஆடி, அக்கூத்து வேடம் ஒரு காலும் விட்டு நீங்காத வெற்றியையுடைய சிவபெருமான் நின்றியூரையும், நெடுங்களத்தையும் விரும்பிப் பொருந்தி, இடபவாகனத்தை ஏறி இலைவடிவு கொண்ட முனைகளையுடைய படைக் கலங்களை கையிலேந்தி, எல்லா இடங்களிலும் நிறைந்து, இமையவரும், அருகிலிருந்து, உமையும் வணங்கித் துதிக்க மலையின் கண் நிறைந்து திரண்ட அருவியால் ஆகிய காவிரியாறு சூழ்ந்த வலஞ்சுழியைத் தாம் புகுந்துறையும் இடமாக விரும்பி மேற்கொண்டார்.

## 73. திருவலஞ்சுழியும் - திருக்கொட்டையூர்க் கோடீச்சரமும்

இத்திருப்பதிகமும், மேல் வந்த சில திருப்பதிகங்கள் போல 'கண்டாய்' என்னும் முடிபுடைய தொடர்களால் இறைவன் இயல்பினை வகுத்தருளிச் செய்தது.

இது 'திருவலஞ்சுழி, திருக்கொட்டையூர்க் கோடீச்சரம்' என்னும் இருதலங்கட்கு உரியதாகவும், திருக்கொட்டையூர்க் கோடீச்சரம் ஒன்றற்கே உரியதாகவும் பதிப்புக்களிற் காணப்படுகின்றது. எல்லாத் திருத்தாண்டகங்களிலும் திருவலஞ்சுழித்தலம் ஒன்றே தவறாது உடன் குறிக்கப்படுதலின், அவ்விரு தலங்கட்கும் உரியதாகக் கொள்ளுதலே பொருந்துவதாகும். இவ்விரு தலங்களும் தொடர்புடையன என்பது புராணத்தார்க்கும் கொள்கை; அஃதாவது, 'பிலத்துட் சென்று மறைந்த காவிரியாறு, கொட்டையூரில் தவம் செய்திருந்த, 'ஏரண்டர்' என்னும் முனிவராலே வலஞ்சுழியில் மேலெழுந்துபெருகிற்று' என்பது.

ப.தொ.எண் : 286

பதிக எண் : 73

2809. கருமணிபோற் கண்டத் தழகன் கண்டாய்
கல்லால் நிழற்கீ ழிருந்தான் கண்டாய்
பருமணி மாநாகம் பூண்டான் கண்டாய்
பவளக்குன் றன்ன பரமன் கண்டாய்
வருமணிநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாதேவன் கண்டாய் வரதன் கண்டாய்
குருமணி போல் அழகமருங் கொட்டையூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 1

நிறம் வாய்ந்த மணிபோன்ற அழகுடையவனும், கொட்டையூரிலுள்ள கோடீச்சரத்துறையும் தலைவனுமாகிய சிவபெருமான் நீலமணி போற்றிகழும் கரிய கழுத்தால் அழகு மிக்கவனும் கல்லால மரநிழலில் இருந்தவனும், பருத்த மணிகளை உடைய பெரிய பாம்பினை அணியாகப் பூண்டவனும், பவளக்குன்று போல் காட்சியளிக்கும் மேலோனும், தெளிந்த நீர் ஓடிவரும் காவிரியின் கரையில் உள்ள வலஞ்சுழியில் உறைபவனும், தேவர்க்கெல்லாம் தலைவன் ஆகிய தேவனும், யாவர்க்கும் வரமருளும் வரதனும் ஆவான்.

கருமணி – நீலமணி. பருமணி – பருத்த (பெரிய) மாணிக்கம். மணிநீர் – அழகிய நீர்.
குருமணி – நிறம் வாய்ந்த மணி. கோடீச்சரம் – கோயிலின் பெயர்.

பஞ்சபூதங்களில் தீ மேல்நோக்கி எரியும். நீர் கீழ்நோக்கிப் பாயும். ஆனால், திருவலஞ்சுழியில் காவிரி வலஞ்சுழித்து மேலெழுந்தது. இத்தலத்தில் காவிரி நாகராசனாம் ஆதிசேடனது பிலத்துவாரத்தில் இறங்கிவிடச் சோழ மன்னனின் வேண்டுகோளுக்கிரங்கி ஏரண்ட முனிவர் அப்பிலத்தில் இறங்க காவிரி வலஞ்சுழித்து மேலெழுந்தது. ஏரண்ட முனிவர் பின்பு கொட்டையூரில் கரையேறினார் என்ற வரலாறு இருப்பதால்தான் அப்பர்சுவாமிகள் இவ்விரண்டு தலங்களையும் இணைத்துப் பாடினாரோ? ஆனால் சில நூல்களிலும், வலம்புரம் தல வரலாற்றிலும் ஏரண்ட முனிவர் அங்கு கரையேறியதாகச் சொல்லப்படுகிறது. உரிய கருத்தை உரிய நேரத்தில் திருவருள் தெரியப்படுத்தும்.

2810. கலைக்கன்று தங்கு கரத்தான் கண்டாய்
கலைபயில்வோர் ஞானக்கண் ஆனான் கண்டாய்
அலைக்கங்கை செஞ்சடைமேல் ஏற்றான் கண்டாய்
அண்ட கபாலத்தப் பாலான் கண்டாய்
மலைப்பண்டங் கொண்டு வருநீர்ப் பொன்னி
வலஞ்சுழியின் மேவிய மைந்தன் கண்டாய்
குலைத்தெங்கஞ் சோலைசூழ் கொட்டையூரிற்
கோடீச்ச ரத்துறையுங் கோமான் தானே.

2

கலைக்கன்று – மான்கன்று. கபாலம் – தலையோடு. மலைப்பண்டம். மலையில் விளையும் பொருள்களான அகில், சந்தனம், தெங்கு முதலியன.

குலைகளை உடைய தெங்குகள் நிறைந்த சோலையால் சூழப்பட்ட கொட்டையூரிலுள்ள கோடீச்சரத்துறையும் தலைவன் ஆகிய சிவபெருமான் மான்கன்றை ஏந்திய கரத்தனும், கலைகளைப் பயில்வோருக்கு ஞானக் கண்ணாய் விளங்குபவனும், அலைகள் பொருந்திய கங்கையாற்றைத் தன்செஞ் சடையில் ஏற்றவனும், அண்டச் சுவரின் உச்சிக்கும் அப்பாலவனும், மலைபடு பொருள்களை அடித்துக் கொண்டுவரும் நீரையுடைய காவிரியின் கரையிலுள்ள வலஞ்சுழியிடத்து மேவிய மைந்தனும் ஆவான்.

2811. செந்தா மரைப்போ தணிந்தான் கண்டாய்
சிவன்கண்டாய் தேவர் பெருமான் கண்டாய்
பந்தாடு மெல்விரலாள் பாகன் கண்டாய்
பாலோடு நெய்தயிர்தே னாடி கண்டாய்
மந்தாரம் உந்தி வருநீர்ப் பொன்னி
வலஞ்சுழியின் மன்னு மணாளன் கண்டாய்
கொந்தார் பொழில்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச்ச ரத்துறையுங் கோமான் தானே.

3

மலர்களுட் சிறந்தது தாமரை. தாமரை மலர்களுள்ளும் சிறந்தது செந்தாமரை. ''பூவிற்குத் தாமரையே'' திருவள்ளுவமாலை. மந்தாரம் – ஒரு வகை மரம்.

உந்தி – புரட்டி. கொந்து – மலர்க்கொத்து

பூங்கொத்துக்கள் நிறைந்த சோலைகள் நான்கு பக்கங்களிலும் சூழ விளங்கும் கொட்டையூரில் உள்ள கோடீச்சரத்து உறையும் தலைவன் செந்தாமரை மலரை அணிந்தவனும், சிவன் என்னும் நாமம் தனக்கே உரியவனும், தேவர்க்குத் தலைவனும் பந்தாடும் மெல்லிய விரல்களையுடைய பார்வதியைத் தன் ஆகத்தின் பாகத்தில் கொண்டவனும், பால், தயிர், நெய், தேன் இவற்றில் ஆடப் பெறுபவனும், மந்தார மரங்களைத் தள்ளிக் கொண்டு வரும் நீரையுடைய காவிரியின் கரையிலுள்ள வலஞ்சுழியிடத்து நிலைபெற்று நிற்கும் மணவாளனும் ஆவான்.

2812. பொடியாடு மேனிப் புனிதன் கண்டாய்
புட்பாகற் காழி கொடுத்தான் கண்டாய்
இடியார் கடுமுழக்கே றூர்ந்தான் கண்டாய்
எண்டிசைக்கும் விளக்காகி நின்றான் கண்டாய்
மடலார் திரைபுரளுங் காவிரி வாய்
வலஞ்சுழியின் மேவிய மைந்தன் கண்டாய்
கொடியாடு நெடுமாடக் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே.
4

புள்பாகன் – பறவை (கருட) வாகனம் உடையவன்.

துகில் கொடிகள் அசையும் உயர்ந்த மாடங்கள் நிறைந்த கொட்டையூரில் உள்ள கோடீச்சரத்துறையும் தலைவனாகிய சிவபெருமான், திருநீறு திகழுந் திருமேனியை உடைய புனிதனும், கருட வாகனனாகிய திருமாலுக்குச் சக்கராயுதத்தை உதவியவனும், இடிபோன்று அச்சந்தரும் முழக்கத்தையுடைய இடபத்தினை ஊர்பவனும், எட்டுத் திசைகளுக்கும் விளக்கமாய் நிற்பவனும், பூவிதழ்களைச் சுமந்த அலைகள் புரளும் காவிரியின் கரையிலுள்ள வலஞ்சுழியிடத்துப் பொருந்திய மைந்தனும் ஆவான்.

---

2813. அக்கரவம் அரைக்கசைத்த அம்மான் கண்டாய்
அருமறைக ளாறங்க மானான் கண்டாய்
தக்கனது பெருவேள்வி தகர்த்தான் கண்டாய்
சதாசிவன்காண் சலந்தரனைப் பிளந்தான் கண்டாய்
மைக்கொண்மயிற் றழைகொண்டு வருநீர்ப் பொன்னி
வலஞ்சுழியான் கண்டாய் மழுவன் கண்டாய்
கொக்கமரும் வயல்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே.
5

இத்திருப்பதிகத்தில் எல்லாப் பாடல்களிலும் மூன்றாவது அடியில் வலஞ்சுழியைப் பாடுகிறார். பதிக மகுடம் – "கொட்டையூரில் கோடீச்சரத்துறையும் கோமான் தானே"

கொக்குக்கள் அமர்ந்திருக்கும் வயல்கள் நாற்புறமும் சூழ்ந்துள்ள கொட்டையூரில் கோடீச்சரத்துறையும் தலைவனாகிய சிவபெருமான், சங்கு மணியையும், பாம்பையும் இடையில் கட்டியவனாய், உணர்தற்கரிய நான்மறைகளும் ஆறங்கங்களும் ஆனவனாய், தக்கனது பெருவேள்வியைத் தகர்த்தவனாய், சதாசிவனாய், சலந்தரன் உடலைப் பிளந்தவனாய், நீலநிற மயிற்பீலியை அடித்துக் கொண்டு வரும் நீரினையுடைய காவிரியின் கரையிலுள்ள வலஞ்சுழியில் வாழ்பவனாய், கையில் மழு ஏந்தியவனாய் விளங்குபவன் ஆவான்.

2814. சண்டனைநல் லண்டர்தொழச் செய்தான் கண்டாய்
சதாசிவன் கண்டாய்சங் கரன்றான் கண்டாய்
தொண்டர்பலர் தொழுதேத்துங் கழலான் கண்டாய்
சுடரொளியாய்த் தொடர்வரிதாய் நின்றான் கண்டாய்
மண்டுபுனல் பொன்னிவலஞ்சுழியான் கண்டாய்
மாமுனிவர் தம்முடைய மருந்து கண்டாய்
கொண்டல்தவழ் கொடிமாடக் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே.

6

சண்டன் – சண்டேசுவர நாயனார். அண்டர் – தேவர். கொண்டல் – மேகம். மாமுனிவர் தம்முடைய மருந்து – சிவபெருமான். ஆனால் தேவர்கள் அமுதத்தை இறப்பை நீக்கும் மருந்தாக நினைத்து உண்பர்.

கொடிகள் கட்டப்பட்டு, மேகங்கள் தவழும் வண்ணம் மிக உயர்ந்த மாடங்களைக் கொண்ட கொட்டையூரிலுள்ள கோடீச்சரத்துறையும் தலைவனாகிய சிவபெருமான், சண்டேசுரனை நல்ல தேவர்கள் தொழுமாறு செய்தவனும், சதாசிவனும், சங்கரனும், தொண்டர் பலரும் புகழ்ந்து வணங்கும் திருவடிகளை உடையவனும், பற்றிப் பின் தொடர்வதற்கு அரிய பேரொளிப் பிழம்பாய் நின்றவனும், மிக்குவரும் புனலையுடைய காவிரியின் கரையிலுள்ள வலஞ்சுழியில் வாழ்பவனும், பெருமைமிக்க தவத்தவர் நுகரும் அமிர்தமும் ஆவான்.

2815. அணவரியான் கண்டாய் அமலன் கண்டாய்
அவிநாசி கண்டாயண் டத்தான் கண்டாய்
பணமணிமா நாக முடையான் கண்டாய்
பண்டரங்கன் கண்டாய் பகவன் கண்டாய்
மணல்வருநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாதவற்கும் நான்முகற்கும் வரதன் கண்டாய்
குணமுடைநல் லடியார்வாழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே.

7

அணவுதல் – எட்டுதல். அவிநாசி – அழிவில்லாதவன். பணம் – பாம்பின் படம். வரதன் – வரத்தைக் கொடுப்பவன். இப்பதிகத்தினுள் சிவன், சதாசிவன், சங்கரன், அவிநாசி, பகவன், பரமன் என்று சிவபெருமானது பல நாமங்களும் போற்றப்படுகின்றன.

நற்குணமிக்க அடியார்கள் வாழ்கின்ற கொட்டையூரிலுள்ள கோடீச்சரத்துறையும் தலைவனாகிய சிவபெருமான், எட்டுதற்கரியவனாய், குற்றமற்றவனாய், அழிவில்லாதவனாய், மேலுலகத்து உள்ளவனாய், படமுடைய பெரிய நாகத்தை அணிபவனாய், பண்டரங்கக் கூத்தினை ஆடுபவனாய், ஐசுவரியம் முதலிய ஆறு குணங்களை உடையவனாய், மணலை வாரிக் கொண்டுவரும் நீரையுடைய காவிரியின் கரையிலுள்ள வலஞ்சுழியில் வாழ்பவனாய், திருமாலுக்கும் பிரமனுக்கும் அவர்கள் விரும்பிய அதிகாரத்தை வழங்குபவனாய் விளங்குபவன் ஆவான்.

2816. விரைகமழும் மலர்க்கொன்றைத் தாரான் கண்டாய்
வேதங்கள் தொழநின்ற நாதன் கண்டாய்
அரையதனிற் புள்ளியத ளுடையான் கண்டாய்
அழலாடி கண்டாய் அழகன் கண்டாய்
வருதிரைநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
வஞ்சமனத் தவர்க்கரிய மைந்தன் கண்டாய்
குரவமரும் பொழில்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே.

8

விரை – வாசனை. கொட்டையூர் – தலப்பெயர்
கோடீச்சரம் – கோயிலின் பெயர்

குரா மரங்கள் நிறைந்த சோலைகள் நாற்புறமுஞ் சூழ்ந்த கொட்டையூரிலுள்ள கோடீச்சரத் துறையும் தலைவனாகிய சிவபெருமான், மணங்கமழும் கொன்றைப் பூ மாலையை உடையவனும், வேதங்களால் போற்றப்படும் தலைவனும், புள்ளிகளை உடைய புலித்தோலை இடையில் உடையாக உடுத்தியவனும், அழலாடுபவனும், அழகனும், தொடர்ந்து வரும் அலைகளையுடையதும் நீர் நிரம்பியதும் ஆகிய காவிரியின் கரையிலுள்ள வலஞ்சுழியில் வாழ்பவனும், வஞ்சமனத்தாரால் உணரப்படாத மைந்தனும் ஆவான்.

2817. தளங்கிளருந் தாமரையா தனத்தான் கண்டாய்
தசரதன்றன் மகன் அசைவு தவிர்த்தான் கண்டாய்
இளம்பிறையும் முதிர்சடைமேல் வைத்தான் கண்டாய்
எட்டெட் டிருங்கலையு மானான் கண்டாய்
வளங்கிளர்நீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாமுனிகள் தொழுதெழு பொற்கழலான் கண்டாய்
குளங்குளிர்செங் குவளைகிளர் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே.

9

தளம் – இதழ். அசைவு – தளர்ச்சி. கிளர் – மிக்கு விளங்குகின்ற

குளிர்ந்த குளங்களில் செங்குவளை மலர் மேலெழுந்து விளங்கும் கொட்டையூரிலுள்ள கோடீச்சரத்துறையும் தலைவனாகிய சிவபெருமான், இதழ்கள் மிக்க தாமரை மலரை ஆதனமாக உடையவனாய், தயரதராமனுடைய துன்பங்களைக் களைந்தவனாய், இளம் பிறையையும், பாம்பினையும் கங்கையையும் தன் பழைய சடையில் வைத்தவனாய், கலைகள் அறுபத்து நான்கும் ஆனவனாய், வளத்தை மிகுவிக்கும் நீர்ப் பெருக்கினையுடைய காவிரியின் கரையிலுள்ள வலஞ்சுழியில் வாழ்பவனாய், முனிவர்கள் வணங்கி எழும் பொற்பாதங்களை உடையவனாய் விளங்குபவன் ஆவான்.

2818. விண்டார் புரமூன் றெரித்தான் கண்டாய்
விலங்கலில்வல் லரக்கனுட லடர்த்தான் கண்டாய்
தண்டா மரையானும் மாலுந் தேடத்
தழற்பிழம்பாய் நீண்ட கழலான் கண்டாய்
வண்டார்பூஞ் சோலைவலஞ் சுழியான் கண்டாய்
மாதேவன் கண்டாய் மறையோ டங்கங்
கொண்டாடு வேதியர்வாழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே.

10

விண்டார் – பகைவர். விலங்கல் – மலை

ஓதிய நான்மறை ஆறங்க, வழிஒழுகும் வேதியர்கள் வாழ்கின்ற கொட்டையூரிலுள்ள கோடீச்சரத்துறையும் தலைவனாகிய சிவபெருமான், பகைவர் புரமூன்றையும் எரித்தவனும், வலிய அரக்கனாகிய இராவணன் உடலைக் கயிலை மலையின் கீழ் வைத்துச் சிதைத்தவனும், குளிர்ந்த தாமரையில் வாழ் நான்முகனும் திருமாலும் தேட நெருப்புப் பிழம்பாய் நீண்டவனாகிய கழலை உடையவனும், வண்டுகள் மொய்க்கும் பூஞ்சோலைகள் மிக்க வலஞ்சுழியில் வாழ்பவனும், தேவர்க்குத் தேவனும் ஆவான்.

## 74. திருநாரையூர்

ப.தொ.எண் : 287 பதிக எண் : 74

2819. சொல்லானைப் பொருளானைச் சுருதி யானைச்
சுடராழி நெடுமாலுக் கருள் செய்தானை
அல்லானைப் பகலானை அரியான் தன்னை
அடியார்கட் கெளியானை அரண்மூன் றெய்த
வில்லானைச் சரம்விசயற் கருள்செய் தானை
வெங்கதிரோன் மாமுனிவர் விரும்பி யேத்தும்
நல்லானைத் தீயாடு நம்பன் தன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே.

1

சொல்லான் – சொல்லுவார் சொல்லும் சொற்கள் எல்லாமாய் இருப்பவன்.

பொருளான் – அச்சொற்களின் பொருளாய் இருப்பவன்.

சரம் – பாசுபதம் என்னும் அம்பு

சொல்லாகவும் பொருளாகவும் வேதங்களாகவும் திகழ்பவனும், ஒளிமிக்க சக்கராயுதத்தைத் திருமாலுக்கு அருளியவனும், இரவாகவும் பகலாகவும் இருப்பவனும், அன்பர் அல்லாதார்க்கு அரியனாகவும் அடியார்க்கு எளியனாகவும் இலங்குபவனும் அசுரர்க்கு அரணாயமைந்த திரிபுரங்கள் அழிய அம்பு எய்த வில்லினனும், விசயற்குப் பாசுபதம் அருளிய அருளாளனும், சூரியனும் பெருந்தவ முனிவர்களும் விரும்பிப் போற்றும் நல்லவனும், தீயாடுபவனும், விரும்புதற்குரிய தலைவனும் ஆகிய சிவபெருமானை நாரையூர் நன்னகரில் நான் கண்டேன்.

**2820.** பஞ்சுண்ட மெல்லடியாள் பங்கன் தன்னைப்
பாரொடுநீர் சுடர்படர்காற் றாயி னானை
மஞ்சுண்ட வானாகி வானந் தன்னில்
மதியாகி மதிசடைமேல் வைத்தான் தன்னை
**நெஞ்சுண்டென் நினைவாகி நின்றான் தன்னை**
நெடுங்கடலைக் கடைந்தவர்போய் நீங்க வோங்கும்
நஞ்சுண்டு தேவர்களுக் கமுதீந் தானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 2

சுவாமிகளது கரணங்கள் – சிவகரணங்களாயின.

செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்பட்ட மெல்லிய பாதங்களை உடைய உமையம்மையை ஒரு கூறாகக் கொண்டவனும், நிலமும், நீரும், தீயும் வீசும் காற்றும் ஆனவனும், மேகம் தவழும் வானமும், அவ்வானத்தில் ஊரும் மதியும் ஆகி அம்மதியைத் தன் சடைமுடிமேல் தாங்கியவனும், என் மனத்தைத் தன் வழி நிறுத்தி அதன் நினைவுகள் எல்லாம் தானாகி நின்றவனும், நெடிய கடலைக் கடைந்தார் அனைவரும் ஓடி நீங்கும் வண்ணம் ஓங்கி எழுந்த நஞ்சைத் தான் உண்டு தேவர்கட்கு அமுதம் ஈந்தவனும் ஆகிய சிவபெருமானை நாரையூர் நன்னகரில் நான் கண்டேன்.

**2821.** மூவாதி யாவர்க்கும் மூத்தான் தன்னை
முடியாதே முதல்நடுவு முடிவா னானைத்
தேவாதி தேவர்கட்குந் தேவன் தன்னைத்
திசைமுகன்றன் சிரமொன்று சிதைத்தான் தன்னை
ஆவாத அடலேறொன் றுடையான் தன்னை
அடியேற்கு நினைதோறும் அண்ணிக் கின்ற
நாவானை நாவினில்நல் லுரையா னானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 3

மூவாது மூத்தல் – சிவபெருமானின் சிறப்பியல்பு.
வாதம் – காற்று. அண்ணித்தல் – தித்தித்தல்.

யாவர்க்கும் முன்னே தோன்றி வைத்தும் மூப்பு இன்றி என்றும் ஒரு பெற்றியனாய், உள்ளவனும், தேவர்கட்குத் தலைவராகிய நான்முகன், திருமால், இந்திரன் ஆகியோருக்கும் தலைவனாய்த் திகழ்பவனும் நான்முகனுடைய சிரங்களில் ஒன்றைக் கொய்தவனும், காற்றெனக் கடிதியங்குவதும் வெற்றியையுடையதுமாகிய ஆனேற்றை ஊர்தியாக உடையவனும், ஆகி, அடியேன் நினையுந்தொறும் நாவான் நுகரப்படும் தித்திப்பாகும் சுவையாகவும், நாவிற்பயிலும் நல்லுரையானாகவும் விளங்கும் சிவபெருமானை நாரையூராம் நன்னகரில் நான் கண்டேன்.

**2822.** செம்பொன்னை நன்பவளந் திகழும் முத்தைச்
செழுமணியைத் தொழுமவர்தஞ் சித்தத் தானை
வம்பவிழும் மலர்க்கணைவேள் உலக்க நோக்கி
மகிழ்ந்தானை மதிற்கச்சி மன்னு கின்ற
கம்பனையெங் கயிலாய மலையான் தன்னைக்
கழுகினொடு காகுத்தன் கருதி யேத்தும்
நம்பனையெம் பெருமானை நாதன் தன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 4

காகுத்தன் – இராமன். உலக்க– அழியும்படி. அஃறிணை உயிர்களும், வானிடத்தவர்களும் மண்மேல் அரனை அர்ச்சித்துப் பயன்பெறுகிறார்கள். வம்பு – வாசனை

செம்பொன், நற்பவளம், ஒளிமுத்து, செழுமணி என்றெல்லாம் ஒப்புக் கூறப்படுபவனும், வணங்குவார் சித்தத்தில் உறைபவனும், மணங்கமழும் மலர்களை கணைகளாகக் கொண்ட மன்மதன் இறக்கும் வண்ணம் விழித்து மகிழ்ந்தவனும், மதில் சூழ்ந்த கச்சியில் ஏகம்பனாய் மன்னுபவனும், கயிலாய மலையில் வாழும் எம் தலைவனும், சம்பாதி சடாயு என்ற கழுகுகளும் இராமனும் தமக்கு நன்மை தருவான் இவன் என்று ஆராய்ந்து வணங்கும் இறைவனும், எம்பெருமானும், தலைவனுமாகிய சிவபெருமானை நாரையூராம் நன்னகரில் நான் கண்டேன்.

**2823.** புரையுடைய கரியுரிவைப் போர்வை யானைப்
புரிசடைமேற் புனலடைத்த புனிதன் தன்னை
விரையுடைய வெள்ளெருக்கங் கண்ணி யானை
வெண்ணீறு செம்மேனி விரவி னானை
வரையுடைய மகள்தவஞ்செய் மணாளன் தன்னை
வருபிணிநோய் பிரிவிக்கும் மருந்து தன்னை
நரைவிடைநற் கொடியுடைய நாதன் தன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. **5**

புரை – கவிப்பு. உடலில் கவிப்பாய் அமைந்த உரிவை (தோல்). விரை – வாசனை.

உட்டொளை பொருந்திய கரத்தையுடைய யானையது தோலைப் போர்வையாகக் கொண்டவனும், முறுக்குண்ட சடையின்மேல் கங்கையைச் செறித்துவைத்த புனிதனும், மணங்கமழும் வெள்ளெருக்கம் பூமாலையை அணிந்தவனும் வெள்ளிய நீறு செம்மேனியிடத்து விரவி விளங்குபவனும், பருவதராசன் மகள் தவம் செய்து அடையப் பெற்ற மணாளனும், வெள்ளிய விடையை உயர்த்திய நற்கொடியை உடைய தலைவனும் ஆகிய சிவபெருமானை நாரையூர் நன்னகரில் நான் கண்டேன்.

**2824.** பிறவாதும் இறவாதும் பெருகி னானைப்
பேய்பாட நடமாடும் பித்தன் தன்னை
மறவாத மனத்தகத்து மன்னி னானை
மலையானைக் கடலானை வனத்து ளானை
உறவானைப் பகையானை உயிரா னானை
உள்ளானைப் புறத்தானை ஓசை யானை
நறவாரும் பூங்கொன்றை சூடி னானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. **6**

பிறவாமையானும், இறவாமையானும் புகழ் பெருகியவனும், பேய்களின் பாட்டிற்கேற்பக் கூத்தாடும் பித்தனும், தன்னை மறவாத மனத்திடத்தே மன்னி நிற்பவனும், மலையிடத்தும் கடலின் கண்ணும் வானின் மேலும் விளங்குபவனும், உறவும் பகையும் உயிரும் ஆகுபவனும், அகத்தும் புறத்தும் திகழ்பவனும், தேனிறைந்த கொன்றைப் பூவைச் சூடியவனும் ஆகிய சிவபெருமானை நாரையூராம் நன்னகரில் நான் கண்டேன்.

'பித்தன்' என்றது, ஓர் வரையறையின்றித் தான் வேண்டியது செய்வன் என்னும் கருத்தினதாய், அவனது தன்வயமுடைமையைப் பழித்ததுபோலப் புகழ்ந்ததாம்.

இந்நிலை, 'செய்தல் (கர்த்திருத்துவம்), செய்யாமை (அகர்த் திருத்துவம்), வேறொன்று செய்தல் (அந்யதாகர்த்திருத்துவம்)' என மூன்றாய் விளங்கும்; இவற்றை,

"ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும் – ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்"

என (நல்வழி) விளக்கினார், ஔவையார்.

வனம் – காடு. "உள்ளான்" என்றது, 'கலந்து நிற்பவன்' என்றபடி, "உறவானைப் பகையானை" என்றது, 'உயிர்கள் தமக்கு உறவாக நினைக்கப்படுபவராயும், பகையாக நினைக்கப்படுபவராயும் நிற்பவன் அவனே' என்றவாறு, உள்ளான் புறத்தான் – எல்லாப் பொருள்களின் உள்ளும் புறமும் நிறைந்துள்ள வியாபகன். ஓசை, பூதங்களுட் சிறந்த விசும்பின் பண்பாகலின், அதனை எடுத்தோதியருளினார். நறவு – தேன்.

**2825.** தக்கனது வேள்விகெடச் சாடி னானைத்
தலைகலனாப் பலியேற்ற தலைவன் தன்னைக்
கொக்கரைசச் சரிவீணைப் பாணி யானைக்
கோணாகம் பூணாகக் கொண்டான் தன்னை
அக்கினொடும் என்பணிந்த அழகன் தன்னை
அறுமுகனோ டானைமுகற் கப்பன் தன்னை
நக்கனைவக் கரையானை நள்ளாற் றானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே.

7

சாடினான் – அழித்தான்.
நக்கன் – பிட்சாடன கோலம் – பற்றற்றவன்

தக்கனது வேள்வியை அதன் பயன் கெடுமாறு அழித்தவனும், பிரமனது தலையைப் பாத்திரமாகக் கொண்டு பிச்சை ஏற்ற தலைவனும், கொக்கரை, சச்சரி, வீணை ஆகிய இசைக்கருவிகளை வாசிக்கும் கரத்தினனும், உயிரைக் கொள்ளுதலையுடைய நாகத்தை அணியாகப் பூண்டவனும், உருத்திராக்கம் என்பு இவற்றை அணிந்த அழகனும், ஆறுமுகன், ஆனைமுகன் ஆகிய இருவருக்கும் தந்தையும், ஆடை அணியாதவனும், வக்கரை நள்ளாறு என்னுந் தலங்களில் திகழ்பவனும் ஆகிய சிவபெருமானை நாரையூராம் நன்னகரில் நான் கண்டேன்.

**2826.** அரிபிரமர் தொழுதேத்தும் அத்தன் தன்னை
அந்தகனுக் கந்தகனை அளக்க லாகா
எரிபுரியும் இலிங்காபுரா ணத்து ளானை
எண்ணாகிப் பண்ணா ரெழுத்தா னானைத்
திரிபுரஞ்செற் றொருமூவர்க் கருள்செய் தானைச்
சிலந்திக்கும் அரசளித்த செல்வன் தன்னை
நரிவிரவு காட்டகத்தி லாட லானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே.

8

பதிக மகுடம் – நாரையூர்
நன்னகரிற் கண்டேன் நானே.

மாலும் நான்முகனும் ஏத்தி வணங்கும் தந்தையும், இயமனுக்கு இறுதியை ஆக்கும் மகாசங்காரக் கடவுளும், அளந்தறிய இயலாத எரிப்பிழம்பாம் இலிங்கத்தினது இயல்பு விரிக்கும் இலிங்கபுராணத்து விளங்கித் தோன்றுபவனும், அருமைமிக்க எண்ணும் பண்ணும் எழுத்தும் ஆனவனும், திரிபுரங்களை அழித்து ஆண்டுத் தன்னை மறவாத மூவர்க்கும் அருள் செய்தவனும், சிலந்திக்குப் புவிபுரக்கும் அரசனாம் பேற்றையளித்த செல்வனும் ஏனை விலங்குகளொடு நரிகள் கலந்து திரியும் சுடுகாட்டில் ஆடுபவனும் ஆகிய சிவபெருமானை நாரையூராம் நன்னகரில் நான் கண்டேன்.

அந்தகன் – அந்தத்தை (இறுதியை)ச் செய்பவன்; இயமன்; 'அவனுக்கு அந்தத்தைச் செய்பவன்' என்றதனால், 'மகா சங்காரக் கடவுள்' என்றவாறு. இனி, 'அந்தகாசுரனுக்கு அந்தத்தைச் செய்தவன்' என்றலுமாம். 'அளக்கலாகா இலிங்கம், எரிபுரியும் இலிங்கம் எனத் தனித்தனி இயையும். 'அளக்கலாகாமை, மாலும் அயனும் அடிமுடி தேடி அறியலாகாமையான் விளங்கும். இவ்வரலாற்றைக்கூறும் புராணமே இலிங்க புராணம். இது, சிவபிரானே முதற்பொருள் என நிறுவுதலையே பொருளாக உடைமையின், அதன்கண் இனிது விளங்கி நிற்பவன் என்பார். சிவபிரானை, "இலிங்க புராணத்துளான்" என்று அருளிச் செய்தார். இச்சிறப்பு நோக்கியே, சுவாமிகள், இலிங்கபுராணத் திருக்குறுந்தொகையை (தி.5.ப.95). உலகிற்கு அருளிச்செய்து உதவினார் என்க. இப்புராணப் பொருளே,

"அரனா ரழலுருவாய் அங்கே அளவிறந்து
பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ" (தி.8 திருத்தோணோக்கம் – 12)

எனத் திருவாசகத்துள் தொகுத்து அருளிச் செய்யப்பட்டது. இவ்வரலாற்றின் விரிவை, கந்த புராணம், அடிமுடி தேடும் படலத்துள் விரித்துக் கூறிற்று. இது பற்றியே, சிவனடியாரை இகழ வந்தவரும், அவர்கட்கு, "இலிங்கத் திட்டபுராணத்தீர்" (திருவாய்மொழி 4. 10.5) என இப்புராணத்தாற் பெயர் கொடுத்தார் என்க. எரி புரியும் – நெருப்பின் ஒளியை வீசும். இலிங்கம் – குறி; அது, கைகால் முதலிய உறுப்பின் பகுப்பு யாதும் அற்ற பொதுப் பிழம்பினைக் குறித்தது; 'தாணு' எனவும், 'கந்து' எனவும் வருவதும் இது, 'எண்ணும் எழுத்தும் ஆனானை' என்றாற்போலவே, 'பண் ஆனானை' என்பார், 'பண் ஆரெழுத்தானானை' என்று அருளிச் செய்தார், "ஆரெழுத்து" என்புழிநின்ற, 'அருமை' என்பதனை, 'எண், பண்' என்பவற்றிற்குங் கூட்டுக. திரிபுரம் எரித்த ஞான்று மூவர்க்கு அருள்செய்தமையை மேலே (ப.60. பா. 9 குறிப்புரை) காண்க.

2827. ஆலாலம் மிடற்றணியா அடக்கி னானை
ஆலதன்கீழ் அறம்நால்வர்க் கருள்செய் தானைப்
பாலாகித் தேனாகிப் பழமு மாகிப்
பைங்கரும்பா யங்கருந்துஞ் சுவையா னானை
**மேலாய வேதியர்க்கு வேள்வி யாகி**
**வேள்வியினின் பயனாய விமலன் தன்னை**
நாலாய மறைக்கிறைவ னாயி னானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 9

ஆலால நஞ்சினைத் தன் கழுத்திற்கு அணியாகக் கொண்டு அதன் நச்சுத் தன்மையைக் கெடுத்தவனும், கல்லால மர நிழலில் அமர்ந்து சனகாதி முனிவர் நால்வருக்கும் அறமுரைத்தவனும், பாலும் தேனும் பழமும் பசிய கரும்பும் ஆகி அவற்றின் இனிய சுவையாய்ப் பயில்பவனும், மேன்மை மிக்க வேதியர்க்கு வேள்வியாய் விளங்குபவனும், வேள்வியின் பயனாய் விளைபவனும், குற்றமற்றவனும், நான்மறைகளாலும் இறைவனாகப் போற்றப்படுபவனும் ஆகிய சிவபெருமானை நாரையூராம் நன்னகரில் நான் கண்டேன்.

நஞ்சை வைத்ததனால் ஆகிய நீலநிறம், செம்மேனியனாகிய சிவபிரானுக்குக் கண்டத்தை நீலமணி போல அழகு செய்து நிற்றலின், "ஆலாலம் மிடற்று அணியா அடக்கினான்" என்று அருளிச் செய்தார். 'பால் முதலியவுமாகி, அவற்றின் சுவைகளும் ஆயினான்' என்க. உம்மை, எச்சம். வேதியருள் மேலாவார். "எரியலால் உருவம் இல்லை.... ஐயன் ஐயாறனார்க்கே" (தி.4. ப.40 பா.5.) என்று அருளியவாறு, எரி, சிவபிரான் உருவேயாதலை யறிந்து வேட்பவரே யாகலின், 'மேலாய வேதியர்க்கு வேள்வி யாகி' என்று அருளினார்; "விருப்புறும் அங்கி யாவார் விடை உயர்த் தவரே" (தி.12 பெ.புரா. திருஞா. 1241) என்று திருஞானசம்பந்தர் சிந்தையில் தெளிந்தமை அறிக.

இக்கருத்தினையும், மற்றும் பகலவனையும் சிவபிரானது உருவாகவே அறிந்து காலை, மாலை, நண்பகற் பொழுதுகளில் வழிபடுதலே உண்மைப் பொழுது வழிபாடு (சந்தியாவந்தனம்) என்பதனையும் சுவாமிகள்;

"எரிபெ ருக்குவர் அவ்வெரி ஈசன
துருவ ருக்கம தாவ துணர்கிலார்"

எனவும்,

"அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்க னாவான் அரன்உரு அல்லனோ"

எனவும் அருளிச் செய்தார்கள். (தி.5. பா.100 பா.7, 8). இதனானே, காயத்திரி மந்திரத்தின் பொருளும் சிவபிரானே என்பதும் தெளியப்படும்; இதனை, "உயர் காயத்திரிக்கு உரிப்பொருளாகலின் என்னும் பொருளதாக வடமொழியில் ஓதினார், அரதச்சாரியார். ஆகவே, திருவைந்தெழுத்தின் பொருளே காயத்திரியின் பொருளாக அறிதலும், அதனால் திருவைந்தெழுத்தினையே முதற்றிருமந்திரமாக உணர்ந்து ஓதுதலும் மேலாய வேதியர்க்கு உரியனவாதல் விளங்கிற்று". இதனை,

"செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே" (தி.3. பா.22 பா.2)

என இனிது விளங்க அருளிச்செய்தார் திருஞான சம்பந்த சுவாமிகள். இவ்வருளிச் செயலைச் சேக்கிழார் சுவாமிகள்,

மந்திரங்க ளானஎலாம் அருளிச் செய்து
மற்றவற்றின் வைதிக நூற் சடங்கின் வந்த
சிந்தைமயக் குறும்ஐயம் தெளிய எல்லாம்
செழுமறையோர்க் கருளிஅவர் தெளியு மாற்றால்
முந்தைமுதல் மந்திரங்கள் எல்லாம் தோன்றும்
முதலாகும் முதல்வனார் எழுத்தஞ் சென்பார்
அந்தியினுள் மந்திரம்அஞ் செழுத்து மேயென்று
அஞ்செழுத்தின் திருப்பதிகம் அருளிச் செய்தார்

என விரித்தோதியருளினார்.

இவ்விரிவினுள் "வைதிகநூற்சடங்கு" என்றது, "எரி பெருக்குவர்" எனவும், "அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்" எனவும் மேற்காட்டிய சுவாமிகள் திருமொழியுட் குறிக்கப்பட்டவற்றை எனவும், "அச்சடங்கினால் வந்த சிந்தை மயக்குறும் ஐயம்" என்றது, எரியையும் அருக்கனையும் அன்னபிறவற்றையும் சிவபிரான் உருவாக அறியாது பிறவாறு மயங்கிக் கொள்ளுதலை எனவும், "அவ்வையமெல்லாம் தெளிய அருளி" என்றது, எரி ஈசனது உருவருக்கமே என்றும், அருக்கனாவான் அரனுருவே என்றும், பிறவும் அன்ன என்றும் இவ்வாறு தெளிவித்தருளினமையை என்றும் நாயனார் திருமொழியோடு கூட்டி உணர்ந்து கொள்க.

இதனானே, திருஞானசம்பந்தரது தொகைத் திருமொழிகட்கு நாயனார் திருமொழி விரியாக நின்று விளக்கந்தந்தருளுதலையும், அவ்விளக்கத்தின்வழி நின்றே சேக்கிழார் விளக்கம் தந்து செல்லுதலையும் அறியலாகும்.

இவ்வாற்றால் எரியைச் சிவபிரான் உருவருக்கமாக உணராது, எல்லாத் தேவர்கட்கும் அவரவர்க்கும் உரிய அவியைச் சுமந்து சென்று கொடுக்கும் ஒரு தேவனது உருவாகவும், பிறவாறும் கொண்டு வேட்டல் வேட்பித்தல்களைச் செய்வோரும், அவ்வாறே பகலவன் வழிபாடு முதலியவற்றைப் பிறவாற்றாற் செய்வோரும் மேலாய வேதியர் ஆகாமை பெறப்பட்டது. இம்மேலாய வேதியர் ஆகாதாரைத் திருமூல நாயனார், "பேர்கொண்ட பார்ப்பான்" (தி.10 திருமந்திரம் – 519) என்று அருளிச் செய்தார். இன்னோரன்ன அருமைத் திருமொழிகள் பலவற்றான், "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்' (தி.3. ப.54. பா.1). என்புழி. "அந்தணர்" என அருளிச் செய்யப்பட்டவரும், திருமுறையும் பிறவுமாகிய சைவநூல்களுள் 'அந்தணர்' எனப் போற்றப்படுவோரும் இன்னர் என்பது ஐயமற விளங்கும்.

ஈண்டு, "மேலாய வேதியர்" என்றதில், மேலாய என்னும் அடையை, பிறிதின் இயைபு நீக்கிய விசேடணமாகக் கொண்டு 'வேதியருள் மேலாய வேதியர்' எனவும், இயைபின்மை நீக்கிய விசேடணமாகக் கொண்டு, 'மக்களுள் மேலாய வேதியர்' எனவும் எவ்வாறுரைப்பினும் மேற்கூறிய எல்லாம் பொருந்துமாறு அறிந்து கொள்க.

இனி, மேலாய வேதியரால் வேட்கவும் வேட்பிக்கவும்படும் வேள்விகள் அப்பொழுதேயாயினும், வழிமுறைக்கண் ஆயினும் சிவபிரானை அடைவிக்கும் ஆகலின், அவனை அவ்வேள்விகளின் பயன் என்று அருளிச் செய்தார். இச் சைவநெறி, வைதிக நெறிக்குச் சிறிதும் மாறானது அன்றென்பது உணர்த்துதற் பொருட்டு "நாலாய மறைக்கிறைவன் ஆயினான்" என்று அருளினார்.

---

**2828.** மீளாத ஆளென்னை உடையான் தன்னை
வெளிசெய்த வழிபாடு மேவி னானை
மாளாமை மறையவனுக் குயிரும் வைத்து
வன்கூற்றி னுயிர்மாள உதைத்தான் தன்னைத்
தோளாண்மை கருதிவரை யெடுத்த தூர்த்தன்
தோள்வலியுந் தாள் வலியுந் தொலைவித் தாங்கே
நாளோடு வாள்கொடுத்த நம்பன் தன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே.

10

தூர்த்தன் – பிறன் மனை நயத்தமை பற்றி. வெளி – ஒளி; அறிவு. அது சிவபிரானையே முதல்வனாக அறிவது.

விட்டுப்பிரியாத அடிமையாக என்னை உடையவனும், அறிவு ஒன்றிச் செய்த வழிபாட்டை விரும்புபவனும், மார்க்கண்டேய மறையவனுக்கு ஒருகாலும் மாளாதவாறு உயிரளித்து வலிய கூற்றின் உயிர் நீங்கும் வண்ணம் உதைத்தவனும், தன் தோள் வலிமையை மதித்துக் கயிலை மலையை எடுக்க முயன்ற காமுகனாகிய இராவணனுடைய தோள்வலியும் முயற்சி மிகுதியும் கெடச் செய்து, அவன் தன்னை உணர்ந்த அப்பொழுதே அவனுக்கு மிகுந்த வாழ்நாளையும் வாளையும் வழங்கிய தலைவனும் ஆகிய சிவபெருமானை நாரையூராம் நன்னகரில் நான் கண்டேன்.

## 75. திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம்

(இத்திருப்பதிகம் 'போலும்' என்னும் முடிபுடைய தொடர்களால் இறைவன் பெருமைகளை வகுத்துரைத்து அருளியது. போலும் – அசைநிலை)

ப.தொ.எண் : 288 பதிக எண் : 75

2829. சொன்மலிந்த மறைநான்கா றங்க மாகிச்
சொற்பொருளுங் கடந்த சுடர்ச் சோதி
போலும்
கன்மலிந்த கயிலைமலை வாணர் போலுங்
கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டர் போலும்
மன்மலிந்த மணிவரைத்திண் தோளர் போலும்
மலையரையன் மடப்பாவை மணாளர் போலும்
கொன்மலிந்த மூவிலைவேற் குழகர் போலுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த
னாரே. 1

சுடர் – கதிர்களையும், சோதி – கதிர்களின் திரட்சியையும் குறிக்கும்.
வாழ்பவர் – வாழ்நர் – வாணர்.

குடந்தைக் கீழ்க்கோட்டத்துத் திகழும் எம் கூத்தனார், சொல் வடிவாய் நிற்கும் நான்கு மறைகளும் ஆறு அங்கங்களும் ஆனவரும், சொல்லையும் அதன் பொருளையும் கடந்த ஒளிப்பிழம்பாம் தன்மையரும், பக்க மலைகள் நிறைந்த கயிலை மலையில் வாழ்பவரும், கடலிடத்துத் தோன்றிய நஞ்சையுண்டு கறுத்த கழுத்தினரும், வலிமைமிக்க அழகிய மலை போன்ற திண்ணிய தோளினரும், பருவதராசன் மகள் பார்வதியின் கணவரும், கொலைத் தொழில் பழகிய மூவிலை வேலை ஏந்திய அழகரும் ஆவார்.

2830. கானல்இளங் கலிமறவ னாகிப் பார்த்தன்
கருத்தளவு செருத்தொகுதி கண்டார்
போலும்
ஆனல்இளங் கடுவிடையொன் றேறி யண்டத்
தப்பாலும் பலிதிரியும் அழகர் போலும்
தேனலிளந் துவலைமலி தென்றல் முன்றிற்
செழும்பொழிற்பூம் பாளைவிரி தேறல் நாறுங்
கூனல்இளம் பிறைதடவு கொடிகொள் மாடக்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த
னாரே. 2

இத்திருப்பதிகம் முழுவதும் இறைவனைச் சுவாமிகள் கூத்தன் என்றே குறித்தருளுகிறார்.
கான் – காடு. கலி – எழுச்சி. மறவன் – வேட்டுவன்.
செரு – போர். துவலை – துளி

நல்ல தேனின் சிறிய துளிகளை மிகுதியாக ஏந்தித் தென்றல் தவழும் முன்றிலின் கண்ணுள்ள பொழிலிடத்துப் பாளைகள் விரிதலால் துளிக்கும் தேனின் மணம் கமழப் பெறுவனவும், வளைவு பொருந்திய இளம்பிறையைத் தடவும் துகிற்கொடிகளைக் கொண்டவனும் ஆகிய, மாடங்களை உடைய குடந்தைக் கீழ்க்கோட்டத்துத் திகழும் எம் கூத்தனார், காட்டில் எழுச்சிமிக்க நல்லிள வேட்டுவன் ஆகி விசயனுடைய ஊக்கத்தின் அளவினையும் விற்றொழிலின் பயிற்சி முழுவதையும் அறிந்தவரும், விரைந்து நடக்கும் நல்லிள ஆனேற்றை ஊர்ந்து இந்நிலவுலகிற்கு அப்பாலும் பிச்சைகொள்ளத் திரியும் அழகரும் ஆவார்.

**2831.** நீறலைத்த திருவுருவும் நெற்றிக் கண்ணும்
நிலாஅலைத்த பாம்பினொடு நிறைநீர்க் கங்கை
ஆறலைத்த சடைமுடியும் அம்பொன் தோளும்
**அடியவர்க்குக் காட்டியருள் புரிவார் போலும்**
ஏறலைத்த நிமிர்கொடியொன் றுடையர் போலும்
ஏழுலகுந் தொழுகழலெம் மீசர் போலும்
கூறலைத்த மலைமடந்தை கொழுநர் போலுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 3

குடந்தைக் கீழ்க் கோட்டத்துத் திகழும் எம் கூத்தனார் திருநீறு பொருந்திய தம் திருவுருவத்தையும், நெற்றிக் கண்ணினையும், பிறையொடு பாம்பும் நீர் நிறைந்த கங்கையும் பொருந்திய சடைமுடியையும், அழகிய பொன் நிறத் தோள்களையும் **அடியவர்க்குக் காட்டி அருள்புரிவாராய்,** இடபம் பொறித்த கொடியை உயர்த்தியவராய், ஏழுலகங்களும் வணங்கும் திருவடிகளை உடைய ஈசராய்த் தம் இடப் பங்காய் இடம் பெற்ற மலைமகட்குக் கொழுநராயும் திகழ்பவர்.

அலைத்த – பொருந்திய. அடியவர்க்குக் காட்டியருள் புரிவார் – மெய்யுணர்வு தோன்றப் பெறும் செவ்வி பெற்று அதனை அவாவி நிற்கும் தம் மாணாக்கர்க்கு அதனை ஒரு வார்த்தையால் உணர்த்தியருளும் உறுதிச் சொல்லாய் நின்று பயன் தருவதாதலைப் பார்க்க முடிகிறது.

---

**2832.** தக்கனது பெருவேள்வி தகர்த்தார் போலுஞ்
சந்திரனைக் கலைகவர்ந்து தரித்தார் போலுஞ்
**செக்க**ரொளி **பவள**வொளி **மின்னின் சோதி**
செழுஞ்**சுடர்த்தீ ஞாயிறெ**னச் செய்யர் போலும்
மிக்கதிறல் மறையவரால் விளங்கு வேள்வி
மிகுபுகைபோய் விண்பொழியக் கழனி யெல்லாங்
கொக்கினிய கனிசிதறித் தேறல் பாயுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 4

வேதவழி ஒழுகுதலில் மிக்க வன்மையுடைய மறையவராய் விளக்கம்பெறும் வேள்வியிடத்து எழும் மிகு புகை விண்ணிடத்துப் போய் மழையைப் பெய்விக்க, கழனிகளில் மாமரத்தினுடைய இனிய கனிகள் சிதற அவற்றின் சாறு பரவிப் பாயும் குடந்தைக் கீழ்க் கோட்டத்துத் திகழும் எம் கூத்தனார், தக்கனது பெருவேள்வியை அழித்தவரும், சந்திரனை ஒற்றைக் கலையுடன் கைப்பற்றித் தலையில் தரித்துக் காப்பாற்றியவரும், செவ்வானொளி, பவளஒளி, மின்னொளி, கொழுவிய சுடர்த்தீயொளி, ஞாயிற்றொளி ஆகிய எல்லா ஒளியும் ஒருங்கு கலந்தாற் போன்ற செம்மை நிறம் உடையவரும் ஆவார்.

கவர்ந்து – கைக்கொண்டு காத்து. செக்கர் – செவ்வானம். கொக்கு – மாமரம். தேறல் – மாம்பழச்சாறு. திறல் – வேதம் முதலிய கலைகளை ஓதுதலிலும், ஒழுகுதலிலும் உள்ள வன்மை.
வேள்வி வேட்டலால் பருவமழை தவறாது பெய்யும். செக்கர் – பவளம். மின் – தீ – ஞாயிறு. இவற்றின் பெருகிய ஒளி இறைவனது பேரொளி தெரிக்க ஒரு புடை ஒப்பு கூறப்படுவன.

2833. காலன்வலி தொலைத்தகழற் காலர் போலுங்
காமனெழில் அழல்விழுங்கக் கண்டார் போலும்
ஆலதனில் அறம்நால்வர்க் களித்தார் போலும்
ஆணொடுபெண் ணலியல்ல ரானார் போலும்
நீலவுரு வயிரநிரை பச்சை செம்பொன்
நெடும்பளிங்கென் றறிவரிய நிறத்தார் போலுங்
கோலமணி கொழித்திழியும் பொன்னி நன்னீர்க்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 5

அழகிய அரதனங்களைக் கரையில் ஒதுக்கி, மலையினின்று இறங்கிவரும் காவிரியின் நன்னீரால் சிறப்புமிகும் குடந்தைக் கீழ்க் கோட்டத்துத் திகழும் எம் கூத்தனார், இயமனது ஆற்றலையழித்ததும், கழல் அணிந்ததும் ஆகிய காலை உடையவரும், மன்மதனது அழகிய உடலை அழல் உண்ணும் வண்ணம் நுதற்கண்ணை விழித்து நோக்கியவரும், சனகாதி முனிவர் நால்வர்க்கும், கல்லாலின் கீழ் அமர்ந்து அறம் உரைத்தருளியவரும், ஆண் பெண் அலிகளின் அல்லராம் தன்மை உடையவரும், நீலமணி, வரிசைப் படப்பதித்தற்குரிய வயிரம், பச்சை, செம்பொன், நீடு பளிங்கு என்றவற்றுள் இன்னது ஒன்று போலும் நிறத்தினர் என உணர ஒண்ணாததொரு நிறமுடையவரும் ஆவார்.

நிரை – வரிசைப்பட பதித்தற்குரிய. நவமணிகளும், பொன்னும், வயிரமும், பளிங்கும் ஆகிய இவற்றுள் இன்னதன் நிறம் போலும் நிறத்தினர் என உவமையானும் உணர ஒண்ணாததொரு நிறமுடையவர். நீலம், வெண்மை, பச்சை, பொன், பளிங்கு – இவை சதாசிவ மூர்த்தியின் ஐந்து நிறங்களென்பர். – திருமந்திரம் 1735

2834. முடிகொண்ட வளர்மதியும் மூன்றாய்த் தோன்றும்
முளைஞாயி றன்னமலர்க் கண்கள் மூன்றும்
அடிகொண்ட சிலம்பொலியும் அருளார் சோதி
அணிமுறுவற் செவ்வாயும் அழகாய்த் தோன்றத்
துடிகொண்ட இடைமடவாள் பாகங் கொண்டு
சுடர்ச்சோதிக்கடிச்செம்பொன்மலை போலிந்நாள்
குடிகொண்டென் மனத்தகத்தே புகுந்தார் போலுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 6

குடந்தைக் கீழ்க்கோட்டத்துத் திகழுமெம் கூத்தனார், முடியினிடத்தே வளர்மதியைத் தரித்தவராய், மூன்றாய் எழுந்து தோன்றும் இளஞாயிறுகள் என்னத்தக்க மலர்க்கண்கள் மூன்றுடையவராய், பாதத்தில் கட்டப் பட்டொலிக்கும் சிலம்பினராய், அருள் நிறைந்து ஒளிமிக்க வரிசையான பற்களுடன் அழகியதாய் விளங்கும் செவ்வாயினராய், உடுக்கை போன்ற இடுப்பினை உடைய உமையம்மையை இடப்பாங்காய்க் கொண்டவராய், ஒளிப்பிழம்பாய் விளக்கம் மிக்க செம்பொன் மலை போன்றவராய், இந்நாள் என் மனத்திடத்தே புகுந்து குடிகொண்டவர் ஆவார்.

'மூன்றாய்த் தோன்றுங் கண்கள்' என இயையும், 'முளைஞாயிறு அன்ன' என்றது தொழில் பற்றி வந்த உவமை; 'மூன்று கண்கள் யாதொன்று திறப்பினும் சிறிது திறத்தலே யன்றி முழுவதூஉம் திறப்பின் உலகம் ஆற்றுமாறில்லை' என அவற்றது ஆற்றல் மிகுதியை உணர்த்தியருளியவாறு. 'அன்ன ஆற்றலை உடையவாயினும், மென்மையிற் பிறழா' என்பார், 'மலர்க்கண்கள்' என்று அருளினார். 'அருள் ஆர், சோதி, அணி' என்னும் மூன்றும் 'முறுவல்' என்றதனோடு தனித்தனி முடியும். 'நிறைந்த அருளைப் புலப்படுத்துவதாயும், தண்ணிய ஒளியினையுடையதாயும் நின்று, இயல்பானே அழகியதாகிய முகத்திற்குப் பின்னும் பேரழகினைச் செய்வதாகிய முறுவல்' என்றருளியவாறு. 'இத்தகைய முறுவலோடு கூடிய சிவந்தவாயினது அழகு சொல்ல ஒண்ணாததாய் நிற்கும்' என்பார். 'அணிமுறுவற் செவ்வாய்' என்று அருளினார். சுடர்ச் சோதி – கதிர்களின் திரட்சியாகிய ஒளிப்பிழம்பு. கடி – விளக்கம். 'சோதி' முதலிய மூன்றும் மலைக்கு அடை. இங்ஙனம் முடிகொண்ட வளர்மதி முதலியவற்றை வகுத்துப் புகழ்ந்து, 'குடிகொண்டனென் மனத்தகத்தே புகுந்தார்' என்று அருளிய இதனால், சுவாமிகளுக்குச் சிவபிரானது திருமேனிக் காட்சியால் விளைந்த பேரின்ப மேலீடு தெள்ளிதிற் புலனாகும். இவ்வருமைத் திருத்தாண்டகத்தை,

"முடிகொண்ட மத்தமும் முக்கண்ணின் நோக்கும்
முறுவலிப்பும்
துடிகொண்ட கையும் துதைந்தவெண் ணீறும்
சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித் தோலும்என்
பாவிநெஞ்சிற்
குடிகொண்ட வாதில்லை யம்பலக் கூத்தன்
குரைகழலே" (தி.4. ப.81. பா.7)

என்னும் திருவிருத்தத்தோடு உடன்வைத்து உணர்க.

**2835.** காரிலங்கு திருவுருவத் தவற்கும் மற்றைக்
கமலத்திற் காரணற்குங் காட்சி
யொண்ணாச்
சீரிலங்கு தழற்பிழம்பிற் சிவந்தார் போலுஞ்
சிலைவளைவித் தவுணர்புரஞ் சிதைத்தார்
போலும்
பாரிலங்கு புனல்அனல்கால் பரமா காசம்
பரிதிமதி சுருதியுமாய்ப் பரந்தார் போலும்
கூரிலங்கு வேற்குமரன் தாதை போலுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த
னாரே. 7

கார் – மேகம். கமலத்தில் காரணன் – தாமரை மலரில் இருக்கும் தலைவன் – பிரமன்.
காட்சி ஒண்ணா – காணுதல் கூடாத.
சீர் – புகழ். பரமாகாசம் – ஏனைய பூதங்களில் மேம்பட்டதாகிய ஆகாசம்.

குடந்தைக் கீழ்க்கோட்டத்துத் திகழும் எம் கூத்தனார் மேகம் போல விளங்கும் அழகிய உருவத்தையுடைய திருமாலுக்கும், படைப்பிற்குக் காரணராய்த் தாமரை மலரில் விளங்கும் பிரமனுக்கும் காண முடியாதபடி புகழ் நிலவும் நெருப்புப் பிழம்பு உருவத்தில் சிவந்து காணப்பட்டவரும், மலையை வில்லாக வளைத்து அசுரருடைய முப்புரங்களையும் அழித்தவரும், விளங்கும் நிலம், நீர், தீ, காற்று மேம்பட்ட ஆகாயம், சூரியன் சந்திரன், சுருதி என்றிவையாய்ப் பரவி நின்றவரும், கூர்மையுடன் திகழும் வேலையுடைய குமரனுக்குத் தந்தையானவரும் ஆவார்.

**2836.** பூச்சூழ்ந்த பொழில்தழுவு புகலூ ருள்ளார்
புறம்பயத்தார் அறம்புரிபூந் துருத்தி புக்கு
மாச்சூழ்ந்த பழனத்தார் நெய்த்தா னத்தார்
மாதவத்து வளர்சோற்றுத் துறையார் நல்ல
தீச்சூழ்ந்த திகிரிதிரு மாலுக் கீந்து
திருவானைக் காவிலோர் சிலந்திக் கந்நாள்
கோச்சோழர் குலத்தரசு கொடுத்தார் போலும்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த
னாரே. **8**

மாச்சூழ்ந்த – (மலர்களின் மிகுதியால்) வண்டுகள் சூழ்ந்த
மாதவத்து – சிறந்த தவத்துக்குரிய
திகிரி – சக்கரம்
பதிக மகுடம் – குடந்தைக் கீழ்க் கோட்டத்து தெங்கூத்தனாரே

குடந்தைக் கீழ்க் கோட்டத்துத் திகழும் எம் கூத்தனார் பூக்கள் பரவிய பொழிலால் தழுவப்பட்ட புகலூரில் உள்ளவரும், புறம்பயத்தில் உறைபவரும், அறத்தை மக்கள் விரும்பி மேற்கொள்ளும் பூந்துருத்தியில் புக்கவரும், வண்டுகள் சூழ்ந்த பழனத்தை விரும்பிக் கொண்டவரும், நெய்த்தானத்து நிலைத்தவரும், சிறந்த தவஞ்செய்தற்கு ஏற்ற சோற்றுத்துறையைப் போற்றிக் கொண்டவரும், தீயைப் போன்ற ஒளியை உமிழும் சக்கராயுதத்தைத் திருமாலுக்கு ஈந்தவரும், திருவானைக்காவில் தொண்டு செய்த ஒப்பற்ற சிலந்திக்கு மேம்பட்ட சோழர்குடிக்குரிய அரசாட்சியை அந்நாள் கொடுத்தவரும் ஆவார்.

**2837.** பொங்கரவர் புலித்தோலர் புராணர் மார்பிற்
பொறிகிளர்வெண் பூணூல் புனிதர் போலும்
சங்கரவக் கடன்முகடு தட்ட விட்டுச்
சதுரநடம் ஆட்டுகந்த சைவர் போலும்
அங்கரவத் திருவடிக்காட் பிழைப்பத் தந்தை
<u>அந்தணனை அறஎறிந்தார்க் கருளப் போதே</u>
<u>கொங்கரவச் சடைக்கொன்றை கொடுத்தார்</u>
போலும்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த
னாரே. **9**

பொறி – ஒளி. அரவம் – ஒலி. சதுர நடம் – திறல் வாய்ந்த நடனம் (காளியோடு ஆடி வென்ற நடனம் போல) அரவத் திருவடி – கழல் (வலக்கால்), சிலம்பு (இடக்கால்–அம்மை) இவைகளின் ஒலி பொருந்திய திருவடி.
ஆள் பிழைப்ப – ஆளாதலில் தவறியதால் – குற்றம் செய்தமையால். அப்போதே அருளும், கொன்றையும் கொடுத்தார். கொங்கரவச் சடை. கொன்றைச் சடை. கொங்கு – வாசனை. தேன்.

குடந்தைக் கீழ்க்கோட்டத்துத் திகழும் எம் கூத்தனார் சினம் மிகும் பாம்பை அணிந்தவரும், புலித்தோலை உடுத்தவரும், பழமையானவரும், உத்தம இலக்கணமாகிய பொறிகள் (மூன்று வரிகள்) விளங்கும் மார்பிடத்து வெள்ளிய பூணூலைத் தரித்த புனிதரும், சங்குகள் வாழ்வதும் ஒலியுடையதும் ஆகிய கடல் அண்ட முகட்டில் சென்று மோதுமாறு கைகளை வீசித் திறம்பட நடனமாடும் அநாதிசைவரும், கழலும் சிலம்பும் கிடந்து ஒலிக்கும் திருவடிக்கு ஆளாதலில் தவறியதனால், தந்தையாகிய அந்தணனைத் தாளிரண்டும் வெட்டுண்டு வீழ மழுவினா லெறிந்த சண்டேசருக்கு அப்பொழுதே அரவம் தவழும் சடை முடியிடத்துத் திகழும் கொன்றை மாலையைக் கொடுத்தவரும் ஆவார்.

**2838.** ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை
யிப்பிறவி யறுத்தேற வாங்கி யாங்கே
கூவி**அம ருலகனைத்து முருவிப் போகக்**
குறியிலறு குணத்தாண்டு கொண்டார்
போலும்
தாவிமுதற் **காவிரிநல் யமுனை கங்கை**
**சரசுவதிபொற் றாமரைபுட் கரணி**
**தெண்ணீர்க்**
**கோவியொடு குமரி**வரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த
னாரே. 10

முதன்மை பொருந்திய காவிரி, நல்யமுனை, கங்கை, சரசுவதி, பொற்றாமரை, பிற தாமரைத் தடாகங்கள், தெளிநீர்க் கிருட்டிணை, குமரி ஆகிய தீர்த்தங்கள் தாவி வந்து சூழ்ந்த குடந்தைக் கீழ்க்கோட்டத்துத் திகழுமெம் கூத்தனார், என் வினைக்கு ஈடாகத் தம்மால் செலுத்தப்பட்டுத் துன்பக்கடலில் வீழ்ந்து துன்புறுகின்ற என்னைக் கூவிக் கரை ஏறும்படி எடுத்து, இப்பிறவியை அறுத்து யான் விண்ணவர் உலகம் எல்லாவற்றையும் தாண்டித் தமது சிவலோகத்தில் சென்று சேரும்படி, மாயை கலவாத தம் அருட்குணம் ஆறனுள்ளும் படுத்து என்னை ஆட் கொண்டவர் ஆவார்.

கும்பகோணம் மகாமக வரலாற்றுப் பாடல். சிவனடியாரவர் சிவபூசையின் போது பெருமானுக்குத் திருமஞ்சனமாட்டும் போது எல்லாத் தீர்த்தங்களையும் தமது சொம்பு நீரில் வரவழைக்கும் போது பாடும் பாடல் இதுவாகும். இறைவனது எண்குணங்களை ஆறாகக் கூறுமிடத்து, தூய உடம்பினனாதல் இயல்பாகவே பாசங்களின் நீங்குதற்கண்ணும் இயற்கையுணர்வு முற்றுமுணர்தற் கண்ணும் அடங்கும்.
புட்கரணி – தாமரைக்குளம்.
ஏறவாங்கி – பிறவிக் குழியினின்றும் மேலே ஏறும்படி எடுத்து
ஆங்கேகூவி – வானோர்க்குயர்ந்த உயர்ந்த உலகமாகிய தமதுலகுக்கு வரும்படி அழைத்து அமருலகு அனைத்தும் உருவிப் போக – மறுமை இன்பதுன்ப அனுபவங்களையெல்லாம் கண்டு கழிப்பித்து நிலைபெற்ற பெருந்தேவர் பதங்களையெல்லாம் கடந்து சிவலோகத்திலே செல்லும்படி என்றது.

**2839.** செறிகொண்ட சிந்தைதனுள் தெளிந்து தேறித்
தித்திக்குஞ் **சிவபுவனத் தமுதம்** போலும்
நெறிகொண்ட குழலியுமை பாக மாக
நிறைந்தமரர் கணம்வணங்க நின்றார்
போலும்
மறிகொண்ட கரதலத்தெம் மைந்தர் போலும்
மதிலிலங்கைக் கோன்மலங்க
வரைக்கீழிட்டுக்
குறிகொண்ட இன்னிசைகேட் டுகந்தார் போலும்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த
னாரே. 11

செறி கொண்ட சிந்தை – ஒன்றுதல் கொண்ட மனம். தெளிந்து – விளங்கி. தேறி – முடிந்த பயனாய் நின்று. புவனம் – உலகம். சிவபுவனத்தமுதம் மற்றைய தேவ புவனத்து அமுதத்தைவிட உயர்ந்தது. நெறி கொண்ட குழல் – வளைவைக் கொண்ட கூந்தல். மறி – மான் கன்று. குறி – இசையின் இலக்கணம்.

குடந்தைக் கீழ்க்கோட்டத்துத் திகழும் எம் கூத்தனார், இறையின்பம் எய்துதலையே முடிந்த பயனாய்த் தெளியவுணர்ந்து தியானத்தில் செறிந்து நிற்பார் சிந்தையில் தித்திக்கும் சிவலோகத்து அமுதம் ஆவாரும், நெறித்த கூந்தலையுடைய உமை ஒருபாகமாக இருக்க, அமரர் கூட்டம் வணங்க, எல்லா நலனும் நிரம்பப் பெற்றுத் திகழ்ந்தவரும், மான் கன்றைத் தம் கரத்தில் ஏந்திய எம் வலியரும், மதிற்காவல் மிக்க இலங்கையிறை கருத்தழியுமாறு மலைக்கீழ் இட்டு அவனை ஒறுத்துப்பின் இலக்கணம் அமைந்த அவன் இசையைக் கேட்டு விருப்புற்று அவனுக்கு நலம்பல நல்கினவரும் ஆவார்.

## 76. திருப்புத்தூர்

(இத்திருப்பதிகம் "காண்" என்னும் முடிபுடைய தொடர்களால் இறைவனது பெருமைகளை உணர்த்துகிறது)

ப.தொ.எண் : 289 பதிக எண் : 76

2840. புரிந்தமரர் தொழுதேத்தும் **புகழ்தக் கோன்காண்**
போர்விடையின் பாகன்காண் புவன மேழும்
விரிந்துபல வுயிராகி விளங்கி னான்காண்
விரைக்கொன்றைக் கண்ணியன்காண் வேதம் நான்கும்
தெரிந்துமுதற் படைத்தோனைச் சிரங்கொண்டோன்காண்
தீர்த்தன்காண் திருமாலோர் பாகத் தான்காண்
திருந்துவயல் புடைதழுவு திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 1

தேவர்கள் விரும்பித் துதித்து வணங்கும் புகழுக்கு உரியவனும், போர்த்தொழில் வல்ல இடப ஊர்திக்குத் தலைவனும், உலகங்கள் ஏழுமாகிப் பல உயிரும் ஆகி விளங்கியவனும், மணமிக்க கொன்றைக் கண்ணியை உடையவனும், வேதம் நான்கையும் உணர்ந்து முற்படப் படைப்புத் தொழிலை மேற்கொண்ட பிரமனது சிரத்தைக் கொய்தவனும், குற்றமற்றவனும், திருமாலை ஒரு பாகமாகக் கொண்டவனும் ஆகிப் பண்படுத்தப்பட்ட வயல்கள் நாற்புறமுஞ் சூழ விளங்கும் திருப்புத்தூர்த் திருத்தளியில் திகழுஞ் சிவபெருமான் என் சிந்தையில் என்றும் நீங்காமல் நிற்பவன் ஆவான்.

புகழப்படுதற்குரியவன் அவன் ஒருவனே. ஏனையோரது புகழெல்லாம் பொருள் சேராதனவாய் ஒழிய, இறைவனது புகழே பொருள்சேர் புகழ்தலாகும். தீர்த்தன் – முனிவன். சிரங்கொண்டான் ஆயினும் கொல்லாமை உடைய முனிவனே எனக் கொள்ள வேண்டும். சிவபிரானது சத்தி ஒன்றே, அது செயலாற்றுதலின் கண் நான்காகப் பிரிந்து நிற்கும். அங்ஙனம் நிற்குமாறு, இன்பத்தில் பவானியும், ஆடவரிடத்துத் திருமாலும், வெகுளியில் காளியும், போரில் துர்க்கையும் என்பது சிவாகமங்களின் துணிபு.

2841. வாராரும் முலைமங்கை பாகத் தான்காண்
மாமறைக ளாயவன்காண் மண்ணும் விண்ணும்
கூரார்வெந் தழலவனுங் காற்றும் நீருங்
குலவரையும் ஆயவன்காண் கொடுநஞ் சுண்ட
காராருங் கண்டன்காண் எண்டோ ளன்காண்
கயிலைமலைப் பொருப்பன்காண் விருப்போ டென்றுந்
தேராரும் நெடுவீதித் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 2

கச்சணிந்த முலையினையுடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனும் பெரிய வேதங்கள் ஆனவனும், நிலமும் விண்ணும், வெம்மைமிகு தழலும் காற்றும் நீரும் உயர்மலையும் ஆயவனும், கொடிய நஞ்சையுண்டு கறுத்த கண்டத்தவனும், எண்டோளினனும், கயிலை மலையாகிய பொருப்பைத் தன் வாழிடமாகக் கொண்டவனும் ஆகித் தேரோடும் நெடு வீதிகளையுடைய திருப்புத்தூர்த் திருத்தளியில் என்றும் விருப்போடு விளங்கும் சிவபெருமான் என் சிந்தையிலே என்றும் நீங்காமல் நிலைப்பவன் ஆவான்.

கூர் ஆர் – மறைந்து நின்று தோன்றி வளர்தல் பொருந்திய.

திருத்தளி – இத்தலத்துத் திருக்கோயிலின் பெயர்.

**2842.** மின்காட்டுங் கொடிமருங்குல் உமையாட்
கென்றும்
விருப்பவன்காண் பொருப்புவலிச்
சிலைக்கை யோன்காண்
**நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி**
**நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்**
பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டுஞ் செழும்புறவின் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை
யானே. 3

பொருப்பு – மலை. சிலை – வில்.
சோமசுந்தரக்கடவுள் தருமிக்கு "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் அகப்பாட்டைப் பாடி ஈந்து, அதனை அறியாது குற்றங்கூறிய நக்கீரர் முன் புலவனாய்ச் சங்கத்திற் சென்று வாதிட்டு, பாட்டுக் குற்றம் அற்றாதலையும், அதனைக் குற்றங்கூறியதே குற்றமாதலையும் தெளிவித்துப் பாண்டியன் பரிசாக அறிவித்திருந்த பொற்கிழியைத் தருமிக்குப் பெற்றுக் கொடுத்த நிகழ்வை அப்பர் சுவாமிகள் இப்பாட்டில் பாடி அருள்கிறார்.
கனகம் – பொன். கிழி –முடிப்பு. பாட்டை சிவபிரான் ஆக்கினார். அதற்குத் தருமி பொற் கிழி பெற்றான்.

மின்னலும் கொடியும் போன்ற இடையினையுடைய உமையம்மையால் என்றும் விரும்பப்படும் கேள்வனும், மலையாகிய வலிமை மிக்க வில்லை வளைத்த கையினனும், நல்ல பாட்டுக்களை யாக்க வல்ல புலவனாய்ச் சங்கம் போந்து நல்ல பொற்கிழியைத் தருமிக்கு அருளியவனும் ஆகி, மணமிக்க கொன்றை மலர் பொன்னின் வனப்பைக் காட்ட, அருகே நின்ற மேட்டு நிலக் காந்தள் கைகளின் வடிவினைக் காட்ட, இவற்றைக் கண்டு வண்டு இசைபாடும் முல்லையும் குறிஞ்சியும் மயங்கிய வளமிக்க திருப்புத்தூர்த் திருத்தளியில் விளங்கும் சிவபெருமான் என் சிந்தையில் என்றும் நீங்காமல் நிலைப்பவன் ஆவான்.

---

**2843.** ஏடேறு மலர்க்கமலத் தயனும் மாலும்
இந்திரனும் பணிந்தேத்த இருக்கின்
றான்காண்
தோடேறு மலர்க்கடுக்கை வன்னி மத்தந்
துன்னியசெஞ் சடையான்காண் துகள்தீர்
சங்கம்
மாடேறி முத்தீனுங் கானல் வேலி
மறைக்காட்டு மாமணிகாண் வளங்கொள்
மேதி
சேடேறி மடுப்படியுந் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை
யானே. 4

கருக்கை – கொன்றை. துகள்தீர் – குற்றமற்ற.
மாடு – கரை. கானல் – கடற்கரை. மேதி – எருமை
சேடு – மேடு. படியும் – மூழ்குகின்ற

இதழ்கள் நிறைந்த தாமரை மலரில் விளங்கும் நான்முகனும், திருமாலும் இந்திரனும், பணிந்து துதிக்கும் வண்ணம் இருப்பவனும், இதழ்களையுடைய கொன்றை, வன்னி, ஊமத்தை ஆகிய மலர்கள் செறிந்த செஞ்சடையினனும், குற்றமற்ற சங்கம் பக்கத்தே ஏறி முத்தை ஈனும் கடற்கரையை எல்லையாக உடைய மறைக்காட்டில் வாழ் மணியும் ஆகி, வளவிய பயிர்களை மேயும் எருமை கரை மீது ஏறி நீர் நிலையில் படியும் திருப்புத்தூர்த் திருத்தளியில் திகழும் சிவபெருமான் என்றும் என் சிந்தையில் நின்று நிலவுபவன் ஆவான்.

2844. கருமருவு வல்வினைநோய் காற்றி னான்காண்
காமரு பூங் கச்சியே கம்பத் தான்காண்
பெருமருவு பேருலகில் பிணிகள் தீர்க்கும்
பெரும்பற்றத் தண்புலியூர் மன்றா டிகாண்
தருமருவு கொடைத்தடக்கை யளகைக் கோன்றன்
சங்காதி ஆரூரில் தனியா னைகாண்
திருமருவு பொழில்புடை சூழ்திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை
யானே. 5

பிறப்பைப் பொருந்துவதற்கு ஏதுவாகிய வலிய வினை நோயை நீக்கியவனும், விருப்பம் வருவதற்குரிய பொலிவுடன் விளங்கும் கச்சி ஏகம்பனும், நிலையாமைப் பெருமை மேவும் பெரிய நிலவுலகில் பொருந்தும் பிணிகளைத் தீர்க்கும் குளிர்ச்சிமிக்க பெரும்பற்றப் புலியூர் மன்றாடியும், கற்பகத்தருப் போலக் கொடுக்கும் பெருமை மிக்க கையினையுடைய அளகைக் கோன் ஆகிய குபேரனுக்கு மிக்க நண்பனும், ஆரூரில் அமர்ந்த ஒப்பற்ற யானையும் ஆகித் திருப்புத்தூர்த் திருத்தளியில் திகழும் சிவபெருமான் என்றும் என் சிந்தையில் நின்று நிலவுபவன் ஆவான்.

காற்றினான் – நீக்கினான்
தருமருவு – கற்பகத்தருவைப் போல
அளகைக்கோன் – குபேரன்
சங்காதம் – மிக்கநட்பு

2845. காம்பாடு தோளுமையாள் காண நட்டங்
கலந்தாடல் புரிந்தவன்காண் கையில் வெய்ய
பாம்பாடப் படுதலையிற் பலிகொள் வோன்காண்
பவளத்தின் பருவரைபோல் படிவத்
தான்காண்
தாம்பாடு சினவிடையே பகடாக் கொண்ட
சங்கரன் காண் பொங்கரவக் கச்சை
யோன்காண்
சேம்பாடு வயல்புடைசூழ் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை
யானே. 6

மூங்கில் போன்ற தோளுடைய உமையம்மை காணுமாறு பல கூத்து விகற்பங்களையும் கலந்து ஆடியவனும், சீற்றம்மிக்க பாம்பு கையில் கங்கணமாய்ப் பொருந்தி ஆடத் தலைஓட்டில் பிச்சை ஏற்பவனும், பவளத்தால் ஆன பெரிய மலை போன்ற வடிவினனும், கயிற்றால் பிணித்தற்குரிய சினமிக்க இடபத்தையே யானை என மதிக்கத்தக்க ஊர்தியாகக் கொண்ட சங்கரனும், பொங்கும் சினப் பாம்பையே அரைப்பட்டிகையாகப் புனைந்தவனும் ஆகி நீர்ச் சேம்புகள் நிறைந்த வயல்கள் நாற்புறமும் சூழ்ந்த திருப்புத்தூர்த் திருத்தளியில் திகழும் சிவபெருமான் என்றும் என் சிந்தையில் நின்று நிலவுபவன் ஆவான்.

காம்பு – மூங்கில். படிவத்தான் – வடிவத்தை உடையவன்.
தாம்பு ஆடு – கயிற்றிற் பொருந்தும் – பசுவாந்தன்மையுடைய பகடு – யானை.
பொங்கு – சினம் மிக்க

**2846.** வெறிவிரவு மலர்க் கொன்றை விளங்கு திங்கள்
வன்னியொடு விரிசடைமேல் மிலைச்சி
னான்காண்
பொறிவிரவு கதநாகம் அக்கி னோடு
பூண்டவன்காண் பொருபுலித்தோ லாடை
யான்காண்
அறிவரிய நுண்பொருள்க ளாயி னான்காண்
ஆயிரம்பே ருடையவன்காண் அந்தண்
கானல்
செறிபொழில்சூழ் மணிமாடத் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை
யானே. 7

வெறி – வாசனை. மிலைச்சினான் – சூடினான்
பொறி – புள்ளி. கதம் – சினம். அக்கு – எலும்பு

மணம் நாறும் கொன்றை மலரையும் விளக்கமுடைய திங்களையும் வன்னியையும் விரிந்த சடைமேல் சூடியவனும், புள்ளிகள் பொருந்திய கோபிக்கும் நாகத்தையும், எலும்பினையும் அணியாகப் பூண்டவனும், போர்க்குணமுடைய புலியினது தோலை ஆடையாகக் கொண்டவனும், அறிதற்கரிய நுண்பொருள்களாய் ஆனவனும், ஆயிரம் பேர் உடையவனும் ஆகி, அழகியதும், குளிர்ந்ததும் ஆகிய கடற்கரையிடத்தே நெருங்கி விளங்கும் பொழில்கள் சூழ்ந்ததும், வரிசையாயமைந்த மாடங்களை உடையதுமாகிய திருப்புத்தூர்த் திருத்தளியில் திகழும் சிவபெருமான் என்றும் என் சிந்தையில் நின்று நிலவுபவன் ஆவான்.

---

**2847.** புக்கடைந்த வேதியற்காக் காலற் காய்ந்த
புண்ணியன்காண் வெண்ணகைவெள்
வளையாளஞ்ச
மிக்கெதிர்ந்த கரிவெருவ உரித்த கோன்காண்
வெண்மதியைத் தலைசேர்த்த தண்மை
யோன்காண்
அக்கரும்பு பெரும்புன்னை நெருங்கு சோலை
ஆரூருக் கதிபதிகாண் அந்தண் தென்றல்
திக்கணைந்து வருமருங்கின் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை
யானே. 8

தன்மை – அருள். அதிபதி – தலைவன்.
மருங்கு – இடம்.

தன்பால் அடைக்கலம் புக்க வேதியன் மார்க்கண்டேயனுக்காக இயமனைக் கோபித்துக் கொன்ற புண்ணியனும், வெள்ளிய பற்களையும், வெள்ளிய வளையல்களையும் உடைய உமையம்மை அஞ்சுமாறு சினம் மிக்கு எதிர்த்த யானை நடுங்க அதன் தோலை உரித்தவனும், வெள்ளிய மதிப்பிறையைத் தலையில் தரித்து அருளியவனும், மன்மதன் வில்லாகக் கொள்ளுதற்கு வாய்ப்புடைய அக்கரும்பும், பெருமைமிக்க புன்னையும் நெருங்கிய சோலைமிக்க ஆரூர்க்கு அதிபதியும் ஆகி, மெல்லிதாய்க் குளிர்ந்த தென்றல் வடக்குத் திக்கினை அணையவரும் இடத்தில் உள்ள திருப்புத்தூர்த் திருத்தளியில் திகழும் சிவபெருமான் என்றும் என் சிந்தையில் நின்று நிலவுபவன் ஆவான்.

2848. பற்றவன்காண் ஏனோர்க்கும் வானோ ருக்கும்
பராபரன்காண் தக்கன்றன் வேள்வி செற்ற
கொற்றவன்காண் கொடுஞ்சினத்தை யடங்கச் செற்று
ஞானத்தை மேன்மிகுத்தல் கோளாக் கொண்ட
பெற்றியன்காண் பிறங்கருவிக் கழுக்குன்றத்தெம்
பிஞ்ஞகன்காண் பேரெழிலார் காம வேளைச்
செற்றவன்காண் சீர்மருவு திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 9

பதிக மகுடம் – திருப்புத்தூரில்
திருத்தளியான் காண் அவனென் சிந்தையானே

அண்டினார்க்குத் துணையானவனும், தேவர்க்கும் மற்றையவர்க்கும் அவரின் வேறுபட்டு மேலானவனும், தக்கனது வேள்வியை அழித்த வெற்றியினனும், கொடிய சினத்தை முற்றிலும் அழித்தவனும், ஞானத்தை மேன்மேலும் வளரச் செய்தலைத் தன் கொள்கையாகக் கொண்டவனும், அருவி விளங்கும் கழுக்குன்றில் யாம் வணங்கும் தலைக்கோலம் உடையவனும், மிக்க எழில் படைத்த மன்மதனை விழித்து அழித்தவனும், ஆகி, புகழ்மிக்க திருப்புத்தூர்த் திருத்தளியில் திகழும் சிவபெருமான் என்றும் என் சிந்தையில் நின்று நிலவுபவன் ஆவான்.

2849. உரம்மதித்த சலந்தரன்தன் ஆகங் கீண்ட
வோராழி படைத்தவன்காண் உலகு சூழும்
வரம்மதித்த கதிரவனைப் பற்கொண் டான்காண்
வானவர்கோன் புயம்நெரித்த வல்லா ளன்காண்
அரமதித்துச் செம்பொன்னி னாரம் பூணா
அணிந்தவன்காண் அலைகடல்சூழ்இலங்கை வேந்தன்
சிரம்நெரித்த சேவடிகாண் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 10

தனது வலியைப் பெரிதாக மதித்த சலந்தரனின் உடலைப் பிளந்த ஒப்பற்ற ஆழியைப் படைத்தவனும், உலகினைச் சூழவருவோனாய் எல்லோராலும் மேலாக மதிக்கப்பட்ட சூரியனுடைய பல்லைப் பறித்தவனும், இந்திரனுடைய புயத்தை நெரித்த வன்மை யுடையவனும், பாம்பினைச் செம்பொன் ஆரமாகவும் பூணாகவும் மதித்து அணிந்தவனும், அலைகடல் சூழ் இலங்கைக்கு இறையாகிய இராவணனுடைய சிரங்களை நெரியச் செய்த சேவடியினனும் ஆகி, திருப்புத்தூர்த் திருத்தளியில் திகழும் சிவபெருமான் என்றும் என் சிந்தையில் நின்று நிலவுபவன் ஆவான்.



# 77. திருவாய்மூர்

ப.தொ.எண் : 290 பதிக எண் : 77

பாடுந் தமிழ்மா லைகள்கொண்டு பரமர் தாமும் எழுந்தருள
நீடுந் திருவாய் மூரடைந்து நிலவுங் கோயில் வலஞ்செய்து
சூடும் பிறையார் பெருந்தொண்டர் தொழுது போற்றித் துதிசெய்து
நாடுங் காதல் வளர்ந்தோங்க நயந்தந் நகரில் உடனுறைந்தார்.

பெரியபுராணம் – 1547

திருவாய்மூர்ப் பதிகங்கள் இரண்டும் திருவாய்மூரில் அருளிச் செய்யப்படவில்லை. திருவாய்மூருக்கு அண்மையில் மறைக்காட்டிற்கும் வாய்மூருக்கும் இடையில் இறைவர் அற்புதப் பொற்கோயில் காட்டி மறைந்தருளிய இடத்தில் அவை பாடப்பெற்றன. பின்னர் திருவாய்மூர் சென்று போற்றித் துதிசெய்து என்ற பதிகங்கள் கிடைத்தில.

## நீடும் திருவாய்மூர்

திருவாய்மூர் என்ற நகர் எல்லைக்குள் அடங்காது, திருமறைக்காட்டில் நாயனார் உன்னித்துயின்ற துயிலினும், பின்னர் அவர் முன்பு வழி முழுவதினும், பின்னர் காட்சி கொடுப்பார் போலக் காட்டிப் புகுந்த பொற் கோயிலினும், பின்னர் காட்டிய காட்சியினும், அதன்பின் மூரினுமாக இத்துணையும் நீடிய தன்மைக்குறிப்பு. இச்சரிதப் பெருமையால் அடியார்கள் உள்ளத்தில் என்றும் நீடிய என்றதும் குறிப்பு.

## பதிக வரலாறு

ஆளுடைய அரசர் ஆளுடைய பிள்ளையாருடன் திருமறைக்காடு சென்று மறைக்கதவம் திறக்கவும் அடைக்கவும் பாடித்தொழுது திருமடம் சென்று தாம்பாட அரிதின் கதவம் திறந்தமையும், சம்பந்தர் பாட எளிதில் கதவம் அடைத்தமையும் கருதி நம்பர் திருவுள்ளம் அறியாது அயர்த்தேன் எனக் கவன்று பேழ்கணித்துத் துயின்றார். 'திருவாய்மூரில் இருப்போம் தொடரவா' எனப்பெருமான் கனவில் அருளினான். வாகீசர் கனவிற் கேட்டவாறே தொடர்ந்து செல்பொழுதில் அண்மையில் காட்சி கொடுப்பான் போல எதிரே கோயிலொன்று காட்டிப் பெருமான் மறைந்தருளினான். புகலி வள்ளலாரும் வாகீசர் போந்தபடிகேட்டு வந்தணைந்தார். கதவம் அடைக்கப் பாடிய ஆளுடைய பிள்ளையார் உப்பாலார், தாம் இங்கு எப்பால் மறைவது என்று அரசர் பாடியருள இறைவன்காட்சி வழங்குவதை ஆளுடைய பிள்ளையார் காட்டக் கண்டு பாடியருளியது இத்திருப்பதிகம். (தி.12 திருநாவு புரா. 281).

**குறிப்பு :** இத்திருப்பதிகம் சுவாமிகள் சிவபிரானது இயற்கைக் கோலத்தைக் கண்டு அங்ஙனங் கண்ட காட்சியையே எடுத்தோதி அருளியதாகலின் சிவபிரானது கோலங்களைப் பற்றி வரும் உரையளவைகட்கெல்லாம் இது பேரனுபவத் திருமொழியாகும்.

**2850.** பாடஅடியார் பரவக் கண்டேன்
**பத்தர் கணங்கண்டேன்** மொய்த்த பூதம்
ஆடல் முழவம் அதிரக் கண்டேன்
அங்கை அனல்கண்டேன் கங்கை யாளைக்
கோட லரவார் சடையிற் கண்டேன்
கொக்கி னிதழ்கண்டேன் கொன்றை கண்டேன்
வாடல் தலையொன்று கையிற் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 1

அடியார்கள் பாடிப் பரவவும் பத்தர்கணம் சூழ்ந்து நிற்கவும் பூதங்கள் நெருங்கவும் ஆடற்கேற்ற முழவம் முழங்கவும் அமைந்த சூழலில் அழகிய கையில் அனல் ஏந்தியவரும், காந்தட் பூவும், பாம்பும் பொருந்திய சடையில் கங்கையைத் தரித்தவரும், கொக்கிறகைச் சூடியவரும், கொன்றை மாலையை அணிந்தவரும், உலர்ந்த தலையோட்டினைக் கையில் கொண்டவரும் ஆக வாய்மூர்ச் சிவபெருமானை நான் கண்டேன்.

**2851.** பாலின் மொழியாளோர் பாகங் கண்டேன்
**பதினெண் கணமும்** பயிலக் கண்டேன்
நீல நிறமுண்ட கண்டங் கண்டேன்
நெற்றி நுதல்கண்டேன் பெற்றங் கண்டேன்
காலைக் கதிர்செய் மதியங் கண்டேன்
கரந்தை திருமுடிமேல் தோன்றக் கண்டேன்
மாலைச் சடையும் முடியுங் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 2

பயிலுதல் – சூழ்ந்து பணி செய்தல்

பால்போன்று இனிக்கும் மொழியாளாகிய பார்வதி ஒரு பங்காகத் திகழப் பெற்றவரும், பதினெண் கணத்தேவரும் சூழ்ந்து பணி செய்யக் கொண்டவரும், நீலகண்டரும், நெற்றிக் கண்ணரும், பெற்றமூர்பவரும், ஒளி உமிழும் இளமதியைத் தரித்தவரும், திருமுடி மேல் கரந்தை மலரைச் சூடியவரும், மாலை அணிந்த சடையாலான முடியை உடையவரும் ஆக வாய்மூர் அடிகளை நான் கண்டேன்.

**2852.** மண்ணைத் திகழ நடம தாடும்
வரைசிலம் பார்க்கின்ற பாதங் கண்டேன்
விண்ணிற் றிகழும் முடியுங் கண்டேன்
வேடம் பலவாஞ் சரிதை கண்டேன்
நண்ணிப் பிரியா மழுவுங் கண்டேன்
நாலு மறையங்கம் ஓதக் கண்டேன்
வண்ணம் பொலிந்திலங்கு கோலங் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 3

நண்ணிப் பிரியா மழு – இறைவர் கையில் ஏந்திய மழு தாருகாவனத்து இருடிகள் ஏவியதால் வந்தது. அதனை ஏந்தியபின் பிரிக்காமல் கையில் ஏந்தி உள்ளார். "எறி மழுவோ டிள மான் கையின்றி இருந்த பிரான்" புகலியும் மிழலையும் என்ற தேவாரம் மழு இறைவர் கையில் நண்ணுதற்கு முன் உள்ள கோலம் கூறுதலைக் காணலாம்.

நிலவுலகம் நின்று நிலைக்க நிகழ்த்தும் கூத்தாட்டில் கட்டப்பட்ட சிலம்பு ஒலிக்கின்ற பாதங்களை உடையவராய், விண்ணிற் சென்று விளங்கும் முடியினராய், ஏற்கும் பலவகை வேடங்கட்கும் பொருந்திய செயல்களைச் செய்பவராய், பிரியாது விளங்கும் மழுவினராய், நான்கு மறைகளையும் ஆறு அங்கங்களையும் ஓதுபவராய், பலவகை நிறங்களும் அழகுபெறத் திகழும் தோற்றத்தினராய்த் திருவாய்மூர்ச் சிவபெருமானை நான் கண்டேன்.

2853. விளைத்த பெரும்பத்தி கூர நின்று
மெய்யடியார் தம்மை விரும்பக் கண்டேன்
இளைக்குங் கதநாக மேனி கண்டேன்
என்பின் கலந்திகழ்ந்து தோன்றக் கண்டேன்
திளைக்குந் திருமார்பில் நீறு கண்டேன்
சேணார் மதில்மூன்றும் பொன்ற அன்று
வளைத்த வரிசிலையுங் கையிற் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 4

சேணார் – வானத்தில் பொருந்திய.

முன்னைத் தவம் விளைத்த பத்தி மிக நின்று உண்மை அடியார்கள் தம்மை விரும்புமாறு திகழ்பவராய், கருடனுக்கு அஞ்சுவனவும் இயல்பாகக் கோபம் மிக்கனவும் ஆகிய நாகங்களை அணிந்து விளங்கும் மேனியராய், எலும்பாலான அணிகலன்களைப் பூண்டு திகழுபவராய், திருநீற்றில் மூழ்கும் திருமார்பினராய், வானிடத்து மதில்கள் மூன்றும் அன்று அழியுமாறு வளைத்த வரிந்து கட்டப்பட்ட சிலையைக் கையில் கொண்டவராய் வாய்மூர்ச் சிவபெருமானை நான் கண்டேன்.

2854. கான்மறையும் போதகத்தி னுரிவை கண்டேன்
காலிற் கழல்கண்டேன் கரியின்
தோல்கொண்
டுன்மறையப் போர்த்த வடிவுங் கண்டேன்
உள்க மனம்வைத்த உணர்வுங் கண்டேன்
நான்மறை யானோடு நெடிய மாலும்
நண்ணி வரக்கண்டேன் திண்ண மாக
மான்மறி தங்கையின் மருவக் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 5

காட்டில் மறைந்து வாழும் யானையின் தோலை உரித்தவராய், காலிற்கட்டிய கழலினராய், அவ் யானைத் தோலின் புலாற் பொல்லாங்கு மறையும் வண்ணம் அதனை, போர்வையாகப் போர்த்திக் கொண்ட வடிவினராய், உயிர்கள் தம்மை நினைத்தற்கு உரிய மனத்தை உபகரித்து அருளினவராய், நான்மறை யானாகிய பிரமனும் நெடியானாகிய திருமாலும் தம் வலப்பாலும் இடப்பாலும் நண்ண வருபவராய், மான் கன்று நிலையாகப் பொருந்தி நிற்கும் கையினராய் வாய்மூர்ச் சிவபெருமானை நான் கண்டேன்.

2855. அடியார் சிலம்பொலிக ளார்ப்பக் கண்டேன்
அவ்வவர்க்கே யீந்த கருணை கண்டேன்
முடியார் சடைமேல் அரவ மூழ்க
மூரிப் பிறைபோய் மறையக் கண்டேன்
கொடியா ரதன்மேல் இடபங் கண்டேன்
கோவணமுங் கீளுங் குலாவக் கண்டேன்
வடியாரும் மூவிலைவேல் கையிற் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 6

முடியார் சடை – மகுடமாகப் பொருந்திய சடை.
மூரி – பெருமை. வடி – கூர்மை

திருவடிகளிற் கட்டிய சிலம்பு ஒலிகளின் ஆரவாரத்தை உடையவராய், அவரவர்க்கு ஏற்குமாறு ஈந்த கருணையினராய், சடைச்சுற்றின் நெருக்கினிடை பாம்பு புகுந்து மறைய, அப்பாம்பு தன்னைப் பற்றக் கரந்து வருவதாகக் கருதிப் பெருமை மிக்க பிறையும் அச்சடையின் வேறோர் இடுக்கில் புக்குமறையக் கண்டவராய், கொடியிடத்துப் பொருந்திய இடபத்தினை உடையவராய், கோவணமும் கீளும் கொண்டு விளங்குபவராய், கூரிய மூவிலை வேலினைக் கையில் ஏந்தியவராய் வாய்மூர்ச் சிவபெருமானை நான் கண்டேன்.

**2856.** குழையார் திருத்தோடு காதிற் கண்டேன்
கொக்கரையுஞ் சச்சரியுங் கொள்கை கண்டேன்
இழையார் புரிநூல் வலத்தே கண்டேன்
ஏழிசையாழ் வீணை முரலக் கண்டேன்
தழையார் சடைகண்டேன் தன்மை கண்டேன்
தக்கையொடு தாளங் கறங்கக் கண்டேன்
மழையார் திருமிடறும் மற்றுங் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 7

ஆர்த்திருத்தோடு – நிறைந்த அழகினையுடைய திருத்தோடு குழை – ஆடவர் அணி – வலக்காதுக்கு. தோடு – பெண்டிர் அணி – இடக்காதுக்கு கறங்க – ஒலிக்க

குழையும் நிறைந்த அழகினையுடைய தோடும் விளங்கும் காதுகளை உடையவராய், கொக்கரை சச்சரி ஆகிய வாச்சியங்களைப் பயன் கொள்பவராய், இழைகள் பொருந்திய முறுக்கப்பட்ட பூணூலை வலம்வர அணிந்தவராய், ஏழிசையும் பயிலும் யாழ் வீணைகளின் இசையை நுகர்வாராய், தழைத்த சடையினராய், தம் வயத்தினராய், தக்கை தாள முழக்கினராய் மேகம் போன்று கறுத்த திருமிடற்றினராய் வாய்மூர்ச் சிவபெருமானை நான் கண்டேன்.

**2857.** பொருந்தாத செய்கை பொலியக் கண்டேன்
போற்றிசைத்து விண்ணோர் புகழக் கண்டேன்
பரிந்தார்க் கருளும் பரிசுங் கண்டேன்
பாராய்ப் புனலாகி நிற்கை கண்டேன்
விருந்தாய்ப் பரந்த தொகுதி கண்டேன்
மெல்லியலும் விநாயகனுந் தோன்றக் கண்டேன்
மருந்தாய்ப் பிணிதீர்க்கு மாறு கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 8

பதிக மகுடம் – வாய் மூரடிகளை நான் கண்டவாறே.

உலகத்தார்க்கு ஏலாத செய்கைகளாம் நஞ்சுண்ணுதல், பாம்பணிதல் போன்றனவும், பொருத்தமற்ற செய்கைகளாம் சடைதரித்துப் பெண்ணொரு பாகன் ஆதல் போன்றனவும் தம்பால் பொலியக் கொண்டவராய், போற்றி என்று கூறி விண்ணோர்கள் புகழுமாறு விளங்குபவராய், அன்பருக்கு அருளும் தன்மையாராய், நிலனொடு நீராய் நிற்பவராய், புதியராய் வந்து பரவிய பூதவேதாளக் கணங்களிடையே திகழ்பவராய், மெல்லியல் உமையும் விநாயகனும் மனைவியும் மகனுமாம் உறவு முறை கொண்டவராய், பிணிதீர்க்கும் மருந்தாம் தன்மையினராய் வாய்மூர்ச் சிவபெருமானை நான் கண்டேன்.

**2858.** மெய்யன்ப ரானார்க் கருளுங் கண்டேன்
வேடுவனாய் நின்ற நிலையுங் கண்டேன்
கையம் பரணெரித்த காட்சி கண்டேன்
கங்கணமும் அங்கைக் கனலுங் கண்டேன்
ஐயம் பலவூர் திரியக் கண்டேன்
அன்றவன்றன் வேள்வி யழித்து கந்து
வையம் பரவ இருத்தல் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 9

மெய்யன்பர்க்கு அருளுபவராய், வேட்டுவக் கோலம் கொண்டு நின்றவராய், கையிடத்துக் கொண்ட அம்பால் அரண்களை அழித்த காட்சியினராய், பாம்புக் கங்கணராய், அங்கையில் அனல் ஏந்தியவராய், பல ஊர்களிலும் திரிந்து பிச்சை ஏற்பவராய், பகைத்த தக்கன் வேள்வியை அழித்தவராய் மகிழ்ந்து உலகம் பரவ இருந்தவராய் வாய்மூர்ச் சிவபெருமானை நான் கண்டேன்.

2859. கலங்க இருவர்க் கழலாய் நீண்ட
காரணமுங் கண்டேன் கருவாய் நின்று
பலங்கள் தரித்துகந்த பண்புங் கண்டேன்
பாடல் ஒலியெலாங் கூடக் கண்டேன்
இலங்கைத் தலைவன் சிரங்கள் பத்தும்
இறுத்தவனுக் கீந்த பெருமை கண்டேன்
வலங்கைத் தலத்துள் அனலுங் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 10

மாலும் அயனும் கலங்குமாறு நீண்ட தழற் பிழம்பாய்த் தோன்றிய காரணராய், முதலாய் நின்று பயன்களைத் தன்னுட் கொண்டு மகிழ்ந்த பண்பினராய், பாடல் இசையும் ஏனைய ஒலியும் தாம் ஆம் தன்மையராய், இலங்கைக் கிறை இராவணனுடைய பத்துத் தலைகளும் நசுங்கச் செய்து பின் அவனுக்கு வரங்கள் ஈந்த பெருமையராய், வலக்கையிடத்து அனல் ஏந்தியவராய் வாய்மூர்ச் சிவபெருமானை நான் கண்டேன்.

## 78. திருவாலங்காடு

(இப்பதிகம் "தாமே" என்னும் முடிபுடைய தொடர்களைக் கொண்டது)

ப.தொ.எண் : 291 பதிக எண் : 78

2860. ஒன்றா வுலகனைத்து மானார் தாமே
ஊழிதோ றூழி உயர்ந்தார் தாமே
நின்றாகி யெங்கும் நிமிர்ந்தார் தாமே
நீர்வளிதீ யாகாச மானார் தாமே
கொன்றாடுங் கூற்றை யுதைத்தார் தாமே
கோலப் பழனை உடையார் தாமே
சென்றாடு தீர்த்தங்க ளானார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 1

தாமே கலந்து உலகங்கள் யாவும் ஆனவரும், ஊழிகள் தோறும் பல உயிர்களை வீடேற்றி உயர்ந்தவரும், ஒருநிலையே நின்று எல்லா இடங்கட்கும் உரியவராய்ப் பரந்தவரும், நீரும் வளியும் தீயும் ஆகாசமுமாகி நின்றவரும், கொன்று திரிகின்ற கூற்றுவனை உதைத்தவரும், அழகிய பழையனூரைத் தமக்குரியதாக உடையவரும், தேடிச்சென்று மூழ்கும் தீர்த்தங்கள் ஆனவரும் திருவாலங் காட்டுறையும் செல்வரே ஆவார்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்று வடிவிலும் இறைவன் இருந்து வழிபடுதல், தங்குதல், மூழ்குதல் என்னும் செயல்கள் வழி உயிர்கட்கு அருள் புரிகிறார்

**2861.** மலைமகளைப் பாக மமர்ந்தார் தாமே
வானோர் வணங்கப் படுவார் தாமே
சலமகளைச் செஞ்சடைமேல் வைத்தார் தாமே
**சரணென் றிருப்**பார்கட் கன்பர் தாமே
பலபலவும் வேடங்க ளானார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
சிலைமலையா மூவெயிலும் அட்டார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே.
2

மலைமகளைத் தம் உடலிற்பாகமாக விரும்பிக் கொண்டவரும், வானோரால் வணங்கப் படுபவரும், கங்கையாளைத் தம் செஞ்சடை மேல் வைத்தவரும், சரண்புக்குத் தம் செயல் அற்று இருப்பார்க்கு அன்பர் ஆனவரும், பற்பல வேடங்களைப் புனைபவரும், பழையனூரைத் தமக்குரியதாக உடையவரும், மலையை வில்லாகக் கொண்டு மும்மதில்களையும் அழித்தவரும் திருவாலங்காட்டுறையும் செல்வரே ஆவார்.

சரணென்று இருத்தல் – தமது அறிவு, இச்சை, செயல்கள் யாவும் அவரது அறிவு, இச்சை, செயல்களின் வழிப்படுவன அல்லது தனித்து நிற்க மாட்டாமையை உணர்ந்து, தம் செயலின்றி எல்லாம் அவர் செயலாக நிற்றல். அட்டார் – அழித்தார்.

**2862.** ஆவுற்ற ஐந்து உகந்தார் தாமே
அளவில் பெருமை யுடையார் தாமே
பூவுற்ற நாற்றமாய் நின்றார் தாமே
புனிதப் பொருளாகி நின்றார் தாமே
பாவுற்ற பாட லுகப்பார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
தேவுற் றடிபரவ நின்றார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே.
3

பசுவிடத்துப் பொருந்திய ஐந்து பொருள்களையும் விரும்பியவரும், அளவிறந்த பெருமையுடையவரும், மலரின்கண் மணம் போல எல்லாப் பொருள்களிலும் நுண்ணியராய் நிறைந்து நின்றவரும், பா என்னும் ஓசையாம் உறுப்புப் பொருந்திய பாட்டினை விரும்புபவரும், பழையனூரைத் தமக்குரியதாக உடையவரும், தேவர் பலரும் அடைந்து அடிபரவ நின்றவரும் திருவாலங்காட்டுறையும் செல்வரே ஆவார்.

இத்திருப்பதிகத்தின் அனைத்துப் பாடல்களிலும் மூன்றாமடியின் ஈற்றில் "பழனைப் பதியாவுடையார் தாமே" என்றும், ஈற்றடியில் "திருவாலங்காடுறையும் செல்வர் தாமே" என்றும் பதிகமகுடம் அருளியுள்ளார்.

**2863.** நாறுபூங் கொன்றை முடியார் தாமே
நான்மறையோ டாறங்கஞ் சொன்னார் தாமே
**மாறிலா மேனி யுடையார்** தாமே
மாமதியஞ் செஞ்சடைமேல் வைத்தார் தாமே
பாறினார் வெண்டலையி லுண்டார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
தேறினார் சித்தத் திருந்தார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே.
**4**

மாறிலாமேனி – தோற்றமும், அழிவும் இல்லா உடம்பு. மாயையின் காரணமாய்த் தோன்றி நின்றழியும் உடம்பின்றித் தம் இச்சையாற் கொள்ளும் அருளுடம்பு உடையவர்.

மா – பெருமை. பாறினார் – அழிந்தவர்.

மணங்கமழும் கொன்றை மலரைச் சூடிய முடியினரும், மறை நான்கும் அங்கம் ஆறும் சொன்னவரும், நரைத்துத் திரைத்து மூத்து விளிதல் இல்லாத மேனியை உடையவரும், அழகிய பிறையைத் தஞ்சடைமேல் வைத்தவரும், அழிந்தாருடைய வெள்ளிய தலையோட்டில் பிச்சை ஏற்று உண்டவரும், பழையனூரைத் தமக்குரியதாக உடையவரும், தம் இயல்புகளைத் தெளிவாக உணர்ந்த மெய்ஞ்ஞானியரின் சித்தத்தில் இருந்தவரும் திருவாலங்காட்டுறையும் செல்வரே ஆவார்.

**2864.** அல்லும் பகலுமாய் நின்றார் தாமே
அந்தியுஞ் சந்தியு மானார் தாமே
சொல்லும் பொருளெலா மானார் தாமே
**தோத்திரமுஞ் சாத்திரமு மானார் தாமே**
பல்லுரைக்கும் பாவெலா மானார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
செல்லும் நெறிகாட்ட வல்லார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே.
**5**

அல் – இரவு. அந்தி – மாலை. சந்தி – பொழுதுகள் சந்திக்கும் காலம்

இரவும் பகலுமாய் நின்றவரும், அந்தியும் சந்தியும் ஆனவரும், சொல்லும், பொருளும் ஆகிய எல்லாப் பொருள்களும் ஆனவரும், தோத்திரமும் சாத்திரமும் ஆனவரும், மற்றை உலகியலுரைக்கும் எல்லாப் பாக்களும் ஆனவரும், பழையனூரைத் தமக்குரியதாக உடையவரும், செல்லுதற்குரிய வழியைக் காட்ட வல்லவரும் திருவாலங்காட்டுறையும் செல்வரே ஆவார்.

தோத்திரம் – இறைவனது புகழ்ப் பாடல்கள். சாத்திரம் – இறைவனது இயல்பையும், அவனுக்கு அடிமையும் உடைமையும் ஆகிய உயிர் உலகங்களது இயல்பையும், ஐயமும் மருட்கையும் இன்றித் தெளிவிப்பன. அதனால், அவை இரண்டும் இறைவனையே பொருளாக உடைமையின், "தோத்திரமும் சாத்திரமும் ஆனார்" என்று அருளிச் செய்தார். அவையிரண்டனாலும் அஞ்ஞானந்தேய, ஞானம்மிகும் என்க. திருவள்ளுவ நாயனாரும்,

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" (குறள். 5)

என்பதனால் தோத்திரத்தினது இன்றியமையாமையையும்,

"ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு" (குறள். 357)

என்பதனால் சாத்திரத்தினது இன்றியமையாமையையும் உணர்த்தியருளினார். "பல் உரைக்கும்" என்புழி, 'உரை' என்றது பொருளை. "உரைக்கும்" என்பதன்பின், "உரிய" என ஒருசொல் வருவிக்க. பா – பாட்டு. வீடுபற்றிய மெய்ந்நெறிச் செய்யுளும் நூலும் ஆகிய தோத்திர சாத்திரங்களேயன்றி அறம், பொருள், இன்பம் என்பவை பற்றிய உலகியற் செய்யுளும் நூல்களுமாகிய அவைகளாய் நிற்பவரும் அவர்தாமே என்பார், 'பல் உரைக்கும் பாவெலாம் ஆனார் தாமே' என்று அருளிச் செய்தார். சிறப்புப் பற்றிப் பாட்டினை எடுத்தோதி அருளினாராயினும், 'உரை எலாம் ஆனார்' என்பதும் கொள்ளப்படும். இவற்றுள், தோத்திர சாத்திரங்களாய் நிற்றல் இடையீடின்றி நேரே எனவும், பல்லுரைக்கும் உரிய பாவெலாம் ஆகி நிற்றல் 'அறம், பொருள், இன்பம்' என்னும் உறுதிப் பொருள்கள் வாயிலாக எனவும் கொள்க. ஆல் நிழல் இருந்து அறம் முதலிய நான்கினையும் நால்வர் முனிவர்கட்கு முதற்கண் உணர்த்தி, உலகியலும் மெய்ந்நெறியும் ஆகிய இரண்டனையும் தெரிவித்தருளிய முதல் ஆசிரியன் சிவபிரானே யாகலின், 'செல்லும் நெறிகாட்ட வல்லார் தாமே' என அருளிச் செய்தார்.

'அருந்தவருக் கறமுதல்நான் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ' (தி.8 திருவா. திருச்சாழல். 20)

என்று அருளிச் செய்ததுங் காண்க.

**2865.** தொண்டாய்ப் பணிவார்க் கணியார் தாமே
தூநீ றணியுஞ் சுவண்டர் தாமே
தண்டா மரையானும் மாலுந் தேடத்
தழலுருவா யோங்கி நிமிர்ந்தார் தாமே
பண்டான இசைபாட நின்றார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
திண்டோள்க ளெட்டு முடையார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 6

சுவண்டர் – சுவண்ணர் – நல்ல நிறமுடையவர்.

தொண்டராய்ப் பணிவார்க்கு அருகில் உள்ளவரும், தூய வெண்ணீற்றையணிந்து நல்ல நிறமுடையவரும், குளிர்ந்த தாமரை மலரில் உறையும் நான்முகனும் திருமாலும் தேடத் தழற் பிழம்பாய் நிமிர்ந்து ஓங்கியவரும், பழைமையான இசையில் பாட அது கேட்டு மகிழ்ந்து நின்றவரும், பழையனூரைத் தமக்கு உரியதாக உடையவரும், வலியதோள்கள் எட்டும் உடையவரும் திருவாலங்காட்டுறையும் அடிகளே ஆவார்.

**2866.** மையாருங் கண்ட மிடற்றார் தாமே
மயானத்தி லாடல் மகிழ்ந்தார் தாமே
ஐயாறும் ஆரூரும் ஆனைக் காவும்
அம்பலமுங் கோயிலாக் கொண்டார் தாமே
பையா டரவ மசைத்தார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
செய்யாள் வழிபட நின்றார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 7

செய்யாள் – திருமகள்

கருமைபொருந்திய மிடற்றினை உடையவரும், சுடுகாட்டில் மகிழ்ந்து ஆடினவரும், ஐயாறும், ஆரூரும், ஆனைக்காவும் தில்லையம்பலமும் கோயிலாகக் கொண்டவரும், படம் விரித்தாடும் பாம்பைக் கச்சையாகவும் கங்கணமாகவும் பிறவாகவும் கட்டியவரும், பழையனூரைத் தமக்குரியதாக உடையவரும், திருமகள் வழிபட அவட்கு வரமளித்து நின்றவரும் திருவாலங்காட்டுறையும் செல்வரே யாவர்.

2867. விண்முழுதும் மண்முழுது மானார் தாமே
மிக்கோர்க ளேத்துங் குணத்தார் தாமே
கண்விழியாக் காமனையுங் காய்ந்தார் தாமே
காலங்க ளூழி கடந்தார் தாமே
பண்ணியலும் பாட லுகப்பார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
திண்மழுவாள் ஏந்து கரத்தார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 8

விண் முழுதுமாய் மண் முழுதுமாய் வியாபித்து நின்றவரும், உயர்ந்தோர்கள் புகழும் குணத்தினரும், நெற்றிக் கண்ணை விழித்துக் காமனைக் காய்ந்தவரும், காலங்களாகிய ஊழிகள் பலவற்றைக் கடந்தவரும், பண்கள் உலவுதற்கு இடமாகிய பாடல்களை விரும்புபவரும், பழையனூரைத் தமக்குரியதாக உடையவரும், வலிய மழுவாயுதத்தை ஏந்திய கரத்தவரும் திருவாலங்காட்டுறையும் செல்வரே ஆவார்.

2868. காரார் கடல்நஞ்சை யுண்டார் தாமே
கயிலை மலையை உடையார் தாமே
ஊராஏ கம்ப முகந்தார் தாமே
ஒற்றியூர் பற்றி யிருந்தார் தாமே
பாரார் புகழப் படுவார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
தீராத வல்வினைநோய் தீர்ப்பார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 9

கடலில் தோன்றிய கரிய நஞ்சை உண்டவரும், கயிலை மலையை உடையவரும், தமக்குரிய ஊராக ஏகம்பத்தை விரும்பிக் கொண்டவரும், தமக்குரித்தல்லாததாய் ஒற்றியாகப் பெற்ற ஊர் என்று கொள்ளத்தகும் ஒற்றியூரை நிலையாகப் பற்றி நின்றவரும், உலகத்தாரால் உயர்த்துப் புகழப்படுபவரும், பழையனூரைத் தமக்குரியதாக உடையவரும், வலிய வினையாகிய தீராத நோயைத் தீர்ப்பவரும் திருவாலங்காட்டுறையும் செல்வரே ஆவார்.

கார்ஆர் – கருமை பொருந்திய. தமக்கு உரித்தல்லாது ஒற்றியாகப் பெற்ற ஊரை நிலையாகப் பற்றியிருக்கின்றார். வினை, எளிதில் பிறிதொன்றால் நீங்குவதன்றாகலின் "தீராத வல்வினைநோய்" என்றருளினார்.

2869. மாலைப் பிறைசென்னி வைத்தார் தாமே
வண்கயிலை மாமலையை வந்தி யாத
நீலக் கடல்சூ ழிலங்கைக் கோனை
நெரிய விரலா லடர்த்தார் தாமே
பாலொத்த மேனி நிறத்தார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
சீலத்தா ரேத்துந் திறத்தார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 10

மாலைக் காலத்துப் பிறையைச் சென்னியில் சேர்த்தவரும், வளமிக்க கயிலை மலையை வணங்காதவனும் கரிய கடலால் சூழப்பட்ட இலங்கைக்கு அரசனுமாகிய இராவணனுடைய உடல் நெரியுமாறு கால்விரலை ஊன்றி வருத்தினவரும், பால்போலும் நிறங்கொண்ட மேனியினரும், பழையனூரைத் தமக்குரியதாக உடையவரும், ஒழுக்கமுடைய உயர்ந்தோர் ஏத்தும் கூறுபாட்டில் அமைந்த அறக்கருணை உடையவரும் திருவாலங்காட்டுறையும் செல்வரே ஆவார்.

## 79. திருத்தலையாலங்காடு

(இத்திருப்பதிகம் சிவபெருமானை அடையாது பல நாட்களை வீணே போக்கினமைக்கு இரங்கி அருளிச் செய்தது)

ப.தொ.எண் : 292 பதிக எண் : 79

2870. தொண்டர்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னைச்
சூழ்நரகில் வீழாமே காப்பான் தன்னை
அண்டத்துக் கப்பாலைக் கப்பா லானை
ஆதிரைநா ளாதரித்த அம்மான் தன்னை
**முண்டத்தின் முளைத்தெழுந்த தீயா னானை**
மூவுருவத் தோருருவாய் முதலாய் நின்ற
தண்டத்திற் றலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 1

ஆதரித்த – விரும்பிய. முண்டம் – நெற்றி.
நெருப்பு – சிவபிரானது நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிற்று.
தண்டம் – சிவலிங்கம்.
மூவுருவம் –அயன் அரி அரன் உருவம்.
ஒருருவம் – மூவுருவுக்கும் மேலான பரமசிவம்.

தொண்டர்க்குத் தன்வழி நிற்றலே நன்னெறியாகச் செய்து நின்றவனும், சூழும் நரகில் வீழாமல் தொண்டரைக் காப்பவனும், இப்புவிக்கு அப்பாலைக்கு அப்பால் ஆனவனும், ஆதிரை நாளை விரும்பிக்கொண்ட தலைவனும், நெற்றியிடத்துத் தோன்றி வளரும் தீயினனும், அயன், அரி, அரன் என்னும் மூவுருவங்களுள் ஒருருவமாய அரனாய் நின்று அம்மூவுருவங்களுக்கும் முதலாய் நின்ற இலிங்கவுருவினனும் ஆகிய தலையாலங் காட்டு அண்ணலை அடையாமல் மிக்க நாளை வீணாள் ஆக்கினேன்.

2871. அக்கிருந்த அரையானை அம்மான் தன்னை
அவுணர்புர மொருநொடியில் எரிசெய் தானைக்
கொக்கிருந்த மகுடத்தெங் கூத்தன் தன்னைக்
குண்டலஞ்சேர் காதானைக் குழைவார் சிந்தை
புக்கிருந்து போகாத புனிதன் தன்னைப்
புண்ணியனையெண்ணருஞ்சீர்ப் போகமெல்லாந்
தக்கிருந்த தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 2

அக்கு – சங்குமணி. கொக்கு என்றது அதன் இறகை.
கொக்கிறகு – ஒருவகை மலர் என்றும் சொல்வார்கள்.
மகுடம் – (சடை) முடி. குழைவார் – உள்ளம் உருகுவார்.

சங்குமணி கட்டிய இடையினனும், தந்தை ஆனவனும், அசுரர் புரங்கள் மூன்றையும் ஒரு விநாடியில் எரித்தவனும், கொக்கிறகு செருகப்பட்ட சடைமுடிக்கூத்தனும், குண்டலஞ் சேர் காதினனும், தன்னை எண்ணி உருகுவார் மனத்துட்புக்கு அங்கிருந்து போகாத புனிதனும், புண்ணிய உருவினனும், அளவற்ற செல்வத்தான் ஆகும் இன்பமெல்லாம் வாய்த்திருந்தானும் ஆகிய தலையாலங் காட்டண்ணலை அடையாமல் மிக்க நாளை வீணாள் ஆக்கினேன்

**2872.** மெய்த்தவத்தை வேதத்தை வேத வித்தை
விளங்கிளமா மதிசூடும் விகிர்தன் தன்னை
எய்த்தவமே உழிதந்த ஏழை யேனை
யிடர்க்கடலில் வீழாமே யேற வாங்கிப்
பொய்த்தவத்தா ரறியாத நெறிநின் றானைப்
புனல்கரந்திட் டுமையொடொரு பாகம் நின்ற
தத்துவனைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 3

சிவபிரானின் பணிகளே உண்மைத்தவம்.
பொய்த்தவம் – சிவபிரான் தான் முழு முதற்கடவுள் என்னும் உண்மை கொள்ளாது பிற செயல்களை மேற்கொள்வது.

உண்மைத் தவமாகி, வேதமுமாகி, வேதத்தின் முதலும் ஆகி, ஒளிரும் இளம்பிறையைச் சூடி, வேறுபட்ட இயல்பினனும், வீணே அலைந்து இளைத்த அறிவற்ற என்னைத் துன்பக் கடலில் வீழாமல் கரையேற எடுத்துப் பொய்த்தவத்தார் அறிய முடியாத நெறியில் என்னை நிற்பித்தவனும், கங்கையைச் சடையில் கரந்து உமையம்மையை ஒரு கூற்றிலே கொண்டு நின்றவனும் ஆகிய தலையாலங் காட்டண்ணலை அடையாமல் மிக்க நாளை வீண்நாள் ஆக்கினேன்.

---

**2873.** சிவனாகித் திசைமுகனாய்த் திருமா லாகிச்
செழுஞ்சுடராய்த் தீயாகி நீரு மாகிப்
புவனாகிப் புவனங்க ளனைத்து மாகிப்
பொன்னாகி மணியாகி முத்து மாகிப்
பவனாகிப் பவனங்க ளனைத்து மாகிப்
பசுவேறித் திரிவானோர் பவனாய் நின்ற
தவனாய தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 4

பவன் – வேண்டும் இடங்களில் வேண்டியவாறே தோன்றுபவன்.
தவன் – தவக்கோலம் உடையவன்.
சிவன் – பவன்.
இறைவனது சிறந்த சிவாதி எட்டு பவாதி எட்டு என்னும் நாமாட்டகங்களில் முதற்கணுள்ள திருநாமங்கள்.

குணிருத்திரனாய் (அரன்), நான்முகனாய்த் திருமாலாய், சூரிய சந்திரராய், தீயாய், நீராய், புவலோகமாய், புவனங்கள் யாவுமாய், பொன்னாய், மணியாய், முத்துமாய், வேண்டுமிடங்களில் வேண்டிய வாறே தோன்றுபவனாய், உயிர்கள் வாழ்தற்கேற்ற இடங்கள் யாவுமாய், இடபத்தை ஊர்ந்து திரியும் ஒரு கோலத்தை உடையனாய், தவ வேடந்தாங்கி நின்ற தலையாலங் காட்டண்ணலை அடையாமல் மிக்க நாளை வீணாள் ஆக்கினேன்.

**2874.** கங்கையெனுங் கடும்புனலைக் கரந்தான் தன்னைக்
காமருபூம் பொழிற்கச்சிக் கம்பன் தன்னை
அங்கையினில் மான்மறியொன் றேந்தி னானை
ஐயாறு மேயானை ஆரூ ரானைப்
பங்கமிலா அடியார்க்குப் பரிந்தான் தன்னைப்
பரிதிநிய மத்தானைப் பாசூ ரானைப்
சங்கரனைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 5

பங்கம் – குறைபாடு. பரிந்தான் – இரங்கினான்

விரைந்து வரும் புனலையுடைய கங்கையைச் சடையில் கரந்தவனாய், விரும்பத்தக்க அழகிய பொழில் சூழ்ந்த கச்சி ஏகம்பனாய், அழகிய கையில் மான்கன்றொன்றை ஏந்தியவனாய், ஐயாறு மேயவனாய், ஆரூரனாய், குற்றமில்லா அடியார் மாட்டுப் பரிவுடையனாய், பரிதி நியமத்தவனாய், பாசூரினனாய், சங்கரனாய் நின்ற தலையாலங்காட்டண்ணலை அடையாமல் மிக்க நாளை வீணாள் ஆக்கினேன்.

---

**2875.** விடம்திகழும் அரவரைமேல் வீக்கி னானை
விண்ணவர்க்கு மெண்ணரிய அளவி னானை
அடைந்தவரை அமருலகம் ஆள்விப் பானை
அம்பொன்னைக் கம்பமா களிறட் டானை
மடந்தையொரு பாகனை மகுடந் தன்மேல்
வார்புனலும் வாளரவும் மதியும் வைத்த
தடங்கடலைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 6

அரை – இடை. வீக்கினான் – கட்டினான்.
கம்பம் – அசைதல். அட்டான் – அழித்தான்.
மகுடம் – சடை முடி. வார்புனல் – ஒழுகும் நீர்

விடமுடைய பாம்பினை இடையின்மேல் கட்டியவனாய், தேவர்களாலும் எண்ணுதற்கரிய அளவினனாய், தன்னை அடைந்தவரைத் தேவருலகம் ஆளச் செய்பவனாய், அழகிய பொன்னாய், அசையும் பெரிய களிற்றி யானையை அழித்தவனாய், உமை திகழ் ஒரு பாகனாய், சடைமுடிமேல் ஒழுகும் நீரையுடைய கங்கையையும், கொடிய பாம்பையும், பிறையையும் வைத்தவனாய் அகன்ற கடலை ஒத்தவனாய்த் திகழும் தலையாலங் காட்டண்ணலை அடையாமல் மிக்க நாளை வீணாள் ஆக்கினேனே.

---

**2876.** விடையேறிக் கடைதோறும் பலிகொள் வானை
வீரட்டம் மேயானை வெண்ணீற் றானை
முடைநாறு முதுகாட்டி லாட லானை
முன்னானைப் பின்னானை யந்நா ளானை
**உடையாடை யுரிதோலே** உகந்தான் தன்னை
உமையிருந்த பாகத்து ளொருவன் தன்னைச்
சடையானைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 7

கடைதோறும் – வாயில்கள்தோறும். பலி – பிச்சை.
அந்நாள் – நிகழ்காலம். உடை – இடையில் உடுக்கப்படுவது.
ஆடை – மேலே இடப்படுவது.
பதிக மகுடம் – தலையாலங் காடன் தன்னைச் சாராதே சாலநாள் போக்கினேனே

இடபமூர்ந்து வீட்டு வாயில்கள் தோறும் பிச்சை யேற்பவனாய், வீரட்டங்கள் எட்டும் மேவினவனாய், வெண்ணீறு அணிந்தவனாய், பிணம் எரிந்து முடைநாறும் சுடுகாட்டில் ஆடுபவனாய், இறப்பு எதிர்வு நிகழ்வு ஆகிய முக்காலமும் ஆபவனாய், அரையிலுடை புலித்தோலாகவும் மேலாடை யானைத் தோலாகவும் அமைய விரும்பினனாய், உமை பொருந்திய பாகத்தோடுள்ள ஒருவனாய், சடையவனாய்த் திகழும் தலையாலங் காட்டண்ணலை அடையாமல் மிக்க நாளை வீணாள் ஆக்கினேன்.

**2877.** கரும்பிருந்த கட்டிதனைக் கனியைத் தேனைக்
கன்றாப்பின் நடுதறியைக் காறை யானை
இரும்பமர்ந்த மூவிலைவேல் ஏந்தி னானை
யென்னானைத் தென்னானைக் காவான் தன்னைச்
சுரும்பமரும் மலர்க்கொன்றை சூடி னானைத்
தூயானைத் தாயாகி உலகுக் கெல்லாந்
தரும்பொருளைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 8

காறை – கம்பியாக அமைத்து அணியும் அணிகலம்

கரும்பின்கண் இருந்த சாறுகொண்டு சமைத்த கட்டியையும் கனியையும் தேனையும் ஒப்பவனாய், கன்றாப்பூரின் நடுதறியாய், பன்றியின் வெண்மருப்பாலாகிய காறை அணியினனாய், இரும்பாலான மூவிலை வேலை ஏந்தியவனாய், எனக்கு முதல்வனாய், அழகிய ஆனைக்காவனாய், வண்டு மொய்க்கும் கொன்றை மலரைச் சூடியவனாய், தூயவனாய், தாயானவனாய், உலகுக்கெல்லாம் பொருள் வழங்குபவனாய்த் திகழும் தலையாலங்காட்டு அண்ணலை அடையாமல் மிக்க நாளை வீணாள் ஆக்கினேன்.

---

**2878.** பண்டளவு நரம்போசைப் பயனைப் பாலைப்
படுபயனைக் கடுவெளியைக் கனலைக் காற்றைக்
கண்டளவிற் களிகூர்வார்க் கெளியான் தன்னைக்
காரணனை நாரணனைக் கமலத் தோனை
எண்டளவி லென்னெஞ்சத் துள்ளே நின்ற
எம்மானைக் கைம்மாவி னுரிவை பேணுந்
தண்டரனைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 9

கடுவெளி – பெரிய வானம். தளம் – இதழ் எண்டளம் – எட்டு இதழ். இதயக்கமலம் – எட்டிதழ் தாமரை வடிவிற்று என்பது மெய்ந்நூல்களின் துணிபு.

பண்டுதொட்டுவரும் இசையிலக்கணத்தொடு பொருந்திய யாழிசையின் பயனாய், பாலாய், பாலின் சுவையாய், பெரியவானமாய், கனலாய், காற்றாய், தன்னைக் கண்ட அளவிலே மகிழ்ச்சி மிகுவார்க்கு எளியனாய், முதல்வனாய், திருமாலாய், நான்முகனாய், எட்டிதழ்த் தாமரை வடிவிலுள்ள இல்லமாகிய என் நெஞ்சத்துள்ளே நின்ற எம் தலைவனாய், யானைத் தோற் போர்வையைப் பேணுபவனாய், இலிங்க வடிவினனாய்த் திகழும் தலையாலங் காட்டண்ணலை அடையாமல் மிக்க நாளை வீணாள் ஆக்கினேன்.

---

**2879.** கைத்தலங்க ளிருபதுடை அரக்கர் கோமான்
கயிலைமலை அதுதன்னைக் கருதா தோடி
முத்திலங்கு முடிதுளங்க வளைக ளெற்றி
முடுகுதலுந் திருவிரலொன் றவன்மேல் வைப்பப்
பத்திலங்கு வாயாலும் பாடல் கேட்டுப்
பரிந்தவனுக் **கிராவணனென் றீந்த நாமத்**
**தத்துவனைத்** தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 10

இராவண னென்று ஈந்த நாம தத்துவன்

இருபது கைகளையுடைய அரக்கர் கோமான் தோள்வளைகளைப் புடைந்து ஓடிச்சென்று ஆராயாது கயிலை மலையை விரைந்தெடுக்க அவன் முத்து விளங்கும் முடிகள் பத்தும் நடுங்கும் வண்ணம் திருவிரல் ஒன்றை அவன்மேல் வைத்து ஊன்ற அவன் தன் பத்து வாயாலும் பாடிய சாமகீதப் பாடலைக் கேட்டு இரக்கம் மிக்கவனாய் அவனுக்கு இராவணன் என்ற பெயரை ஈந்த தத்துவனாய்த் திகழும் தலையாலங்காட்டண்ணலை அடையாமல் மிக்க நாளை வீணாள் ஆக்கினேனே.

## 80. திருமாற்பேறு

ப.தொ.எண் : 293 — பதிக எண் : 80

2880. பாரானை பாரினது பயனா னானைப்
படைப்பாகிப் பல்லுயிர்க்கும் பரிவோன் தன்னை
ஆராத இன்னமுதை அடியார் தங்கட்
கனைத்துலகு மானானை அமரர் கோனைக்
காராருங் கண்டனைக் கயிலை வேந்தைக்
கருதுவார் மனத்தானைக் காலற் செற்ற
சீரானைச் செல்வனைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 1

இப்பூமி ஆனவனும், பூமியின் பயன் ஆனவனும், படைத்தல் தொழிலே தானாய் அதன்கண் நின்றவனும், பல்லுயிர் மேலும் இரக்கம் கொண்டவனும், அடியார்க்குத் தெவிட்டாத இனிய அமுது ஆனவனும், எல்லா உலகுகளாகவும் விரிந்தவனும், தேவர் கோனாய்த் திகழ்பவனும், கரிய கண்டமுடையவனும், கயிலை மலைக்கு இறையவனும், நினைவார் மனத்தில் நிற்பவனும், இயமனை வெகுண்டொறுத்த புகழுடையவனும், செல்வம் மிக்கவனும் ஆகித் திருமாற் பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்று அடைந்தேன்.

2881. விளைக்கின்ற நீராகி வித்து மாகி
விண்ணொடுமண் ணாகி விளங்கு செம்பொன்
துளைக்கின்ற துளையாகிச் சோதி யாகித்
தூண்டரிய சுடராகித் துளக்கில் வான்மேல்
முளைக்கின்ற கதிர்மதியும் அரவு மொன்றி
முழங்கொலிநீர்க் கங்கையொடு மூவா தென்றுந்
திளைக்கின்ற சடையானைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 2

துளக்கில் வான் – அசைதல் இல்லாத வானம்

விளைவை உண்டாக்கும் நீராயும், வித்தாயும், விண்ணாயும், மண்ணாயும், செம்பொன் விளையும் சுரங்கமாயும், அலகில் சோதியாயும், தூண்டுதல் வேண்டா விளக்காயும், அசை வில்லா வானத்தின்மேல் தோன்றி ஒளிர்பிறையும் பாம்பும் என்றும் மூவாது நின்று ஒலிமிக்க நீரையுடைய கங்கையுடன் விளையாடி மகிழ்கின்ற சடையனாகவும் ஆகித் திருமால் பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்றடைந்தேன்.

2882. மலைமகள்தங் கோனவனை மாநீர் முத்தை
மரகதத்தை மாமணியை மல்கு செல்வக்
கலைநிலவு கையானைக் கம்பன் தன்னைக்
காண்பினிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை
விலைபெரிய வெண்ணீற்று மேனி யானை
மெய்யடியார் வேண்டுவதே வேண்டு வானைச்
சிலைநிலவு கரத்தானைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச் சென்றடைந்தேன் நானே. 3

மலைமகளுடைய தலைவனும், கடலில் படும் முத்தும், மரகதமும், சிறந்த மாணிக்க மணியும் போல்பவனும், மான் கன்றையே மிக்க செல்வமாகக் கையிடத்துக் கொண்டவனும், கச்சி ஏகம்பனும், விலைமிக்க வெண்ணீற்று மேனியனும், உண்மையடியார் கருதுவதையே தானும் கருதி முடித்தருளுபவனும், வில் நிலவும் கரத்தவனும் ஆகித் திருமாற்பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்றடைந்தேன்.

**2883.** உற்றானை யுடல்தனக்கோர் உயிரா னானை
ஓங்காரத் தொருவனையங் குமையோர் பாகம்
பெற்றானைப் பிஞ்ஞகனைப் பிறவா தானைப்
பெரியனவும் அரியனவும் எல்லாம் முன்னே
கற்றானைக் கற்பனவுந் தானே யாய
கச்சியே கம்பனைக் காலன் வீழச்
செற்றானைத் **திகழொளியைத்** திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 4

உறவானவனும், உடலிடத்து உயிர் ஆனவனும், ஓங்காரத்தில் முழுப்பொருள் தான் ஒருவனே ஆனவனும், உமை ஒரு பாகத்தைப் பெற்றவனும், தலைக்கோலச் சிறப்பினனும், பிறவாதவனும், பெரியனவும் அரியனவும் ஆகிய எல்லாப் பொருள்களையும் பிறர் எல்லார்க்கும் முன்னே கற்றவனும், கற்றவனாகிய தானே கற்கப்படும் பொருளுமாய் ஆனவனும், கச்சி ஏகம்பனும், இயமன் இறந்துபடச் சினந்தவனும், **தானே விளங்கும் ஒளியினனும்** ஆகித் திருமாற் பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்று அடைந்தேன்.

பதிக மகுடம் – திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே.

---

**2884.** நீறாகி நீறுமிழும் நெருப்பு மாகி
நினைவாகி நினைவினிய மலையான் மங்கை
கூறாகிக் கூற்றாகிக் கோளு மாகிக்
குணமாகிக் குறையாத உவகைக் கண்ணீர்
ஆறாத ஆனந்தத் தடியார் செய்த
அனாசாரம் பொறுத்தருளி அவர்மே லென்றுஞ்
சீறாத பெருமானைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 5

சாம்பலாயும், சாம்பலை உமிழும் நெருப்பாயும், நினைவாயும், நினைவில் நின்று இனிக்கும் உமையம்மை நிலவு கூறாயும், இயமனாயும், தீயனவும் நல்லனவுமாய் நிற்கும் அவ்வினைகளாயும், நிறைந்த அன்புக் கண்ணீரினராய் நீங்காத ஆனந்தத்தையுடைய அடியார்கள் செய்த அனாசாரமாகிய சிறு குற்றங்களைப் பொறுத்து அவர்களை என்றுஞ் சினவாத பெருமானாயும் ஆகித் திருமாற் பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்று அடைந்தேன்.

அனாசாரம் – அறியாமையாலும், மாட்டாமையாலும், செயலிழப்பினாலும் மனத்தொடுபடாது செய்யும் சிறு குற்றங்கள்.
ஆசாரம் – வடசொல். ஒழுக்கம் – முறைமை.
நீறு – சாம்பல் – உலகம் ஒடுங்கிய நிலையையும், நெருப்பு – ஒடுக்கும் அவரது சத்தியையும், நினைவு – உலகத்தை மீளப் படைக்கும் அவரது சங்கற்பத்தையும், கூறாகி – சங்கற்பத்தின் வழிபடைத்தலையும், கூற்றாகி – வினைகளைக் கூட்டுவித்தலையும் குறிக்கும்.

2885. மருவினிய மறைப்பொருளை மறைக்காட் டானை
மறப்பிலியை மதியேந்து சடையான் தன்னை
உருநிலவு மொண்சுடரை உம்ப ரானை
உரைப்பினிய தவத்தானை உலகின் வித்தைக்
கருநிலவு கண்டனைக் காளத்தியைக்
கருதுவார் மனத்தானைக் கல்வி தன்னைச்
செருநிலவு படையானைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 6

பொருந்துதற்கினிய மறைப்பொருள் ஆனவனும், மறைக்காட்டில் உறைபவனும், மறப்பில்லாத வனும், பிறை சூடிய சடையினனும், நிலவுகின்ற தன் நிறத்தால் ஒளிரும் சுடர் ஆனவனும், மேலிடத்து உள்ளவனும், பேசுதற்கினியவனும், தவக்கோலம் தாங்கியவனும், உலகிற்கு வித்தானவனும், கறுத்த கண்டத்தவனும், காளத்தி நகரினனும், நினைப்பவர் உள்ளத்தில் நிற்பவனும், போர்த்தொழில் பயின்ற படைக்கலங்களை ஏந்தியவனும் ஆகித் திருமாற்பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்று அடைந்தேன்.

உரு – நிறம். கல்வி – உறுதிப்பொருளைக் கூறும் நூல்கள். இறைவர் அவற்றின் பொருளாய் நிற்கிறார்.

2886. பிறப்பானைப் பிறவாத பெருமை யானைப்
பெரியானை அரியானைப் பெண்ஆண் ஆய
நிறத்தானை நின்மலனை **நினையா தாரை**
**நினையானை நினைவோரை நினைவோன் தன்னை**
அறத்தானை அறவோனை ஐயன் தன்னை
அண்ணல்தனை நண்ணரிய அமர ரேந்துந்
திறத்தானைத் திகழொளியைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 7

பலவகைப் பிறப்புகளாய் உள்ளவனும், வினை வயத்தால் பிறவாத பெருமையுடையவனும், தோற்றம் ஆற்றல் முதலியவற்றால் மிகப் பெரியவனும், உணர்தற்கு அரியவனும், பெண்ணும் ஆணுமாகிய வடிவினனும், குற்றமற்றவனும், தன்னை நினையாதாரைத் தான் நினையாதவனும், தன்னை நினைப்போரைத் தான் நினைப்பவனும், அறமேயாய் நின்று அதனை நிலை பெறுவிப்பவனும், நன்மை தீமைகளை அடைவிக்கும் அறவோனும், வியக்கத் தக்கவனும், தலைவனும், தேவர்கள் வணங்கும் தன்மையனும், திகழ்சோதியும் ஆகித் திருமாற்பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்று அடைந்தேன்.

நிறம் என்றது வடிவத்தை.

2887. வானகத்தில் வளர்முகிலை மதியந் தன்னை
வணங்குவார் மனத்தானை வடிவார் பொன்னை
ஊனகத்தில் உறுதுணையை உலவா தானை
ஒற்றியூர் உத்தமனை ஊழிக் கன்றைக்
கானகத்துக் கருங்களிற்றைக் காளத் தியைக்
கருதுவார் கருத்தானைக் கருவை மூலத்
தேனகத்தி லின்சுவையைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 8

வானில் வளர் முகிலாயும், மதியமாயும், வணங்குவார் மனத்தில் உறைபவனாயும், அழகிய பொன்னாயும், உடம்பில் உயிர்க்குற்ற உறுதுணையாயும், அழிவில்லாதவனாயும், ஒற்றியூர் வாழ் உத்தமனாயும், ஊழிக்கு ஊழியாயும், கானகத்து வாழ் கருங்களிறாயும், காளத்தி வாழ்வானாயும், கருதுவார் கருத்துள் நிலவுபவனாயும், முதன் முதலாயும், தேனில் இனிய சுவையாயும், நிலவித்திருமாற் பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்றடைந்தேன்.

முகில் – கைம்மாறு கருதாது உதவுங்கடப்பாடு.

மதி – அகவிருளைச் சிறிது சிறிதாக நீக்கி இறுதியில் முற்றும் நீக்குதல்.

தேனகத்தில் இன்சுவை – பேரின்பஞ் செய்தல்

உலவாதான் – அழியாதவன்

2888. முற்றாத முழுமுதலை முளையை மொட்டை
முழுமலரின் மூர்த்தியை முனியா தென்றும்
பற்றாகிப் பல்லுயிர்க்கும் பரிவோன் தன்னைப்
பராபரனைப் பரஞ்சுடரைப் பரிவோர் நெஞ்சில்
உற்றானை உயர்கருப்புச் சிலையோன் நீறாய்
ஒள்ளழல்வாய் வேவவுறு நோக்கத் தானைச்
செற்றானைத் திரிபுரங்கள் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 9

மூவாத, முதற்பொருளாயும், முளையாயும், அரும்பாயும் மலரின் வடிவினனாயும், எக்காலத்தும் வெறுப்பிலனாய்ப் பல்லுயிர்க்குந் துணையாகி இரக்கமுடையனாயும், மேற் பொருளும், கீழ்ப்பொருளும் தான் ஆனவனாயும், மேலான ஒளிப்பிழம்பாயும், எண்ணுவார் மனத்தில் பொருந்தியிருப் பவனாயும், உயர்ந்த கரும்பு வில்லையுடைய மன்மதன் ஒள்ளிய நெருப்பிடத்து வெந்து நீறாகுமாறு செய்த பார்வையனாயும் திரிபுரங்களை அழித்தவனாயும் ஆகித் திருமாற் பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்றடைந்தேன்.

2889. விரித்தானை நான்மறையோ டங்க மாறும்
வெற்பெடுத்த இராவணனை விரலா லூன்றி
நெரித்தானை நின்மலனை யம்மான் தன்னை
நிலாநிலவு செஞ்சடைமேல் நிறைநீர்க் கங்கை
தரித்தானைச் சங்கரனைச் சம்பு தன்னைத்
தரியலர்கள் புரமூன்றுந் தழல்வாய் வேவச்
சிரித்தானைத் திகழொளியைத் திருமாற்
பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன்
நானே. 10

அம்மான் – தலைவன். சங்கரன் – இன்பத்தைச் செய்பவன்.

சம்பு – இன்பத்தை உண்டாக்குபவன்.

தரியலர்கள் – பகைவர்கள்.

நான்மறைகளையும் ஆறங்கங்களையும் விரித்தவனும், கயிலை மலையை எடுக்க முயன்ற இராவணனை விரலூன்றித் துன்புறுத்தியவனும், குற்றமற்றவனும், தலைவனும், பிறைதங்கிய செஞ்சடைமேல் நீர்நிறைந்த கங்கையைத் தரித்தவனும், இன்பத்தைச் செய்யும் சங்கரனும், இன்ப காரணனான சம்புவும் பகைத்தார் புரங்கள் மூன்றும் நெருப்பிடத்து வேகுமாறு சிரித்தவனும், ஒளிப்பிழம்பாய் விளங்கியவனும் ஆகித் திருமாற்பேற்றில் திகழும் எம் செம்பவளக் குன்றினை நான் சென்று அடைந்தேன்.

## 81. திருக்கோடிகா

(இத்திருப்பதிகம் 'கண்டாய்' என்னும் முடிபுடைய தொடர்களால் இறைவன் பெருமைகளை வகுத்தருளிச் செய்தது )

ப.தொ.எண் : 294 பதிக எண் : 81

2890. கண்டலஞ்சேர் நெற்றியிளங் காளை கண்டாய்
கல்மதில்சூழ் கந்தமா தனத்தான் கண்டாய்
மண்டலஞ்சேர் மயக்கறுக்கும் மருந்து கண்டாய்
மதிற்கச்சி யேகம்பம் மேயான் கண்டாய்
விண்டலஞ்சேர் விளக்கொளியாய் நின்றான்
கண்டாய்
மீயச்சூர் பிரியாத விகிர்தன் கண்டாய்
கொண்டலஞ்சேர் கண்டத்தெங் கூத்தன்
கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே.
1

கந்தமாதனம் – கயிலை போல்வதொரு மலை. வைப்புத் தலம். தலம் – வடசொல். கண் + தலம் – கண்டலம்
விண் + தலம் – விண்டலம் (தேவருலகம்)
மண் + தலம் – மண்டலம் (பலவகை புவனம்)
கொண்டல் – மேகம். குழகன் – அழகன்

திருக்கோடிகாவில் விரும்பியுறையும் அழகனே, நெற்றியிடத்துக் கண் சேர்ந்த இளங் காளையாய், பக்கமலைகளான மதில்கள் சூழ்ந்த கந்தமாதனத்துறைவானாய், பலவகைப் புவனங்களிலும் சென்று பிறத்தற்குக் காரணமாகிய மயக்கத்தை அறுக்கும் மருந்தாய், மதிலாற் சூழப்பட்ட காஞ்சி மாநகரத்து ஏகம்பத்தை மேவியவனாய், தேவருலகிற் சென்று எறிக்கும் விளக்கொளியாய், மீயச்சூரில் நிலைத்து நிற்கும் வேறுபடு தன்மையனாய், மேகத்தினது அழகு சேர்ந்த கண்டத்தனாய் எம் கூத்தனாய் விளங்குவான் ஆவான்.

**2891.** வண்டாடு பூங்குழலாள் பாகன் கண்டாய்
மறைக்காட் டுறையு மணாளன் கண்டாய்
பண்டாடு பழவினைநோய் தீர்ப்பான் கண்டாய்
பரலோக நெறிகாட்டும் பரமன் கண்டாய்
செண்டாடி அவுணர்புரஞ் செற்றான் கண்டாய்
திருவாரூர்த் திருமூலட் டானன் கண்டாய்
கொண்டாடும் அடியவர்தம் மனத்தான் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே.
2

மணாளன் – அழகன். பரலோகம் – எல்லா உலகங்களுக்கும் மேலான உலகம்.
பரமன் – யாவர்க்கும் மேலானவன்.
செண்டாடி – மிக இலகுவில் அழித்தல்

திருக்கோடிகாவில் விரும்பியுறையும் அழகனே வண்டுகள் மொய்க்கும் பூக்களணிந்த குழலையுடைய உமாதேவியின் பாகனாய், திருமறைக்காட்டில் வாழும் அழகினனாய், பண்டு செய்த வினையான் வரும் துன்பத்தைத் தீர்ப்பவனாய், வீட்டுலக வழியையுணர்த்தும் பரமனாய், செண்டு கொண்டு ஆடும் ஆட்டம் போல எவ்வகை வருத்தமுமின்றிப் பகைவர் புரங்களை அழித்தவனாய், திருவாரூர் மூலட்டானத்தினனாய் விளங்குவான் ஆவான்.

**2892.** அலையார்ந்த புனற்கங்கைச் சடையான் கண்டாய்
அடியார்கட் காரமுத மானான் கண்டாய்
மலையார்ந்த மடமங்கை பங்கன் கண்டாய்
வானோர்கள் முடிக்கணியாய் நின்றான் கண்டாய்
இலையார்ந்த திரிசூலப் படையான் கண்டாய்
ஏழுலகு மாய்நின்ற எந்தை கண்டாய்
கொலையார்ந்த குஞ்சரத்தோல் போர்த்தான் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே.
3

ஆர்ந்த – நிறைந்த, பொருந்திய

திருக்கோடிகாவில் விரும்பியுறையும் அழகனே, அலைகளுடன் கூடிய நீரையுடைய கங்கை தங்கும் சடையனாய், அடியார்களுக்கு ஆரமுதாய், மலையில் தோன்றி வளர்ந்த இளமங்கை பார்வதியின் பங்கனாய், வானோர்தம் முடிக்கணியாய்த் தன் திருவடிகளைத் தந்து நின்றவனாய், இலை போன்ற திரிசூலப்படையினனாய், ஏழுலகுமாய் வியாபித்த எந்தையாய், கொலைத் தொழிலிற் பழகிய யானையது தோலைப் போர்த்துக் கொண்டவனாய் விளங்குவான் ஆவான்.

**2893.** மற்றாருந் தன்னொப்பா ரில்லான் கண்டாய்
மயிலாடு துறையிடமா மகிழ்ந்தான் கண்டாய்
புற்றா டரவணிந்த புனிதன் கண்டாய்
பூந்துருத்திப் பொய்யிலியாய் நின்றான் கண்டாய்
**அற்றார்கட் கற்றானாய் நின்றான் கண்டாய்**
ஐயா றகலாத ஐயன் கண்டாய்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தன் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே.
4

திருக்கோடிகாவில் விரும்பி உறையும் அழகனே தனக்கு ஒப்பார் யாரும் இலனாய், மயிலாடு துறையைத் தனக்குப் பொருந்திய இடமாகக் கொண்டு மகிழ்ந்தவனாய், புற்றில் வாழ் அரவுகளை அணிந்த புனிதனாய், பூந்துருத்தியில் பொய்யிலியாய், பற்றற்ற அடியார்க்கு மறைதலின்றி வெளிப்பட்டு நிற்பானாய், ஐயாறு அகலாத ஐயனாய், குற்றாலத்து விரும்பி உறையுங் கூத்தனாய் விளங்குவான் ஆவான்.

திருப்பூந்துருத்திப் பெருமானை, சுவாமிகள் யாண்டும் "பொய்யிலி" என்றே அருளுதல் காணப்படும். அற்றார்கட்கு அற்றான் – அற்றவர்க்கற்ற சிவம் – மற்றுப் பற்று சிறிதும் இலராய் நீங்கியவர்க்கு மறைந்து நிற்கும் தன்மை சிறிதுமின்றி இடையீடில்லாத அனுபவப் பொருளாய் நிற்பவன்.

2894. வாரார்ந்த வனமுலையாள் பங்கன் கண்டாய்
மாற்பேறு காப்பா மகிழ்ந்தான் கண்டாய்
போரார்ந்த மால்விடையொன் றூர்வான் கண்டாய்
புகலூரை அகலாத புனிதன் கண்டாய்
நீரார்ந்த நிமிர்சடையொன் றுடையான் கண்டாய்
**நினைப்பார்தம் வினைப்பாரம் இழிப்பான் கண்டாய்**
கூரார்ந்த மூவிலைவேற் படையான் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே.
5

இழிப்பான் – இறக்குவான். கோடிகா – மூன்று கோடி (திரிகோடி) இருடியர் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது

திருக்கோடிகாவில் விரும்பியுறையும் அடிகளே கச்சுப் பொருந்திய அழகிய முலையாளின் பங்கனாய், மாற்பேற்றைத் தனக்குரிய இடமாகக் கொண்டு மகிழ்ந்தானாய், போர்ச் செயலில் பழகிய பெரிய விடை ஒன்றை ஊர்தியாக உடையானாய், புகலூரை நீங்காத புனிதனாய், கங்கை பொருந்திய நீண்ட ஒப்பற்ற சடையை உடையானாய், நினைக்கும் அடியாருடைய வினைச்சுமையை இறக்கி வைப்பானாய், கூர்மை பொருந்திய மூவிலை வேற்படையை உடையானாய் விளங்குவான் ஆவான்.

2895. கடிமலிந்த மலர்க்கொன்றைச் சடையான் கண்டாய்
கண்ணப்ப **விண்ணப்புக்** கொடுத்தான் கண்டாய்
படிமலிந்த பல்பிறவி யறுப்பான் கண்டாய்
பற்றற்றார் பற்றவனாய் நின்றான் கண்டாய்
அடிமலிந்த சிலம்பலம்பத் திரிவான் கண்டாய்
அமரர்கணந் தொழுதேத்தும் அம்மான் கண்டாய்
கொடிமலிந்த மதில்தில்லைக் கூத்தன் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே.
6

அலம்ப – ஒலிக்க. விண்ணப்பு – சிவத்தன்மை

திருக்கோடிகாவில் விரும்பியுறையும் அழகனே! மணம் கமழும் கொன்றை மலரை அணிந்து விளங்கும் சடையனாய், கண்ணை அப்பிய செயற்கு **விண்ணைப் பொருந்துதலை ஈடாகக்** கொடுத்தானாய், உலகில் நிறைந்த பல பிறவிகளிலும் பிறத்தலை அறுப்பானாய், பற்றற்ற அடியார்க்குத் துணை நின்றானாய், திருவடிகளில் தங்கிய சிலம்பு மிக்கு ஒலிப்பத் திரிவானாய், தேவர் கூட்டம் வணங்கிப் பரவும் தலைவனாய், மிகுதியான கொடிகள் கட்டப்பட்ட மதில்களையுடைய தில்லையில் கூத்தனாய் விளங்குவான் ஆவான்.

2896. உழையாடு கரதலமொன் றுடையான் கண்டாய்
ஒற்றியூ ரொற்றியா வுடையான் கண்டாய்
கழையாடு கழுக்குன்றம் அமர்ந்தான் கண்டாய்
காளத்திக் கற்பகமாய் நின்றான் கண்டாய்
இழையாடும் எண்புயத்த இறைவன் கண்டாய்
என்நெஞ்சத் துள்நீங்கா எம்மான் கண்டாய்
குழையாட நடமாடுங் கூத்தன் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே.
7

உழையாடு கரதலம் – மான்பொருந்திய கை.
கழை – மூங்கில். இழை – பூண நூல்

திருக்கோடிகாவில் விரும்பியுறையும் அழகனே, மான்கன்று பொருந்தியதொரு கரதலத்தனாய், ஒற்றியூரைப் பொருந்தி நிற்கும் இடமாக உடையானாய், மூங்கிலசையும் கழுக்குன்றில் அமர்ந்தானாய், காளத்திக்கண் திகழும் கற்பகமாய், பூணூல் கிடந்தசையும் தோள்கள் எட்டுடைய இறைவனாய், என் நெஞ்சை விட்டு நீங்கா எந்தலைவனாய், காதணி ஆட நடன மாடுங் கூத்தனாய் விளங்குவான் ஆவான்.

**2897.** படமாடு பன்னகக்கச் சசைத்தான் கண்டாய்
பராய்த்துறையும் பாசூரும் மேயான் கண்டாய்
நடமாடி யேழுலகுந் திரிவான் கண்டாய்
நான்மறையின் பொருள்கண்டாய் நாதன் கண்டாய்
கடமாடு களிறுரித்த கண்டன் கண்டாய்
கயிலாயம் மேவி யிருந்தான் கண்டாய்
குடமாடி யிடமாகக் கொண்டான் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 8

திருக்கோடிகாவில் விரும்பியுறையும் அழகனே படமெடுத்தாடும் பாம்பினைக் கச்சாகக் கட்டியவனாய், பராத்துறையிலும் பாசூரிலும் பொருந்தியவனாய், ஏழுலகுஞ்சென்று ஆங்காங்கே நடனமாடுவானாய், நான் மறையின் பொருளினனாய், எல்லார்க்கும் தலைவனாய் (நாததத்துவனாய்) மதநீர் ஒழுகுங் களிற்றினை உரித்த வீரனாய், கயிலை மலையில் விரும்பி உறைவானாய், குடமாடியாம் திருமாலை இடப்பாகமாகக் கொண்டானாய் விளங்குவான் ஆவான்.

பன்னகம் – பாம்பு. அசைத்தான் – கட்டினான்.
நாதன் – தலைவன். குடம் –திருமால் ஆடிய ஒரு வகைக்கூத்து.
பதிக மகுடம் – கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே.

9, 10

## 82. திருச்சாய்க்காடு

(இத்திருப்பதிகம் "போலும்" என்னும் முடிபுடைய தொடர்களால்
இறைவன் பெருமைகளை வகுத்தருளிச் செய்தது)

ப.தொ.எண் : 295 பதிக எண் : 82

**2898.** வானத் திளமதியும் பாம்புந் தம்மில்
வளர்சடைமேல் ஆதரிப்ப வைத்தார் போலும்
தேனைத் திளைத்துண்டு வண்டு பாடுந்
தில்லை நடமாடுந் தேவர் போலும்
ஞானத்தின் ஒண்சுடராய் நின்றார் போலும்
**நன்மையுந் தீமையு மானார்** போலும்
தேனொத் தடியார்க் கினியார் போலும்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 1

திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே வானத்து விளங்கிய இளமதியும் பாம்பும் தம்முள் நிலவும் பகை நீங்கி வாழ அவற்றை நீள் சடைமேல் வைத்தவரும், வண்டு தேனை உண்டு மகிழ்ந்து பாடும் தில்லையில் நடனமாடும் தேவரும், ஞானமாகிய ஒளிப்பிழம்பாய் நின்றவரும், நன்மையும் தீமையும் ஆனவரும், அடியார்க்குத் தேன் போன்று தித்திப்பவரும் ஆவார்.

எல்லாம் அவரே

**2899.** விண்ணோர் பரவநஞ் சுண்டார் போலும்
வியன்துருத்தி வேள்விக் குடியார் போலும்
அண்ணா மலையுறையும் அண்ணல் போலும்
அதியரைய மங்கை யமர்ந்தார் போலும்
பண்ணார் களிவண்டு பாடி யாடும்
பராய்த்துறையுள் மேய பரமர் போலும்
திண்ணார் புகார்முத் தலைக்குந் தெண்ணீர்த்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர்
தாமே. 2

திண்ஆர்புகார் என்றது மணற்செறிவு நோக்கி.
அலைக்கும் – எறிகின்ற.

மணல்செறிந்த புகாரின்கண் முத்துக்களை எறிகின்ற தெளிந்த நீரையுடைய திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே, விண்ணோர்கள் தொழுதுவேண்ட நஞ்சுண்டவரும், பரந்த துருத்தியிடத்தும் வேள்விக்குடியிடத்தும் உறைபவரும், அண்ணாமலையில் உறையும் அண்ணலவரும், அதியரைய மங்கையில் அமர்ந்தவரும், மிக்குப் பொருந்திய மதுக்களிப்பையுடைய வண்டுகள் பண்ணினைப் பாடிப் பறந்துலவும் பராய்த்துறையிடத்து மேவிய பரமரும் ஆவார்.

**2900.** கானிரிய வேழ முரித்தார் போலும்
காவிரிப்பூம் பட்டினத் துள்ளார் போலும்
வானிரிய வருபுரமூன் றெரித்தார் போலும்
வடகயிலை மலையதுதம் மிருக்கை போலும்
ஊனிரியத் தலைகலனா வுடையார் போலும்
உயர்தோணி புரத்துறையும் ஒருவர் போலும்
தேனிரிய மீன்பாயுந் தெண்ணீர்ப் பொய்கைத்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர்
தாமே. 3

மலர்களிடத்துத் தேன் ஒழுகும் வண்ணம் மீன்கள் அவற்றைத் தாக்குகின்ற தெளிந்த நீர்ப் பொய்கைகள் மிக்க திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே காட்டினின்றும் மற்ற விலங்குகள் நீங்கிப் போமாறுவரும் களிற்றியானையை உரித்தவரும், காவிரிப் பூம்பட்டினத்து உள்ளவரும், தேவர்கள் கெட்டோடும் வண்ணம் வானத்தில் பறந்து வரும் திரிபுரங்களையும் எரித்தவரும், வடகயிலையைத் தம் இருக்கையாகக் கொண்டவரும், தசை நீங்கிய அத்தலையை உண்கலமாக உடையவரும், பிரளய காலத்து ஊழி வெள்ளத்து மேலே உயர்ந்து விளங்கும் தோணிபுரத்து உறையும் ஒப்பற்றவரும் ஆவார்.

**2901.** ஊனுற்ற வெண்டலைசேர் கையர் போலும்
ஊழி பலகண் டிருந்தார் போலும்
மானுற்ற கரதலமொன் றுடையார் போலும்
மறைக்காட்டுக் கோடி மகிழ்ந்தார் போலும்
கானுற்ற ஆட லமர்ந்தார் போலும்
காமனையுங் கண்ணழலாற் காய்ந்தார்
போலும்
தேனுற்ற சோலை திகழ்ந்து தோன்றுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர்
தாமே. 4

பதிக மகுடம் – திருச்சாய்க்காட்டினி துறையுஞ் செல்வர் தாமே.

தேன்நிறைந்த சோலைகளின் நடுவில் விளங்கித் தோன்றும் திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே, தசை பொருந்தி இருந்த வெள்ளிய தலையோடு சேர்ந்த கையினரும், பல ஊழிகளைக் கண்டவரும், மான் பொருந்திய கரதலம் ஒன்றுடையவரும், திருமறைக்காட்டை அணுகியுள்ள கோடிக் கரையில் மகிழ்ந்து உறைபவரும், காட்டில் ஆடலை விரும்பியவரும், காமனைக் கண்ணிடத்துத் தோன்றிய அழலால் அழித்தவரும் ஆவார்.

| | |
|---|---|
| 2902. கார்மல்கு கொன்றையந் தாரார் போலும்<br>காலனையும் ஓருதையாற் கண்டார் போலும்<br>பார்மல்கி யேத்தப் படுவார் போலும்<br>பருப்பதத்தே பல்லூழி நின்றார் போலும்<br>ஊர்மல்கு பிச்சைக் குழன்றார் போலும்<br>ஒத்தூ ரொருநாளும் நீங்கார் போலும்<br>சீர்மல்கு பாட லுகந்தார் போலும்<br>திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர்<br>தாமே. 5 | திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே கார்காலத்தில் நிரம்பப் பூக்கும் கொன்றைப் பூவாலாகிய தாரினை உடையவரும், காலனை ஒருதையால் வீழக்கண்டவரும், நிறைந்து நின்று பூமியினுள்ளாரால் புகழப் படுபவரும், திருப்பருப்பதத்தில் எக்காலத்தும் மகிழ்ந்து நின்றவரும், மிக்க பிச்சை பெறுதற்காக ஊரின்கண் அலைபவரும், ஒத்தூரை ஒருகாலும் நீங்காதவரும், தாள அறுதியுடன் கூடிய பாடலை விரும்புபவரும் ஆவார். |
| 2903. மாவாய் பிளந்து மாலுஞ் செய்ய<br>மலரவனுந் தாமேயாய் நின்றார் போலும்<br>மூவாத மேனி முதல்வர் போலும்<br>முதுகுன்ற மூதூ ருடையார் போலும்<br>கோவாய முனிதன்மேல் வந்த கூற்றைக்<br>குரைகழலா லன்று குமைத்தார் போலும்<br>தேவாதி தேவர்க் கரியார் போலும்<br>திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர்<br>தாமே. 6 | திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே, கேசி என்னும் குதிரையின் வாயைக் கிழித்து மகிழ்ந்த திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற நான்முகனும் ஆகிய இருவரும் தாமேயாய் நின்றவரும், என்றும் மாறுபடாமல் ஒருபடித்தாய்த் திகழும் மேனியுடைய முதல்வரும், முதுகுன்றமாகிய மூதூரினரும், முனிவர் தலைவனாகிய மார்க்கண்டேயன் மேல் வந்த கூற்றுவனை ஒலிக்கும் கழல் அணிந்த பாதத்தால் அன்று உதைத் தழித்தவரும் தேவர்க்குத் தலைவர் ஆகிய பிரம விட்டுணு இந்திரர்க்கு அரியவரும் ஆவார். |
| 2904. கடுவெளியோ டோரைந்து மானார் போலுங்<br>காரோணத் தென்று மிருப்பார் போலும்<br>இடிகுரல்வாய்ப் பூதப் படையார் போலும்<br>ஏகம்பம் மேவி யிருந்தார் போலும்<br>படியொருவ ரில்லாப் படியார் போலும்<br>பாண்டிக் கொடுமுடியுந் தம்மூர் போலும்<br>செடிபடுநோ யடியாரைத் தீர்ப்பார் போலும்<br>திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர்<br>தாமே. 7<br><br>கடுவெளி – பெரிய ஆகாயம்.<br>படி – ஒப்பும், இயல்பும். செடி – துன்பம்.<br>படு – உண்டாதற்குக் காரணமான | திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே, பெரிய ஆகாயத்தோடு கூட்டி எண்ணப் படுகின்ற ஐம்பூதங்களும் ஆனவரும், காரோணத்தலங்களில் என்றும் இருப்பவரும், இடிக்கும் குரலைக் கொண்ட வாயையுடைய பூதப்படையினரும், ஏகம்பத்தை விரும்பி அதன் கண் இருந்தவரும் பிறர் ஒருவரும் ஒப்பில்லாத இயல்பினை உடையவரும், பாண்டிக்கொடு முடியையும் தம் ஊராகக் கொண்டவரும் அடியாருடைய துன்பத்திற்குக் காரணமான நோயைத் தீர்ப்பவரும் ஆவார். |

**2905.** விலையிலா ஆரஞ்சேர் மார்பர் போலும்
வெண்ணீறு மெய்க்கணிந்த விகிர்தர் போலும்
மலையினார் மங்கை மணாளர் போலும்
மாற்பேறு காப்பாய் மகிழ்ந்தார் போலும்
தொலைவிலார் புரமூன்றுந் தொலைந்தார் போலும்
சோற்றுத் துறைதுருத்தி யுள்ளார் போலும்
சிலையினார் செங்க ணரவர் போலும்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 8

விலைஇலா ஆரம் – எலும்பு மாலை
காப்பு – இடம். தொலைவு – தோற்றல்
சிலையின் ஆர் அரவர் – வில்லில் நாணாகப் பூட்டிய பாம்பினை உடையவர்

திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே, விலையில்லாத மாலையணிந்த மார்பரும், வெண்ணீற்றை மெய்யிற் பூசிய விகிர்தரும், (மற்றையாரின் வேறுபட்டவர்) மலையரையன் மங்கையின் மணாளரும், மாற்பேற்றினைத் தம் இடமாய்க் கொண்டு மகிழ்ந்தவரும், தோல்வி அறியாத பகைவருடைய மூன்று புரங்களையும் தொலைத்தவரும், சோற்றுத்துறை, துருத்தி ஆகிய தலங்களில் உள்ளவரும், வில்லில் நாணாகப் பூட்டிய பாம்பினை உடையவரும் ஆவார்.

**2906.** அல்லல் அடியார்க் கறுப்பார் போலும்
அமருலகந் தம்மடைந்தார்க் காட்சி போலும்
நல்லமும் நல்லூரும் மேயார் போலும்
நள்ளாறு நாளும் பிரியார் போலும்
முல்லை முகைநகையாள் பாகர் போலும்
முன்னமே தோன்றி முளைத்தார் போலும்
தில்லை நடமாடுந் தேவர் போலும்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 9

திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே, அடியாருடைய அல்லலை அறுப்பவரும், தம்மை அடைந்தார்க்கு அமருலக ஆட்சியை அளிப்பவரும், நல்லத்திலும் நல்லூரிலும் பொருந்தி நின்று காட்சி அளிப்பவரும், நள்ளாற்றை என்றும் பிரியாதவரும், முல்லை மொட்டுப் போன்ற பற்களை உடைய பார்வதியின் பாகரும், உயர்திணை யஃறிணைப் பொருள்கள் யாவற்றிற்கும் முன்னே தோன்றியவரும், தில்லை அம்பலத்தில் திருக்கூத்தியற்றும் தேவரும் ஆவார்.

**2907.** உறைப்புடைய இராவணன் பொன்மாலையைக் கையால்
ஊக்கஞ்செய் தெடுத்தலுமே உமையா ளஞ்ச
நிறைப்பெருந்தோள் இருபதும்பொன் முடிகள் பத்தும்
நிலஞ்சேர விரல்வைத்த நிமலர் போலும்
பிறைப்பிளவு சடைக்கணிந்த பெம்மான் போலும்
பெண்ணா ணுருவாகி நின்றார் போலும்
சிறப்புடைய அடியார்கட் கினியார் போலும்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 10

உறைப்பு – கொண்டது விடாமை

திருச்சாய்க்காட்டில் இனிதுறையும் செல்வரே, எடுத்த வினையை முடிப்பதில் தீவிரம் மிக்க இராவணன் ஊக்கம் மிக்கு அழகிய கயிலை மலையைக் கையால் பெயர்த்தலும், உமையாள் அஞ்ச, வெற்றி நிறைதலையுடைய அவன் பெருந்தோள்கள் இருபதும் முடிகள் பத்தும், சோர்ந்து நிலத்தில் வீழும் வண்ணம் கால்விரலை ஊன்றிய நிமலரும், பிறைச் சந்திரனை அணியாகச் சடையிடத்துக் கொண்ட பெருமானாரும், பெண்ணுருவும் ஆணுருவும் கலந்து நின்ற அம்மையப்பரும், பதிஞானச் சிறப்புடைய அடியவர்களுக்கு இனியவரும் ஆவார்.

## 83. திருப்பாசூர்

ப.தொ.எண் : 296 பதிக எண் : 83

2908. விண்ணாகி நிலனாகி விசும்பு மாகி
வேலைசூழ் ஞாலத்தார் விரும்பு கின்ற
எண்ணாகி எழுத்தாகி இயல்பு மாகி
ஏழுலகுந் தொழுதேத்திக் காண நின்ற
கண்ணாகி மணியாகிக் காட்சி யாகிக்
காதலித்தங் கடியார்கள் பரவ நின்ற
பண்ணாகி இன்னமுதாம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த
வாறே. 1

வேலை – கடல். பாசு – மூங்கில்

பாசூரிற் பொருந்திய பரஞ்சுடரை மேகமாகவும், நிலனாகவும், ஆகாயமாகவும், கடல் சூழ்ந்த பூமியிலுள்ளார் விரும்புகின்ற எண்ணாகவும், எழுத்தாகவும், தமக்கென வேறுபட்ட இயல்புகளை உடைய எல்லாப் பொருள்களுமாகவும், ஏழுலகத்தாரும் வணங்கித் துதித்துக் காணுதற்கமைந்த கண்ணாகவும், அக்கண்ணுள் மணியாகவும் அதனால் காணப்படுகின்ற காட்சியாகவும், அடியார்கள் விரும்பித் துதித்தற்குரிய பண் நிறைந்த பாடலாகவும், இன்னமுது ஆகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்று.

2909. வேதமோர் நான்காய்ஆ றங்க மாகி
விரிகின்ற பொருட்கெல்லாம் வித்து மாகிக்
கூதலாய்ப் பொழிகின்ற மாரி யாகிக்
குவலயங்கள் முழுதுமாய்க் கொண்ட லாகிக்
காதலால் வானவர்கள் போற்றி யென்று
கடிமலர்கள் அவைதூவி ஏத்த நின்ற
பாதியோர் மாதினனைப் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த
வாறே. 2

விரிகின்ற – தோன்றுகின்ற
கூதல் – விடாது தூற்றும் சிறுதுவலை
கொண்டல் – கிழக்கு திசைக்காற்று.
மழையைக் கொணர்தலால் மேகம். கடி – நறுமணம்.

பாசூரிற் பொருந்திய பரஞ்சுடரை நான்கு வேதங்கள் ஆகவும், அங்கங்கள் ஆறு ஆகவும், பெருகி வளர்கின்ற பொருள்களுக்கெல்லாம் அடியான வித்து ஆகவும், விடாது தூற்றும் சிறு திவலைகளைப் பொழியும் மாரியாகவும் உலகங்கள் யாவும் ஆகவும், கீழ்க்காற்று ஆகவும், அன்பு மேலீட்டால் தேவர்கள் போற்றி என்று உரைத்து மணமலர்களைத் தூவித் தோத்திரிக்க நின்ற மாதொரு பாகன் ஆகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்று.

**2910.** தடவரைகள் ஏழுமாய்க் காற்றாய்த் தீயாய்த்
தண்விசும்பாய்த் தண்விசும்பி னுச்சி யாகிக்
கடல்வலயஞ் சூழ்ந்ததொரு ஞால மாகிக்
காண்கின்ற கதிரவனும் கதியு மாகிக்
குடமுழவச் சரிவழியே அனல்கை யேந்திக்
கூத்தாட வல்ல குழக னாகிப்
படவரவொன் றதுவாட்டிப் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த
வாறே. 3

தடவரை – பெரியமலை. வரைகள் ஏழு – கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், கந்தமாதனம்

பாசூரிற் பொருந்திய பரஞ்சுடரை பெரிய ஏழு குலமலைகள் ஆகவும், காற்றாகவும், தீ ஆகவும், குளிர்ந்த விசும்பாகவும், குளிர் விசும்பின் உச்சி ஆகவும், கடல்வட்டம் சூழ்ந்ததொரு ஞாலம் ஆகவும், காண்பதற்குத் துணை நிற்கும் கதிரவன் ஆகவும், வீடடைதற்குரிய வழியாகவும், குடமுழவு, சச்சரி இவற்றின் முழக்கிற்கு ஏற்ப அனலைக் கையில் ஏந்திக் கூத்தாடவல்ல அழகன் ஆகவும், படமெடுத்தாடும் பாம்பொன்றினை ஆட்டுவான் ஆகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்று.

---

**2911.** நீராருஞ் செஞ்சடைமேல் அரவங் கொன்றை
நிறைமதிய முடன்சூடி நீதி யாலே
சீராரும் மறையோதி யுலக முய்யச்
செழுங்கடலைக் கடைந்தகடல் நஞ்ச முண்ட
காராருங் கண்டனைக் கச்சி மேய
கண்ணுதலைக் கடலொற்றி கருதி னானைப்
பாரோரும் விண்ணோரும் பரசும் பாசூர்ப்
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த
வாறே. 4

பரசும் – துதிக்கின்ற.
பதிக மகுடம் – பாசூரப் பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்தவாறே.

பாரிடத்து மக்களும் விண்ணிடத்துத் தேவரும் புகழும் பாசூரிற் பொருந்திய பரஞ்சுடரை கங்கை பொருந்திய செஞ்சடை மேல் பாம்பு, கொன்றை, அழகுநிறைந்த பிறைமதி ஆகியவற்றைச் சூடியவன் ஆகவும், சிறப்பு மிக்க மறைகளை, அறத்தின் வழி உலகம் ஒழுக ஓதியருளியவன் ஆகவும், வளவிய கடலைக் கடைந்த பொழுது எழுந்த கடல் அளவு கொடுமை மிக்க நஞ்சினை உண்டதனால் கருமை பொருந்திய கண்டனாகவும், கச்சி நகரில் விளங்கும் கண்ணுதலாகவும், கடலை அடுத்துள்ள ஒற்றியூரை உயர்வாக மதிப்பவனாகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்று.

---

**2912.** வேடனாய் விசயன்தன் வியப்பைக் காண்பான்
விற்பிடித்துக் கொம்புடைய ஏனத் தின்பின்
கூடினார் உமையவளுங் கோலங் கொள்ளக்
கொலைப்பகழி உடன் கோத்துக் கோரப்பூசல்
**ஆடினார் பெருங்கூத்துக் காளி காண**
அருமறையோ டாறங்கம் ஆய்ந்து கொண்டு
பாடினார் நால்வேதம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த
வாறே. 5

பாசூரிற் பொருந்திய பரஞ்சுடரை தமது திருவிளையாடலின் நிலையை உணர்ந்து வியக்கும் விசயனது மருட்கையைக் காண வேண்டி உமையவளும் வேட்டுவக்கோலம் கொள்ளத்தாமும் ஒரு வேடனாய் வில்லை ஏந்திக் கொலையிற் பழகிய பகழியையும் வில்லிற்கோத்துக் கொம்பினையுடைய பன்றியைத் தொடர்ந்து சென்று கொடிய பூசலைச் செய்தவர் ஆகவும், காளி காணப் பெருங்கூத்தினை ஆடினார் ஆகவும், அரிய மறைவாகிய பொருளையுடைய வேதங்களையும் ஆறங்கப் பொருளையும் ஆராய்ந்து மனத்திற் கொண்டு நான்கு வேதங்களையும் பாடினவர் ஆகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்று.

**2913.** புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயின் நூலால்
புதுப்பந்தர் அதுஇழைத்துச் சருகால் மேய்ந்த
சித்தியினால் அரசாண்டு சிறப்புச் செய்யச்
சிவகணத்துப் புகப்பெய்தார் திறலால் மிக்க
வித்தகத்தால் வெள்ளானை விள்ளா அன்பு
விரவியவா கண்டதற்கு வீடு காட்டிப்
பத்தர்களுக் கின்னமுதாம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த
வாறே. 6

திறல் – வலிமை. வித்தகம் – திறமை.

பாசூரிற் பொருந்திய பரஞ்சுடரைப் பெற்ற ஞானத்தினால் உயர் சிலந்தி தன் வாயிலிருந்து வரும் நூலால் மக்களால் செய்யலாகாத பந்தலை இயற்றி அதனைச் சருகால் மூடிய திருத்தொண்டைச் சிந்தித்துச் செய்தமையால் பின் அரசனாகி நிலவுலகை ஆண்டு அப்பிறப்பிலும் சிறந்த தொண்டு செய்யச் சிவகணங்களுள் புக்கு இன்புறுமாறு சேர்த்தருளினவர் ஆகவும், வலிமையும், திறமையும் கொண்டு வெள்ளானை செய்த செயலிடத்து மிக்க அன்பு விரவியிருந்தமை கண்டு அதற்கு வீடு அருளியவர் ஆகவும், பத்தர்களுக்கு இன்னமுதம் ஆகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்றாம்.

**2914.** இணையொருவர் தாமல்லால் யாரு மில்லார்
இடைமருதோ டேகம்பத் தென்றும் நீங்கார்
அணைவரியர் யாவர்க்கும் ஆதி தேவர்
அருமந்த நன்மையெலாம் அடியார்க் கீவர்
தணல் முழுகு பொடியாடுஞ் செக்கர் மேனித்
தத்துவனைச் சாந்தகிலின் அளறு தோய்ந்த
பணைமுலையாள் பாகனையெம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த
வாறே. 7

அளறு – சேறு; குழம்பு
சாந்து – சந்தனக்கட்டை

பாசூரிற் பொருந்திய எம்பரஞ்சுடரைத் தமக்குத் தாம் அல்லால் இணையாவார் ஒருவரும் இல்லார் ஆகவும், இடைமருது, ஏகம்பம் என்றிவற்றை என்றும் நீங்காதார் ஆகவும், யாவர்க்கும் அணைவதற்கு அரியார் ஆகவும், ஆதி தேவர் ஆகவும், அடியார்க்கு அரிய அமுதம் போன்ற நல்லன எல்லாம் ஈவார் ஆகவும், நெருப்பில் மூழ்கினமையால் உண்டான சாம்பற்பூச்சைக் கொண்ட செவ்வானன்ன மேனித் தத்துவன் ஆகவும், சந்தனம், அகில் ஆகியவற்றின் சேறு தோயப் பெற்ற பருத்த தனத்தினையுடைய பார்வதியின் பாகன் ஆகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்று.

**2915.** அண்டவர்கள் கடல்கடைய அதனுள் தோன்றி
அதிர்த்தெழுந்த ஆலாலம் வேலை ஞாலம்
எண்டிசையுஞ் சுடுகின்ற வாற்றைக் கண்டு
இமைப்பளவி லுண்டிருண்ட கண்டர்
தொண்டர்
வண்டுபடு மதுமலர்கள் தூவி நின்று
வானவர்கள் தானவர்கள் வணங்கி யேத்தும்
பண்டரங்க வேடனையெம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த
வாறே. 8

வேலை ஞாலம் – கடலை உடைய உலகம்
தானவர்கள் – அசுரர்கள்

பாசூரிற் பொருந்திய எம் பரஞ்சுடரை மேலுலகத்தார் கடலைக் கடைய அதனிடத்து அனைவரையும் நடுங்கச் செய்து எழுந்த ஆலால நஞ்சு கடல் சூழ்ந்த உலகை எட்டுத் திசைகளிலும் சுடுகின்ற தன்மையைக் கண்டு இமைப்பளவில் அதனை உண்டு அதனால் கறுத்த கண்டர் ஆகவும், தேவர்களும் அசுரர்களும் வண்டுகள் மொய்க்கும் தேன் நிறைந்த மலர்களைத் தூவி நின்று வணங்கித் துதிக்கும் பண்டரங்கக் கூத்தனாம் வேடம் கொண்டவர் ஆகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்று.

**2916.** ஞாலத்தை யுண்டதிரு மாலும் மற்றை
நான்முகனும் அறியாத நெறியார் கையிற்
சூலத்தால் அந்தகனைச் சுருளக் கோத்துத்
தொல்லுலகிற் பல்லுயிரைக் கொல்லுங் கூற்றைத்
காலத்தா லுதைசெய்து காதல் செய்த
அந்தணனைக் கைக்கொண்ட செவ்வான் வண்ணர்
பாலொத்த வெண்ணீற்றர் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 9

அந்தகன் – அந்தகாசுரன். சுருள – மடிய

பாசூரிற் பொருந்திய பரஞ்சுடரை ஞாலத்தை உண்ட திருமாலும் நான்முகனும் அறியாத நிலையினை உடையவராகவும், அந்தகாசுரன் மடிய அவனைச் சூலத்தாற் குத்தியவர் ஆகவும், பழைய இவ்வுலகில் பல்லுயிரையும் கொல்லும் இயமனைக் காலால் உதைத்து உருட்டித் தன்பால் உண்மை அன்பு கொண்ட அந்தணனைக் கைக்கொண்டு காத்த செவ்வான் அன்னமேனி நிறத்தவர் ஆகவும், பால் போன்ற வெண்ணீற்றுப் பூச்சினர் ஆகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்று.

**2917.** வேந்தன்நெடு முடியுடைய அரக்கர் கோமான்
மெல்லியலாள் உமைவெருவ விரைந்திட்டோடிச்
சாந்தமென நீறணிந்தான் கயிலை வெற்பைத்
தடக்கைகளா லெடுத்திடலுந் தாளா லூன்றி
ஏந்துதிரள் திண்டோளுந் தலைகள் பத்தும்
இறுத்தவன்தன் இசைகேட்டு இரக்கங் கொண்ட
பாந்தளணி சடைமுடியெம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 10

பாந்தள் – பாம்பு. தாள் –கால்விரல்
ஏந்து – உயர்ந்த

பாசூரிற் பொருந்திய எம்பரஞ்சுடரை நெடிய முடியை அணிந்த அரக்கர் கோமானாகிய வேந்தன் விரைந்து ஓடிச் சந்தனம் ஒப்பத் திருநீற்றினை அணிந்த தனது கயிலை மலையைப் பெரிய கைகளால் பெயர்த்திடவும் மெல்லியல் உமைவெருவ, அவ்வளவில், அவனுடைய வலிமை மிக்கு உயர்ந்து திரண்ட தோள்களும் பத்துத் தலைகளும் இறும் வண்ணம் தன் தாள் விரலை ஊன்றிப் பின் அவனது இசையைக் கேட்டு இரக்கங் கொண்டவன் ஆகவும் சடையாலாகிய முடியிடத்துப் பாம்பை அணிந்தவனாகவும் அடியேன் கண்டு உய்ந்தவாறு நன்று.

## 84. திருச்செங்காட்டங்குடி

ப.தொ.எண் : 297 பதிக எண் : 84

**2918.** பெருந்தகையைப் பெறற்கரிய மாணிக் கத்தைப்
பேணிநினைந் தெழுவார்தம் மனத்தே மன்னி
இருந்தமணி விளக்கதனை நின்ற பூமேல்
எழுந்தருளி யிருந்தானை எண்டோள் வீசி
அருந்திறல்மா நடமாடும் அம்மான் தன்னை
அங்கனகச் சுடர்க்குன்றை அன்றா லின்கீழ்த்
திருந்துமறைப் பொருள்நால்வர்க் கருள்செய் தானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 1

பெருமையாம் தன்மை உடையானும், பெறற்கு அரிய மாணிக்கம் போன்றவனும், விரும்பி நினைந்தவாறே துயிலெழு வார் மனத்தில் நிலைபெற்று நின்ற மணிவிளக்கு ஆனவனும், நீர்நிலையில் தாள்மேல் நின்ற தாமரை மலரில் எழுந்தருளியிருந்தவனும், எட்டுத் தோள்களையும் வீசி உலகத்தைத் தொழிற்படுத்தும் அரிய ஆற்றல் மிக்க பெரிய கூத்தினை இயற்றும் பெருமானும், அழகிய கனகக் குன்று போல்வானும், பண்டு ஆலின் கீழ் நால்வர்க்கும் திருந்திய மறைப்பொருளை உபதேசித்து அருள்செய்தானும் ஆகிய சிவபெருமானைச் செங்காட்டங்குடியில் நான் கண்டேன்.

**2919.** துங்கநகத் தாலன்றித் தொலையா வென்றித்
தொகுதிறலவ் விரணியனை ஆகங் கீண்ட
அங்கனகத் திருமாலும் அயனுந் தேடும்
ஆரழலை அநங்கனுடல் பொடியாய் வீழ்ந்து
மங்கநகத் தான்வல்ல மருந்து தன்னை
வண்கயிலை மாமலைமேல் மன்னி நின்ற
செங்கனகத் திரள்தோளெஞ் செல்வன் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.
**2**

துங்கம் – உயர்வு. ஆகம் – மார்பு.
கீண்ட – பிளந்த. மங்க – கெடும்படி

உயர்ந்த நகத்தாலன்றிப் பிற கருவிகளால் அழியாதவனும் தன் ஆற்றலால் பலரையும் வென்று கூட்டிய வெற்றிகளை உடையவனும் ஆகிய இரணியனை மார்பைப் பிளந்தவனும், அழகிய கற்றூணில் தோன்றிச் சிரித்தவனும் ஆகிய திருமாலும், நான்முகனும் தேடும் அணுகுதற்கரிய நெருப்புப் பிழம்பானவனும், மன்மதன் உடல் எரிந்து சாம்பராய் உருக்குலைந்து மங்கவும் அவன் மனைவி இரதி அவனைப் பெற்று நகுமாறு செய்யவல்ல அமுதம் ஆனவனும், வளவிய கயிலை மாமலைமேல் நிலைத்து நின்றவனும், செம்பொன் நிறங்கொண்டு திரண்ட தோள்களைப் பெற்ற செல்வனும் ஆகிய சிவபெருமானைச் செங்காட்டங்குடியில் நான் கண்டேன்.

**2920.** உருகுமனத் தடியவர்கட் கூறுந் தேனை
உம்பர்மணி முடிக்கணியை உண்மை நின்ற
பெருகுநிலைக் குறியாளர் அறிவு தன்னைப்
பேணியஅந் தணர்க்குமறைப்பொருளைப் பின்னும்
முருகுவிரி நறுமலர்மேல் அயற்கும் மாற்கும்
முழுமுதலை மெய்த்தவத்தோர் துணையை வாய்த்த
திருகுகுழல் உமைநங்கை பங்கன் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.
**3**

பதிக மகுடம் – செங்காட்டக் குடியதனிற் கண்டேன் நானே.

நினைந்துருகும் அடியாருடைய மனத்தில் ஊற்றெடுக்கும் தேன் ஆனவனும், தேவர்களுடைய மணிகள் இழைத்த மகுடங்களுக்கு அணியாய் நிற்கும் திருவடிகளை உடையவனும், உண்மைக் கண்ணே நின்றாராய் உயர்ந்தோர் கூறும் உறுதிச் சொற்களை ஏற்றுப் பெருகுநிலையாகிய வீடு அடைதலையே குறிக்கோளாய்க் கொண்டவருடைய அறிவாய் விளங்குபவனும், தன்னை விரும்பித் தொழும் அந்தணருக்கு விளங்கித் தோன்றும் மறைப்பொருள் ஆனவனும், பிற்படுவோராம் மணங்கமழும் தாமரை மலர் மேல் விளங்கும் பிரமனுக்கும் திருமாலுக்கும் முற்பட்ட பரமகாரணன் ஆனவனும், மெய்யான தவத்தைச் செய்வார்க்கு அமைந்த உறுதுணைவனும், சுருண்ட குழலினையுடைய உமைநங்கைக்கு வாய்த்த பங்கனும் ஆகிய சிவபெருமானைச் செங்காட்டங்குடியில் நான் கண்டேன்.

**2921.** கந்தமலர்க் கொன்றையணி சடையான் தன்னைக்
கதிர்விடுமா மணிபிறங்கு கனகச் சோதிச்
சந்தமலர்த் தெரிவை யொரு பாகத்தானைச்
சராசரநற் றாயானை நாயேன் முன்னைப்
பந்தமறுத் தாளாக்கப் பணிகொண் டாங்கே
பன்னிய**நூல் தமிழ்**மாலை பாடு வித்தென்
சிந்தைமயக் கறுத்ததிரு வருளினானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.
4

கந்தம் – நறுமணம்
சந்தம் – அழகு
பந்தம் – வினை, பாசம்

மணங்கமழும் கொன்றை மலரையணிந்த சடையானும் சிறந்த மரகதமணி உமிழும் ஒளியுடனே விளங்கும் பொன்னின் ஒளி போல அழகிய மலரணிந்த உமையின் ஒரு பாகத்தொடு தன் பாகம் விளங்குபவனும், இயங்குதிணை, நிலைத்திணைப் பொருள்களுக்கு நற்றாய் ஆனவனும், நாயேனுடைய பழைய வினையை அறுத்து அடிமை கொள்ள என் தொண்டினை மதித்துக் கொண்டாற் போல முன்னையோர் உரைத்த **இலக்கண நெறியில் அமைந்த தமிழ்** மாலையை யான் பாடச் செய்து அதனால் என் மனத்துமண்டிய மயக்கத்தைப் போக்கிய திருவருளைச் செய்தவனும் ஆகிய சிவபெருமானை நான் செங்காட்டங்குடியில் கண்டேன்.

---

**2922.** நஞ்சடைந்த கண்டத்து நாதன் தன்னை
நளிர்மலர்ப்பூங் கணைவேளை நாச மாக
வெஞ்சினத்தீ விழித்ததொரு நயனத் தானை
வியன்கெடில வீரட்டம் மேவி னானை
மஞ்சடுத்த நீள்சோலை மாட வீதி
மதிலாரூர் இடங்கொண்ட மைந்தன்
தன்னைச்
செஞ்சினத்த திரிசூலப் படையான் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.
5

நளிர் – குளிர்ச்சி. மஞ்சு – மேகம்

நஞ்சு பொருந்திய கண்டத்தை உடைய தலைவனும் குளிர்ந்த மலர்களாலாகிய அழகிய அம்புகளைக் கொண்ட மன்மதன் அழியுமாறு கொடிய சினமாகிய நெருப்பு எழ விழித்த ஒரு நெற்றிக் கண்ணினனும், கெடில நதிக்கரையில் விளங்கும் பரந்த அதிகை வீரட்டம் மேவினவனும், மேகம் தவழும் நீண்ட சோலைகளை உடையதும் மாடவீதிகள் நிறைந்ததும் மதிலால் வளைப்புண்டதுமாகிய ஆரூரைத் தனது இடமாகக் கொண்ட மைந்தனும், சினத்தால் சிவந்து தோன்றும் திரிசூலப் படையினனும் ஆகிய சிவபெருமானை நான் செங்காட்டங்குடியில் கண்டேன்.

| | |
|---|---|
| **2923.** கன்னியையங் கொருசடையிற் கரந்தான் தன்னைக்<br>கடவூரில் வீரட்டங் கருதி னானைப்<br>பொன்னிசூழ ஐயாற்றெம் புனிதன் தன்னைப்<br>பூந்துருத்தி நெய்த்தானம் பொருந்தி னானைப்<br>பன்னியநான் மறைவிரிக்கும் பண்பன் தன்னைப்<br>பரிந்திமையோர் தொழுதேத்திப் பரனே யென்று<br>சென்னிமிசைக் கொண்டணிசே வடியி னானைச்<br>செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 6 | கங்கையைத் தன் ஒப்பற்ற சடையின் ஒரு பால் மறைத்தவனும், கடவூர் வீரட்டானத்தைச் சிறந்த இடமாகக் கருதினவனும், காவிரி சூழும் ஐயாற்றில் விளங்கும் எம் புனிதனும், பூந்துருத்தி, நெய்த்தானம் ஆகிய பதிகளில் நிலைபெற்றவனும், தான் உரைத்த நான்மறைகளின் பொருளைத் தக்கவர்க்கு விளங்க விரித்து உரைக்கும் இயல்பினனும், தேவர்கள் அன்பு கொண்டு வணங்கிப் புகழ்ந்து 'பரனே' என்று முழங்கித் தம் தலைமீது அணியாகச் சூடிக் கொள்ளும் சிவந்த அடிகளை உடையவனும் ஆகிய சிவபெருமானை நான் செங்காட்டங்குடியில் கண்டேன். |
| **2924.** எத்திக்கு மாய்நின்ற இறைவன் தன்னை<br>ஏகம்பம் மேயானை யில்லாத் தெய்வம்<br>பொத்தித்தம் மயிர்பறிக்குஞ் சமணர் பொய்யிற்<br>புக்கழுந்தி வீழாமே போத வாங்கிப்<br>பத்திக்கே வழிகாட்டிப் பாவந் தீர்த்துப்<br>பண்டைவினைப் பயமான எல்லாம் போக்கித்<br>தித்தித்தென் மனத்துள்ளே ஊறுந் தேனைச்<br>செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 7<br><br>சுவாமிகளின் சுயசரிதை | எல்லாத் திக்குகளுமாய் நின்ற இறைவனும், ஏகம்பத்தில் பொருந்தி நிற்பவனும், தெய்வத் தன்மை இல்லாத ஒன்றைத் தெய்வமாக மனத்துட் கொண்டு தம் மயிரைப் பறிக்கும் சமணருடைய பொய் ஒழுக்கப் படுகுழியில் நான் புக்கழுந்தி வீழாமல், தன் திருவடியாகிய கரையில் புகும்படி என்னை எடுத்துப் பத்திக்குரிய வழியைக் காட்டிப் பாவத்தைத் தீர்த்து பழைய வினைப் பயனாக விளைவன எல்லாவற்றையும் விலக்கி, என் மனத்துள்ளே ஊறுந் தேனாய்த் தித்திப்பவனும் ஆகிய சிவபெருமானை நான் செங்காட்டங்குடியில் கண்டேன். |
| **2925.** கல்லாதார் மனத்தணுகாக் கடவுள் தன்னைக்<br>கற்றார்கள் உற்றோருங் காத லானைப்<br>பொல்லாத நெறியுகந்தார் புரங்கள் மூன்றும்<br>பொன்றிவிழ அன்றுபொரு சரந்தொட் டானை<br>நில்லாத நிணக்குரம்பைப் பிணக்கம் நீங்க<br>நிறைதவத்தை அடியேற்கு நிறைவித் தென்றுஞ்<br>செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானைச்<br>செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 8<br><br>ஊற்று ஓர்தல் – மனம் பற்றி ஆராய்தல்<br>பொன்றிவிழ – கெட்டொழிய. நிணக்குரம்பை – புலாற்குடில்; உடம்பு. பிணக்கம் – மாறுபாடு | உண்மை நூல்களைக் கல்லாதார் மனத்தை அணுகாது அகலும் கடவுளும், மெய்ந்நூல்களைக் கற்றவர்கள் ஆராய்ந்து அடையும் அன்பனும், பிறர்க்குத் துன்பமிழைத்த லாகிய பிழைபட்ட நெறியை விரும்பின வருடைய புரங்கள் மூன்றும் அழிந்து விழுமாறு போர் செய்யவல்ல அம்பினைத் தொடுத்தவனும், நிலையற்ற புலாற்குடிலாகிய உடலிடத்து நரைதிரை மூப்புப் பிணி இறப்பு முதலியவற்றால் நிகழும் மாறுபாடு நீங்க நலங்கள் நிறைவதற்குரிய தவத்தை என்பால் செய்து வேறு இடத்திற்குக் கொண்டு செல்லாத செவ்விய நெறியிலே என்னைச் செலுத்துபவனும் ஆகிய சிவபெருமானை நான் செங்காட்டங்குடியில் கண்டேன். |

2926. அரியபெரும் பொருளாகி நின்றான் தன்னை
அலைகடலில் ஆலாலம் அமுது செய்த
கரியதொரு கண்டத்துச் செங்கண் ஏற்றுக்
கதிர்விடுமா மணிபிறங்கு காட்சி யானை
உரியபல தொழில் செய்யும் அடியார்தங்கட்
குலகமெலாம் முழுதளிக்கும் உலப்பி லானைத்
தெரிவையொரு பாகத்துச் சேர்த்தி னானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 9

உலப்பு – அழிவு

கிடைத்தற்கரிய பெரும்பொருளாய்த் திகழ்பவனும், அலையை உடைய கடலிடத்துத் தோன்றிய ஆலால நஞ்சினை உண்ணக் கழிந்த கண்டத்தினனும், சிவந்த கண்களையுடைய இடபத்தின் மேலேறி ஒளி விடும் சிறந்த மாணிக்க மணிபோல் விளங்குந் தோற்றத்தை உடையவனும், தத்தம் நிலைக்கு ஏற்ற தொண்டினைச் செய்யும் அடியார்க்கு உலகங்களைக் கற்பம் முடியுமளவும் ஆள அளிப்பவனும், அழிவில்லாதவனும், உமையம்மை ஒரு பாகமாகக் கொண்டவனும் ஆகிய சிவபெருமானை நான் செங்காட்டங் குடியில் கண்டேன்.

2927. போரரவ மால்விடையொன் றூர்தி யானைப்
புறம்பயமும் புகலூரும் மன்னி னானை
நீரரவச் செஞ்சடைமேல் நிலாவெண் டிங்கள்
நீங்காமை வைத்தானை நிமலன் தன்னைப்
பேரரவப் புட்பகத்தே ருடைய வென்றிப்
பிறங்கொளிவாள் அரக்கன்முடி யிடியச் செற்ற
சீரரவக் கழலானைச் செல்வன் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 10

போரிடத்து எழுப்பும் ஒலியையுடையதும் பெருமை மிக்கதும் ஆகிய ஒரு விடையை ஊர்தியாக உடையவனும், புறம்பயத்தும் புகலூரிலும் நிலைத்து நின்றவனும், கங்கையும், பாம்பும், நிலவும் செஞ்சடைமேல் நிலாக்காலும் வெண்டிங்கட்பிறையை என்றும் நீங்காதவாறு வைத்தவனும், நிமலனும், மிக்க ஒலியுடைய புட்பக விமானத்தையுடையவனாய், வெற்றியால் மூவுலகங்களிலும் விளங்கிய புகழுடைய கொடிகள் அரக்கனாகிய இராவணனுடைய முடிகள் பொடியாகும்படி ஒலிக்கும் அழகிய கழலினனும், செல்வனும் ஆகிய சிவபெருமானை நான் செங்காட்டங்குடியில் கண்டேன்.

## 85. திருமுண்டீச்சரம்

(இத்திருப்பதிகத்தில், சிவபெருமானின் பெருமைகளைக் 'காண்' என்னும் முடிபுடைய தொடர்களால் வகுத்துரைத்து "அவனென் சிந்தையானே" என்று மகிழ்ந்தருளுகிறார்)

**ப.தொ.எண் : 298** **பதிக எண் : 85**

2928. ஆர்த்தான்காண் அழல்நாகம் அரைக்கு நாணா
அடியவர்கட் கன்பன்காண் ஆனைத் தோலைப்
போர்த்தான்காண் புரிசடைமேல் புனலேற் றான்காண்
புறங்காட்டி லாடல் புரிந்தான் தான்காண்
காத்தான்காண் உலகேழுங் கலங்கா வண்ணங்
கனைகடல்வாய் நஞ்சதனைக் கண்டத் துள்ளே
சேர்த்தான்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 1

ஆர்த்தான் – கட்டினான்

திருமுண்டீச்சரத்தில் கோயில் கொண்ட சிவலோகன், சினமிகுந்த நாகத்தை அரைநாணாகக் கட்டியவனும், அடியவர்களுக்கு அன்பனும், யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டவனும், முறுக்குண்ட சடைமேல் கங்கையை ஏற்றவனும், சுடுகாட்டில் ஆடுவதை விரும்பியவனும், உலகங்கள் ஏழும் கலக்கமுறாதபடி ஒலிக்கும் கடலிடை உண்டான நஞ்சினைத் தன் கழுத்திடத்தே சேர்த்தவனும் ஆவான். அவன் என் சிந்தை இடத்தவன் ஆயினான்.

**2929.** கருத்தன்காண் கமலத்தோன் தலையி
லொன்றைக்
காய்ந்தான்காண் பாய்ந்தநீர் பரந்த சென்னி
ஒருத்தன்காண் உமையவளோர் பாகத் தான்காண்
ஒருருவின் மூவுருவாய் ஒன்றாய் நின்ற
விருத்தன்காண் விண்ணவர்க்கும் மேலா
னான்காண்
மெய்யடியா ருள்ளத்தே விரும்பி நின்ற
திருத்தன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை
யானே. 2

கருத்தன் – தலைவன்

திருமுண்டீச்சரத்தில் கோயில் கொண்ட சிவலோகன் தலைவன் ஆவானும், பிரமன் தலைகளில் ஒன்றைக் கோபித்துக் கொய்தவனும், வேகமாகப் பாய்ந்த கங்கை வேகம் நீங்கிப் பரவிய தலையை உடைய ஒருத்தனும், உமையம்மை தங்கிய பங்கினனும், மூன்று வடிவங்களாய் நின்ற அரி, அயன், அரன் ஆகியோருடைய வடிவங்கள் ஒன்றாகித் தனது ஒருவடிவமாக அமைந்த பழையோனும், தேவர்களுக்கெல்லாம் மேலானவனும், மெய்யடியார் உள்ளத்தில் விரும்பி உறையும் தூயவனும் ஆவான். அவன் என் சிந்தையிடத்தவன் ஆயினான்.

---

**2930.** நம்பன்காண் நரைவிடையொன் றேறி னான்காண்
நாதன்காண் கீதத்தை நவிற்றி னான்காண்
இன்பன்காண் **இமையாமுக் கண்ணி** னான்காண்
ஏசற்று மனமுருகும் அடியார் தங்கட்
கன்பன்காண் ஆரழல தாடி னான்காண்
அவனிவனென்றியாவர்க்கும் அறிய
வொண்ணாச்
செம்பொன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை
யானே. 3

செற்று – விரும்பி

திருமுண்டீச்சரத்தில் கோயில் கொண்ட சிவலோகன் நம்புதற்குரியவனும், வெள்ளை விடை ஒன்றை ஊர்தியாகக் கொண்டவனும், தலைவனும், கீதத்தைப் பாடினவனும், இன்பத்தைத் தருபவனும், **இமையாத மூன்று கண்கள் உடையவனும்,** விரும்பி மனமுருகும் அடியார்களுடைய அன்பனும், அனலேந்தி ஆடினவனும், அவன் என்றும் இவன் என்றும் யாராலும் அறிய ஒண்ணாதவனும், செம்பொன் அனையானும் ஆவான். அவன் என் சிந்தையிடத்தவன் ஆயினான்.

---

**2931.** மூவன்காண் மூவர்க்கும் முதலா னான்காண்
முன்னுமாய்ப் பின்னுமாய் முடிவா
னான்காண்
காவன்காண் உலகுக்கோர் கண்ணா னான்காண்
கங்காளன் காண்கயிலை மலையி
னான்காண்
ஆவன்காண் ஆவகத்தஞ் சாடி னான்காண்
ஆரழலாய் அயற்கரிக்கு மறிய வொண்ணாத்
தேவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை
யானே. 4

மூவன் – மூப்பினன்; முன்னோன்
ஆவன் – ஆக்கம் தருபவன்

திருமுண்டீச்சரத்தில் கோயில் கொண்ட சிவலோகன் மூவுருவாய் மூத்தவனும், மூவர்க்கும் முதல் ஆனவனும், உலகத் தோற்றத்திற்கு முன் ஆனவனும், உலக ஒடுக்கத்திற்குப்பின் ஆனவனும், வீடு பேறு ஆனவனும், உலகங்களைக் காப்பவன் ஆனவனும், உலகிற்குக் கண் ஆனவனும், இறந்துபட்ட பிரம விட்டுணுக்களுடைய என்புக் கூடுகளை அணிந்தவனும், கயிலை மலையினனும், ஆக்கந்தருபவனும், ஆன்ஐந்தில் விரும்பி மூழ்குபவனும், பிரமனுக்கும் திருமாலுக்கும் அறிய முடியாத அழற்பிழம்பாய்த் தோன்றிய தேவனும் ஆவான். அவன் என் சிந்தையிடத்தவன் ஆயினன்.

**2932.** கானவன்காண் கானவனாய்ப் பொருதான்
றான்காண்
கனலாட வல்லான்காண் கையி லேந்தும்
மானவன்காண் மறைநான்கு மாயி னான்காண்
வல்லேறொன் றதுவேற வல்லான் றான்காண்
ஊனவன்காண் உலகத்துக் குயிரா னான்காண்
உரையவன்காண் உணர்வவன்காண்
உணர்ந்தார்க்கென்றுந்
தேனவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை
யானே. 5

திருமுண்டீச்சரத்தில் கோயில் கொண்ட சிவலோகன் காட்டில் உறைபவனும், வேடனாகிப் பார்த்தனொடு பொருதவனும், கனல் ஆட வல்லவனும், மானைக் கையில் ஏந்தியவனும், நான்கு மறைகளாகவும் ஆனவனும், வலிய இடபமொன்றை ஏற வல்லவனும், பலவகை உடம்புகளாயும் நிற்பவனும், சீவான்மாக்களின் உயிர்க்குயிரானவனும், சொல் ஆனவனும் சொற்பொருள் உணர்வு ஆனவனும், தன்னை உணர்ந்தார்க்கு எக்காலத்தும் தேனாய் இனிப்பவனும் ஆவான். அவன் என் சிந்தையிடத்தவன் ஆயினன்.

---

**2933.** உற்றவன்காண் உறவெல்லா மாவான் றான்காண்
ஒழிவறநின் றெங்கு முலப்பி லான்காண்
புற்றரவே யாடையுமாய்ப் பூணு மாகிப்
புறங்காட்டி லெரியாடல் புரிந்தான்
றான்காண்
நற்றவன்காண் அடியடைந்த மாணிக் காக
நணுகியதோர் பெருங்கூற்றைச் சேவ
டியினால்
செற்றவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை
யானே. 6

மாணி–பிரமசாரி; மார்க்கண்டேயர்

திருமுண்டீச்சரத்தில் கோயில் கொண்ட சிவலோகன் உயிரோடு உடனியைந்து நின்றவனும், எல்லா உறவினருமாய் ஆனவனும், ஓரிடமும் எஞ்சுதலில்லா வகை எவ்விடத்தும் நிறைந்து நின்றவனும், அழிவில்லாதவனும், புற்றில் வாழும் பாம்பை ஆடை மேல் கட்டப்படும் கச்சாகவும் ஆபரணமாகவும் கொண்டவனும், சுடுகாட்டில் எரியேந்தி ஆடுதலைச் செய்தவனும், நல்ல தவ வேடங்கொண்டவனும், சரணடைந்த பிரமசாரிக்காக அவனைக் கிட்டிய பெருங்கூற்றுவனைச் சேவடியால் உதைத்து அழித்தவனும் ஆவான். அவன் என் சிந்தையிடத்தவன் ஆவான்.

---

**2934.** உதைத்தவன்காண் உணராத தக்கன் வேள்வி
உருண்டோடத் தொடர்ந்தருக்கன் பல்லை
யெல்லாந்
தகர்த்தவன்காண் தக்கன்றன் தலையைச் செற்ற
தலைவன்காண் மலைமகளாம் உமையைச்
சால
மதிப்பொழிந்த வல்லமரர் மாண்டார் வேள்வி
வந்தவியுண் டவரோடு மதனை யெல்லாஞ்
சிதைத்தவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை
யானே. 7

மதன் – அறியாமை
பதிக மகுடம் – திருமுண்டீச்சரத்து மேய சிவலோகன் காண் அவனென் சிந்தையானே

திருமுண்டீச்சரத்தில் கோயில் கொண்ட சிவலோகன், மெய்யுணராத தக்கனுடைய வேள்விக்கண் திரட்டி வைக்கப்பட்ட திரவியங்களை உருண்டோட உதைத்தவனும், அருக்கனைத் தொடர்ந்து சென்று அவன் பற்களை எல்லாம் தகர்த்தவனும், தக்கனுடைய தலையைக் கொய்த தலைவனும், மலைமகளாகிய உமையம்மையை மிக இகழ்ந்தவராய், மாட்சிமைப்பட்டவராய்த் தம்மை மதித்து வேள்விக்கண் வந்து அவியுண்டாரு மாகிய வலிமைமிக்க தேவர்களொடு அவர்தம் அறியாமை முழுவதையும் அழித்தவனும் ஆவான். அவன் என் சிந்தையிடத்தவன் ஆயினன்.

2935. உரிந்தவுடை யார்துவரால் உடம்பை மூடி
உழிதருமவ் வூமரவர் உணரா வண்ணம்
பரிந்தவன்காண் பனிவரைமீப் பண்ட மெல்லாம்
பறித்துடனே நிரந்துவரு பாய்நீர்ப் பெண்ணை
நிரைந்துவரும் இருகரையுந் தடவா வோடி
நின்மலனை வலங்கொண்டு நீள நோக்கித்
திரிந்துலவு திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை
யானே. 8

திருமுண்டீச்சரத்தில் கோயில் கொண்ட சிவலோகன், உடை இல்லாதவரும், துவர் தோய்ந்த ஆடையால் உடம்பை மூடுபவராய்த் திரியும் சமண புத்தர்கள் உணராவண்ணம் தன் அடியார்க்கு அருள்புரிந்தவன் ஆவான். குளிர்ந்த மலைமேல் உள்ள பண்டங்களை யெல்லாம் வாரிக்கொண்டு அவற்றோடு கூட முறைப்பட்டு வரும் பெண்ணையாற்றில் பாய்ந்துவரும் நீர், இணை ஒத்துவரும் இரு கரைகளையும் தடவிக்கொண்டு ஓடிக் குற்றமற்ற இறைவனை வலங்கொண்டு இடமும் காலமும் நெடியவாக நோக்கி, மெல்ல அசைந்துலவும் அவன் என் சிந்தையிடத்தவன் ஆயினன்.

உரிந்த உடையார் – உடை இல்லாதவர்;
சமணர். துவர் தோய்ந்த ஆடையை உடுப்பவர் – புத்தர்.
ஊமர் – உணர்வில்லாதவர்

x x x x x x x x x 9

2936. அறுத்தவன்காண் அடியவர்கள் அல்ல லெல்லாம்
அரும்பொருளாய் நின்றவன்காண் அனங்க
னாகம்
மறுத்தவன்காண் மலைதன்னை மதியா தோடி
மலைமகள்தன் மனம்நடுங்க வானோ ரஞ்சக்
கறுத்தவனாய்க் கயிலாய மெடுத்தோன் கையுங்
கதிர்முடியுங் கண்ணும் பிதுங்கி யோடச்
செறுத்தவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை
யானே. 10

அடியார்களுடைய அல்லல்களையெல்லாம் நீக்கியவனும், அடைவதற்கு அரிய பொருளாய் நின்றவனும், மன்மதனது உடலை அழித்தவனும், மலைமகளாம் உமையம்மையின் மனம் நடுங்கவும் தேவர்கள் அஞ்சவும் கயிலை மலையை மதியாது வெகுண்டு ஓடி அதனைப் பறித்தெடுக்க முற்பட்டவனுடைய கைகளும் ஒளிவீசும் முடிகளை உடைய தலைகளும் கண்களும் பிதுங்கிச் செருக்குக்கெடுமாறு ஒறுத்தவனும், திருமுண்டீச்சரத்துக் கோயில் கொண்ட சிவலோகன் ஆவான். அவன் என் சிந்தையிடத்தவன் ஆயினன்.

அனங்கன் – மன்மதன். ஆகம் – உடல்.
மறுத்தவன் – ஒழித்தவன்
கறுத்தல் – வெகுளல். ஓட – (செருக்குக்) கெட

## 86. திருவாலம்பொழில்

("சிந்திக்க" என நெஞ்சிற்கு அறிவுறுத்தி அருளிய பதிகம்)

ப.தொ.எண் : 299 | பதிக எண் : 86

2937. கருவாகிக் கண்ணுதலாய் நின்றான் தன்னைக்
கமலத்தோன் தலையரிந்த காபா லிய்யை
உருவார்ந்த மலைமகளோர் பாகத் தானை
உணர்வெலா மானானை ஓசை யாகி
வருவானை வலஞ்சுழியெம் பெருமான் தன்னை
மறைக்காடும் ஆவடுதண் டுறையும் மேய
திருவானைத் தென் பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 1

பரம்பைக்குடி ஊர்
ஆலம்பொழில் கோயில்

எல்லாவற்றிற்கும் முதல் ஆனவனும், நுதலிடத்துக் கண் பெற்றவனும், பிரமனது தலையை அரிந்து, அரிந்த அத்தலை ஓட்டை விரும்பிக் கொண்டவனும், அழகிய உமையம்மை விளங்கும் உடலின் ஒரு கூற்றை உடையவனும், உயிர்களுடைய உணர்வுகள் எல்லாம் ஆனவனும், அவ்வுணர்வுகளை உணர்த்தும் ஓசைகளாகி வருபவனும், வலஞ்சுழியில் மன்னும் எம்பெருமானும், மறைக்காட்டிலும், ஆவடுதண்டுறையிலும் பொருந்தி வாழும் மேன்மையுடையவனும் ஆகிய, தென்பரம்பைக் குடியைச் சார்ந்த திருவாலம்பொழில் சிவபெருமானை, நெஞ்சே! இடைவிடாது சிந்திப்பாயாக.

2938. உரித்தானைக் களிறதன்தோல் போர்வை யாக
வுடையானை யுடைபுலியி னதளே யாகத்
தரித்தானைச் சடையதன்மேற் கங்கை யங்கைத்
தழலுருவை விடமமுதா வுண்டி தெல்லாம்
பரித்தானைப் பவளமால் வரையன் னானைப்
பாம்பணையான் தனக்கன்றங் காழி நல்கிச்
சிரித்தானைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 2

பரித்தான் – மேற்கொண்டு நிற்பவன்

களிற்றின் தோலை உரித்தவனும், அத்தோலைப் போர்வையாகவும், புலியின் தோலை உடையாகவும், உடையவனும், சடைமேல் கங்கையைத் தரித்தவனும், அழகிய கையிடத்து உருவத்தழலை ஏந்தியவனும், ஆலகால விடத்தை அமுது செய்தவனும், இக்கோலத்தையெல்லாம் மேற்கொண்டு நின்றவனும், பவளப் பெருமலையன்னவனும், ஆதிசேடனைப் படுக்கையாகக் கொண்ட திருமாலுக்கு அன்று சக்கராயுதத்தை வழங்கி மகிழ்ந்தவனும் ஆகிய, தென்பரம்பைக் குடியைச் சார்ந்த திருவாலம்பொழிற் சிவபெருமானை நெஞ்சே! இடைவிடாது சிந்திப்பாயாக.

**2939.** உருமூன்றாய் உணர்வின்கண் ஒன்றா னானை
ஓங்கார மெய்ப்பொருளை உடம்பி னுள்ளால்
கருவீன்ற வெங்களவை யறிவான் தன்னைக்
காலனைத்தன் கழலடியாற் காய்ந்து மாணிக்
கருளீன்ற ஆரமுதை அமரர் கோனை
யள்ளூறி யெம்பெருமான் என்பார்க் கென்றுந்
திருவீன்ற தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே.
3

அள்ஊறி – அன்பு மிகப் பெருகி
திரு – நன்மை
பதிக மகுடம் – திருவாலம்பொழிலானைச் சிந்தி நெஞ்சே

அயன், அரி, அரன் என்னும் நிலைகளால் மூவுருவாகியும் உண்மையை உணருமிடத்து அம்மூவுருவம் ஒருரு ஆனவனும், ஓங்காரத்தின் மெய்ப்பொருளாய்த் திகழ்பவனும், உடம்பின் உள்ளே கருவாய்த் திகழும் மனம் எண்ணும் வஞ்சனையான கொடிய எண்ணங்களை அறிபவனும், இயமனைக் கழலணிந்த தன் திருவடியால் உதைத்து மாணியாகிய மார்க்கண்டேயனுக்கு அருள் செய்த பெறுதற்கரிய அமுது அன்னவனும், தேவர்களுக்குத் தலைவனும் அன்புமிகப் பெருகி எம்பெருமானே என்று விளித்து அடி அடைவார்க்கு என்றும் நன்மைகளை உண்டாக்குபவனும் ஆகிய தென்பரம்பைக் குடியைச் சார்ந்த திருவாலம் பொழிற் சிவபெருமானை நெஞ்சே! இடைவிடாது சிந்திப்பாயாக.

**2940.** பார்முழுதாய் விசும்பாகிப் பாதா ளமாம்
பரம்பரனைச் சுரும்பமருங் குழலாள் பாகத்
தாரமுதாம் அணிதில்லைக் கூத்தன் தன்னை
வாட்போக்கி யம்மானை யெம்மா னென்று
வாரமதாம் அடியார்க்கு வார மாகி
வஞ்சனைசெய் வார்க்கென்றும் வஞ்ச னாகுஞ்
சீரரசைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே.
4

பார், விசும்பு. பாதாளம் – மூவுலகம்
வாரம் – அன்பு. சீர்அரசு – சிறந்த அரசன்

முழுப்பூமியும், விசும்பும், பாதாளமும் ஆகிய மூவுலகங்களாய் நின்ற மிக மேலானவனும், வண்டுகள் மொய்க்கும் குழலினையுடைய உமையம்மையைப் பாகத்திற்கொண்ட ஆரமுதம் போன்றவனும், அழகிய தில்லையிடத்து ஆடும் கூத்தனும், வாட்போக்கித் திருத்தலத்துத் தலைவனும், எம் தலைவன் என்று பாராட்டி அன்பு கூரும் அடியார்பால் அன்புடையவனும், வஞ்ச மனத்தார்க்கு என்றும் வஞ்சனும், சிறந்த அரசனும் ஆகிய, தென்பரம்பைக் குடியைச் சார்ந்த திருவாலம்பொழிற் சிவபெருமானை நெஞ்சே! இடைவிடாமல் சிந்திப்பாயாக.

2941. வரையார்ந்த மடமங்கை பங்கன் தன்னை
வானவர்க்கும் வானவனை மணியை முத்தை
அரையார்ந்த புலித்தோல்மேல் அரவ மார்த்த
அம்மானைத் தம்மானை அடியார்க் கென்றும்
புரையார்ந்த கோவணத்தெம் புனிதன் தன்னைப்
பூந்துருத்தி மேயானைப் புகலூ ரானைத்
திரையார்ந்த தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 5

அம்மான் – எப்பொருட்கும் தலைவன்
புரை – உயர்வு, வெண்மை. திரை – அலை

மலையில் தங்கி வளர்ந்த இளமங்கையைப் பங்கில் ஏற்றவனும் தேவர்க்குத் தேவனும், மணி போன்றவனும், முத்து அனையானும், அரையிற் பொருந்திய புலித்தோல் மேல் பாம்பைக் கட்டிய தலைவனும், அடியார்க்கு என்றுந் தலைவனாய் நின்று அருளுபவனும், வெள்ளிதாய் உயர்ந்த கோவணத்தை அணிந்த புனிதனும், பூந்துருத்தி வாழ்வானும், புகலூரானும் ஆகிய, அலை எழும் நீர்நிலைகளை உடைய தென் பரம்பைக்குடியைச் சார்ந்த திருவாலம்பொழிற் சிவபெருமானை நெஞ்சே! இடைவிடாமல் சிந்திப்பாயாக.

2942. விரிந்தானைக் குவிந்தானை வேத வித்தை
வியன்பிறப்போ டிறப்பாகி நின்றான் தன்னை
அரிந்தானைச் சலந்தரன்றன் உடலம் வேறா
ஆழ்கடல்நஞ் சுண்டிமையோ ரெல்லா முய்யப்
பரிந்தானைப் பல்லசுரர் புரங்கள் மூன்றும்
பாழ்படுப்பான் **சிலைமலைநாண் ஏற்றி யம்பு**
**தெரிந்தானைத்** தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 6

விரிந்தது – படைப்புக் காலத்து
குவிந்தது – ஒடுக்குங் காலத்து

படைப்புக் காலத்து விரிந்தவனும், அழிப்புக் காலத்துக் குவிந்தவனும், வேதத்தின் வித்தானவனும், பரந்த பிறப்பும் இறப்பும் ஆகி நின்றவனும், சலந்தரன் உடல் இருகூறாய் வேறாக அரிந்தவனும், ஆழ்கடலிலிருந்து தோன்றிய நஞ்சையுண்டு இமையோரெல்லாரும் உய்ய அருள்புரிந்தவனும், பலவாகிய அசுரர்கள் வாழ்புரங்கள் மூன்றையும் பாழ்படுத்தற்கு மலையாகிய வில்லில் பாம்பாகிய நாணை ஏற்றித் திருமாலாகிய அம்பைத் தெரிந்து எய்தவனும் ஆகிய தென்பரம்பைக் குடியைச் சார்ந்த திருவாலம் பொழிற் சிவபெருமானை நெஞ்சே! இடைவிடாமல் சிந்திப்பாயாக.

| | |
|---|---|
| **2943.** பொல்லாத என்னழுக்கிற் புகுவா னென்னைப்<br>புறம்புறமே சோதித்த புனிதன் தன்னை<br>எல்லாருந் தன்னை யிகழ அந்நாள்<br>இடபலியென் றகந்திரியும் எம்பி ரானைச்<br>சொல்லாதா ரவர்தம்மைச் சொல்லா தானைத்<br>தொடர்ந்துதன் பொன்னடியே பேணு வாரைச்<br>செல்லாத நெறிசெலுத்த வல்லான் தன்னைத்<br>திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே.<br>7<br><br>அழுக்கு என்றது உடம்பை | **குற்றமிக்க என்னுயிரில் புகுதற்பொருட்டு என் உயிரின் புறத்தே நின்று பலகாலும் ஆராய்ந்து குற்றங் களைந்து தூய்மை செய்த புனிதனும்,** தாருகாவனத்து முனிவர் எல்லாரும் தன்னை இகழ, அந்நாள் அவரகத்தார் இடுபலி என்ற ஒன்றை முன்னிட்டுக் கொண்டு அங்கே திரிந்தவனும், தன்னைப் புகழாதாரைத் தான் என்றும் நினையாதவனும், இடைவிடாமல் தன் பொன்னடிகளையே விரும்பி ஒழுகுவாரை மற்றவர் செல்லாத ஞான நெறியிலே செலுத்த வல்லவனும் ஆகிய, திருவாலம்பொழிற் சிவபெருமானை நெஞ்சே! இடைவிடாமல் சிந்திப்பாயாக. |
| **2944.** ஐந்தலைய நாகவணைக் கிடந்த மாலோ<br>டயன்தேடி நாடரிய அம்மான் தன்னைப்<br>பந்தணவு மெல்விரலாள் பாகத் தானைப்<br>பராய்த்துறையும் வெண்காடும் பயின்றான் தன்னைப்<br>பொந்துடைய வெண்டலையிற் பலிகொள் வானைப்<br>பூவணமும் புறம்பயமும் பொருந்தி னானைச்<br>சிந்திய வெந் தீவினைகள் தீர்ப்பான் தன்னைத்<br>திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே.<br>8 | ஐந்தலைப் பாம்பாகிய படுக்கையில் கிடந்த திருமாலும் பிரமனும் தேடிக் காண இயலாத தலைவனும், பந்து பொருந்தும் மெல்லிய விரலினளாகிய பார்வதியைப் பாகமாகக் கொண்டவனும், பராய்த்துறையிலும், வெண் காட்டிலும் பயின்று நிற்பவனும், ஓட்டைகளுடைய வெள்ளிய தலையில் பிச்சை ஏற்பவனும், பூவணத்தும், புறம்பயத்தும் பொருந்தி நிற்பவனும், துன்புறுத்திய எம் கொடுவினைகளைத் தீர்ப்பவனும் ஆகிய, திருவாலம்பொழிற் சிவபெருமானை நெஞ்சே! இடைவிடாமல் சிந்திப்பாயாக. |
| **2945.** கையிலுண் டுழல்வாருஞ் சாக்கியருங்<br>கல்லாத வன்மூடர்க் கல்லா தானைப்<br>பொய்யிலா தவர்க்கென்றும் பொய்யி லானைப்<br>பூண்நாகம் நாணாகப் பொருப்பு வில்லாக்<br>கையினார் அம்பெரிகால் ஈர்க்குக் கோலாக்<br>கடுந்தவத்தோர் நெடும்புரங்கள் கனல்வாய் வீழ்த்த<br>செய்யினார் தென்பரம்பைக் குடியின் மேய<br>திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே.<br>9<br><br>x x x x x x x x x 10 | கையில் உணவை ஏற்று உண்ணும் சமணரும் சாக்கியரும் ஆகிய கல்விப் பயனடையாத வலிய மூடர்க்கு நல்லன் அல்லனும், நெஞ்சில் கரவு இல்லாதார்க்குக் கரவாது வெளிநின்று அருள்பவனும், பூணாக அணிகின்ற நாகமே நாணாகவும், மலையே வில்லாகவும், அக்கினி தேவனும் வாயுதேவனும் கையிற் பொருந்திய அம்பினுடைய ஈர்க்கும் கோலுமாகக் கொண்டு கொடிய தவத்தைச் செய்து வரங்களைப் பெற்ற அசுரர்களுடைய நெடிய புரங்கள் மூன்றையும் நெருப்பில் வீழ்த்தவனும், வயல்கள் நிரம்பிய தென்பரம்பைக் குடியைச் சார்ந்த திருவாலம் பொழிற் சிவபெருமானை நெஞ்சே! இடை விடாமல் சிந்திப்பாயாக. |

## 87. திருச்சிவபுரம்

(இத்திருப்பதிகம் "காண்" என்னும் முடிபுடைய தொடர்களால் சிவபிரானது பெருமைகளை வகுத்தருளிச் செய்தது )

ப.தொ.எண் : 300 பதிக எண் : 87

2946. வானவன்காண் வானவர்க்கு மேலா னான்காண்
வடமொழியுந் தென்றமிழும் மறைகள் நான்கும்
ஆனவன்காண் ஆனைந்தும் ஆடி னான்காண்
ஐயன்காண் கையிலனல் ஏந்தி யாடும்
கானவன்காண் கானவனுக் கருள்செய் தான்காண்
கருதுவார் இதயத்துக் கமலத் தூறும்
தேனவன்காண் சென்றடையாச் செல்வன் றான்காண்
சிவனவன்காண் சிவபுரத் தெஞ்செல்வன் தானே. 1

சிவபுரத்து எம் செல்வனாம் சிவபெருமான், வானிடத்து உறைபவனும், தேவர்களுக்கு மேலானவனும், வடமொழியும் இனிய தமிழ் மொழியும் மறைகள் நான்கும் ஆனவனும், ஆன்ஐந்தாம் பஞ்சகவ்வியத்தில் ஆடினவனும், கானவனாகிய கண்ணப்பனுக்கு அருள் செய்தவனும், தன்னைக் கருதுவார் இதயத்திடத்து, தாமரை மலரிடத்து ஊறும் தேன் போன்றவனும், முன்பு இல்லாது, பின்பு காரணத்தாற் சென்றடையும் பெற்றியதன்றி இயல்பாகவே உள்ள செல்வனும் ஆவான்.

2947. நக்கன்காண் நக்கரவம் அரையி லார்த்த
நாதன்காண் பூதகண மாட ஆடும்
சொக்கன்காண் கொக்கிறகு சூடி னான்காண்
துடியிடையாள் துணைமுலைக்குச் சேர்வதாகும்
பொக்கன்காண் பொக்கணத்த வெண்ணீற்றான்காண்
புவனங்கள் மூன்றினுக்கும் பொருளாய் நின்ற
திக்கன்காண் செக்கரது திகழு மேனிச்
சிவனவன்காண் சிவபுரத் தெஞ்செல்வன் தானே. 2

சிவபுரத்து எம் செல்வனாம் சிவபெருமான் உடை இல்லாதவனும், ஒளியுடைய பாம்பினை இடையிற்கட்டிய தலைவனும், பூதகணங்கள் ஆட அவற்றுடன் தானும் ஆடும் அழகனும், கொக்கிறகைச் சூடினவனும், துணை முலைகளை உடைய துடிபோலும் இடையாளுக்குச் சேரப்படும் இடமாந் தகுதி பெற்ற பொலிவையுடையவனும், சம்புடத்துக் கொண்ட வெள்ளிய திருநீற்றை உடையவனும், புவனங்கள் மூன்றிற்கும் உயிராய் நின்ற புகலிடமானவனும், செவ்வானம் போலத் திகழும் மேனியையுடையவனும் ஆவான்.

நக்கன் – பிட்சாடன கோலம் உடையவன்.

சொக்கன் – அழகன். பொக்கன் – பொலிவை யுடையவன்.

செக்கர் – செவ்வானம், சிவப்பு நிறம்

**2948.** வம்பின்மலர்க் குழலுமையாள் மணவா ளன்காண்
மலரவன்மால் காண்பரிய மைந்தன் தான்காண்
கம்பமதக் கரிபிளிற வுரிசெய் தோன்காண்
கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டத் தான்காண்
அம்பர்நகர்ப் பெருங்கோயில் அமர்கின் றான்காண்
அயவந்தி யுள்ளான்காண் ஐயா றன்காண்
செம்பொனெனத் திகழ்கின்ற வுருவத் தான்காண்
சிவனவன்காண் சிவபுரத் தெஞ்செல்வன் தானே. 3

வம்பு – வாசனை; இயற்கை மணம்.
கம்பம் – அசைவு.

சிவபுரத்து எம் செல்வனாம் சிவபெருமான் மணங்கமழும் மலர்களையணிந்த கூந்தலையுடைய உமையம்மையின் கணவனும், நான்முகனும் திருமாலும் காணமுடியாத வலிமையுடையவனும், அசையுமியல் பினையுடைய மதயானை துன்ப மிகுதியால் பிளிற, அதன் தோலை உரித்தவனும், கடலில் தோன்றிய நஞ்சை உண்டதால் இருண்ட கண்டத்தவனும், அம்பர் நகரத்துப் பெருங் கோயிலில் விரும்பி உறைபவனும், அயவந்தித் திருக்கோயிலில் உள்ளவனும், ஐயாறனும், செம்பொன்போல் திகழும் திருவுருவத்தவனும் ஆவான்.

---

**2949.** பித்தன்காண் தக்கன்தன் வேள்வி யெல்லாம்
பீடழியச் சாடி யருள்கள் செய்த
முத்தன்காண் முத்தீயு மாயினான் காண்
முனிவர்க்கும் வானவர்க்கும் முதலாய் மிக்க
அத்தன்காண் புத்தூரில் அமர்ந்தான் தான்காண்
அரிசிற் பெருந்துறையே ஆட்சி கொண்ட
சித்தன்காண் சித்தீச் சரத்தான் தான்காண்
சிவனவன்காண் சிவபுரத் தெஞ்செல்வன் தானே. 4

பீடு – பெருமை. முத்தன் – பாசம் இல்லாதவன்.
அத்தன் – தந்தை. முத்தீ – ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினி என்பன.
சித்தன் – எல்லாம் செய்ய வல்லவன்.

சிவபுரத்தெம் செல்வனாம் சிவபெருமான், பித்தனாய், தக்கன் வேள்வியை முழுதும் பெருமையிழக்க அழித்துப் பின் அனைவருக்கும் அருள்கள் செய்த முத்தனாய், முத்தீயும் ஆனவனாய், முனிவர்க்கும் தேவர்க்கும் முதலாகும் மேன்மை மிக்க தந்தையாய், புத்தூரில் அமர்ந்தவனாய், அரிசிற் பெருந்துறையை இருந்து ஆளுமிடமாகக் கொண்ட சித்தனாய், நறையூர்ச் சித்தீச்சரத் தவனாய்த் திகழ்பவன் ஆவான்.

---

**2950.** தூயவன்காண் நீறு துதைந்த மேனி
துளங்கும் பளிங்கனைய சோதி யான்காண்
தீயவன்காண் தீயவுணர் புரஞ்செற் றான்காண்
சிறுமான்கொள் செங்கையெம் பெருமான்தான் காண்
ஆயவன்காண் ஆரூரி லம்மான் தான்காண்
அடியார்கட் காரமுத மாயி னான்காண்
சேயவன்காண் சேமநெறி யாயி னான்காண்
சிவனவன்காண் சிவபுரத் தெஞ்செல்வன் தானே. 5

பதிக மகுடம் – சிவனவன் காண் சிவபுரத்தெஞ்செல்வன் தானே.

சிவபுரத்தெம் செல்வனாம் சிவபெருமான், தூயவனும், ஒளி விளங்கும் பளிங்கு போன்று, திருநீறு செறிந்த மேனிச் சோதியனும், தீயாய்த் திகழ்பவனும், கொடிய அசுரருடைய புரங்களை அழித்தவனும், சிறுமானைச் செங்கையிலேந்திய எம் பெருமானும், தாய் போன்றவனும், ஆரூரில் அம்மானாய்த் திகழ்பவனும், அடியவர்க்கு ஆரமுதம் ஆனவனும், மற்றையர்க்குத் தொலைவில் உள்ளவனும், பாதுகாவலான நெறியினனும் ஆவான்.

**2951.** பாரவன்காண் பாரதனிற் பயிரா னான்காண்
பயிர்வளர்க்குந் துளியவன்காண் துளியில் நின்ற
நீரவன்காண் நீர்சடைமேல் நிகழ்வித் தான்காண்
**நிலவேந்தர் பரிசாக** நினைவுற் றோங்கும்
பேரவன்காண் பிறையெயிற்று **வெள்ளைப் பன்றிப்**
**பிரியாது பலநாளும் வழிபட் டேத்தும்**
**சீரவன்காண்** சீருடைய தேவர்க் கெல்லாஞ்
சிவனவன்காண் சிவபுரத் தெஞ்செல்வன் தானே. **6**

பார் – இங்கு "விளைநிலம்"
துளி – மழை. பேர் – பெயர்; புகழ்

சிவபுரத்தெம் செல்வனாம் சிவபெருமான், விளைநிலமானவனும், விளைநிலத்தில் பயிரானவனும், பயிரை வளர்க்கும் மழையானவனும், அம்மழைத்துளியில் நின்ற நீரானவனும், தன் சடைமேல் நீர்நிற்கச் செய்தவனும், நிலவேந்தர் தம் ஆட்சியால் தாம் பெறும் பரிசாகத் தம் மனத்தில் எஞ்ஞான்றும் நினைக்குமாறு ஓங்கும் புகழானவனும், பிறை போன்ற விளைந்த பல்லினை உடைய வெள்ளைப் பன்றியாகிய திருமால் இந்நகரில் நீங்காது பலநாளும் வழிபட்டு வணங்கும் புகழினனானவனும், சிறப்புடைய தேவர் எல்லாருக்கும் இன்பக் காரணன் ஆனவனும் ஆவான்.

## நிலவேந்தர் பரிசு

இதனானே, சிவபிரான் திருக்கோயில் வழிபாடுகள் விழாக்கள் முதலியவற்றை நன்கு காத்தல் நிலவேந்தர்க்கு முதற் கடமையாதலும் பெறப்பட்டது. "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் – வீழ்க தண்புனல்" என, அந்தணரையும் தேவரையும் ஆனினத்தையும் மழையையும் வாழ்த்தியருளிய ஆளுடைய பிள்ளையார், "வேந்தனும் ஓங்குக" **(தி.3. ப.54. பா.1)** என அரசனை வாழ்த்தியருளியதூஉம் இது பற்றி என்பதனை, "ஆளும் மன்னனை வாழ்த்திய தர்ச்சனை மூளும் மற்றிவை காக்கும் முறைமையால்" **(தி.12 திருஞான. புரா. 822)** எனச் சேக்கிழார் நாயனார் விளக்கியருளினார். 'இது செய்யாத அரசன் தானும் கேடுற்றுத் தன் நாட்டினையும் கேடுறச் செய்வான்' என்பதனைத் திருமூல நாயனார் திருமந்திரத்துள்,

"ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைகள் தப்பிடிற் றானே"

எனவும்,

"முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே"

எனவும் அருளிச் செய்தார்.

பிறை எயிறு – பிறை போன்ற கோரப் பல். வெள்ளைப் பன்றி – சுவேத வராகம்; இது திருமால் கொண்ட வடிவம். திருமால் இவ்வடிவத்துடன் நிலத்தை ஊழி வெள்ளத்திலிருந்து எடுத்து நிறுத்திய பின் இத்தலத்தில் சிவபெருமானை வழிபட்டனன் என்பது புராணம்.

"மதமிகு நெடுமுக னமர்வளை மதிதிக
ழெயிறத னுதிமிசை
இதமமர் புவியது நிறுவிய எழில்அரி
வழிபட அருள்செய்த
பதமுடை யவன்அமர் சிவபுரம்"

(தி.1. ப.21. பா.7.) என்றருளினார் ஞானசம்பந்தரும். சீர் – புகழ், சீர் உடைய தேவர் – வேதங்களிலும், புராணங்களிலும் சொல்லப்படும் புகழை உடைய தேவர்கள். "சிவன்" என்றது, இங்கு, 'இன்பத்திற்குக் காரணன்' என்னும் பொருட்டு.

2952. வெய்யவன்காண் வெய்யகன லேந்தி னான்காண்
வியன்கெடில வீரட்டம் மேவி னான்காண்
மெய்யவன்காண் பொய்யர்மனம் விரவா
தான்காண்
வீணையோ டிசைந்துமிகு பாடல் மிக்க
கையவன்காண் கையில்மழு வேந்தி னான்காண்
காமனங்கம் பொடிவிழித்த கண்ணி
னான்காண்
செய்யவன்காண் **செய்யவளை மாலுக் கீந்த
சிவனவன்காண்** சிவபுரத் தெஞ்செல்வன்
தானே. 7

வளை–சங்கு, மாலுக்குச் சக்கரமேயன்றி சங்கினை அளித்த வரலாறாகவும் கொள்ளலாம்.

x x x x x x x x x 8, 9

சிவபுரத்தெம் செல்வனாம் சிவபெருமான், கொடியவர்க்குக் கொடியவனும், வெப்பமிகு கனலை ஏந்தியவனும், பரந்த கெடிலநதிக்கரை மீதுள்ள அதிகை வீரட்டானத்து அமர்ந்தவனும், மெய்ப்பொருளினனும், பொய்யர் மனத்துட் புகாதவனும், இனிமை மிகும் பாடல் வீணையோடு இயைந்து இனிமை மேலும் மிகுதற்குக் காரணமான விரலினனும், கையில் மழுவாயுதத்தை ஏந்தியவனும், காமனது உடல் எரிந்து சாம்பல் ஆக விழித்த கண்ணினனும், செம்மை நிறத்தவனும், திருமகளைத் திருமாலுக்கு ஈந்தவனும் ஆவான்.

2953. கலையாரு நூலங்க மாயி னான்காண்
கலைபயிலுங் கருத்தன்காண் திருத்த மாகி
மலையாகி மறிகடலேழ் சூழ்ந்து நின்ற
மண்ணாகி விண்ணாகி நின்றான்
தான்காண்
தலையாய மலையெடுத்த தகவி லோனைத்
தகர்ந்துவிழ வொருவிரலாற் சாதித் தாண்ட
சிலையாரும் மடமகளோர் கூறன் தான்காண்
சிவனவன்காண் சிவபுரத் தெஞ்செல்வன்
தானே. 10

கலை ஆரும் நூல் – உறுதிப்பொருள்களை உணர்த்தும் நூல்.
கற்க வேண்டிய பொருள்கள் நிறைந்த நூல்.
தகவு – பண்பு

சிவபுரத்தெம் செல்வனாம் சிவபெருமான், கலைகள் எல்லாம் பொருந்திய வேதநூலும் அங்கங்களும் ஆனவனும், கலைகளிற் பொருந்திய கருத்துக்களாய் உள்ளவனும், தீர்த்தமாயும், மலையாயும், அலைகள் மடங்கி வீழ் கடல்கள் ஏழும் சூழ்ந்து நின்ற நிலவுலகமாயும், விண்ணாயும் நின்றவனும், சிறந்த கயிலாய மலையை எடுத்த பண்புகெட்ட இராவணன் வலியிழந்து விடுமாறு ஒரு விரலால் முடித்தவனும், மலையில் தோன்றி வளர்ந்த மட மகளாம் பார்வதியைத் தன் கூறாகக் கொண்டு ஆண்டவனும் ஆவான்.

## 88. திருஓமாம்புலியூர்

(சிவபெருமானை நினையாத மயக்க உணர்விலே பல நாள்கள் போயினமை கருதி இரங்கியருளிச் செய்தது)

ப.தொ.எண் : 301 பதிக எண் : 88

2954. ஆராரும் மூவிலைவேல்அங்கை யானை
அலைகடல்நஞ் சயின்றானை அமர ரேத்தும்
ஏராரும் மதிபொதியுஞ் சடையி னானை
எழுபிறப்பும் எனையாளா வுடையான் தன்னை
ஊராரும் படநாகம் ஆட்டு வானை
உயர்புகழ்சேர் தரும்ஓமாம் புலியூர் மன்னுஞ்
சீராரும் வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னானே.
1

ஆர்ஆரும் – கூர்மை பொருந்திய
மூவிலைவேல் – சூலம். ஏர்ஆரும் – அழகு நிறைந்த.
ஊர்ஆரும் – ஊர்தல் பொருந்திய.

கூர்மை பொருந்திய மூவிலை வேலை அங்கையிடத்துக் கொண்டவனும், அலையையுடைய கடலில் தோன்றிய நஞ்சினை உண்டவனும், தேவர்கள் புகழும் அழகு நிறைந்த மதியைத் தன்னுட்கொண்ட சடையனும், இனி எனக்கு எழ இருக்கும் பிறப்புக்களிலும் என்னை அடிமையாக உடைவனும், ஊரும் இயல்பினதாகிய படநாகத்தை ஆட்டுபவனும் ஆகி உயர்புகழ்சேரும் ஓமாம்புலியூரிடத்தே நிலைத்து நிற்கும் சிறப்பினை உடைய வடதளியில் விளங்கும் எம் செல்வனாகிய சிவபெருமானை அடையாது நான் மயங்கி நாள் பல வீணே போக்கினேன்.

2955. ஆதியான் அரிஅயனென் றறிய வொண்ணா
அமரர்தொழுங் கழலானை **யமலன்** தன்னைச்
சோதிமதி கலைதொலையத் தக்கன் எச்சன்
சுடர்இரவி அயிலெயிறு தொலைவித் தானை
ஓதிமிக அந்தணர்கள் எரிமூன் றோம்பும்
உயர்புகழார் தரும்ஓமாம் புலியூர் மன்னும்
தீதில்திரு வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே.
2

எச்சன் – வேள்வித் தெய்வம். அயில் – கூர்மை.
இத்தலத்தில் அந்தணர்கள் மிக்கு வாழ்ந்துள்ளனர் என்பதை சுவாமிகள் பல பாடல்களில் பாடியுள்ளார்.

தன்னின்வேறு பிரித்து அரி என்றும், அயனென்றும் அறிய ஒண்ணாத ஆதியானவனும், தேவர்கள் தொழும் கழலினனும், **இயல்பாகவே பாசமில்லாதவனும்,** ஒளியுமிழும் சந்திரனுடைய கலைகளைத் தொலையச் செய்தவனும், தக்கனையும் எச்சனையும் தக்கவாறு தண்டித்தவனும், ஒளிவீசும் இரவியுடைய கூரிய பற்களைத் தகர்த்தவனும் ஆகி, அந்தணர்கள் வேதங்களை மிக ஓதி மூன்று எரிகளையும் முறையே ஓம்புதலினால் உயர்ந்த புகழைப் பொருந்தும் ஓமாம்புலியூரில் திகழும் தீதில்லாத வடதளியில் மன்னும் எம்செல்வனாகிய சிவபெருமானை அடையாது நான் மயங்கி நாள்பல வீணே போக்கினேன்.

**2956.** வருமிக்க மதயானை யுரித்தான் தன்னை
வானவர்கோன் தோளனைத்தும் மடிவித்
தானைத்
தருமிக்க குழலுமையாள் பாகன் தன்னைச்
சங்கரன்எம் பெருமானைத் தரணி தன்மேல்
உருமிக்க மணிமாடம் நிலாவு வீதி
உத்தமர்வாழ் தரும்ஓமாம் புலியூர் மன்னும்
திருமிக்க வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே.
3

உரு – ஒளி. திரு – அழகு

எதிர்த்துவரும் மதமிக்க யானையின் தோலை உரித்தவனும், தக்க யாகத்தில் இந்திரனுடைய தோள்களை முற்றிலும் துணித்தவனும், நறுமணத்தைத் தரும் செறிந்த குழல் உமையாளின் பாகனும், சங்கரனும், எம்பெருமானும் ஆகி, பூமியின்மேல் ஒளிமிக்க மணிகளானியன்ற மாடங்கள் நிலவுகின்ற வீதிகளை உடையதும், மேலோர்கள் வாழ்வதும் ஆகிய ஓமாம்புலியூரில் அழகுமிக்க வடதளியில் மன்னும் எம்செல்வனாகிய சிவபெருமானை அடையாது நான் மயங்கி நாள் பல வீணே போக்கினேன்.

**2957.** அன்றினவர் புரமூன்றும் பொடியாய் வேவ
அழல்விழித்த கண்ணானைஅமரர் கோனை
வென்றிமிகு காலனுயிர் பொன்றி வீழ
விளங்குதிரு வடியெடுத்த விகிர்தன்
தன்னை
ஒன்றியசீர் இருபிறப்பர் முத்தீ யோம்பும்
உயர்புகழ்நான் மறைஓமாம் புலியூர் நாளும்
தென்றல்மலி வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே.
4

ஒன்றியசீர் – பொருந்திய புகழ்

பகைத்தவர் புரமூன்றும் வெந்து பொடியாகுமாறு அழல் உண்டாக விழித்த கண்ணினனும், தேவர்கட்குத் தலைவனும், வெற்றியால் மிக்கு விளங்கிய காலன் உயிரிழந்து விழ விளக்கம் மிக்க தன் திருவடியால் உதைத்த விகிர்தனும் ஆகி, புகழ்பொருந்திய அந்தணாளர் நாளும் முத்தீயையும் ஓம்புதலினால் வரும் உயர் புகழையும் நான்மறை முழக்கத்தையும் உடைய ஓமாம்புலியூரில் தென்றற்காற்று மிக்குத் தவழும் வடதளிவாழ் எம் செல்வனாகிய சிவ பெருமானை அடையாது நான் மயங்கி நாள் பல வீணே போக்கினேன்.

**2958.** பாங்குடைய எழில்அங்கி யருச்சனைமுன்
விரும்பப்
பரிந்தவனுக் கருள்செய்த பரமன் தன்னைப்
பாங்கிலா நரகதனைத் தொண்ட ரானார்
பாராத வகைபண்ண வல்லான் தன்னை
ஓங்குமதில் புடைதழுவும் எழில்ஓமாம் புலியூர்
உயர்புகழந் தணரேத்த வுலகர்க் கென்றும்
தீங்கில்திரு வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே.
5

அக்கினிதேவன் வழிபட்டு அருள் பெற்றமை பாடப்படுகிறது.

முன்செய்த நன்மையுடையனாகிய அழகிய அக்கினிதேவன் அருச்சனை செய்ய விரும்ப அவன் மேல் இரக்கங் கொண்டு அவன் அதனை இயற்ற அருள் செய்த பரமனும், தன் தொண்டரானார், தீங்குடைய நரகினைப் பாராதவாறு பண்ண வல்லவனும் ஆகி, நாற்புறமும் உயர்ந்தமதில் தழுவி நிற்கும் அழகுடைய ஓமாம்புலியூரில் உயர்ந்த புகழினை யுடைய அந்தணர்கள் புகழுமாறு பூசையும் விழவும் செவ்வனே நடைபெறுவதால் உலகோர்க்கு என்றும் தீங்கின்றி நிலவும் அழகிய வடதளிவாழ் எம் செல்வனாகிய சிவபெருமானை அடையாது நான் மயங்கி நாள் பல வீணே போக்கினேன்.

**2959.** அருந்தவத்தோர் தொழுதேத்தும் அம்மான் தன்னை
ஆராத இன்னமுதை அடியார் தம்மேல்
வருந்துயரந் தவிர்ப்பானை உமையாள் நங்கை
மணவாள நம்பியைஎன் மருந்து தன்னைப்
பொருந்துபுனல் தழுவுவயல் நிலவு துங்கப்
பொழில்கெழுவு தரும்ஓமாம் புலியூர் நாளும்
திருந்துதிரு வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே.
6

ஆராத – தெவிட்டாத. துங்கம் – உயர்ச்சி.
நங்கை – பெண்டிருட் சிறந்தவர்
நம்பி – ஆடவரிற் சிறந்தவர்
திருந்து – எல்லாம் இனிது அமைந்த.

அரிய தவமுடையோர் வணங்க வாழ்த்தும் தலைவனும், தெவிட்டாத இன்னமுதன்னவனும், அடியார்க்கு வரும் துயரங்களை விலக்குபவனும், நங்கை உமையாளின் கணவனாகிய நம்பியும், எனக்கு அமுதும் ஆகி, பயிர் வளர்ச்சிக்குப் பொருத்தமான புனலால் தழுவப்படும் வயலும், உயர்ச்சி நிலவும் பொழிலும் பொருந்தி விளங்கும் ஓமாம்புலியூரில் நாளும் நடைபெறுவன திருத்தமுற அமையும் அழகிய வடதளி வாழ் எம் செல்வனாகிய சிவபெருமானை அடையாது நான் மயங்கி நாள் பல வீணே போக்கினேன்.

**2960.** மலையானை வருமலையொன் றுரிசெய் தானை
மறையானை மறையாலும் அறிய வொண்ணாக்
கலையானைக் கலையாருங் கையி லானைக்
கடிவானை அடியார்கள் துயர மெல்லாம்
உலையாத அந்தணர்கள் வாழும் ஓமாம்
புலியூர்எம் உத்தமனைப் புரம்மூன் றெய்த
சிலையானை வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே.
7

வருமலை – யானை. கலை – கூறு; தன்மைகள்.
உலையாத – ஒழுக்கத்தில் தளராத

கயிலை மலையவனும், யானை ஒன்றின் தோலை உரித்தவனும், வேதத்தில் உள்ளவனும், அவ்வேதத்தாலும் அறியப்படாத தன்மையனும், மான் கன்று பொருந்திய திருக்கரத்தினனும், அடியார்களுடைய துயரங்களை நீக்குபவனும், எம்மால் வணங்கப்படும் உத்தமனும், திரிபுரங்களை எரித்த வில்லினனும் ஆகி ஒழுக்கத்தில் தளராத அந்தணர்கள் வாழும் ஓமாம்புலியூரில் வடதளி வாழ் எம் செல்வனாகிய சிவபெருமானை அடையாது நான் மயங்கி நாள் பல வீணே போக்கினேன்.

**2961.** சேர்ந்தோடு மணிக்கங்கை சூடி னானைச்
செழுமதியும் படஅரவும் உடன்வைத் தானைச்
சார்ந்தோர்கட் கினியானைத் தன்னொப் பில்லாத்
தழலுருவைத் தலைமகனைத் தகைநால் வேதம்
ஓர்ந்தோதிப் பயில்வார்வாழ் தருமோமாம் புலியூர்
உள்ளானைக் கள்ளாத அடியார் நெஞ்சிற்
சேர்ந்தானை வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே.
8

x x x x x x x x x 9

மணிகளைக் கொழித்து ஓடும் கங்கையைச் சூடியவனும், அழகிய மதியையும், படநாகத்தையும் உடன் தங்குமாறு வைத்தவனும், அடியடைந்தார்க்கு இனியனும், தன்னொப்பார் பிறரில்லாத தழல் நிறத்தவனும், எல்லார்க்கும் தலைவனும், பெருமை மிக்க நால் வேதங்களையும் ஓதி ஆராய்ந்து அவற்றிலேயே பழகுவார் வாழும் ஓமாம்புலியூரில் உள்ளவனும், அடியாருடைய களவில்லா நெஞ்சில் சேர்ந்தவனும் ஆகி வடதளிவாழ் எம் செல்வனாகிய சிவபெருமானை அடையாது நான் மயங்கி நாள் பல வீணே போக்கினேன்.

2962. வார்கெழுவு முலையுமையாள் வெருவ அன்று
மலையெடுத்த வாளரக்கன் தோளுந் தாளும்
ஏர்கெழுவு சிரம்பத்தும் இறுத்து மீண்டே
இன்னிசைகேட்டிருந்தானை இமையோர் கோனைப்
பார்கெழுவு புகழ்மறையோர் பயிலும் மாடப்
பைம்பொழில்சேர் தரும்ஓமாம் புலியூர் மன்னும்
சீர்கெழுவு வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 10

பதிக மகுடம் – வடதளியெஞ் செல்வன் தன்னைச் சேராதே திகைத்து நாள் செலுத்தி னேனே.

கச்சணிந்த தனத்தினள் ஆகிய உமையாள் அஞ்சுமாறு அன்று கயிலை மலையைப் பெயர்த்த கொடிய அரக்கனுடைய இருபது தோள்களையும் இருதாள்களையும் அழகிய பத்துத் தலைகளையும் நெரித்துப் பின் அச்சினத்தினின்றும் மீண்டு அவனது இன்னிசையைக் கேட்டு உவந்தவனும், தேவர்களின் தலைவனும் ஆகி, புவி முழுதும் பரவும் புகழினையுடைய மறையோர் மிக்கு வாழ்கின்றதும் மாடங்கள் நிறைந்ததும், பசிய பொழில்கள் சூழ்ந்ததும் ஆகிய ஓமாம்புலியூரில், சிறப்புமிக்க வடதளியில் மன்னும் எம் செல்வனாகிய சிவபெருமானை அடையாது நான் மயங்கி நாள் பல வீணேபோக்கினேன்.

## 89. திருஇன்னம்பர்

(இத்திருப்பதிகம் "போலும்" என்னும் முடிபுடைய தொடர்களால் இறைவன் பெருமைகளை வகுத்தருளிச் செய்தது)

**ப.தொ.எண் : 302** **பதிக எண் : 89**

2963. அல்லிமலர் நாற்றத் துள்ளார் போலும்
அன்புடையார் சிந்தை அகலார் போலுஞ்
சொல்லின் அருமறைகள் தாமே போலுந்
தூநெறிக்கு வழிகாட்டுந் தொழிலார் போலும்
வில்லிற் புரமூன் றெரித்தார் போலும்
வீங்கிருளும் நல்வெளியு மானார் போலும்
எல்லி நடமாட வல்லார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 1

அல்லி – அக இதழ்

இன்னம்பர்த் தலத்துத் தான்தோன்றி யீசனாராகிய சிவபெருமானாரே அக இதழ்களையுடைய மலர்களின் நறுமணத்துள் நிலவி இன்பந்தருபவரும், தம்மாட்டு அன்புடையார் சிந்தையை விட்டு அகலாதவரும், தாமே சொற்களையுடைய அரிய வேதங்கள் ஆனவரும், வீட்டுநெறிக்கு வழியாகும் மெய்ஞ்ஞானத்தை உணர்த்தும் தொழிலினரும், வில்லால் புரமூன்றையும் எரித்தவரும், மிக்க இருளும் மிக்க ஒளியும் ஆனவரும், இரவில் கூத்து ஆட வல்லவரும் ஆவார்.

**2964.** கோழிக் கொடியோன்தன் தாதை போலும்
கொம்பனாள் பாகங் குளிர்ந்தார் போலும்
ஊழி முதல்வரும் தாமே போலும்
உள்குவா ருள்ளத்தி னுள்ளார் போலும்
**ஆழித்தேர் வித்தகருந் தாமே போலும்**
அடைந்தவர்கட் கன்பராய் நின்றார் போலும்
ஏழு பிறவிக்குந் தாமே போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே.

2

ஆழித்தேர் – ஆழி என்றது இரட்டுற மொழிதலாய் சூரியர், சந்திரர் ஆகிய மண்டிலங்களையும் தேர்ச் சக்கரங்களையும் உணர்த்தின. எனவே சூரியர், சந்திரர்களாகிய சக்கரங்களையுடைய தேரினை ஊரவல்லவர் என்றாயிற்று.

இன்னம்பர்த் தலத்துத் தான்தோன்றி ஈசனாராகிய சிவபெருமானாரே கோழிக்கொடியோனாகிய முருகனுக்குத் தந்தையாரும், பூங்கொம்பு போன்ற உமாதேவியை உடலின் ஒரு பாகமாகக் கொண்டு மகிழ்ந்தவரும், ஊழியின் நிகழ்ச்சிகளுக்குத் தலைவரும், தம்மை நினைப்பவர் உள்ளத்தில் தாம் நீங்காமல் உள்ளவரும், **சூரிய சந்திரர்களாகிய சக்கரங்களையுடைய தேரினை ஊர வல்லவரும்,** தம்மை அடைந்தவரிடத்து அன்புடையவரும், எழுவகைப் பிறவிகளுக்கும் தாமே காரணரும் ஆவார்.

---

**2965.** தொண்டர்கள் தம்தகவி னுள்ளார் போலும்
தூநெறிக்குந் தூநெறியாய் நின்றார் போலும்
பண்டிருவர் காணாப் படியார் போலும்
பத்தர்கள் தம்சித்தத் திருந்தார் போலும்
கண்டம் இறையே கறுத்தார் போலும்
காமனையுங் காலனையுங் காய்ந்தார் போலும்
இண்டைச் சடைசேர் முடியார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே.

3

இன்னம்பர்த் தான் தோன்றி ஈசனாராகிய சிவபெருமானாரே, தொண்டர்களுடைய மெய்யன்பினிடத்துத் திகழ்பவரும், தூய ஞானநெறிக்குப் பற்றுக்கோடாய் நின்றவரும், பண்டு மாலும் அயனும் காண இயலாத நிலையினரும், பக்தர்களுடைய சித்தத்தில் இருந்தவரும், கண்டம் சிறிது கருத்தவரும், மன்மதனையும் இயமனையும் வெகுண்டு ஒறுத்தவரும், முடி மாலையணிந்த சடைமுடியவரும் ஆவார்.

பதிக மகுடம் – இன்னம்பர் தான் தோன்றி யீசனாரே

**2966.** வானத் திளந்திங்கட் கண்ணி தன்னை
வளர்சடைமேல் வைத்துகந்த மைந்தர் போலும்
ஊனொத்த வேலொன் றுடையார் போலும்
ஒளிநீறு பூசு மொருவர் போலும்
தானத்தின் முப்பொழுதுந் தாமே போலும்
தம்மிற் **பிறர்பெரியா ரில்லார்** போலும்
ஏனத் தெயிறிலங்கப் பூண்டார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 4

இன்னம்பர்த் தான்தோன்றி ஈசனாராகிய சிவபெருமானாரே வானில் திகழும் பிறைச்சந்திரனாகிய கண்ணியைத் தம் வளரும் சடைமேல் வைத்து மகிழ்ந்த வலியவரும், ஊன் பொருந்திய சூலம் ஒன்றை உடையவரும், ஒள்ளிய திருநீற்றைப் பூசும் ஒருவரும், முச்சந்தி நேரங்களிலும் வழங்கப்படும் அருக்கியம் முதலியவற்றை ஏற்று அருள்பவரும், தம்மினும் பெரியர் பிறர் இல்லாதவரும், பன்றியினது கொம்பு மார்பில் விளங்க அணிந்தவரும் ஆவார்.

<u>பிறர் பெரியாரில்லார்</u>

யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வ மாகியாங்கே
மாதொரு பாகனார் தாம்வருவர் மற்றத் தெய்வங்கள்
வேதனைப்படும் இறக்கும் பிறக்கும் மேல் வினையும் செய்யும்
ஆதலால் இவையிலா தான் அறிந்தருள் செய்வனன்றே — சித்தியார்.

**2967.** சூழுந் துயரம் அறுப்பார் போலும்
தோற்றம் இறுதியாய் நின்றார் போலும்
ஆழுங் கடல்நஞ்சை யுண்டார் போலும்
ஆடலுகந்த அழகர் போலும்
தாழ்வின் மனத்தேனை யாளாக் கொண்டு
தன்மை யளித்த தலைவர் போலும்
ஏழு பிறப்பு மறுப்பார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 5

இன்னம்பர்த் தலத்துத் தான்தோன்றி ஈசனாராகிய சிவபெருமானாரே, வந்து வளைத்துக் கொள்ளும் துயரங்களை நீக்குபவரும், படைப்பு அழிப்புக்களைச் செய்து நிற்பவரும், ஆழமிக்க கடலிடத்துத் தோன்றிய நஞ்சை உண்டவரும், கூத்து ஆடுதலை விரும்பும் அழகரும், தாழ்ந்த மனத்தினை உடைய அடியேனையும் அடிமை கொண்டு ஞானமளித்த தலைவரும், ஏழுவகையாகவும் பிறத்தலை அறுத்தெறிபவரும் ஆவார்.

**2968.** பாதத் தணையுஞ் சிலம்பர் போலும்
பாரூர் விடையொன் றுடையார் போலும்
பூதப் படையாள் புனிதர் போலும்
பூம்புகலூர் மேய புராணர் போலும்
வேதப் பொருளாய் விளைவார் போலும்
**வேடம் பரவித் திரியுந் தொண்டர்**
**ஏதப் படாவண்ணம் நின்றார் போலும்**
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே.
**6**

இன்னம்பர்த் தான் தோன்றி ஈசனாராகிய சிவபெருமானாரே, திருவடிகளில் கட்டப்பட்ட சிலம்பினரும், பூமிமேல் நடக்கும் ஓர் இடபத்தை ஊர்தியாக உடையவரும், பூதப்படையைச் செயற்படுத்தும் புனிதரும், புகலூரைப் பொருந்திய புராணரும், வேதங்களின் பொருளாய் விளங்குபவரும், திருநீறு, கண்டிகை, சடை முதலியவை எங்கே காணப்படினும், அங்கேயெல்லாம் தம்மை ஏத்தி இறைஞ்சி நிற்கும் தொண்டர் துன்பப்படா வண்ணம் காத்து நின்றாரும் ஆவார்.

**2969.** பல்லார் தலையோட்டில் ஊணார் போலும்
பத்தர்கள்தம் சித்தத் திருந்தார் போலும்
கல்லாதார் காட்சிக் கரியார் போலும்
கற்றவர்கள் ஏதங் களைவார் போலும்
பொல்லாத பூதப் படையார் போலும்
பொருகடலும் ஏழ்மலையுந் தாமே போலும்
எல்லாரு மேத்தத் தகுவார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே.
**7**

ஏதம்–துன்பம். பொருகடல் – அலைமோதும் கடல்

இன்னம்பர்த் தான்தோன்றியீசனாராகிய சிவபெருமானாரே, பற்கள் நிறைந்த தலையோட்டில் உணவு ஏற்று உண்பவரும், பத்தர்களுடைய சித்தத்தில் இருந்தவரும், மெய்ந்நூல்களைக் கல்லாதவரால் காணப்படாதவரும், அவற்றைக் கற்பவரின் துன்பங்களைக் களைபவரும், கொடுமை மிகும் பூதப்படையினரும், அலைமோதுங் கடல் ஏழும் குலமலை ஏழும் தாமே ஆனவரும், எல்லாரும் ஏத்துதற்குக் காரணமான அருளினரும் ஆவார்.

**2970.** மட்டு மலியுஞ் சடையார் போலும்
மாதையோர் பாக முடையார் போலும்
கட்டம் பிணிகள் தவிர்ப்பார் போலும்
காலன்தன் வாழ்நாள் கழிப்பார் போலும்
நட்டம் பயின்றாடும் நம்பர் போலும்
ஞாலமெரி நீர்வெளிகா லானார் போலும்
எட்டுத் திசைகளுந் தாமே போலுந்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே.
**8**

மட்டு – தேன். மலியும் – நிறைந்த. கட்டம்–துன்பம். பயின்று ஆடுதல் – எப்போதும் ஆடுதல். ஞாலம் – நிலம். கால் – காற்று. வெளி – வான்

இன்னம்பர்த் தான்தோன்றியீசனாராகிய சிவபெருமானாரே, பூக்களின் தேன்மிகும் சடையினரும், உமையை ஒரு பாகத்திலுடையவரும், துன்பம், பிணிகளைத் தவிர்ப்பவரும், இயமன் உயிருக்கு இறுதி கண்டவரும், எப்பொழுதும் கூத்தாடுந் தலைவரும், நிலம், நீர், தீ, வளி, ஆகாசம் ஆம் ஐம்பூதங்கள் ஆனவரும், எட்டுத் திசைகளும் தாமே ஆனவரும் ஆவார்.

2971. கருவுற்ற காலத்தே யென்னை ஆண்டு
கழற்போது தந்தளித்த கள்வர் போலும்
செருவிற் புரமூன்றும் அட்டார் போலும்
தேவர்க்குந் தேவராஞ் செல்வர் போலும்
மருவிப் பிரியாத மைந்தர் போலும்
மலரடிகள் நாடி வணங்க லுற்ற
இருவர்க் கொருவராய் நின்றார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே.

9

ஆண்டு – மெய்யுணர்வைப் பெறும் அவாவை உண்டாக்கினமை. செருவில் – போரின்கண்.

அட்டார் – அளித்தார். மருவிப்பிரியாத – கூடிப்பிரியாத

இன்னம்பர்த் தான்தோன்றியீசனாராகிய சிவபெருமானாரே நான் கருவாய்ப் பொருந்திய காலத்திலேயே மெய்யுணர்வைப் பெறும் அவாவை என்பால் உண்டாக்கிப் பின் திருவடித் தாமரைகளைத் தந்து காத்த கள்வரும், போரில் பகைவர்புரம் மூன்றையும் அழித்தவரும், தேவர்க்கும் தேவராம் செல்வரும், கூடியபின் பிரியாத மைந்தரும், தம்முடைய மலரடிகளை விரும்பி வணங்கிய பிரமனுக்கும் திருமாலுக்கும் ஒப்பற்ற தலைவராய் நின்றவரும் ஆவார்.

2972. அலங்கற் சடைதாழ ஐய மேற்று
அரவம் அரையார்க்க வல்லார் போலும்
வலங்கை மழுவொன் றுடையார் போலும்
வான்தக்கன் வேள்வி சிதைத்தார் போலும்
விலங்கல் எடுத்துகந்த வெற்றி யானை
விறலழித்து மெய்ந்நரம்பால் கீதங் கேட்டன்
றிலங்கு சுடர்வாள் கொடுத்தார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே.

10

விலங்கல் – மலை. விறல் – வெற்றி

இன்னம்பர்த் தான் தோன்றியீசனாராகிய சிவபெருமானார் கொன்றை மாலையணிந்த சடை தாழப் பிச்சை ஏற்க வல்லவரும், பாம்பினை இடையில் கட்டவல்லவரும், வலக்கையில் மழுப்படை ஒன்றை உடையவரும், தருக்கினால் உயர்ந்த தக்கனுடைய வேள்வியைச் சிதைத்தவரும், கயிலை மலையை எடுத்த அளவில் தனது வெற்றி பற்றி மகிழ்ந்த இராவணனது அவ்வெற்றியை அழித்துப் பின் அவன் தன் உடல் நரம்பால் எழுப்பிய இசையைக் கேட்டு அவனுக்கு ஒளிவாளைக் கொடுத்தவரும் ஆவார்.

## 90. திருக்கஞ்சனூர்

(இத்திருப்பதிகம் சிவபிரானது பல பெருமைகளை எடுத்தோதி அவனை "கற்பகம்" என வாழ்த்தி அவரைத் தாம் கண்ணாரக் கண்டு உய்ந்தேன் என்றருளிச் செய்தது)

ப.தொ.எண் : 303 பதிக எண் : 90

2973. மூவிலைநற் சூலம்வலன் ஏந்தி னானை
மூன்றுசுடர்க் கண்ணானை மூர்த்தி தன்னை
நாவலனை நரைவிடையொன் றேறு வானை
நால்வேதம் ஆறங்க மாயி னானை
ஆவினிலைந் துகந்தானை அமரர் கோவை
அயன்திருமா லானானை அனலோன் போற்றுங்
காவலனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்
தேனே. 1

நாவலன் – புலவன்.
அயன் திருமால் ஆதல், சுத்த மாயையில் நேரேயும், பிரகிருதி மாயையில் பிறரை அதிட்டித்தும் நின்று செய்வது

மூவிலை கொண்ட நல்ல சூலத்தை வலக்கையில் ஏந்தினவனும், சூரியன், சந்திரன், அக்கினி என்னும் முச்சுடர்களாகிய கண்ணினனும், அழகிய தோற்றத்தினனும், நாவலனும், வெள்ளிய இடபம் ஒன்றை ஊர்பவனும், வேதம் நான்கும் அங்கம் ஆறும் ஆயினவனும், பசு தரும் பஞ்சகவ்வியத்தை விரும்பியவனும், தேவர்களுக்குத் தலைவனும், பிரமனும் திருமாலும் ஆனவனும், அக்கினியால் போற்றப்படும் காவலனும், கஞ்சனூர் ஆண்ட கோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு மேல்வரும் பிறப்பை நீங்கினேன்.

2974. தலையேந்து கையானை யென்பார்த் தானைச்
**சவந்தாங்கு தோளானைச்** சாம்ப லானைக்
குலையேறு நறுங்கொன்றை முடிமேல் வைத்துக்
கோணாக மசைத்தானைக் குலமாங் கைலை
மலையானை மற்றொப்பா ரில்லா தானை
மதிகதிரும் வானவரும் மாலும் போற்றுங்
கலையானைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்
தேனே. 2

அக்கினி வழிபட்ட தலம். எனவே அனலோன் போற்றும் காவலன். இறைவன் அக்கினீச்சுரர்.
தீர்த்தம் – அக்கினி தீர்த்தம்.
கலையான் – உருவத்திருமேனியான்.

பிரமகபாலத்தை ஏந்திய கையினனும், எலும்பை மாலையாகக் கோத்து அணிந்தவனும், **பிரம விட்டுணுக்களுடைய எலும்புக் கூடுகளைத் தாங்கும் தோளினனும்,** வெண்ணீற்றுப் பூச்சினனும், கொத்தாய்ப் பொருந்திய நறிய கொன்றை மலர்களை முடிமேல் கொண்டவனும், கொடுமை வல்ல நாகத்தை உடை மேல் கட்டியவனும், மேன்மை மிக்க கயிலை மலையவனும், தனக்குவமையில்லாதவனும், சந்திரனும், சூரியனும் தேவர்களும் திருமாலும் போற்றும் உருவத்திருமேனி உடையவனும், கஞ்சனூரை ஆண்ட கோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு மேல் வரும்பிறப்பை நீங்கினேன்.

2975. தொண்டர்குழாம் தொழுதேத்த அருள்செய் வானைச்
சுடர்மழுவாட் படையானைச் சுழிவான் கங்கைத்
தெண்டிரைகள் பொருதிழிசெஞ் சடையி னானைச்
செக்கர்வா னொளியானைச் சேரா தெண்ணிப்
பண்டமரர் கொண்டுகந்த வேள்வி யெல்லாம்
பாழ்படுத்துத் தலையறுத்துப் பற்கண் கொண்ட
கண்டகனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 3

தொண்டர் கூட்டமாய்த் திரண்டு தொழுது புகழ அவர்க்கு அருள்செய்பவனும், ஒளிரும் மழுவாயுதத்தை உடையவனும், சுழியை யுடையதும், தெளிந்த திரைகளால் மோதி இழிவதும் ஆகிய ஆகாய கங்கையைத் தாங்கிய சடையினனும், செவ்வானம் போன்ற ஒளியினனும், தன்னை அடையாமல் பண்டு அமரர்கள் கூடி ஆராய்ந்து மேற்கொண்டு விரும்பிச் செய்த தக்கனுடைய வேள்வி முழுதும் பாழ் செய்து தக்கனையும் எச்சனையும் தலையறுத்துச் சூரியனைப் பல்தகர்த்துப் பகனைக் கண் பறித்துக் கொண்ட கொடியவனும், கஞ்சனூரை ஆண்ட கோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு மேல் வரும் பிறப்பை நீங்கினேன்.

பொருது – மோதி. தக்க யாகத்தில் கலந்து கொண்ட தேவர்களுக்கு அளிக்கப்பட்ட தண்டனைகளை திருவாசகத்தில் திருவுந்தியார் பதிகத்தில் விரிவாகக் காணலாம்

2976. விண்ணவனை மேருவில்லா வுடையான் தன்னை
மெய்யாகிப் பொய்யாகி விதியா னானைப்
பெண்ணவனை ஆணவனைப் பித்தன்தன்னைப்
பிணமிடுகா டுடையானைப் பெருந்தக் கோனை
எண்ணவனை எண்டிசையுங் கீழும் மேலும்
இருவிசும்பும் இருநிலமு மாகித் தோன்றுங்
கண்ணவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 4

சிவலோகனாய், மேருமலையை வில்லாக உடையவனாய், ஞானியர்க்கு உண்மைப் பொருளாகி, உணர்வில்லார்க்கு இல்பொருள் ஆகி அறநெறியும் அருள்நெறியும் ஆனவனும், பெண் ஆண் ஆனவனும், பித்தனும், பிணத்தைப் புதைக்கும் இடுகாட்டை இடமாகக் கொண்டவனும், மேலான தகுதியினனும், எண்ணமானவனும், எட்டுத் திசைகளும் கீழும் மேலும் பெரிய ஆகாயமும் பரந்த நிலமும் ஆகித் தோன்றுபவனும், கண்போற் சிறந்தவனும், கஞ்சனூரை ஆண்ட கோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு மேல் வரும் பிறப்பை நீங்கினேன்.

பதிக மகுடம் – கஞ்சனூராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்தேனே.

**2977.** உருத்திரனை உமாபதியை உலகா னானை
உத்தமனை நித்திலத்தை ஒருவன் தன்னைப்
பருப்பதத்தைப் பஞ்சவடி மார்பி னானைப்
பகலிரவாய் நீர்வெளியாய்ப் பரந்து நின்ற
நெருப்பதனை நித்திலத்தின் தொத்தொப் பானை
நீறணிந்த மேனியராய் நினைவார் சிந்தைக்
கருத்தவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்
தேனே. **5**

உருத்திரன் – துன்பத்தை ஓட்டுபவன். இன்னலம் கடலுட்பட்டோர் யாரையும் எடுக்கும் நீரால் உன்னரும் பரமமூர்த்தி உருத்திரன் என்னும் பேர் பெற்றான்
– கந்தபுராணம் – ததீசிப்படலம்
உமாபதி – உமைக்குத் தலைவன்.
பஞ்சவடி – மயிர்க்கயிறாகிய பூணூல்.
வெளி – ஆகாயம். நித்திலம் – முத்து
உத்தமன் – யாவரினும் மேலானவன்
ஒருவன் – ஒப்பற்றவன்
பருப்பதம் – மலையாய் இருப்பவன்

உருத்திரனும், உமாபதியும், உலகு ஆள்பவனும், உத்தமனும் நித்திலம் அனையவனும், ஒப்பற்றவனும், மலையாய் விளங்குபவனும், மயிர்க் கயிறாகிய பஞ்சவடிப்பூணூல் திகழ் மார்பினனும், பகலும், இரவும், நீரும், ஆகாயமும் பரவிய நெருப்பும் ஆனவனும், முத்தின் கொத்து ஒக்கத் திகழும் திருநீற்றுக் கீற்றினனும், திருநீற்றைப் பூசிய மேனியை உடையவராய், இடைவிடாது நினைக்கும் அன்பர்களின் மனத்தில் உறைபவனும், கஞ்சனூர் ஆண்ட கோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு மேல் வரும் பிறப்பை நீங்கினேன்.

---

**2978.** ஏடேறு மலர்க்கொன்றை யரவு தும்பை
இளமதியம் எருக்குவா னிழிந்த கங்கை
சேடெறிந்த சடையானைத் தேவர் கோவைச்
செம்பொன்மால் வரையானைச் சேர்ந்தார்
சிந்தைக்
கேடிலியைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கிறிபேசி மடவார்பெய் வளைகள் கொள்ளுங்
காடவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்
தேனே. **6**

சேடுஎறிந்த – அழகு விளங்கிய
கிறி – பொய்.
காடவன் – அதிசயிக்கத்தக்க திறலுடையவன்.

இதழ் செறிந்த கொன்றைமலர், பாம்பு, தும்பைப்பூ, பிறைச்சந்திரன், எருக்க மலர், வானின்றிறங்கிய கங்கை ஆகியவைகளால் அழகு விளங்கிய சடையினனும், தேவர்க்குத் தலைவனும், பெரிய செம்பொன்மலை போன்றவனும், தன்னை அடைந்தார் சிந்தையில் கேடின்றி இருப்பவனும், கீழ்வேளூரிலிருந்து ஆளும் அரசனும், மடவார்கைகளில் அணிந்துள்ள வளைகளைப் பொய்பேசிக் கவர்ந்து கொள்ளும் அதிசயிக்கத்தக்க திறனுடையவனும், கஞ்சனூர் ஆண்ட கோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு மேல் வரும் பிறப்பை நீங்கினேன்.

**2979.** நாரணனும் நான்முகனும் அறியா தானை
நால்வேதத் துருவானை நம்பி தன்னைப்
பாரிடங்கள் பணிசெய்யப் பலிகொண் டுண்ணும்
பால்வணனைத் தீவணனைப் பகலா னானை
வார்பொதியும் முலையாளோர் கூறன் தன்னை
மானிடங்கை யுடையானை மலிவார் கண்டங்
கார்பொதியுங் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்
தேனே. 7

திருமாலும், நான்முகனும், அறியாதவனும், வேதமந்திர உருவினனும், ஆடவருட் சிறந்தவனும், பூதங்கள் தான் ஏவிய பணிகளைச் செய்ய தான் பிச்சை ஏற்று உண்ணும் பால் நிறத்தவனும், தீ நிறத்தவனும், பகல் ஆனவனும், கச்சணிந்த கொங்கையாளை உடலின் ஒரு கூற்றாகக் கொண்டவனும், மானை இடக்கையில் ஏந்தியவனும், தேவர்கள் மகிழ்ச்சி நிறைவதற்குக் காரணமானவனாய், கழுத்துக் கருநிறத்தால் மூடப்பட்டவனும், கஞ்சனூர் ஆண்ட கோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு மேல் வரும் பிறப்பை நீங்கினேன்.

பாரிடங்கள் – பூதங்கள்
பால்வண்ணம் – திருநீற்றாலும், தீவண்ணம் இயல்பினாலும் உடையவன்.

**2980.** வானவனை வலிவலமும் மறைக்காட் டானை
மதிசூடும் பெருமானை மறையோன் தன்னை
ஏனவனை இமவான்றன் பேதை யோடும்
இனிதிருந்த பெருமானை ஏத்து வார்க்குத்
தேனவனைத் தித்திக்கும் பெருமான் தன்னைத்
தீதிலா மறையோனைத் தேவர் போற்றுங்
கானவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்
தேனே. 8

வானிடத்தவனும், வலிவலமும் மறைக்காடும் உறைபவனும், மதிசூடும் பெருமானும், ஆதி அந்தணனும், மற்றை வருணத்தினனும், இமவான் மகள் பார்வதியோடும் இனிதிருந்து அருள்செய்யும் பெருமானும், தன்னை ஏத்தி வணங்குவார்க்குத் தேன் போன்று தித்திப்பவனும், தீது இல்லாமல் அவர்களைக் காத்தற் பொருட்டுக் காலம்பார்த்துக் கரந்து நிற்பவனும், தேவராற் போற்றப்படும் வேட்டுவனும் கஞ்சனூராண்ட கோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு மேல் வரும் பிறப்பை நீங்கினேன்.

"வலிவலமும்" என்பதன் பின், "உடைய" என்பது எஞ்சி நின்றது.

**2981.** நெருப்புருவத் திருமேனி வெண்ணீற் றானை
நினைப்பார்தம் நெஞ்சானை நிறைவா
னானைத்
தருக்கழிய முயலகன்மேல் தாள்வைத் தானைச்
சலந்தரனைத் தடிந்தோனைத் தக்கோர்
சிந்தை
விருப்பவனை விதியானை வெண்ணீற் றானை
விளங்கொளியாய் மெய்யாகி மிக்கோர்
போற்றுங்
கருத்தவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்
தேனே. 9

நெருப்பு நிறமுடைய அழகிய திருமேனியில் வெண்ணீற்றை அணிந்தவனும், நினைப்பவர் நெஞ்சில் நிலைத்து நிற்பவனும், எங்கும் நிறைந்தவனும், முயலகன்மேல் காலை ஊன்றி ஆடியவனும், சலந்தரனைப் பிளந்திட்டவனும், ஞானிகள் சிந்தையில் விரும்பி வாழ்பவனும், வேத விதியானவனும், சிவாகமவிதியாய் விளங்குபவனும், இயல்பாகவே விளங்கும் ஒளியாய், மெய்ப்பொருளாய், மேலோர்கள் போற்றும் கருத்தாய்த் திகழ்பவனும், கஞ்சனூர் ஆண்ட கோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு மேல் வரும் பிறப்பை நீங்கினேன்.

**2982.** மடலாழித் தாமரைஆ யிரத்தி லொன்று
மலர்க்கணிடந் திடுதலுமே மலிவான் கோலச்
சுடராழி நெடுமாலுக் கருள்செய் தானைத்
தும்பியுரி போர்த்தானைத் **தோழன் விட்ட
அடலாழித் தேருடைய இலங்கைக் கோனை**
அருவரைக்கீழ் அடர்த்தானை அருளார்
கருணைக்
கடலானைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்
தேனே. 10

இதழுடைய வட்டமான தாமரை மலரில் ஆயிரத்தில் ஒன்றாகத் தன் தாமரை மலர் போலும் கண்ணைப் பெயர்த்து இடுதலும் நிறைந்த பெரிய அழகினையும் ஒளியையும் உடைய சக்கராயுதத்தை நெடுமாலுக்கு அருள் செய்தவனும், யானைத் தோலைப் போர்வையாகக் கொண்டவனும், தன் நண்பன் **குபேரன் தோற்றுக் கைவிட்ட வலிய சக்கரத்தையுடைய தேரினைத் தன் உடைமை ஆக்கிக்கொண்ட இலங்கைக்கோனை** எடுத்தற்கரிய கயிலை மலைக்கீழ் வைத்து நெரித்தவனும், பின் அவனுக்கு அருளுதலைப் பொருந்திய கருணைக் கடலானவனும், கஞ்சனூர் ஆண்டகோவும் ஆகிய கற்பகத்தைக் கண்ணாரக் கண்டு, மேல் வரும் பிறப்பை நீங்கினேன்.

அடலாழித்தேர்

சிவபெருமான் தோழர் குபேரனை வென்ற இராவணன் அவரது புட்பக விமானமாம் தேரைக் கவர்ந்து பிரயாணம் செய்தான். அதுவானத்திற் செல்வதாயினும், தரையினும் செல்லுமாகலின் அதன்பொருட்டு ஆழியாம் சக்கரத்தை உடையதாயிற்று.

இக்கால ஆகாய விமானமும் விமான தளத்தில் இறங்கி தரையில் செல்லும் போது சக்கரத்தால் உருண்டு செல்வதையும், விமான தளத்திலிருந்து மேலேறி ஆகாயத்தில் பறக்கும்போது சக்கரங்களை உள்ளிழுத்துக் கொள்வதையும் பார்க்கிறோம்.

விமானம் பறக்கும் போது கண்டிப்பாக விமானி சக்கரங்களை உள்ளே இழுத்துக் கொள்வார். தொங்கும் சக்கரங்களோடு விமானத்தை ஓட்ட முடியாது. சக்கரங்கள் உள்ளே போவதும் வெளியே வருவதுமான நிகழ்வுகளைப் பயணிப்போர் கவனிக்கலாம். புட்பக விமானத்தில் சக்கரங்கள் எப்படி இருந்திருக்கும்?

## 91. திருஎறும்பியூர்

ப.தொ.எண் : 304 பதிக எண் : 91

2983. பன்னியசெந் தமிழறியேன் கவியேன் மாட்டேன்
எண்ணோடு பண்ணிறைந்த கலைக ளாய
தன்னையுந்தன் திறத்தறியாப் பொறியி லேனைத்
தன்திறமும் அறிவித்து நெறியுங் காட்டி
அன்னையையும் அத்தனையும் போல அன்பாய்
அடைந்தேனைத் தொடர்ந்தென்னை
யாளாக் கொண்ட
தென்எறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன்
நானே. 1

"பணியுமாம் என்றும் பெருமை சிறுமை அணியுமாம் தன்னை வியந்து" – குறள் 978.

தென் – அழகு

தொல்லாசிரியர் ஆராய்ந்து சொல்லிய செவ்விதாகிய தமிழினது இலக்கணத்தை அறியேனும், கவிபுனைய மாட்டேனும், எண்ணாயும் திருத்தம்பெற்ற கலைகளாயும் நிற்கும் தன்னையும் தன் கூறுபாடுகளையும் அறிதற்குரிய விதியிலேனுமாகிய எனக்கு அவற்றைக் காட்டினவனும், அடைந்தேனைத் தாய் தந்தையரைப் போல அன்பாய்த் தொடர்ந்து ஆளாகக் கொண்டவனும், அழகிய எறும்பியூர் மலைமேல் மன்னும் மாணிக்கமும் செழுஞ்சுடரும் ஆகிய சிவபெருமானை நான் சென்று அடையப்பெற்றேன்.

2984. **பளிங்கின்நிழ லுட்பதித்த சோதி யானைப்**
பசுபதியைப் பாசுபத வேடத் தானை
விளிந்தெழுந்த சலந்தரனை வீட்டி னானை
வேதியனை விண்ணவனை மேவி வையம்
அளந்தவனை நான்முகனை அல்லல் தீர்க்கும்
அருமருந்தை ஆமா றறிந்தென் உள்ளந்
தெளிந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன்
நானே. 2

சோதி பதித்தல் – இறைவன் செயல். பளிங்கில் வைத்த சோதி தன்னிறமே காட்டுதல் போல, உயிர், பசுத்தன்மை நீங்கிப் பதித்தன்மை பெறச் செய்தல்.

படிகமணியின் ஒளியுள்பதித்து விளங்கிய மாணிக்க ஒளியினனும், பசுபதியும், பாசுபத வேடத்தவனும், அறை கூவிப் போருக்கு எழுந்த சலந்தரனை அழித்தவனும், வேதியனும், விண்ணவனும், பொருந்தி வையத்தை அளந்த திருமாலும், நான்முகனும் ஆனவனும், துன்பந் துடைக்கும் ஆரமுது ஆனவனும் அவனே ஆமாறு அறிந்தமையால் என் உள்ளம் தெளிந்து எறும்பியூர் மலைமேல் மன்னும் மாணிக்கமும் செழுஞ்சுடரும் ஆகும் சிவபெருமானை நான் சென்று அடையப்பெற்றேன்.

பளிங்கின் நிழலுள் பதித்த சோதியான் – படிக மணியின் ஒளியுள் பதிந்து தோன்றும்படி விளங்கிய ஒளியினையுடைய மாணிக்கம் போன்றவன்; என்றது; ஆன்மா, சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் இயல்புடைய படிகத்தின் ஒளிபோன்றது; அதனால், பெத்த நிலையில் நீல மணியினைச் சார்ந்து நீல மணியாய் நிற்கும் படிகம் போல, மலத்தினைச் சார்ந்து மலமேயாய்க் கிடந்த அவ்வான்மாவை, சிவன் முத்தி நிலையில் அம்மலத்தினின்றும் நீக்கி, மாணிக்கத்தைச் சார்ந்து மாணிக்கமாயே நிற்கும் படிகம்போல, தன்னைச் சார்ந்து தானாய் நிற்குமாறு தனது எண்குணங்களையும் அதனிடத்துப் பதிவித்து நிற்பனாகலின், தமக்கு அவ்வாறு செய்தருளினான் என்பதனை உவமை வகையான் அருளிச்செய்தது என்க.

**2985.** கருவையென்றன் மனத்திருந்த கருத்தை ஞானக்
கடுஞ்சுடரைப் படிந்துகிடந் தமரர் ஏத்தும்
உருவையண்டத் தொருமுதலை யோத வேலி
யுலகினிறை தொழிலிறுதி நடுவாய் நின்ற
மருவைவென்ற குழல்மடவாள் பாகம் வைத்த
மயானத்து மாசிலா மணியை வாசத்
திருவெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன்
நானே. 3

மாணிக்கம் – தலத்து இறைவர் பெயர்

கருத்திற்குக் கருவானவனும், மனத்தில் நிலைத்த கருத்தானவனும் ஞானப்பெருஞ்சுடர் ஆனவனும், அமரர்கள் நிலத்தில் வீழ்ந்து கிடந்து தோத்திரிக்கும் அழகிய வடிவினனும், உலகத்திற்கு ஒப்பற்ற வித்தானவனும், அலையையுடைய கடலாகிய எல்லையையுடைய உலகில் நிறைந்தவனும், முதல், இடை, இறுதியாகிய தொழில்களை இயற்றுபவனும், மலரின் மணத்தை வென்ற குழலினை உடைய உமையம்மையை உடம்பில் பாகமாக வைத்தவனும், மயானத்து ஆடும் மாசிலாமணியும் திருஎறும்பியூர் மலைமேல் வாசம் செய்யும் மாணிக்கமும் செழுஞ்சுடரும் ஆகிய சிவபெருமானை நான் சென்று அடையப் பெற்றேன்.

**2986.** பகழிபொழிந் தடலரக்கர் புரங்கள் மூன்றும்
பாழ்படுத்த பரஞ்சுடரைப் பரிந்து தன்னைப்
புகழுமன்பர்க் கின்பமரும் அமுதைத் தேனைப்
புண்ணியனைப் புவனியது முழுதும் போத
உமிழும்அம் பொற்குன்றத்தை முத்தின் தூணை
உமையவள்தம் பெருமானை இமையோ
ரேத்தும்
திகழெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன்
நானே. 4

பகழி – அம்பு. போத – வெளிப்பட

அம்புகளைத் தூவி ஆற்றல் மிக்க அரக்கர்களுடைய மூன்று புரங்களையும் பாழ்படுத்த பரஞ்சுடரும், தன்னை விரும்பிப் புகழும் அன்பர்க்கு இன்பத்தை மகிழ்ந்தளிக்கும் அமுதமும், தேனும், புண்ணியனும், புவனிமுழுதும் வெளிப்பட ஒளி உமிழும் அழகிய பொற்குன்றமும், முத்தின் தூணும் உமையவளின் தலைவனும், எறும்பியூர் மலைமேல் திகழ்வதும் இமையோர்கள் ஏத்துவதும் ஆகிய மாணிக்கமும் செழுஞ்சுடரும் ஆகிய சிவபெருமானை நான் சென்று அடையப் பெற்றேன்.

**2987.** பாரிடங்க ளுடன்பாடப் பயின்று நட்டம்
பயில்வானை அயில்வாய சூல மேந்தி
நேரிடும்போர் மிகவல்ல நிமலன் தன்னை
நின்மலனை அம்மலர்கொண் டயனும் மாலும்
பாரிடந்தும் மேலுயர்ந்துங் காணா வண்ணம்
பரந்தானை நிமிர்ந்துமுனி கணங்க
ளேத்துஞ்
சீரெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன்
நானே. 5

பாரிடம் – பூதம். பயிலுதல் – பலமுறையும் செய்தல்.
அயில்வாய் – கூர்மையான வாயினையுடைய.
நிமலன் – மலத்தை நீங்கச் செய்பவன்.
நின்மலன் – மலங்களில்லாதவன்.

பூதங்கள் பலவும் சேர்ந்து பலமுறையும் பாடுதற்கு இயையக் கூத்தாடுபவனும், கூரிய வாயினை உடைய சூலத்தைக் கையிற் கொண்டு எதிர்ப்படும் போரை வெல்லுதல் மிக வல்ல நிமலனும், நின்மலனும், அயன் அன்னமாய் மேலே உயர்ந்து சென்றும் மால் பூமியை அகழ்ந்து சென்றும் காண முடியாதபடி ஒளியாக நீண்டு எங்கும் பரவினவனும், அழகிய மலர்களைக் கொண்டு முனிகணங்களால் ஏத்தப்பட்டுப் புகழ்மிக்க எறும்பியூர் மலைமேல் நிற்கும் மாணிக்கமும் செஞ்சுடருமாகிய சிவபெருமானை நான் சென்று அடையப் பெற்றேன்.

**2988.** கார்முகிலாய்ப் பொழிவானைப் பொழிந்த முன்னீர்
கரப்பானைக் கடியநடை விடையொன் றேறி
ஊர்பலவுந் திரிவானை ஊர தாக
ஒற்றியூ ருடையனாய் முற்றும் ஆண்டு
பேரெழுத்தொன் றுடையானைப் பிரம னோடு
மாலவனும் இந்திரன்மந் திரத்தா லேத்துஞ்
சீரெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன்
நானே. 6

கரிய மேகமாய் நீரைப் பொழிபவனும், முன்பு முகிலாய்ப் பொழிந்த நீரைப் பின்பு கதிரவனாய் நின்று சுவற்றுபவனும், விரைந்த நடையுடைய விடை ஒன்றை ஊர்ந்து ஊர்பலவும் திரிபவனும், தனக்கு உரிய ஊரை ஒற்றியாகவே வைத்துக் கொண்டு உலகம் முழுதும் ஆள்பவனும், ஓங்காரமாகிய ஒரெழுத்தையே பெயராக உடையவனும், நான்முகன், திருமால், இந்திரன் ஆகியோரால் மந்திரம் கூறித் துதிக்கப்பட்டுப் புகழ் மிக்க எறும்பியூர் மலைமேல் நிற்கும் மாணிக்கமும் செழுஞ்சுடரும் ஆகிய சிவபெருமானை நான் சென்றடையப் பெற்றேன்.

**2989.** நீணிலவும் அந்தீயும் நீரும் மற்றை
நெறியிலங்கு மிகுகாலும் ஆகா சம்மும்
வாணிலவு தாரகையும் மண்ணும் விண்ணும்
மன்னுயிரும் என்னுயிருந் தானாய் செம்பொன்
ஆணியென்றும் மஞ்சனமா மலையே யென்றும்
அம்பவளத் திரளென்றும் அறிந்தோ ரேத்துஞ்
சேணெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 7

ஒளிமிக்க சந்திரனும், அழகிய நெருப்பும், நீரும், வன்மை, மென்மை ஆகிய இரு நெறி பற்றி விளங்கும் வன்காற்றும் மென்காற்றும், ஆகாசமும், ஒளி நிலவும் விண்மீனும், மண்ணிடத்தும் விண்ணிடத்தும், மன்னுமுயிர்களும், என்னுயிரும் தானாய் விளங்குபவனும், செம்பொன் உரையாணி என்றும் அஞ்சனமாலை என்றும், அழகிய பவளத் திரட்சி என்றும் அறிந்தோரால் ஏத்தப்பட்டு உயர்ந்த எறும்பியூர் மலைமேல் திகழும் மாணிக்கமும் செழுஞ்சுடரும் ஆகிய சிவபெருமானை நான் சென்றடையப் பெற்றேன்.

கால் – காற்று. வாள் நிலவு – ஒளி விளங்குகின்ற.
தாரகை – விண்மீன். மன் உயிர் – பலவாகிய உயிர்கள். அஞ்சனம் – நீலம்.
சேண் – உயரம்

---

**2990.** அறந்தெரியா ஊத்தைவாய் அறிவில் சிந்தை
யாரம்பக் குண்டரோ டயர்த்து நாளும்
மறந்துமரன் திருவடிகள் நினைய மாட்டா
மதியிலியேன் வாழ்வெலாம் வாளா மண்மேற்
பிறந்தநாள் நாளல்ல வாளா ஈசன்
பேர்பிதற்றிச் சீரடிமைத் திறத்து ளன்பு
செறிந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 8

அறத்தைத் தெரியாதவரும், ஊத்தை வாயினரும், அறிவில்லாத சிந்தையினரும், ஆரம்பவாதத்தை உடையவரும் ஆகிய சமணக் குண்டரோடும் கூடி, அரன் திருவடிகளை மறந்து, பழக்கத்தால் என்னை அறியாது அவற்றை நினைத்தலையும் ஒருநாளும் செய்யாது அறிவற்றேன் வாழ்வெல்லாம் பயனில்லாத வாழ்வாய் ஒழியவும், மண்மேற் பிறந்த நாளெல்லாம் நாளல்லவாய் வாளா ஒழியவும் இறுதியிற் சிலகாலம் ஈசன் பேர் பிதற்றிச் சிறப்புமிக்க அடிமைக்கூற்றில் அன்பு செறிந்து எறும்பியூர் மலைமேல் திகழும் மாணிக்கமும், செழுஞ்சுடரும் ஆகிய சிவபெருமானை நான் சென்றடையப் பெற்றேன்.

பதிக மகுடம் – எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தைச் செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே.

**2991.** அறிவிலங்கு மனத்தானை அறிவார்க் கன்றி
அறியாதார் தந்திறத்தொன் றறியா தானைப்
பொறியிலங்கு வாளரவம் புனைந்து பூண்ட
புண்ணியனைப் பொருதிரைவாய் நஞ்ச முண்ட
குறியிலங்கு மிடற்றானை மடற்றேன் கொன்றைச்
சடையானை மடைதோறுங் கமல மென்பூச்
செறியெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 9

அறிவால் விளங்குகின்ற மனத்தானும், அறிவார்க்கு அல்லாமல் அறிவில்லாதாரது ஆற்றலால் சிறிதும் அறியப்படாதவனும், புள்ளிகள் விளங்கும் கொடிய பாம்பினைக் கொண்டு ஒப்பனை செய்து கொள்ளும் புண்ணியனும், அலைகள் மோதும் கடலில் தோன்றிய நஞ்சுண்ட அடையாளம் திகழும் மிடற்றவனும், இதழ்களும் தேனும் உடைய கொன்றைப் பூக்களைக் கொண்டு திகழும் சடையானும், மடைகள் தோறும் மென்மையுடைக் கமலப் பூக்கள் செறிந்து விளங்கும் எறும்பியூர் மலைமேல் திகழும் மாணிக்கமும் செழுஞ்சுடரும் ஆகிய சிவபெருமானை நான் சென்று அடையப் பெற்றேன்.

இச்சை முதலிய மூன்று சத்திகளே இறைவனுக்கு அந்தக் கரணங்கள் ஆதலின் மனம் என்றது இச்சா சத்தியையே எனக் கொள்ள வேண்டும்.
மடல் – இதழ். குறி – அடையாளம்

**2992.** அருந்தவத்தின் பெருவலியா லறிவ தின்றி
அடலரக்கன் தடவரையை யெடுத்தான் திண்டோள்
முரிந்துநெரிந் தழிந்துபாதாள முற்று
முன்கைநரம் பினையெடுத்துக் கீதம் பாட
இருந்தவனை யேழுலகு மாக்கி னானை
யெம்மானைக் கைம்மாவி னுரிவை போர்த்த
திருந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 10

ஆற்றல் மிக்க அரக்கன் அரிய தவத்தால் பெற்ற பெருவலியையே நினைத்துச் செருக்குக் கொண்டமையால் அறிவை இழந்து பெரிய கயிலை மலையை எடுக்க அவன் திண்ணிய தோள்கள் ஒடிந்து நசுங்கி ஆற்றல் அழிந்து பாதாளம் போன்ற பள்ளத்தில் கிடந்தானாகப்பின் முன்கை நரம்பினை எடுத்து வீணை நரம்பாகக் கொண்டு இசைத்துக் கீதம் பாட அதனைக் கேட்டு மகிழ்ந்திருந்தவனும், ஏழுலகங்களையும் படைத்தவனும், எம் தலைவனும், யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டவனும், அழகிய எறும்பியூர் மலைமேல் திகழும் மாணிக்கமும் செழுஞ்சுடரும் ஆகிய சிவபெருமானை நான் சென்றடைந்தேன்.

கைம்மா – யானை

## 92. திருக்கழுக்குன்றம்

ப.தொ.எண் : 305 பதிக எண் : 92

2993. மூவிலைவேற் கையானை மூர்த்தி தன்னை
முதுபிணக்கா டுடையானை முதலா னானை
ஆவினிலைந் துகந்தானை அமரர் கோனை
ஆலால முண்டுகந்த ஐயன் தன்னைப்
பூவினின்மேல் நான்முகனும் மாலும் போற்றப்
புணர்வரிய பெருமானைப் புனிதன் தன்னைக்
காவலனைக் கழுக்குன்றம் அமர்ந்தான் தன்னைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 1

மூவிலை வேலாகிய சூலத்தைப் பிடித்த கையினனும், அழகிய கடவுளும், பிண முதுகாட்டை உடையவனும், எல்லாவற்றிற்கும் அடியானவனும், ஆனைந்துகந்தானும் தேவர்களுடைய அரசனும், ஆலகால விடத்தை மகிழ்ந்துண்ட தலைவனும், தாமரை மேல் வீற்றிருக்கும் நான்முகனும் திருமாலும் வணங்குதற்கு நெருங்க முடியாத பெருமானும், புனிதனும், எல்லாவற்றையும் காப்பவனும், கழுக்குன்றில் அமர்ந்தவனும் ஆகிய கற்பகத்தை நான் கண்ணாரக் கண்டேன்.

முதுகாடு – எந்த இடம் அழியினும் என்றும் அழியாதிருப்பது மயானமாதலின் அதனை முதுகாடு என்பர்.

---

2994. பல்லாடு தலைசடைமே லுடையான் தன்னைப்
பாய்புலித்தோ லுடையானைப் பகவன் தன்னைச்
சொல்லோடு பொருளனைத்து மானான் தன்னைச்
சுடருருவில் என்பறாக் கோலத் தானை
அல்லாத காலனைமுன் னடர்த்தான் தன்னை
ஆலின்கீழ் இருந்தானை அமுதா னானைக்
கல்லாடை புனைந்தருளுங் காபா லியைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 2

பற்கள் வெளியே தோன்றுகின்ற வெண் தலையைச் சடைமேல் தரித்தவனும், பாயும் புலியை உரித்துக் கொண்ட தோலாகிய உடையினனும், சிறந்த ஆறு குணங்களை உடையவனும், சொற்களும் பொருள்கள் எல்லாமும் ஆனவனும், என்புஅணி நீங்கப் பெறாத தோற்றத்துடன் ஒளிவிட்டுத் திகழ்பவனும், முறையல்லாத செயலை மேற்கொண்ட காலனை முன் ஒறுத்தவனும், ஆலின் கீழ் இருந்தவனும், அமுதமானவனும், கல்லாடை புனைந்தருளும் காபாலியும் ஆகிய கற்பகத்தை நான் கண்ணாரக் கண்டேன்.

x x x x x x x x x 3–10

## 93. பொது (பலவகைத் திருத்தாண்டகம்)

### பதிக வரலாறு

சுவாமிகள், திருவையாற்றில் கயிலைக் காட்சி கண்டு தொழுது திருநெய்த்தானம், திருமழபாடி முதலான பதிகளை வணங்கித் திருப்பூந்துருத்தி சென்று பணிந்து பலநாள் தங்கித் திருத்தொண்டு செய்யுங் கருத்தினராய் திருமடமமைத்துத் தங்கியிருந்த நாள்களில் பாடியருளியவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம் (தி.12 திருநாவு. புரா. 340).

**குறிப்பு :** "பலவகை" என்ற பன்மை, தலங்கள் பற்றி வந்தது, 'பல தலங்களையும் பற்றி அருளிச் செய்த வகை' என்றவாறு. இத்திருப்பதிகம், தலங்களை நினைத்தலை வலியுறுத்தும் முகத்தால் திருக்கோயில் வழிபாட்டினை விதித்தருளிச் செய்தது. இதனால், எத்துணைப் பெரியோர்க்கும், திருக்கோயில் வழிபாடு இன்றியமையாதது என்பது சுவாமிகளது திருவுள்ளமாதல் பெறப்படும். ஏனைய அருளாசிரியரது திருவுள்ளமும் அதுவேயாகும். இதனானே மெய்கண்ட தேவ நாயனார் நூலுள்ளும், சிவப்பேறு பெற்ற பெரியோர்க்கும், "ஆலயந்தானும் அரன் எனத்தொழுமே" (சிவஞானபோதம் – சூ. 12) எனத் திருக்கோயில் வழிபாடு தவிர்க்கற்பாற்று அன்று என்பதனைத் தேற்றேகாரத்தால் முடிவின்கண் வலியுறுத்தியும், அருணந்தி தேவ நாயனார், "திருக்கோயிலுள்ளிருக்கும் திருமேனி தன்னை" என்னும் திருவிருத்தத்தில், சரியையாளர் முதலிய நால்வரும் திருக்கோயில் வழிபாடு செய்யும் முறையையும், அவற்றின் பயன்களும் வேறுபடுதலையும் இனிது விளக்கும் முகத்தான் அதனை வலியுறுத்தியும் போந்தனர்; இங்ஙனமாகவும், 'திருக்கோயில் வழிபாடு பத்திமார்க்கத்தில் நிற்பார்க்கேயாம்; 'யாம் ஞானமார்க்கத் தோம்' என்று இறுமாந்து கிடப்பார்க்கு. யாம் என்கடவோம்! இனி, இத்திருப்பதிகந்தானே ஐயடிகள் காடவர்கோன் நாயனார் திருத்தல வெண்பாக்களுக்கு நெறியாய் அமைந்தது எனலாம்.

ப.தொ.எண் : 306 பதிக எண் : 93

2995. நேர்ந்தொருத்தி யொருபாகத் தடங்கக் கண்டு
நிலைதளர ஆயிரமா முகத்தி னோடு
பாய்ந்தொருத்தி படர்சடைமேற் பயிலக் கண்டு
படஅரவும் பனிமதியும் வைத்த செல்வர்
தாந்திருத்தித் தம்மனத்தை யொருக்காத் தொண்டர்
தனித்தொருதண் டூன்றிமெய் தளரா முன்னம்
**பூந்துருத்தி பூந்துருத்தி யென்பீ ராகில்**
பொல்லாப் புலால் துருத்தி போக்க லாமே. 1

தம் மனத்தைத் தாம் திருத்தி ஒருமுகப்படுத்தாத மக்களைப் போலப் பேணுவாரின்றித் தனித்துத் தண்டு ஒன்றை ஊன்றி உடல் தளராத முன்னம், துணைவியாக நேர்ந்த ஒருத்தியைத் தன் உடலின் ஒரு பாகத்து அடங்கச் செய்து, பூமி நிலைதளரும் வண்ணம் பெரிய முகங்கள் ஆயிரத்தொடும் பாய்ந்த ஒருத்தியைப் பரந்த சடைமேல் பொருந்தச் செய்து, படநாகத்தையும் குளிர்ந்த மதியையும் ஒருங்கே வைத்த செல்வராகிய சிவபெருமான் உவந்து உறையும் பூந்துருத்தி, பூந்துருத்தி என்று பலகாலும் நினைத்து வாழ்த்துவீராகில் துன்பமே விளைக்கும் புலால் பொருந்திய துருத்தி போன்ற உடம்பை நீக்கல் கைகூடும்.

ஒருத்தி – முன்னையது நங்கையையும் பின்னது கங்கையையும் குறித்தது.

துருத்தி – கொல்லன் உலைத்துருத்தி; இது காற்றை வாங்கியும் விட்டும் நிற்கும். அஃது உருவகத்தால் அதுபோல மூச்சினை வாங்கியும், விட்டும் நிற்கும் உடம்பைக் குறித்தது. இத்திருத்தாண்டகம் திருப்பூந்துருத்தியை எடுத்தோதி அருளியது. அரவும், மதியும் பகையின்றி இருத்தல் போல ஒருத்தியும், ஒருத்தியும் இகலின்றி இருக்கும்படி வைத்துக்கொண்டார்.

2996. ஐத்தானத் தகமிடறு சுற்றி யாங்கே
**யகத்தடைந்தால் யாதொன்று மிடுவா ரில்லை**
மைத்தானக் கண்மடவார் தங்க ளோடு
மாயமனை வாழ்க்கை மகிழ்ந்து வாழ்வீர்
பைத்தானத் தொண்மதியும் பாம்பும் நீரும்
படர்சடைமேல் வைத்துகந்த பண்பன் மேய
**நெய்த்தானம் நெய்த்தான மென்பீ ராகில்**
நிலாவாப் புலால்தானம் நீக்க லாமே. 2

மைதீட்டும் இடமான கண்களையுடைய மடவாரோடு வாழும் நிலையற்ற மனை வாழ்க்கையில் இறுமாந்து வாழ்வீர்காள்! கோழைக்கு இடமான மிடற்று உட்பகுதி பன்னாளும் பலவற்றையும் பேசி இறுதி நாளில் செயலற்றுக் கோழையினால் அடைக்கப்படும் நிலையை அடைந்தால் அதனை நீங்குதற்கு யாதொரு மருந்துந் தருவாரில்லை. ஆகலான் ஒளிர்மதியையும், படமாகிய இடத்தினையுடைய பாம்பையும், கங்கையையும் தன் விரிந்த சடைமேல் வைத்து மகிழ்ந்த பண்பனாகிய சிவபெருமான் விரும்பி உறையும் நெய்த்தானம் நெய்த்தானம் என்று பலகாலும் நினைத்து வாழ்த்துவீராகில் நிலையில்லாத ஊனினா லாகிய உடம்பினை நீக்கல் கைகூடும்.

இத்திருத்தாண்டகம் திருநெய்த்தானத்தை எடுத்தோதி அருளியது.

ஐத்தானத்து – அகம் – மிடறு – ஐ – சுற்றி

தனது தானமாகிய உட்கழுத்துப்பகுதியை கபமாகிய கோழை சென்று அடைத்துக் கொண்டால் உயிர் பிழைப்பது அரிது. அதற்கு மருந்தில்லை. நெய்த்தானம், நெய்த்தானம் என்ற திருத்தலப்பெயரினைப் பல்காலும் எண்ணிச் சொல்லுதல் குறிக்க அடுக்கிவைத்தார். ஒவ்வொரு திருப்பாட்டிலும் ஒரு திருத்தலம் இப்படி வரும். சிவத்தலங்களின் பெயர்களை அடுக்கடுக்காகக் கூறுவதே நன்மை பயக்கும்.

**2997.** பொய்யாறா வாறே புனைந்து பேசிப்
புலர்ந்தெழுந்த காலைப் பொருளே தேடிக்
கையாறாக் கரண முடையோ மென்று
களித்த மனத்தராய்க் கருதி வாழ்வீர்
நெய்யாறா ஆடியநீல கண்டர்
நிமிர்புன் சடைநெற்றிக் கண்ணர் மேய
**ஐயாறே ஐயாறே** யென்பீ ராகில்
அல்லல்தீர்ந் தமருலகம் ஆள லாமே. 3

அமரர் உலகம் – மரித்தல் (இறத்தல்) இல்லாதவன் என்னும் பொருளுடைய அமரன் எனும் பெயர் மாயோன், நான்முகன், இந்திரன் முதலிய பலர்க்கும் உபசாரமாக, சிவபெருமானுக்கே அஃது உண்மைப் பெயராம். ஆகலின், அவனை அடைந்தவரும் அமரர் எனப்படுவதும் அதனால் சிவனுலகமே அமரலோகம் எனப்படும் சிறப்புடையது என்பதும் திருமுறைகளின் துணிபாகலின் "அல்லல் தீர்ந்து அமருலகம் ஆளலாமே" என்று அருளிச் செய்தார்.

நிலையாமை நீங்காத முறைமையுடைய பொருள்களையே சிறப்பித்துப் பேசிப் பொழுது புலர எழுந்தது முதல் பொருளைத் தேடி ஒழுக்கமாக எங்கள் குலத்தொழிலைக் கொண்டுள்ளோம் என்று எண்ணி இறுமாந்த மனத்தராய் அத்தொழிலில் தொடர்தலை உறுதியாகக் கருதி வாழ்வீர்காள்! நெய்யை ஆறுபோல் ஆடியவரும், நீலகண்டரும், நீண்ட செஞ்சடையரும், நெற்றிக் கண்ணரும் ஆகிய சிவபெருமான் விரும்பி உறையும் ஐயாறே! ஐயாறே! என்று பலகாலும் நினைத்து வாழ்த்துவீராயின் பிறவித் துன்பம் தீர்ந்துச் சிவனுலகை ஆளலும் கைகூடும்.

**2998.** இழவொன்று தாமொருவர்க் கிட்டொன் றீயார்
ஈன்றெடுத்த தாய்தந்தை பெண்டீர் மக்கள்
கழனங்கோ வையாதல் கண்டுந் தேறார்
களித்த மனத்தராய்க் கருதி வாழ்வீர்
அழனம்மை நீக்குவிக்கும் அரைய னாக்கும்
அமருலகம் ஆள்விக்கும் அம்மான் மேய
**பழனம் பழனமே** யென்பீ ராகில்
பயின்றெழுந்த பழவினைநோய் பாற்ற
லாமே. 4

ஒன்று இழவு ஆக – ஒரு பொருள் தமக்கு நட்டமாகும்படி.
இடுதல் – உயர்ந்தோர்க்குக் கொடுத்தல்.
ஈதல் – வறியோர்க்கு ஈதல்.
அரையன் ஆக்கும் – அரசனாகச் செய்யும்.
பாற்றலாம் – கெடுக்கலாம்.

ஒருபொருள் தமக்கு நட்டமாகும்படி உயர்ந்தோர்க்கு ஒன்று கொடுத்தலையும் பல இடத்தும் அலைந்து திரியும் வறியவர் ஒருவர்க்கு ஒன்று ஈதலையும் செய்யாராய், ஈன்றெடுத்த தாய், தந்தை, மனைவியர், மக்கள் முதலியோர் தம் காலில் பூணும் தளையாதலை அனுபவிக்கும் தெளியாராய், இறுமாந்த மனத்தாராய் அவர்களையே நிலையாகக் கருதி வாழ்வீர்காள்! நம் அழுகையை நீக்குவிப்பவனும் நம்மை அரையனாக்குபவனும், நம்மை அமரருலகு ஆள்விப்பவனும் ஆகிய தலைவன் சிவபெருமான் விரும்பி உறையும் பழனம் பழனம் என்று பலகாலும் நினைத்து வாழ்த்துவீராயின் பன்னாள் செய்து போந்த பழைய வினையாகிய நோயை நீக்கலும் கைகூடும்.

**2999.** ஊற்றுத் துறையொன்ப துள்நின் றோரீர்
ஒக்க அடைக்கும்போ துணர மாட்டீர்
மாற்றுத் துறைவழி கொண்டோடா முன்னம்
மாய மனைவாழ்க்கை மகிழ்ந்து வாழ்வீர்
வேற்றுத் தொழில்பூண்டோர் புரங்கள் மூன்றும்
வெவ்வழல்வாய் வீழ்விக்கும் வேந்தன்மேய
**சோற்றுத்துறை சோற்றுத்துறை** யென்பீ ராகில்
துயர்நீங்கித் தூநெறிக்கட் சேர லாமே. **5**

ஊற்றுத்துறை – உடம்பில் உள்ள ஒன்பது பெரு வாயில்கள். அவையனைத்தும் மாசு வெளிப்படும் புழைகளாய் உள்ளமைபற்றி அவற்றை ஊற்றுத்துறை என்றருளினார். அழுக்கு ஊறுகின்ற ஊற்று – மலஞ் சோரும் ஒன்பது வாயிற்குடில்.

ஓரீர் – நினைந்திலீர். ஒன்பது வாயில்களும் ஒருசேர அடைக்கப்படும் காலம் இறுதிக் காலமாகும். அப்போது இறைவனை நினைக்க விரும்பினும் நினைக்க முடியாது.

வேற்றுத்தொழில் – பகைமை

நிலையற்ற மனை வாழ்க்கையில் இறுமாந்து வாழ்வீர்காள்! அழுக்கு ஊறுகின்ற துறையாம் இவ் உடலில் உள்ள ஒன்பது பெருவாயில்களின் உள்ளே அகப்பட்டு நின்றமையால் இறைவனை நினைகின்றிலீர், அவை ஒன்பதையும், ஒருசேர அடைக்கும் இறுதிப்போதில் இறைவனை நினைக்க விரும்பினும் அது செய்ய மாட்டீர். மாற்றுத்துறையாகிய யாதனா சரீரத்துடன் செல்லும் வழியை மேற்கொண்டு கால தூதுவரோடு நீவிர் ஓடாமுன்னம் பகைமைத் தொழில் பூண்டாருடைய புரங்கள் மூன்றையும் வெவ்விய அழலிடத்து வீழ்விக்கும் வேந்தனாகிய சிவபெருமான் விரும்பி உறையும் சோற்றுத்துறை சோற்றுத்துறை என்று பலகாலும் நினைத்து வாழ்த்துவீராயின் பிறவித்துயர் நீங்கித் தூய வீட்டுநெறியினைச் சேர்தல் கைகூடும்.

---

**3000.** கலஞ்சுழிக்குங் கருங்கடல்சூழ் வையந் தன்னிற்
கள்ளக் கடலி லழுந்தி வாளா
நலஞ்சுழியா எழுநெஞ்சே இன்பம் வேண்டில்
நம்பன்றன் அடியிணைக்கே நவில்வா யாகில்
அலஞ்சுழிக்கு மன்னாகந் தன்னான் மேய
அருமறையோ டாறங்க மானார் கோயில்
**வலஞ்சுழியே வலஞ்சுழியே** என்பீ ராகில்
வல்வினைகள் தீர்ந்துவா னாள லாமே. **6**

நாமந்தன்னால் மேய கோயில் – வலஞ்சுழி

மரக்கலங்கள் சுழலுகின்ற கரிய கடலால் சூழப்பட்ட உலகில் வஞ்சனைக் கடலில் அழுந்தி, முயலாமலே, நன்மையைத் தேடி அலைகின்ற நெஞ்சே! நல்லின்பம் பெற வேண்டில் நம்புதற்குரிய தலைவன் திருவடியிணைக்கே வாழ்த்து நவில். அங்ஙனம் நவில விரும்பின் எல்லாப் பொருளும் அடங்கச் சுருட்டும் பாம்பரசனாகிய ஆதிசேடனால் விரும்பப்பட்டதும் அருமறையும் ஆறங்கமும் ஆன சிவபெருமான் உறைவதும் ஆகிய கோயிலைக் கொண்ட வலஞ்சுழியே வலஞ்சுழியே என்று பலகாலும் கூறுவையாயின் வலிய வினைகள் தீர வானுலகு ஆளல் கைகூடும்.

3001. தண்டிகுண் டோதரன்பிங் கிருடி
சார்ந்த புகழ்நந்தி சங்கு கன்னன்
பண்டை யுலகம் படைத்தான் தானும்
பாரை யளந்தான்பல் லாண்டி சைப்பத்
திண்டி வயிற்றுச் சிறுகட் பூதஞ்
சிலபாடச் செங்கண் விடையொன் றூர்வான்
**கண்டியூர் கண்டியூர்** என்பீ ராகிற்
கடுகநும் வல்வினையைக் கழற்ற லாமே.
7

பிருங்கி என்னும் பெயருடைய இருடி. பிருங்கி இருடி என்பது பிங்கிருடி எனக் குறைந்து நின்றது.

சிவ கணங்களான தண்டியும் குண்டோதரனும், பிருங்கியாகிய இருடியும், புகழ்சார்ந்த நந்தியும், சங்குகன்னனும், பண்டு உலகைப் படைத்த பிரமனும், உலகளந்த திருமாலும் பல்லாண்டு இசைக்கவும் திண்ணிய வயிற்றையும் சிறிய கண்களையுமுடைய பூதங்கள் சில பாடவும் விடை ஒன்றை ஊர்பவனாகிய சிவபெருமான் மேவி உறையும் கண்டியூர் கண்டியூர் என்று பலகாலும் நினைத்து வாழ்த்துவீர் ஆயின் நும் வலிய வினையை விரைவாக நீக்கல் கைகூடும்.

3002. விடமூக்கப் பாம்பேபோற் சிந்தி நெஞ்சே
வெள்ளேற்றான் தன்தமரைக் கண்ட போது
வடமூக்க மாமுனிவர் போலச் சென்று
மாதவத்தார் மனத்துள்ளார் மழுவாட் செல்வர்
படமூக்கப் பாம்பணையிற் பள்ளி யானும்
பங்கயத்து மேலயனும் பரவிக் காணாக்
**குடமூக்கே குடமூக்கே** யென்பீ ராகிற்
கொடுவினைகள் தீர்ந்தரனைக் குறுக
லாமே. 8

விடம் உக்க பாம்பு – விடத்தை உமிழ்ந்து விட்ட (விடம் நீங்கிய) பாம்பு; இது மந்திரத்தால் அடங்கிய பாம்பைக் குறித்தபடியாம். நெஞ்சம் தனது கரவையெல்லாம் விடுதற்கு இது உவமையாகச் சொல்லப்பட்டது.

தமர் – அடியவர்.

வடம் – ஆலமரம். ஊக்குதல் – மனதைச் செலுத்துதல்.

நெஞ்சே, சிவனடியார்களைக் கண்ட போது ஆலமர் கடவுளை அடைந்த முனிவர் போலச் சென்றடைந்து, விடம் உக்க பாம்பு போல அடங்கி வணங்கு என்றவாறு. ஆலமர் கடவுளையடைந்த முனிவர்கள் அவரையே கடவுளாகவும், ஆசிரியராகவும் கொள்கிறார்கள்.

நெஞ்சே! வெள்ளேறு ஊறும் விமலனுடைய அடியார்களைக் கண்டபோது ஆலமர் கடவுளை அடைந்த முனிவர் போல் அவர்களைச் சென்றடைந்து, விடம், உக்க பாம்பு போல அடங்கி வணங்கு. வணங்கி, மாதவத்தார், மனத்து உள்ளவரும், மழுப்படையை ஏந்திய செல்வரும், படத்தையுடைய கொடிய பாம்பாகிய அணையிற் பள்ளி கொள்ளும் திருமாலும், பங்கய மலர்வாழ் பிரமனும் புகழ்ந்து தோத்திரித்தும் காணப்படாதவரும் ஆகிய அரனார் மகிழ்ந்துறையும் குடமூக்கே குடமூக்கே என்று பலகாலும் நினைத்து வாழ்த்துவை யாயின் கொடுவினைகள் தீர அவரைக் கிட்டுதல் கைகூடும். படமூக்கப்பாம்பு – படத்தை உடைய கொடிய பாம்பு.

3003. தண்காட்டச் சந்தனமுந் தவள நீறும்
தழையணுகுங் குறுங்கொன்றை மாலை சூடிக்
கண்காட்டாக் கருவரைபோ லனைய காஞ்சிக்
கார்மயிலஞ் சாயலார் கலந்து காண
எண்காட்டாக் காடங் கிடமா நின்று
எரிவீசி யிரவாடும் இறைவர் மேய
**வெண்காடே வெண்காடே** என்பீ ராகில்
வீடாத வல்வினைநோய் வீட்ட லாமே. 9

தண் – தண்மை. தவளம் – வெண்மை.
கருவரை – நீலமலை. காஞ்சி – மேகலாபரணம்.
(பெண்கள் அணிகலம்). மயில் பொலிவு பெறுவது கார் காலத்தே. எண் காட்டாக்காடு – அளவில்லாத காடுகள் – ஈமங்கள் – உலகம் ஒடுங்கிய வெறுவெளி.

மேகலையணிந்து கார்மயிலின் சாயலைக் கொண்டு நீலமலைபோன்று விளங்கும் உமாதேவியார் ஒரு பங்கில் கலந்து நின்று கடைக்கண்ணைச் செலுத்திக் காண, சந்தனமும், வெண்ணீறும் குளிர்ந்து விளங்க, தழைவிரவித் தொடுக்கப்பட்ட கொன்றைக் குறுமாலையைச் சூடி, எண்ணற்ற இறந்தோருடைய இடமாகிய முதுகாட்டில் நின்று எரிஏந்தி இரவில் ஆடும் இறைவர் விரும்பி உறையும் வெண்காடே வெண்காடே என்று பலகாலும் நினைந்து வாழ்த்துவீராயின் கெடாத வலிய வினைகளாகிய நோய்களைக் கெடுத்தல் கைகூடும்.

3004. தந்தையார் தாயா ருடன்பிறந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தா மாரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ
மாயமா மிதற்கேதும் மகிழ வேண்டா
சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்மின்
திகழ்மதியும் வாளரவும் திளைக்குஞ் சென்னி
**எந்தையார் திருநாமம் நமச்சி வாய**
என்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்க லாமே. 10

"திகழ்மதி" என்றதனால் பிறையினது தட்பத்தையும், வாளரவு என்றதனால் பாம்பினது கொடுமையையும் குறிப்பித்தருளினார். திளைத்தல் – நட்புக் கொண்டு, விளையாடி மகிழ்தல். மதியும் அரவும் திளைக்கும் சென்னியை உடையவன் எனவும், எந்தை எனவும் அருளியதால் ''அவனே எல்லாப் பொருளையும் தாங்குபவனும், துன்பம் நீங்கி இன்பம்பெறச் செய்பவனும், யாவர்க்கும் உறவினனும் என்பதை அறிவுறுத்தியருளினார். அன்ன பெரியோனது திருப்பெயரே திருவைந்தெழுத்து என்பார். அதனை ஓதி வீடுபேறடைவோமாக!"

ஒருவருக்குத் தந்தை யார்? தாய் யார்? உடன் பிறந்தார் தாம் யார்? தாரம் யார்? புத்திரர் யார்? தாம் தாம் தமக்கு என்ன தொடர்புடையர்? நிலவுலகிற் பிறந்தது தந்தை முதலியவரோடு முன்னேயும் கூடிநின்றோ? இறப்பது அவர்களோடு பின்னும் பிரியாது கூடி நிற்கவோ? ஆகவே சிந்தையீர், பொய்யான இத்தொடர்பு கொண்டு ஏதும் மகிழ வேண்டா. உமக்கு ஓர் உறுதி சொல்லக் கேண்மின். ஒளிவீசித் திகழும் மதியும் கொடிய பாம்பும் நட்புக் கொண்டு விளையாடி மகிழும் முடியை உடைய எந்தையாரது திருநாமமாகிய நமச்சிவாய என்ற திருஐந்தெழுத்தை ஓதியவாறே துயிலெழுவார்க்குப் பெரிய வீட்டுலகில் நிலை பெற்றிருத்தல் கைகூடும். ஆகவே அதனைச் செய்மின்.

இருவிசும்பு – சிவலோகம்

## 94. பொது
### (நின்ற திருத்தாண்டகம்)

இத்திருப்பதிகத்தில் உள்ள திருத்தாண்டகங்கள் அனைத்தும், இறைவன் உலகமாய் நின்ற நிலையினை வகுத்துக் கூறுதலின், இத்திருத்தாண்டகத் திருப்பதிகம், 'நின்ற திருத்தாண்டகம்' எனப் பெயர் பெற்றது.

தன்னியல்பில் ஒருவனாய் நிற்கின்ற இறைவன், உலகை நோக்கி நிற்கும் பொதுவியல்பில், 'தானும் தனது சத்தியும்' என இருதிறப்பட்டு உலகெலாமாகி நிற்குங்கால், அவ்வுலகத்தொடு கலப்பினால் அவையேயாய், பொருட்டன்மையால் அவையாகாது தானேயாய், யாண்டும் அவைகளோடு உடனாய் இயங்கிவருதலால் அவையும் தானுமாய் நிற்பன். இவை முறையே, 'ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்றல்' எனப்படும்.

அஃதாவது இறைவன் பொருளால் உலகத்தின் வேறேயாயினும் உடலில் உயிர்போல அவற்றொடு சிறிதும் வேற்றுமையின்றிக் கலந்து நிற்கும் கலப்பினால் உலகமே யாகியும், அங்ஙனம் சிறிதும் வேற்றுமையின்றி ஒன்றாய்க் கலந்து நிற்பினும் பொருளால் தான் அவ்வுலகத்தின் வேறேயாகியும், இயங்குந்தன்மையுடைய அவ்வுலகத்தை இயக்குதலோடு அமையாது இயங்கியும் வருதலின் உடனாகியும் நிற்றலாம். இங்ஙனம் ஒன்றும் வேறும் உடனும் என்னும் மூன்றற்கும் பொதுவாய் நிற்கும் நிலையே, 'அத்துவித நிலை' எனப்படுகின்றது.

அத்துவிதநிலை மூன்றனுள் ஒன்றாதல் உலகத்தின் இயக்கத்திற்கு முதலாவதாகலின், அதனையே ஆசிரியன்மார் பலவாற்றாற் பலவிடத்தும் சிறந்தெடுத்தோதுவர்.

அவற்றுள் ஒன்றாய் நிற்கும் நிலையை விளக்குதலையே நுதலி எழுந்தது இத்திருப்பதிகம்.

வேதத்துள் திருவுருத்திரம் இவ்வாறு அமைந்துள்ளது.

**ப.தொ.எண் : 307** **பதிக எண் : 94**

**3005.** இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே. **1**

இயமானன் – உயிர். இறைவனது "எட்டுரு" நிலையான அட்டமூர்த்தி வடிவம் அருளிப் பாடப்பட்டது.

நெருநல் – நேற்று.

பெரிய பூமியாகியும், நீராகியும், தீயாகியும், வீசுகின்ற காற்றாகியும், ஆகாயமாகியும், ஞாயிறாகியும், அழிவில்லாத நிலையையுடைய திங்களாகியும், இயமானனாகியும் இங்ஙனம் அட்டமூர்த்தியாகியும், பெருமையுடையதாகிய நன்மையும், சிறுமை உடையதாகிய குற்றமும், பெண்ணும், ஆணும் ஏனைய தேவருடைய வடிவங்களும் அருவம், உருவம், அருவுருவம் என்னும் தம் மூவகைத் திருமேனிகளும் தாமே ஆகியும், நேற்று ஆகியும், இன்று ஆகியும், நாளை ஆகியும் நீண்ட செஞ்சடையுடைய எம்பெருமான் நின்றவாறு வியக்கத்தக்கதாகும்.

3006. மண்ணாகி விண்ணாகி மலையு மாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியு மாகிக்
கலையாகிக் கலைஞானந் தானே யாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப்
பிரளயத்துக் கப்பாலோ ரண்ட மாகி
எண்ணாகி யெண்ணுக்கோ ரெழுத்து மாகி
யெழுஞ்சுடரா யெம்மடிகள் நின்ற வாறே.

2

மண் ஆகியும், விண் ஆகியும், மலையாகியும் வயிரமாகியும், மாணிக்கமாகியும், கண்ணாகியும், கண்ணுக்குப் பொருத்தமான மணியாகியும், நூல் ஆகியும் நூலறிவாகியும் பெண் ஆகியும் பெண்ணுக்கு ஏற்ற ஒப்பற்ற ஆணாகியும், பிரளயத்துக்கு அப்பால் உள்ள அண்டமாகிய சுத்த மாயாபுவனம் ஆகியும் எண்ணுதற்குப் பொருந்திய பொருள் ஆகியும் அவ்வெண்ணத்தை வெளிப்படுத்தும் ஒப்பற்ற எழுத்தாகியும் தோன்றி விளங்கும் ஒளியாகியும், எம்பெருமான் நின்றவாறு வியக்கத்தக்கதாகும்.

கலை–நூல். கலைஞானம் – நூலறிவு. பிரளயம் – ஒடுக்கம் – தோற்ற ஒடுக்கங்கள் கால தத்துவத்திற்கு உட்பட்டு நிகழ்வன. சுத்த மாயா புவனங்கள் கால தத்துவத்திற்கு அப்பாற்பட்டவை. ஆகவே பிரளயத்துக்கு அப்பால் உள்ள அண்டம் என்றது சுத்தமாயா புவனம் எனப் பெறப்பட்டது.

---

3007. கல்லாகிக் களறாகிக் கானு மாகிக்
காவிரியாய்க் கால்ஆறாய்க் கழியு மாகிப்
புல்லாகிப் புதலாகிப் பூடு மாகிப்
புரமாகிப் புரமூன்றுங் கெடுத்தா னாகிச்
சொல்லாகிச் சொல்லுக்கோர் பொருளு மாகிச்
சுலாவாகிச் சுலாவுக்கோர் சூழ லாகி
நெல்லாகி நிலனாகி நீரு மாகி
நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே.

3

மலையாகியும், களர் நிலமாகியும், காடாகியும், ஆறாகியும், வாய்க்காலாகிய வழியாகியும், கடற்கரைக்கழியாகியும், புல்லாகியும், புதராகியும், பூடு ஆகியும், நகர் ஆகியும், புரம் மூன்றிற்கும் அழிவாகியும், சொல்லாகியும், சொல்லிற்குப் பொருந்திய பொருள் ஆகியும், போக்கு வரவு ஆகியும், அப்போக்கு வரவுக்கு வேண்டிய இடம் ஆகியும் நிலனாகியும், நீராகியும், நெல்லாகியும், நெடிய ஒளிப் பிழம்பாகியும் எம்பெருமான் நெடுகப் பரவி நின்றவாறு வியக்கத்தக்கதாகும்.

கால் – ஆறுகளினின்றும் பிரிந்து செல்லும் வாய்க்கால்.
ஆறு – வழி. வாய்க்காலாகிய வழி.
புரம் – பல நகரங்கள். சுலாவு – போக்குவரவு.
சூழல் – இடம். நிலமும், நீரும் இயைவதனால் உண்டாகும் பயனே நெல்.

3008. காற்றாகிக் கார்முகிலாய்க் காலம் மூன்றாய்க்
கனவாகி நனவாகிக் கங்கு லாகிக்
கூற்றாகிக் கூற்றுதைத்த கொல்களிறு மாகிக்
குரைகடலாய்க் குரைகடற்கோர் கோமா
னுமாய்
நீற்றானாய் நீறேற்ற மேனி யாகி
நீள்விசும்பாய் நீள்விசும்பி னுச்சி யாகி
ஏற்றானா யேறூர்ந்த செல்வ னாகி
யெழுஞ்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே.

4

கங்குல் – இரவு. குரைகடல் – ஒலிக்கின்ற கடல். கடற்குக் கோமான் – வருணன்.

காற்றாகியும், கரிய முகிலாகியும், இறப்பு நிகழ்வு எதிர்வெனக் காலம் மூன்றாகியும், கனவாகியும், நனவாகியும், இரவாகியும், நாளின் மற்றொரு கூறாகிய பகலாகியும் அல்லது இயமனால் வரும் சாவு ஆகியும், இயமனை உதைத்துக் கொன்ற களிறாகியும், ஒலிக்கும் கடலாகியும், அக்கடற்குத் தலைவனாம் வருணன் ஆகியும், நீறணிந்த கோலத்தன் ஆகியும், நீறணிதற்கு ஏற்ற வடிவத்தன் ஆகியும், நீண்ட ஆகாயமாகியும், அவ்வாகாயத்து உச்சி யாகியும், உலகத்தின் தொழிற்பாடுகள் எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டவனாகியும், இடபத்தை ஊரும் தலைவனாகியும் தோன்றி விளங்கும் ஒளியாகியும் எம்பெருமான் நின்றவாறு வியக்கத்தக்கதாம்.

3009. தீயாகி நீராகித் திண்மை யாகித்
திசையாகி அத்திசைக் கோர்தெய்வ மாகித்
தாயாகித் தந்தையாய்ச் சார்வு மாகித்
தாரகையும் ஞாயிறுந்தண் மதியு மாகிக்
காயாகிப் பழமாகிப் பழத்தில் நின்ற
இரதங்கள் நுகர்வானுந் தானே யாகி
நீயாகி நானாகி நேர்மை யாகி
நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே.

5

இரதம் – சுவை. நேர்மை – நுண்மை

தீயின் வெம்மையாகியும், நீரின் தன்மையாகியும், நிலத்தின் திண்மையாகியும், திசைகள் ஆகியும், அத்திசைகள் ஒவ்வொன்றிற்கும் உரிய தெய்வமாகியும், தாயாகியும், தந்தையாகியும், சார்தற்குரிய பற்றுக்கோடாகியும், நாண் மீனாகியும், ஞாயிறாகியும், குளிர் மதியமாகியும், காயாகியும், பழங்கள் ஆகியும், பழத்தில் நின்ற சுவைகள் ஆகியும், அச்சுவைகளை நுகர்பவன் ஆகியும் தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்று இடங்கள் ஆகியும் நுண்மை ஆகியும் நீண்ட ஒளிப்பிழம்பாகியும் எம்பெருமான் பரவி நின்றவாறு வியக்கத்தக்கதாகும்.

3010. அங்கமா யாதியாய் வேத மாகி
அருமறையோ டைம்பூதந் தானே யாகிப்
பங்கமாய்ப் பலசொல்லுந் தானே யாகிப்
பால்மதியோ டாதியாய்ப் பான்மை யாகிக்
கங்கையாய்க் காவிரியாய்க் கன்னி யாகிக்
கடலாகி மலையாகிக் கழியு மாகி
எங்குமாய் ஏறூர்ந்த செல்வ னாகி
எழுஞ்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே. 6

உயிர்ப்பொருள், உயிரில் பொருள் என்ற பகுப்பின்றி சிவம் எல்லாவற்றிலும் எக்காலத்தும் நீங்காது நிற்கும் நிலையைக் குறிக்கும் பதிகம் இதுவாகும்.

ஆறு அங்கங்கள் ஆகியும், ஆதியாய வேதங்கள் ஆகியும், அரிய மந்திரங்கள் ஆகியும், ஐம்பூதங்களின் தலைவராய தேவர்கள் ஆகியும், புகழ்ச் சொற்களேயன்றி இகழ்ச் சொற்களும் ஆகியும், வெள்ளிய மதி ஆகியும், உலகிற்கு முதல் ஆகியும், வினையாகியும் கங்கை, காவிரி, கன்னி போன்ற தீர்த்தங் களுக்குரிய தேவர்கள் ஆகியும், கடலாகியும், மலையாகியும், கழி ஆகியும், எங்கும் நிறைபொருளாகியும் ஏறூர்ந்த தலைவன் ஆகியும், தோன்றி விளங்கும் ஒளியாகியும் எம்பெருமான் நின்றவாறு வியக்கத்தக்கதாம்.

3011. மாதா பிதாவாகி மக்க ளாகி
மறிகடலும் மால்விசும்புந் தானே யாகிக்
கோதா விரியாய்க் குமரி யாகிக்
கொல்புலித்தோ லாடைக் குழக னாகிப்
போதாய மலர்கொண்டு போற்றி நின்று
புனைவார் பிறப்பறுக்கும் புனித னாகி
**யாதானு மெனநினைந்தார்க் கெளிதே யாகி**
அழல் வண்ண வண்ணர்தாம் நின்ற
வாறே. 7

மாதா, பிதா, மக்கள் ஆகியும், அலை எழுந்து மடங்கும் கடலும் பெரிய ஆகாயமும் ஆகியும், கோதாவிரி குமரிகள் ஆகியும், கொல்லும் புலியினது தோலை ஆடையாகக் கொண்ட அழகன் ஆகியும், உரிய பொழுதில் மலர்வதாகிய பூக்கொண்டு புனைந்து புகழ்ந்து நிற்பாருடைய பிறப்பறுக்கும் புனிதன் ஆகியும், 'யாது நிகழினும் நிகழ்க' எனக் கவலையற்றுத் தன்னையே நினைவார்க்கு எளிய பொருள் ஆகியும் நெருப்பின் நிறம் போலும் நிறமுடைய எம்பெருமான் நின்றவாறு வியக்கத்தக்கதாம்.

3012. ஆவாகி ஆவினில் ஐந்து மாகி
அறிவாகி அழலாகி அவியு மாகி
நாவாகி நாவுக்கோர் உரையு மாகி
நாதனாய் வேதத்தி னுள்ளோ னாகிப்
பூவாகிப் பூவுக்கோர் நாற்ற மாகிப்
புக்குளால் வாசமாய் நின்றா னாகிப்
தேவாதி தேவர் முதலு மாகிப்
செழுஞ்சுடராய்ச் சென்றடிகள் நின்ற
வாறே. 8

அவி – வேள்வித்தீயில் இடப்படும் உணவு

பசுவும் பசுவிடத்துத் தோன்றும் ஐம்பொருளும் ஆகியும், வேள்விக்குரியன அறியும் அறிவும், வேள்வித் தீயும், அத்தீயுட் பெய்யும் உணவும் ஆகியும், நாவும் நாவுக்கு ஏற்ற உரையும் ஆகியும், நாதமும் வேதத்தின் பொருளும் ஆகியும், பூவும், அப்பூவிற்குரிய ஒப்பற்ற நாற்றமும் ஆகியும், நாற்றம் பூவிற்குள் ஒன்றாய் நிற்கும் ஒற்றுமை நிலையாகியும், தேவர்களும் தேவர்களின் தலைமைத் தேவரும் ஆகியும், செழுஞ்சுடராய் எம்பெருமான் பரவி நின்றவாறு வியக்கத்தக்கதாகும்.

**3013.** நீராகி நீளகலந் தானே யாகி
நிழலாகி நீள்விசும்பி னுச்சி யாகிப்
பேராகிப் பேருக்கோர் பெருமை யாகிப்
பெருமதில்கள் மூன்றினையு மெய்தா னாகி
ஆரேனுந் தன்னடைந்தோர் தம்மை யெல்லாம்
ஆட்கொள்ள வல்லவெம் மீச னார்தாம்
பாராகிப் பண்ணாகிப் பாட லாகிப்
பரஞ்சுடராய்ச் சென்றடிகள் நின்ற வாறே.

9

பெரிய மதில்கள் மூன்றையும் எய்தானும், தன்னையடைந்தார் யாராயினும் அவரெல்லாரையும் ஆட்கொள்ள வல்லானும் ஆகிய எம் ஈசன் ஆம் அடிகள் நீரின் சுவையும், நீள அகலங்களும் ஆகியும், புகழும் புகழுக்குப் பொருந்திய ஒப்பற்ற பெருமையும் ஆகியும், பூமியின் பொறைக்குணமும், பண்ணின் இனிமைப் பண்பும், அப்பண்புடைய பாடலும் ஆகியும், மேலான ஒளியாகியும் விளங்கி நின்றவாறு வியக்கத்தக்கதாம்.

---

**3014.** மாலாகி நான்முகனாய் மாபூ தமாய்
மருக்கமாய் அருக்கமாய் மகிழ்வு மாகிப்
பாலாகி யெண்டிசைக்கும் எல்லை யாகிப்
பரப்பாகிப் பரலோகந் தானே யாகிப்
பூலோக புவலோக சுவலோ கமாய்ப்
பூதங்க ளாய்ப்புராணன் தானே யாகி
ஏலா தனவெல்லாம் ஏல்விப் பானாய்
எழுஞ்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே.

10

மருக்கம் – பெருக்கம். அருக்கம் – சுருக்கம்.
பரலோகம் – எல்லாவற்றினும் மேலாய சிவலோகம்.
ஏலாதன – இயலாதன

மாலும், நான்முகனும் ஆகியும், பெரும்பூதங்கள் ஆகியும், பெருக்கமும், சுருக்கமும், மகிழ்ச்சியும் ஆகியும், எட்டுத் திசைக்கூறும் அவ்வெட்டுத் திசைகளுக்கும் உரிய எல்லையும் ஆகியும், பரப்பும் பரலோகமும் ஆகியும், பூலோக புவலோக சுவலோகங்களும், அவற்றின் உட்பட்ட அண்டங்களும் ஆகியும், புராணனுக்குரிய பழமையாகியும், தான் இன்றித் தாமாக நடைபெறாத சட உலகங்களும், அவைகளை நடைபெறுவித்தற்கு அமைந்தவனும் ஆகியும், எழும் ஒளிப்பிழம்பாகியும், எம்பெருமான் விளங்கி நின்றவாறு வியக்கத்தக்கதாகும்.

## 95. பொது (தனித் திருத்தாண்டகம்)

(தனித்தனிப் பொருள்களை உணர்த்தும் திருத்தாண்டகங்களால் இயன்ற திருப்பதிகம்)

ப.தொ.எண் : 308

பதிக எண் : 95

3015. அப்பன்நீ அம்மைநீ ஐய னும்நீ
அன்புடைய மாமனும் மாமி யும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொரு ளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஒரூ ரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்று வாய்நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத் து(ம்)நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே.

1

ஏறூர்ந்த செல்வனே! எனக்கு அப்பனும் அம்மையும் தலைவனும் நீ. அன்புடைய மாமனும் மாமியும் நீ. பிறப்பு, குடிமை முதலியவற்றான் ஒப்புடைய மனைவியரும், ஒள்ளிய செல்வமும் நீ, ஒரு குலத்தவரும், பிற சுற்றத்தவரும், நிலையாக நின்று வாழும் ஒப்பற்ற ஊரும் நீ, நுகர்ச்சிப் பொருள்களாகவும், ஊர்தி வகைகளாகவும் தோன்றுபவனும் நீ, இப்பொன்னும் இம்மணியும் இம்முத்தும் நீ. எனக்குத் துணையாய் உடனின்று உலகத்து அப்பன், அம்மை முதலாயினாரினின்று என்னைத் துறப்பிப்பானும் நீ. நீயே எனக்குக் கடவுள்.

தமக்கு எல்லாப் பொருளும் இறைவனேயாகக் கொண்டு நின்ற தம் அன்பின் மேலீட்டை அருளிச் செய்தது. குலம் – கிளை; சாதி.

---

3016. வெம்பவரு கிற்பதன்று கூற்றம் நம்மேல்
வெய்ய வினைப்பகையும் பைய நையும்
எம்பரிவுந் தீர்ந்தோம் இடுக்கண் இல்லோம்
எங்கெழிலென் ஞாயி றெளியோ மல்லோம்
அம்பவளச் செஞ்சடைமேல் ஆறு சூடி
அனலாடி ஆன்அஞ்சும் ஆட்டு கந்த
**செம்பவள வண்ணர்செங் குன்ற வண்ணர்**
**செவ்வான வண்ணரென்** சிந்தை யாரே.

2

"கூற்றம் நம்மேல் வெம்ப வருகிற்பது அன்று" என்று படிக்க வேண்டும். வெம்ப – வருந்தும்படி. வருகிற்பது – வரவல்லது. பைய நையும் – மெல்ல வருந்துகின்ற. பரிவு – துன்பம்.
செம்பவள வண்ணர் –மேனி
செங்குன்ற வண்ணம் – உரு
செவ்வான வண்ணர் – நிறம்

அழகிய பவளம் போன்ற செஞ்சடைமேல் ஆறு சூடியவரும், அனல் ஆடியவரும், ஆன் அஞ்சிலும் ஆடுதலை உகந்தவரும், செம்பவள நிறத்தினரும், செங்குன்ற வடிவினரும், செவ்வான வண்ணரும் ஆகிய சிவபெருமான் எம் சிந்தையராயினார்; அதனால் கூற்றம் நம்மேல் நாம் வருந்தும்படி வரவல்லதன்று. கொடிய வினையாகிய பகையும் மெல்ல வருத்துகின்ற எம் துன்பமும் யாம் தீர்ந்தோம்; யாதோரிடையூறும் இல்லோம்; ஞாயிறு எங்கெழுந்தாலும் அதனால் எமக்கு வரக்கடவது என்னை ? யாவர்க்கும் எளியோம் அல்லோம்.

| | |
|---|---|
| 3017. ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே<br>அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே<br>ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே<br>உருகு வித்தால் ஆரொருவர் உருகா தாரே<br>பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே<br>பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே<br>காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே<br>காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே. 3 | கண்ணுதலாய்! நீ ஆட்டுவித்தால் ஆடாதார் ஒருவர் ஆர்? அடக்குவித்தால் அடங்காதார் ஒருவர் ஆர்? ஓட்டுவித்தால் ஓடாதார் ஒருவர் ஆர்? உருகுவித்தால் உருகாதார் ஒருவர் யார்? பாட்டுவித்தால் பாடாதார் ஒருவர் யார்? பணிவித்தால் பணியாதார் ஒருவர் ஆர்? காட்டுவித்தால் காணாதார் ஒருவர் ஆர்? நீ காட்டாவிடில் காண்பார் ஆர்? |

இத் திருத்தாண்டகம் இறைவனது தன்வயமுடைமையை உணர்த்து முகத்தால், உயிர்களிடத்து நிகழும் அவனது கைம்மாறற்ற உதவியை அருளிச் செய்தது.

ஆட்டுவித்தலாவது – உயிர்களை அவற்றது, 'யான் எனது' என்னும் செருக்குக் காரணமாகப் பல்வேறு உடம்பாகிய பாவையுட் படுத்து, வினையாகிய கயிற்றினால் கீழ் மேல் நடு என்னும் உலகமாகிய அரங்கினிடத்து, வினையை ஈட்டியும் நுகர்ந்தும் சுழலச் செய்தலாகிய கூத்தினை இயற்றுவித்தல். "கோனாகி யான் எனதென்றவரவரைக் கூத்தாட்டுவானாகி நின்றாயை என் சொல்லி வாழ்த்துவனே" (தி.8 திருவா. திருச்சதகம். 15) என்றருளிச் செய்தார், மாணிக்கவாசகரும். இவ்வாறு ஆட்டுவித்தல், உலகத்தைப் படைத்தலும் காத்தலும் ஆகிய தொழில்களால் ஆவதாகும்.

அடக்குவித்தல் – மேற்கூறியவாறு ஆட்டுவித்தலால் ஆடி வரும் உயிர்கட்கு எய்ப்புத் தோன்றாதவாறு, ஆடலை இடையே சிறிது காலம் நிறுத்தி, யாதும் செய்யாதவாறு அமைந்திருக்கச் செய்தல்; இஃது, உலகம் முழுவதையும் ஒடுக்கும் முற்றழிப்பினால் நிகழும்.

ஓட்டுவித்தலாவது – பின் நின்று ஆட்டுவிக்கின்ற தன்னை உள் நோக்கி உணராவண்ணம், உயிர்களைப் பிற பொருள்களை நோக்கிப் புறத்தே ஓடுமாறு ஓட்டுதல்; இது, 'மறைத்தல்' என்னும் தொழிலினால் ஆவதாகும்.

உருகுவித்தலாவது – புறமே ஓடிப் பயன் காணாது உவர்ப்பெய்திய உயிர்களைப் பின்னர் உள்நோக்கித் தன்னை உணருமாறு செய்து, தன்னையும் தனது உதவியினையும் நினைந்து நினைந்து அன்பு கூர்ந்து மனம் உருகுமாறு செய்தல்.

பாட்டுவித்தலாவது – அவ்வுருக்கத்தின்வழித் தோன்றும் வாழ்த்துக்களையும், புகழ்ச்சிகளையும், வாயார எடுத்துப் பாடுமாறு செய்தல். இப்பாட்டுக்கள் தாமே பாடுவனவும், முன்னுள்ளனவுமாய் அமையும்.

பணிவித்தலாவது – அன்புமிக்கெழுந்து பெருக தன்முனைப்பு அடியோடு நீங்குதலால், தன்முன்னே நிற்றல் இன்றி, நிலஞ்சேர வீழ்ந்து பணியச் செய்தல், உருகுவித்தல் முதலிய மூன்றும் முறையே மன மொழி மெய்கள் என்னும் மூன்றும் தன்வழி (இறைவழி)ப் படச் செய்விப்பனவாதல் காண்க. இம்மூன்றும், 'அருளல்' என்னும் தொழிலால் அமைவன, மறைத்தலும் அருளலும் ஆகிய இத் தொழில்களைக் குறித்தே.

"போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்" (தி. 8 திருவா. சிவபு. 43)

எனவும்,

"பந்தமும் வீடும் படைப்போன் காண்க" (தி. 8 திருவா. திருவண். 52)

எனவும் அருளிச் செய்தார், ஆளுடைய அடிகள்.

"காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே" என்றது, 'உயிர்கள் உன்னைக் காணாமை, நீ காட்டுவியாமையேயாம் எனவும், "காண்பாரார் காட்டாக்கால்" என்றது, 'நீ காட்டுவியாத பொழுது, உயிர்கள் தாமே உன்னைக் காண வல்லன அல்ல' எனவும், 'உயிர்கள் இறைவனைக் காண்டல் அவன் அருளால் அன்றி ஆகாது ஆதலின்' முத்திக் காலத்திலும் உயிர்கட்கு முதல்வனது உதவி இன்றியமையாதது என்பதனை உடம்பாட்டினும் எதிர்மறையினும் வைத்து இனிது விளங்க அருளிச் செய்தவாறு.

நெற்றிக்கண், இறைவனது இயற்கைப் பேரறிவினை உணர்த்துமாதலின், "கண்ணுதலாய்" என விளித்தருளியது, காட்டுதல் முதலிய பலவற்றிற்கும் உரிய இயைபு உணர்த்தப்பட்டது என்க.

"கண்ணுதலாய்" என்பதனை முதற்கண் வைத்து, 'நீ' என்னும் சொல்லெச்சத்தினை, ஆட்டுவித்தல் முதலிய எல்லாவற்றிற்கும் வருவிக்க. இறைவன், உயிர்களைத் தொழிற்படுத்துதல் பெத்த காலத்தில் திரோதான சத்தியும், அதன் வழித்தாயவினையும், அதன் வழியராகிய காரணக் கடவுளரும் முதலிய வாயில்களாலும், முத்திக் காலத்தில் அருட்சத்தி வாயிலாலும் ஆகலின், 'ஆட்டினால், ஒட்டினால்' என்பனபோல அருளாது, 'ஆட்டுவித்தால் பாட்டுவித்தால்' முதலியனவாக அருளினார். அதனால், இறுதிக்கண், "காட்டாக்கால்" என்றதற்கும், 'காட்டுவியாக்கால்' என்றலே திருவுள்ளம் என்க.

---

3018. நற்பதத்தார் நற்பதமே ஞான மூர்த்தீ
நலஞ்சுடரே நால்வேதத் தப்பால் நின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலாய் இதுவுன் தன்மை
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னுள்
நிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற
**கற்பகமே யானுன்னை விடுவே னல்லேன்**
கனகமா மணிநிறத்தெங் கடவு ளானே. 4

இத்திருத்தாண்டகம், இறைவன் தமக்கு அனுபவப் பொருளான அருமையை அருளிச் செய்தது.

வீடுபேற்றினை அடைய உரியவருடைய வீடுபேறாய் நின்றவனே! ஞானமே வடிவானவனே! நன்மையை விளக்கும் சுடரே! நான்கு வேதங்களுக்கும் அப்பால் நின்ற சொல் பதத்தாராகிய அபர முத்தருடைய சொற்பதத்தையும் கடந்து நின்ற சொல்லற்கரிய சூழலாய்! இஃது உனது தன்மை. நிற்பது போலக் காட்டி நில்லாது அலைகின்ற நெஞ்சு வழியாக வந்து நிலையில்லாத புலாலுடம்பிற் புகுந்து நின்று எல்லாப் பயன்களையும் தரும் கற்பகமே! கனகமும் மாணிக்கமும் ஒத்த நிறத்தினை உடைய எம் கடவுளே. யான் உன்னை விடுவேன் அல்லேன்.

3019. திருக்கோயி லில்லாத திருவி லூரும்
திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும்
பாங்கினோடு பலதளிக ளில்லா வூரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா வூரும்
விதானமும் வெண்கொடியு மில்லா வூரும்
அருப்போடு மலர்பறித்திட்டுண்ணா வூரும்
அவை யெல்லாம் ஊரல்ல அடவி காடே.

5

சிவபெருமானது திருக்கோயிலில்லாததால் நன்மையில்லாத ஊரும், திருவெண்ணீற்றை மக்கள் அணியாததால் நன்மையில்லாத ஊரும், உடம்பு வணங்கிப் பத்தி மிகுதியால் மக்கள் பாடா ஊரும், அழகான பலதளிகள் இல்லாத ஊரும், விருப்புடன் வெள்ளிய வலம்புரிச் சங்கினை ஊதாஊரும், மேற்கட்டியும் வெண் கொடிகளும் இல்லா ஊரும், மலரைப் பேரரும்பாய் உள்ள நிலையில் பறித்துச் சிவனுக்குச் சாத்திப் பின்னரே உண்ணல் முறையாயிருக்க அங்ஙனம் உண்ணா ஊரும், ஆகிய அவை எல்லாம் ஊரல்ல; அடவியாகிய பெருங்காடே.

பரு – பருமை. ஆகுபெயராய் உடம்பைக் குறிக்கிறது. கோடி – வளைந்து; வணங்கி. பாங்கு – அழகு. விதானம் – பந்தல், மேற்கட்டி. அருப்பு – விரும்பு. போது – பேரரும்பு. அடவி – வடசொல் – பெருங்காடு.

"நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே" – புறம். 187

என்னும் ஔவையார் பாட்டால் நிலத்தின்கண் வாழ்வோராலே நிலம் 'நன்று' என்றும் 'தீது' என்றும் சொல்லப்படும்.

3020. திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்
தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்தும்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே.

6

திருநாமமாகிய அஞ்செழுத்தை ஒருகாலும் செப்பாராயின், தீவண்ணருடைய இயல்பை ஒருகாலும் பேசாராயின், திருக்கோயிலினை ஒருகாலம் வலம் வாராராயின், உண்பதற்கு முன் பல மலரைப் பேரரும்பாய் உள்ள நிலையிற் பறித்து அவற்றை இறைவனுக்கு இட்டுப்பின் உண்ணாராயின், கொடுநோய்கள் கெட வெண்ணீற்றை அணியாராயின், அங்ஙனம் செய்யாதாரெல்லாரும் இறைவனது திருவருளை இழந்தவராவர். அவர்கள் பிறந்த முறைமை தான் யாதோவெனின், தீராத கொடுநோய்கள் மிகத் துன்புறுத்தச் செத்து, **வரும் பிறப்பிலும் பயனின்றி வாளா இறந்து மீளவும் பிறப்பதற்கு அதுவே தொழிலாகி இறக்கின்றார் ஆதலேதான். அளி – சிவனிடத்தன்பு.**

அளியற்றார் – இறைவனது திருவருள் பெறாதவர். 3019, 3020 ஆகிய இரு திருத்தாண்டகங்களிலும், திருக்கோயில், திருவைந்தெழுத்து முதலியவற்றை விதந்தோதினமையால், பிற கோயில்கள், பிற நாமங்கள் முதலியவற்றாலும் பிறவி நீங்கப் பெறார் என்பது பெறப்பட்டது.

3021. நின்னாவார் பிறரின்றி நீயே யானாய்
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து
மானாய்
மன்னனாய் மன்னவர்க்கோ ரமுத மானாய்
மறைநான்கு மானாய்ஆ றங்க மானாய்
பொன்னானாய் மணியானாய் போக மானாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே உன்னை
என்னானாய் என்னானாய் என்னி னல்லால்
ஏழையேன் என்சொல்லி யேத்து கேனே.

7

மன் – தலைவன். மன்னவர் – முறையை (நீதியை) முட்டாமற் செலுத்தும் அரசர். இறைவனது பெருமை உயிர்களால் அளவிட்டு உணரலாகாது.

நின்னைப்போல் ஆவார் பிறர் இன்றி நீ ஒருவனே ஆனாய், நினைப்பார் தம் மனமாகிய நிலத்துக்கு ஒப்பற்ற வித்தும் ஆனாய், தலைவன் ஆனாய், அரசர்களுக்கு ஒப்பற்ற அமுதம் ஆனாய்; மறை நான்கும் ஆறங்கமுமாய், பொன்னும் மணியும் போகமும் ஆகும் பூமிமேல் புகழ்தற்குரிய பொருளானவனே! நீ எவ்வாறெல்லாம் ஆனாய் எவ்வாறெல்லாம் ஆனாய் என்று வியப்பதையன்றிச் சிற்றறிவினையுடைய யான் எவற்றை எஞ்சாது சொல்லிப் புகழ்வேன்?

---

3022. அத்தாவுன் அடியேனை அன்பா லார்த்தாய்
அருள்நோக்கில் தீர்த்தநீ ராட்டிக்
கொண்டாய்
எத்தனையும் அரியைநீ எளியை யானாய்
எனையாண்டு கொண்டிரங்கி யேன்று
கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் அத்தனையும் பொறுத்தா
யன்றே
இத்தனையும் எம்பரமோ ஐய ஐயோ
எம்பெருமான் திருக்கருணை யிருந்த
வாறே. 8

பித்தன் – ஒருநெறிப்படாதவன்

பேதை – அறியாதவன் – யாதும் உணராதவன்

பேயன் – வீணில் உழல்பவன்

நாயேன் – இழிந்தவன்

இத்திருத்தாண்டகம் இறைவன் தம்மை எளிவந்து ஆண்டருளிய பெருங்கருணைத்திறத்தை நினைந்து மகிழ்ந்தருளிச் செய்தது.

தந்தையே! ஐயா! உன் அடியவன் ஆகிய என்னை அன்பு கொண்டு பிணிப்புண்ணச் செய்தாய்; உனது திருவருள் நோக்கத்தாலே என்னைத் தீர்த்த நீர் ஆட்டித் தூயவன் ஆக்கினாய். அடைதற்கு மிகவும் அரியையாகிய நீ எனக்கு மிகவும் எளியை ஆயினாய்; என்மீது இரங்கி எனை ஆண்டு கொண்டு என் செயல்களை எல்லாம் உன் செயல்களாக முன்னின்று ஏற்றுக் கொண்டாய். ஒரு நெறிப்படாத பித்தனேனும், யாதுமுணராத பேதையேனேனும், வீணில் உழலும் பேயேனேனும், இழிவு மிகுந்த நாயேனேனும் ஆகிய நான் செய்த குற்றங்கள் எல்லாவற்றையும் பொறுத்தனை. நின் அருட்செயல்கள் யாவும் எம்போலியரது அளவிற்கு உரியனவோ? அல்ல; அல்ல; எம் பெருமான் திருக்கருணை இருந்த தன்மையைக் காட்டுவனவே அவை.

3023. குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே.

9

குலம் – கூட்டம், இனம். பொல்லேன் – தீயேன்.

நடுவே நின்ற விலங்கு – மனவுணர்வுடைய மக்கட்கும், அஃது இல்லாத பிற உயிர்கட்கும் இடையே நிற்கின்ற ஒரு சார் விலங்குகளான யானை, குரங்கு, கிளி போன்றவை.

சார்ந்த கூட்டத்தால் நான் தீயேன்; குணத்தாலும் தீயேன்; குறிக்கோளாலும் தீயேன். குற்றமாகிய செயலே பெரிது உடையேன்; நலம் பயப்பதற்குரிய வேடத்தாலும் தீயேன். எல்லாவற்றாலும் நான் தீயேன். ஞானியல்லேன்; நல்லாரோடு கூடிப் பழகிற்றிலேன்; மறவுணர்வுடைய மக்கட்கும் அஃதில்லாத பிற உயிர்கட்கும் இடைநிற்கின்ற ஒரு சார் விலங்கும் அல்லேன்; மனவுணர்வு பெற்றும் அம் மன உணர்வால் பயன் கொள்ளாமையின் விலங்கல்லாது ஒழிந்தேனு அல்லேன்; வெறுக்கத்தக்க பொய் குறளை கடுஞ்சொல் பயனில் சொல் என்பனவற்றையே மிகப் பெரிதும் பேசும் ஆற்றலினேன். பிறப்பால் குடிமை நல்லேன் ஆயினும் என்செயலால் அதுவும் பொல்லேனாக இகழப்பட்டேன். பிறர்பால் இரப்பதனையே மேற்கொண்டு என்பால் இரப்பவர்க்கு யாதும் ஈய மாட்டேன். இந்நிலையில் அறிவற்ற நான் என் செய்வதற்காக மனிதனாகத் தோன்றினேன்.

3024. சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே.

10

சங்கநிதி, பதுமநிதி ஆகிய நிதிகள் இரண்டையும் தந்து, ஆட்சி செய்யப் பூமியொடு வானுலகையும் தருவாராயினும் சிவபெருமானிடத்தே ஒரு தலையாய அன்பில்லாராய் நிலையின்றி அழிவாராகிய அவரது செல்வத்தை யாம் ஒரு பொருளாக மதிக்க மாட்டோம். உறுப்புக்கள் எல்லாம் அழுகிக் குறையுந் தொழுநோயராய்ப் பசுவை உரித்துத் தின்று திரியும் புலையராயினும் கங்கையை நீண்ட சடையில் கரந்த சிவபெருமானுக்கு அன்பராயின் அவரே நாம் வணங்கும் கடவுள் ஆவார்.

இத் திருத்தாண்டகம், உலகியலைப் பற்றாது, மெய்ந் நெறியையே பற்றி நிற்கும் தமது உள்ள நிலையை அருளிச் செய்தது.

சங்க நிதி – சங்கு வடிவாகக் குவிக்கப்பட்ட நிதி. பதுமநிதி – தாமரை வடிவாகக் குவிக்கப்பட்ட நிதி. இனி, 'சங்கம், பதுமம்' என்பன சில பேரெண்கள்' எனவும் கூறுப. 'இந்நிதிகள் குபேரனிடத்து உள்ளன' எனவும், 'அவற்றிலிருந்து எத்துணைப் பொருள் கொள்ளினும் அதனாற் குறையாது முன்னையளவில் நிரம்பி நிற்கும் தெய்வத்தன்மை உடையன' எனவும் சொல்லுப. தரணி – பூமி.

தூய உடம்பினவாய், பிற அனைத்தையும் தூய்மை செய்வனவும் தேவர்கள் விரும்பி ஏற்பனவும் ஆகிய பால் முதலிய ஐந்தினையும் தருவனவாய், தேவரொடு வைத்து வழிபடப்படும் ஆவைக் கோறலாகிய தொழிலினும் தீயதொழில் பிறிதொன்று காணாமையின், அது செய்வாரைப் பிறர் யாவரும், 'புலையர்' என்றிகழ்ந்தனர் என்பதாம். புலையர் – கீழோர். வடமொழியுள் இவரை, 'சண்டாளர்' என்பர். 'இறைவன் தன்னிடத்து உண்மை அன்பு உண்டாகப் பெற்றாரிடத்துப் பிறப்பின் சார்பால் உளவாகி, பல்வேறாகிய காரணங்களால் அகற்றப்படாது நிற்குங் குற்றங்களை நோக்கி அவரைக் கடிந்தொழியாது, அவர் தம் அன்பு ஒன்றையே நோக்கி அவரை உகந்தருளுவன்' என்பதும், பிறப்பு முதலியவற்றால் உயர்ந்தோரும் அவரை வணங்கற் பாலர் என்பது இறைவன் திருவுள்ளமாதலும் கண்ணப்ப நாயனாரது வரலாற்றால் இனிது விளங்கிக் கிடத்தலின், "புலையரேனும் – கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில், அவர்கண்டீர் யாம் வணங்கும் கடவுளார்" என்று அருளிச் செய்தார். இதனானே, 'சிவனடியாரை' அவர்தம் பிறப்பு முதலியன நோக்கி இகழற்க' என விலக்கினமை பெற்றாம்.

## உலகியலும், மெய்ந்நெறியும்

'இறைவனிடத்து எத்துணைச் சிறந்த அன்பும் தொண்டும் உடையராயினும், இலராயினும் அவரை அவர்தம் பிறப்பு, தொழில் முதலியவற்றின் உயர்வு, தாழ்வுகட்கேற்பக் கொள்ளுதல் உலகியல்' என்பதும், 'பிறப்பு, தொழில் முதலியவற்றால் எத்துணை உயர்வு, தாழ்வுகள் உடையராயினும், அவரை அவர்க்கு இறைவனிடத்துள்ள அன்பு, தொண்டு என்னும் இவற்றின் நிலைகட்கு ஏற்பக் கொள்ளுதல் மெய்ந்நெறி' என்பதும் இத்திருத்தாண்டகத்தால் இனிது விளங்கிக் கிடக்கின்றன.

இம் மெய்ந்நெறி முறைமை, 'சண்டாளனாய் இருப்பினும், 'சிவ' என்று சொல்வானேல், ஒருவர் அவனோடு பேசுக; அவனோடு வசிக்க; அவனோடு இருந்து உண்க' என, உபநிடதத்தினும் (முண்டகம்) கூறப்பட்டது.

மாதவச் சிவஞான யோகிகள், மேற்காட்டிய உபநிடத மந்திரத்தையே, தமது கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதியில்,

"சிவனெனும் மொழியைக் கொடியசண் டாளன்
    செப்பிடின் அவனுடன் உறைக
அவனொடு கலந்து பேசுக அவனோ
    டருகிருந் துண்ணுக என்னும்
உவமையில் சுருதிப் பொருள்தனை நம்பா
    ஊமரோ டுடன்பயில் கொடியோன்
இவனெனக் கழித்தால் ஐயனே கதிவே
    றெனக்கிலை கலைசையாண் டகையே"

## 96. பொது (தனித் திருத்தாண்டகம்)

(யாதொரு தலத்தொடும் படாது தனித்து நிற்கும் திருத்தாண்டகம்)

ப.தொ.எண் : 309 பதிக எண் : 96

3025. ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டார்
அதிகைவீ ரட்டானம் ஆட்சி கொண்டார்
தாமரையோன் சிரமரிந்து கையிற் கொண்டார்
தலையதனிற் பலிகொண்டார் நிறைவாம் தன்மை
வாமனனார் மாகாயத் துதிரங் கொண்டார்
மானிடங்கொண் டார்வலங்கை மழுவாள் கொண்டார்
காமனையும் உடல்கொண்டார் கண்ணால் நோக்கிக்
கண்ணப்பர் பணியுங்கொள் கபாலி யாரே. 1

ஆமயம் – நோய். மாகாயம் – பேருடம்பு. உலகினை அளந்த உருவம்.

கண்ணப்பரது பூசையினையும் அன்புகருதி ஏற்றுக்கொண்ட காபாலியாராகிய சிவபெருமானார் நோய் தீர்த்து அடியேனை ஆளாகக் கொண்டவரும், அதிகை வீரட்டானத்திருந்து ஆட்சி செய்பவரும், பிரமனது சிரத்தைக் கொய்து கையிற் கொண்டவரும், அத்தலையோட்டில் பிச்சை ஏற்றவரும், வாமனனாகி வந்து மண் இரந்து திரிவிக்கிரமனாய் வளர்ந்து மூவுலகையும் அளந்து மிக்க செருக்குற்ற நிலையில் அப்பேருடம்பின் உதிரத்தை வெளிப்படுத்தி அவனை அழித்தவரும், மான்போன்ற உமையை இடப்பாகமாகக் கொண்டவரும், மழு ஆயுதத்தை வலக்கையில் ஏந்தியவரும், நெற்றிக் கண்ணைத் திறந்து பார்த்துக் காமனை அழித்தவரும் ஆவார்.

'கண்ணப்பர் பணியும் கொள்' என்றது, 'விதிமார்க்கத்திற்கு முற்றிலும் மாறான பூசையையும் அவர் அன்பு காரணமாகக் கொண்டருளினார்' என்றபடி. இதனால், அன்பு ஒன்றையே இறைவர் சிறப்பாக விரும்புவது என்பது குறித்தருளியவாறாம்.

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணோக்கம் ஆடாமோ.

(தி. 8 திருவா. திருத்தோணோக்கம். 3)

என ஆளுடைய அடிகளும் அருளிச் செய்தார். கண்ணப்பரைப் பாடாத சமயாசாரியாரே இல்லையென்று சொல்லலாம். "கண்ணப்பர் எப்படிப்பட்டவர்" என்பதை சிவபெருமானே சிவகோசாரியாருக்குச் சொன்னதாகத் தெய்வச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில் கீழ்க்காண் பாடல் மூலம் பதிவு செய்துள்ளார்.

"அவனுடைய வடிவு எல்லாம் நம்பக்கல் அன்புஎன்றும்
அவனுடைய அறிவு எல்லாம் நமை அறியும் அறிவுஎன்றும்
அவனுடைய செயல் எல்லாம் நமக்கு இனியவா என்றும்
அவனுடைய நிலை இவ்வாறு; அறிநீ" என்று அருள் செய்தார்.

3026. முப்புரிநூல் வரைமார்பின் முயங்கக் கொண்டார்
முதுகேழல் முளைமருப்புங் கொண்டார் பூணாச்
செப்புருவ முலைமலையாள் பாகங் கொண்டார்
செம்மேனி வெண்ணீறு திகழக் கொண்டார்
துப்புரவார் சுரிசங்கின் தோடு கொண்டார்
சுடர்முடிசூழ்ந் தடியமரர் தொழவுங் கொண்டார்
அப்பலிகொண் டாயிழையார் அன்புங் கொண்டார்
அடியேனை ஆளுடைய அடிக ளாரே. 2

அடியேனைத் தமக்கு ஆளாகவுடைய தலைவர் ஆகிய சிவபெருமானார் உத்தமவிலக்கண மாகிய கீற்றுப் பொருந்திய மார்பினிடத்து முப்புரிநூல் பொருந்தக் கொண்டவரும், பெரிய பன்றியின் முளை போன்ற கொம்பினைப் பூணாகக் கொண்டவரும், கிண்ணம் போன்ற அழகிய முலைகளையுடைய பார்வதியை இடப்பாகமாகக் கொண்டவரும் சிவந்த உடலில் வெண்ணீறு விளங்கக் கொண்டவரும், தூய்மை நிறைந்து முறுக்குண்ட சங்கினாலியன்ற தோட்டினைக் கொண்டவரும், அமரர் சூழ்ந்து சுடர் முடியால் தமது அடியைத் தொழக் கொண்டவரும், அந்நாளில் தாருகாவன முனிபத்தினியர் இட்ட பிச்சையோடு அவர்களது அன்பினையும் கொண்டவர் ஆவார்.

வரைமார்பு – கீற்றுப் பொருந்திய மார்பு. முயங்க – பொருந்த. முதுகேழல் – பெரிய பன்றி.

முளை மருப்பு – முளையாகிய கொம்பு

திருமால் வராக அவதாரங்கொண்டு பூமியைப் பிரளய வெள்ளத்தில் ஆழாதபடி கொம்பில் ஏற்று நிறுத்தியபின்னர்ச் செருக்குற்று உலகைத் துன்புறுத்தினமையால், சிவபிரான் அதனை அழித்து, அதன் கொம்பினை மார்பிற்கு அணிகலமாக அணிந்தனர் என்பது புராண வரலாறு. செப்பு – கிண்ணம். 'செம்மேனியின்கண்' என உருபு விரிக்க. துப்புரவு ஆர் – தூய்மை நிறைந்த. சுரி சங்கு – குவிந்த முகமுடைய சங்கு; குழையேயன்றித் தோடும் சங்கினால் ஆயது என்க. 'அமரர் சூழ்ந்து சுடர்முடியால் அடி தொழவும் கொண்டார்' என்க. பலி – பிச்சை; 'அப்பலி' என்றது, 'அந்நாளில் கொண்ட பிச்சை' என்றவாறு. 'ஆயிழையார்' என்றது, தாருகாவன இருடியர் பத்தினியரை.

3027. முடிகொண்டார் முளையிளவெண் டிங்க ளோடு
மூசுமிள நாகமுட னாகக் கொண்டார்
அடிகொண்டார் சிலம்பலம்பு கழலு மார்ப்ப
அடங்காத முயலகனை அடிக்கீழ்க் கொண்டார்
வடிகொண்டார்ந் திலங்குமழு வலங்கைக் கொண்டார்
மாலையிடப் பாகத்தே மருவக் கொண்டார்
துடிகொண்டார் கங்காளந் தோள்மேற் கொண்டார்
சூலைதீர்த் தடியேனை யாட்கொண் டாரே. 3

சடையை முடியாகக் கொண்டவரும், முதலில் காணப்படுகின்ற வெள்ளிய பிறைச் சந்திரனையும் படத்தால் மறைக்கும் இளம் பாம்பையும் உடன் உறையும்படி அம்முடிக்கண் கொண்டவரும், ஒலிக்கும் தன்மை வாய்ந்த சிலம்பினையும் கழலினையும் ஒலிக்கும்படி அடிக்கண் கொண்டவரும், கொடுமை குறையாத முயலகனை அடிக்கீழ்க் கொண்டவரும், கூர்மையைக் கொண்டு நிரம்ப இலங்குகின்ற மழுவினை வலக்கையிற் கொண்டவரும், திருமாலை இடப்பாகமாகப் பொருந்தக் கொண்டவரும், துடியைக் கையிற் கொண்டவரும், எலும்புக் கூட்டினைத் தோள் மேற்கொண்டவரும் ஆகிய சிவபெருமானாரே சூலை நோயைத் தீர்த்து அடியேனை ஆட்கொண்டவர் ஆவார்.

மூசுதல் – மொய்த்தல். பாம்பின் படத்தால் மறைத்தல்.
அலம்பு – ஒலிக்கின்ற. ஆர்ப்ப – ஒலிக்க.
கங்காளம் – பிரமவிட்டுணுக்களது எலும்புக்கூடு.

**3028.** பொக்கணமும் புலித்தோலும் புயத்திற்
கொண்டார்
பூதப் படைகள்புடை சூழக் கொண்டார்
அக்கினொடு படஅரவம் அரைமேற் கொண்டார்
அனைத்துலகும் படைத்தவையும் அடங்கக்
கொண்டார்
கொக்கிறகுங் கூவிளமுங் கொண்டை
கொண்டார்
கொடியானை யடலாழிக் கிரையாக்
கொண்டார்
செக்கர்நிறத் திருமேனி திகழக் கொண்டார்
செடியேனை யாட்கொண்ட சிவனார் தாமே.
4

திருநீற்றுப் பையினையும் புலித்தோலையும் புயத்தில் கொண்டவரும், பூதப் படைகள் தம்மைப் பக்கங்களில் சூடிக் கொண்டவரும், அக்குமணியையும் படநாகத்தையும் இடுப்பின்மேல் கொண்டவரும், தாம் படைத்தவையாகிய எல்லா உலகங்களையும் ஒடுங்குமாறு செய்தலைக் கொண்டவரும், கொக்கிறகினையும் வில்வத்தினையும் முடித்த சடையில் கொண்டவரும், கொடிய சலந்தராசுரனை ஆற்றல் மிக்க ஆழிக்கு இரையாகக் கொண்டவரும், செந்நிறத் திருமேனி விளங்கக் கொண்டவரும் ஆகிய சிவனாரே கீழ்மையேனை ஆட்கொண்டவர் ஆவார்.

புலித்தோலை இடையில் உடுத்தல் மட்டுமின்றி தோளிலும் இடப்படும். ஆடையாகவும் கொள்ளப்படும். அக்கு – எலும்பு. கொண்டை – கட்டிய சடைமுடி. கூவிளம் – வில்வம்.

**3029.** அந்தகனை அயிற்சூலத் தழுத்திக் கொண்டார்
அருமறையைத் தேர்க்குதிரை யாக்கிக்
கொண்டார்
சுந்தரனைத் துணைக்கவரி வீசக் கொண்டார்
சுடுகாடு நடமாடு மிடமாக் கொண்டார்
மந்தரம்நற் பொருசிலையா வளைத்துக்கொண்டார்
மாகாளன் வாசல்காப் பாகக் கொண்டார்
தந்திரமந் திரத்தரா யருளிக் கொண்டார்
சமண்தீர்த்தென் றன்றையாட்
கொண்டார் தாமே.
5

அந்தகாசுரனைக் கூரிய சூலத்தால் அழுத்தி அவன் உயிரைக் கொண்டவரும், திரிபுரம் அழிக்கச் சென்ற காலத்தில் உணர்தற்கரிய வேதத்தைத் தேர்க்குதிரையாக்கிக் கொண்டவரும், ஆலால சுந்தரனை இரட்டைக் கவரி வீசக் கொண்டவரும், சுடுகாட்டை நடனமாடுமிடமாகக் கொண்டவரும், மந்தர மலையைப் போரிடுதற்குரிய வில்லாக வளைத்துக் கொண்டவரும், மாகாளனை வாசல் காப்பாளனாகக் கொண்டவரும், தந்திர மந்திரங்களில் பொருந்தி நின்று அருளுதலைக் கொண்டவரும் ஆகிய சிவபெருமானார் சமணரிடமிருந்து என்னை நீக்கி என்னை ஆட்கொண்டவர் ஆவார்.

மந்திரம் – வேதம்
தந்திரம் – ஆகமம்

3030. பாரிடங்கள் பலகருவி பயிலக் கொண்டார்
பவள நிறங்கொண்டார் பளிங்குங் கொண்டார்
நீரடங்கு சடைமுடிமேல் நிலாவுங் கொண்டார்
நீலநிறங் கோலநிறை மிடற்றிற் கொண்டார்
வாரடங்கு வனமுலையார் மைய லாகி
வந்திட்ட பலி கொண்டார் வளையுங் கொண்டார்
ஊரடங்க வொற்றிநகர் பற்றிக் கொண் டார்
உடலுறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. 6

பூதகணங்கள் பல இசைக் கருவிகளையும் இயக்கக் கொண்டவரும், மேனியில் பவள நிறத்தையும் வெண்ணீற்றுப் பூச்சில் பளிங்கு நிறத்தையும் கொண்டவரும், கங்கை தங்கும் சடைமுடிமேல் பிறைச் சந்திரனையும் கொண்டவரும், அழகு நிறைந்த மிடற்றினில் நீலநிறம் கொண்டவரும், கச்சிற்குள் அடங்கும் அழகிய முலையாராகிய தாருகாவன முனிபத்தினியர் காதலால் மயக்கம் கொண்டு வந்திட்ட பிச்சையுடன் அவர்களுடைய கைவளையல்களையும் கொண்டவரும் எல்லா ஊர்களும் தம் ஆட்சியில் அடங்கியிருக்கத் திருஒற்றியூரைத் தமக்கு இடமாகப் பற்றிக் கொண்டவருமாகிய சிவபெருமானார் என் உடலிற் பொருந்திய சூலை நோயைத் தீர்த்து என்னை ஆட்கொண்டவர் ஆவார்.

3031. அணிதில்லை அம்பலமா டரங்காக் கொண்டார்
ஆலால வருநஞ்சம் அமுதாக் கொண்டார்
கணிவளர்தார்ப் பொன்னிதழிக் கமழ்தார் கொண்டார்
காதலார் கோடிகலந் திருக்கை கொண்டார்
மணிபணத்த அரவந்தோள் வளையாக் கொண்டார்
மால்விடைமேல் நெடுவீதி போதக் கொண்டார்
துணிபுலித்தோ லினையாடை யுடையாக் கொண்டார்
சூலங்கைக் கொண்டார் தொண்டெனைக் கொண் டாரே. 7

அழகிய தில்லை அம்பலத்தைத் தாம் ஆடும் அரங்காகக் கொண்டவரும், கடலில் வந்த ஆலால நஞ்சினை அமுதாகக் கொண்டவரும், அழகு மிகுகின்ற சரங்களாகிய பொன் போன்ற கொன்றை மலராலாகிய மணம் கமழ்கின்ற மாலையைக் கொண்டவரும், விருப்பம் நிறைந்த கோடி என்ற தலத்தில் கூடி இருத்தலைக் கொண்டவரும், மாணிக்கத்தோடு கூடிய படத்தையுடைய பாம்பினைத் தோள் வளையாகக் கொண்டவரும், மேற்கொண்டு நீண்ட வீதியில் வருவதற்குப் பெரிய இடபத்தைக் கொண்டவரும், உரித்த புலியினது தோலை உத்தரியமாகவும் உடையாகவும் கொண்டவரும், சூலத்தைக் கையில் கொண்டவருமாகிய சிவபெருமானார் என்னைத் தமக்கு அடிமையாகக் கொண்டவராவார்.

3032. படமூக்கப் பாம்பணையா னோடு வானோன்
பங்கயனென் றங்கவரைப் படைத்துக்
கொண்டார்
குடமூக்கிற் கீழ்க்கோட்டங் கோயில் கொண்டார்
கூற்றுதைத்தோர் வேதியனை உய்யக்
கொண்டார்
நெடுமூக்கிற் கரியினுரி மூடிக் கொண்டார்
நினையாத பாவிகளை நீங்கக் கொண்டார்
இடமாக்கி யிடைமருதுங் கொண்டார் பண்டே
யென்னைஇந்நாள் ஆட்கொண்ட இறைவர்
தாமே. **8**

படத்தையும் கொடுமைக் குணத்தையுமுடைய பாம்பைப் படுக்கையாகக் கொண்ட திருமாலையும் இந்திரனையும் பங்கயத்துப் பிரமனையும் தம் விருப்பப்படி படைத்துக் கொண்டவரும், குடமூக்கிற் கீழ்க் கோட்டத்தைக் கோயிலாகக் கொண்டவரும், கூற்றுவனை உதைத்து ஒப்பற்ற வேதியனாம் மார்க்கண்டேயனை வாழக் கொண்டவரும், துதிக்கையை உடைய யானையினது தோலினை உடலில் போர்த்திக் கொண்டவரும், தம்மை நினையாத பாவிகளை நீங்கக் கொண்டவரும், இடைமருதினைத் தமக்கு இடமாகக் கொண்டவரும் ஆகிய சிவபெருமானார் என்னை இந்நாள் ஆட்கொண்ட இறைவர் ஆவார்.

நெடுமூக்கின் – தும்பிக்கையையுடைய

3033. எச்சனிணத் தலைகொண்டார் பகன்கண்
கொண்டார்
இரவிகளி லொருவன்பல் லிறுத்துக்
கொண்டார்
மெச்சன்வியாத் திரன்தலையும் வேறாக்
கொண்டார்
விறலங்கி கரங்கொண்டார் வேள்வி காத்த
உச்சநமன் தாளறுத்தார் சந்திரனை யுதைத்தார்
உணர்விலாத் தக்கன்றன் வேள்வி யெல்லாம்
அச்சமெழ அழித்துக்கொண் டருளுஞ் செய்தார்
அடியேனை யாட்கொண்ட அமலர்தாமே.
**9**

வேள்வித் தெய்வத்தின் நிணம் பொருந்திய தலையைக் கொண்டவரும், சூரியர்களில் ஒருவனாகிய பகனது கண்ணைக் கொண்டவரும், சூரியர்களில் மற்றொரு வனுடைய பற்களை உடைத்து ஒறுத்தலைக் கொண்டவரும், தன்னையே மெச்சினவனாய், மாறான, வழியல்லாத வழியிற் சென்ற தக்கன் தலையை வேறாகக் கொண்டவரும், வெற்றியுடைய அக்கினி தேவனின் கரத்தைக் கொண்டவரும், வேள்வியைக் காத்து நின்ற வெற்றியில் உயர்ந்த இயமனுடைய தாளை அறுத்தவரும், சந்திரனை உதைத்தவரும், அறிவில்லாத தக்கனுடைய வேள்வி முழுவதையும் அதில் ஈடுபட்டார் அனைவருக்கும் அச்சம் உண்டாக அழித்துப் பின் அனைவருக்கும் அருள் செய்தவரும் ஆகிய சிவபெருமானார் அடியேனை ஆட்கொண்ட அமலர் ஆவார்.

மெச்சன் – தன்னை வியந்தவன். செருக்குக் கொண்டவன் – தக்கன்

யாத்திரிகன் – யாத்திரை செய்வோன் – வழிச் செல்வோன் – யாத்திரன்

வியாத்திரன் – மாறான (வழியல்லாத) வழியில் செல்பவன்.

விறல் – வெற்றி. அங்கி – அக்கினி

3034. சடையொன்றிற் கங்கையையுந் தரித்துக்
கொண்டார்
சாமத்தின் இசைவீணை தடவிக் கொண்டார்
உடையொன்றிற் புள்ளியுழைத் தோலுங்
கொண்டார்
உள்குவார் உள்ளத்தை ஒருக்கிக்
கொண்டார்
கடைமுன்றிற் பலிகொண்டார் கனலுங்
கொண்டார்
காபால வேடங் கருதிக் கொண்டார்
விடைவென்றிக் கொடியதனில் மேவக் கொண்டார்
வெந்துயரந் தீர்த்தென்னை யாட்கொண்
டாரே. 10

தன் சடைகள் பலவற்றுள் ஒன்றிடத்தே கங்கையை அடக்கித் தரித்துக் கொண்டவரும், வீணையைத் தடவிச் சாம வேதத்தின் இசையைக் கொண்டவரும், புள்ளி மான் தோலை உடை என்னும் ஒரு தன்மையில் ஏற்றுக் கொண்டவரும், தம்மை நினைவார் உள்ளத்தைத் தம்மிடத்து ஒருங்கி நிற்கும்படி செய்து கொண்டவரும், வீட்டு வாசல் தோறும் பிச்சை கொண்டவரும், கையில் கனல் கொண்டவரும், காபால வேடத்தை விரும்பிக் கொண்டவரும், இடபத்தைத் தன் வெற்றிக் கொடியில் பொருந்தக் கொண்டவரும் ஆகிய சிவபெருமானார் என் கொடிய துயரங்களைத் தீர்த்து என்னை ஆட்கொண்டவர் ஆவார்.

உழை – மான். உள்குவார் – நினைப்பார்

---

3035. குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனைவா சகனாக் கொண்டார்
சிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றல்நெடுந் தேரோனைப் பொன்றக்
கொண்டார்
பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங் கைக்கொண்டார் பயங்கள்
பண்ணி
இராவணனென் றவனைப்பேர் இயம்பக்
கொண்டார்
இடருறுநோய் தீர்த்தென்னை
யாட்கொண்டாரே. 11

குரா மலர் பாம்பு, பிறை இவற்றைச் சடைமேல் கொண்டவரும், நந்தீசனைக் குடமுழா வாசிப்பவனாகக் கொண்டவரும், சிரா மலையைத் தாம் சேர்வதற்குத் திருந்த அமைந்த இடமாகக் கொண்டவரும், தென்றலைத் தனது நெடிய தேராகக் கொண்ட மன்மதன் அழியச் சினத்தைக் கொண்டவரும், பராபரன் என்பது தம் பெயராக அமையக் கொண்டவரும், மேரு மலையை வில்லாகக் கையில் கொண்டவரும், பயங்கள் பலவற்றை உண்டாக்கி இராவணன் என்று பேர் இயம்ப அவனைக் கொண்டவரும் ஆகிய சிவபெருமானார் என் துன்பந்தரும் நோய்களைத் தீர்த்து என்னை ஆட்கொண்டவர் ஆவார்.

வாசகன் – வாசிப்பவர்

## 97. பொது (திருவினாத் திருத்தாண்டகம்)

**குறிப்பு :** இத்திருப்பதிகம், இறைவன் வெளிநிற்கக் கண்ட அடியவரை நோக்கி, அவ்விறைவனது அடையாளங்கள் பலவற்றையும் பற்றி வினாவுதலாக அருளிச் செய்யப்பட்டமையின், 'திருவினாத் திருத்தாண்டகம்' என்னும் பெயருடையது. இதனை, 'வினாவிடைத் திருத்தாண்டகம்' என்பாரும் உளர்.

அறியான் வினாவும், ஐய வினாவும், அறிபொருள் வினாவும்' என்னும் மூவகை வினாவுள் இஃது அறிபொருள் வினா. 'அறிவொப்புக் காண்டலும், அவனறிவு தான்கோடலும், மெய்ய வற்குக் காட்டலும்' என்னும் அதன்வகை மூன்றனுள், இஃது, அறி வொப்புக் காண்டல் என்க.

ப.தொ.எண் : 310 பதிக எண் : 97

3036. அண்டங் கடந்த சுவடு முண்டோ
அனலங்கை யேந்திய ஆட லுண்டோ
பண்டை யெழுவர் படியு முண்டோ
பாரிடங்கள் பலசூழப் போந்த துண்டோ
கண்ட மிறையே கறுத்த துண்டோ
கண்ணின்மேற் கண்ணொன் றுடைய துண்டோ
தொண்டர்கள் சூழத் தொடர்ச்சி யுண்டோ
சொல்லீரெம் பிரானாரைக் கண்ட வாறே.

1

அன்பர்களே! நீங்கள் கண்ட எம்பிரானிடம் அண்டம் கடந்து நின்றதற்கான அடையாளம் உண்டோ? அங்கையில் அனலேந்திய ஆடலுண்டோ? பண்டை முனிவர் எழுவர் பணி செய்யும் படியும் உண்டோ? பூதங்கள் பல சூழப் போதல் உண்டோ? கண்டம் சிறிதே கறுத்தது உண்டோ? கண்களுக்கு மேலாக நெற்றியில் கண் ஒன்று உண்டோ? தொண்டர் சூழும் அத்தொடர்ச்சி உண்டோ? நீங்கள் அவனைக் கண்டவண்ணம் எமக்குச் சொல்வீராக.

சுவடு – அடையாளம். இங்கு அயன் மால் தேட நீண்டு நின்ற ஒளியைக் குறித்தது.

பண்டெழுவர் – அகத்தியர், புலத்தியர், அங்கிரர், கவுதமர், வசிட்டர், காசிபர், மார்க்கண்டேயர்

படி – உருவம்

3037. எரிகின்ற இளஞாயி றன்ன மேனி
யிலங்கிழையோர் பாலுண்டோவெள்ளே றுண்டோ
விரிகின்ற பொறியரவத் தழலு முண்டோ
வேழத்தி னுரியுண்டோ வெண்ணூ லுண்டோ
வரிநின்ற பொறியரவச் சடையு முண்டோ
அச்சடைமேல் இளமதியம் வைத்த துண்டோ
சொரிகின்ற புனலுண்டோ சூலம் உண்டோ
சொல்லீரெம் பிரானாரைக் கண்ட வாறே.

2

அன்பர்களே! நீங்கள் கண்ட எம்பிரானிடம் இளஞாயிறு போன்று ஒளிவிடும் அவன் உடலின் ஒருபால் விளங்குகின்ற அணியினை உடைய உமாதேவி உண்டோ? வெள்ளிய இடபமுண்டோ? பரவுகின்ற தீப்பொறியும் ஒலியுமுடைய தழலுமுண்டோ? வேழத்தின் தோல் உண்டோ? வெண்ணூல் உண்டோ? வரியும் புள்ளியும் பொருந்திய பாம்பைக் கொண்ட சடையுமுண்டோ? அச்சடை மேல் வைக்கப்பட்ட இளமதியும் உண்டோ? சடையிலிருந்து ஒழுகும் நீர் உண்டோ? கையில் சூலம் உண்டோ? நீங்கள் அவனைக் கண்ட வண்ணம் எமக்குச் சொல்வீராக.

3038. நிலாமாலை செஞ்சடைமேல் வைத்த துண்டோ
நெற்றிமேற் கண்ணுண்டோ நீறு சாந்தோ
புலால்நாறு வெள்ளெலும்பு பூண்ட துண்டோ
பூதந்தற் சூழ்ந்தனவோ போரே றுண்டோ
கலாமாலை வேற்கண்ணாள் பாகத் துண்டோ
கார்க்கொன்றை மாலை கலந்த துண்டோ
சுலாமாலை யாடரவந் தோள்மே லுண்டோ
சொல்லீரெம் பிரானாரைக் கண்ட வாறே.

3

கலாமாலைக்கண் – போர் செய்யும் தன்மை வாய்ந்த கண்.

சுலாமாலை அரவம் – வளைந்த மாலை போலும் பாம்பு

அன்பர்களே! நீவிர் கண்ட எம்பெருமான் பிறைக் கண்ணியைச் செஞ்சடைமேல் வைத்த துண்டோ? அவனுக்கு நெற்றியில் கண்ணுண்டோ? பூசும் நீறுதான் அவனுக்குச் சந்தனமோ? புலால் நாறும் வெள்ளெலும்பு மாலையை அவன் பூண்டதுண்டோ? பூதங்கள் அவனைச் சூழ்ந்ததுண்டோ? போர்க் குணமுடைய இடபம் அருகில் உண்டோ? போர் செய்யும் தன்மை வாய்ந்தனவும், வேல் போன்றனவுமாகிய கண்களையுடைய உமையம்மை அவன் பாகமாகப் பொருந்தியதுண்டோ? கார்காலத்து மலரும் கொன்றை மாலை அவனுடலில் கலந்த துண்டோ? வளைந்தமாலை போல்வதும் படமெடுத்தாடுவதும் ஆகிய பாம்பு தோள்மேல் விளங்குதல் உண்டோ? அவனை நீங்கள் கண்டவண்ணம் எமக்குக் கூறுவீராக.

3039. பண்ணார்ந்த வீணை பயின்ற துண்டோ
பாரிடங்கள் பலசூழப் போந்த துண்டோ
உண்ணா வருநஞ்ச முண்ட துண்டோ
ஊழித்தீ யன்ன ஒளிதா னுண்டோ
கண்ணார் கழல்காலற் செற்ற துண்டோ
காமனையுங் கண்ணழலாற் காய்ந்த துண்டோ
எண்ணார் திரிபுரங்க ளெய்த துண்டோ
எவ்வகையெம் பிரானாரைக் கண்ட வாறே.

4

எண்ணார் – மதியாதவர்

அன்பர்காள்! நீவிர் கண்ட எம்பெருமான் பண் நிறைந்த வீணையை வாசித்துப் பழகியதுண்டோ? பூதங்கள் பல சூழ்ந்து வர வெளியே போந்ததுண்டோ? உண்ணற்காகாத கொடிய நஞ்சை உண்டதுண்டோ? ஊழித் தீப் போன்ற ஒளி அவன்பால் உண்டோ? கண், மகிழ்வால் நிறைதற்குக் காரணமான திருவடியால் அவன் காலனை உதைத்த துண்டோ? மன்மதனையும் நெற்றிக் கண்ணிடத்துத் தோன்றிய நெருப்பால் அவன் அழித்ததுண்டோ? பகைவருடைய திரிபுரங்கள் மேல் அவன் அம்பு எய்ததுண்டோ? நீங்கள் அவனை எவ்வகையில் கண்டீர்கள்?

3040. நீறுடைய திருமேனி பாக முண்டோ
நெற்றிமே லொற்றைக்கண் முற்று முண்டோ
கூறுடைய கொடுமழுவாள் கையி லுண்டோ
கொல்புலித்தோ லுடையுண்டோகொண்ட வேடம்
ஆறுடைய சடையுண்டோ அரவ முண்டோ
அதனருகே பிறையுண்டோ அளவி லாத
ஏறுடைய கொடியுண்டோ இலய முண்டோ
எவ்வகையெம் பிரானாரைக் கண்ட வாறே.
5

அன்பர்காள்! நீவிர் கண்ட எம்பெருமானுக்குத் திருமேனியில் நீறு பூசிய பாகமுண்டோ? நெற்றியில் நெருப்புமிகும் ஒரு கண்ணுமுண்டோ? கூறுபடுத்துங்கொடிய மழுவாயுதம் கையிலுண்டோ? கொல்லும் புலியது தோலாகிய உடையுண்டோ? கங்கையைத் தாங்கும் சடையுண்டோ? அச்சடையிடத்துப் பாம்பு உண்டோ? அப்பாம்பின் அருகே பிறையுண்டோ? பெருமை அளவிட முடியாத இடபக் கொடியுண்டோ? கூத்துமுண்டோ? நீங்கள் அவன் கொண்ட எவ்வகை வேடத்தில் அவனைக் கண்டீர்கள்?

இலயம் – கூத்து. முதல் ஐந்து பாட்டுக்கள் வினாவாகவும் பின் ஆறு பாட்டுக்கள் விடையாகவும் அமைந்துள்ளதால் இது வினா விடை திருத்தாண்டகம் என்றும் சொல்லப்படும்.

3041. பட்டமுந் தோடுமோர் பாகங் கண்டேன்
பார்திகழப் பலிதிரிந்து போதக் கண்டேன்
கொட்டிநின் றிலயங்க ளாடக் கண்டேன்
குழைகாதிற் பிறைசென்னி யிலங்கக் கண்டேன்
கட்டங்கக் கொடிதிண்டோள் ஆடக் கண்டேன்
கனமழுவாள் வலங்கையில் இலங்கக் கண்டேன்
சிட்டனைத் திருவால வாயிற் கண்டேன்
தேவனைக் கனவில்நான் கண்ட வாறே.
6

அன்பர்காள்! சிவபெருமானை நான் கனவில் கண்டவாறே நனவிலும் அவன் நெற்றிப் பட்டமும் செவித்தோடும் ஓரொருபாகத்தில் விளங்கக் கண்டேன். நிலம் அழகு பெறுமாறு பிச்சை பெறப் பல இடங்களிலும் திரிந்தலையக் கண்டேன். வாச்சியங்களைப் பூதகணங்கள் இயம்பப் பலவகைக் கூத்துக்களை ஆடக் கண்டேன். காதிற்குழையும் சென்னியில் பிறையும் விளங்கக் கண்டேன். உயர்த்திய மழுக்கொடி திண்டோளை ஒட்டி ஆடக் கண்டேன். வலிமைமிக்க மழுவாயுதம் வலக்கையில் திகழக் கண்டேன். மேலான அவனைத் திருவாலவாயிற் நான் இவ்வாறு கண்டேன்.

பலி திரிதல் பார் திகழ. தனது செலவினால் நிலம் அழகு பெற என்றதேயன்றி, அதன்கண் வாழ்வார் மெய்யுணர்வு பெற்று விளங்க என்றதுமாம்.

சிட்டன் – மேலானவன்.

3042. அலைத்தோடு புனற்கங்கை சடையிற் கண்டேன்
அலர்கொன்றைத் தாரணிந்த வாறு
கண்டேன்
பலிக்கோடித் திரிவார்கைப் பாம்பு கண்டேன்
பழனம் புகுவாரைப் பகலே கண்டேன்
கலிக்கச்சி மேற்றளியே யிருக்கக் கண்டேன்
கறைமிடறுங் கண்டேன் கனலுங் கண்டேன்
வலித்துடுத்த மான்தோல் அரையிற் கண்டேன்
மறைவல்ல மாதவனைக் கண்ட வாறே.
7

மறைவல்லவனும், மாதவத்தவனும் ஆகிய சிவபெருமானுடைய சடையில் அலைவீசி ஓடும் நீர்ப் பெருக்கையுடைய கங்கையைக் கண்டேன். கொன்றை மலரால் ஆன மாலையை அவன் அணிந்த தன்மையைக் கண்டேன். பிச்சைக்கு ஓடித்திரியும் அவன் கையில் பாம்பைக் கண்டேன். பகற்பொழுதில் பழனத் திருப்பதியில் அவன் சென்று புகுதலைக் கண்டேன். அவன் ஆரவாரம் மிக்க கச்சி மேற்றளியில் மேவி இருக்கக் கண்டேன். அவனது கறைபொருந்திய மிடற்றைக் கண்டேன்; கையில் கனலும் கண்டேன். அரையில் இறுக்கி உடுத்த மான் தோலைக் கண்டேன். அவனை நான் கண்டவாறு இது.

உண்டோ ? உண்டோ ? என்று இத்திருப்பதிகத்தின் முன் பாடல்களில் கேட்கப்பட்ட வினாக்களுக்கு இவை உண்டு உண்டு என விடை கூறுமுகத்தால் இப்பாடல் அமைந்துள்ளது.

---

3043. நீறேறு திருமேனி நிகழக் கண்டேன்
நீள்சடைமேல் நிறைகங்கை யேறக் கண்டேன்
கூறேறு கொடுமழுவாள் கொள்ளக் கண்டேன்
கொடுகொட்டி கையலகு கையிற் கண்டேன்
ஆறேறு சென்னியணி மதியுங் கண்டேன்
அடியார்கட் காரமுத மாகக் கண்டேன்
ஏறேறி யிந்நெறியே போதக் கண்டேன்
இவ்வகையெம் பெருமானைக் கண்ட
வாறே. 8

அன்பர்காள்! எம்பெருமான் திருநீறு திகழும் திருமேனியுடன் உலவக் கண்டேன். அவன் நீண்ட சடைமேல் நீர்நிறை கங்கை பொருந்தக் கண்டேன். கூறுபடுத்தலைப் பொருந்திய கொடிய மழுவாயுதத்தை அவன் கொள்ளக் கண்டேன். கொடுகொட்டி என்னும் வாச்சியத்தையும் கையலகு என்னும் ஆயுதத்தையும் அவன் கையிற் கண்டேன். ஆறு பொருந்திய அவன் தலையில் அழகிய மதியையும் கண்டேன். அவன் அடியார்க்கு ஆரமுதம் போன்று இன்பஞ் செய்தலைக் கண்டேன். அவன் இடபவாகனமேறி இவ்வழியே வரக் கண்டேன். அவனை இவ்வகையில் யான் கண்டேன்.

அலகு – ஒரு வகை வாள்

**3044.** விரையுண்ட வெண்ணீறு தானு முண்டு
வெண்டலைகை யுண்டொருகை வீணை
யுண்டு
சுரையுண்டு சூடும் பிறையொன் றுண்டு
சூலமுந் தண்டுஞ் சுமந்த துண்டு
அரையுண்ட கோவண ஆடை யுண்டு
வலிக்கோலுந் தோலு மழகா வுண்டு
**இரையுண் டறியாத பாம்பு முண்டு**
இமையோர் பெருமா னிலாத தென்னே.
9

சுரை – உறை. சடைமுடியானது சுரை போல உள்வாங்கும்படி சூடும் பிறை.

வலிக்கோல் – ஊன்றுகோல்.

இறைவனுக்கு அணியாய பாம்புகள் பசி, பிணி, மூப்பு முதலியன இன்றி என்றும் ஒரு பெற்றியனவாய் இருத்தலின் "இரை உண்டு அறியாத பாம்பு" என்று அருளினார்.

அன்பர்காள்! இமையோர் பெருமானுடலில் மணமுடைய வெண்ணீறு உண்டு. அவன் கைகளில் ஒன்றில் வெண்டலையும் ஒன்றில் வீணையுமுண்டு. சுரைபோன்று தோன்றும் சடை முடியுண்டு அவனுக்கு, அதில் அவன் சூடும் பிறை ஒன்றுண்டு. அவன் சூலாயுதத்தையும் தண்டாயுதத்தையும் சுமந்ததுண்டு. அவனுக்கு இடுப்பில் கட்டிய கோவண ஆடையுண்டு. அவன்பால் ஊன்றுகோலும் போர்க்குந்தோலும் அழகாக உண்டு. அவனிடத்து இருக்கும் பாம்பு பசி இல்லாததாகலின் இரையுண்டறியாதது. அவனிடம் எல்லாம் உள. இவ்வாறு அவனை நான் கண்டேன்.

**3045.** மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி
னல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்
ஒரூர னல்லன் ஒருவம னில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
**அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்**
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ
ணாதே. 10

மேலைத் திருத்தாண்டகங்களிலும், இனிவரும் திருத்தாண்டகத்திலும், பலவாற்றாலும், வினாவிய இயல்புகள் யாவும் அவனருள் பெற்றார்க்கன்றிக் காணவாரா என்பதனை அறிவுறுத்தும் முகத்தால், அப்பேறு வாய்க்கப்பெற்ற தாமும், பிற அடியவர்களும் ஆகியோரது நிலையை நினைந்து மகிழ்ந்தருளிய வாறாயிற்று.

இறைவன், மைபூசிய கண்ணாளாம் உமையம்மையும் தானுமாகிக் கச்சி மயானத்து வாழ்பவனும் நீண்ட சடையினனும் ஆவான் என்று கூறின் அவன் அவ்வளவே ஆம் தன்மையன் அல்லன். அவன் எப்பொருளையும் தன் பொருட்டு ஏற்க இசைதலை உடையான் அல்லன். உலகப் பொருள்களில் ஒருவன் அல்லன். ஒரூர்க்கே உரியனல்லன். யாதொரு பொருளும் தனக்கு உவமையாதல் இல்லாதவன். அதனால் அவனுடைய அந்தத் தன்மையையும் அந்த நிறத்தையும் அந்த வடிவத்தையும் **அவன் திருவருளையே கண்ணாகப் பெற்றுக் காணலாமேயல்லாமல்** மற்றைப் பொருள்கள் போலப் பிறரொருவர் இன்னவகையுட்பட்டவன், இன்ன நிறத்தையுடையவன், இன்ன வடிவத்தை உடையவன் என்று இவனைச் சொல்லோவிய மாகவோ எழுத்தோவியமாகவோ எழுதிக் காட்டல் இயலாது.

3046. பொன்னொத்த மேனிமேற் பொடியுங் கண்டேன்
புலித்தோ லுடைகண்டேன் புணரத் தன்மேல்
மின்னொத்த நுண்ணிடையாள் பாகங் கண்டேன்
மிளிர்வதொரு பாம்பும் அரைமேற் கண்டேன்
அன்னத்தே ரூர்ந்த அரக்கன் தன்னை
அலற அடர்த்திட்ட அடியுங் கண்டேன்
சின்ன மலர்க்கொன்றைக் கண்ணி கண்டேன்
சிவனைநான் சிந்தையுட் கண்ட வாறே. 11

அன்பர்காள்! நான் சிவபெருமானை என் சிந்தனையுட் கண்டவாறே என் கண்ணிலும் அவன் பொன்னார் மேனி மேல் திருநீற்றுப் பொடியும் கண்டேன்; புலித்தோலாகிய உடை கண்டேன். தன்னிடப் பாகத்தில் மின்னலைப் போன்ற நுண்ணிய இடையை உடைய உமையாள் பொருந்தக் கண்டேன். ஒளியுடைப் பாம்பு ஒன்றையும் அரைமேற்கண்டேன். அன்னம் போன்ற வெள்ளிய தேரினை ஊர்ந்த அரக்கன் அலற அவனை நசுக்கிய திருவடியையும் கண்டேன். அடையாளப் பூவாகிய கொன்றை மலராலான தலை மாலையையும் கண்டேன். நீவிர் அவனைக் கண்டவாறு எங்ஙனம்?

## 98. பொது (மறுமாற்றத் திருத்தாண்டகம்)

பெருமான் தூண்டு தவ விளக்கனையாராகிய திலகவதியார் வேண்டுகோளின் வண்ணம், சமண மதத்தைப் பற்றிநின்ற சுவாமிகளுக்குச் சூலைநோய் கொடுத்து ஆட்கொண்ட செய்தியறிந்த சமணர், தம் சமயம் வீழ்ந்தது என மருண்டனர். இத்திறம் அறிந்திடின் வேந்தனும் வெகுண்டு சைவனாகி நம் விருத்தியும் தவிர்க்கும் என்றஞ்சி அரசனிடம் சென்று, 'தரும சேனர் பிணியுற்றாராய்ச் சடையானுக்காளாய் நின்சமயம் அழித்தார், அவரை அலைத்தல் வேண்டும்' என்றனர். பல்லவனும் மந்திரிகளை நோக்கி 'பொருள் கொண்டு விடாது தருமசேனரைக் கொண்டு வாரும்' எனப் புகன்றான். அரசன் பணியைச் சிரமேற்கொண்ட அமைச்சர் அதிகைப்பதி சென்று அரசன் ஆணையைத் தெரிவித்தபொழுது அதற்கு மறுமொழியாகப் பாடியருளியது இத்திருப்பதிகம் (தி.12 திருநாவு. புரா. 93)

குறிப்பு : இத்திருப்பதிகத்தினால், சிவபிரானுக்கு அடியவராயினாரது பெருமை இனிது விளங்கும்.

ப.தொ.எண் : 311 பதிக எண் : 98

3047. நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடிஇணையே குறுகி
னோமே. 1

குடி – அடிமை. நடலை – பொய்.
அச்சம் இல்லாதார்க்குப் பொய்யும் இல்லை.
ஏமாப்போம் – களிப்புற்று இருப்போம்.
குறுகினோம் – அடைந்தோம்.

நாம் வேறு யார்க்கும் அடிமை அல்லோம்; இயமனை அஞ்சோம்; நரகத்தில் புக்கு இடர்ப்படோம்; பொய்யும் இல்லோம்; என்றும் களிப்புற்றிருப்போம்; பிணியாவது இஃது என அறியோம்; வேறு யாரையும் பணிவோம் அல்லோம்; எந்நாளும் எமக்குள்ளது இன்பமே அன்றித் துன்பமில்லை. தான் யார்க்கும் அடிமையாகாத தன்மையனும், நல்ல சங்க வெண்குழையை ஒரு காதில் உடைய கோமானும் ஆகிய சங்கரனுக்கு நாம் என்றும் மீளாத அடிமையாய் அப்பொழுது அலர்ந்த மலர் போன்ற அவன் உபய சேவடிகளையே அடைக்கலமாக அடைந்தோம் ஆகலின்.

**3048.** அகலிடமே இடமாக ஊர்கள் தோறும்
அட்டுண்பார் இட்டுண்பார் விலக்கார் ஐயம்
புகலிடமாம் அம்பலங்கள் பூமி தேவி
யுடன்கிடந்தாற் புரட்டாள்பொய் யன்று மெய்யே
இகலுடைய விடையுடையான் ஏன்று கொண்டான்
இனியேதுங் குறைவிலோம் இடர்கள் தீர்ந்தோம்
துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லும்
சொற்கேட்கக் கடவோமா துரிசற் றோமே. 2

அட்டு உண்பார் – இல்லத்தில் சமைத்து உண்பவர். இல்வாழ்வார். இவரது தலையாய அறம் விருந்தோம்பலும், ஈகையும் ஆகும் – ஐயம் விலக்கார். ஐயம் – பிச்சை. அம்பலங்கள் – பொது இடங்கள். துரிசு – குற்றம். இகலுடைய விடை – போர்விடை.

பரந்த பூமிமுழுதும் எமக்கு இடமாகும். ஊர்கள் தோறும் தம் உணவை அட்டுண்ணும் இல்லறத்தான் அதனைப் பிறர்க்கு இட்டு அல்லது உண்ணாராதலின் எமக்கு உணவுப் பிச்சையிடுதலை அவர்கள் ஒருபோதும் விலக்கார். அம்பலங்கள் யாம் தங்கும் இடங்களாகும். யாம் தன்னுடன் கிடந்தால் பூமிதேவி எம்மைப் புரட்டி எறியாள். இது பொய்யன்று, மெய்யே. போர்விடையை ஊர்தியாக உடைய சிவபெருமானார் எம்மைத் தம் அடிமையாக ஏற்றுக் கொண்டார். அதனால் இனியாம் ஏதும் குறைவில்லேம்; துன்பமாயின எல்லாம் தீர்ந்தேம். குற்றமற்றேம் ஆயின் யாம் சிறந்த உடைகளை உடுத்துப் பொன்னா பரணங்களைப் பூண்டு திரியும் அரசர் சொல்லும் சொல்லை ஏற்க வேண்டிய கடப்பாடு உடையேம் அல்லேம்.

---

**3049.** வாராண்ட கொங்கையர்சேர் மனையிற் சேரோம்
மாதேவா மாதேவா என்று வாழ்த்தி
நீராண்ட புரோதாயம் ஆடப் பெற்றோம்
நீறணியுங் கோலமே நிகழப் பெற்றோம்
காராண்ட மழைபோலக் கண்ணீர் சோரக்
கன்மனமே நன்மனமாய்க் கரையப் பெற்றோம்
பாராண்டு பகடேறி வருவார் சொல்லும்
பணிகேட்கக் கடவோமோ பற்றற் றோமே. 3

புரோதாயம் – பூர்வோதயம் என்பதன் திரிபு – பகலவன் தோன்றுவதற்கு முன்னே என்பது பொருள்.

விடியற்காலை. பகடு – யானை.

"முந்திவந்து புரோதாய மூழ்கி" – திருஞானசம்பந்தர்

கச்சணிந்த கொங்கை மாதருடன் சேர்ந்து வாழும் இல்வாழ்க்கையில் பொருந்தோம். மகாதேவா மகாதேவா என்று பலகாலும் அவனை வாழ்த்தி விடியற்காலத்து நீராடப் பெற்றோம். திருநீறணியும் சைவத் திருக்கோலமே எம்பால் நிலவப் பெற்றோம். பண்டு கல்லாய்த் திகழ்ந்த மனம் கரிய மேகம் பொழியும் மழை போலக் கண்ணீர் சோருமாறு நன்மனமாய்க் கரையப் பெற்றோம். ஆகவே உலகியற் பொருளில் பற்றற்றோமாகிய யாம் பூமி முழுவதையும் ஆண்டு ஆனை ஏறி வரும் அரசர் ஏவும் பணிகளை ஏற்க வேண்டிய கடப்பாட்டினேம் அல்லேம்.

3050. உறவாவார் உருத்திரபல் கணத்தி னோர்கள்
உடுப்பனகோ வணத்தொடுகீ ளுளவா மன்றே
செருவாருஞ் செறமாட்டார் தீமை தானும்
நன்மையாய்ச் சிறப்பதே பிறப்பில் செல்லோம்
நறவார்பொன் னிதழிநறுந் தாரோன் சீரார்
நமச்சிவா யச்சொல்ல வல்லோம் நாவால்
சுறவாருங் கொடியானைப் பொடியாக் கண்ட
சுடர்நயனச் சோதியையே தொடர்வுற் றோமே. 4

சிவவேடத்தையுடைய சிவனடியார்கள் எம் உறவினர் ஆவர். கோவணமும் கீளும் யாம் உடுப்பனவாய் உள்ளன. ஆகவே பகைவரும் எம்மை வெகுளார். தேன் நிறைந்து பொன் போன்று திகழும் நல்ல கொன்றை மாலை யணிந்த புகழுடைய சிவபெருமானுடைய நமச்சிவாய மந்திரத்தை நாவால் சொல்ல வல்லேமாய்ச் சுறவுக்கொடியானாகிய மன்மதனைப் பொடியாக அக்கினி நேத்திரத்தை விழித்த சோதிவடிவினனையே தொடர்வுற்றே மாதலின், தீமை, நன்மையாய்ச் சிறக்கப் பிறப்பிற் செல்லேம் ஆயினேம்.

உருத்திர பல்கணத்தர் – சிவவேடத்தையுடைய சிவனடியார்கள். செறுவார் – வெகுள்வார்; பகைவர். தீமை தீமையாய் – வாராமை மேலும் அதுதானே, நன்மையாய் சிறந்து நிற்கும். சுறவு – மீன்.

சுடர் நயனம் – அக்கினி நேத்திரம். "சோதியையே" என்னும் தேற்றேகாரம், அவன் தொடர்தற்கு அரியனாதலை விளக்கி நின்றது. உறவும், உடுப்பனவும், வேறாய் உலகியலின் நீங்கினமையின் பகைவர் பகைமையொழிதலும், நமச்சிவாயச் சொல்லிச் சுடர் நயனச் சோதியைத் தொடர்வுற்றதனால், தீமை நன்மையாதலும் பிறப்பிற் செல்லாமையும் உளவாயின என்க.

3051. என்றும்நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம்
இருநிலத்தில் எமக்கெதிரா வாரு மில்லை
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோம்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்
ஒன்றினாற் குறையுடையோ மல்லோ மன்றே
உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனார்
பொன்றினார் தலைமாலை யணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண்ணியத்து ளோமே. 5

சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோமாய், இறந்த பிரமவிட்டுணுக்களுடைய தலைகளை மாலையாகக் கோத்து அணிந்த தலையை யுடைய புண்ணியனை நண்ணிய புண்ணியத்து உள்ளோமாதலின் யாவர்க்கும் யாம் என்றும் பின்வாங்குவோம் அல்லோம். இப்பரந்த பூமியில் எமக்கு எதிராவார் யாரும் இல்லை. யாம் தேடிச்சென்று சிறு தெய்வங்களைச் சேர்ந்து தொழுவோம் அல்லோம். யாம் ஒன்றினாலும் குறையுடையேம் அல்லோம். அதனால் மிக்க பிணிகள் எம்மைத் துன்புறுத்தலைவிட்டு ஓடிப் போயின.

இடைதல் – பின்வாங்குதல். எதிராவார் – இணையாவார். செறல் – வருத்துதல். பொன்றினார் – இறந்தவர்

3052. மூவுருவின் முதலுருவாய் இருநான் கான
மூர்த்தியே யென்றுமுப் பத்து மூவர்
தேவர்களும் மிக்கோருஞ் சிறந்து வாழ்த்தும்
செம்பவளத் திருமேனிச் சிவனே யென்னும்
நாவுடையார் நமையாள வுடையா ரன்றே
நாவலந்தீ வகத்தினுக்கு நாத ரான
காவலரே யேவி விடுத்தா ரேனுங்
கடவமல்லோம் கடுமையொடு களவற்
றோமே. 6

"அயன், அரி, அரன் என்னும் மூவுருவிற்கும் முதலுருவாபவனே! அட்டமூர்த்தியே! முப்பத்து மூவர் தேவர்களும் அவர்களின் மிக்க இருடியரும் எக்காலத்தும் மகிழ்ச்சி மிக்கு வாழ்த்தும் செம்பவளத் திருமேனியுடைய சிவனே" என்று போற்றும் நாவுடையாரே நம்மை அடிமை கொண்டு ஆள உடையாராவார். அதனால் கடிதாய செயலும் களவும் அற்றோமாகிய யாம் நாவலந் தீவு முழுவதற்கும் தலைவரான அரசரே எம்மை அழைத்து வருமாறு தம் ஏவலரை ஏவி விடுத்தாராயினும் அவர் ஆணை வழி நிற்கும் கடப்பாட்டினேம் அல்லோம்.

3053. நிற்பனவும் நடப்பனவும் நிலனும் நீரும்
நெருப்பினொடு காற்றாகி நெடுவா னாகி
அற்பமொடு பெருமையுமாய் அருமை யாகி
அன்புடையார்க் கெளிமையதாய் அளக்க
லாகாத்
தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானும் யானும்
ஆகின்ற தன்மையனை நன்மை யோடும்
பொற்புடைய பேசக் கடவோம் பேயர்
பேசுவன பேசுதுமே பிழையற் றோமே. 7

நிற்பனவும், நடப்பனவும், நிலனும், நீரும், நெருப்பும், காற்று, நெடுவானும், புன்மையதும், பெரியதும், அரியதும், அன்புடையார்க் கெளியதும், அளக்கலாகாத் தற்பரமும், சதாசிவமும் ஆகித் தானும் யானும் ஆகின்ற தன்மையுடைய சிவபெருமானை அவன் நன்மைகளையும், பொலிவுடைய தன்மைகளையும் புகழ்ந்து பேசக் கடவோம்; அதனால் பிழையற்றோம். அரசனுக்கு வணங்கி நின்று அவனுக்கேற்பப் பேயர் பேசுமாறு போல யாம் பேசுவமோ?

நிற்பன – அசரம். நடப்பன – சரம். அற்பம் – சிறுமை.
பரம் – மேலான பொருள். தத்பரம் – உயிருக்கு மேம்பட்டது.

3054. ஈசனையெவ் வுலகினுக்கும் இறைவன் தன்னை
இமையவர்தம் பெருமானை எரியாய் மிக்க
தேசனைச் செம்மேனி வெண்ணீற் றானைச்
சிலம்பரையன் பொற்பாவை நலஞ்செய்
கின்ற
நேசனை நித்தலும் நினையப் பெற்றோம்
நின்றுண்பார் எம்மை நினையச் சொன்ன
வாசக மெல்லாம் மறந்தோ மன்றே
வந்தீரார் மன்னவனா வான்றா னாரே. 8

ஈசன் – ஆள்பவன். இறைவன் – எங்கும் நிறைந்திருப்பவன். தேசன் – ஒளியை உடையவன்.
சிலம்பரையன் – மலையரசன்.
வாசகம் – உறுதி போலும் சொல்

எவ்வுலகினுக்கும் ஈசனும், இறைவனும், தேவர்கள் தலைவனும், எரிபோன்று மிக்கு ஒளிரும் தேசனும், செம்மேனியிடத்து வெண்ணீற்றானும், மலையரையன் பொற்பாவை தன்னைக் காதலிக்க, தானும் அவளைக் காதலிக்கும் நேசனும் ஆகிய சிவபெருமானைத் தினமும் நினையப் பெற்றோம். அதனால் நின்றுண்ணும் சமணர் என்றும் மறவாதிருக்கும்படி எமக்குச் சொன்ன உறுதிபோலும் சொற்களை எல்லாம் யாம் மறந்தொழிந்தோம். இந்நிலையில் என்னிடம் வந்த நீர் யார்? மன்னன் ஆவான் தானும் யாரே?

3055. சடையுடையான் சங்கக் குழையோர் காதன்
சாம்பலும் பாம்பும் அணிந்த மேனி
விடையுடையான் வேங்கை அதள் மேலாடை
வெள்ளிபோற் புள்ளியுழை மான்தோல்
சார்ந்த
உடையுடையான் நம்மை யுடையான் கண்டீர்
உம்மோடு மற்று முளராய் நின்ற
படையுடையான் பணிகேட்கும் பணியோ மல்லோம்
பாசமற வீசும் படியோம் நாமே. 9

உழை – மான்களுக்குள் ஓர் இனம்
படியோம் – நிலையினை உடையோம்

சடையுடையானும் ஒரு காதில் விளங்கும் சங்கக் குழையானும், சாம்பலைப் பூசிய பாம்பை அணிந்த மேனியானும், விடையுடையானும், புலித்தோலாம் மேலாடையானும், வெள்ளி போல் திகழும் புள்ளிகளையுடைய உழைமானின் தோலால் அமைந்த உடை உடையானும் ஆகிய சிவபெருமானே நம்மை அடிமையாக உடையான் ஆவான். அதனால் பாசத்தை முழுதும் உதறியெறியும் நிலையினை உடையோம். ஆகவே உம்மையும் மற்றுமுள்ள படை வீரர்களையுமுடைய அரசனுடைய ஆணைகேட்கும் தொழில் உடையோம் அல்லோம்.

3056. நாவார நம்பனையே பாடப் பெற்றோம்
நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்
ஆவாஎன் றெமையாள்வான் அமரர் நாதன்
அயனொடுமாற் கறிவரிய அனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான் தென்திசைக்கோன்
தானே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலும்
குணமாகக் கொள்ளோம்எண் குணத்து
ளோமே. 10

சிவபிரானை அடைந்தோர் அவனது எண் குணங்களையும் பெறுவர்.

நாவிடத்து இன்பம் நிறையச் சிவபெருமானையே பாடப் பெற்றோம். அதனால் உடை உடாத சமணர் எம்மை விரும்பாது விலகப் பெற்றோம். அமரர் தலைவனாகிய சிவபெருமான் மனமிரங்கி எமை ஆள்வான். நான்முகனும் திருமாலும் அறிதற்கு அரிய அனற்பிழம்பாய் நீண்டவனும் தேவர்க்குத் தேவனுமாகிய சிவபெருமான் எம் சிந்தையில் மன்னி நின்றான். அதனால் அவனுக்குரிய எண் குணங்களை உடையேமாயினேம். ஆகவே இயமனே வந்து தன் தலைமையை உரைத்து எம்மைக் குற்றேவல் செய்க என்றாலும் அதனை எமக்குரிய நெறியாகக் கொள்ளோம்.



## 99. திருப்புகலூர்

சுவாமிகள் பாண்டி நாட்டுப் பயணத்திற்குப் பின் திருப்புகலூரில் தங்கியிருந்து பணி செய்த நாட்களில், பெருமான் வருவித்துக் காட்டிய பொன், மணி முதலியவற்றையும், அரம்பையரையும் அகற்றிய பின்னர், "புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்" என்றருளிச் செய்து இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

ப.தொ.எண் : 312 பதிக எண் : 99

3057. எண்ணுகேன் என் சொல்லி எண்ணு கேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 1

புண்ணியா, அழகிய புகலூர் மேவிய புண்ணியனே, நினையுந்தன்மை உடையேனாகிய நான் எம்பெருமானாகிய நினது திருவடியை விரும்பி நினையின் அல்லது வேறு எதனை விரும்பி நினைவேன்? நினது கழலடியையே கைதொழுது காணின் அல்லது வேறு காட்சியில்லேன்; மற்றொரு பற்றுக்கோடும் இல்லேன். யான் வாழ்வதற்குப் பொருந்திய உறையுளாகிய இவ்வுடம்பிலே ஒன்பது வாசல் வைத்தாய். அவையாவும் ஒரு சேர அடைக்கப்படும் காலத்து மேற்குறித்தவாறு உன்னையே நினைதலையும் காணுதலையும் செய்யமாட்டேன். ஆதலின் அக்காலம் வாராதபடி இப்பொழுதே உன் திருவடிக்கே வருகின்றேன். என்னை ஏற்றுக் கொண்டருள்வாயாக.

இரண்டாவது பாடல் தவிர அனைத்துப் பாடல்களிலும் பதிக மகுடம் "பூம்புகலூர் மேவிய புண்ணியனே" என்பதாகும்.

| | |
|---|---|
| **3058.** அங்கமே பூண்டாய் அனலா டினாய்<br>ஆதிரையாய் ஆல்நிழலாய் ஆனே றூர்ந்தாய்<br>பங்கமொன் றில்லாத படர்சடை யினாய்<br>பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்<br>சங்கையொன் றின்றியே தேவர் வேண்டச்<br>சமுத்திரத்தின் நஞ்சுண்டு <u>சாவா மூவாச்</u><br><u>சிங்கமே உன்னடிக்கே போது கின்றேன்</u><br>திருப்புகலூர் மேவிய தேவ தேவே. 2 | திருப்புகலூர் மேவிய தேவ தேவே! எலும்புகளை அணியாகப் பூண்டவனே, அனலாடீ, ஆதிரை நாண்மீனை உடையவனே, கல்லால மர நிழலமர்ந்தோனே, ஆனேற்றை ஊர்ந்தவனே, குறை ஒன்றுமில்லாத பரவிய சடையினனே, பாம்பொடு திங்களை வைத்து அவற்றின் பகை தீர்த்தாண்டவனே, தேவர் வேண்டப் பிறிது எண்ணம் ஒன்று இன்றியே சமுத்திரத்தில் தோன்றிய நஞ்சினையுண்டு சாதலும் மூத்தலும் இல்லாத வலிய சிங்கமே! உன் திருவடிக்கே வருகின்றேன். என்னை ஏற்றுக் கொண்டருள்வாயாக. |
| **3059.** பையரவக் கச்சையாய் பால்வெண் ணீற்றாய்<br>பளிக்குக் குழையினாய் பண்ணா ரின்சொல்<br>மைவிரவு கண்ணாளைப் பாகங் கொண்டாய்<br>மான்மறிகை ஏந்தினாய் வஞ்சக் கள்வர்<br>ஐவரையும் என்மேல் தரவ றுத்தாய்<br>அவர்வேண்டும் காரியமிங் காவ தில்லை<br>பொய்யுரையா துன்னடிக்கே போது கின்றேன்<br>பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 3 | அழகிய புகலூரில் மேவிய புண்ணியனே! படநாகத்தைக் கச்சையாகக் கொண்டவனே, பால்போலும் வெள்ளிய திருநீற்றினாய், பளிக்குக் குழையினனே, பண்போலும் இன் சொல்லும் மைபூசிய கண்ணுமுடைய பார்வதியைப் பாகங்கொண்டவனே, மான்கன்றை ஏந்திய கையினனே, வஞ்சமிக்க கள்வரைப் போன்ற ஐம்புலன்களும் வஞ்சம் செய்தலை என்னினின்றும் நீக்கினை. அவை விரும்பும் காரியம் எனக்கு நன்மை பயக்குமாறு இல்லை. என்னுரை பொய்யுரையன்று. உன் திருவடிக்கே வருகின்றேன். என்னை ஏற்றுக் கொண்டு அருள்வாயாக. |
| **3060.** தெருளாதார் மூவெயிலுந் தீயில் வேவச்<br>சிலைவளைத்துச் செங்கணையாற் செற்ற தேவே<br>மருளாதார் தம்மனத்தில் வாட்டந் தீர்ப்பாய்<br>மருந்தாய்ப் பிணிதீர்ப்பாய் வானோர்க் கென்றும்<br>அருளாகி ஆதியாய் வேத மாகி<br>**அலர்மேலான் நீர்மேலான் ஆய்ந்துங் காணாப்**<br>பொருளாவாய் உன்னடிக்கே போது கின்றேன்<br>பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 4<br><br>அலர் மேலான் – பிரமன்<br>நீர் மேலான் – திருமால் | அழகிய புகலூரில் மேவிய புண்ணியனே! தாங்கள் செய்து வந்த சிவ வழிபாட்டினை இடையிலேயே விட்டொழிந்த மயக்கத்தின ராகிய திரிபுரத்தசுரரின் மூன்று மதிலும் தீயில் வேகுமாறு வில்லை வளைத்துச் செங்கணையால் அவற்றை அழித்த தேவனே! மயக்கமின்றி நின்னையே வழிபடுவார் மனத்தில் ஏற்படும் மெலிவைத் தீர்ப்பவனே! தேவர்களுக்கு மருந்தாய் என்றும் அவருற்ற பிணி தீர்ப்பவனே! அருளே உருவமாகி எப்பொருட்கும் முதலாகிய வேதமானவனே! பிரமனும் திருமாலும் தேடியும் காணமுடியாத பொருளானவனே! உன் திருவடிக்கே வருகின்றேன். என்னை ஏற்றுக் கொண்டருள்வாயாக. |

**3061.** நீரேறு செஞ்சடைமேல் நிலாவெண் டிங்கள்
நீங்காமை வைத்துகந்த நீதி யானே
பாரேறு படுதலையிற் பலிகொள் வானே
பண்டனங்கற் காய்ந்தானே பாவ நாசா
காரேறு முகிலனைய கண்டத் தானே
கருங்கைக் களிற்றுரிவை கதறப் போர்த்த
போரேறே உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 5

நிலாவெண்டிங்கள் – நிலவையுடைய வெண்மையான சந்திரன். படுதலை – அழிந்த தலை, தலை ஓடு. காரேறு – கருமை பொருந்திய போர் ஏறு – வீரம் பற்றி

அழகிய புகலூரில் மேவிய புண்ணியனே! கங்கை தங்கிய செஞ்சடைமேல் நிலவையுடைய வெள்ளிய திங்களை நீங்காமல் உறையும்படி விரும்பிவைத்த நீதியனே! பருமை பொருந்திய படுதலையில் பிச்சை கொள்வானே! பண்டு மன்மதனைச் சுட்டு எரித்தவனே! பாவங்களை நாசம் செய்பவனே! கருமை பொருந்திய மேகம் போன்ற கண்டத்தை உடையவனே! கரியதும் கையுடையதுமாகிய களிறுகதற அதனை உரித்து அதன் தோலைப் போர்த்த போர்த்தொழில் வல்ல சிங்கமே! உன் திருவடிக்கே வருகின்றேன். என்னை ஏற்றுக் கொண்டருள்வாயாக.

**3062.** விரிசடையாய் வேதியனே வேத கீதா
விரிபொழில்சூழ் வெண்காட்டாய் மீயச் சூராய்
திரிபுரங்கள் எரிசெய்த தேவ தேவே
திருவாரூர்த் திருமூலட் டானம் மேயாய்
மருவினியார் மனத்துளாய் மாகா ளத்தாய்
வலஞ்சுழியாய் மாமறைக்காட் டெந்தா யென்றும்
புரிசடையாய் உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 6

வேதியன் – வேதத்தாற் புகழப்படுபவன்.
வேதகீதன் – வேதத்தைப் பாடுபவன்.

அழகிய புகலூரில் மேவிய புண்ணியனே! விரிசடையாய்! வேதத்தாற் புகழப்படுவோனே! வேதத்தைப் பாடுபவனே! விரிந்த பொழிலால் சூழப்பட்ட வெண்காட்டினனே! மீயச்சூரை உடையவனே! திரிபுரங்களை எரித்தழித்த தேவதேவனே! திருவாரூர்த் திருமூலட்டானத்தில் விரும்பி உறைவோனே! இனிய பண்பு உடையாரின் மனத்துள்ளவனே! மாகாளத்து வாழ்பவனே! வலஞ்சுழி வள்ளலே! மாமறைக்காட்டெந்தையே! என்றும் முறுக்குண்டு திகழும் சடையானே! உன் திருவடிக்கே வருகின்றேன் என்னை ஏன்று கொண்டருள்வாயாக.

**3063.** தேவார்ந்த தேவனைத் தேவ ரெல்லாந்
திருவடிமேல் அலரிட்டுத் தேடி நின்று
நாவார்ந்த மறைபாடி நட்டம் ஆடி
நான்முகனும் இந்திரனும் மாலும் போற்றக்
காவார்ந்த பொழிற்சோலைக் கானப் பேராய்
கழுக்குன்றத் துச்சியாய் கடவு ளேநின்
பூவார்ந்த பொன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 7

அழகிய புகலூரில் மேவிய புண்ணியனே! கடவுட்டன்மை மிக்க கடவுளே, எல்லாத் தேவரும் நான்முகனும், இந்திரனும், மாலும் தேடிக் கண்டு நின்று திருவடி மேல் பூக்களை இட்டு நாவிற் பொருந்திய மறையைப் பாடி நட்டம் ஆடிப் போற்ற இளமரக்காவுடன் பொருந்திய பொழிலாகிய சோலையையுடைய கானப் பேர் என்ற திருத்தலத்தில் விளங்குபவனே! கழுக்குன்றின் உச்சியில் உள்ளவனே! மனம் வாக்கு மெய்களைக் கடந்தவனே! நின் பூவைப் போலப் பொருந்திய அழகிய திருவடிக்கே வருகின்றேன். என்னை ஏன்று கொண்டருள்வாயாக.

**3064.** நெய்யாடி நின்மலனே நீல கண்டா
நிறைவுடையாய் மறைவல்லாய் நீதி யானே
மையாடு கண்மடவாள் பாகத் தானே
மான்தோல் உடையா மகிழ்ந்து நின்றாய்
**கொய்யாடு கூவிளங் கொன்றை மாலை**
**கொண்டடியேன் நானிட்டுக் கூறி நின்று**
பொய்யாத சேவடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 8

சுவாமிகள் இறைவனை மாலை சாத்தியும், மலர்தூவியும் வழிபட்டு இத்திருப்பதிகத்தை அருளிச் செய்துள்ளார். பொய்யாத சேவடி – அடியவர்கட்குத் தப்பாது உதவும் செம்மை ஆகிய திருவடி.

அழகிய புகலூரில் மேவிய புண்ணியனே! நெய்யாடுபவனே, நின்மலனே, நீலகண்டனே, நிறைவுடையவனே, வேதம் வல்லானே, நீதியனே, மைவிரவு கண் மடவாள் பார்வதி திகழ் பாகத்தானே, மான்தோலை உடையாகக் கொண்டு மகிழ்ந்தவனே, இப்பொழுது பறித்தல் பொருந்திய, வில்வம் கொன்றை இவற்றால் ஆகிய மாலையைக் கொணர்ந்து இட்டு அடியேன் பொய்யில்லாத நின்புகழ்விரிக்கும் தோத்திரங்களைக் கூறி வழிபட்டு நின்று நின் சேவடிக்கே வருகின்றேன். என்னை ஏன்று கொண்டருள்வாயாக.

**3065.** துன்னஞ்சேர் கோவணத்தாய் தூய நீற்றாய்
துதைந்திலங்கு வெண்மழுவாள் கையி லேந்தித்
தன்னணையுந் தண்மதியும் பாம்பும் நீருஞ்
சடைமுடிமேல் வைத்துகந்த தன்மை யானே
அன்ன நடைமடவாள் பாகத் தானே
யக்காரம் பூண்டானே ஆதி யானே
பொன்னங் கழலடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 9

துன்னம் – தைத்தல். கீளோடு இணைத்தல்.
துதைந்து இலங்கு – ஒளிமிகுந்து விளங்குகின்ற.
அக்குஆரம் – எலும்பு மாலை.

அழகிய புகலூரில் மேவிய புண்ணியனே! தைத்தல் பொருந்திய கோவணத்தை உடையவனே! தூய நீற்றினனே! ஒளி மிகுந்து விளங்கும் வெள்ளிய மழுவாயுதத்தைக் கையிற் கொண்டு, தன்னைச் சார்ந்த குளிர்ந்த பிறையையும், பாம்பையும், கங்கையையும் சடைமுடிமேல் வைத்து மகிழ்ந்த அருள் தன்மையனே! அன்னநடை மடவாள் பார்வதி திகழும் பாகத்தை உடையவனே! எலும்பு மாலை அணிந்தவனே! முதற்கடவுளே! நான் நின் பொன்னால் ஆகிய கழல் அணிந்த திருவடிக்கே வருகின்றேன். என்னை ஏன்று கொண்டு அருள்வாயாக.

**3066.** ஒருவனையும் அல்லா துணரா துள்ளம்
உணர்ச்சித் தடுமாற்றத் துள்ளே நின்ற
இருவரையும் மூவரையும் என்மேல் ஏவி
இல்லாத தரவறுத்தாய்க் கில்லேன் ஏலக்
கருவரைசூழ் கானல் இலங்கை வேந்தன்
கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையாய் உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.
10

இல்லாத தரவு – பொய்யான "யான் எனது" என்னும் செருக்கு. கானல் – கடற்கரை.

அழகிய புகலூரில் மேவிய புண்ணியனே! ஒருவை ஆகிய நின்னையல்லது என் உள்ளம் வேறு உணராது. உணர்வு கலங்குமாறு புலனாகாது அருவாய் நின்ற இருவினை களையும் முக்குணங்களையும் என்மேல் விடுத்துப் பொய்யான "யான் எனது" என்னும் செருக்கினை அறுத்தாய்க்குச் செய்யும் கைம்மாறு இல்லேன். ஏலம் நிறைந்த கரிய மலைகளைச் சூழ்ந்து கடற்கரை விளங்கும் இலங்கைக்கு அரசனது விரைந்து செல்லும் தேர், மேலே ஓடாமல் காலால் ஊன்றிய போர் செய்யும் திருக்கயிலாய மலையானே! நான் நின் திருவடிக்கே வருகின்றேன். என்னை ஏன்று கொண்டருள்வாயாக.

**திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் முற்றிற்று.**

## ஆறாம் திருமுறை

# பாட்டு முதற்குறிப்பகராதி

## ஆறாம் திருமுறை

# தல அட்டவணை

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 1. | கோயில் | 1 | அரியனை |
| 2. | ,, | 2 | மங்குல் மதி |
| 3. | அதிகை வீரட்டானம் | 3 | வெறிவிரவு |
| 4. | ,, | 4 | சந்திரனை |
| 5. | ,, | 5 | எல்லாம் |
| 6. | ,, | 6 | அரவணையான் |
| 7. | ,, | 7 | செல்வப்பு |
| 8. | ஆக்கூர் | 21 | முடித்தாமரை |
| 9. | ஆமாத்தூர் | 9 | வண்ணங்கள் |
| 10. | ஆரூர் | 24 | கைம்மான் |
| 11. | ,, | 25 | உயிராவண |
| 12. | ,, | 26 | பாதித்தன் |
| 13. | ,, | 27 | பொய்ம்மாய |
| 14. | ,, | 28 | நீற்றினையும் |
| 15. | ,, | 29 | திருமணியை |
| 16. | ,, | 30 | எம்பந்தவல் |
| 17. | ,, | 31 | இடர்கெடு |
| 18. | ,, | 32 | கற்றவர்களுண் |
| 19. | ஒற்றியூர் | 34 | ஒருவனாய் |
| 20. | ஆரூர் அரநெறி | 33 | பொருங்கை |
| 21. | ஆலங்காடு | 78 | ஒன்றாவுல |
| 22. | ஆலம்பொழில் | 86 | கருவாகிக்கண் |
| 23. | ஆலவாய் | 19 | முளைத்தானை |
| 24. | ஆவடுதுறை | 46 | நம்பனைநால் |
| 25. | ,, | 47 | திருவேயென் |
| 26. | ஆனைக்கா | 62 | எத்தாயர் |
| 27. | ,, | 63 | முன்னானை |
| 28. | இடைமருதூர் | 16 | சூலப்படை |
| 29. | ,, | 17 | ஆறுசடைக் |
| 30. | இன்னம்பர் | 89 | அல்லிமலர் |
| 31. | எறும்பியூர் | 91 | பன்னியசெ |
| 32. | ஐயாறு | 37 | ஆரார் திரி |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 33. | ஐயாறு | 38 | ஓசையொலி |
| 34. | ஒற்றியூர் | 45 | வண்டோங்கு |
| 35. | ஓமாம்புலியூர் | 88 | ஆராரும் |
| 36. | கச்சிஏகம்பம் | 64 | கூற்றுவன் |
| 37. | ,, | 65 | உரித்தவன் |
| 38. | கஞ்சனூர் | 90 | மூவிலை |
| 39. | கயிலாயம் | 55 | வேற்றாகி |
| 40. | ,, | 56 | பொறையுடை |
| 41. | ,, | 57 | பாட்டானநல்ல |
| 42. | கருகாவூர் | 15 | குருகாம் வயிர |
| 43. | கழிப்பாலை | 12 | ஊனுடுத்தி |
| 44. | கழுக்குன்றம் | 92 | மூவிலைவேற் |
| 45. | கற்குடி | 60 | மூத்தவனை |
| 46. | கன்றாப்பூர் | 61 | மாதினையோர் |
| 47. | காளத்தி | 88 | விற்றூணொள் |
| 48. | கீழ்வேளூர் | 67 | ஆளானஅடிய |
| 49. | குடந்தைக்கீழ்க்கோட்டம் | 75 | சொன்மலிந்த |
| 50. | கொட்டையூர் கோடீச்சரம் (வலஞ்சுழியும்) | 73 | கருமணிபோற் |
| 51. | கோகரணம் | 49 | சந்திரனுந் |
| 52. | கோடிகா | 81 | கண்டலஞ்சேர் |
| 53. | சாய்காடு | 82 | வானத்திளமதி |
| 54. | சிவபுரம் | 87 | வானவன்காண் |
| 55. | செங்காட்டங்குடி | 84 | பெருந்தகையை |
| 56. | சோற்றுத்துறை | 44 | மூத்தவனாய் |
| 57. | தலையாலங்காடு | 79 | தொண்டர்க்கு |
| 58. | நல்லூர் | 14 | நினைந்துருகும் |
| 59. | நள்ளாறு | 20 | ஆதிக்கண்நான் |
| 60. | நாகேச்சரம் | 66 | தாயவனை |
| 61. | நாகைக்காரோணம் | 22 | பாரார்பரவும் |
| 62. | நாரையூர் | 74 | சொல்லானை |
| 63. | நெய்த்தானம் | 41 | வகையெலா |
| 64. | ,, | 42 | மெய்த்தான |
| 65. | பந்தணைநல்லூர் | 10 | நோதங்க மில்ல |
| 66. | பழனம் | 36 | அலையார்கடல் |
| 67. | பள்ளியின் முக்கூடல் | 69 | ஆராதஇன்ன |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|---|
| 68. | பாசூர் | 83 | விண்ணாகி |
| 69. | புகலூர் | 99 | எண்ணுகேன் |
| 70. | புத்தூர் | 76 | புரிந்தமரர் |
| 71. | புள்ளிருக்கு வேளூர் | 54 | ஆண்டானை |
| 72. | புறம்பயம் | 13 | கொடிமாட |
| 73. | புன்கூர் (நீடூரும்) | 11 | பிறவாதே |
| 74. | பூந்துருத்தி | 43 | நில்லாத நீர் |
| 75. | பூவணம் | 18 | வடியேறுதிரி |
| 76. | மழபாடி | 39 | நீறேறுதிரு |
| 77. | ,, | 40 | அலையடுத்த |
| 78. | மறைக்காடு | 23 | தூண்டு சுட |
| 79. | மாற்பேறு | 80 | பாரானை |
| 80. | முண்டீச்சரம் | 85 | ஆர்த்தான்காண் |
| 81. | முதுகுன்றம் | 68 | கருமணியை |
| 82. | வலஞ்சுழி | 72 | அலையார் |
| 83. | வலம்புரம் | 58 | மண்ணளந்த |
| 84. | வலிவலம் | 48 | நல்லான்காண் |
| 85. | வாய்மூர் | 77 | பாட அடியார் |
| 86. | வீழிமிழலை | 50 | போரானை |
| 87. | ,, | 51 | கயிலாய மலை |
| 88. | ,, | 52 | கண்ணவன் |
| 89. | ,, | 53 | மானேறுகர |
| 90. | வெண்காடு | 35 | தூண்டு சுடர் |
| 91. | வெண்ணியூர் | 59 | தொண்டிலங்கு |
| 92. | பொது | 70 | தில்லைச் |
| 93. | ,, | 71 | பொருப்பள்ளி |
| 94. | ,, | 93 | நேர்ந்தொருத்தி |
| 95. | ,, | 94 | இருநிலனாய் |
| 96. | ,, | 95 | அப்பன்நீ |
| 97. | ,, | 96 | ஆமயந் தீர் |
| 98. | ,, | 97 | அண்டங்கடந்த |
| 99. | ,, | 98 | நாமார்க்குங் |